சிவமயம்.

பலவித்துவான்களியற்றிய

# தனிச்செய்யுட்

# சிந்தாமணி

இது

மதுரை ஜில்லா முறையூர்

ஸ்ரீமான்-பழ. சி.

**சண்முகஞ்செட்டியாரவர்கள்**

விருப்பத்தின்படி

மதுரை விவேகபாநுப் பத்திராதிபர்

**மு. ரா. கந்தசாமிக்கவிராயரால்**

தொகுக்கப்பெற்று

ஷை. பழ. சி.

**சண்முகஞ்செட்டியாரவர்கள்**

பொருளுதவியால்

மதுரை விவேகபாநு அச்சியந்திரசாலையில்

பதிப்பிடப்பெற்றது.

**1908.**



இதன்விலை ரூபா. 3.

ஸ்ரீ:

# தனிச்செய்யுட்சிந்தாமணி

## முகவுரை.

இந்நிலவுலகில் வழங்கும் தொள்ளாயிரத்துக்கு மேற்பட்ட பாஷைகளிலே, பழமைபெருமைகளாற் பாராட்டப்படுபவை மிகச் சிலவே என்பதும், அவற்றுள் தமிழ்ப் பாஷையும் அங்ஙனம் சிறந்ததொன்றென்பதும், அறிஞர்களால் ஆராய்ந்து தெளியப் பட்ட உண்மையாம். இப்பழைய பாஷைகளின் அழகும் வளமும் அவ்வக்காலத்துத் தோன்றிய புலவர் பெருமக்களாலேயே போற்றப்பட்டுச்செழித்தன வென்பது சொல்லவேண்டா. இம் மொழிகளில் அமைந்து விளங்கும் கவிஞர் சிகாமணிகளது காவியாதி நூல்கள், கற்றோருள்ளங்களைக் கவர்ந்து நிற்பதை நாம் நன்கறிவோம். இத்தகைய இலக்கியங்களாற்றான், அக் கவிவேந்தர்களது பெரும்புகழ் நிலைத்துள்ள தென்பதும் மறுக்கப்படாத உண்மையே. கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பநாடரது புகழ் அவரியற்றிய இராமாயணத்தாலன்றோ நிலைத்து நிற்பது: ஆயினும், அன்னோர் அருமை பெருமைகள் கற்றவருட்பாருள் மாத்திரமன்றிக் கல்லாதவர் பலராலும் பெரிதும் பாராட்டப்படுகின்றன. இதனால், அறிஞர்கள் மட்டும் அறிந்து சுவைத்தற்குரிய அவர் பெருநூல்கள் தவிர, எங்கும் அவர் புகழ் எளிதிற் செல்லுதற்கு ஏற்றதோர் ஏதுவுமிருத்தல்வேண்டு மன்றோ? கற்றோரும் மற்றோருமான நம்மவரில் கம்பர், புகழேந்தி, காளமேகம் போன்ற கவிஞர்சிகாமணிகளது அருமை பெருமைகளை அறிந்து பாராட்டாதவர் யாவர்? இவ்வாறு, எல்லாவுள்ளங்களையும் ஒப்பக் கொள்ளைகொண்டு நிற்பன எவையென்றாராயுமிடத்து, அன்னோர் கிரந்தங்களோடு பற்பல சமயங்களிலும் இடங்களிலும் அவர்களாற் பாடப்பெற்று வழங்கும் எண்ணிறந்த தனிப்பாசுரங்களுமாமென்பது தெளிவாம். அந்நன்மக்களியற்றிய நூல்களின் பெருமையைப்பற்றி சாதாரண ஜனங்கள் அறிஞர் வாயினின்று கேட்டு அறிந்திருத்தல் கூடும். ஆனல்

அவ்வாறு அறிந்ததினும்; அவர்கள் உள்ளபடி தாமே உணர்ந்து கொண்ட தனிப்பாடல்களால், பதின்மடங்கு அதிகமான இன்பத்தை மேன்மே லடையக்கூடுமென்றே சொல்லலாம். நல்லிசைப்புலவராகிய ஔவையார், பன்னூற்றாண்டுகட்குமுன் விளங்கினவரேனும், அவர் இன்றும் நம் முள்ளத்திலும் இல்லத்திலும் வாழ்வது போல விளங்குவது, அவர் நூல்களைக் காட்டிலும் அவரதரிய பாடல்களாலும் பழமொழிகளாலுமே யன்றோ? ஔவைப்பிராட்டி இயற்றிய பெருநூல்களொன்றும் இப்போது கிடையாதிருப்பவும், அவரை நாம் ஏனையரெல்லாரினும் அதிகமாகப் பாராட்டிவருவதும் அவற்றாலேயாம். இத்தகைய தனிப்பாசுரங்கள், அவை பாடிய நன்மக்களது வாழ்க்கையில் நிகழ்ந்த வைபவங்களோடு கலப்புற்றவையாதலால், அவையெல்லாம் அன்னோர் சரித்திரவாராய்ச்சிக்கு இன்றியமையாத கருவிகளாகவும் உள்ளன. ஆனால் இத்தனிப்பாசுரங்களை மொத்தமாக ஒருவர்மூலமாகவேனும் ஒருநூன் மூலமாவேனும் கிரகித்தல் யார்க்கும் அருமையாகவுள்ளது. இவைகள் பெரும்பான்மையும் கர்ணபரம்பரை பற்றியே வந்தனவாதலின் பல்லோர்வாய்ப்பட்டு வெளிவருவனவாயின. இதனால் அக்கவிகளின் உண்மையுருச் சிலசமயங்களில் மாறியும், வெவ்வேறான கதைக்கூறுகளை யுடையனவாயும் பிரசுரிக்கப்படுகின்றன. உதாரணமாக, ஒப்பிலாமணிப்புலவரென்பவர், குமணனைப்பற்றிப் பாடியதாக வழங்கும் "ஆடெரிபரந்த கோடிய ரடுப்பில" என்னுஞ் செய்யுள் தனிப்பாடல்களிலே ஒன்றாக வழங்குதல் நம்மவரெல்லாம் அறிந்தது. இப்பாட்டின் உண்மையுரு எவ்வாறு சிதைந்து கிடக்கின்றதென்பதும் இது பாடிய புலவரது பெயர்மாறுபாடும் நாம் இப்போது வெளிவந்துள்ள புறநானூற்றால் நன்கு தெரிந்துகொள்ளலாம். மதுரைத் தமிழ்ச்சங்கம் முதலிய சிலவிடங்களில் கையெழுத்துப் பிரதியிலுள்ள "தமிழ் நாவலர் சரிதை" போன்ற திரட்டு நூல்களைக் கொண்டு இக்காலத்து வழங்கும் ஔவைபாடல் முதலியவற்றை ஆராய்ந்தால், இவ்வாறே பாடங்களும் சரித்திர வழக்குக்களும் மாறுபட்டுநிற்றல் காணலாம். ஆயினும் திரிந்து பிறழ்ந்தாயினும் அப்பழைய பாடல்களிற் சில இன்றும் வழங்கிவருதலை நோக்கும்

போது, கற்றவரன்றிக் கல்லாதவருள்ளத்தையும் கவரத்தக்க அழகும் அமைதியும் அவைகொண்டுள்ளனவென்பது புலப்படுகிறது. இம்மட்டோ! இப்பாடல்கள், சந்தர்ப்பத்திற்கேற்ற சரித்திரக் கூறுகளோடு கலந்து சொற்செறிவும் பொருட்பொலிவும் பெற்று விளங்குதலால், முன்னோர்பெருமையினும் பாஷையின் அழகிலும் படியாதவர்களையும் ஈடுபடும்படி செய்வதுமட்டுமன்றி; அவர்கள் நெஞ்சில் பாஷாஞானச்சுடர் கொளுவுதற்குத் தூண்டுகோல்போலவும் நின்றுதவுகின்றன. "நாராய் நாராய் செங்காலுநாராய்" என்னும் சத்திமுற்றப் புலவரது பாடலழகாலும் கதையழகாலும் கவரப்படாதவர் நம்மில் யாவர்? இத்தகைய பழம்பாடல்களிலே, கிடைத்த சிலவற்றால் இவ்வளவின்பம் எல்லாரும் அடையக்கூடுமாயின், நம்நாட்டுக் கவிஞர் சிகாமணிகளது தனிப்பாடல்களெல்லாம் ஒருசேரக் கிடைக்கும்போது எத்தகைய பேரின்பம் விளையாது!

கம்பநாடர், கூத்தர், காளமேகமுதலிய கவிச்சக்ரவர்த்திகள் அவ்வப்போது பாடிய தனிப்பாக்கள் எத்துணையோ, அறிந்திலம். அவையெல்லாம் உரியகாலங்களிற் றிரட்டப்பட்டுப் பின்புள்ளார்பெற்றுமகிழும் வண்ணஞ் செய்வதில், நமக்குமுன்னிருந்த தமிழ்மக்கள் தவறிவிட்டார்கள். ஆனால், இத்திரட்டுக்களின் அத்யாவசியகத்தை, பிற்காலமக்கள் மறந்ததுபோற் பழங்காலத்துச்சான்றோர் சிறிதும் மறந்தவரல்லர். அவர்கள் அங்ஙனமறந்திருந்தால், தமிழ்ப்பாஷையின் பழமைபெருமைகளைப்பற்றி அறிஞர் முன்பு பேசுதற்கும் நமக்கு வாயில்லாதொழியும். அங்ஙனமொழியாவண்ணம், பண்டைத் தமிழ்மக்கள், முன்னோரது அரியபாடல்களை முறைப்படக் கோத்துவைத்தது தமிழணங்குசெய்த பாக்கியங்களில் ஒன்றாம். அன்றியும், தமிழ்மொழியிலுள்ள பழைய நூல்களுள்ளே, "பழந்தனிப்பாடற்றிரட்டு" என்று சொல்லத்தக்க தொகைநூல்களே மிகுதியாகக் காணப்படுதல் ஒரு சிறந்த விசேடமாகும். சங்கநாளில் தோன்றிய மணிமேகலை சிலப்பதிகாரம் போன்ற இலக்கியங்களும், திருக்குறளாதிய பதினெண் கீழ்க்கணக்குமுதலிய நீதி நூல்களுமொழிய, ஒழிந்த பழந்தமிழ்நூல்களெல்லாம் இத்தொகைநூல்களே. இதனைநோக்குமிடத்து முற்காலத்துச் சான்றோர்கட்கு, தங்காலத்துக்கு முன் விளங்கிய

புலவர்பெருமக்களது பாடல்களிலிருந்த பேரவாவும் கௌரதாபுத்தி யும்நன்கு விளங்குகின்றன. இவ்வாறு இச்சான்றோரால் தொகுக்கப் பட்டவை, இப்போது கிடைத்த அளவில், ஒன்பதுஎன்று ஒருவாறு கணக்கிடலாம். அவை எட்டுத்தொகையும் பத்துப்பாட்டுமாம். எட்டுத்தொகையாவன :

"நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தா ரேத்துங் கலியே அகம்புறமென்
றித்திறத்த எட்டுத் தொகை"—இவ்வொன்பது நூல்களில்,

நற்றிணை,குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை,அகமென்பன அகத்திணையொழுக்கங்களை விஷயமாகவும், பதிற்றுப்பத்து, பரி பாடல், புறம், பத்துப்பாட்டென்பன புறத்திணையொழுக்கங்களை விஷயமாகவும்கொண்டன. நற்றிணை இருநூறுக்குக்குறையாத புலவ ராலும், குறுந்தொகை இருநூற்றைவராலும், ஐங்குறுநூறு இரு நூற்றைவராலும், பதிற்றுப்பத்துப் பதின்மராலும், அகமும் புற மும் தனித்தனி இருநூறு இருநூறு புலவராலும், பத்துப் பாட்டு ஒன்பதின்மராலும், இவ்வாறே கலித்தொகையும், பரிபாட லும் பலராலும், பாடப்பெற்ற செய்யுள்களின் கோவையாதல் காண்க. ஆக, இவற்றால் நமக்குத் தெரியவரும் புலவர்களின்தொ கை, ஆராய்ந்தமட்டில், 514-ஆகின்றது. இத்தனை முதுமக்களது அரும்பெருவாக்குக்களை நாமெல்லாம் அறிந்து சுவைக்கும்படி திரட் டிக்கொடுத்த பழைய சான்றோர்களை யாம் எங்ஙனம் புகழவல்லோம்! ஆனால்,இவர்கட்குப்பின்னும் நமக்கு முன்னுமான இடைக்காலத்துப் புலவர்களது பாசுரங்களும் இவ்வாறு திரட்டப்பட்டதுண்டோ எனின், கிடையாதென்பதே விடையாகும். இதனால், மத்திய கால த்து விளங்கிய திருத்தக்க தேவர், முத்தொள்ளாயிரமுடையார், பொய்யாமொழிப்புலவர்,கம்பர்முதலாக எண்ணின்றிவிளங்கிய கவிச் சக்ரவர்த்திகளது அருமைபெருமைமுழுதும் நிரம்பிய வரலாறுகள் நமக்குக் கிடையாதொழிந்தன. ஒருகால் இத்தகையநூல்கள் முன்னு ளிலிருந்து பின்பு இறந்திருக்கவுங் கூடும். ஆயினும் அங்ஙனம்போற்

ருமல், இறக்கவிட்ட குற்றம் நமக்கு முற்பட்டவரதேயாம். பிற்காலத்துத் தோன்றிய தமிழ்நாவலர்சரிதை என்னுந் தனிப்பாசுரத்திரட்டால், சில புதுப்பாடல்களும் செய்திகளும் தெரியவரினும் எண்ணிறந்த பண்டைப் புலவர்களது பெருமையை நோக்க, அந்நூலை ஒன்றாகவைத்தெண்ணவும் மனம்வந்திலது. ஆயினும், ஒன்றுமேயில்லை என்ற குற்றத்தை நீக்க வந்ததாக மட்டும் அதனைக் கொள்ளலாம்.

இனிச், சிலவருஷங்கட்குமுன்பு, இராமநாதபுரம் ஸம்ஸ்தானம் ஸ்ரீமாந். பொன்னுச்சாமித் தேவரவர்கள் இக்குறையை ஒருவாறு நீக்கவேண்டி, முன்னோரும் பின்னோருமான புலவர்பலரால் பாடப்பெற்ற தனிச்செய்யுள்களை அப்போது கிடைத்தவளவில் வெளியிடச்செய்தார்கள். அதுவே இக்காலத்துத் தனிப்பாடற்றிரட்டென வழங்குவது. அஃது ஒரு பெரிய திரட்டன்றாயினும், வெளிவந்தவளவில் கற்றவர் மற்றவரெல்லாராலும், எவ்வளவு அவாவுடன்படிக்கப்படுகின்றதென்பதற்கு, சில்லாண்டுகளுள்ளே அந்நூல் பற்பல பதிப்புக்களைப்பெற்றிருத்தலே போதியசான்றாம். இத்தனை பதிப்புக்களால், இத்திரட்டினிடத்து நம்மவர்க்குள்ள பற்று விளங்குகின்றதாயினும் பதிப்பாளர்சிலர், கண்டபடியெல்லாம் பிழைபட அச்சிட்டு முன்னோர் விஷயத்தில் அபசாரப்படுதல்,* பெரிதும் வியசனிக்கத்தக்கது.

இங்ஙனம், பழைய தனிப்பாசுரங்கள் வரவர வழக்குவீழ்ந்து வருதலை அறிந்திருந்தும் நங்காலத்தறிஞர்களில் இதன்பொருட்டு வேண்டிய முயற்சி யெடுப்பவர் அதிகமில்லை. இப்போதுள்ள பெரியோர்சிலர் தமிழ்நாட்டுப் புலவர்சரிதங்களை அவ்வவர் பாடற் பகுதிகளுடன் எழுதிவெளியிடப் பெரிதும் முயன்றுகொண்டிருத்தல் நெடுநாளாகப் பிரஸ்தாபிக்கப்படுகின்றது. இங்ஙனம் வெளிவருதல் இன்றியமையாததென்றாம். ஆனால், அவ்வழகிய புத்தகத்தைக் கண்ணாரக் கண்டு களிக்கும்பாக்கியம் எப்போது கிட்டுமோ தெரிந்திலது. இவ்வாறே, மற்றொரு தொகைநூல், நந்நாட்டுப் பாவலரொருவரால் அச்சாகுஞ்செய்தியும் சிலகாலமாக நங்காதில் அடுத்தடுத்து விழுந்து கொண்டிருந்தது: இதைப்பற்றிய பேச்சு இப்

போது அடியோடு மழுங்கிப்போயிற்று. ஆயினும், இக்குறைமை யெவ்விதத்தானும் விரைந்து நீக்கவேண்டுமென்ற ஊக்கம், தமிழணங்கின் பிறப்பகமாகிய பாண்டிநாட்டிலுதித்த செந்தமிழ்ச் செல்வர் இருவர்க்கு சமீபத்தில் தோன்றி, உடனே பயனும் விளைந்துவிட்டதுபற்றித் தமிழ்மக்கள் மகிழ்வார்களென்பதில் ஐயமில்லை. அங்ஙனம் விரைந்து பயன்விளைந்ததற்குத் தக்க காரணமுண்டு: என்னையெனில்? அவ்விருவரில், ஒருவர் பெரும்பொருட்செல்வர். மற்றவரோ தக்ககல்விச்செல்வர். இவ்விருவேறுசெல்வர்களும் இயைந்து நடத்தும்போது,இயற்கையழகோடு செயற்கையழகெல்லாம் சிறக்க ஒரு பெருநூல் வெளியேறிவிட்டதென்பது ஆச்சரியமேயன்று. தமிழ்நாட்டின் பாக்யமுளதேல் எத்தனை நூல்கள்தாம் இன்னோர்கள் சேர்ந்து வெளியேற்றமுடியா? இச்செல்வர்களில் முதல்வர் யாவரெனின் :— வைசிய குலமணியும், "செவிச் செல்வஞ் செல்வத்துட் செல்வம்" என்னும் திருமொழியின் உண்மையையறிந்து புலவர்களை ஆதரித்துவருஞ் சீமானும்,அருங்குணமெல்லா மொருங்குடைபோரும் முறைபூரதிபருமாகிய ஸ்ரீமாந்-பழ. சி.சண்முகஞ்செட்டியாரவர்களே;இவர்கள் பெருந்தகைமைகள் உலகமறிந்தவையாதலின் நானும் கூறுதல் மிகைப்படுத்தலாகும். இவர்கட்கு இத்தகைய நூலை வெளியேற்றவேண்டுமென்னும் எண்ணம் வெகு காலத்துக்கு முன்பே தோன்றியதாம். ஏனெனில், இவர்கள், தம் சமுக வித்வானுயிருந்து சமீபத்திற் காலஞ்சென்ற ஸ்ரீமத். கருப்பையாப் பாவலரவர்களைக் கொண்டு, இத்தகைய தனிப்பாசுரங்களைத் திரட்டித்தரும்படி நெடுங்காலமாகத் தூண்டியிருக்கின்றார்கள். அவ்வாறே பாவலரும் பல்லிடங்களினுஞ்சென்று தொகுத்தவந்த பாடல்கள் செட்டியாரவர்களிடமிருந்தன. அவை இந்நூலின் பெருமையைச் சிறப்பித்தற்குப் பெருஞ்சாதனமாயின என்று தெரிகின்றது. இங்ஙனம் ஒரு சிறந்த நூலை ஆராய்ச்சிசெய்து தொகுத்து வெளியேற்றுதற்குச் செட்டியாரவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர் யாவரெனில்:—

சேற்றூர்ச் சமஸ்தான வித்துவானும், மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவரிலொருவரும், மதுரை விவேகபாநு பத்திராதிபரும், அற்புதகவிஞருமாகிய ஸ்ரீமத் மு. ரா. கந்தசாமிக்கவிராயரவர்களே. கவிராயர

வர்களை இந்நூல் விஷயத்தில் நியமித்த செட்டியாரவர்கட்கு மற்றொருமுறை நாம் புகழ்ச்சி கூறுதல் வேண்டுமென்றே தோற்றுகிறது. செட்டியாரவர்களிட்ட நியமனத்தை நிறைவேற்றுவதில், கவிராயரவர்கள் தமக்கியல்பான உழைப்பையெல்லாம் இயலுந்திறத்திற்கு மேலாகவே செலுத்தியிருக்கிறார்களென்பதற்கு—இந்நூலி னருமை பெருமைமட்டுமன்று—அதிவிரைவில் இந்நூல் முற்றுப்பெற்றதும் போதிய சான்றும். மதுரைபோன்ற இடத்தில், இவ்வரிய நூல் மூன்றுமாதங்களிலே வெளிவருமாயின், அது வியக்கத்தக்கதன்றோ? இந்நூல், நினைத்த பாடல்களையெல்லாம் தருதற்கேற்ப "தனிச்செய்யுட்சிந்தாமணி" என்ற பெயர் புனைந்திருத்தல் பொருத்தமேயாம். இதனுள் சங்ககாலத்தும் அதன் பிற்காலத்தும் விளங்கியபுலவர்கள் பாடல்களோடு, இப்போதுள்ள வித்துவான்கள் பலர்கவிகளும் சேர்த்து வெளியிடப்பட்டிருக்கின்றன. இவையெல்லாம், பெரும்பிரயாசையுடன் தெரிந்தெடுக்கப்பட்டவைகளாம். இப்பாடல்களியற்றிய புலவர்களது சரித்திரக் குறிப்புக்களும், தெரிந்தவரை, சுருக்கமாக அதனதன் தலைப்பில்எழுதப்பட்டுள்ளன. இந்நூலில் நங்காலத்துப்புலவர் பாடல்களை இறுதியில் தொகுத்து வைத்திருத்தல், நமக்குமட்டுமன்றி, நம் பின்னோர்கள் அறிந்து மகிழ்தற்கும் பேருபகாரமாமென்பது சொல்லவேண்டா. இங்ஙனமாக, இத்தனிச்செய்யுட் சிந்தாமணியில் தொகுக்கப்பெற்ற பாடற்றொகை மொத்தத்தில் ௩அகரு ஆம். இவைபாடிய வெவ்வேறாய புலவர்தொகை கஅ0-க்கு மேலாம். இத்தனிப்பாசுரங்கள் பெரும்பாலவும் சமயோசிதம்பெற்றவைகளாகவும் படிப்பவர் மனத்தைக் கவரத்தக்கனவாகவும் விளங்குதலை ஒவ்வொருவரும் தாமே அறிந்துகொள்ளக்கூடு மென்பது திண்ணம்.

இச்சிந்தாமணியில் இல்லாத தனிப்பாசுரங்கள்பல நம்நாட்டில் வழங்கக்கூடுமேனும், இதுவரை வெளியேறிய தொகைநூல்களிலே, இதுவே, பெருமையும் ஒழுங்குமுடையதென்பதில் சிறிதும் ஐயமில்லை. பழைய புலவர்களது வாக்கிலும் வரலாறுகளிலும் ஒருவரது மற்றவரதாக மாறுபட்டு, அதுவே பெருவழக்காக வழங்குவன அநேகம் இப்போதுண்டு. அவையெல்லாம் தனிக்குறிப்பில், இந்நூ

வின்கண்ணே விளக்கிக்காட்டப்பட்டிருத்தல் பெரிதும் விரும்பத் தக்கதாம். இந்நூற்கு, செந்தமிழ் வளர்க்குஞ் சீமானும் கல்வியும் செல்வமும் கவினப்பெற்றவள்ளலுமாகிய மதுரைத்தமிழ்ச்சங்கத்து அக்கிராசனாதிபதி ஸ்ரீமாந். பாண்டித்துரைத்தேவரவர்கள், தங்களருமைத்தந்தையாரான ஸ்ரீமாந். பொன்னுஸாமித் தேவரவர்களுடைய தனிப்பாசுரங்களிலே தாங்கள்கேட்டெழுதி வைத்திருந்தனவற்றையும், தாங்கள் அவ்வப்போது பாடிய அரும்பாடல்கள் சிலவற்றையும் உபகரித்திருத்தலோடு, இவ்வாறே ஏனைய கல்விச்செல்வர்கள் பலரும் இயன்றவுதவி செய்திருத்தலால், இந்நூல், தமிழ்மக்கட்கெல்லாம் ஆனந்தம்பயவாமற் போகாதென்பது திண்ணம். இத்தகைய திரட்டு நூல்கள் முடிவானநூலென்று துணிந்துசொல்லுதற் குரியனவல்ல; ஏனெனில் இவை காலத்துக்குக்காலம் சேர்க்கப்பட்டுப்பெருகவேண்டியனவாம். ஆதலால், தமிழ்மக்கள் இந்நூலிடத்துக்காட்டும் அன்புக்கும் ஆதரவுக்கும் ஏற்ப, இந்நூல் புதிய தோற்றங்கள்பெற்று வெளிவந்துபகரிக்கு மென்பது திண்ணம்:

இங்ஙனம் தமிழ்நாட்டார்பொருட்டு இத்தகைய பேருபகாரத்தைச் செய்வித்த ஸ்ரீமாந்-சண்முகம் செட்டியாரவர்கட்கும், இதனை ஆராய்ந்து அச்சிட்டு நிறைவேற்றிய ஸ்ரீமத்-கந்தசாமிக்கவிராயரவர்கட்கும், இவ்வாறே தமிழ்ப்பரிபாலனம் பண்ணுவதில் ஊக்கமுமுழைப்பும் மேன்மேலும் உண்டாம்படியும், அவர்கட்கு நிறைந்த ஆயுளையும் மிகுந்த அறிவு ஆற்றல்களையும் அளிக்கும்படியும் ஸர்வேசுவரனது திருவருளைத் தியானிக்கின்றேன்.

தமிழ்ச்சங்கம்,
மதுரை,
1—8—08.

இங்ஙனம்,

மு. இராகவையங்கார்,

"செந்தமிழ்" பத்திராசிரியர்.



# தனிச்செய்யுட் சிந்தாமணி

## பதிப்புரை.

செந்தமிழ்ச் செல்வி திருவடி பரவுதாஉம்
சந்ததங் கல்வி தழைத்தற் பொருட்டே.

இத்தனிச்செய்யுட் சிந்தாமணியால் தமிழ் மக்கள் அடையும் பயன் முதலியவற்றை முகவுரைக்கண்ணே மதுரைத் தமிழ்ச்சங்கம் செந்தமிழ்ப் பத்திராசிரியரும் பண்டை நூலாராய்ச்சியிற் றேர்ந்த வல்லுநருமாகிய ஸ்ரீமத் மு. இராகவையங்காரவர்கள் நன்கு கூறியிருக்கின்றார்கள்.

இம்மதுரை ஜில்லா முறையூர் வாசியும், பிரபுகுல திலகரும் அருங்கலை விநோதரும், வரையாதுதவும் வள்ளற்றன்மை வாய்ந்தோரும் ஆகிய ஸ்ரீமாந் பழ. சி. சண்முகஞ்சேட்டியாரவர்கள் தமது சமூகத்தை யடுத்துப் பற்பல சிறந்த வித்துவான்களிருப்பவும் எம்மிடத்துள்ள தாய அன்புமிகையானே இப்பணியையெமக்கீந்தனர். இதுகல்வி வல்லாராற் செயற்பாலதாகவும் அவர்கள் சொல்லை மறுத்தற்கஞ்சியே யாமுமிப்பணியை யேற்றுத்திருவாலவாயுடையார் திருவருளைப் பிரார்த்தித்துத் தொடங்கி ஒருவாறு முற்றுவித்தேம். இவ்வேலை நடக்குங்கால் மதுரைத்தமிழ்ச்சங்கத்துச் செந்தமிழ்ப் பத்திராசிரியர் ஸ்ரீமத் மு. இராகவையங்காரவர்கள், ஷை செந்தமிழ்க் கலாசாலை உபாத்தியாயர் ஸ்ரீமத் சுந்தரேசுவர ஐயரவர்கள், ஷை தமிழ்ச்சங்கம் நூற்பரிசோதகரும் எமது சேஷ்ட சகோதரருமான ஸ்ரீமத் மு. ரா. அருணாசலக்கவிராயரவர்கள், மதுரை மாணவர் செந்தமிழ்ச்சங்கட அக்கிராசனாதிபதி ஸ்ரீமத் ம. கோபாலகிருஷ்ணையரவர்கள் முதலிய பல வித்துவ சிகாமணிகள் இடையிடையே வேண்டுமுதவிகள் பல செய்துவந்தார்கள். இப்புலவர் பெருமக்கள் செய்த பேருதவிக்கு என்றும் நன்றி பாராட்டி வந்தனஞ்செய்யுங் கடப்பாடுள்ளேம்.

இராமநாதபுரம் ஸ்ரீமத் பொன்னுஸாமித்தேவரவர்கள் நற்றவப் புதல்வரும் பாலவனத்தம் ஜமீந்தாரும் மதுரைத்தமிழ்ச்சங்கம் அக்கிராசனாதிபதியும் முறையான நூலுணர்ச்சியிற் சிறந்த கல்வி வல்லுநருமாகிய ஸ்ரீமாந் பொ. பாண்டித்துரைஸாமியவர்கள் தமது அருமைத் தந்தையவர்களியற்றிய தனிப்பாக்கள் சிலவற்றையும் தாமியற்றிய செய்யுட்கள் சிலவற்றையும் கொடுத்துதவினார்கள். தமிழ்ப் புலவர்கள் எல்லாருக்கும் வேண்டுமுதவிகளைச் செய்யுமியற்கையுள்ள இப்பிரபு சிகாமணியவர்களியற்றிய பேருதவி மிகவும் பாராட்டற் பாலதேயாம்.

இச்சிந்தாமணிக் கண்ணுள்ள பாடற்றொகை ௩௮௧௫. இவற்றுள் ௩௦௩௬ பாடல்கள் நமக்கு முற்பட்ட ௧௫௬ புலவர்களாற் பாடப்பட்டன. ஏனைய ௭௭௯ பாடல்கள் தற்போதுள்ள ௨௩ வித்துவான்களாலியற்றப்பட்டன. காலஞ்சென்ற கவிஞர்கள் பாடல்களையெல்லாம் அச்சிட்டு முடித்து, தற்போதுள்ளபுலவர் பெருமக்களுள் தலைமைப்பாடுற்று விளங்கும் ப்ரும்மஸ்ரீ மகாமகோபாத்தியாயர் வே. சாமிநாதையரவர்கள் பாடல்களை முதற்கண்ணமைத்து ஏனையர்பாடல்களைத்தொடுத்து முடிப்பித்துள்ளோம்.

இவ்வாறு பதிப்பிட்டு முடித்தபின்னர் நக்கீரர், கம்பநாட்டாழ்வார் புகழேந்திப்புலவர், ஒட்டக்கூத்தர், பொய்யாமொழிப்புலவர், இரட்டையர்;காளமேகப்புலவர்முதலிய பண்டைத்தமிழ்ப்புலவர்கள் பாக்கள் நூற்றுக்கணக்காகக் கிடைத்தன. தற்காலத் தமிழ் வித்துவான்கள் பாக்களோ ஆயிரக்கணக்கில் வந்து குவிந்துள்ளன. இவையனைத்தையும் ஒரே புத்தகமாக்க முடியாமையால் முடிந்தவரை முதற்பாகம் ஆக வெளியிட்டுள்ளோம். இப்போது கிடைத்த கவிகளுடன் இன்னுஞ் சேர்வனசேர்த்து அவற்றை இரண்டாம் பாகமாகக்கூடிய விரைவில் வெளியிட நிச்சயித்துள்ளோம். வித்துவசிகாமணிகள் தங்கள் தங்கள் பாலுள்ள தனிப்பாக்களை யெமக்கனுப்பி யுபகரிப்பார்களாயின் அது மிகப் பேருபகாரமாகும்.

இந்நூலைநோக்குந்தமிழறிஞர்பலருக்கும் இத்தகையபெருநூலை வெளியிடப்புரிந்த தயாளகுண சீலராகிய ஸ்ரீமாந் பழ. சி. சண்முகஞ்

செட்டியாரவர்களைக் காணும் வேட்கையுளதாமாதலின் அன்னாரது நல்லுருவப்படமொன்று முதற்கண்ணமைத்ததலைக் கண்டு தமிழ் மக்கள் மகிழ்ச்சி கூர்வார்களென்றே நம்புகின்றேம்.

யாமறிந்தவளவில் சரித்திர பேதமுதலியவிசேடக்குறிப்புக்களையும் பாடபேதங்களையும் இதனடுத்து விளக்கிக் காட்டியுள்ளேம். இன்னும் எத்துணையோ பாடபேதங்களும் வேறு பல குறிப்புக்களும் அறிஞர்கள் அறிந்திருக்கக்கூடும். அவற்றையெமக் கறிவிப்பார்களாயின் அன்னார்க்கு நன்றிகூறுதலுடன் அடுத்த பதிப்பில் அவையனைத்தும் விளக்கிக்காட்டவும்பெறும்.

## சரித்திரபேதமுதலிய விசேடக்குறிப்புக்கள்.

உ-ம் பக்கம்—"கொங்குதேர்" என்னுங்கவி குறுந்தொகையில்இரண்டாவது செய்யுளாகவுளது.

கக-ம் பக்கம்—"அற்றதலைபோக" என்னும் கவி ஔவையார் பசியால் வருந்தி ஒருவன் மனையிற் செல்ல அவன் சோறில்லையென்று போக்க அவன் மனைவி கண்டு உபசரித்து அன்னமிட்டபோது பாடியது. என்னுங்குறிப்புடனுமுளது.

கஉ-ம் பக்கம்—"அங்கவை சங்கவை யென்பார்:— பறம்பு நாட்டதிபனும் கடையெழுவள்ளல்களிற் சிறந்தவனும் மூவேந்தரானுஞ் சூழ்ந்து கொல்லப்பட்டவனுமான பாரியென்னும் வேளின் மகளிர். அவனிறந்ததும் அப்பாரிக்குயிர்த்துணைவரான கபிலராலும் ஔவையாராலும் மணஞ்செய்விக்கப் பெற்றுக் குலப்பெருமை குன்றாது வாழ்ந்தனரென்ப.

உக-ம் பக்கம் ௬௩-ம் பாட்டு இரட்டையர் பாடலெனவுங் கூறுவர்.

௩௯-ம் பக்கம் உ௯-ம் பாட்டு "அத்திமுத" என்றது குருநமச்சிவாயதேசிகர் பாடியதாகக் காணப்படுகின்றது.

சக-ம் பக்கம் ஆறைநகர் வாணனைப்பற்றிய பாடல்களில் "மகதேவன்" என்னவரு மிடங்களை யெல்லாம் மகதேசன் எனத் திருத்திக்கொள்ள வேண்டும். மகத+ஈசன் மகத நாட்டுக்கு இறை என்றபடி. இவ்வாணன் இற்றைக்கு 340 வரு

டங்கட்கு முன் திருநெல்வேலிப்பக்கத்தை ஆட்சி புரிந்த "சீவலமாறன்" என்னும் பாண்டியன் காலத்தவனென்று இப்பாடல்களாலும் பிறவற்றாலும் தெரிவதால் இவனைப்பற்றிய கவிகள் மிக முற்பட்டவரான கம்ப நாட்டாருடையன வென்று சொல்ல முடியாமலிருக்கின்றமை உய்த்துணரத் தக்கது.

சச-ம் பக்கம் உஅ முதல் ௬க வரையுள்ள பாடல்கள் நான்கும் கம்பர் பாடியனவாக தமிழ் நாவலர் சரிதையில் கூறவில்லை.

சஎ-ம் பக்கம் சரு-ம் பாடல் பொய்யாமொழிப்புலவர் பாடியதென்று காணப்படுகின்றது.

ஷை பக்கம் சகூ-ம் பாடல் பூதத்தாரும் காரைக்காற் பேயம்மையாரும் பாடியதென்று யாப்பருங்கல விருத்தியிற் காணப்படுகின்றது.

ருO-ம் பக்கம் கூகூ-ம் பாட்டு பொய்யாமொழிப்புலவர் பாடியதாகத் தெரிய வருகிறது.

ருசு-ம் பக்கம் "சேனைதழையாக்கி" என்னும் பாடல் வாணனுடைய பாணன் மதுரைக்குப் போனபோது பாண்டியன் கொடுத்த பரிசிலை வாணன் வலக்கையாலேலாது இடக்கையாலேற்க அதுகண்டு பாண்டிய னிகழ்ந்தபோது பாடியதென்ற வரலாற்றுடன் தமிழ் நாவலர் சரிதையிற் காணப்படுகின்றது.

கூரு-ம் பக்கம் கா-ம் பாட்டு:—சரசுவதி தம்பலங் கொடுக்கக் கவி பாடுந்திறனுற்ற கூத்தமுதலியார் அரும்பைத்தொள்ளாயிரம் பாடும்போது விக்கிரமசோழன் கேட்டு ஒரு கவியை "ஒட்டச் சொல்" என்ற போது பாடியது எனத் தமிழ்நாவலர் சரிதை கூறும்.

கூசு-ம் பக்கம் உO-ம் பாட்டு:—ஒட்டக்கூத்தர் உலாப்பாடியபோது பேராசிரியர் நேமிநாதர்பட்டோலை பிடிக்கப்பாடியது என்று தமிழ் நாவலர் சரிதை கூறும்.

ஏகூ-ம் பக்கம் கக-ம் பாட்டும் உO-ம் பாட்டும் அதிமதுரகவிராயர் பாடியவையென்று ஷை சரிதைகூறும்.

௯௫-ம் பக்கம் க௦௨-ம் பாட்டு சவ்வையப்பனையனைக் காளமேகம்பாடிய தென்று சிலபாடபேதங்களுடன் தமிழ் நாவலர் சரிதையிற் காணப்படுகின்றது.

க௦௫-ம் பக்கம் க௯௪-ம்பாட்டு ஔவை பாடியதாகவுங்கூறுகின்றனர்.

கக௬-ம் பக்கம் வரதுங்கபாண்டியன் இவர் பெயர் வரதுங்கராம பாண்டியனென்றும் வழங்கப்படுகின்றது. வாயுசங்கிதை இவர் பாடியது.

கக௫-ம் பக்கம் வீரன் என்னும் ஆசுகவி:—இவரூர் விரை யென்று தெரிகின்றது.

க௭க-ம் பக்கம் சுப்பிரமணியப்புலவர் இவரே குன்றக்குடித்தல புராணம் பாடியவரெனத்தெரிகிறது.

௪௬௪-ம் பக்கம் க௬-ம் பாடல் காரைக்கால் தனக்கோடி முதலியார் பாடியதென்றுங் கூறுவர்.

இத்தகைய பாடபேதங்களும் சரித்திர மாறுபாடுகளும் இன்னும் எத்துணையோ இருக்கக்கூடும். அவையெல்லாம் வரவரக் கண்டு திருத்திக்கொள்ளற் பாலவேயாம். ஒரு புலவராற் செய்யப்பட்டு ஒரு சரித்திரத்தைக் கூறும் நூல்களே எத்தனையோ பாடபேதங்களும் கதை மாறுபாடுகளுங்கொண்டு உண்மையுருச்சிதைவுபட்டு நிற்குமாயின் இத்தகைய தனிப்பாக்களில் பேதம் வருதல் அரிதன்றென்பது சொல்லவும் வேண்டுமா ?

செந்தமிழபிமானச் செல்வத்திற் சிறந்த ஸ்ரீமாந் பழ. சி. சண்முகஞ் செட்டியாரவர்கள் நீடுவாழ்ந்திருந்து இன்னு மிதுபோன்ற பற்பலநூல்களை வெளியிடச்செய்து வருமாறு ஸ்ரீமீனாக்ஷி சுந்தரேசுவரர் திருவருளைப் பிரார்த்திக்கின்றனம்.

இங்ஙனம்,

மதுரை, 5—9—08.

மு. ரா. கந்தசாமிக்கவிராயர்,
விவேகபாநுப்பத்திராதிபர்.

## பாடபேதங்கள்.

| பக்கம். | பாட்டு. | வரி. | இதிலுள்ள பாடம். | பாடபேதம். |
|---|---|---|---|---|
| உ | ங | ச | பாரிற்பழுதென்பவன் | ஆராயுமுள்ளத்தவன் |
| கக | கஎ | ங | அம்பொற்சிலம்பியரவிந்தத்தாளணியும் | அம்பர்ச்சிலம்பியரவிந்தமேமலராம் |
| கஉ | உ0 | உ | காரிகொடுத்தகளைக்கொட்டும் | காரியன்றீந்தகளைக்கோடும் |
| ,, | உக | க | ஒருகொம்பிருசெவி | ஒருகையிருமருப்பு |
| ,, | உஉ | ங | அரசர்மனமிசைந்தார் | அரசன்மனமிசைந்தான் |
| ,, | ,, | ச | சங்கவையையுங்கூடத்தான் | சங்கியாதேவருகதான் |
| கங | உரு | ங | முன்மாரிபெய்யுமுது வாரியைமாற்றி | நன்மாரிதாழ்க்கொண்ட நன்னீரது தவிர்த்து |
| கசு | சரு | | "வாதக்கோன" என்னுங்கவி | வாதவர்கோன் பின்னையென்றான் வத்தவர்கோ னானையென்றான், யாதவர்கோன் யாதொன்று மில்லையென்றான்—ஆதலால், வாதவர்கோன் பின்னையினும் வத்தவர்கோ னானையினும், யாதவர்கோனில்லை யினிது. |
| கஎ | ருக | க | வலியானைக்கூடி | வரும்பொருள்கைவாங்கி |
| உச | ,, | உரு | எழிற்குன்றம் | ஏழிற்குன்றம் |
| சங | உங | ச | சடையப்பனார் | சீராமனார் |
| சசு | ருசு | உ | கைகழுவுநீர்போலும் | கைகழுவநீர்போதும் |
| சகசு | | உ | சத்திமுத்த | சத்திமுற்ற |
| சஉக | | உ | பலபட்டடை | பலபட்டரை |

சார்மதுரை வாழ்ஞான சம்பந்தப் பிள்ளைபெருஞ்
சீர்மலிவீ டுற்ற தினம். (௧௨)

பாஸ்கரசேதுபதி மகாராஜா அவர்கள் சிவபதமடைந்தமைக்காற்றாது
பாடியவை.

* சேதுபதி மன்னர்குலக் கடற்றோன்றி யருணனையே சேர்ந் தோ ராழி, மேதினியெங் கணுஞ்செலுத்தி யிரவொழித்துப் புக ழொளியை விரித்துத் தேன்போ, லோதுபிர சங்கமழை யுவந்துதவு பாற்கரநீ யொடுங்குங் கால, மீதுகொலோ வின்னமுநீ யெய்துவை யோ விரங்கியெமக் கிசைத்தி டாயே. (௨௨)

* என்னுவி யுளங்குளிர அண்ணவென் றன்பொடினி யெனை யார் சொல்வார், மன்னுமன் னுமன்னு வெனயாரை யானினிமேன் மதித்துச் சொல்வேன், பொன்னுடுங் தொழுஞ்சேது நன்னாடு புரந் தளிக்கப் போந்த நீவே, றெந்நாடு சென்றனையோ வெங்கள்குல மணிவிளக்கே யிசைத்தி டாயே. (௨௩)

* அவியுணவொன் றேயருந்து மமரருண வியாவுன் னமுத வாக்காற், செவியுணவுங் கொடுப்பதற்கோ நிதிமணியைத் தருகாம தேனு வென்னு,மவையுணரும் படியிரப்போர் குறிப்பறிந்து கொடுக் குநல மறைதற் கோவிப்,புவியிலெமை வருந்தவிட்டு வானடைந்தாய் பாற்கரநீ புகன்றி டாயே. (௨௪)

* நீணிலமீ தரனடியார் பெருமையுமன் னவன்சமய நெறியும் பல்கான், மாணவெடுத் தெடுத்துரைத்துந் திருந்துகிலார் மடமதி யின் வலிமை காணூஉ, வீணிதென வானடைந்தாய் பாற்கரசே துப தியவண் மெய்யில் போகம்,பேணுநரை யுளந்தெருட்டி யுய்விப்பான் விழைந்தனையோ பெரும நீயே. (௨௫)

* பண்புலவு தமிழ்ச்சங்க நிறுவல்கரு தியஞான்று பரிவு கூர் ந்து, நண்புலவு திருவாக்காற் றள்ர்வொழிகென் றெனக்கிசைத்த நல ம்பொய் யாதே,மண்புலவ ரொடுநனிபொன் வழங்கியமை யாதென வே மதித்து வான்போய், விண்புலவ ரோடுதம ரியங்கொணர நினை ந்தனையோ வேந்த ரேறே. (௨௬)

* சோபகிரு தாண்டொன்பான் றாய்மதியி ராறுவளர்
மாபிறையெண் ஞாயிறவி வாரமின்—நீபமலை
மாதுபதி தாக்கு மலரடியைப் பற்கராஞ்
சேதுபதி சேர்ந்த தினம். (உஎ)

ஆகச்செய்யுள் ௯0அஉ.

## ரா. இராகவையங்கார்.

இவர் பாண்டிநாட்டுத் தென்னவராயன் புதுக்கோட்டையில் இராமசாமி ஐய்யங்காருடைய புதல்வர். சேது சமஸ்தான வித்துவான்களாகிய அஷ்டாவதானம் கிருஷ்ணய்யங்கார் முத்துசாமியய்யங்கார் எனப் பிரசித்திபெற்றவர்கட்கு மருகர். தமது மாதுலர்களிடத்தே கல்விபயின்று இலக்கண இலக்கிய ஆராய்ச்சியிற்றலைமை யெய்தி பாஸ்கர சேதுபதி மகாராஜா அவர்கள் சமூக வித்துவானாக மதிப்புடனிருந்ததோடு மதுரைத்தமிழ்ச்சங்கத்துச் செந்தமிழ்ப்பத்திராசிரியராக 3 வருடம் விளங்கி இப்போது தேவிகோட்டையில் பெருங்கொடைவள்ளலாகிய கனம் மெ. அரு. நா. இராமநாதன் செட்டியாரவர்கட்குத் தமிழ்ப் பாடம் சொல்லிக்கொண்டு அங்கேவசிக்கின்றார்கள். இப்போதிவர்க்கு 39 வயசிருக்கலாம். கேட்டார்ப்பிணிக்குந் தகைய வாய் இனிய பிரசங்கமாரிபொழியும் வல்லவர். அரியபெரிய விஷயங்கள் பலவற்றை ஆராய்ந்து செந்தமிழ்ப் பத்திரிகையில் அறிஞர்கள் வியக்கும்படி எழுதிவந்தவர். நுண்ணிய விஷயங்கள் பலவற்றை ஆராய்ந்தறியும் மதிநுட்பமும் கம்பராமாயண முதலிய நூல்களிலுள்ள பொருள் விசேடங்களை யாவரும் வியக்க எடுத்துரைக்கும் பேராற்றலும் மிகப்பெற்றவர்.

கன்றியில் திரு.

* ஆர வருந்தலன் சேர வழுங்கலன்
வைக லீட்டிய பெய்கல வெறுக்கை
மாந்தி மகிழ்ச்சியு மீந்து புகழ்ச்சியு
மெய்த லுரிய பொய்தபு கிழவோர்
௫ வேற்றுப்பிற ரென்பது தேற்றத் தெளிவாக
வன்னவ ருடையன தன்னவாக் கொண்டு
காக்கும் பருவான் மீக்கொள லன்றியு
மீயா திவறும் பேயாம் பதடி
யிவனெனப் பல்லோர் தவநனி கழறு

சண்முகநாதன்றுணை.

# தனிச்செய்யுட்சிந்தாமணி

## முதற்பாகம்.

### வித்துவான்கள் பெயரகராதி.

# தனிச்செய்யுட்சிந்தாமணி

## பரிசோதனைபத்திரம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௪௫ | ௨௯ | ழுள்ளு | மூள்ளு |
| ௫௬ | ௨ | எகம்ப | ஏகம்ப |
| ௭௫ | ௨௪ | புலிபூ | புலியூ |
| ௧௪௨ | ௧௩ | அநிலமா | அநிலம |
| ௧௭௫ | ௬ | வீசை | மீசை |
| ௧௯௧ | ௨௨ | பீந்த | யீந்த |
| ௨௬௮ | ௨௬ | றுரைவா | றுறைவர் |
| ௨௭௮ | ௩௦ | தேவா | தேவர் |
| ௨௮௧ | ௨௫ | மொர்ழி | மொழி |
| ௨௮௩ | ௩௧ | ண்ப | பண் |
| ௨௮௫ | ௩ | தினமூரீ | தினமூரீ |
| ௩௦௫ | ௨௫ | பகை | பங்கை |
| ௩௦௯ | ௧௫ | பவையர் | பாவையர் |
| ௩௧௩ | ௧௫ | றினை | தினை |
| ௩௬௪ | ௮ | இராம் | இராம |
| ௩௬௭ | ௪ | பாசவண் | பாசவன் |
| ,, | ௧௧ | கலதர | கரதல |
| ௪௧௪ | ௨௮ | செரல | சொல |
| ௪௧௫ | ௧௭ | சிலைவினை | சிலையினை |
| ௪௨௩ | ௫ | றுன்னை | ணின்னை |
| ௪௬௩ | ௧௯ | தவரா | தவறு |
| ௪௬௮ | ௧௭ | யினை | றையின் |
| ௪௭௦ | ௨௪ | மாமலை | மாமுலை |
| ௪௭௮ | ௩ | ற்வி | விற் |
| ௪௮௫ | ௨ | கிலைபாச் | கிலையாச் |
| ௪௮௮ | ௧௦ | என்னும் | என்றும் |
| ,, | ௧௨ | பூரா | புரா |
| ௫௦௯ | ௨௬ | மூண் | மூள் |
| ௫௧௬ | ௨௭ | னெனில் | னென்னில் |
| ௫௨௫ | ௪ | படா | படர் |
| ,, | ௧௯ | பரவ | பராவ |
| ௫௩௮ | ௨௭ | பெண்னை | பெண்ணை |
| ௫௩௯ | ௨ | தையெலா | தையெலார் |
| ௫௪௦ | ௧௪ | காச்சி | காய்ச்சி |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௫௭௨ | ௧௮ | பொழி | மொழி |
| ௫௭௬ | ௮ | பரிவை | பரியை |
| ௫௭௭ | ௬ | தேன் | தோன் |
| ௫௭௮ | ௧0 | புகழ்ந்தவா | புகழ்ந்தவர் |
| ௫௭௮ | ௧௩ | ரோற்பா | ரோர்பா |
| ௫௮௧ | ௧௧ | தெனப | தெனப்ப |
| ௫௮௬ | ௪ | துன்றேல் | துன்னேல் |
| ௫௯௧ | ௨ | ளிந்திரனை | ழிந்திரனை |
| ௫௯௬ | ௨௬ | கலொல்லாம் | கலொல்லா |
| ௬00 | ௨0 | குன்றுது | [நான் தன்றுது |
| ௬0௯ | ௧௩ | பிறதழ | பிறழ |
| ௬௧௯ | ௯ | சாற்றெறுணு | செப்பொணு |
| ௬௨0 | ௧௭ | பதியோர் | பணிவோர் |
| ,, | ௨௨ | கடுகை | கடுக்கை |
| ௬௨௩ | ௧௫ | தருமா | தகுமா |
| ௬௨௪ | ௧௩ | மெழியி | மொழியி |
| ௬௩௪ | ௧௬ | மலத்தா | மலர்த்தா |
| ௬௩௮ | ௫ | றொடுகுட | றொருகுட |
| ௬௪௫ | ௪ | பாற்கண்டு | போற்கண்டு |
| ,, | ௨௩ | னந்த | ளந்த |
| ௬௪௭ | ௨௨ | லுற்றழி | லுற்றுழி |
| ,, | ௨௫ | யினேய் | யிறேய் |
| ௬௮௫ | ௯ | கரவை | காவை |
| ௬௮௮ | ௧௯ | காவிரு | காரிரு |
| ௭௨௨ | ௧௨ | செதுமா | சேதுமா |





உ

கடவுள் துணை.

# தனிச்செய்யுட்சிந்தாமணி

விநாயகர் வணக்கம்.

## காப்பு.

வெண்பா.

திருவாக்குஞ் செய்கருமங் கைகூட்டுஞ் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கு—முருவாக்கு
மாதலால் வானோரு மானை முகத்தானைக்
காதலாற் கூப்புவர்தங் கை.

## திருவாலவாயுடையார்.

இவர் பாண பத்திரருக்குப் பொருள் தரும்படி
சேரமான் பெருமாணாயனாருக்கு எழுதிய

## திருமுகப்பாசுரம்.

அகவல்.

மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவும் பானிற வரிச்சிற
கன்னம் பயில்பொழி லால வாயின்
மன்னிய சிவன்யான் மொழிந்திடு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
கொருமையி னுரிமையி னுதவி யணிதிகழ்
குருமா மணிதிகழ் குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க
பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்
தன்போ லென்பா லன்பன் றன்பாற்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே. (க)

சம்பகமாறன் தனதுமனைவியோ டுலாவுகையில் வந்த நன்மண மின்னதெனவறியாதுற்ற ஐயத்தை நீக்குவார்க்கு ஆயிரம்பொன் பரிசு கொடுப்பதாகக் கட்டிய பொற்கிழியைப் பெற்றுக்கொள்ளும்படி சொக்கநாதர் தருமி என்னும் ஓர் ஏழைப்பிராமணனுக்கு எழுதிக்கொடுத்தது.

கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ்செப் பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின்
மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலி
னறியவு முளவோநீ யறியும் பூவே. (௨)

அக்கவியைக் குற்றமென மறுத்த நக்கீரரைச் சினந்து கூறியதாகவழங்குவது.

அங்கம் வளர்க்க வரிவாளி னெய்தடவிப்
பங்கப் படவிரண்டு கால்பரப்பிச்—சங்கதனைக்
கீர்கீ ரெனவறுக்குங் கீரனோ வென்கவியைப்
பாரிற் பழுதென் பவன். (௩)

ஆகச்செய்யுள் ௩.

## சபாநாயகர்.

இவர் உமாபதி சிவாசாரியாருக்கு எழுதியது.

*அடியார்க் கெளியன்சிற் றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதியகைச் சீட்டுப்—படியின்மிசைப்
பெற்றான்சாம் பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
முத்தி கொடுக்க முறை. (௧)

ஆகச்செய்யுள் ௧.

## உமாதேவியார்.

இவர் திருவருணைக் குகைநமச்சிவாயரின் மாணாக்கராகிய குருநமச்சிவாயருக்குத் தில்லையில் அன்னங் கொண்டுவந்தபோது சொல்லியதாகவழங்குவது.

*கொண்டுவந்தேன் சோறு குகைநமச்சி வாயரது
தொண்ட ரடியார் சுகிக்கவே—பண்டுகந்த
பேய்ச்சிமுலை யுண்ட பெருமா னுடன்பிறந்த
நாச்சி சிவகாமி நான். (௧)

ஆகச்செய்யுள் ௧.

## முருகக்கடவுள்.

இவர் திருச்செந்தூரில் பகழிக்கூத்தரென்னும் ஓர் புலவர்பாற் சென்று தம்மீது பாமாலை சூட்டும்படி விரும்பிச் சொல்லியது.

*பூமாது போற்றிப் புகழ்பகழிக் கூத்தாநின்
பாமாலை யாங்கேட்கப் பற்றேமோ—யாமுங்
கொடுக்க வறியேமோ கூற்றுவன்றன் வந்தாற்
றடுக்க வறியேமோ தான். (க)

§ பொய்யாமொழிப் புலவர்மீது சொல்லியது.

விழுந்ததுளி யந்தரத்தே வேமென்றும் வீழின்
எழுந்து சுடர்சுடுமென் றேங்கிச்—செழுங்கொண்டல்
பெய்யாத கானகத்திற் பெய்வளையுஞ் சென்றனளே
பொய்யா மொழிப்பகைஞர் போல். (உ)

---

ஆகச்செய்யுள் எ.

## நாமகளார்.

இவர் திருவள்ளுவர் முப்பாலுக்குச் சங்கமேறியகாலத் துரைத்தது.

*நாடா முதனான் மறைநான் முகனாவிற்
பாடா விடைபா ரதம்பகர்ந்தேன்—கூடாரை
யெள்ளிய வென்றி யிலங்கிலைவேன் மாறபின்
வள்ளுவன் வாயதென் வாக்கு. (க)

---

ஆகச்செய்யுள் அ.

## நக்கீரர்.

இவர் கணக்காயனார் மகனாரெனப்படுவர். திருத்தொண்டர்த்தொகையி லருளிச்செய்யப்பட்ட பொய்யடிமையில்லாப் புலவர்களாகிய கடைச்சங்கப் புலவர்களிலொருவர். இவர்செய்த நூல்கள் பதினொராந்திருமுறையிற் சேர்க்கப்பட்ட கைலைபாதி காளத்திபாதி, திருவந்தாதி, திருவீங்கோய்மலை யெழுபது, திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, திருவெழுகூற்றிருக்கை, பெருந்தேவபாணி, கோபப்பிரசாதம், காரெட்டு, போற்றிக்கலிவெண்பா, திரு

---

§ இவர் முருகக்கடவுள் மீதியற்றிய கவி சரித்திரத்தோடு பின்வரும்.

முருகாற்றுப்படை, திருக்கண்ணப்பதேவர் திருமறம் முதலியவைகளாம். இவற்றுள் திருமுருகாற்றுப்படை பத்துப்பாட்டி லொன்றாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. பத்துப்பாட்டினுள் நெடுநல்வாடையும், புறநானூற்றிற் சேர்க்கப்பட்ட சில செய்யுளுங் கூறியிருக்கின்றனர். விநாயகரகவலும் சிறைவிடுந்தாதியுங்கூறியதாகவுஞ் சொல்லுகின்றனர். இவர்இறையனார் அருளிச்செய்த அகப்பொருட் குரையு மியற்றினர். இவ்வுரையே தமிழுரைகளில் முற்பட்டதென்பர்.

இவர் திருவள்ளுவர் நூல் அரங்கேறினபோது கூறியது.

*தானே முழுதுணர்ந்த தண்டமிழின் வெண்குறளால்
ஆன வறமுதலா வந்நான்கும்—ஏனோருக்
கூழி னுரைத்தார்க்கு மொண்ணீர் முகிலுக்கும்
வாழியுல கென்னாற்று மற்று. (௧)

சங்கறுப்ப தெங்கள்குலஞ் சங்கரர்க்கங் கேதுகுலம்
பங்கமுறச் சொன்னாற் பழுதாமோ—சங்கை
அரிந்துண்டு வாழ்வோ மரனாரைப் போல
இரந்துண்டு வாழ்வோ மினி. (௨)

இமயமலைசசாரலில் கக்கிமுகி என்னும் பூதம் தன்னியமனப்படி வயப்பட்டிருந்த தொளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதின்மரோடு இவரையுஞ் சேர்த்தாயிரவராக்கி புண்ணைக்கருதிக் குகையி லடைத்து வைத்திருக்கையில் முருகப்பிரானைத் துதித்துத் திருமுருகாற்றுப்படையொடு பாடியது.

* குன்ற மெறிந்தாய் குரைகடலிற் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையா—யென்று
மிளையா யழகியா யேறூர்ந்தா னேறே
யுளையாயென் னுள்ளத் துறை. (௩)

* குன்ற மெறிந்ததுவுங் குன்றப்போர் செய்ததுவு
மன்றங் கமரரிடர் தீர்த்ததுவு—மின்றென்னைக்
கைவிடா நின்றதுவுங் கற்பொதும்பிற் காத்ததுவு
மெய்விடா வீரன்கை வேல். (௪)

* வீரவே லாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வே டிருக்கைவேல்—வாரி

குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்புங் குன்றுந்
தொளைத்த வேலுண்டே துணை. (௫)

* இன்ன மொருகா லெனதிடும்பைக் குன்றுக்குங்
கொன்னவில்வேற் சூர்தடிந்த கொற்றவா—முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும். (௬)

* உன்னை யொழிய வொருவரையு நம்புகிலேன்
பின்னை யொருவரையான் பின்செல்லேன்—பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே. (௭)

* அஞ்சு முகந்தோன்றி லாறு முகந்தோன்றும்
வெஞ்சம ரந்தோன்றில் வேறோன்று—நெஞ்சி
லொருகா னினைக்கி லிருகாலுந் தோன்று
முருகாவென் றோதுவார் முன். (௮)

* முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே யீசன் மகனே—யொருகைமுகன்
றம்பியே நின்னுடைய தண்டைக்கா லெப்பொழுதும்
நம்பியே கைதொழுவே னான். (௯)

---

ஆகச்செய்யுள் ௰௭.

## திருவள்ளுவநாயனார்.

இவர் ஆதிக்கும் பகவனுக்கும் அருமகவாத்தோன்றி தொண்டைமண்டலத்தில்வண்டமிழ் மயிலையில் வளர்ந்துவந்தனர். இவர் மனைவியார் வாசுகியென்பவர். நெய்தற்றொழிலி னிகரின்றெனவத்தொழிலையே மேற்கொண்டு செய்துவந்தனர். அறம்பொருளின்பங்களைத் திருக்குறளாகக் கூறினர். இதனை அரங்கேற்றக் கடைச்சங்கத்திற் கொண்டு சென்று சங்கப்புலவர்க்கறிவிக்க அவர் இச்சங்கப் பலகையிடந்தரின் உமது நூல் மகிமையுடையதென்பதில் யாதுமையமின்றென; அவ்வாறே அப்பலகைமேல் அந்நூலை வைப்ப அப்பலகை அந்நூலினளவாகவே சுருங்கினதென்பர். இக்கதை திருவள்ளுவர் சரித்திரத்திலும் கபிலர் பாடினதாகச் சொல்லப்படுகிற ஓர் அகவலிலும் காணப்படுகின்றது.

ஆனால் "அற்பயன் றீரின்" என்ற ஞானாமிர்த அகவலுள்:—

"யாளி, கூவற்றாண்டு மாதப்புலைச்சி
காதற்சரணி யாளி மேதினி
யின்னிசை யெழுவர்ப் பயந்தோளீண்டே"

என்று கூறியிருத்தலையும் இதனுரையுள் யாளிதத்தன் தனக்கு விகிர்தமாய் தன்னாலே வெட்டுண்டு கிணற்றில் வீழ்த்தப்பட்ட அறிவில்லாத சணடாளப்பெண்ணை ஓர் பிராமணன் எடுத்துக்கொண்டுபோய் உத்தரபூமியில் வளர்த்து இவனுக்கே பின்னர்க்கொடுக்க இவனுக்கு அவள் காதலித்த பார்ப்பனியாய் இந்நிலவுலகின்கண்ணே இனிய கீர்த்திபெற்ற கபிலர்முதலாகிய பிள்ளைகளெழுவரை ஆகுருப் பெற்றாளன்றோ" எனக்கூறுதலையும நோக்குங்கால் ஆதிபகவன் இவரது தாய்தந்தையர் ஆகார் என்பது புலப்படும்.

எழுவரெவரெனில் பின்வரும் வெண்பாவால் உணர்க?—

"கபில ரதிகமான் காற்நறவர் பாவை
முகிலனைய கூந்தன் முறுவை—நிகரிலா
வள்ளுவ ரவ்வை வயலூற்றுக காட்டிலுப்பை
யெண்ணி லெழுவ ரிவா." என்பதாலறிக.

திருக்குறள் பதினெண்கீழ்க் கணக்கி லொன்றாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது. இத்திருக்குறளுக்கு;

*"தருமர் மணக்குடையர் தாமத்தர் நச்சர்
பரிமே லழகர் பரிதி—திருமலையர்
மல்லர் கவிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர்நூற்
கெல்லையுரை செய்தா ரிவர்" இவ்வுரைகளிற் சிறந்தது.

*"பாலெல்லா நல்லாவின் பாலாமோ பாரிலுள
நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ—நூலிற்
பரித்தவுரை யெல்லாம் பரிமே லழகன்
தெரித்தவுரை யாமோ தெளி" என்பதனாலறிக.

இவர் பிறந்தவிடத்துப் பிரியவருந்திய தாய்க்குச் சொல்லியது.

எவ்வுயிருங் காக்கவோ ரீசனுண்டோ வில்லையோ
அவ்வுயிரில் யானொருவ னல்லனோ—வவ்வி
அருகுவது கொண்டிருங் கலைவுதே லன்னே
வருகுவது தானே வரும். (க)

திருவாலங்காட்டில் சிவபெருமான் நடந ரகசியத்தைக் குறிப்பித்தது.

பூவி லயனும் புரந்தரனும் பூவுலகைத்
தாவி யளந்தோனுந் தாமிருக்க—நாவில்
இழைநக்கி நூனெருடு மேழை யறிவேனோ
குழைநக்கும் பிஞ்ஞகன்றன் கூத்து. (உ)

இவர் தமது மனைவியார் தேகவியோக மடைந்தபோது சொல்லியது.

அடிசிற் கினியாளே யன்புடை யாளே
படிசொற் றவறாத பாவாய்—அடிவருடிப்
பின்றூங்கி முன்னெழுந்த பேதையே போதியோ
என்றூங்கு மென்கண் ணிரா. (௩)

§ இவரைச் சிலர் வினவிய வினாக்களுக்கு விசித்ர விடையாகச
சொல்லியவைகள்.

*எந்தவூ ரென்றீ ரிருந்தவூர் நீர்கேளீர்
அந்தவூர்ச் செய்தி யறியீரோ—வந்தவூர்
முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய்
அப்பாலும் பாழென் றறி. (௪)

*என்ன சுவடியென்று கேட்டீ ரிதன்பெருமை
பன்னுவன் கேளீர் பராக்கென்னே—முன்னம்
மருக்கோல மேனி மலர்வாணி வாழும்
கருக்கோலை யின்சுவடி காண். (௫)

ஐயரென் றுரைத்தீர் நாயேற் கடுக்குமோ வருளி லேனைப்
பொய்யொடு களவு மற்றுப் புலன்களை யொடுக்கிக் கொண்டு
உய்யவே புலன்க ளைந்து முயர்பர வெளியுள் ளாக்கி
வெய்யவன் மதியம் போல விரவுவ ரைய ராவார். (சு)

ஞானவா னென்று சொன்னீர் நாதவிந் துவுங்க டந்து
கானலை வரையுஞ் சுட்டுக் கடுவெளிப் பரமா நந்தந்
தானெனு மவையி ரண்டுந் தவிர்ந்துதன் வசமுங் கெட்டு
மோனமுங் கடந்தே யப்பான் முடிந்தவர் ஞானி யாவார். (எ)

§ இது முதல் 7 கவிகள் கர்ணபரம்பரையாகச் சிலரால் சொல்லப்படு கின்றன.

நில்லுநில் லென்று சொன்னீர் நேசபா சங்க ளைந்தும்
புல்லறி வோடு வாங்காப் புலைகொலை களவு மற்றுச்
சொல்லுதற் கரிய ஞானச் சுழிமுனை முடியின் மீதில்
எல்லையுங் கடந்தே யப்பா லேகமா னவர்க ணிற்பார். (அ)

இருமிரு மென்று சொன்னீ ரேற்குமோ வேழை யேற்குத்
தருபொரு ளுணர்ந்து சைவ சமயமு மனைத்து நீங்கி
மருடரு வினையு நீங்கி மாசிலா வுண்மை ஞானம்
பொருந்தின ரிருப்பர் பின்பு பொருதவ ரிறப்பர் தாமே. (கூ)

போமென வுரைத்தீ ரென்னைப் பொறியொடு புலன்க ளைந்தும்
ஆமென மவிச்சை யோடு மங்ஙனே மதித்துக் கொண்டே
ஏமமுஞ் சாம மற்றே யிரவொடு பகலு மற்றுச்
சோமனுர் பதியை விட்டுத் துறந்தவர் போவ ரன்றே. (கo)

---

ஆகச்செய்யுள் உள.

## ஔவையார்.

ஆதியென்பாள் வயிற்றிற் பகவன் என்பாற்குப் பிறந்த திருவள்ளுவர் முதலிய எழுவருள் இவர் ஒருவர். "நரப்புக்கருவியோர் நண்ணிடுசேரியிற் பாணரகத்தில் ஔவை பிறந்தனள்" என இவரது தம்பியாராகிய கபிலர்தம் அகவலிற்சொல்லுகின்றார். ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி கல்வியொழுக்கம், ஐவேலசதி என்னும் யாதவன்மேற் கோவை, நன்னூற் கோவை, நான்மணிக்கோவை, அருந்தமிழ்மாலை, தரிசனப்பத்து, ஞானக்குறள் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த தனவந்தனையந்தன் என்னும்வணிகன்மீது அந்தாதி, பிடகநிகண்டு முதலியவைகள் இவர்செய்த நூல்கள் என்பர். இவரைச் சரசுவதியின் அவதாரமெனவே சொல்லுவர். இவர் அதியமானெடுமானஞ்சியிடம் அமுதமயநெல்லிக்கனி பெற்றுண்டதாகப்புறநானூற்றில் கூக-ம் செய்யுளான் விளங்கும். இவர் திருவள்ளுவர் சகோதரியாராதலின் அவர் சரிதத்திற் கூறப்பட்ட விஷயங்கள் இவர்க்கும் பொருந்தும்.

இவர் பிறந்தவிடத்துத் தம்மைவிட்டுப் பிரியலாற்றாது வருந்திய
தாய்க்குச் சொல்லியது.

இட்டமுட னென்றலையி லின்னபடி யென்றெழுதி
விட்டசிவ னுஞ்செத்து விட்டானோ—முட்டமுட்டப்

பஞ்சமே யானாலும் பாரமவ னுக்கன்றாய்
நெஞ்சமே யஞ்சாதே நீ. (௧)

சேரமான்பெருமாணயனார் தாமியற்றிய நூல்களை அரங்கேற்றச் சுந்தரமூர்த்திசுவாமிகளுடன் கைலைக்குச்செல்லுங்காலத்து இவரும்போகவிரும்பி விநாயகரை அகவற்பாவாற்றுதிக்க அவர் துதிக்கையாற்றூக்கிக்கைலையில்விட்டனர். பின்னர்வந்த சேரமான்பெருமாணயனார்இவர்தமக்கு முன்வந்திருப்பதைக்கண்டு வியப்புற்று வினவியபோது பாடியது.

மதுர மொழிநல் லுமையாள் சிறுவன் மலரடியை
முதிர நினையவல் லார்க்கரி தோமுகில் போன்முழங்கி
அதிர வருகின்ற யானையுந் தேரு மதன்பின்வருங்
குதிரையுங் காதங் கிழவியுங் காதங் குலமன்னனே. (௨)

சோழன் இவருக்கிருக்க இடங்கொடாதிருந்தபோது பாடியது.

கானெந்தே னொந்தேன் கடுகி வழிநடந்தேன்
யான்வந்த தூர மெளிதன்று—கூனன்
கருந்தேனுக் கண்ணூந்த காவிரிசூழ் நாடா
இருந்தேனுக் கெங்கே யிடம். (௩)

சோழன் இவரை மதியாமற் கம்பர்பாட்டை வியந்தபோது பாடியது.

விரக ரிருவர் புகழ்ந்திடவே வேண்டும்
விரனிறைய மோதிரங்கள் வேண்டும்—அரையதனிற்
பஞ்சேனும் பட்டேனும் வேண்டு மவர்கவிதை
நஞ்சேனும் வேம்பேனு நன்று. (௪)

சோழன் கம்பர்போற் காவியம் பாடுவோரில்லையென்றபோது பாடியது.

வான்குருவி யின்கூடு வல்லரக்குத் தொல்கரையான்
தேன்சிலம்பி யாவர்க்குஞ் செய்யரிதால்—யாம்பெரிதும்
வல்லோமே யென்று வலிமைசொல வேண்டாங்காண்
எல்லார்க்கு மொவ்வொன் றெளிது. (௫)

சித்திரமுங் கைப்பழக்கஞ் செந்தமிழு நாப்பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்—நித்தம்
நடையு நடைப்பழக்க நட்புந் தயையுங்
கொடையும் பிறவிக் குணம். (௬)

சோழன் கம்பரை வெல்வார் யாரென்றபோது பாடியது.

காணாமல் வேணதெல்லாங் கத்தலாங் கற்றோர்முன்
கோணாமல் வாய்திறக்கக் கூடாதே—நாணாமல்
பேச்சுப்பேச் சென்னும் பெரும்பூனை வந்தக்கால்
கீச்சுக்கீச் சென்னுங் கிளி. (எ)

சோழன் மனிதர்கட்கெதுபற்றி அழகுண்டாமெனவினவியபோதுபாடியது.

சுரதந் தனிலிளைத்த தோகை சுகிர்த
விரதந் தனிலிளைத்த மேனி—நிரதங்
கொடுத்திளைத்த தாதா கொடுஞ்சமரிற் பட்ட
வடுத்துளைத்த கல்லபிரா மம். (அ)

சோழனுக்குப் பொருட்செலவின் பயனை யுணர்த்தியது.

நம்ப னடியவர்க்கு நல்காத் திரவியங்கள்
பம்புக்காம் பேய்க்காம் பரத்தையர்க்காம்—வம்புக்காங்
கொள்ளைக்காங் கள்ளுக்காங் கோவுக்காஞ் சாவுக்காங்
கள்ளர்க்காந் தீக்காகுங் காண். (௯)

இரண்டு தாரக்காரனை ஒரு குறவன் பிரியமாய்வளர்த்தபலாமரத்தை அவனில்லாதகாலத்தில்சக்களத்திப்பகைமையால், இளையவள்வெட்டியெறிந்து மூத்தவள்மீதுபழிசுமத்த,அவள் கணவனுக்கஞ்சிவருத்தமுற்றிருந்ததை இவர்கண்டு அம்மரந் தழைக்கப்பாடியது.

கூரிய வாளாற் குறைபட்ட கூன்பலா
ஓரிலையாய்க் கொம்பா யுயர்மரமாய்ச்—சீரியதோர்
வண்டுபோற் கொட்டை வளர்காயாய்த் தின்பழமாய்ப்
பண்டுபோ னிற்கப் பணி. (௧0)

இவர்கையிலிருந்த மூட்டையை என்னவென்று சோழன்
கேட்டபோது பாடியது.

கூழைப் பலாத்தழைக்கப் பாடக் குறமகளும்
மூழக் குழக்குத் தினைதந்தாள்—சோழகேள்
உப்புக்கும் பாடிப் புளிக்கு மொருகவிதை
ஒப்பிக்கு மென்ற னுளம். (௧௧)

ஒருவன் இவர்க்கமுதிட வெண்ணித் தன் மனைவிக்குச் சொல்லி வருந்தியதைக்கண்டு பாடியது.

இருந்து முகந்திருத்தி யீரொடுபேன் வாங்கி
விருந்துவந்த தென்று விளம்ப—வருந்திமிக
ஆடினாள் பாடினா ளாடிப் பழமுறத்தாற்
சாடினா ளோடோடத் தான். (௧௨)

கணவன் மிகவும் வேண்டிக்கொள்ளப் பின் அவள் அன்னமிட்டபோது பாடியது.

காணக்கண் கூசுதே கையெடுக்க நாணுதே
மாணொக்க வாய்திறக்க மாட்டாதே—வீணுக்கென்
என்பெல்லாம் பற்றி யெரியுதே யையையோ
அன்பில்லா ளிட்ட வமுது. (௧௩)

பிரமனை நிந்தித்துப் பாடியது.

அற்றதலை போக வறாதலை நான்கினையும்
பற்றித் திருகிப் பறியேனோ—வற்று
மரமனையா னுக்கிந்த மானை வகுத்த
பிரமனையான் காணப் பெறின். (௧௪)

மனைவியால் வருந்தின ஒருவனுக்குப் புத்தியாகச் சொல்லியன.

பத்தாவுக் கேற்ற பதிவிரதை யுண்டானால்
எத்தாலுங் கூடி யிருக்கலாம்—சற்றேனும்
ஏறுமா றாக விருப்பளே யாமாயிற்
கூறாமற் சந்யாசங் கொள். (௧௫)

சண்டாளி சூர்ப்பநகை தாடகையைப் போல்வடிவு
கொண்டாளைப் பெண்டென்று கொண்டாயே—தொண்டர்
செருப்படிதான் செல்லாவுன் செல்வமென்ன செல்வம்
நெருப்பிலே வீழ்ந்திடுத னேர். (௧௬)

சிலம்பியென்னுந்தாசியிடம் ௫00 பொன்பெற்றுக் கம்பர் பாடிய முற்பாதியொடு பிற்பாதியை இவர் கூழுக்குப் பாடியது.

‡ தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே
மண்ணாவ துஞ்சோழ மண்டலமே—பெண்ணாவாள்
அம்பொற் சிலம்பி யரவிந்தத் தாளணியும்
செம்பொற் சிலம்பே சிலம்பு. (௧௭)

‡ இக்கவியை முற்பாதி பொய்யா மொழியாரும் பிற்பாதி ஔவையாரும் பாடினர் என்று தமிழ் நாவலர் சரிதையிற் காணப்படுகிறது.

இதைக்கண்டு கம்பர் பொறாமையால் ஔவையை அடியென்றுசொல்ல விரும்பி ஒருகாலடி நாலிலைப்பந்தலடி யென்று சிலேடையாகச் சொல்லிப் பொருள் கேட்டபோது பாடியது.

எட்டேகா லட்சணமே யெமனே றும்பரியே
மட்டில் பெரியம்மை வாகனமே—முட்டமேற்
கூரையில்லா வீடே குலராமன் றூதுவனே
ஆரையடா சொன்னா யது. (௧௮)

பாரியென்னும் ஓர் யாதவன் முருங்கைக்கீரையை நெய்விட்டுச் சமைத்துக் கேழ்வரகுக்களியிலூறிச் சாப்பிடச்செய்தபோது அதை வியந்து பாடியது.

வெய்தாய் நறுவிதாய் வேண்டளவுந் தின்பதாய்
நெய்தா னளாவி நிறம்பசந்த—பொய்யா
வடகென்று சொல்லி யமுதத்தை யிட்டார்
கடகஞ் செறிந்தகை யால். (௧௯)

பாரிவீட்டிலிருந்த அங்கவை சங்கவையென்னும் பெண்கள்கொடுத்த நீலச்சிற்றாடையை வியந்து பாடியது.

பாரி பறித்த பறியும் பழையனூர்க்
காரி கொடுத்த களக்கொட்டும்—சேரமான்
வாரா யெனவழைத்த வாய்மையு மிம்மூன்றும்
நீலச்சிற் றாடைக்கு நேர். (௨௦)

அங்கவை சங்கவையென்னும் பெண்களைத் தெய்வீகனுக்கு மணஞ்செய்து கொடுக்க எண்ணி மணவோலை எழுத விநாயகரை வரும்படி பாடியது.

ஒருகொம் பிருசெவி மும்மதத்து நால்வாய்க்
கரியுருவக் கங்காளன் காளாய்—பரிவுடனே
கண்ணால வோலை கடிதெழுத வாராயேல்
தன்னாண்மை தீர்ப்பன் சபித்து. (௨௧)

சேர சோழ பாண்டியர்களைக் கலியாணத்துக்குவரும்படிபாடியன.

சேரலர்கோன் சேரன் செழும்பூந் திருக்கோவல்
ஊரளவுந் தான்வருக வுட்காதே—பாரிமகள்
அங்கவையைக் கொள்ள வரசர் மனமிசைந்தார்
சங்கவையை யுங்கூடத் தான். (௨௨)

புகார்மன்னன் பொன்னிப் புனனாடன் சோழன்
தகாதென்று தானங் கிருந்து—நகாதே
கடிதின் வருக கடிக்கோவ லூர்க்கு
விடியப பதினெட்டா நாள். (உ௩)

வையைத் துறைவன் மதுரா புரித்தென்னன்
செய்யத் தகாதென்று தேம்பாதே—தையலர்க்கு
வேண்டுவன கொண்டு விடியவீ ரான்பாளுள்
ஈண்டு வருக விசைந்து. (உ௪)

வருணன் பொன்மாரி பெய்யும்படி பாடியது.

கருணையா லிந்தக் கடலுலகங் காக்கும்
வருணனே மாமலையன கோவல்—திருமணத்தில்
முன்மாரி பெய்பு முதுவா ரியைமாற்றிப
பொன்மாரி யாகப் பொழி. (உ௫)

பெண்ணைநதி பால் நெய்யாகப் பெருகிவரும்படி பாடியது.

முத்தெறியும் பெண்ணை முதுநீ ரதுதவிர்ந்து
தத்திய நெய்பா றலைப்பெய்து—குத்திச்
செருமலைத்தெய் வீகன் றிருக்கோவ லூர்க்கு
வருமளவுங் கொண்டோடி வா. (உ௬)

திருக்கோவலூரைச் சிறப்பித்துப் பாடியது.

பொன்மாரி பெய்யுமூர் பூம்பருத்தி யாடையாம்
அந்நாள் வயலரிசி யாகுமூர்—எந்நாளுந்
தேங்குபுக ழேபடைத்த சேதிமா நாடதனில்
ஓங்குந் திருக்கோவ லூர். (உ௭)

பனந்துண்டர் தளிர்க்கப் பாடியது.

திங்கட் குடையுடைச் சேரனுஞ் சோழனும் பாண்டியனும்
மங்கைக் கறுகிட வந்துநின் றூர்மணப் பந்தலிலே
சங்கொக்க வெண்குருத் தீன்றுபச் சோலை சலசலத்துக்
கொங்கிற் குறத்தி குவிமுலைபோலக் குரும்பைவிட்டு
நுங்குக்கண் முற்றி யடிக்கண் கறுத்து நுனிசிவந்து
பங்குக்கு மூன்று பழந்தர வேண்டும் பனந்துண்டமே. (உ௮)

அங்கவை சங்கவை யென்னும் பெண்களுக்கு இடையர் மரபின்படி சீதனங்கொடுக்கச் சேரராஜனை ஆடுகேட்டனர். அவன் பொன்னாடு கொடுக்க அதைச சிறப்பித்துப் பாடியது.

சிரப்பான் மணிமவுலிச் சேரமான் றன்னைச்
சுரப்பாடி யான்கேட்கப் பொன்னாடொன் றீந்தான்
இரப்பவ ரென்பெறினுங் கொள்வர் கொடுப்பவர்
தாமறிவார் தன்கொடையின் சீர். (உகூ)

மணமகளை ஆசீர்வதித்து மணப்பெண்களை யெப்போதும் அன்பாகப் பாதுகாக்கும்படி பாடியன.

ஆயன் பதியி லரன்பதிவந் துற்றளகம்
ஆயனூ துவகருவி யானாலும்—தூயமணிக்
குன்றுபோல் வீறு குவிமுலையார் தம்முடனீர்
இன்றுபோ லென்று மிரும். (௩0)

சொல்லாம லேபெரியர் சொல்லிற் சிறியர்செய்வர்
சொல்லியுஞ் செய்யார் கயவரே—நல்ல
குலாமாலை வேற்கண்ணாய் கூறுவமை நாடிற்
பலாமாவைப் பாதிரியைப் பார். (௩க)

வேடிக்கையாக ஆடைகேட்ட சேரனுக்குத் தன்பாடலைச் சிறப்பித்தது.

நூற்றுப்பத் தாயிரம் பொன்பெறினு நூற்சீலை
நாற்றிங்க ளுக்குளே நைந்துவிடும்—மாற்றலரைப்
பொன்றப் பொருதடக்கைப் போர்வே லகளங்கா
என்றுங் கிழியாதென் பாட்டு. (௩உ)

வேளூர்ப்பூதன் விருந்திட்டதைப் புகழ்ந்து பாடியது.

வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும்
முரமுரென வேபுளித்த மோரும்—திரமுடனே
புல்வேளூர்ப் பூதன் புகழ்ந்துபரிந் திட்டசோ
றெல்லா வுலகும் பெறும். (௩௩)

இதனினு மிதுநன்றெனல்.

ஏசி யிடலி னிடாமையே நன்றெதிரிற்
பேச மனையாளிற் பேய்நன்று—நேசமிலா

வங்கணத்தி னன்று வலியபகை வாழ்வில்லாச்
சங்கடத்திற் சாதலே நன்று. (நஉ)

கோரைக்காலி லிருக்கும் ஆழ்வான் கொடையை நிந்தித்தது.

கரியாய்ப் பரியாகிக் காரெருமை தானாய்
எருதாய் முழப்புடைவை யாகித்—திரிதிரியாய்த்
தேரைக்கால் பெற்றுமிகத் தேய்ந்துகா லோய்ந்ததே
கோரைக்கா லாழ்வான் கொடை. (நரு)

ஈகையில்லாச சேடனென்பவனை யிழித்துப் பாடியது.

பாடல் பெறானே பலர்மெச்ச வாழானே
நாடிய நன்மணங்க ளாடானே—சேடன்
இவன்வாழும் வாழ்க்கை யிருங்கடல்சூழ் பாரில்
கவிழ்ந்தென் மலர்ந்தென்ன காண். (நசு)

முல்லானைப் புகழ்ந்து பாடியது.

காலையிலொன் றுவர் கடும்பகலி லொன்றுவர்
மாலையிலொன் றுவர் மனிதரெலாம்—சாலவே
முல்லானைப் போல முகமுமக மும்மலர்ந்த
நல்லானைக் கண்டறியோ நாம். (நஎ)

ஒட்டக்கூத்தர்கொண்ட செருக்கு அடங்கப் பாடியது.

கற்றதுகைம் மண்ணளவு கல்லா துலகளவென்
றுற்ற கலைமடந்தை யோதுகிறாள்—மெத்த
வெறும்பந் தயங்கூற வேண்டாம் புலவீர்
எறும்புந்தன் கையாலெண் சாண். (நஅ)

அரசன் மந்திரியாக யாரை வைக்கலாமென்று கேட்டபோது பாடியது.

நூலெனிலோ கோல்சாயு நுந்தமரேல் வெஞ்சமராம்
கோலெனிலோ வாங்கே குடிசாயும்—நாலாவான்
மந்திரியு மாவான் வழிக்குத் துணையாவான்
அந்த வரசே யரசு. (நகூ)

ஒட்டக்கூத்தர் வெட்க நான்கு பிறைவரப்பாடியது.

செம்மான் கரத்தனருள் சேயா நெடியோனை
அம்மா னெனப்பெற் றருள்வேலா—விம்மான்

கரும்பிறைக்கும் வெண்பிறைக்குங் கண்ணம் பிறைக்கும்
அரும்பிறைக்குங் கூந்த லணே. (௪0)

ஒவ்வொன்று கோடிபெறுமென்று பாடியன.

மதியாதார் முற்ற மதித்தொருகாற் சென்று
மிதியாமை கோடி பெறும் (௪௧)

உண்ணீருண் ணீரென் றுபசரியார் தம்மனையில்
உண்ணாமை கோடி பெறும். (௪௨)

கோடி கொடுத்துங் குடிப்பிறந்தார் தம்மோடு
கூடுவதே கோடி பெறும். (௪௩)

கோடானு கோடி கொடுப்பினுந் தன்னுடைநாக்
கோடாமை கோடி பெறும். (௪௪)

ஈகையினியல்பைக் குறித்துரைத்தவை.

வாதக்கோ னாளையென்றான் வையக்கோன் பின்னையென்றான்
ஏதக்கோன் யாதேனு மில்லையென்றா—னோதக்கேள்
வாதக்கோன் சொல்லதிலும் வையக்கோன் சொல்லதிலும்
ஏதக்கோன் சொல்லே யினிது. (௪௫)

சுற்றுங் கருங்குளவி சூரைத்து றாரியப்பேய்
எற்றுஞ் சுடுகா டிடுகரையின்—புற்றில்
வளர்ந்த மடற்பனைக்குள் வைத்ததே னொக்குந்
தளர்ந்தோர்க்கொன் றீயார் தனம். (௪௬)

பொற்கிழி யறும்படி பாடியவை.

வையகம் எல்லாம் வயலாய் வானோர்
தெய்வமா முகடு சேரி யாகக்
காணமு முத்து மணியுங் கலந்தொரு
கோடானு கோடி கொடுப்பினும் ஒருநாள்
ஒருபொழு தொருவன் ஊண்ஒழிதல் பார்க்கும்
நேர்நிறை நில்லா தென்னுமென் மனனே.
நேர்நிறை நில்லா தென்னு மனனே. (௪௭)

ஆர்த்தசபை நூற்றொருவ ராயிரத்தொன் றாமபுலவா
வார்த்தை பதினா யிரத்தொருவர்—பூத்தமலர்த்

தண்டா மரைத்திருவே தாதாகோ டிக்கொருவர்
உண்டாயி னுண்டென் றறு. (௪௮)

தண்டாம லீவது தாளாண்மை தண்டி
அடுத்தக்கா லீவது வண்மை—யடுத்தடுத்துப்
பின்சென்றா லீவது காற்கூலி பின்சென்றும்
பொய்த்தான் இவனென்று போமேல் அவன்குடி
எச்சம் இறுமேல் இறு. (௪௯)

உள்ள வழக்கிருக்க வூரார் பொதுவிருக்கத்
தள்ளி வழக்கதனைத் தான்பேசி—யெள்ளளவுங்
கைக்கூலி தான்வாங்கும் காலறுவான் றன்கிளையும்
எச்சமிறு மென்றா லிறு. (௫௦)

வழக்குடையா னிற்ப வலியானைக் கூடி
வழக்கை யழிவழக்குச் செய்தோன்—வழக்கிழந்தோன்
சுற்றமுந் தானுந் தொடர்ந்தழுத கண்ணீரால்
எச்சமிறு மென்றா லிறு. (௫௧)

* சென்றமுழ துண்பதற்குச் செய்வ தரிதென்று
மன்றமுழ துண்பான் மனைவாழ்க்கை—முன்றிலில்
அச்சில் இருந்து துடைத்தெழுகண் ணீராலே
எச்சம் இறுமேல் இறு. (௫௨)

ஓர் இராசகுமாரி அழகுடைய ஓர் அரசகுமாரனைக்கண்டு கல்லாதவனென்றறியாமல், இன்ன சத்திரத்தில் இன்னகாலத்தில் நீ வந்திருந்தால் நாமிருவருங் கூடிச்சுகிக்கலாமென் றெழுதியனுப்பினள். அதை யவன் மற்றொருவனுக்குக்காட்டினன். அவன் அதன் கருத்தையறிந்து இராசகுமாரனை நீ யிவ்விடத்திலிருந்தால் அரசன் உன்னைச் சிரச்சேதஞ்செய்வனெனச் சொல்லி அவனையோட்டிவிட்டுத் தான் அவ்விராசகுமாரனைப்போல வேடங்கொண்டு அங்கிருந்தனன். அவ்வாறே அவளங்குவந்து அவனை அந்நியனென்றறியாமற் கூடிச்சுகித்தபின்னர் தெரிந்து உயிர்துறந்து பசாசாய் நின்று அச்சத்திரத்தில் வருகிறவர்களைப் பயப்படுத்திக்கொண்டிருந்தனள். அதுபோலவே அங்கு சென்றிருந்த இவரிடத்திலும் வந்து பயப்படுத்த நான்குசாமத்திலும் பாடியன.

வெண்பா விருகாலிற் கல்லானை வெள்ளோலை
கண்பார்க்கக் கையா லெழுதானைப்—பெண்பாவி

பெற்றாளே பெற்றாள் பிறர்நகைக்கப் பெற்றாளே
எற்றோமற் றெற்றோமற் றெற்று. (ருங)

கருங்குளவி சூரைத்தூ றீச்சங் கனிபோல்
வருந்தினர்க்கொன் றியாதான் வாழ்க்கை—யரும்பகலே
இச்சித் திருந்தபொருள் தாயத்தார் கொள்வரே
எற்றோமற் றெற்றோமற் றெற்று. (ருச)

வான முளதான் மழையுளதான் மண்ணுலகில்
தான முளதாற் றயையுளதா—லானபொழு
தெய்த்தோ மிளைத்தோமென் றேமாந் திருப்பாரை
எற்றோமற் றெற்றோமற் றெற்று. (ருரு)

எண்ணா யிரத்தாண்டு நீரிற் கிடந்தாலும்
உண்ணீரம் பற்றாக் கிடையேபோல்—பெண்ணாவாய்
பொற்றொடி மாதர் புணர்முலைமேற் சாராரை
எற்றோமற் றெற்றோமற் றெற்று. (ருசா)

சுப்பிரமணியர் எருமை மேய்க்கும் பிள்ளைகளி லொருவனைப்போல நாவல் மரத்திலிருக்க இவர்கண்டு அப்பா நாவற்பழம்போடென்று கேட்க, அவர் சுடுகிற பழம்போடவா சுடாதபழம் போடவா வென்றனர். ஆச்சரியப் பட்டுச் சுடுகிறபழம் போடென்றனர்; அவர் கனிந்த பழத்தை மணலிற் போட்டனர். இவரெடுத்து ஊதினர். குமரர் சுடப்போகிறது என்று பரிகசித்த போது பாடியது.

கருங்காலிக் கட்டைக்கு நாணாக்கோ டாலி
இருங்கதலித் தண்டுக்கு நாணும்—பெருங்கானில்
காரெருமை மேய்க்கின்ற காளைக்கு நான்றோற்றேன்
ஈரிரவுந் துஞ்சாதென் கண். (ருஎ)

முருகர் கொடியன முதலியன எவையெனக் கேட்டபோது பாடியன.

கோடியது.

கொடியது கேட்கி னெடியவெவ் வேலோய்
கொடிது கொடிது வறுமை கொடிது
அதனினுங் கொடிதே யிளமையில் வறுமை
அதனினுங் கொடிதே யாற்றொணாக் கொடுநோய்
அதனினுங் கொடிதே யன்பிலாப் பெண்டிர்

அதனினுங் கொடிதே
இன்புற வவள்கையி லுண்பது தானே. (ருஅ)

## இனியது.

இனியது கேட்கிற் றனிநெடு வேலோய்
இனிய தினிய தேகாந்த மினிய
ததனினு மினிய தறிவினர்ச் சேர்தல்
அதனினு மினிய தறிவுள் ளாரைக்
கனவினு நனவினுங் காண்பது தானே. (ருகூ)

## பெரியது.

பெரியது கேட்கி னெரிதவழ் வேலோய்
பெரிது பெரிது புவனம் பெரிது
புவனமோ நான்முகன் படைப்பு
நான்முகன் கரியமா லுந்தியில் வந்தோன்
கரிய மாலோ வலைகடற் றுயின்றோன்
அலைகடல் குறுமுனி யங்கையி லடக்கம்
குறுமுனி யோகல சத்திற் பிறந்தோன்
கலசமோ புவியிற் சிறுமண்
புவியோ வரவினுக் கொருதலைப் பாரம்
அரவோ வுமையவள் சிறுவிரன் மோதிரம்
உமையோ விறைவர் பாகத் தொடுக்கம்
இறைவரோ தொண்ட ருள்ளத் தொடுக்கம்
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே. (சூ0)

## அரியது.

அரியது கேட்கின் வரிவடி வேலோய்
மக்கள் யாக்கையிற் பிறத்தலு மரிதே
மக்கள் யாக்கையிற் பிறந்த காலையும்
மூங்கையுஞ் செவிடுங் கூனுங் குருடும்
பேடு நீக்கிப் பிறத்தலு மரிதே
பேடு நீக்கிப் பிறந்த காலையும்
ஞானமுங் கல்வியு நயத்த லரிதே

ஞானமும் கல்வியு நயந்த காலையும்
தானமுந் தவமுந் தரித்தலு மரிதே
தானமுந் தவமுந் தரித்தார்க் கல்லது
வானவர் நாடு வழிதிற வாதே. (சுக)

ஒட்டக்கூத்தரை நோக்கிமூர்க்கனைச்சீர் திருத்த முடியாதெனச்சொல்லியது.

ஆலைப் பலாவாக்க லாமோ வருஞ்சுணங்கன்
வாலை நிமிர்க்க வசமாமோ—நீலநிறக்
காக்கைதனைப் பேசுவிக்க லாமோ கருணையிலா
மூர்க்கனைச்சீ ராக்கலா மோ. (சுஉ)

சோமனென்னும்பிரபுவின்மேற் பாடியது.

நிழலருமை வெய்யிலிலே நின்றறிமி னீசன்
கழலருமை வெவ்வினையிற் காண்மின்—பழகுதமிழ்ச்
சொல்லருமை நாலிரண்டிற் சோமன் கொடையருமை
புல்லரிடத் தேயறிமின் போய். (சுஙூ)

இன்னதிலின்னது சிறந்ததெனப் பாடியது.

காசினியிற் பிள்ளைக் கவிக்கம் புலிபுலியாம்
பேசு முலாவிற் பெருதும்பைபுலி—யாசு
வலவர்க்கு வண்ணம் புலியாமற் றெல்லாப்
புலவர்க்கும் வெண்பாப் புலி. (சுச)

தருமார்த்த காம மோக்ஷங்களை ஒருகவியிற் சொன்னது.

ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றுங்
காத லிருவர் கருத்தொருமித்—தாதரவு
பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு. (சுரு)

நீதிகளைப்பற்றிச் சொல்லியன.

தாயோ டறுசுவைபோந் தந்தையொடு கல்விபோஞ்
சேயோடு தான்பெற்ற செல்வம்போம்—மாயவாழ்
வுற்றா ருடன்போ முடற்பிறப்பாற் றோள்வலிபோம்
பொற்றாலி யோடெவையும் போம். (சுசா)

போந்த வுதாரனுக்குப் பொன்றுரும்பு சூரனுக்குச்
சேர்ந்த மரணஞ் சிறுதுரும்—பாய்ந்த
அறிவோர்க்கு நாரி யருந்துரும்பா மில்லத்
துறவோர்க்கு வேந்தன் றுரும்பு. (சுஎ)

நிட்டூர மாக நிதிதேடு மன்னவனும்
இட்டதனை மெச்சா விரவலனும்—முட்டவே
கூசிநிலை நில்லாக் குலக்கொடியுங் கூசிய
வேசியுங் கெட்டு விடும். (சுஅ)

மாடில்லான் வாழ்வு மதியில்லான் வாணிபநன்
னாடில்லான் செங்கோ னடாத்துவது—கூடுங்
குருவில்லா வித்தை குணமில்லாப் பெண்டு
விருந்தில்லான் வீடு விழல். (சுகூ)

நேசனைக்கா ணாவிடத்தி னெஞ்சார வேதுதித்தல்
ஆசானை யெவ்விடத்து மப்படியே—வாச
மனையாளைப் பஞ்சணையின் மைந்தர்தமை நெஞ்சில்
வினையாளை வேலைமுடி வில். (எ0)

நல்லார்க ளெல்லாரு நல்லவரே தன்மையால்
வல்லாராற் கேடு படாராயின்—நல்லறி
வாண்மக்கள் பற்பலர்க்கே யுண்டாகும் பெண்டிரும்
மாண்பு கெடுக்கா விடின். (எக)

ஆங்கால மெய்வருந்த வேண்டாம தேதென்னில்
தேங்காய்க் கிளநீர்போற் சேருமே—போங்காலம்
காட்டானை யுண்ட கனியதுபோ லாகுமே
தாட்டாளன் றேடுந் தனம். (எஉ)

கல்வி யுடையீர் கருங்கான கத்திடையே
நெல்லி யிலையுதிர்ந்து நிற்பதெவன்—வல்லாய்கேள்
வெல்லா வழக்கை விலைவாங்கி வெல்விக்கும்
வல்லாளன் சுற்றம்போன் மாண்டு. (எங)

*ஒன்றாகக் காண்பதே காட்சி புலனைந்தும்
வென்றான் தன்வீர மேவீரம்—என்றானும்

சாவாமற் கற்பதே கல்வி தனைப்பிறர்
ஏவாமல் உண்பதே யூண். (௭௪)

நன்னிலப் பெருங்கோயி லிறைவன்மீது பாடியநிந்தாத்துதி.

மேற்பார்க்க மைந்தரு மூவா வெருதும் விளங்குகங்கை
நீர்ப்பாய்ச் சலுநன் னிலமுமுண் டாகியு நின்னிடத்திற்
பாற்பாக் கியவதி நீங்கா திருந்தும் பலிக்குழன்றாய்
ஏற்பார்க் கிடாமலன் றோபெருங் கோயி லிறையவனே. (௭௫)

முருகனென்பா னொருவனைப் பாடேனென்று பாடியது.

மூவர் கோவையு மூவிளங் கோவையும்
பாடிய வென்றன் பனுவலான் எம்மையும்
பாடுக வென்றனிர்
நும்மையிங் கெங்ஙனம் பாடுகேன் யானே
களிறுபடு செங்களம் கண்ணிற் காணீர்
வெளிறுபடு நல்யாழ் விரும்பிக் கேளீர்
புலவர் வாய்ச்சொற் புலம்பலுக் கிரங்கீர்
இலவ வாய்ச்சிய ரிளமுலை புல்லீர்
அவிச்சுவை யல்லது தமிழ்ச்சுவை தெருளீர்
உடீஇ ருண்ணீர் கொடீஇர் கொள்ளீர்
ஒவ்வாக் கானத் துயர்மரம் பழுத்த
துவ்வாக் கனியெனத் தோன்றிய நீரே. (௭௬)

பாண்டியன் கலியாணத்தில் விருந்துண்டதை யிழித்துக்கூறியது.

வண்டமிழைத் தேர்ந்த வழுதி கலியாணத்
துண்ட பெருக்க முரைக்கக்கேள் — அண்டி
நெருக்குண்டேன் றள்ளுண்டே னீள்பசியி னாலே
சுருக்குண்டேன் சோறுண்டி லேன். (௭௭)

வடுகன், வரதன் என்பார்க்கிரங்கிக் கூறியது.

*இறுக மூடிநிதே பிரப்பார்க்கொன் றீயாத்
தறுகணரைக் கொல்லத் தகாதோ — சிறுகை
வடுகனையும் பேதை வரதனையுங் கொன்றாய்
நடுவாமோ வீது நமா. (௭௮)

பாண்டியனை நோக்கிச் சொல்லியது.

*காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப
போதுசேர் தார்மார்ப போர்ச்செழிய—நீதியாய்
மண்ணமுத மங்கையர்தோண் மாற்றுரை யேற்றூர்க்கு
நுண்ணிய வாய பொருள். (எகூ)

இவர்தமது சகோதரர் திருவள்ளுவரொடு சங்கத்தவர்முன்சென்று பல கைக்குறிகாட்டி பொருள் கேட்டபோது அவர்களுள் ஒருவர் கூறியது.

†இவ்வளவு கண்ணி னிவ்வளவு சிற்றிடையாள்
இவ்வளவு போன்ற விளமுலையாள்—இவ்வளவாய்
நைந்த வுடலா ணலமேவ மன்மதன்றன்
ஐந்துகணை யால்வாடி னாள். (அ0)

இவர் அதைச்சரியன்றென்று மறுத்துச் சொல்லியது.

ஐய மிடுமி னறநெறியைக் கைப்பிடிமின்
இவ்வளவே னும்மனத்தை யிட்டுண்மின்—தெய்வம்
ஒருவனே யென்ன வுணரவல் லீரேல்
அருவினைக ளோர்ந்து மறும். (அக)

ஒருவனுக்குக் கல்வியுணர்ச்சிநிலையறியக்கூறியன.

*எழுபிறவி யோதி யுணர்ந்தார் தமக்கே
வருபிறவி தோறும் வலிதே—இருடீர்
கலைவாண ரெல்லாங் கழறினர்கா ணெஞ்சின்
மலைவாகக் கொள்ளேன் மதித்து. (அஉ)

எழுதரிது முன்ன மெழுதிய பின்னர்
பழுதறவா சிப்பரிது பண்பாய்—முழுதுமதைக்
கற்பரிது நற்பயனைக் காண்பரிது கண்டக்கால்
நிற்பரிது தானங் நிலை. (அங)

திருக்குருகூர் நம்மாழ்வார் பாசுரங்களை வியந்து கூறியன.

ஐம்பொருளு நாற்பொருளு முப்பொருளும் பெய்தமைத்த
செம்பொருளை யெம்மறைக்குஞ் சேட்பொருளைத்—தண்குருகூர்ச்
சேய்மொழிய தென்பர் சிலரியா னிவ்வுலகில்
தாய்மொழிய தென்பேன் றகைந்து. (அச)

† இதை ஒட்டக்கூத்தர் சொல்லியதாகவுஞ் சொல்லுவர்.

*சேய்மொழியோ தாய்மொழியோ செப்பி லிரண்டுமொன்றே
வாய்மொழியை யாரு மறையென்பர்—வாய்மொழிபோல்
ஆய்மொழிகள் சால வுளவெனினு மம்மொழியும்
சாய்மொழிய வென்பேன் றகைந்து. (அரு)

சிலநாட்டு வளங்களைப்பற்றிக் கூறியன.

வேழ முடைத்து மலைநாடு மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து—பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்து தெண்ணீர் வயற்றொண்டை
நன்னாடு சான்றோ ருடைத்து. (அசு)

*வஞ்சி வெளிய குருகெல்லாம் பஞ்சவன்றன்
நான் மாடக்கூடலிற் கல்வலிது
சோழன் உறந்தைக் கரும்பினது தொண்டைமான்
கச்சியுட் காக்கை கரிது. (அஎ)

ஒட்டக்கூத்தரை நோக்கி யுரைத்தது.

இலக்கணக் கவிஞர்சொ லின்பந் தேடுவர்
மலக்குசொற் றேடுவர் வன்க ணாளர்கள்
நிலத்துறுங் கமலத்தை நேரும் வண்டுநீ
தலைக்குறை கமலத்தைச் சாருந் தன்மைபோல். (அஅ)

சேரன்பால் வசித்துப் பிரிந்தபோது சொல்லியது.

*சிறுக்கீரை வெவ்வடகுஞ் சேதாவின் நெய்யும்
மறுப்படாத் தண்டயிரு மார்ந்தி—வெறுத்தேனை
வஞ்சிக்குங் கொற்கைக்கு மன்னவனேற் பித்தானே
கஞ்சிக்கும் புற்கைக்கும் கை. (அகூ)

எழிற்குன்றத்தரசனை இகழ்ந்து பாடியது.

*இருமர் மணிவிளக்கத் தேழிலார் கோவே
குருடேயும் அன்றுநின் குற்றம்—மருமர்ந்த
பாட்டும் உரையும் பயிலா தனவிரண்
டோட்டைச் செவியும் உள. (கூ0)

திருக்குடந்தையிற்சென்று அங்கு ஒருவன் உலோபியும் ஒருவன் உதாரியுமாக இருந்தாரைக்கண்டு பாடியது.

*திருத்தங்கி தன்வாழை தேம்பழுத்து நிற்கும்
மருத்தன் திருக்குடந்தை வாழை—குருத்தும்
இலையுமிலை பூவுமிலை காயுமிலை என்றும்
உலகில் வருவிருந்தோ டுண்டு. (௬௧)

பாண்டியனைக் கண்டபோது பாடியது.

*நல்லம்பர் நல்ல குடியுடைத்து சித்தன்வாழ்
வில்லந் தொறுமூன் றெரியுடைத்து—நல்லரவப்
பாட்டுடைத்து சோமன் வழிவந்த பாண்டியநின்
நாட்டுடைத்து நல்ல தமிழ். (௬௨)

ஐவேலசதி யென்னும் யாதவன்மீது பாடியன.

*பூங்கமல வாவிசூழ் புல்வேளூர்ப் பூதனையும்
ஆங்குவரு பாற்பெண்ணை யாற்றினையும்—ஈங்கு
மறப்பித்தாய் வாளதிகா வன்கூற்றை நாளை
அறுப்பித்தா யாமலகந் தந்து. (௬௩)

*அற்றாரைத் தாங்கிய வைவே லசதி யணிவரைமேல்
முற்றா முகிழ்முலை யெவ்வாறு சென்றனள் முத்தமிழால்
கற்றார் பிரிவுங்கல் லாதவ ரீட்டமுங் கைப்பொருள்கள்
அற்றா ரிளமையும் போலே கொதிக்கு மருஞ்சுரமே. (௬௪)

*அருஞ்சஞ் சலங்கொண்ட வைவே லசதி யகல்வரையின்
இருஞ்சஞ்சலஞ்சொல்லவேண்டுங்கொலோவெனதன்னைமொழி
தருஞ்சஞ் சலமுந் தனிவைத்துப் போனவர் சஞ்சலமும்
பெருஞ்சஞ் சலங்கொண்டு யானிருந் தேனொரு பெண்பிறந்தே.

*அலைகொண்ட வேற்கரத் தைவே லசதி யணிவரைமேல்
நிலைகொண்டமங்கைதன்கொங்கைக்குத்தோற்றிளநீரினங்கள்
குலையுண் டடியுண்டென் கையினி லெற்றுண்டு குட்டுமுண்டு
விலையுண் டடியுண்டு கண்ணீர் ததும்பவும் வெட்டுண்டவே. ()

*அழற்கட்டுக் கட்டிய வைவே லசதி யணிவரையின்
மழைக்கட்டுக் கட்டிய மாளிகை மேலொரு மங்கைநல்லாள்

உழக்கிட் டுரியிட்டு முவ்வுழக் கிட்டுரி நாழியிட்டுக்
குழற்கட் டவிழ்த்துட னங்ஙனின் றேமயிர் கோதினளே. (௯௭)

*அறங்காட் டியகரத் தைவேலசதி யகன்சிலம்பில்
நிறங்காட்டுங் கஞ்சத் திருவனை யீர்முக நீண்டகுமிழ்த்
திறங்காட்டும்வேலுஞ்சிலையுங்கொல்யானையுந்தேருங்கொண்டு
புறங்காட் டவுந்தகு மோசிலைக் காமன்றன் பூசலிலே. (௯௮)

*ஆலவட் டப்பிறை யைவேலசதி யணிவரைமேல்
நீலவட் டக்கண்க ணேரொக்கும் போதந்த நேரிழையாள்
மாலையிட் டுச்சுற்றி வட்டமிட் டோடி வரவழைத்து
வேலையிட் டுக்குத்தி வெட்டுவ ளாகில் விலக்கரிதே. (௯௯)

*ஆரா யிரங்கொண்ட வைவேலசதி யகன்கிரியில்
நீராடப் போகு நெறிதனி லேயந்தி நேரத்திலே
சீரான குங்குமக் கொங்கையைக் காட்டிச் சிரித்தொருபெண்
போராள் பிடிபிடி யென்றே நிலாவும் புறப்பட்டதே. (௧௦௦)

*ஆப்பாடி யாயர்தம் மைவேலசதி யணிவரையில்
கோப்பாயிவளெழிற்கொங்கைக்குத்தோற்றிபக்கோடிரண்டுஞ்
சிப்பாய்ச் சிணுக்கரி யாய்ச்சிமி ழாய்ச்சின்ன மோதிரமாய்க்
காப்பாய்ச் சதுரங்க மாய்ப்பல்லக் காகிக் கடைப்பட்டவே. ()

*ஆடுங் கடைமணி யைவேலசதி யணிவரைமேல்
நீடுங் கயற்கண்ணி யாடந்த வாசை நிகழ்த் தரிதால்
கோடுங் குளமுங் குளத்தரு கேநிற்குங் குன்றுகளுங்
காடுஞ் செடியு மவளாகத்தோன்றுமென் கண்களுக்கே. (௧௦௨)

யாதவகுலத்தார்களின் பெருமையைக் குறித்துரைத்தது.

* மெய்வந்த கோவலர் தங்குலத் தாரை வெறுங்குலத்தோர்
கைவந்த னஞ்சொலின் வாய்வெந் திடுமந்தக் காரணங்கேள்
ஐவந்த வேள்வியி லவர்க்குந் தெய்வமு மாகிநின்ற
தெய்வம் பிறந்த குலங்காணு நந்தன் றிருக்குலமே. (௧௦௩)

புராந்தகச்சோழன்மீது பாடியது.

கோலெடுத்துக் கோத்துரத்துங் கோகநகச் செங்கைவடி
வேலெடுத்துக் கோத்துரத்தல் விட்டிலனே—சிலமிகு

பூபால னானும் போமோ புராந்தகற்குக்
கோபால னான குணம். (கO௪)

---

. ஆகச்செய்யுள்-கஙக.

அடியிற்குறித்தவர்கள் ஔவையாரது சகோதரர்கள். அவரைப்போலவே இவர்களும் பிறந்தபோது பிரியவருந்திநின்ற தாய்முன் சொல்லியன.

உப்பை.

அந்தி முதலெறும்பீ றானவுயி ரத்தனைக்கும்
சித்த மகிழ்ந்தளிக்குந் தேசிகன்—முற்றவே
கற்பித்தான் போனானோ காக்கக் கடனிலையோ
அற்பனோ வன்னா யரன். (௧)

அதிகமான்.

கருப்பைக்குண் முட்டைக்குங் கல்லினுட்டே ரைக்கும்
விருப்புற் றமுதளிக்கு மெய்யன்—உருப்பெற்றால்
ஊட்டி வளர்க்கானோ வோகெடுவா யன்னாய்கேள்
வாட முனக்கேன் மகிழ். (௨)

உறுவை.

சண்டப்பைக் குள்ளுயிர்தன் றுயருந்தத் தானருந்தும்
அண்டத் துயிர்பிழைப்ப தாச்சரியம்—மண்டி
அலைகின்ற வன்னா யானுடைய வுண்மை
நிலைகண்டு நீயறிந்து நில். (௩)

கபிலர்.

கண்ணுழையாக் காட்டிற் கருங்கற் றவளைக்கும்
உண்ணும் படியறிந் தூட்டுமவர்—நண்ணு
நமக்கும் படியளப்பார் நாரியோர் பாகர்
தமக்குந் தொழிலென்ன தான். (௪)

வள்ளியம்மை.

அன்னை வயிற்றி லருத்தி வளர்த்தவன்றான்
இன்னும் வளர்க்கானோ வென்றாயே—மின்னரவம்

சூடும் பெருமான் சுடுகாட்டி னின்றுவிளை
யாடும் பெருமா னவன். (க)

---

ஆகச்செய்யுள்-கஙக.

## திருஞானசம்பந்த சுவாமிகள்.

இவர் சோணாட்டில் சீகாழியில் அந்தணர்குலத்திற் கௌணிய கோத்திரத்திற் சிவபாதவிதயருக்கும் பகவதியாருக்குந் திருக்குமாரராகத் தோன்றினவர். இவர் மூவாண்டில் பொய்கைக்கரையில் அம்மையளித்த ஞானப்பாலுண்டு பல சிவத்தலங்கட்குந் திருநெறித்தமிழென்னுந்தேவாரம்பாடினர். இத்தேவாரம், பன்னிருதிருமுறையில் முதன்மூன்று திருமுறைகளாகவகுக்கப்பட்டிருக்கின்றன. இவர்காலம் நின்றசீர்நெடுமாறர்காலமென விளங்குகின்றது. இவரதுசரிதம் பெரிய புராணத்தில் விரிவாயிருத்தலா லதனுட் கண்டுணர்க.

இவர் சீகாழியில் திருமங்கையாழ்வாரைச் சந்தித்தபோது சொல்லியதாக வழங்குங்கவி.

கடியுண்ட நெடுவாளை கராவிற் றப்பிக்
கயத்துக்கு ளடங்காமல் விசும்பிற் பாய
அடியுண்ட வுயர்தெங்கின் பழத்தாற் பூக
மலையுண்டு குலைசிதறு மாலி நாடா
படியுண்ட பெருமானைப் படித்துப் பாடிப்
பதம்பெற்ற பெருமானே பவளச் செவ்வாய்க்
கொடியொன்று நின்பவனிக் கெதிரே சென்று
கும்பிட்டா ளுயிரொன்றுங் கொடுவந் தாளே. (க)

---

ஆகச்செய்யுள்-கஙஎ.

## திருமங்கையாழ்வார்.

இவர் திருவாலிநகர்க் குறையலூரில் நீலன் என்பார்க்குக் குமாரராய் அவதரித்து, சோழனதாசாங்கத்துட் சிற்றரசுவகித்து ஆண்டு குமுதவல்லியாரை மணந்து பின்னர் கஞ்சிப் பேரருளாளர் அருள்பெற்று அவர்வழிநடைபெட்டுத்ததியாராதனைகைங்கரியார்த்தநிமித்தம் ஆறலைத்துப் பொருள் பறித்துச் செய்து பரமபத நாட்டைக் கைப்பற்றினர். இவர் செய்த திருப்பணிகளே திருவரங்கம் பெரியகோவிலுள் மிகுந்திருப்பன. இவர் விட்டுணு

தலங்கடோறுஞ் சென்று பாடிய பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம் திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறியதிருமடல், பெரியதிருமடல் ஆகிய இவைகள் நாலாயிரப் பிரபந்தத்துள் அடங்கியிருக்கின்றன.

இவர் திருஞானசம்பந்தரைச் சீகாழியிற் சந்தித்தபோது
சொல்லியதாக வழங்குங் கவி.

வருக்கைநறுங் கனிசிதறிச் செந்தேன் பொங்கி
மடுக்கரையிற் குளக்கரையின் மதகி லோடப்
பெருக்கெடுத்து வண்டோலஞ் செய்யுங் காழிப்
பிள்ளையார் சம்பந்தப் பெருமாள் கேளீர்
அருட்குலவு மயிலைதனி லெலும்பால் வெந்த
அங்கத்தைப் பூம்பாவை யாக்கி னோமென்
றிருக்குமது தகவன்று நிலலால் வெந்த
இவளையுமோர் பெண்ணாக்க லியல்பு தானே. (௧)

நம்மாழ்வார்மீது சொல்லியது.

சேமங் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ
நாமம் பராங்குசனோ நாரணனோ—தாமம்
துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கோ
உளவோ பெருமா னுனக்கு. (௨)

நாகபட்டணத்திலிருந்த ஓர்பௌத்த விக்கிரகத்தை இழித்துச் சொல்லியது.

* ஈயத்தா லாகாதோ விரும்பினா லாகாதோ
பூயத்தான் மிக்கதொரு பூதத்தா லாகாதோ
தேயத்தே பித்தளையாற் செம்புகளா லாகாதோ
மாயப்பொன் வேணுமோ மதித்துன்னைப் பண்ணுகைக்கே. (௩)

---

ஆகச்செய்யுள்-௧௪௦.

## இடைக்காடர்.

இவர் பாண்டிநாட்டினரென விளங்குகின்றது. இவர்பெயரைக்கொண்டு வழங்கும் இடைக்காட்டூரே; இவரது சனனத்தலம். இவ்வூர் பாண்டித் திருத்தலம் பதினான்கினு ளொன்றான திருப்பூவணத்துக்குக் கீழ்த்திசையி லிருக்கின்றது. இவரை ஆயர்மரபினரென்ப. பதினெண் சித்தரு ளொருவராயுங் கொண்டு, இடைக்காட்டுச் சித்தர் எனச்சொல்லும் ஓர்பெயரும் இவருக்

குண்டு. இவர்காலத்தில் மதுரைநகரி லரசுபுரிந்த குலேசபாண்டியன்மீது சில பிரபந்தங்கள் பாடி சங்கத்தவரு ளொருவரான கபிலரோ டுறவாடி அரங்கேற்றின போது அவ்வரசன் உள்ளத்தழுக் காற்றாற் சிரந்துளக்காது இவரை அவமதித்தமையாற் சொக்கநாதக்கடவுள் சந்நிதியின் முறையிட்டுப் பிணங்கி அவ்வூர்விட்டு வெளிப்படலும், இவரன்பின்வழியே கயற்கண்ணி யுடன் சொக்கநாதரும் சங்கத்தவர்களும் வெளிப்பட்டு வையைக் கரையிற் போயிருந்ததாயும், பின்னர் பாண்டியன் அஃதறிந் துபசரித் தழைத்துவந்து பொன்பூமியாதியளித்துப் பிழைபொறுக்கப் பிரார்த்தித் தனுப்பினனென் றுந் திருவிளையாடற் புராணஞ்சொல்லும். ஊசிமுறியென்னு மிலக்கணம் அறுபது வருடப்பலன் வெண்பா முதலியன இவர்செய்த நூல்களாம். இவர் காலத்திலுண்டான பன்னிரண்டுவருடப் பஞ்சத்தை நவக்கிரகப் பிரதிட்டை செய் தாராதித்து நீக்கினரென்ப. இவருரி லந்தப் பிரதிட்டைகளின் றுமிருக்கின்றன.

இவர் தமது நேசர்திருவள்ளுவர் நூல் சங்கத்தரங்கேறின போது கூறியது.

* கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள். (௧)

சங்கத்தார் கர்வபங்கமடைய எழுத்தாணி முறியாகப்பாடியன.

ஆற்றங் கரையி னருகிருக்கு மாமரத்தில்
காக்கை யிருந்து கஃகஃகெனக்—காக்கைதனை
எய்யக்கோ லில்லாமல்......என்றானே
ஐயக்கோ னன்றன் மகன். (௨)

*மன்றலங் கொன்றை மலர்மிலைந் துஃகுவஃ
கென்று திரியு மிடைமகனே—சென்று
மறியாட்டை யுண்ணாமல் வண்கையால் வல்லே
அறியாயோ வண்ணுக்கு மாறு. (௩)

---

ஆகச்செய்யுள் ௧௪௩.

## பட்டினத்துப்பிள்ளையார்.

சிவானுபவத்திற் சிறப்புற்றோங்கிய விப்பிள்ளையார் சுமார் ௲௫௱ வருடங்கட்குமுன் காவிரிப்பூம் பட்டினத்திலே வைசியர்மரபிலேசிவநேசர், ஞானகலாம்பை யென்பார்க்குப் பிள்ளையாய் அவதரித்தார். இவரை குபேராவதாரமென்பர். திருவெண்காடர் என்பது இவரதியற்பெயர். இவர்க்குதிரு

விடைமருதூர் மருதப்பரான சிவபெரும[illegible]ளையாயிருந்து முத்திப் பேறடையத்தக்கசாதனங்காட்டிமறைந்[illegible]ாகவத்தலப்புராணங்கூறும் இவர்செய்த திருப்பாடல்களை நம்பியா[illegible]ம்பிகள் பதினோராந்திருமு றையுட் சேர்த்திருக்கின்றனர். இ[illegible]றவுபூண்டு திருவருளையிலுற்ற போது, ஓர் கணிகையின்மீது கா[illegible]ளிவிட்டநாதத்தை அவளுண்ண உண்டான கருவிற் சனித்தவரே; தி[illegible]புகழ்க்குரியரான அருணகிரிநாதர் என்பர். அவ்வாறே திருநெல்லை தண்டபாணி சுவாமிகளால் ஓர் புராண ஞ்செய்யப்பட்டிருக்கிறது. திருவிசைப்பாப் பாடிய நாயன்மார் ஒன்பதின் மருள் திருப்பல்லாண்டுசெய்த சேந்தனார்; இவரது கிருகத்திற் றலைமைக் காரியத்தராயிருந்து பின்னர் இவர்பா லுபதேசம்பெற்ற மாணுக்கரென்ப. இவரதைக்கியத்தலம் சென்னைக்கடுத்த திருவொற்றியூர். இவர் சரிதத்துக்கு பத்திய கத்திய ரூபமாய் இரண்டு [illegible]ள் உள்ளன. பத்திரகிரியா ருமிவர் மாணுக்கரே.

இவர்க்கு மைந்தராயிருந்த மரு[illegible]ந்தை"காதற்றவூசியும் வாராது காணுங் கடைவழிக்கே" எனவெ[illegible] ஓலைநறுக்கும் ஓர்காதற்றவூசியும் அடக்கிய ஒருசிறு பெட்டியை இ[illegible]னைவியார்வசம் கொடுத்துத் திரு வருள்காட்டி மறைந்தருள; உட[illegible] இவர்கவலையற்றுத் துறவடைந்து பாடியன.

* பட்டைக் கிழித்துப் பருவூசி தன்னைப் பரிந்[illegible]
முட்டச் சுருட்டியென் மொய்குழ லாள்[illegible]காடுத்துக்
கட்டி யிருந்த கனமாயக் காரிதன் காமமெல்லாம்
விட்டுப் பிரியவென் றோவிங்ங னேசிவன் மீண்டது[illegible] (௧)

* சூதுற்ற கொங்கையு மாளுர் கலவியுஞ் சூழ்பொருளும்
போதுற்ற பூசலுக் கென்செய லாஞ்செய்த புண்ணியத்தால்
தீதற்ற மன்னவன் சிந்தையி னின்றுந் தெளிவதற்கோ
காதற்ற வூசியைத் தந்துவிட் டானென்றன் கைதனிலே.

* வாதுற்ற திண்புய ரண்ணு மலையர் மலர்ப்பதத்தைப்
போதுற்றெப் போதும் புகலுநெஞ் சேயிந்தப் பூதலத்தில்
தீதுற்ற செல்வமென் றேடிப் புதைத்த திரவியமென்
காதற்ற வூசியும் வாராது காணுங் கடைவழிக்கே.

* வேதத்தி னுட்பொருண் மண்ணசை மங்கையை விட்டுவி
போதித்த வன்மொழி கேட்டிலை யோசெய்த புண்ணியத்த

ஆதித்தன் சந்திரன் போலே வெளிச்சமதாம்பொழுது
காதற்ற வூசியும் வாராது காணுங் கடைவழிக்கே. (௪)

இவர் தமது தாயார்க்கு தகனகிரியை செய்தபோது பாடியன.

* ஐயிரண்டு திங்களா வங்கமெலா நொந்துபெற்றுப்
பையலென்ற போதே பரிந்தெடுத்துச்—செய்யவிரு
கைப்புறத்தி லேந்திக் கனகமுலை தந்தாளை
எப்பிறப்பிற் காண்பே னினி. (௫)

* அரிசியோ நானிடுவே னாத்தா டனக்கு
வரிசையிட்டுப் பார்த்துமகி ழாமல்—உருசியுள்ள
தேனே யமிர்தமே செல்வத் திரவியபூ
மானே யெனவழைத்த வாய்க்கு. (௬)

* அள்ளி யிடுவ தரிசியோ தாய்தலைமேல்
கொள்ளிதனை வைப்பேனோ கூசாமல்—மெள்ள
முகமேன் முகம்வைத்து முத்தாடி யென்றன்
மகனே யெனவழைத்த வாய்க்கு. (௭)

* முந்தித் தவங்கிடந்து முந்நூறு நாட்சுமந்தே
அந்திபக லாச்சிவனை யாதரித்துத்—தொந்தி
சரியச் சுமந்துபெற்ற தாயார் தமக்கோ
எரியத் தழன்மூட்டு வேன். (௮)

* வட்டிலிலுந் தொட்டிலிலு மார்மேலுந் தோண்மேலுங்
கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து—முட்டச்
சிறகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டுந் தாய்க்கோ
விறகிலிட்டுத் தீமூட்டு வேன். (௯)

* நொந்து சுமந்துபெற்று நோவாமலேந்திமுலை
தந்து வளர்த்தெடுத்துத் தாழாமே—யந்திபகல்
கையிலே கொண்டென்னைக் காப்பாற்று நற்றாய்க்கோ
மெய்யிலே தீமூட்டு வேன். (௰)

* முன்னை யிட்டதீ முப்பு ரத்திலே
பின்னை யிட்டதீ தென்னி லங்கையில்

அன்னை யிட்டதீ யடிவயிற்றிலே
யானு மிட்டதீ மூள்க மூள்கவே. (௧௧)

*வேகுதே தீயதனில் வெந்து பொடிசாம்பல்
ஆகுதே பாவியே னையகோ—மாகக்
குருவி பறவாமற் கோதாட்டி யென்னைக்
கருதி வளர்த்தெடுத்த கை. (௧௨)

*வெந்தாளோ சோணகிரி வித்தகா நின்பதத்தில்
வந்தாளோ வென்னை மறந்தாளோ—சந்ததமும்
உன்னையே நோக்கி யுகந்து வரங்கிடந்தென்
தன்னையே யீன்றெடுத்த தாய். (௧௩)

*வீற்றிருந் தாளன்னை வீதி தனிலிருந்தாள்
நேற்றிருந்தா ளின்றுவெந்து நீறானாள்—பாற்றெளிக்க
எல்லீரும் வாருங்க ளேதென் றிரங்காமல்
எல்லாஞ் சிவமயமே யாம். (௧௪)

திருவாரூரிலிவர்பாற் பேரன்பும் பத்தியும் செய்து திருவமுது முதலிய
வற்றாலுபசரித்து வந்த சிறுவனொருவனுக்கு மணம் நடந்த
போது உரைத்தது.

நாப்பிளக்கப் பொய்யுரைத்து நவநிதியந் தேடி
நலனொன்று மறியாத நாரியரைக் கூடிப்
பூப்பிளக்க வெழுகின்ற புற்றீசல் போலப்
புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர்
காப்பதற்கும் வகையறியீர் கைவிடவு மாட்டீர்
கவர்பிளந்த மரத்துளையிற் காலுழைத்துக் கொண்டே
ஆப்பதனை யசைத்துவிட்ட குரங்கதனைப் போல
அகப்பட்டீர் கிடந்துழல வகப்பட் டீரே. (௧௫)

மேற்குறித்த அச்சிறுவனோர்நாள் தைலமிட்டு நீராடிக் காமங்கைமிக்கு
மனைவியைச்சேர்ந்து சன்னிகண் டுயிர்துறந்திறக்க அவன் தாய்
முதலியோர் வருந்தியதற் கிரக்கமுற்றுயிர்
பெறும்படி பாடியன.

வடிவந் தானும் வாலிபம் மகளுந் தாயு மாமியும்
படிகொண் டாரு மூரிலே பழிகொண் டாட னீதியோ

குடிவந் தானு மேழையோ குயவன் றானுங் கூழையோ
நடுநின் றானும் வீணனோ நகரஞ் சூறை யானதே. (கரு)

*மண்ணு முருகு மரமுருகு மாயை யுருகு மாலுருகும்
பெண்ணு முருகு மாணுருகும் பேதா பேத வகையுருகும்
அண்ண லுருகு மிடத்தமர்ந்த வாத்தா ளுருகு மரவணையான்
எண்ணி யுருகுங் குருநாத னென்பா லுரைத்த வோர்மொழிக்கே. ()

பின்னர் உடனே உயிர்பெற்ற வச்சிறுவனை நோக்கிக் கூறியது.

*எருவாய்க் கிருவிரன்மே லேறுபுழுக் கூட்டுக்
கருவாய்க்கே கண்கலக்கப் பட்டாய்—திருவாரூர்த்
தேரோடும் வீதியிலே செத்துக் கிடந்தாயே
நீரோடுந் தாரைக்கா நீ. (கஅ)

இவர் கொங்கு நாட்டிலுள்ள ஓர்பதியி லோர்நாள் பசிக்கன்னம் விரும்பிச
சென்று ஒரு மூர்க்கன் வீட்டுத் தலைவாயிலினின்று கைதட்ட அவன்
இவரை அறியாது காமக்கள்ளனென் றெண்ணித் தடிகொண்டு
புடைத்துத் தீங்கிழைத்தபோது பாடியன.

*பூணும் பணிக்கல்ல பொன்னுக்குத் தானல்ல பூமிதனைக்
காணும் படிக்கல்ல மங்கையற் கல்லநற் காட்சிக்கல்ல
சேணுங் கடந்த சிவனடிக் கல்லவென் சிந்தைகெட்டுச்
சாணும் வளர்க்க வடியேன் படுந்துயர் சற்றல்லவே (கக)

*இருக்கு மிடந்தேடி யென்பசிக்கே யன்னம்
உருக்கமுடன் கொண்டுவந்தா லுண்பேன்—பெருக்க
அழைத்தாலும் போகே னரனேயென் றேகம்
இளைத்தாலும் போகே னினி. (உ0)

இவர் திருவுஞ்சேனைமாகாளம் சென்று வணங்கி நகருக்கடுத்த சிறுபுற வத்துள்ள கணபதி யாலயம்புக்கு ஞான நிட்டையிலிருக்குங் காலத்தில் அந்நகரையாளும் பத்ரகிரியரசன் அரண்மனையிற் களவு செய்த திருடர்கள் வரும் வழியின் மூத்தபிள்ளையார்க்கென்றோடி யுயர்ந்த விலைப்பதக்க மொன்றையெடுத் திவர் கழுத்திலிட்டுச் செல்ல, பின்னர் காவலாளரிவரைத் திருடனெனப்பிடித்தடித் திறைபால் விடுக்க அவர் இவரை அறியாது விதித்த கழுமரம் பற்றியெரியப் பாடியது.

*என்செய லாவதி யாதொன்று மில்லை யினித்தெய்வமே
உன்செய லேயென் றுணரப்பெற் றேனிந்த வூனெடுத்த
பின்செய்த தீவினை யாதொன்று மில்லை பிறப்பதற்கு
முன்செய்த தீவினை யோவிங்ங னேவந்து மூண்டதுவே. (௨௧)

கழுமரமெரிவதைக் கண்டிவரை வணங்கிய பத்திரகிரியார்
திருவருள்பெறக் குறித்தன்பின் மேலிட்டாற்பாடியன.

*நாய்க்கொரு சூலு மதற்கோர் மருத்துவ நாட்டிலுண்டோ
பேய்க்கொரு ஞானம் பிடிபடு மோபெருங் காஞ்சிரங்காய்
ஆக்குவ ராரஃ தருந்துவ ராரது போலுடம்பு
தீக்கிரை யாவதல் லாலேதுக் காமிதைச் செப்புமினே. (௨௨)

*மானார் விழியைக் கடந்தேறி வந்தனன் வாழ்குருவும்
கோனாகியென்னைக் குடியேற்றிக் கொண்டனன் குற்றமில்லை
போனாலும் பேறிருந் தாலுநற் பேறிது பொய்யன்றுகாண்
ஆனாலு மிந்த வுடம்போ டிருப்ப தருவருப்பே. (௨௩)

*அஞ்சக் கரமென்னுங் கோடரி கொண்டிந்த வைம்புலனும்
வஞ்சப் புலக்கட்டை வேரற வெட்டி வளாங்கள்செய்து
விஞ்சத் திருத்திச் சதாசிவ மென்கின்ற வித்தையிட்டுப்
புஞ்சக் களைபறித் தேன்வளர்த் தேன்சிவ போகத்தையே. (௨௪)

ஓங்கார மாய்நின்ற வத்துவி லேயொரு வித்துவந்து
பாங்காய் முளைத்த பயனறிந் தாற்பதி னாலுலகும்
நீங்காம னீங்கி நிறையா நிறைந்து நிறையுருவாய்
ஆங்கார மானவர்க் கெட்டாக் கனிவந் தமர்ந்திடுமே. (௨௫)

பாண்டி நாட்டிற் குற்றாலஞ்சென் றிருந்தபோது பாடியது.

காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பாலுண் கடைவாய் படுமுன்னே—மேல்விழுந்தே
உற்றா ரழுமுன்னே யூரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு. (௨௬)

இவரது நிதிக்குவைகளைக்கவர விரும்பி இருக்குமிடம் காட்டும்படி
அரசனால் சிறையிடப்பட்டிருந்த சேந்தனாரை விடுவிக்கப்பாடியது.

*மத்தளை தயிருண் டானு மலர்மிசை மன்னி னானும்
நித்தமுந் தேடிக் காணா நிமலனே யமல மூர்த்தி

செய்த்தலைக் கயல்பாய் நாங்கூர்ச் சேர்ந்தனை வேந்த னிட்ட
கைத்தளை நீக்கி யென்முன் காட்டுவெண் காட்டு ளானே. (உஎ)

தில்லையிலிவர் ஒருநாள் பசியுற்றிருக்கச் சிவகாமியம்மையார் கண்டு வேதிய மாதுருவமாய் வந்து அளித்த வன்னமுண்டு பாடியது.

*ஓடு மெடுத்தத னாடையுஞ் சுற்றி யுலாவி மெள்ள
வீடுக டோறும் பலிவாங்கி யேவிதி யற்றவர் போல்
ஆடு மருட்கொண்டிங் கம்பலத் தேநிற்கு மாண்டிதனைத்
தேடுங் கணக்கென்ன காண்சிவ காம சவுந்தரியே. (உஅ)

ஒருநாள் கச்சிக்காரோணத்திற் பசியால் வருந்திப்பாடியது.

*அத்தி முதலெறும்பீ றானவு யிரத்தனைக்குஞ்
சித்த மகிழ்ந்தளிக்குந் தேசிகா—மெத்தப்
பசிக்குதையா பாவியேன் பாழ்வயிற்றைப் பற்றி
இசிக்குதையா காரோண ரே. (உகூ)

திருவொற்றியூ ரடைந்திருந்தபோது பாடியன.

*கண்டங் கரியதாங் கண்மூன் றுடையதா
மண்டத்தைப் போல வழகிதாந்—தொண்டர்
உடலுருகத் தித்திக்கு மோங்குபுக ழொற்றிக்
கடலருகே நிற்குங் கரும்பு. (௩௰)

வாவியெல்லாந் தீர்த்த மணலெல்லாம் வெண்ணீறு
காவனங்க ளெல்லாங் கணநாதர்—பூவுலகின்
மீது சிவலோக மென்றென்றே மெய்த்தவத்தோர்
ஓதுந் திருவொற்றி யூர். (௩௧)

* ஓடுவிழுந்து சீப்பாயு மொன்பதுவாய்ப் புண்ணுக்
கிடுமருந்தை யானறிந்து கொண்டேன்—கடுவருந்துந்
தேவாதி தேவன் திருவொற்றி யூர்த்தெருவில்
போவா ரடியிற் பொடி. (௩௨)

சுடப்படு வாரறி யார்புர மூன்றையுஞ் சுட்டபிரான்
இடப்படு மாமதிற் றென்னொற்றி யூரன் றெருப்பரப்பில்
நடப்பவர் பொற்பத நந்தலை மேற்பட நன்குருண்டு
கிடப்பது காண்மன மேவிதி யேட்டைக் கிழிப்பதுவே. (௩௩)

* ஐயுந் தொடர்ந்து விழியுஞ் செருகி யறிவழிந்து
மெய்யும்பொய் யாகி விடுகின்ற போதொன்று வேண்டுவல்யான்
செய்யுந் திருவொற்றி யூருடை யீர்திரு நீறுமிட்டுக்
கையுந் தொழப்பண்ணி யைந்தெழுத் தோதவுங் கற்பியுமே.(௬௪)

உலகினருய்ய அருட்குறிப்பினாற்கூறியன.

* ஆரூர ரிங்கிருக்க வவ்வூர்த் திருநாளென்
றாரூர்க டோறு முழலுவீர்—நேரே
உளக்குறிப்பை நாடாத வூமர்கா ளீவிர்
விளக்கிருக்கத் தீத்தேடு வீர். (௬௫)

* சிற்றம் பலமுஞ் சிவனு மருகிருக்க
வெற்றம் பலந்தேடி விட்டோமே—நித்தம்
பிறந்திடத்தைத் தேடுதே பேதைமட நெஞ்சங்
கறந்திடத்தைத் தேடுதே கண். (௬௬)

* நச்சரவம் பூண்டானை நன்றாய்த் தொழுவதுவும்
இச்சையிலே தானங் கிருப்பதுவும்—பிச்சைதனை
வாங்குவது முண்பதுவும் வந்துதிரு வாயிலிலே
தூங்குவதுந் தானே சுகம். (௬௭)

* விட்டுவிடப் போகுதுயிர் விட்டவுட னேயுடலைச்
சுட்டுவிடப் போகின்றார் சுற்றத்தார்—பட்டதுபட்
டெந்நேர முஞ்சிவனை யேத்துங்கள் போற்றுங்கள்
சொன்னே னதுவே சுகம். (௬௮)

* முதற்சங் கமுதூட்டு மொய்குழலார் தம்மை
நடுச்சங்கு நல்விலங்கு பூட்டுங்—கடைச்சங்கம்
ஆம்போ தனதூது மம்மட்டோ விம்மட்டோ
நாம்பூமி வாழ்ந்த நலம். (௬௯)

* எத்தனைபேர் நட்டகுழி யெத்தனைபேர் தொட்டமுலை
எத்தனைபேர் பற்றி யிழுத்தவிதழ்—நித்தநித்தம்
பொய்யடா பேசும் புவியின்மட மாதரைவிட்
டுய்யடா வுய்யடா வுய். (௭௦)

* மாலைப் பொழுதினனறு மஞ்சளரைத் தேகுளித்து
வேலையினைக் கிட்டு விழித்திருந்து—ஆலாகிப்

பெற்றாள் வளர்த்தாள் பெயரிட்டாள் பெற்றபிள்ளை
பித்தானு லென்செய்வாள் பின். (௪௦)

* இருப்பதுபொய் போவதுமெய் யென்றெண்ணி நெஞ்சே
ஒருத்தருக்குந் தீங்கினையுன் னாதே—பருத்ததொந்தி
நம்மதென்று நாமிருக்க நாய்நரிகள் பேய்கழுகு
தம்மதென்று தாமிருக்குந் தான். (௪௨)

* எச்சிலென்று சொல்லி யிதமகிதம் பேசாதே
எச்சி லிருக்கு மிடமறியீர்—எச்சிறனை
உய்த்திருந்து பார்த்தா லொருமை வெளிப்படும்பின்
சித்த நிராமயமா மே. (௪௩)

* எத்தொழிலைச் செய்தாலு மேதவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கு மோனத்தே—வித்தகமாய்க்
காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலும்
தாதிமன நீர்க்குடத்தே தான். (௪௪)

* மேலு மிருக்க விரும்பினையே வெள்விடையோன்
சீல மறிந்திலையே சிந்தையே—கால்கைக்குக்
கொட்டையிட்டு மெத்தையிட்டுக் குத்திமொத்தப் பட்டவுடல்
கட்டையிட்டுச் சுட்டுவிடக் கண்டு. (௪௫)

* ஒன்பதுவாய்த் தோற்பைக் கொருநாளைப் போலவே
அன்புவைத்து நெஞ்சே யலைந்தாயே—வன்கழுகு
தத்தித்தத் திச்சட்டை தட்டிக்கட் டிப்பிட்டுக்
கத்திக்குத் தித்தின்னக் கண்டு. (௪௬)

* இன்னம் பிறக்க விசைவையோ நெஞ்சமே
முன்னறிவ ரென்றிருந்து வாழ்ந்தோரை—முன்னம்
எறிந்தகட்டை மீதி லிணைக்கோ வணத்தை
உரிந்துருட்டிப் போட்டதுகண் டும். (௪௭)

* இப்பிறப்பை நம்பி யிருப்பரோ நெஞ்சகமே
வைப்பிருக்க வாயின் மனையிருகக்ச்—சொப்பனம்போல்
விக்கிப்பற் கிட்டக்கண் மெத்தப்பஞ் சிட்டப்பைக்
கக்கிச்செத் துக்கொட்டக் கண்டு. (௪௮)

எத்தனைநாள் கூடி யெடுத்த சரீரமிவை
அத்தனையு மண்டின்ப தல்லவோ—வித்தகனார்
காலைப் பிடித்துமெள்ளக் கங்குல்பக லற்றிடத்தே
மேலைக் குடியிருப்போ மே. (சக)

---

ஆகசசெய்யுள்-ககஉ.

## ஸ்ரீமத் கம்பநாட்டாழ்வார்.

கவிச்சக்ரவர்த்தியெனப்பெயர்பெற்ற விப்புலவர்பெருமானை ஓர்அரசன் ல்வரென்றும், அவ்வரசன் பகைவரான்மாண்டபோது, இவரைக்கருப்ப ற்றிருந்தவன்னை, மாற்றலர்க்கஞ்சிச சோணாட்டிலே திருவழுந்தூரிலே ஓர் டாரிபூசகனைவோச்சன்வீட்டிலேயடைக்கலம்புக்குஅங்குப்பெற்றனரென் றுமசொல்லுவர் மதுரையினுள்ளபிடாரி பூசகருட்சிலர்இவரைதம்மினத்தவ ரெனக்காட்டித் தம் பெயரோ டிவர்பெயரைச் சேர்த்துவழங்குவர். இவ்வித் துவசிகாமணி பாலப்பருவத்திலேயே கலைமகளருளால் கல்வியிற்சிறப்புற்றி ருந்தமையைக்கேட்டுத் திருவெண்ணைநல்லூர்ச் சடையப்பமுதலியார் என் பவர் தம்மிடத்தழைத்துவைத்தன்பாகப் பரிபாலிக்க வளர்ந்து அவர் வேண் டுகோளுக்கிசைந்து கற்பனலங்காரக்களஞ்சியமாய் இதிகாசத்துளொன்றான இராமாயணம், சடகோபரந்தாதி, சரசுவதியந்தாதி, ஏரெழுபது, திருக்கை வழக்கம் முதலியனவியற்றினர்.செம்பொற்சிலையெழுபது, இலக்குமியந்தாதி என்றநூல்களையுமிவர்செய்ததாகக் கூறுவாருமுளர்.இவர்காலம் "எண்ணிய சகாத்த மெண்ணூற்றேழின்மேற் கம்பநாடன், கண்ணிய வரங்கர்முன்னே கவியரஙகேற்றினனே" என்றதனாலும் வேறு பல நூலாதாரங்களாலும் இற்றைக்கு 1120வருடங்களுக்கு முற்பட்டதெனத்தெரியவருகிறது. இவ ரை வைணவரெனச சிலருஞ் சைவரெனச்சிலருங்கூறுவர். யாராயினுமாகுக. "கல்வியிற்பெரியன் கம்பன்" 'விருத்தமென்னுமொண்பாவிற்குயர் கம்பன்' என வழங்குவதனானே இவர் புலமைத்திறம் புலப்படும். இவர் தந்தையார் பெயர் ஆதித்தன் என சில பாயிரசெய்யுள்களால் தெரியவருகிறது.

நாடெல்லைகளின் எல்லையைக்குறித்துச் சொல்லியன.

கடல்கிழக்குத் தெற்குக் கரைபொருவெள் ளாறு
குடதிசையிற் கோட்டைக் கரையாம்—வடதிசையில்
ஏனாட்டுப் பண்ணை யிருபத்து நாற்காதம்
சோணாட்டுக் கெல்லையெனச் சொல். (க)

வெள்ளா றதுவடக்கா மேற்குப் பெருவழியாம்
தெள்ளாற் புனற்கன்னி தெற்காகும்—உள்ளார
ஆண்ட கடல்கிழக்கா மைம்பத் தறுகாதம்
பாண்டிநாட் டெல்லைப் பதி. (உ)

வடக்குத் திசைபழனி வான்கீழ்தென் காசி
குடக்குத் திசைகோழிக் கோடாம்—கடற்கரையின்
ஓரமோ தெற்காகு முள்ளெண் பதின்காதம்
சேரநாட் டெல்லையெனச் செப்பு. (௩)

மேற்குப் பவளமலை வேங்கட நேர்வடக்காம்
ஆர்க்கு முவரி யணிகிழக்குப்—பார்க்குளுயர்
தெற்குப் பிநாகி திகழிருப தின்காதம்
நற்றொண்டை நாடெனவே நாட்டு. (௪)

‡ தில்லைவாழந்தணர்களிடம் இவர் தம் இராமாயணத்துக்குச் சாற்றுக்கவி பெறக் காத்திருந்தபோது சர்ப்பத்தாலிறந்த ஒரு குழந்தை உயிர் பெறச் சொல்லியன.

ஆழியான் பள்ளி யணையே யவன்கடைந்த
வாழி வரையின் மணித்தாம்பே—ஊழியான்
பூணே புரமெரித்த பொற்சிலையிற் பூட்டுகின்ற
நாணே யகல நட. (௫)

மங்கையொரு பாகர் மணிமார்பி லாரமே
பொங்கு கடல்கடைந்த பொற்கயிறே—திங்களையும்
சீறியதன் மேலூருந் தெய்வத் திருநாணே
ஏறிய பண்பே யிறங்கு. (௬)

பாரைச் சுமந்த படவரவே பங்கயக்கண்
வீரன் கிடந்துறங்கு மெல்லணையே—ஈரமதிச்
செஞ்சடையான் பூணுந் திருவா பரணமே
நஞ்சுடையாய் தூர நட. (௭)

---

‡இக்கவிகளை புதுவைச்சேதிராயனைத் தீண்டியவிடம் தீரப்பாடியதாகத் தமிழ் நாவலர் சரிதை கூறும்.

இவருக்குச் சலவைசெய்துகொடுத்த வண்ணனை வியந்தது.

சிரம்பார்த்தா னீசனயன் றேவிதனைப் பார்த்தான்
கரம்பார்த்தான் செங்கமலக் கண்ணன்—உரஞ்சேர்
மலைவெளுத்த திண்புயத்து வண்ணான்சீ ராமன்
கலைவெளுத்த நேர்த்திதனைக் கண்டு. (அ)

இவருக்குச் சவரஞ் செய்த மயிர்வினைஞனை வியந்தது.

ஆரார் தலைவணங்கா ராரார்தான் கைதொடார்
ஆரார்தான் சத்திரத்தி லாராதார்—சீராரும்
தென்புலியூர் மேவுஞ் சிவனருள்சே ரம்பட்டத்
தம்பிபுகான் வாசலிலே தான். (கூ)

தென்றலை வியந்தது.

கொற்கையான் மாறன் குலசே கரப்பெருமான்
பொற்கையா னனகதை போதாதோ—நற்கமல
மன்றலே வாரி மணிவா சலையசைக்கத்
தென்றலே யேன்வந்தாய் செப்பு. (கo)

ஆறைநகர் வாணனைப் புகழ்ந்து பாடியன.

பேரரசர் தேவிமார் பெற்ற மதலைபர்தம்
மார்பகலங் கண்டு மகிழ்வரே—போர்புரிய
வல்லா னகளங்கன் வாணன் றிருநாமம்
எல்லா மெழுதலா மென்று. (கக)

உலக்குரிய பண்ட முவந்திரக்கச் சென்றால்
கொலைக்குரிய வேழங் கொடுத்தான்—தலைக்குரிய
வாணர்கோ னைறை மகதே வனுக்கிந்தப்
பாணனோ டென்ன பகை. (கஉ)

வாணன் பெயரெழுதா மார்புண்டோ மாகதர்கோன்
வாணன் புகழுரையா வாயுண்டோ—வாணன்
கொடிதாங்கி நில்லாத கொம்புண்டோ வுண்டோ
அடிதாங்கி நில்லா வரசு. (கங)

பாணன் மதுரைப் பதியாள வைத்தபிரான்
வாணார் புகழுவரு மேகம்ப—வாணன்

கரும்போ தகமேநின் கால்பணிவேன் மீண்டு
வரும்போ தகமே வரின். (௧௪)

வாணன் புகழ்க்கெல்லை வாழ்ந்துவோர் நாவெல்லை
வாணன் புகழ்க்கெல்லை மண்ணெல்லை—வாணன்
படைக்கெல்லை திக்கெல்லை பைந்தமிழ்தேர் வாணன்
கொடைக்கெல்லை யேற்பவர்தங் கோள். (௧௫)

என்சிவிகை யென்கவிகை யென்றுவச மென்கவசம்
என்பரியீ தென்கரியீ தென்பரே—மன்கவன
மாவேந்தன் வாணன் வரிசைப் பரிசுபெற்ற
பாவேந் தரைவேந்தர் பார்த்து. (௧௬)

சேற்றுக் கமலவயற் றென்றுறை வாணனையான்
சோற்றுக் கரிசிதரச் சொன்னக்கால்—வேற்றுக்
களிக்குமா வைத்தந்தான் கற்றவர்க்குச் செம்பொன்
அளிக்குமா றெவ்வா றவன். (௧௭)

தேருளைப்புரவி வாரணத்தொகுதி திறைகொணர்ந்துவரு மன்னநின்
தேசமேதுனது நாமமேதுபுகல் செங்கையாழ்தடவு பாணரே
வாருமொத்தகுடி நீருநாமுமக தேவனுறைநகர் காவலன்
வாணபூபதி மகிழ்ந்தளிக்கவெகு வரிசைபெற்றுவரு புலவன்யான்
நீருமிப்பரிசு பெற்றுமீளவர லாகுமேகுமவன் முன்றில்வாய்
நித்திலச்சிகர மாடமாளிகை நெருங்குகோபுர மருங்கெலாம்
ஆருநிற்குமுயர் வேம்புநிற்கும்வளர் பனையுநிற்குமத னருகிலே
அரசுநிற்குமர சைச்சுமந்தசில வத்திநிற்குமடை யாளமே. (௧௮)

அலங்க லணிமார்ப னுறையர்கோன் வாணன்
விலங்கு கொடுவருக வென்றான்—இலங்கிழையீர்
சேரற்கோ சோழற்கோ தென்பாண்டி நாடாளும்
வீரற்கோ யார்க்கோ விலங்கு. (௧௯)

இலகு புகழாறை யேகம்ப வாணன்
அலகை வரும்வருமென் றஞ்சி—உலகறிய
வானவர்கோன் சென்னிமிசை வண்கை வளையெறிந்த
மீனவர்கோன் கைவிடான் வேம்பு. (௨௦)

பாண்டியனைப் பேர்மாற்றிப் பாணர்க் கரசளித்த
ஆண்டகையென் றுன்னை யறியேனே—மூண்டெழுந்த
கார்மாற்றுஞ் செங்கைக் கடகரிவா ணாவனது
பேர்மாற் றுவதரிதோ பேசு. (உக)

வாட்டானைத் தென்னவர்கோன் மாகதற்குத் தோற்றசெய்தி
கேட்டானத் தீங்குர லுங் கேட்டதற்பின்—நாட்டம்
பொருந்தா யிரவிழியான் பொன்முடியைச் சாய்த்தங்
கிருந்தானிங் கென்னாகு மென்று. (உஉ)

சடையப்பமுதலியாரைப் புகழ்ந்தது.

மோட்டெருமை வாவிபுக முட்டுவராற் கன்றென்று
வீட்டளவும் பால்சொரியும் வெண்ணெயே—நாட்டில்
அடையா நெடுங்கதவு மஞ்சலென்ற சொல்லும்
உடையான் சடையப்ப னூர். (உங)

ஆதொண்டை அரசைப்புகழ்ந்தது.

வெற்றிபுனை தாதகிக்கும் வேம்புக்கும் பெண்ணைக்கும்
சுற்றும் பெருநிழலாய்த் தோன்றுமே—கற்றோர்
திறந்தாங்குந் தாங்குஞ் செகமுழுதுந் தாங்கும்
அறந்தாங்குந் தொண்டை யரசு. (உச)

ஓர்தாசியினது தனத்தை யிகழ்ந்துரைத்தது.

கந்த மலர்ப்பிரமன் கன்னிமட வார்க்கெல்லாம்
அந்தவிள நீரைமுலை யாக்கினான்—சுந்தரஞ்சேர்
தோற்றமிகு வல்லிக்குத் தோப்பைமுலை யாக்கினான்
ஏற்றமிதில் யார்தா னியம்பு. (உரு)

மாத்தத்தன் பவனியை வியந்தது.

இருந்தவளைப் போனவளை யென்னை யவளைப்
பொருந்த வளைபறித்துப் போனான்—பெருந்தவளை
பூத்தத்தத் தேன்சொரியும் பொன்னிவள நன்னாட்டில்
மாத்தத்தன் வீதியினில் வந்து. (உசு)

மாவண்டூர்ச் சிங்கனென்னும் கருமானைப் புகழ்ந்தது.

ஆழியா னாழி யயனெழுத் தாணியென்பார்
கோழியான் குன்றெறிய வேலென்பான்—பூழியான்
அங்கைமழு வென்பா னருள்பெரிய மாவண்டூர்ச்
சிங்க னுலைக்களத்திற் சென்று. (உஎ)

அச்சுதன் என்பான் புகழை வியந்து பாடியன.

குடகர் குணகட லென்பர் குடகுக்
கிடகர் வடகட லென்பர்—வடகடலோர் .
தென்கட லென்பர் திருந்துதா ரச்சுதநின்
முன்கடைநின் றார்க்கு முரசு. (உஅ)

திணைவிளைத்தார் முற்றந் திணையுணங்குஞ் செந்நெல்
தனைவிளைத்தார் முற்றமது தானும்—கனையு
முரசுணங்கச் சங்குணங்கு மூரித்தேர்த் தானை
அரசுணங்கு மச்சுதன்முற் றம். (உகூ)

குறையுளா ரெங்கிரார் கூர்வே லிராம
இறையா றிங்க ளிருந்தான்—முறைமையால்
ஆலிக்குந் தார்மார்பா வச்சுதா வந்நாளில்
வாலிக் கிளையான் கடை. (௩0)

அரச னகளங்க னச்சுதன் முற்றத்
தரச ரவதரித்த வந்நாள்—முரசதிரக்
கொட்டிவிடு மோசையினுங் கோவேந்தர் காற்றளையை
வெட்டிவிடு மோசை மிகும். (௩க)

விசயன் என்பானைப் புகழ்ந்தது.

தனையவிழ் நாண்மாலைத் தாயரே யாவி
கனையினுமென் கண்டிறந்து காட்டேன்—வளைகொடுபோம்
வன்கண்ணன் மாவிசயன் மால்யானை தன்னொடும்வந்
தென்கண் புகுந்தா னினி. (௩உ)

களப்பாளனைப் புகழ்ந்தது.

படுபருந்துஞ் சூர்ப்பேயும் பன்மிருகஞ் செந்நாய்
கொடிகழுகு மித்தனையுங் கூடி—வடிவுடைய

கோமான் களப்பாளன் கொல்யானை போமாறு
போமாறு போமாறு போம். (௩௩)

§ அன்றையினும் இன்றைக் ககன்றதோ வல்லாது
குன்றெடுத்து நீதிருத்திக் கொண்டாயோ—என்றும்
அடைந்தாரைத் தாங்கு மகளங்கா நீயும்
நடந்தாயே நாலேர் தடி. (௩௪)

அரசன்கொடுத்த ஈற்றடியைக் கண்டசுத்தியிற்பாடியது.

கண்டாயோ பார்வேந்தா கானகத்துக் கள்ளியின்கீழ்
வெண்டாழை பூத்து விளக்கெரியப்—பெண்டாலி
பூட்டுதற்கு முன்னமொரு புத்திரனைப் பெற்றெடுத்தாள்
காட்டிற் கழுகோட்டுங் கை. (௩௫)

இவர் தாசிபொன்னிக்கு எழுதிக்கொடுத்த அடிமைச்சாதனத்தை
அரசன்காட்ட அதை இலக்குமிக்கென்று மறுத்தது.

கன்னிக் கலச முலையாடன் காமக் குரோத புஞ்சத்தில்
என்னுக் கெழுதிக் கொடுத்தேனென் றியம்பக் கேளா யிகல்வேந்தே
மின்னுக் கெழுதி யிடைக்கெழுதி வேண்டும் பொருட்கு மெழுதியருட்
பொன்னுக்கெழுதிக்கொடுத்தேன்யான்பொய்யுமுரையேன்புகல்வேந்தே.

இவரொருகாலத்தில் அரசனை வெறுத்துக் கூறியன.

மன்னவனு நீயோ வளநாடு முன்னதோ
உன்னையறிந் தோதமிழை யோதினேன்—என்னை
விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ வுண்டோ
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு. (௩௭)

காத மிருபத்து நான்கொழியக் காசினியை
ஓதக் கடல்கொண் டொளித்ததோ—மேதினியில்
கொல்லிமலைத் தேன்சொரியுங் கொற்றவா நீமுனிந்தால்
இல்லையோ எங்கட் கிடம். (௩௮)

கொங்குநாட்டிற் சென்றபோது பாடியது.

நீரெலாஞ் சேற்று நாற்ற நிலமெலாங் கல்லு முள்ளும்
*ஊரெலாம் பட்டி தொட்டி யுண்பதோ கம்பஞ் சோறு

§ இது ஒட்டக்கூத்தர் கவி என்று தமிழ் நாவலர் சரிதை கூறும்.

பேரெலாம் பொம்மன் றிம்மன் பெண்களோ நாயும் பேயும்
காருலாங் கொங்கு நாட்டைக் கனவிலு நினைக்கொ ணாதே. (௩௯)

வன்னியரை நிந்தாஸ்துதியாகப் பாடியது.

குமிண்டியும் பண்ணையுங் கூட மூளைகின்ற கொல்லைக்கம்பை
நிமிண்டியு மூதியுந் தின்னவல் லோரிந்த நீணிலத்தில்
துமிண்டியங் காய்தன்னை மொட்டையம் பாலெய்யுஞ் சூரர்கண்டீர்
நமிண்டியிற் பள்ளிக ளத்தனை பேர்களு நல்லவரே. (௪0)

வேளாளரைப்புகழ்ந்து பாடியன.

செட்டிமக்கள் வாசல்வழிச் செல்லோமே செக்காரப்
பொட்டிமக்கள் வாசல்வழிப் போகோமே—முட்டிபுகும்
பார்ப்பா ரகத்தையெட்டிப் பாரோமே யெந்நாளும்
காப்பாரே காராளர் காண். (௪௧)

மேழி பிடிக்குங்கை வேல்வேந்தர் நோக்குங்கை
ஆழி தரித்தே யருளுங்கை—சூழ்வினையை
நீக்குங்கை யென்று நிலைக்குங்கை நீடூழி
காக்குங்கை காராளர் கை. (௪௨)

காலப் புயனிகர் காராளர் தம்மைக் கடலுடுத்த
தாலக் குலமங்கை பெற்றத னாற்சதா காலமுமால்
கோலத் திருமுகத் தாலே முகந்தனன் கூடலிலே
சூலக் கரப்படை யான்றலை மீது சுமந்தனனே. (௪௩)

கம்பஞ்சோற்றை வியந்து பாடியது.

கல்லங்காடு தனில்விளையாக் கடுகநிலத்திற் றன்முளையா
அல்லங்கிருந்த கருங்கூந்த லணங்குக் கணங்கு போலாவாள்
செல்லன்றேவி மனைகடொறுந் தேடித்திரிந்துங் காணாத
நெல்லஞ்சோறே கம்பஞ்சோற் றினைநீசுமந்து திரிவாயே. (௪௪)

வேலி என்பவளுக்குக் கூலியாளாகித் தன்னால்வைக்கப்பட்ட
சுவர் விழாதிருக்கப் பாடியது.

மற்கொண்ட திண்புயத்தான் மாநகர்விட் டிங்குவந்தேன்
சொற்கொண்ட பாவின் சுவையறிவா ரீங்கிலையே
விற்கொண்ட வாணுதலாள் வேலி தருங்கூலி
நெற்கொண்டு போமளவு நில்லாய் நெடுஞ்சுவரே. (௪௫)

இவர்மீது அரசன்கொண்ட சந்தேகத்தை நீக்குமாறு சொல்லியது.

தேரையார் செவ்விளநீ ருண்ணார் பழிசுமப்பர்
நாரியார் தாமறிவார் நாமவரை நத்தாமை
கோரைவாய்ப் பொன்சொரியுங் கொல்லிமலை நன்னாடா
ஊரைவாய் மூட வுலைமூடி தானிலையே. (௪௬)

இவர் குமாரர் அம்பிகாபதி அரசனால் வெட்டுண்டபோது சொல்லியது.

மட்டுப் படாக்கொங்கை மாரார் கலவி மயக்கத்திலே
கட்டுப்பட் டாயென்ன காதல்பெற் றாய்மதன் கையம்பினால்
பட்டுப்பட் டாயினுந் தேறுவை நீயென்று பார்த்திருந்தேன்
வெட்டுப்பட் டாய்மக னேதலை நாளின் விதிப்படியே. (௪எ)

பரப்போத ஞால மொருதம்பி யாளப் பணிமதியந்
துரபபோ னொருதம்பி பின்வரத் தானுந் துணைவியுடன்
வரப்போன மைந்தற்குத் தாதை பொறுதுயிர் மாய்ந்தனனென்
சுரபபோ வெனக்கிங் கினியா ருவமை யுரைப்பதற்கே. (௪அ)

அரசன் கண்டவையைக் கண்டசுத்தியிற் பாடியது.

கரைக்கு வடக்கிருக்குங் காளிகா ளம்மைக்
கரைத்துவழி சாந்தைதொட் டப்பேய்—உரைத்தும்
மறைக்க வறியாத வன்பேயின் கையைக்
குறைக்குமாங் கூன்கத்தி கொண்டு. (௪௯)

சந்திரசேகரவாணன் மீது பாடியது.

*ஒப்பாரி யாய்நின் மகவைத் தெருவி லொருத்திகண்டே
அப்பா வெனவெடுத் தாளணைத் தாளன்னை தானுமென்றாள்
தப்பாதுன் மைந்தனென் றூனங்க னேதலை சாய்த்துநின்றாள்
செப்பா யவளெவள் காண்சேறை வாழ்சந்த்ர சேகரனே! (௫௦)

ஒருகைக்கோளன் கொண்ட ஐயத்தை நீக்கவுரைத்தது.

மைக்கணை யான விழிக்கணை கொண்டு மருட்டி யிருட்டறையில்
பொய்க்கள வாகப் போனது முண்டு புணர்ந்தது மில்லையடா
கைக்கள வான குறுந்தடி கொண்டு கழுத்தை நெருக்கவரும்
சக்கள வாவென் றங்கைய டாநின் றூரம டாவிடடா. (௫௧)

காவேரிபெருக்கடங்கப் பாடியது.

*கன்னி யழிந்தனள் கங்கை திறம்பினள்
பொன்னி கரையிழந்து போனாளென்—றிந்நீர்
உரைகிடக்க லாமோ உலகுடைய தாயே
கரைகடக்க லாகாது காண். (௫௨)

கம்பர் வல்லிவீட்டுக்கு எருமை வாங்கிவரப்போய்க் காளிம்பன் நிரை மேய்ப்பானைக்கண்டு அவன் பேரிற் பாடியது.

*புக்கு விடைதழுவிக் கோடுழுத புண்ணெல்லாம்
திக்குளுயர் காளிம்பன் தென்புழல்மான்—அக்கணமே
தோள்வேது கொண்டிலனேற் சுந்தரப்பொற் றேன்றலுக்கு
வாழ்வேது கண்டிலமே மற்று. (௫௩)

பாண்டியனும் தேவியும் பல்லக்குச சுமந்தபோது பாடியது.

†உமையாளும் நீயும் ஒருங்கொப்பே ஒப்பில்
உமையாளுக் கங்குண்டோர் ஊனம்—உமையாடன்
பாகந்தோய்ந் தாண்டான் பலிக்குழன்றான் பாண்டியனுன்
ஆகந்தோய்ந் தாண்டான் அரசு. (௫௪)

தாதனெனும் புலவன் மேற்பாடியது.

*தாதாவென் றாலும் தருவென்று சொன்னாலும்
தாதாவென் றாலும் தருவனோ தாராதான்
தாதாவென் றாலும் தருவென்று சொன்னாலும்
தாதாவென் றாலும் தருவன்நம் தாதனே. (௫௫)

களத்தூர் மின்னாளைக் கலந்துபாடியது.

*வில்லி களந்தைமின்னை விண்ணவர்தங் கோவினையும்
வல்லிநெடுஞ் சேடனையும் வாணனையும்—புல்லியுறப்
பார்க்கும்போ தும்மதரம பற்றும்போ தும்மணைத்துச்
சேர்க்கும்போ துந்நினைப்பஞ் சென்று. (௫௬)

சடையப்ப பிள்ளையைப் புகழ்ந்து பாடியது.

*பொதுமாதர் வீட்டைப் புகழ்பெறவே செந்நெற்
கதிராலே வேய்ந்தருளுங் கங்கைப்—பதிநேர்

† இதைப் பொய்யாமொழிப் புலவர் கூறியதாகவும் சொல்லுவர்.

வருவெண்ணை நாடன் மகிழ்நா வலர்க்கைகந்
தருவா னவன்சடையன் தான். (ருஎ)

வாணியன் ஒருவனை விருதுகாளம்பிடிக்கும்படி பாடியது.

*கூளம் பிடித்தெள்ளின் கோதுவைப் பானங் குலக்கனிக்கெக்
காளம் பிடித்திடிற் சின்னம் படுமன்னர் காதலிமார்
வேளம் பிடித்தகண் வெள்ளம் பிடிக்கவெம் பேய்க்கணம்போய்த்
தாளம் பிடிக்கத் தனிவேல் பிடித்த சயதுங்கனே. (ருஅ)

காவிரி எச்சனீரெனப்பாடியது.

*மெய்கழுவி வந்து விருந்துண்டு மீளுமவர்
கைகழுவு நீர்போதுங் காவிரியே—பொய்கழுவும்
போர்வேள் சடையன் புதுவையான் றன்புகழை
யார்போற்ற வல்லா ரறிந்து. (ருகூ)

திருவொற்றியூர் வல்லியைக்கண்டு சொல்லியது.

*இல்லென்பார் தாமவரை யாமவர்தம் பேரறியோம்
பல்லென்று செவ்வாம்பன் மூல்லையையும் பாரித்துக்
கொல்லென்று காமனையுங் கண்காட்டிக் கோபுரக்கீழ்
நில்லென்று போனாரென் னெஞ்சைவிட்டுப் போகாரே. (சுO)

*நடக்கில் அன்னமாம் நிற்கினல் வஞ்சியாம்
கிடக்கில் ஓவியப் பாவை கிடந்ததாம்
தடக்கை யான்சது ரானன பண்டிதன்
மடத்து ளாளென் மனத்துறை வல்லியே. (சுக)

பிரதாபருத்திரனை வியந்து பாடியது.

*அவனிமுழு தாண்டு மபிரா வதத்துன்
பவனி தொழுவார் படுத்தும்—புவனி
உருத்திரா வுன்னுடைய வோரங்க நாட்டிற்
குருத்திரா வாழைக் குழாம். (சுஉ

மயிலாப்பூர் தட்டான் திருவாலிமேற் பாடியது.

*அண்ண றிரு வாலி யணிமயிலை யத்தனையும்
வெண்ணிலவின் சோதி விரித்ததே—நண்ணும்

தடாநதுப்பு விற்பாணா தன்முகத்தே கொண்டு
நடந்துப்பு விற்பா ணகை. (௬௩)

குரும்பை என்னூர் தாதியைக் கூடியபோ துரைத்தது.

*சொல்லியைச் சொல்லி னமுதான சொல்லியைச் சொற்கரும்பு
வில்லியை மோக விடாய்தவிர்ப் பாளை விழியம்பினாற்
கொல்லியைக் கொல்லியம் பாவையொப் பாளைக் குளிரொற்றியூர்
வல்லியைப் புல்லிய கைக்கோ விவர்வந்து வாய்த்ததுவே. (௬௪)

இராமாயணம் பாடும்போது பத்திரகாளியைப் பந்தம்பிடி என்று பாடியது.

*ஒற்றியூர் காக்க வுறைகின்ற காளியே
வெற்றியூர் காகுத்தன் மெய்ச்சரிதை—பற்றியே
நந்தா தெழுதுதற்கு நல்லிரவின் மாணுக்கர்
பிந்தாமற் பந்தம பிடி. (௬௫)

சோழன் இவர்மீது புலியைக் கொல்லவிட்டபோது பாடியது.

*வெங்கண் சிவந்து வெடிவால்முறுக்கி வெகுண்டெழுந்தென்
அங்கம் பிளக்க வரும்புலி யேயன் றிரணியனைப்
பங்கம் படப்பட வள்ளுகி ராலுரம் பற்றி யுண்ட
சிங்க மிருப்பது காண்கெடு வாயென்றன் சிந்தையுள்ளே. (௬௬)

சோழன் எய்த வில்லம்பு தம்மார்பிற்பட் டுருவியபோது பாடியது.

*வில்லம்பு சொல்லம்பு மேதகவே யானாலும்
வில்லம்பிற் சொல்லம்பு வீறுடைத்து—வில்லம்பு
பட்டுருவிற் றென்னையென் பாட்டம்பு நின்குலத்தைச்
சுட்டெரிக்கு மென்றே துணி. (௬௭)

அம்பிகாபதியும் கம்பரும் பாடியது.

இட்டடி நோவ வெடுத்தடி கொப்புளிக்க
வட்டில் சுமந்து மருங்கசைய—கொட்டிக்
கிழங்கோ கிழங்கென்று கூறுவா ளாவில்
வழங்கோசை வையம் பெறும். (௬௮)

திருவிடைமருதூர்த் தாசிகளைப் புகழ்ந்து பாடியது.

வாச மலர்மடந்தை போல்வார் மருதவனத்
தீச னடியா ரெழுபதினமர்—நேச்த

திரவலர்மே னீட்டுவர்கை யீண்டுலகை யாளும்
புரவலர்மே னீட்டுவர்பொற் றாள். (௬௯)

தானுயிர்விடுங்காலத்துரைத்தது.

*ஆன்பாலுந் தேனு மரம்பைமுதன் முக்கனியும்
தேம்பாய வுண்டு தெவிட்டுமனந்—தீம்பாய்
மறக்குமோ வெண்ணெய் வருசடையா கம்பன்
இறக்கும போதேனு மினி. (௭௦)

---

ஆகசசெய்யுள் உசுஉ.

அம்பிகாபதி.

இவர்புலவர்திலகரான கம்பநாட்டாழ்வாரின் அருமைப்புத்திரர். இவர் பெயர்பெற்று வழங்கும் "அம்பிகாபதிக்கோவை" என்னு நூலையன்றி வேறு எதும் ஓர்நூல்செய்ததாகக் கண்டிலம். பஞ்சவிலக்கணங்களுளொன்றான அலங்காரமும், இவர் செய்ததாகசசிலர் கூறுவர். அது கிடைத்திலது. தண்டியலங்காரம் என்னும் நூல் "பூவிரிதண்பொழிற் காவிரிநாட்டு, வம்பவிழ் தெரியலம்பிகாபதி, மேவருந் தவத்தினிற் பயந்த, தாவருஞ்சீர்த்தித் தண்டி யென்பவனே." என அந்நூற்பாயிரத்திற் குறித்தபடி இவர் குமாரர் தண்டிஎன்பவராற் செய்யப்பட்டதென்பர். இவர் அரசன் புதல்வியின் காமத்திற் சிக்கி வெட்டுப்பட்டிறந்தனரென்பர்.

இவர் தந்தையாரியற்றிய இராமாயணம் அரங்கேற்றுகையிற் சொல்லியது.

*சம்ப ரூட னுரைசெவி சாற்றுபூங்
கொம்ப ருடன் கொழுந னிராமபேர்
பம்ப நாடழைக் குங்கதைப் பாச்செய்த
கம்ப நாடன் கழறலை யிற்கொள்வாம. (க)

அரசன் தன்மகள்மீதிவருற்ற காமக்குற்றத்தை, நூறுகவி கடவுள் பரமாகப்பாடில் பொறுப்பதாயும் இல்லையேற் சிரசசேதஞ்செய்வதாயுஞ்சொல்ல அந்தப்படி பாடிவருகையிற் கடைப்பா முடியுமுன் அவ்வரசன் புதல்வி தலையை நீட்டிப் பார்த்ததைக்கண்டு அவள் மீது மோகித்துப் பாடியன.

சற்றே பருத்த தனமே குலுங்கத் தரளவடந்
துற்றே யசையக் குழையூச லாடத் துவர்கொள்செவ்வாய்
நற்றே னொழுக நடனசிங் கார நடையழகின்
பொற்றே ரிருக்கத் தலையலங் காரம் புறப்பட்டதே. (உ)

வீரமுண் டோமதன் கையம்பி னால்வெந்து வீழுகைக்கு
நேரமுண் டோவஞ்சி நேர்பட்ட காலையி னெஞ்சைவிடப்
பேரமுண் டோசொல வொண்ணாத காமப் பெருநெருப்புக்
கீரமுண் டோவைய னேயென்ன பாவ மினிச்சொல்வதே. (௩)

உருகி யுடல்கருகி யுள்ளீரல் பற்றி
எரிவ தவியாதென் செய்வேன்—வரியரவ
நஞ்சிலே தோய்ந்த நளினவிழிப் பெண்பெருமாள்
நெஞ்சிலே யிட்ட நெருப்பு. (௪)

மைவடிவக் குழலியர்தம் வதனத்தை நிகராகா மதியே மானே
செய்வடிவைச் சிற்றிடையைத் திருநகையை வேய்த்தோளைத் தெய்வ மாக
இவ்வடிவைப் படைத்தவடி வெவ்வடிவோ யானறியே னுண்மை யாகக்
கைபடியத் திருமகளைப் படைத்திவளைப் படைத்தனனற் கமலத் தோனே.

*ஏகாவட மென்னிரு கொங்கையின்மேல்
ஆகாவட மான தறிந்திலையே
தேகாபர ணதிசை யானைகளின்
பாகாபர ராச பயங்கரனே. (௬)

துறைகளாகப்பாடியன

வறிதுநகைதோற்றல்.

*பூணுந் தரள நிரையவிர் தோற்றமும் பூந்தளவின்
சேணுங் கமழு முகையுந் தகையுஞ் செழுஞ்சிலம்பிற்
காணுங் கலப மயினெடும் பீலியின் காலுஞ்சிந்தை
நாணுங் கெடவறி தேநகைத் தாண்மதி நன்னுதலே. (௭)

முறுவற்குறிப்புணர்தல்.

*மிகலே யொழியக் குறைவற நீடிய வெந்துயர்க்கோர்
புகலேது மின்றிப் புலம்பனெஞ் சேபொருந் தார்வருந்த
இகலே செயுமயி லன்னகண் ணாண்முகத் தெல்வியன்றிப்
பகலே நிலவு பவளத்துள் ளேவந்து பாரித்ததே. (௮)

பிரிவச்சம்.

*நீங்கிற் சிறிது பொழுதுமில் லாவுயிர் நேரிழைக்கின்
றீங்கிப் படிவைகி லெய்தும் பழிநமக் கென்றுசிந்திக்

தோங்கற் சிலம்பிடை நின்றாச லாடி யுழலுநம்மைத்
தாங்கத் தகுந்துணை யாதுகொல் லோவென் றனிநெஞ்சமே.

கண்படை பெறது கந்தனேதல்.

*மயில்போ லினியமென் சாயனல் லாருடன் வல்வினையேன்
துயில்போன தின்னமுந் தோன்றவுங் காண்கிலன் சோலையிளங்
குயில்போன் மொழியவர் தங்குழல் போலிருள் கூர்ந்துகொற்ற
அயில்போன் மறஞ்செய்கண் போலற நீளு மருங்கங்குலே.(க0)

முயக்கம்.

*சுரும்புழு கூந்தலுஞ் செவ்வாய் மழலையுஞ் சோதிநுதல்
அரும்பிய வேர்வு மலமரு நோக்கு மசைநதொசியும
கரும்புரு வச்சிலை யுநகிலை சோருங் கலையுங்கண்டு
விரும்பின மேமன மேகளி கூரின்ப வெள்ளத்தையே. (கக)

தலைவியைப்புகழ்தல்.

*கனமே கருங்குழல் கங்குலன் றேகண் கருவிளையின்
இனமே குவளையு நெய்தலு மல்ல விவர்க்கிடையென்
மனமே வளரிள வஞ்சியன் றேவஞ்ச மாரன்வைத்த
தனமே தனங்கன கத்தட மேருச் சயிலமன்றே. (கஉ)

கலவியின்மகிழ்தல்.

*மெய்வாய்கண் மூக்குச் செவியெனு நாமங்கண் மேவப்பெற்ற
ஐவா யினுமின் றருநதின ரோவருந் தானவர்முன் [போர்
உய்வான் மலைகொண் டொலிநீர் கடைந்தவன் றம்பரென்
மைவார் குழலியென் போலுநின் போலு மருந்தினையே. (கங)

தலைவன்தேற்றல்.

*மேகஞ் சிறந்த குழனிழ லோடிய வேனெடுங்கண்
மாகஞ் சிறந்த மதிநுத லாய்மல்கு மல்குலுக்கும்
ஆகஞ் செறிந்த முலைக்குமுன் றோற்ற வடலெயிற்று
நாகங்க ளென்னை நலிவுசெய் யாவுங்க ணைபனென்றே. (கச)

புணர்ச்சியின்மகிழ்தல்.

*சுரும்புங் குவளையு மன்றிலும் பேடுங் துணர்விரிபூங்
கரும்புங் கவளக் களிறுமன் றேகடற் பாலமுதம்

அரும்புந் துணைமுலை யாகங் குறிப்ப வறிவழிந்து
விரும்புங் கல்வி நிலத்திரு வேழும் விளங்கிழையே. (கரு)

செவிலிநற்றாய்க்கறத்தொடு நிற்றல்.

*தொடுப்பார் தொடுத்தலர் தூற்றும பழிவந்து சூழ்விதியைத்
தடுப்பா ரெவரினிச சாற்றுவ தென்கொ றடத்தின்முன்வீழ்ந
தெடுத்தா னொருவ னிருப்பநின் ரூர்தம மிருநிதிகருக
கொடுப்பா னிசைநதன மென்றுசென ருணங் குலககொடியே.

நற்றாயிரங்கல்.

*பூவையுண் டோபுனக் கிள்ளையுண் டோவெண் புதியமணற்[குரு
பாவையுண் டோபெற்ற பாவியுண் டோகுன்று பார்த்தழைக
தேவையுண் டோகற்ற சிற்றிலுண் டோமற்றென் சுற்றமுண்டோ
யாவையுண் டோமக ளேசெலல நீயிவ் வருஞ்சுரமே. (கஎ)

தோழியழுங்க நற்றாய் புலம்பல்.

*தாயென்செய் தாளென்று தள்ளியென் பாவைதன் பான்மயக்க
மாயஞ்செய் தாரொரு வள்ளல்பின் னேயழல் வெஞ்சுரத்துப்
போயென்செய் தாயென் றறிகில னென்றும பொறியிலியேன
நீயென்செய் வாய்மக ளேகண்க ணீர்மல்க நின்றுநின்றே.(கஅ)

நற்றாய் பாங்கியர் தம்மோடு புலம்பல்.

*புறந்தாழ் புரிகுழற் பூவைதன் பாவை புனையலங்கற்
சிறந்தா னொருவள்ளல் செங்கைய தாலெனத் தெய்வந்தொழாள்
அறந்தா னிலைபெற் றரும்பழி காக்கு மறிவுநெஞ்சிற்
பிறந்தா லருஞ்சுரம் பின்செல்ல வேண்டுங்கொல் பேதையரே.

நற்றாய் பயிலிடந் தன்னொடு புலம்பல்.

*நன்றே யுமக்கவர் நல்லதெல் லாஞ்சொல்லி நவ்வியிளங்
கன்றே யருமணிக் கந்துக மேகண் கலந்தழைக்கும்
குன்றே குவலையங் கொய்தட மேயெதிர் கூஉங்குயிலே
என்றேகொ லும்மையு மென்னையுங் காணவந் தெய்துவதே.

தோழ்நற்றா யையுறழ்ந்தேர்தல்.

*தோளிற் குழையுங் களபா சலந்தருஞ் சோபையும்வை
வாளிற் சிறந்த விழியுங்கண் டாற்சசி வட்டமென்னுங்

கோளிற் றிகழ்குடை யார்கூடல் வாழுங் கொடியிடைக்கு
நாளிற் புதுமை சிறந்தொரு கோடி நலந்தருமே. (உக)

மெய்தொட்டுப்பயிறல்.

*அளகந் திருத்தி மதிநுத லீவி யளியகற்றிப்
புளகஞ்செய் தோளிற் புரிவளை யேற்றிப் புதியதென்றற்
கிளருங் கொழுந்தளிர் மெல்லடி தைவந்த வின்பமுறக்
களபஞ் செறிதனத் தாய்பெற்ற வாவென் காதலமே. (உஉ)

ஏற்புறவணிதல்.

*தூசுங் கலையுந் தொலையா வழகெறிக் குந்தொடியும்
வாசங் கமழு மதுமல ரோதியும் வண்களபம்
பூசுங் கனதனம் பூணுமுத் தாரமும் பூங்குழையும்
ஆசும் பழுதில்பொன் னேபண்டு போல வணிந்தனமே. (உங)

மடலேபொருளெனமதித்தல்.

*தலையாய நண்புடை யார்தளர்ந் தாருயிர் தாங்குதற்கோ
நிலையாக வைத்துமுன் னின்றில ரேல்வெய்ய நீணெடுங்கண்
வலையால் வளைப்புண்டு வார்குழற் கண்ணியில் வந்துபட்ட
கலையார் விடுக்கவல் லார்விடு வாரெவர் கைப்பட்டதே. (உச)

தலைமகன் மறுத்தல்.

*சிலைமேன் முகிலன்ன நன்னுதன் மீது செறிகுழலாள்
முலைமேன் முயங்குவ னீசொன்ன வாறு முழுமணியின்
கலைமே லணிதழை யல்குனல் லாய்முன் கவிகொணர்ந்த
மலைமேன் மருந்துவந் தோதலை மேல்விட மாற்றுவதே. (உரு)

கையுறை புகழ்தல்.

*வில்லும் பிறையுந் திறையிடும் வாணுதன் மெல்லியலாய்
எல்லுங் குமுத மலருங்கண் டாலருங் கோங்கரும்பும்
வல்லும் பொருத வனமுலைக் கான மணியிதுபேர்
சொல்லும் பொழுது பிரமனு மாலுந் தொழத்தகுமே. (உசு)

ஆகசெய்யுள் உ௮௮.

ஏகம்பவாணன் பணிப்பெண்கள் பாண்டியன்மீது பாடியன.

தென்னவா மீனவா சீவிலிமா றாமதுரை
மன்னவா பாண்டி வரராமா—துன்னும்
சுரும்புக்குத் தாரளித்த துய்ய தமிழ்நாடா
கரும்புக்கு வேம்பிலே கண். (க)

மாப்பைந்தார்க் கல்லமுத்து வண்ணத்தார்க் கல்லவஞ்சி
வேப்பந்தார்க் காசைகொண்டு விட்டாளே—பூப்பைந்தார்
சேர்ந்திருக்கு நெல்வேலிச் சீவிலிமா றாதமிழை
ஆய்ந்திருக்கும் வீரமா றா. (உ)

வேம்பா கிலுமினிய சொல்லிக்கு நீபுனைந்த
வேம்பா கிலுமுதவ வேண்டாமோ—மீன்பாயும்
வேலையிலே வேலைவைத்த மீனவா நின்புயத்து
மாலையிலே மாலைவைத்தாண் மான். (௩)

---

ஆகச்செய்யுள் உ௬௧.

கம்பர் வீட்டு வெள்ளாட்டிபாடியது.

நெற்பயிர் விளைகழனி நென்மலி வாழ்தச்சன்
கற்படு திண்டோளான் கங்கண கணகணவன்
விற்புரை திருநுதலாள் மின்மினு மினுமினுவை
சொற்படி வேலைசெய்வாள் துந்துமி துருதுருமி. (க)

வட்டமதி போலிருக்கும் வன்னிக் கொடிதாவும்
கொட்டுவார் கையினின்று கூத்தாடும்—சுட்டால்
அரகரா வென்னுமே யம்பலசோ மாசி
ஒருநாள்விட் டேனீது ரை. (உ)

---

ஆகச்செய்யுள் உ௬௩.

ஏகம்பவாணன் மனைவி.

சேனை தழையாக்கிச் செங்குருதி நீர்தேக்கி
ஆனை மிதித்த வருஞ்சேற்றில்—மானபரன்
பாவேந்தர் வேந்தன் பறித்துநட்டா னேகம்பன்
மூவேந்தர் தங்கண் முடி. (க)

---

ஆகச்செய்யுள் உ௬௪.

### பாண்டியன் மனைவி.

வேண்டியபோ தின்பம் விரும்பு மடந்தையரைத்
தீண்டியகை யாலென்னைத் தீண்டாதே—பாண்டியா
முல்லைக் கதிபா முகம்பார்த் தகலநின்று
சொல்லக் கடவதெல்லாஞ் சொல். (௧)

கலையான் முலைமூடிக் கண்வலைக்குள் ளாக்கும்
விலைமாதர் தாம்வரவிட் டாரோ—விலைமாதர்
கொங்கையிலே தோய்ந்த குறைநீரத் துய்யசிவ
கங்கையிலே நீராடி வா. (௨)

ஆகச்செய்யுள் ௨௧௯.

---

## புகழேந்திப்புலவர்.

வித்துவத்திறமையிற் பெரும்புகழேந்திய இப்புகழேந்திப்புலவர், தொண்டைநாட்டிலுள்ள பொன்விளைந்த களத்தூரிலே வேளாண்மரபிற் பிறந்தவர். இவர் மதுரைக்கிறைவனான வரகுணபாண்டியனுடைய வித்துவானாயிருந்தார். அப்பாண்டியன் தனது மகளைக் குலோத்துங்க சோழனுக்கு மணஞ்செய்து கொடுத்தகாலத்தில் இவரையும் அவட்குச் சீதனமாகக்கொடுத்தான். அக்காலத்தவனாற்ற ஒட்டக்கூத்தப்புலவர் இவர்மேலழுக்காறுற்றுச் சோழனாற் சிறை செய்வித்தகாலை புலந்திரன்களவுமாலை, பவளக்கொடிமாலை, அல்லியரசாணிமாலை முதலாய நங்கையர் பாட்டுப்பாடினரென்ப. இவர் வைணவரென்பது இவர் பாடிய நளவெண்பாவில் ஆங்காங்கு தெள்ளிதிற் புலப்படும். இந்நளவெண்பாவேயன்றி, இரத்தினச்சுருக்கமு மியற்றினர். இவர் வெண்பாப் பாடுவதிற்சிறந்தவரென்பதை "வெண்பாவிற் புகழேந்தி" என்றதனானறிக. இவர் ஒட்டக்கூத்தர் காலத்தவராதலின் ஏறக்குறைய ஆயிரவருடங்களின் முன்னுள்ளவரெனத் தோற்றுகிறது.

ஒட்டக்கூத்தர் சோழனது யானைச்சங்கிலி யவிழ்ந்ததை
வியந்தபோதிவர் பாண்டியனது யானையின்
வலிமையை யுணர்த்தப்பாடியது:

தென்னவன் றென்னர் பெருமான் றிறன்மதுரை
மன்னவன் கோக்களிற்றின் வல்லிக்கும்—பொன்னிநா
டாளிக்கும் வேந்தா மபய குலன்மகளிர்
தாலிக்கும் பொன்றே தளை. (௧)

ஒட்டக்கூத்தர் இவரை ஒரு சமயத்தில் அரசன் முன்னிலையிற் பித்தனென் றிகழ்ந்தபோது மறுத்துப்பாடியது.

சத்தம் பயிலும் புலவோர் கதலித்தண் டோட்டம்புகும்
பித்த னிவனென்ப ரென்னைக்கண் டாற்பெருத் துப்பணைத்துத்
தத்தம் பிறகிடும் பார்வேந்தர் தங்க டடமகுட
சத்த மபசத்தங் காண்கங்குல் யானைச் சயதுங்கனே. (௨)

ஒட்டக்கூத்தன் சோழனுக்கு மணம்பேசப் பாண்டியன்பால் வந்திருந்து தன்னரசன் பெருமையாதிகளைக் குறித்துப் புகழ்ந்தபோது அதற்கு மாறாகப் பாடியது.

திருநெடுமா லவதாரஞ் சிறுபுலியோ வம்மானை
சிவன்முடியி லேறுவதுஞ் செங்கதிரோ வம்மானை
ஒருமுனிவ னேரியிலோ வுரைதெளிந்த தம்மானை
யொப்பரிய திருவிளையாட் டுறந்தையிலோ வம்மானை
கரையெதிரே றேறியது காவிரியோ வம்மானை
கடிப்பகைக்குத் தாதகியங் கண்ணியோ வம்மானை
பரவைபடிந் ததுஞ்சோழன் பதந்தனிலோ வம்மானை
பாண்டியனார் பராக்கிரமம் பகரெளிதோ வம்மானை. (௩)

வையை சமுத்திர சங்கமமில்லாத நதியென்று ஒட்டக்கூத்தர் இகழ்ந்தபோது பாடியது.

*நாரியிடப் பாகருக்கு நஞ்சளித்த பாவியென்று
வாரி யிடம்புகுதா வையையே—வாரி
யிடத்தும் புறத்து மிருகரையும் பாய்ந்து
நடத்துந் தமிழ்ப்பாண்டி நாடு. (௪)

இவரையிகழ்ந்து ஒட்டக்கூத்தர் சொல்லிய கவியை ஒட்டியும் வெட்டியும் பாடியது.

மானவ னானந்த வாளரி வேங்கைமுன் வற்றிச்செத்த
கானவ னானவ் வெரியுந் தழன்முன் கனைகடலின்
மீனவ னானந்த வெங்கட் சுறாமுனம் வீசுபனி
தானவ னானக் கதிரவன் றேற்றநற் றார்மன்னனே. (௫)

சோழனோடேலுற்று இராசபத்தினி யடைத்துக்கொண்ட கதவைத் திறக்கும்படி ஒட்டக்கூத்தர்சொல்லிய பாட்டுக்கு இரட்டைத்தாழ்ப்பாளென்றிட்டபின் கதவு திறக்க மனமுருகும்படி இவர்பாடியது.

இழையொன் றிரண்டு வகிர்செய்த நுண்ணிடை யேந்துவள்ளைக்
குழையொன் றிரண்டு விழியணங் கேகொண்ட கோபமென்னே
மழையொன் றிரண்டுகை மாறு பரணன்தம் வாயில்வந்தால்
பிழையொன் றிரண்டு பொறுமரோ குடியிற் பிறந்தவரே. (எ)

ஔவையார் இவரை மூன்று பிறைவரப் பாடச்சொன்னபோது பாடியது.

பங்கப் பழனத் துழுமுழவர் பலவின் கனியைப் பறித்ததென்று
சங்கிட் டெறியக் குரங்கிளநீர் தனைக்கொண் டெறியுந் தமிழ்நாடா
கொங்கைக் கமரா பதியளித்த கோவே ராச குலதிலகா
வெங்கட் பிறைக்குங் கரும்பிறைக்கு மெலிந்தப் பிறைக்கும் வேல்விழியே.

ஒட்டக்கூத்தரியற்றிய முற்பாதிவெண்பாவைச் சேர்த்துப்பாடியது.

வென்றி வளவன் விறல்வேந்தர் தம்பிரான்
என்று முதுகுக் கிடான்கவசம்—துன்றும்
வெறியார் தொடைகமழ மீனவர்கோன் கைவேல்
எறியான் புறங்கொடுக்கி னென்று. (அ)

சோழன் தன்னை வெல்லத்தக்கவ ரொருவருமில்லையென்றிறுமாந்துரைத்தபோது பாடியது.

பழியும் புகழு மெவர்க்குமுண் டாமிந்தப் பாரினுனக்
கழியுஞ் சிலையுங் கயலுமொன் றுலக ளங்கதுங்கா
மொழியும் பொழுதெங்கள் பெண்சக்ர வர்த்தி முகத்திரண்டு
விழியும் புருவமு மாகியக் கோவினை வெல்கின்றவே. (கூ)

செங்கலங்கை வடுகநாதமுதலியார்மீது பாடியது.

தன்னுடன் கூடப் பிறந்த சகோதரத் தம்பியுயிர்
அந்நிலை மாண்டது தோன்றாமல் மூடிவைத் தன்னமிட்டான்
மன்னவர் போற்றிட வாழ்செங்க லங்கை வடுகனுக்குக்
கன்னனுஞ் சோமனு மோவிணை யாகக் கழறுவதே. (கய)

வடுகநாதமுதலியார் குமாரரை அவர்க்கு நேரிட்ட அசுபத்தையுங் கருதாது இவர்தஞ் சுபமுகூர்த்தத்துக்கு வரும்படி பாடியது.

முந்தவினை யோன்மாள முத்தமிழோர்க் கன்னமிட்ட
அந்த வடுகன்மக னங்கையினால்—வந்தென்
தலைக்கவி யாணத்துக்கே தான்பிணைக்கை மூடி
இலக்கணமாச் செய்குவை நீயே. (கக)

திருநெய்த்தானக் கடவுளைக்குறித்துப் பாடியது.

தற்கோ லிப்பூ சற்பா சத்தே தப்பா மற்சா கைக்கே நிற்பீர்
முற்கோ லிக்கோ லிப்பூ சித்தே முட்டா மற்சே வித்தே நிற்பீர்
வற்றுநெட்டோடைப்பாரைச்சேன்மைப்பூகத்தேறித்தாவிப்போய்
நெற்று ளூற்று லைப்பா கிற்சேர் நெய்த்தா னத்தா னைத்தியானித்தே.

திருக்குறுங்குடித் திருமால்மீதுரைத்தது.

* எட்டெழுத் தைக்கருத் திற்குறித் திட்டுநித் தம்பரவுஞ்
சிட்டர்கட் குத்திருப் பொற்பதத் தைச்சிறக் கத்தருமவ்
வட்டநெட் டைப்பணி மெத்தையத் தற்கிடம் வாரிசப்பொ
குட்டினத் துக்குலந் தத்திமுத் தீனுங் குறுங்குடியே. (௧௩)

கொற்றந்தைப்பதிக் கிறைவன்மீது பாடியது.

கார்கண்டிரங்கிய தலைவியைப் பாங்கி தேற்றல்.

* நையும் படியென் கொற்றந்தை நங்கோன் செஞ்சி வரைமீதே
ஐயம் பெறுநுண் ணிடைமடவா யகிலின் றூப முகிலன்று
பெய்யுந் துளியோ மழையன்று பிரசத் துளியே பிழையாது
வையம் பெறினும் பொய்யுரைக்க மாட்டார் தொண்டை நாட்டாரே.

பாண்டியனைப் புகழ்ந்து பாடியது.

* மற்றொருப்பி லாத்தமிழ் நாடாளுஞ் சந்த்ர வரோதயநின்
வெற்றிக் குடைக்குள் ளடங்கா திரண்டுண்டு மேருகிரிச்
சுற்றுப் புறத்தி லடங்காதுன் கீர்த்திநின் றோடமுழுவாக்
கற்றைக் குழலிக்கு மாலடங் காதிது கண்கண்டதே. (௧௫)

அரசன்தேவி யூடலாற் கதவமடைத்தபோது கூறியது.

* தூபங் கமழும்பைங் கோதைநம் விக்ரம சோழன் மன்னர்
தீபம் புறங்கடை வந்துநின் றுனின் றிருப்புருவச்
சாபங் குனிய விழிசிவப் பத்தலை சாய்ந்து நின்ற
கோபந் தணியன்ன மேயெளி தோநங் குடிப்பிறப்பே. (௧௬)

இரவிற்குடைநீழலிற் புவனிவருதல் தவறன்றென அரசனுக்குரைத்தது.

* அண்டமீ துலவி வாழு மருந்ததிக் கற்பா ளுன்னைக்
கண்டதா லுவகை யெய்திக் கற்பழிந் திடுவ ளென்றே
எண்டிசை புரக்கும் வேந்தா யிரவினிற் கவிகை நீழல்
கொண்டுமா நடாத்து மாறு குலோத்துங்கா நீதி தானே. (௧௭)

அரசன் துலாபுருடதானம் செய்தபோது சொல்லியது.

*பொருந்த வொருதட்டு மேருப் புகினும்
இருந்த திருத்தட் டெழாதால்—திருந்து
மறைபுக்க சொல்லையா வன்புறவுக் காக
நிறைபுக்க தெவ்வாறு நீ. (௧௭)

கவியரசரின் கோபக்குறிப்பைக் குறித்துரைத்தது.

*கவியரசர் தம்முனிவு கண்டாற் புகழ்கொள்
புவியரசர் தாமே பொறுப்பர்—புவியரச
உன்னுன் முனியி லவர்பொறு ரோதுமவர்க்
கெந்நாடுஞ் செல்லாத தில். (௧௯)

ஆரியசேகர னிறந்ததுகேட்டு விசனமுற்றுரைத்தது.

*ஆகா விதியோ வடலா ரியர்கோமான்
ஏகா வலனற் றிழிந்தநாள்—ஓகோ
தருக்கண்ணி னுங்குளிர்ந்த தண்ணளிதந் தாண்ட
திருக்கண்ணி னுஞ்சுடுமே தீ. (௨0)

கதிர்காமவேலர்முன் பாம்பை மயில்விடப் பாடியது.

*தாயரவை முன்வருத்துஞ் சந்த்ரோ தயந்தனக்குன்
வாயரவை விட்டுவிட மாட்டாயோ—தீயரவைச்
சீறு மயிற்பெருமா டென்கதிர்கா மப்பெருமாள்
ஏறு மயிற்பெருமா ளே. (௨௧)

கொழும்பு ஆரோதன் மைந்தன்மீதுரைத்தது.

*கயக்காவி நாறுங் கொழும்பிற் பிரசண்டா
காரார் கொடைச்செங்கை யாரோதன் மைந்தா
இயக்காநின் மார்பிற் செழும்புன்னை யந்தா
ரிப்போது நீநல்கி லென்பேதை தன்மேற்
சயக்காம வேளம்பு தைக்காது முத்தின்
குமஞ் சுடாசந் தனம்பூசி னாலும்
தியக்காது வேயுஞ் செவிக்கும் பொறுக்குந்
தீயென்று மூளாது திங்கட் கொழுந்தே. (௨௨)

பாண்டியன் கல்வித்திறத்தை வியந்து பாடியது.

*எண்ணீர்மை நாலுக் ககத்திய னுமில னென்பதெல்லாம்
வெண்ணீர்மை யன்றி விரகல்ல வேயிவ் வியனுலகின்
பண்ணீர்மை தேரும் பராக்ரம மாறன் பதங்கழுவுந்
தண்ணீர் குடித்தல்ல வோகும்ப யோனி தமிழ்கற்றதே. (உ௩

ஆரியசேகரன் பரிசாக ஆயிரம்பொன்னொடு கொடுத்த யானையை
விரும்பிப் பாண்டியன் கேட்டபோ துரைத்தது.

*பாவலன் வாசலில் வந்திபம் வாங்கப் படிபுரக்குங்
காவல னிற்கும் படிவைத்த வன்கண்டி யொன்பதினும்
மேவலர் மார்பினுந் திண்டோளி னுஞ்செம்பொன் மேருவினும்
சேவகங் கோட்டிய மால்சிங்கை யாரிய சேகரனே. (உ௪)

ஆகச்செய்யுள் ௩௨௦.

---

## ஒட்டக்கூத்தப்புலவர்.

இவர்உறையூரிலிருந் தரசுசெய்த இராசேந்திரச்சோழனிடம் வித்துவா னயிருந்து அவன் மகன் குலோத்துங்கசோழனுக்குத் தமிழாசிரியருமானார். இவரைத் தந்துவாயர்,செங்குந்தர்எனப்பெயர்கொண்ட கைக்கோளரென்ப. கூத்தரென்பதிவரதியற்பெயர். பின்னர் ஈட்டியெழுபது என்னும் பிரபந்தம் பாடுகையில் இவருக்காசனமாகக் கைக்கோளர்கள் அறுத்துக்குவித் துக்கொடுத்த தலைமக்கடலைகளை மறுபடியும் உயிர்பெற வொட்டச்செய்த காரணத்தால் ஒட்டக்கூத்தர் என்ற பெயர்வந்ததென்பர். ஈட்டியெழுபது செங்குந்தரைப் புகழ்ந்தநூல். இவர் அழுக்காறு, இரக்கமின்மை யாதியகுண ங்களுள்ளவரென " இரண்டொன்றாய் முடிந்துதலையிரங்கப்போட்டு வெட் டுதற்கோ கவியொட்டக்கூத்தனில்லை'' என்றதனான் விளங்குகின்றது. இத னாலன்றோ கவிச்சக்ரவர்த்தியாரிடத்தினும் புகழேந்திப் புலவரிடத்தினும் பகைமை பாராட்டினர். இவர்செய்த நூல்கள் இராமாயணத்தில் உத்தரகா ண்டம், குலோத்துங்கசோழன்கோவை, உலா முதலியன.

செங்குந்தர் தலைமக்கள் தலைகளையொட்டி யுயிர்பெறப்பாடியது.

கலைவாணி நீயுலகி லிருப்பதுவுங் கல்வியுணர் கவிவல்லோரைத்
தலையாகக் காப்பதுவு மவர்நாவில் வாழ்வதுஞ்சத் தியமேயன்றோ
சிலைவாண னவிருந்தா யிரம்புயங்க டுணிந்துமுயர் சீவனுற்றான்
தலையாவிகொடுத்திடுஞ்செங்குந்தருயிர்பெற்றிடநீதயைசெய்வாயே.

செங்குந்தரைப் புகழ்ந்து பாடியது.

நிலைதந்தா ருலகினுக்கு மியாவருக்கு மானமதை நிலைக்கத் தந்தார்
கலைதந்தார் வணிகருக்குச் சீவனஞ்செய் திடவென்றே கையிற் றந்தார்
விலைதந்தார் தமிழினுக்குச் செங்குந்தரென்கவிக்கே விலையாகத் தந்
தலைதந்தாரெனக்கு மொட்டக்கூத்தனெனப் பெயரினையுந் தாந்தந்தாரே. (௨)

ஒருவித்துவானுக்குள்ள விருதுகளைக் கண்டிகழ்ந்துரைத்தது.

பத்துக்கொண் டனதிக்கும் பதறிப்போய் முடியப்
பைம்பொற்று ரகைசிந்தப் பகிரண்டத் திடையே
மத்துக்கொண் டமுததனைக் கடையாழித் திருமால்
வடிவாகிப் புவிகைக்கொண் டருண்மாறு பரணு
முத்துப்பந் தரினிற்குங் குருளைக்குஞ் சினவேல்
முருகற்கும் பொதியக்கோ முனிவற்கும் பதுமக்
கொத்தற்குஞ் சடிலக்கொந் தளருக்கு மல்லால்
கூழைத்தண் டமிழர்க்கேன் கொடியுங்கா ளமுமே. (௩)

கம்பரிறந்ததுபோற் காட்டினபோதும எழுந்தபோதும் பாடியன.

இன்றல்லோ கம்ப னிறந்தநா ளென்கவிதை
இன்றல்லோ ராசசபைக் கேற்குநாள்—இன்றல்லோ
பூமடந்தை வாழப் புவிமடந்தை வீற்றிருக்க
நாமடந்தை நூல்வாங்கு நாள். (௪)

இன்றல்லோ கம்ப னெழுந்தநா ளென்கவிதை
இன்றல்லோ ராசசபைக் கேறுநாள்—இன்றல்லோ
பூமடந்தை வாழப் புவிமடந்தை வீற்றிருக்க
நாமடந்தை நூல்பூட்டு நாள். (௫)

கம்பைக் காவலனென்னும் பிரபுவின்மீது பாடியது.

மாங்குயி லால்வில்லி தன்னம்பி னாற்கம்ப வாரிதியால்
ஓங்கிய பூமெல் லணையொன் றினுலும்ப ரூர்மதியால்
தீங்குறு மோநல் லெழில்குன்று மோகொம்பு சீர்கெடுமோ
காங்கய னேசொல் லகளங்க னேகம்பைக் காவலனே. (௬)

சோழன் கண்டதைக் கண்டசுத்தியாகப்பாடியது.

கரண்டகண் டத்தொனிக் கஞ்சிய மான்கருங் கங்குலிலே
திரண்டவெள் ளத்திற் பிணமீது சென்றனள் சேர்ந்தவனை

அரண்டவின் பங்கொடு மீளக் கராம்பற்ற வங்கொருசால்
குரண்டகன் னத்தி லுதைத்தனள் காணங் குலோத்துங்கனே. (எ)

சோழனுக்குப் பெண்கேட்டுப் பாண்டியனிடம் வந்திருந்தபோது
அவன்பெருமையைக் குறித்துரைத்தது.

கோரத்துக் கொப்போ கனவட்ட மம்மானை
கூறுவதுங் காவிரிக்கு வையையோ வம்மானை
ஆருக்கு வேம்புநிக ராகுமோ வம்மானை
யாதித்த னுக்குநிக ரம்புலியோ வம்மானை
வீரர்க்குள் வீரனொரு மீனவனோ வம்மானை
வெற்றிப் புலிக்கொடிக்கு மீன்கொடியோ வம்மானை
ஊருக் குறந்தைநிகர் கொற்கையோ வம்மானை
ஒக்குமோ சோணாட்டைப் பாண்டிநா டம்மானை. (அ)

இவரும் சோழராஜனும் பாடியது.

ஆடுங் கடைமணி நாவசை யாம லகிலமெல்லாம்
நீடுங் குடையிற் றரித்தபி ரான்என் றுநித்தநவம்
பாடும் கவிப்பெருமா னொட்டக் கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங் குலோத்துங்க சோழனென் றேயென்னைச் சொல்லுவரே.(கூ)

சோழனது யானைசசங்கிலி யவிழ்ந்தபோது பாடியது.

இன்னங் கலிங்கத் திகல்வேந்த ருண்டென்றோ
தென்னன் றமிழ்நாட்டைச் சீறியோ—சென்னி
அகளங்கா வுன்ற னயிரா வதத்தின்
நிகளங்கால் விட்ட நினைவு. (௧௦)

புகழேந்திப்புலவரை யிகழ்ந்துரைத்தது.

மானிற்கு மோவிந்த வாளரி வேங்கைமுன் வற்றிச்செத்த
கானிற்கு மோவிவ் வெரியுந் தழன்முன் கனைகடலின்
மீனிற்கு மோவிந்த வெங்கட் சுருமுனம் வீசுபனி
தானிற்கு மோவிக் கதிரவன் றோற்றத்திற் றார்மன்னனே.(௧௧)

இராசபத்தினி யரசனோடேலூற் றடைத்துக்கொண்ட
கதவைத் திறக்கப் பாடியது.

நானே யினியுனை வேண்டுவ தில்லை நளினமலர்த்
தேனே கபாடந் திறந்திடு வாய்திற வாவிடிலோ

வானே றனைய விரவிகு லாதிபன் வாயில்வந்தால்
தானே திறக்குநின் கையித ழாகிய தாமரையே. (க௨)

விக்கிரம சோழன்மீது கூறியது.

*நடித்தது நச்சர வுசசியி னசசி மதிலிலங்கை
இடித்தது வென்ற விருபது தோள்பதி னெண்பகலே
முடித்தது பாரதம் வீரப் புலிவைப்ப மூரிச்செண்டால்
அடித்தது பொற்கிரி விக்ரம சோழ வகளங்கனே. (க௩)

சோழன் பரிசளித்தபோது பாடியன.

*இடுக்கட்புண்படு நிரப்புக்கொண்டுநின் றிரக்கச்சென் றவன் றனக் குசசிங்களம், திடுக்குற்றஞ்சவெஞ் சினத்துச்செம்பியன் றிருக்கைப் பங்கயஞ் சிறக்கந்தநதனன், படுக்கக்கம்பளம் பறக்கக்கந்துகம் பரி க்ககுஞ்சரம் பதிககககங்கணம், கடுகசுற்குண்டலங் கவிக்கத்தண்கு டை கனிக்குபபொன்குலம் கவிககுத்தொங்கலே. (க௪)

*கையு மலரடியுங் கண்ணுங் கனிவாயுஞ்
செய்ய கரிய திருமாலே—வையம்
அளந்தா யகளங்கா வாவிலேமேற் பள்ளி
வளர்ந்தாய் தளர்ந்தாளென் மான். (க௫)

கண்டன் துலாபுருடதானம் செய்தபோது பாடியன.

*தொழுகின்ற மன்னர் சொரிந்திட்ட செம்பொற் றுலாத்திடை
டுழுகின்ற தார்க்கண்ட னேறிய ஞான்றி னுவாமதிபோய் [வண்
விழுகின்றதொக்கு மொருதட்டுக காலையில் வேலையில்வந்
தெழுகின்ற ஞாயிறொத் தான்குல தீப னெதிர்ததட்டிலே. (க௬)

*கற்றன வொக்கும் புதியன கேட்பன கண்டன் பல்லாண்
டுற்றன வொக்கு மொருபகற் காண்பன வொன்னலரைச்
செற்றன வொக்குஞ் சிறுநகை செய்வன சென்றிரப்போர்
பெற்றன பெறுறி யறியா னிதுவென்ன பேதமையே. (க௭)

கண்டன்தேவியூடலுற்றுக் கதவடைத்தபோது பாடியது.

*கரத்துஞ் சிரத்துங் களிக்குங் களிற்றுடைக் கண்டன்வந்தான்
இரத்துங் கபாட மினிததிறப் பாய்பண் டிவனணங்கே

உரத்துஞ் சிரத்துங் கபாடந் திறந்திட்ட துண்டிலங்கா
புரத்துங் கபாட புரத்துங் கல்யாண புரத்தினுமே. (கஅ)

கவிஞர்கள் வெருளப்பாடியது.

*பாட்டுத் தொடுக்கும புலவோர்க்குக் கூத்தன் பயப்படல்பே
தாட்டுக் கடற்புலி யஞ்சலன் றேவலூத் தாக்கிடந்த
சூட்டுக்கதிர்க ணிலத்தடங் காமற் றொகுத்துமள்ளர்
மேட்டுக் குவாவிடும் பொன்னிநன் னாடுடை வேற்கண்டனே.()

சோழன் மீது பாடியது.

செங்கான்மட வன்னம்படர் தீயாமென வெருவிச்
சிறையிற்பெடை மறையக்கொடு திரியத்திரள் கமுகின்
பைங்கான்மர கதமீது படர்ந்தேறி நறுந்தண்
பாளைக்கிடை பவளக்கொடி படர்காவிரி நாடா
தங்காதலி யருமைந்தரு முடனாக வணங்கித்
தலைகாவெம துடல்காவெம துயிர்காவ களங்கா
கொங்காமன துங்காவென மதுரேசர் வணங்கும்
கொல்யானைய பங்காவிவள் குழலோசை பொறாளே. (உ0)

சோமன் என்னும் பிரபுவின்மீது புகழ்ந்துரைத்தன.

*அடையென்பார் தள்ளென்பா ரன்பொன்றில் லாமற்
புடையென்பார் தங்கடைக்கே போகேம்—கொடையென்றால்
முந்துஞ்சோ மாபுவன முன்னவனே நின்கடைக்கீழ்
வந்துஞ்சோ மாதலான் மற்று. (உக)

*தன்னுடைய தேவியர்க்குத் தார்வளவன் றானுரைப்ப
துன்னுடைய சீர்த்தி யுயர்நலமே—துன்னுபுகழ்ச்
சோமா திரிபுவனத் தோன்றலே நின்புழை
யாமா றுரைக்க வினி. (உஉ)

மாவுறங்கின புள்ளுறங்கின வண்டுறங்கின தண்டலைக்
காவுறங்கின வெங்கண்மானிரு கண்ணுறங்கிலள் கையணைக்
கோவுறங்கு கடைத்தலைக்குல தீபவள்ளை குதட்டிநின்
றூவுறங்குபு காரசஞ்சல வஞ்சலென்ன வடுக்குமே. (உங)

### கண்டன் குதிரையேற்றத்தை வியந்தது.

*கண்டன் பவனிக் கவனப் பரிநெருக்கால்
மண்டுளங்கா தேயிருந்த வாறென்னே—கொண்டிருந்த
பாம்புரவி தாயல்ல பாருரவி தாயல்ல
வாம்புரவி தாய வகை. (௨௪)

### அரசன் கைகொடுத்தபோது பாடியது.

*கொலையைத் தடவிய வைவே லரக்கர் குலமடியச்
சிலையைத் தடவிய கையே யிராசக தண்டத்துள்ள
மலையைத் தடவிய விந்தத் தடவி மலைந்தவொன்னார்
தலையைத் தடவி நடக்குங்கொல் யானைச் சயதுங்கனே. (௨௫)

### மடையனைத் தண்டஞ்செய்ததை விலக்கப்பாடியது.

*நாகம் பற்றிய வேலையு மண்ணையும் வெற்படங்கப்
போனகம் பற்றிய மாலல்லை யோபொருந் தாவரசர்
கானகம் பற்றக் கனவரை பற்றக் கலன்கள்பற்ற
வானகம் பற்ற வடிவேல் விடுத்த வயதுங்கனே. (௨௬)

### இராமபிரான்மீது துதியாகச் சொல்லியது.

*ஆரேனு முன்னென்று சொல்லத் தொடங்கினு மவ்விடத்துன்
பேரே சொலவரும் பேறுபெற் றுய்வரு நான்மறையின்
வேரே மிதிலையின் மின்னுடனேவெய்ய கானடந்த
காரே கடல்கொளுந் தச்சிலை வாங்கிய காகுத்தனே. (௨௭)

இவர்முன் ஔவையார் இரண்டுகாலையும் நீட்டிக்கொண்டிருந்து புகழேந்தி முதலியோர்முன் கால்மடக்கித்தன்னை அவமதித்ததாக அரசனுக்குரைத்தது.

*இருகாலை நீட்டின ளென்றனக் கேகம்ப னென்பவற்கங்
கொருகான் மடக்கிமற் றோர்காலை நீட்டின ளோவியமாய்
அருகாக வந்த புகழேந்தி யைக்கண் டகமகிழ்ந்தே
இருகான் மடக்கினள் காணுமன்ற னூரி யிலைமகளே. (௨௮)

ஔவையார் இவரையும் புகழேந்தியாரையும் முப்பிறை வரும்படி பாடச்சொன்னபோது இவருரைத்தது.

வெள்ளத் தடங்காச் சினைவாளை வேலிக் கமுகின் மீதேறித்
துள்ளி முகிலைக் கிழித்துமழைத் துளியோ டிறங்குஞ் சோணாடா

கள்ளக் குறும்பர் குலமறுத்த கண்டா வண்டர் கோபாலா
பிள்ளை மதிகண் டெம்பேதை பெரிய மதியு மிழந்தாளே. (உ௯)

சோழன்மீது பாடியன.

கலி- கலம்பகவுறுப்பிலொன்று.

புள்ளிருக்குந் தார்மார்பன் பூம்புகார் வாழ்களியேம்
கள்ளிருக்குங் கள்ளையுண்டுஞ் சோர்விலேம்—உள்ளபடி
சொல்லவா வாவி துரோபதையை மூக்கரிந்த
தல்லவா மாபா ரதம். (௩0)

தலைவி வருந்தல்.

என்று பெறுவேன்யா னீசன் றிருமுடிமேல்
சென்றுவிளை யாடுகின்ற தீபமே—என்றுஞ்
செருப்புக்குத் தோல்வாங்குஞ் சென்னியக ளங்கன்
பொருப்புக்குத் தோலாப் புயம். (௩க)

பாண்டியன்மீது படையெடுத்துச் சண்டையிட வந்த சோழன் புறங்காட்டி
யோடி இவர் ஓடமாட்டாதகப்பட்டு, அரசன் வெட்டவந்தபோது
இவரும் அரசனுமாகப் பாடியது.

*மேவலரை வெட்டி விருதுபெறும் வேல்வேந்தே
நாவலரை வெட்டுவது நன்றாமோ—பாவலவ
ஆடவர்கோன் சண்டைதனக் கஞ்சியஞ்சி யாவையும்போட்
டோடலாம் பாடொணு தோ. (௩உ)

பின்னர் இவருயிர்பெற்று மீளச் சோழனை யிகழ்ந்து பாடியது.

*ஆறெல்லாங் கண்ணீ ரடியெல்லாஞ் செங்குருதி
தூறெல்லாஞ் சோழன் சொரிகுடுமி—மீறிவரு
கன்னிக்கோன் பின்றொடரக் காரிக்கோன் செய்கையினாற்
பொன்னிக்கோன் சென்றான் புகார். (௩௩)

ஆகச்செய்யுள் ௩௩.

---

## குயவன் முதலிய அறுவர்.

ஒட்டக்கூத்தராற் சிறைப்பட்டிருந்த புகழேந்திப்புலவர், தம்முடன்
சிறைச்சாலையிலிருந்த திறமையுள்ள ஆறு பேர்களுக்குக் கல்வித் திறமை

பெறக் கற்றுக்கொடுத்து அரசனாற் செய்யும் நவராத்திரி பரிசோதனையில் கூத்தரை வெற்றிபெறும்படியனுப்பியபோ தொவ்வொருவரும் பாடியன.

கூத்தருங் குயவனும்.

மோனை முத்தமிழ் மும்மத மும்பொழி
யானை முன்வந் தெதிர்த்தவ ரைடா
கூனையுங் குடமுங் குண்டு சட்டியும்
பானை யும்வனை யங்குசப் பையல்யான். (க)

வே ளா ள ன்.

கோக்கண்டு மன்னர் குரைகடற் புக்கிலர் கோகநகப்
பூக்கண்டு கொட்டியும் பூவா தொழிந்தில பூமுழுதும்
காக்கின்ற மன்ன கவியொட்டக் கூத்தநின் கட்டுரையாம்
பாக்கண் டொளிப்பர்க ளோதமிழ் பாடிய பாவலரே. (உ)

க ரு ம ா ன்.

செல்லன் புதல்வன் றிருவேங் கடவன் செகத்குருவாம்
கொல்லன் கவிகைக் குறைசொல்லு வோரைக் குறடுகொண்டு
பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்ட மாட்டிப் பகைவர்முன்னே
அல்லும் பகலு மடிப்பேன் கவியிருப் பாணிகொண்டே. (ங)

கூத்தரும் அம்பட்டனும்.

விண்பட்ட கொக்குவல் லூறுகண் டென்ன விலுவிலுத்துப்
புண்பட்ட நெஞ்சொடு மிங்குநின் ருய்பொட்டை யாய்புகலாய்
கண்பொட்டை யாயினு மம்பட்ட ஞன்கவி வாணர்முன்னே
பண்பட்ட செந்தமிழ் நீயுந் திடுக்கிடப் பாடுவனே. (ச)

த ச்ச ன்.

சொன்னசந் தக்கவி யாவருஞ் சொல்லுவர் சொற்சுவைசேர்
இன்னசந் தக்கவி யேதென்ற போதி லெதிர்த்தவரை
வன்னசந் தங்கெட வாயைக் கிழித்திந்த வாய்ச்சியினல்
கன்னசந் தங்களி னிற்கவி யாப்பைக் கடாவுவனே. (ரு)

த ட்டா ன்.

திகிரிவட் டக்குடைச் செங்கோ லபயன் செழுஞ்சிலம்பில்
பகுதியொட் டக்கூத்த பட்டனை நானப் பணிக்கவியின்

மிகுதவொட் டத்தட்டி விட்டகை யோட்டி யூருக்கிக்குத்திப்
புகுதவொட் டித்தட்டி மேலனு காவண்ணம் போர்செய்வனே. (௬)
ஆகச்செய்யுள் ௩௫௧.

---

## பொய்யாமொழிப்புலவர்.

இவர் தொண்டைநாட்டிலே செங்காட்டங் கோட்டத் துறையூரிலே பிறந்தவர். இன்ன மரபினரெனப் புலப்படவில்லை. இவர் சிற்சபா நடராசர்பா லன்பினராகக்கண்ட முருகக்கடவுள் எம்மைப் பாடுகவென்னப் புலவர் கோழியையும் பாடிக் குஞ்சையும் பாடுவேனோ வென்றனர். சின்னாட் சென்று இவர் நாற்கவிராச நம்பியகப்பொருட் கிலக்கியமாகத் தஞ்சைவாணன்மீது கோவைப் பிரபந்தம்பாடிப் பரிசுபெற்றுத் திரும்புகையில் குமரக்கடவுள்வேடருருக்கொண்டச்சுறுத்தி என்மீது நற்றுயிரங்கலாக முட்டையென்றுபாடென, அங்ஙனம் பாடியபாட்டின் சுவைமிகுத் திருக்கின்றதாகக் காண்கின்றிலேனெனத் தாமிவர்மீ தொருசெய்யுள் அத்துறையிலேயேபாடினர். இவர் வணங்காமுடிப் பாண்டியன் காலத்தில் அவனிடஞ்சென்று குலைந்த சங்கத்தைக் கூட்டிவைக்குந் திறமையைக்காட்டியும் அவன்மதியாதிருந்ததால் மதியாதார்முற்ற மிதியாமை கோடிபெறுமென்று மீண்டனர். இவர் செய்த நூல்கள் வாணன் கோவையன்றி வேறு எதையுங் கண்டிலம். இவர் ஈற்றிலே சோழனமைச்சரான சீனக்கமுதலியாராதரவுபெற்றிருந்து அவரிறந்தபோது சோகமுற் றவரை யெரித்த காட்டத்திலேவிழுந் திறந்தனரென்ப. இவர்காலம் இற்றைக்கு 1000 வருடங்கட்கு முற்பட்டதென்றும் சிந்தாமணிசெய்த திருத்தக்கதேவர் காலமென்றும் தெரிகிறது.

முருகக்கடவுள்மீது பாடியது.

பொன்போலுங் கள்ளிப் பொறிபறக்குங் கானலிலே
என்பேதை செல்லற் கிசைந்தனளே—மின்போலும்
மானவேன் முட்டைக்கு மாறுபட தெவ்வர்போம்
கானவேன் முட்டைக்குங் காடு. (௧)

சொக்கநாதர்சந்நிதியில் பணிந்துகொண்டிருந்த பாண்டியனை நோக்கிக் கூறியது.

குழற்கா லரவிந்தங் கூம்பக் குமுத முகையலர
நிழற்கான் மதியமன் றோஙின் றிருக்குல நீயவன்றன்
அழற்கா லவிர்சடை மீதே யிருந்துமவ் வங்கிவண்ணன்
கழற்கால் வணங்குதி யோவணங் காமுடிக் கைதவனே. (௨)

பாண்டியன்முன் சங்கப்புலவர்கள் திருவுருவம்
சிரக்கம்பஞ்செய்யப் பாடியது.

உங்களிலே யாரொருவ னொவ்வுவனே யொவ்வேனே
திங்கட் குலனறியச் செப்புங்கள்—சங்கத்துப்
பாடுகின்ற முத்தமிழ்க்கென் பைந்தமிழு மொக்குமோ
ஏடெழுதா ரேழெழுவீ ரின்று. (௩)

சங்கப்பலகை மிதக்கப்பாடியது.

பூவேந்தர் முன்போற் புரப்பா ரிலையன்றிப்
பாவேந்த ருண்டென்னும் பான்மைதான்—மாவேந்தன்
மாற னறிய மதுரா புரித்தமிழோர்
வீறணையே சற்றே மித. (௪)

இவர் நேசரான சீனக்கமுதலியா ரிறந்தபோது பாடியன.

அன்றுநீ செல்லக் கிடவென்று யாருயிர்விட்
டின்றுநீ வானுலக மேறினாய்—நன்றுநன்று
வானக்க பூண்மடவார் மாரனே கண்டியூர்ச்
சீனக்கா செல்லக் கிட. (௫)

வாழி சோழவென் வாய்மொழி கேண்மோ
ஊழி நிலவெறி மாளிகை யின்வயிற்
கட்டிளங் கணவன் கவின்பெறு சேக்கை
என்றறி மனைவி நெடிது துயில்கொளச்
செல்லக் கிடமி னெனக்கிடந் தருகெனச்
சொல்லிய நண்பன் றனிச்செல் பவனே
நானு மேகுவ னற்றுணை யவற்கே. (௬)

திருக்குறளைப்பற்றிச் சொல்லியது.

*குறுமுனிவன் கோத்தெடுத்த கோற்சேரி யூசி
உறுவிலைக்கு விற்றதனே டொக்கும்—தெறுகலியைச்
செற்றவேன் மாற திருவள் ளுவனார்வாய்ச்
சொற்றகுறுப் பால்வாழ்த்துச் சொல். (௭)

தமதாசிரியர் சொல்லையின் பயிரை மேய்ந்த குதிரை மாளப் பாடியது.

† வாய்த்த வயிரபுர மாகாளி யம்மையே
ஆய்த்த அருகா ரணிவயலில்—காய்த்த
கதிரைமா ளத்தின்னுங் காளிங்க னேறும்
குதிரைமா ளக்கொண்டு போ. (அ)

[அரசன் வேண்ட இக்கவியின் ஈற்றடியை "குதிரை மீளக்கொண்டுவா என மாற்றி உரைத்து குதிரையை உய்ப்பித்தனர்.]

காளையார் கோவில் தாசி கூத்தாள் முதலியோர் கண்பெறப்பாடியது.

‡ கூத்தாண் முகத்திரண்டு கூர்வேல்கள் கூத்தாடன்
மூத்தாண் முகத்தின் முழுநீலம்—மூத்தாடன்
அன்னை முகத்தி லரவிந்த மன்னைதன்
அன்னை முகத்திலிரண் டம்பு. (கூ)

ஷை ஊர் 70 தாசிகளைப் புகழ்ந்து பாடியது.

*வாச மலர்மடந்தை போல்வார்வண் கானப்பேர்
ஈசன்றன் மக்க ளெழுபதின்மர்—தேசத்
திரவலர்மேல் நீட்டுவர்கை ஈண்டுலகங் காக்கும்
புரவலர்மேல் நீட்டுவர்தங் கால். (க0)

சோழனிடம் சென்று கூறியது.

*திறையின் முறைகொணர்ந்து தெவ்வேந்த ரெல்லாம்
இறைபு முறைகழிக்க வொண்ணார்—அறைகழற்கால்
போர்வேந்தர் போர்மாளப் போய்வா ளுறைகழித்த
தேர்வேந்தன் றஞ்சைத் தெரு. (கக)

இவரது ஆசிரியர் பாடியது.

பொதியி லகத்தியனைப் பொய்யா மொழியாய்ச்
சிதைவில் புலவர் சிகையாய்த்—துதிசேரும்
செங்காட்டங் கோட்டத் துறையூ ரெனுந்தலத்தில்
தங்காட்டங் கொண்டிருப்பாய் தான். (கஉ)

ஆகச்செய்யுள் ருஎக.

---

† இதனைக் கம்பர் கவியென்றும் கூறுவர்.

‡ இதனைக் காளமேகப்புலவர் பாடியதென்றும் கூறுவர்.

## இரட்டையர்.

இவர்கள் இளஞ்சூரியர் முதுசூரியர் எனப்பட்ட இருங்கவிப் புலவர்களெனவும், திருவக்கை நகரிலிருந்த ஆட்கொண்டான் என்னும் கொங்கராயன் காலத்தவரெனவும், அக்கொங்கராயனாலும் கச்சியிலிருந்த சம்பராயனாலும் நன்று போற்றப்பட்டவர்களெனவும், இவர்கள் காலம் வில்லிபுத்தூரார் காலமெனவும், இவர்களில்ஒருவர் முடவரும் ஒருவர் குருடருமாதலின் குருடர் முடவரைத்தூக்க முடவர் குருடர்க்கு வழிகாட்டப் பலவேறிடத்தும் செல்வார்களெனவும், ஒரு செய்யுளை முற்பாதி ஒருவரும் பிற்பாதி ஒருவரும் பாடி முடிப்பார்களெனவும் கூறுவர். திருவாமாத்தூர்க் கலம்பகம், திருக்கச்சித் தெய்வீகஉலா, மாதைக் கலம்பகம், தில்லைக்கலம்பகம் முதலியன இவர்செய்த நூல்களாம். கலம்பகம் பாடுவதிலிவர்கள் வல்லரென்பது "பண்பாய கலம்பகத்திற்கிரட்டையர்" என்பதனால் விளங்கும்.

திருவக்கைக் கொங்கராயன் விருந்திட்டபோது பாடியது.

*சாணர்க்கு முன்னிற்கும் ஆட்கொண்ட நாயன் தமிழ்க்கொங்க
பாணுற்ற வரிவண்டு சேர்வக்கை நகராதி பக்கத்திலே [ர்கோன்
ஊணுக்கு வாரா திருப்பாய் விருப்பாகி யுயர்வானிலே
வீணுக்கு நின்றாக மெலிகின்ற தெவ்வாறு வெண்டிங்களே. (௧)

திருவண்ணாமலைச்சம்பந்தன் விகடசமுத்தி பாடச்சொன்னபோது பாடியது.

மன்னுதிரு வண்ணா மலைச்சம்பந் தாண்டார்க்குப்
பன்னுந் தலைச்சவரம் பண்ணுவதேன்—மின்னின்
இளைத்தவிடை மாத ரிவன்குடுமி பற்றி
வளைத்திழுத்துக் குட்டா மலுக்கு. (௨)

சம்பராயன் சமுத்தி பாடச்சொல்லப் பாடியது.

*எறிக்கும் புகழ்க்கச்சி யேகாம் பரன்சம்ப னெண்டிசைக்கும் [ள்
பொறிக்கும் புலிக்கொடி யான்புயம் வேட்டபின் பூவையன்னா
வெறிக்குங் குமக்கொங்கை மீதே விழிசொரி வெள்ளந்துள்ளித்
தெளிக்குந் திவலை பழிக்குஞ்சிந் தூரத் திலகத்தையே. (௩)

படைவீடு முற்றியிருந்த பாண்டியனைப் பாடியது.

*காற்று லலைப்புண்டுங் கண்ணன் கடல்கடைந்தும்
ஏற்று னெடுத்து வளைத்தெய்தும்—ஆற்றாத
செம்பொன் மலையில்லை சேனுக் கிடங்கொடுக்கச்
சம்பன் மலைகை தவா. (௪)

ஆறு விலகப்பாடியது.

*ஆற்குழை யோவர வோவாயர் பாடி யருமனையோ
பாற்கட லோதம்ப மோதங்கு மாவம் பலபலவாம்
மாற்கமு மாகினின் றூர்மாதை நாதர் வலங்கொள்பம்பை
மேற்கரை கோயில்கொண் டார்புரஞ் சீறியவெங்கணையே. (ரு)

திருவாமாத்தூர்க் கலம்பகம் பாடச்சொல்லிய போது சொல்லியது.

*தொல்காப் பியதேவர் சொற்றதமிழ்ப் பாடலன்றி
நல்காத் திருச்செவிக்கு நாமுரைப்ப தேறுமோ
மல்காப் புனறதும்ப மானிலத்துக் கண்பிசைந்து
பல்காற் பொருளழற்கும் பாற்கடலோன் றீந்தார்க்கே. (சு)

அபயன்மீது சினமுற்றபோது கூறியது.

*காவல ரீகை கருதுங்காற் காவலர்க்குப்
பாவலர் நல்கும் பரிசொவ்வா—பூவினிலே
யாகாப் பொருளை யபயனளித் தான்புகழாம்
ஏகாப் பொருளளித்தேம் யாம். (எ)

இவர்க்கும் வீரசம்பு வென்பவர்க்கும் நடந்த வினாவிடைகள்.
வீரசம்பு வினா.

பதிவீர சம்புவென்று பாராமற் கல்வி
இதமுளவி ரட்டையரே யீகை—யுதவில்வலக்
கைத்தலத்திற் கொண்டு களிக்காம லும்மிடக்
கைத்தலத்திற் கொள்ளுவதேன் காண். (அ)

இவர்கள்விடை.

கூவரா யன்றியாகங் கொள்வோம் வலக்கைமுடி
யாவர் தரினுமிடக் கைகொள்வோம்—பூவுலகில்
மின்பணிமின் னூர்மதனே வீரசம்பு வேயினிநாம்
இன்பமு மேரா மினி. (கூ)

வீரசம்பு வினா.

என்னுடைய பேரும் புகழு மிருஞ்சீரும்
என்னுடைய வீகையுங்கண் டெப்படிநம்—முன்னவனை

ஆவலுட னேயதிக மாச்சொன்னீ ரெட்டையரே.
கூவரா யன்னியல்பென் கொல். (௧0)

இவர்கள்விடை.

மாதாபி தாவுமவன் மன்னுகுரு தெய்வமவன்
தாதா வவனே தருங்கீர்த்திக்—காதாரன்
த்யாக சமுத்திரன் றண்கூவ ராயன்றன்
ஈகைதனைச் சொல்லவெளி தே. (௧௧)

*ஓங்கிய செந்தமிழ்த் தாதர்க் கடிமையவ் வூரதனால்
நாங்கவி சொல்வது மில்லையென் றேகம்ப நாடன்சொல்ல
ஆங்கவ னேறுஞ் சிவிகை சுமந்து மடப்பையிட்டும்
தாங்கவி கொண்டது கூவந்தி யாக சமுத்திரமே. (௧௨)

*மட்டாருஞ் செங்கழு நீர்மணி மார்பரை வாழ்த்துமந்தக்
கிட்டாத யாசகர் கிட்டிவந் தாலதைக் கேட்டுமுன்னாட்
பட்டோலை வாசித் தவரவர்க் குள்ள பரிசையெல்லாந்
தட்டா தளிப்பது கூவந்தி யாக சமுத்திரமே. (௧௩)

இவர் பசியாயிருக்கும்போது பாடியது.

தேங்குபுகழ் நாங்கூர்ச் சிவனேயல் லாவியப்பா
நாங்கள் பசித்திருக்கை ஞாயமோ—போங்காணும்
கூறுசங்கு தோன்முரசு கொட்டோசை யல்லாமல்
சோறு கண்ட மூளியார் சொல். (௧௪)

பாட்டின் சுவையறியா மூடரைக் குறித்துரைத்தது.

மூடர்முன்னே பாடன்மொழிந்தா லறிவரோ
ஆடெடுத்த தென்புலியூ ரம்பலவா—ஆடகப்பொற்
செந்திருவைப் போலணங்கைச் சிங்காரித் தென்னபயன்
அந்தகனே நாயகனா னால். (௧௫)

திருநெல்லைநாதர் மான்மியத்தைக் குறித் துரைத்தது.

வேயீன்ற முத்தர்தமை வெட்டினா னேயிடையன்
தாயீன்ற மேனி தயங்கவே—பேயாகேள்
எத்தனைநா ளென்றே யிடறுவார் பாற்குடத்தை
அத்தனையும் வேண்டு மவர்க்கு. (௧௬)

மாங்காட்டு வேளான்மீது சிந்தாஸ்துதி.

மாங்காட்டு வேளான் மகளை மருமகன்பால்
போங்காட்டி லின்பம் புணர்ந்தானே—ஆங்கானும்
மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு. (கஎ)

ஒருநாள் நீண்ட மலைவழியில் நடந்தபோதுரைத்தது.

குன்றுங் குழியுங் குறுகி வழிநடந்து
சென்று திரிவதென்றுந் தீராதோ—ஒன்றும்
கொடாதானைக் காவென்றுங் கோவென்றுங் கூறில்
இடாதோ நமக்கிவ் விடர். (கஅ)

இவரும் காளமேகப்புலவரும் பாடியது.

நாணென்று நஞ்சிருக்கு நற்சாபங் கற்சாபம்
பாணந்தான் மண்டின்ற பாணமே—தாணுவே
சீராரூர் மேவுஞ் சிவனேநீ யெப்படியோ
நேரார் புரமெரித்த நேர். (கசு)

காளமேகப்புலவரிறந்து காஷ்டத்தில் எரியும்போது பாடியது.

ஆசு கவியா லகில வுலகெங்கும்
வீசு புகழ்க்காள மேகமே—பூசுரா
விண்கொண்ட செந்தழலாய் வேகுதே யையையோ
மண்டின்ற பாணமென்ற வாய். (உ௦)

பாண்டியன் அவையில் பரிசுகொடுத்ததைத் தடுத்த ஒருவனைக் குரங்கென இகழ்ந்துரைத்தது.

புராதன மான தமிழ்ப்புல வீரிந்தப் புன்குரங்கு
மராமரம் விட்டிங்கு வந்ததென் னேவகை கேட்டிலையோ
தராதலம் வென்ற தமிழ்மா றனேயுந்தன் றம்பியையும்
இராகவ னென்று மிலக்குவ னென்று மிருந்ததுவே. (உக)

ஈகையைத் தடுத்த கண்ணுக் கினியானை இகழ்ந்துரைத்தது.

†தேன்பொழிந்த வாயான் றிருவேங் கடத்துடனே
ஏன்பிறந்தான் கண்ணுக் கினியானே—வான்சிறந்த

† இதை அந்தகக்கவி வீரராகவமுதலியார் பாடியதென்பாருமுளர்.

சீதேவி யாருடனே செய்யதிருப் பாற்கடலில்
மூதேவி யேன்பிறந்தாண் முன். (உஉ)

ஒருமங்கையினதிடையை வியந்துபாடியன.

*நடையொன்று போதகங் கோடொன்று மென்முலை நாட்டுமிரு
கடையொன்று நீல விழிரண்டு மாலங் கமலமுகப்
பெடையொன்று தேமற் பிறைசூடு நாதன் பிரமன்வெற்பில்
இடையொன்றுமில்லைமற்றெல்லாவுருவுமுண்டேந்திழைக்கே.

*பாதாதி கேச முதலா விவளைப் படைத்தமலர்
வேதா மருங்குல் வெளிவைப்ப னேனிந்த மேதினியில்
ஆதார மின்றி யிரண்டிள நீரந் தரநிற்குமோ
ஏதா யினுங்கொஞ்ச மில்லா திராதிடை யேந்திழைக்கே. (உச)

தெய்வங்களை நோக்கியுரைத்தது.

*கேட்ட வரமளிக்குங் கீர்த்தியுள்ள தெய்வங்காள்
கூட்டோடே யெங்கே குடிபோனீர்—பாட்டாய்கேள்
செல்கால மெல்லாஞ் செலுத்தினே மல்காலம்
கல்லானேஞ் செம்பானேங் காண். (உரு)

ஆகச்செய்யுள் ௩௬௬.

---

## சயங்கொண்டார்.

திண்டிவனத்தையடுத்த தீபங்குடியென்னும் நகரிற் பிறந்தவரென்பதும் முதலிற் சைநமதத்தினரென்பதும் பின் வருங் கவியால் விளங்கும். இவர் அபயன் என்னும் சோழசக்கரவர்த்தியிடம் வாசல்வித்துவானாக வந்த பின்னர் சைவ மதப்பற்றுடையராயினரென்பர். அவ்வரசன் மீது கலிங்கத்துப் பரணியென்னும் நூல்பாடி "பரணிக்கோ சயங்கொண்டான்" எனப் புகழப்பெற்றவரிவரே. தாம்பாடிய பரணியில் விநாயகர் முதலிய கடவுள் வாழ்த்துக்கூறியுள்ளார். இவர் காலம் கி. பி. 1070க்கு மேல் 1100க்குள்ளிருக்குமென்று சில சிலாசாசனங்களாலறிந்து ஸ்ரீமத். கல்குளம் குப்புசாமி முதலியாரவர்கள் எழுதியிருக்கின்றார்கள். இவர் சரிதம் வேறேதும் புலப்பட்டிலது.

அபயன் நுமதூர் யாதென்றுகேட்டபோது சொல்லியது.

செய்யும் வினையு மிருளுண் பதுவுந் தேனு நறவு மூனுங் களவும்
பொய்யுங் கொலையு மறமுந் தவிரப் பொய்தீ ரறநூல் செய்தார் தமதூர்

கையு முகமு மிதழும் விழியுங் காலு நிறமும் போலுங் கமலம்
கொய்யு மடவார் விழிவா யதரங் கோபங் கமழுந் தீபங்குடியே.

ஆகச்செய்யுள் ௩௨௧௭.

---

## காளமேகப்புலவர்.

இப்புலவர் பெருமான் திருக்குடந்தை நகரிற்பிறந்த சோழியபிராமணர் என்ப. இவரை நூற்றெட்டுத் திருப்பதிகளி லொன்ருன பாண்டிநாட்டுத் திருமோகூர்க் காளமேகப்பெருமாள்கோவிற் பரிசாரகரான ஓர் பிராமணருடைய புத்திரரென்று சொல்லவுங் கேட்டிருக்கின்றேம். இவர் திருவரங்கம் பெருமாள்கோவிற்பரிசாரகராயிருந்து திருவானைக்காக்கணிகையருள் ஒருத்தி மோகவலையிற் சிக்கி வைணவமதத்தைத் தணந்து சைவந்தழுவி அக்கோயிற் பணிவிடையிலமர்ந்திருக்குங்கால் நாமகள் கருணையோடு வந்து இவர் வாயில் உச்சிட்டத் திருவமுதை யுமிழ்ந்துபோயினள். அன்றுமுதல் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் கவிமழைகளைப் பொழியத்தக்க காளமேகமாயினர். இவர் செய்த நூல்கள் திருவானைக்காவுலா, கடல்விலாசம் முதலியன. இவர் திருமலைராயன் பட்டினத்தரசனவைக்களத்தில் யமகண்டம் பாடி வெற்றிபெற்றுவந்தவராதலால் ஏறக்குறைய ஐந்நூறு வருடங்கட்கு முன்னுள்ளவரெனச் சொல்வர். [illegible]

திருவானைக்கா விநாயகர்மீது பாடியது.

*ஏரானைக் காவி லுமை யென்னுனைக் கன்றளித்த
போரானைக் கன்றுதனைப் போற்றினல்—வாராத
புத்திவரும் பத்திவரும் புத்திரவுற் பத்திவரும்
சத்திவருஞ் சித்திவருந் தான். (க)

திருமலைராயன் சபையில் இவருக்கிருக்க அரசனுடைய சிங்காசனம் இரண்டுமுழம் வளர்ந்து இடங்கொடுக்கும்படி பாடியது.

வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள்—வெள்ளை
அரியா சனத்தி லரசரோ டென்னைச்
சரியா சனம்வைத்த தாய். (உ)

திருமலைராயன் சம்ஸ்தான வித்துவானுகிய அதிமதுர கவிராயரை நோக்கிச்சொல்லியது.

அதிமதுர மென்றே யகில மறியத்
துதிமதுர மாயெடுத்துச் சொல்லும்—புதுமையென

காட்டுச் சரக்குலகிற் காரமில் லாச்சரக்குக்
கூட்டுச் சரக்கதனைக் கூறு. (௩)

அதிமதுரகவிராயர் முதலியோர் நீர்யார் என்றபோது சொல்லியன.

தூதஞ்சு நாழிகையி லாறுநா ழிகைதனிற் சொற்சந்த மாலை சொல்லத்
துகளிலா வந்தாதி யேழுநா ழிகைதனிற் றொகைபட விரித்து ரைக்கப்
பாதஞ்செய்மடல்கோவைபத்துநாழிகைதனிற்பரணியொருநாண்முழுவதும்
பாரகா வியமெலா மோரிரு தினத்திலே பகரக்கொ டிக்கட்டி னேன்
சீதஞ்செ யுந்திங்கண் மரபினு னீடுபுகழ் செய்யதிரு மலைராயன்முன்
சீறுமா றென்றுமிகு தாறுமா றுகள்செய் திருட்டுக் கவிப்புலவரைக்
காதங் கறுத்துச் சவுக்கிட் டடித்துக் கதுப்பிற் புடைத்துவெற்றிக்
கல்லணையி னொடுகொடிய கடிவாளமிட்டேறு கவிகாள மேகநானே.

இம்மென்னு முன்னே யெழுநூறு மெண்ணூறும்
அம்மென்ற லாயிரம்பாட் டாகாதோ—சும்மா
இருந்தா லிருந்தே னெழுந்தேனே யாயின்
பெருங்காள மேகம் பிளாய். (௫)

சுழியுந் தியகட லுப்பென்று நன்னூற் கடலின்மொண்டு
வழியும் பொதிய வரையினிற் கால்வைத்து வன்கவிதை
மொழியும் புலவர் மனத்தே யிடித்து முழங்கிமின்னிப்
பொழியும் படிக்குக் கவிகாள மேகம் புறப்பட்டதே. (௬)

இவர் அவ்வித்துவான்களை நீங்கள் யாரென்று வினவ
நாங்கள் கவிராயர்கள் என்றபோது பாடியது.

வாலெங்கே நீண்ட வயிறெங்கே முன்னிரண்டு
காலெங்கே யுட்குழிந்த கண்ணெங்கே—சாலப்
புவிராயர் போற்றும் புலவீர்கா ணீவிர்
கவிராய ரென்றிருந்தக் கால். (எ)

திருமலைராயனைப்புகழ்ந்தது.

வீமனென வலிமிகுத்த திருமலைரா யன்கீர்த்தி வெள்ளம்பொங்கத்
தாமரையி னயனோடிச் சத்தியலோ கம்புகுந்தான் சங்கபாணி
பூமிதொட்டு வானமட்டும் வளர்ந்துநின்றான் சிவன்கைலைப் பொருப்பிலேறிச்
சோமனையுந் தலைக்கணிந்து வடவரைத்தண் டாலாழந் சோதித்தானே. (அ)

இவர் யமகண்டத்திலிருந்து அச்சமஸ்தான வித்துவான்கள்
கொடுத்தசமிசைகளின்படி பாடிய

சிலேடைகள். ஆமணக்குக்கும், யானைக்கும்.

முத்திருக்குங் கொம்பசைக்கு மூரித்தண் டேந்திவரும்
கொத்திருந்த நேரே குலைசாய்க்கும்—எத்திசைக்கும்
தேமணக்குஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
ஆமணக்கு மால்யானை யாம். (௯)

வைக்கோலுக்கும், யானைக்கும்.

வாரிக் களத்தடிக்கும் வந்துபின்பு கோட்டைபுகும்
போரிற் சிறந்து பொலிவாகும்—சீருற்ற
செக்கோல மேனித் திருமலைரா யன்வரையில்
வைக்கோலு மால்யானை யாம். (௧௦)

பாம்புக்கும, வாழைப்பழத்துக்கும்.

நஞ்சிருக்குந் தோலுரிக்கு நாதர்முடி மேலிருக்கும்
வெஞ்சினத்திற் பற்பட்டான் மீளாது—விஞ்சுமலர்த்
தேம்பாயுஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
பாம்பாகும் வாழைப் பழம். (௧௧)

பாம்புக்கும், எள்ளுக்கும்.

ஆடிக் குடத்தடையு மாடும்போ தேயிரையும்
மூடித் திறக்கின் முகங்காட்டும்—ஓடிமண்டை
பற்றிற் பரபரெனும் பாரிற்பிண் ணாக்குமுண்டாம்
உற்றிடுபாம் பெள்ளெனவே யோது. (௧௨)

பாம்புக்கும், எலுமிச்சம்பழத்துக்கும்.

பெரியவிட மேசேரும் பித்தர்முடி யேறும்
அரியுண்ணு முப்புமே லாடும்—எரிகுணமாம்
தேம்பொழியுஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
பாம்புமெலு மிச்சம் பழம். (௧௩)

முகுந்தனுக்கும், முறத்துக்கும்.

வல்லரியா யுற்றிடலான் மாதர்கையிற் பற்றிடலாற்
சொல்லரிய மாப்புடைக்கத் தோன்றுதலால்—வல்லோர்

அகந்தனிலே வாழ்தலா லன்றுலக ளந்த
முகுந்தனுமே யாகு முறம். (கச)

சந்திரனுக்கும், மலைக்கும்.

நிலவாய் விளங்குதலா னீள்வான் படிந்து
சிலபோ துலாவுதலாற் சென்று—தலைமேல்
உதித்து வரலா லுயர்மா மலையை
மதிக்குநிக ராக வழுத்து. (கரு)

நாய்க்கும், தேங்காய்க்கும்.

ஓடு மிருக்குமத னுள்வாய் வெளுத்திருக்கும்
நாடுங் குலைதனக்கு நாணாது—சேடியே
தீங்கான தில்லாத் திருமலைரா யன்வரையில்
தேங்காயு நாயுநேர் செப்பு. (கசா)

மீனுக்கும், பேனுக்கும்.

மன்னீரி லேபிறக்கும் மற்றலையி லேமேயும்
பின்னீச்சிற் குத்தும் பெருமையால்—சொன்னேன்கேள்
தேனுந்து சோலைத் திருமலைரா யன்வரையில்
மீனும்பே னுஞ்சரியா மே. (கஎ)

பனைமரத்துக்கும், வேசைக்கும்.

கட்டித் தழுவுதலாற் கால்சேர வேறுதலால்
எட்டிப்பன் னாடை யிழுத்தலால்—முட்டப்போய்
ஆசைவாய்க் கள்ளை யருந்துதலா லப்பனையும்
வேசையென லாமே விரைந்து. (கஅ)

தென்னைமரத்துக்கும், வேசைக்கும்.

பாரத் தலைவிரிக்கும் பன்னாடை மேற்சுற்றும்
சோர விளநீர் சுமந்திருக்கும்—நேரேமேல்
ஏறி யிறங்கவே யின்பமாந் தென்னைமரம்
கூறுங் கணிகையென்றே கொள். (கசு)

வெற்றிலைக்கும், வேசைக்கும்.

கொள்ளுகையா னீரிற் குளிக்கையான் மேலேறிக்
கிள்ளுகையாற் கட்டிக் கிடக்கையால்—தெள்ளுபுகழ்ச்

செற்றலரை வென்ற திருமலைரா யன்வரையில்
வெற்றிலையும் வேசையா மே. (௨0)

கண்ணாடிக்கும், அரசனுக்கும்.

யாவருக்கும் ரஞ்சனைசெய் தியாவருக்கு மவ்வவராய்ப்
பாவனையாய்த் தீதகலப் பார்த்தலால்—மேவும்
கதிரியைத்தன் னுள்ளாக்கி யேற்ற ரசத்தால்
சதிருறலா லாடியர சாம். (௨௧)

கூத்தியாருக்கும், குரங்குக்கும்.

ஒட்டங் கடியதா லுள்ளவரை மேவுதலால்
சேட்டை யெவரிடத்துஞ் செய்தலால்—நாட்டமுடன்
காத்திரத்திற் குட்டியுறக் கட்டுதலாற் றெட்டுதலால்
கூத்தியர்க்கு நேரரங் குரங்கு. (௨௨)

குதிரைக்கும், காவிரியாற்றுக்கும்.

ஓடுஞ் சுழிசுத்த முண்டாகுந் துன்னலரைச்
சாடும் பரிவாய்த் தலைசாய்க்கும்—நாடறியத்
தேடு புகழான் றிருமலைரா யன்வரையில்
ஆடுபரி காவிரியே யாம். (௨௩)

கீரைப்பாத்திக்கும், குதிரைக்கும்.

கட்டி யடிக்கையாற் கான்மாறிப் பாய்கையால்
வெட்டி மறிக்கின்ற மேன்மையால்—முட்டப்போய்
மாறத் திரும்புகையால் வண்கீரைப் பாத்தியுடன்
ஏறப் பரிநிகரா மே. (௨௪)

கதவுக்கும், ஆட்டுக்கும்.

செய்யுட் கிடைமறிக்குஞ் சேர்பலகை யிட்டுமுட்டும்
ஐயமற மேற்றா ளடர்க்குமே—துய்யநிலை
தேடும் புகழ்சேர் திருமலைரா யன்வரையில்
ஆடுங் கதவுநிக ராம். (௨௫)

குதிரைக்கும், ஆட்டுக்கும்.

கொம்பிலையே தீனிதின்னுங் கொண்டதன்மேல் வெட்டுதலால்
அம்புவிபி னன்னடைய தாதலால்—உம்பர்களும்

தேடுநற் சோலைத் திருமலைரா யன்வரையில்
ஆடுங் குதிரையுமோ ராம. (உ௬)

துப்பாக்கிக்கும், ஓலைச்சுருளுக்கும்.

ஆணி வரையுறலா லானகுறிப் பேதரலால்
தோணக் கருமருந்தைத் தோய்த்திடலால்—நீணிலத்தில்
செப்பார்க் குதவாத் திருமலைரா யன்வரையில்
துப்பாக்கி யோலைச் சுருள். (உ௭)

வானவில்லுக்கும், விஷ்ணுவுக்கும், வெற்றிலைக்கும்.

நீரி லுளவா னிறமபச்சை யாற்றிருவால்
பாரிற் பகைதீர்க்கும் பான்மையால்—சாருமனுப்
பல்வினையை மாற்றுதலாற் பாரீர் பெருவான
வில்விண்டு சேர்வெற் றிலை. (உ௮)

பூசணிக்காய்க்கும், பரமசிவனுக்கும்.

அடிநந்தி சேர்தலா லங்கம் வெளுத்துக்
கொடியுமொரு பக்கத்திற் கொண்டு—வடிவுடைய
மாசுணத்தைப் பூண்டு வளைத்தழும்பு பெற்றதனால்
பூசணிக்கா யீசனெனப் போற்று. (உ௯)

ஓடத்துக்கும், நிதம்பத்துக்கும்.

பலகையிடு முள்ளே பருமாணி தைத்தும்
சலமிறைக்கு மாறேறித் தள்ளும்—உலகறிய
ஓடமு மொன்றே யுலகநா தன்பெண்டீர்
மாடமுமொன் றேற்ற மயிர். (௩௦)

கரண்டகத்துக்கும், பெண்குறிக்கும்.

இட்டிட்டு வாங்குதலா லின்பவெள்ளை தோன்றுதலால்
மட்டிட்டு மூடி மறைத்தலால்—முட்டத்
தெருண்டோர்கள் போற்றுந் திருமலைரா யன்சீர்க்
கரண்டகமும் பெண்குறியுங் காண். (௩௧)

விநாயகனுக்கும், முருகனுக்கும், பரமசிவனுக்கும்.

சென்னிமுக மாறுளதாற் சேர்கரமுன் னாலுகையால்
இந்நிலத்திற் கோடன் றிருக்கையால்—மன்னுகுளக்

கண்ணுறுத லானுங் கணபதியுஞ் செவ்வேளும்
எண்ணரனு நேராவ ரே. (௯௨)

வசனரூபங்களைச் செய்யுளாகப் பாடியது.

அரக ரதிருச்சிற் றம்பலவா ணவந்
தாரூ பமகே சசிதம்—பரதே
வசிதம் பரதே வசிதம் பரதே
வசிதம் பரதே வனே. (௯௩)

எங்கண் மடத்துக் கெரிகரும்பு வெட்டப்புங்
கங்கொம்பங் கிங்கொன் பதுபுளி—யங்கொம்பங்
கிங்கொன் பதுவெட் டிநறுக் கியவெள்வே
லங்கொம்பங் கிங்கொன் பது. (௯௪)

எழுத்தாணியென்றெடுத்துச் சூரிக்கத்தியென்று முடித்தது.

எழுத்தா ணிதுபெண் ணிதனைமுனி காதில்
வழுத்தா ரணக்குகனே வாதுக்—கழைத்ததுவும்
மாரன்கை வின்மான்முன் காத்ததுவு நன்றாகுந்
தீரமுள்ள சூரிக்கத் தி. (௯௫)

ராமா ராமா கோவிந்தா வேங்கடவா நாராயணா வென்றுபாடியது.

அந்தோ திலகநுதல் ராமாரா மாவனசக்
கொந்தோ களபமுலை கோவிந்தா—சந்ததமும்
வேலோ விணைவிழிகள் வேங்கடவா நல்லவயி
றாலோகா ணாரா யணா. (௯௬)

டு-டு-வரப்பாடியது.

ஓ கா மா வீ தோனே ரொக்க டு டு டு டு டு
நாகார் குடந்தை நகர்க்கதிபர்—வாகா
எடுப்பர் நடமிடுவ ரேறுவரன் பர்க்குக்
கொடுப்ப ரணிவர் குழைக்கு. (௯௭)

குடத்திலேகங்கை யடங்குமெனப் பாடியது.

விண்ணுக் கடங்காமல் வெற்புக் கடங்காமல்
மண்ணுக் கடங்காமல் வந்தாலும்—பெண்ணை

இடத்திலே வைத்த விறைவர் சடாம
குடத்திலே கங்கையடங் கும். (௩அ)

பச்சைவடம் பாகு சேலை சோமன் எனப்பாடியது.

மாயன் றுயின்றதுவு மாமலராள் சொல்லதுவும்
ஏய குருந்திற்கொண் டேறியதும்—தூய
இடப்பாகன் சென்னியின்மே லேறியதும் பச்சை
வடப்பாகு சேலைசோ மன். (௩௯)

கின்னரிவாசிக்குங் கிளியெனப்பாடியது.

ஆடல்புரிந் தானென் று மந்நாளி லேழுவர்
பாடலுகந் தானென்றும் பான்மையினால்—கூடலிலே
நன்னரிவா சிக்கு நடைபயிற்றி னானென்றும்
கின்னரிவா சிக்குங் கிளி. (௪0)

பொன்னுவரை யிலை காய் பூவென்று பாடியன.

உடுத்ததுவு மேய்த்ததுவு மும்பர்கோன் றன்னால்
எடுத்ததுவும் பள்ளிக் கியையப்—படுத்ததுவும்
அந்நா ளொறிந்ததுவு மன்பி னிரந்ததுவும்
பொன்னு வரையிலைகாய் பூ. (௪௧)

தோய்ந்தான்மேய்த் தான்குடையாத் தூக்கினான் மேன்மேலாச்
சாய்ந்தா னெறிந்தான்பின் சாப்பிட்டான்—ஆய்ந்துசொலும்
மன்னு வரத்தில்வரு மால்சாமி நாமாகேள்
பொன்னு வரையிலைகாய் பூ. (௪௨)

செங்கழுநீர்க் கிழங்கென்று பாடியது.

வாதமணா ரேறியது மாயன் றுயின்றதுவும்
ஆதிதடுத் தாட்கொண்ட வவ்வுருவும்—சீதரனார்
தாள்கொண் டளாந்ததுவுந் தண்கச்சிக் காவலா
கேள்செங் கழுநீர்க் கிழங்கு. (௪௩)

நா நீ நூ நே யென்று பாடியது.

அரையின் முடியி லணிமார்பி னெஞ்சில்
தெரிவை யிடத்தமர்ந்தான் சேவை—புரியறவே

மானார் விழியிர் மலரணவொற் றிருக்கும்
ஆனலா நாரீநா ரே, (சச)

ஈயேற மலைகுலுங்கியதெனப் பாடியது.

வாரணங்க ளெட்டு மகமேரு வுங்கடலும்
தாரணியு மெல்லாஞ் சலித்தனவால்—நாரணனைப்
பண்வா யிடைச்சி பருமத்தி னலடித்த
புண்வாயி லீமொய்த்த போது. (சரு)

பாற்கடலிற் செந்தாளெழும்பியதெனப் பாடியது.

சுத்தபாற் கடலி னடுவினிற் றாளி தோன்றிய வதிசயமது கேள், மத்தகக் கரியை யுரித்தவன் மீது மதன்பொரு தழிந்திடுமாற் றம், வித்தகக் கயிலை செவியுறக் கேட்டாள் விழுந்துநொந் தயர்ந் தழுதேங்கிக், கைத்தல மலரான் மார்புறப் புடைத்தா ளெழுந்தது கலவையின் செந்தாள். (சசு)

கடுங்காற்றுமழைகாட்டும் கடுநட்புப் பகைகாட்டுமெனப்பாடியது.

நீரோ பிறவா நெறிகாட்டி யாரெமக்கு
நீரோ சமிசை நிலையிட்டீர்—நீரேயிவ்
விங்களமேன் செய்தீர் விடுங்கடுங்காற் றும்மழைகாட்
டுங்கடுநட் புப்பகைகாட் டும். (சஎ)

மும்மூர்த்திகளின் உணவுமுதலியன.

இறுவ னளைபயறு செந்நெற் கடுகு
மறிதிகிரி தண்டு மணிநூல்—பொறியரவம்
வெற்றேறு புள்ளன்னம் வேதனரன் மாலுக்குக்
கற்றூழம் பூவே கறி. (சஅ)

இராசிகளை அடைசொல்லின்றிவரப் பாடியது.

பகருங்கான் மேடமிட பம்மிதுனங் கர்க்க
டகஞ்சிங்கங் கன்னிது லாம்விர்ச்—சிகந்த
நுசுமகரங் கும்பமீ னம்பன் னிரண்டும்
வசையறுமி ராசி வளம். (சகூ)

தை மாசி பங்குனி மாதமென்றுவரப் பாடியது.

பாணர்க்குச் சொல்லுவதும் பைம்புனலை மூடுவதும்
தூணு வுரித்ததுவுஞ் சக்கரத்தோன்—ஊணதுவும்

எம்மானை யேத்துவது மீசனிடத் துஞ்சிரத்தும்
தைம்மாசி பங்குனிமா தம். (ருo)

சிதம்பரம் திருவாரூர் கும்பகோணத்திலிருக்குஞ்
சின்னங்களைக்குறித்துப் பாடியன.

ஞான சபைக னகசபைசிற் றம்பலம்பே
ரானந்தக் கூடந் திருமூலட்—டானம்பே
ரம்பலம்பஞ் சாவரண நாற்கோபு ரம்பொற்செய்
கம்பமண்ட பஞ்சிவகங் கை. (ருக)

சங்குதீர்த் தந்திருச் சாளரவா யில்வீர
சிங்காச னந்திருவந் திக்காப்புப்—பங்குனிமா
தத்திருநா ளோர்த்தந் திருவிளை தன்கோயில்
உத்தரபா கந்திருவா ரூர். (ருஉ)

திருக்குடந் தையாதி கும்பேசர் செந்தா
மரைக்குளங் கங்கை மகங்கா—விரிக்கரையின்
ஓரங்கீழ்க் கோட்டங்கா ரோணமங்கை நாயகியார்
சாரங்க பாணி தலம். (ருங)

கேட்டசமிசைக்கு அப்பாவென்று முன்னும், யார்க்குமினிது என்று
பின்னுங்கூட்டி வெண்பாவாக்கிக்கொள்ளச் சொல்லியது.

அப்பா குமரகோட் டக்கிரை செவ்விலிமேட்
டுப்பாகற் காய்பருத் திக்குழிநீர்—செப்புவா
சற்காற்றுக் கம்பத் தடியிற் றவங்கருமா
றிப்பாய்ச்சல் யார்க்கு மினிது. (ருச)

பாதிவெண்பாவில் மாலவதாரம் பத்தும்வரப்பாடியது.

மெச்சுபுகழ் வேங்கடவா வெண்பாவிற் பாதியிலென்
இச்சையிலுன் சன்ம மெடுக்கவா—மச்சாகூர்
மாகோலா சிங்காவா மாராமா ராமாரா
மாகோபா லாமாவா வாய். (ருரு)

சோ கா மா ஏ வா தா வென்றுபாடியது.

சோகாமா ஏவாதா சொல்லின்மனைக் கூட்டியுமை
பாகார்ந்த தில்லைப் பரமேசர்—வாகாத்

தரித்தா ரெரித்தார் தறித்தா ருதைத்தார்
உரித்தார் கணைபடைத்தார் ஊர்க்கு. (ருசு)

கொட்டைப்பாக்கென்றெடுத்துக்களிப்பாக்கென்றுமுடித்தது.

கொட்டைப்பாக் கும்மொருகண் கூடையைப்பார்க் கும்மடியில்
பிட்டைப்பார்க் கும்பாகம் பெண்பார்க்கும்—முட்டநெஞ்சே
ஆரணனு நாரணனு மாதிமறை யுந்தேடும்
காரணனைக் கண்டுகளிப் பாக்கு. (ருஎ)

செருப்பென் றெடுத்து விளக்குமாறென்று முடித்தது.

செருப்புக்கு வீரர்களைச் சென்றுழக்கும் வேலன்
பொருப்புக்கு நாயகனைப் புல்ல—மருப்புக்குத்
தண்டேன் பொழிந்ததிருத் தாமரைமேல் வீற்றிருக்கும்
வண்டே விளக்குமா றே. (ருஅ)

கரியென்றெடுத்து உமியென்று முடித்துப்பாடியன.

கரியதனை யேயுரித்த கையா வளையேந்
தரியயற்கு மெட்டாத வையா—பரிவாக
அண்டரெல்லாங் கூடி யமுதங் கடைந்தபொழு
துண்டநஞ்சை யிங்கே யுமி. (ருகூ)

கரிக்காய் பொரித்தாள்கன் னிக்காயைத் தீத்தாள்
பரிக்காயைப் பச்சடியாப் பண்ணாள்—உருக்கமுள்ள
அப்பைக்காய் நெய்துவட்ட லாக்கினா ளத்தைமகள்
உப்புக்காண் சீச்சி யுமி. (சுO)

கூதிக்கெட் டேழுங் குலைந்து நடுநடுங்கிப்
பூதிக்கொப் பாகவன்றே போய்விடுமே—ஆதி
நரக்காட் டகவரியை நற்சரபு மாகிச்
சுருக்கா விடினருந் சுணி. (சுக)

சித்துப்பூத் தென்றுவரப்பாடியது.

அப்பூருஞ் செஞ்சடைமே லம்புலியைப் பார்த்துப்பார்த்
தெப்போதுஞ் சித்துப்பூத் தென்னவே—முப்போதும்
வாலங்காட் டாநிற்கும் வாயங்காக் காநிற்கும்
ஆலங்காட் டான்பூ ணரா. (சுஉ)

வேடிக்கையாகச் சொல்லியது.

வாலி மடிந்ததுவும் வல்லரக்கர் பட்டதுவும்
கோலமுடி மன்னர் குறைந்ததுவும்— சால
மதியுடைய நூற்றுவர் மாண்டதுவு மையோ
சதவிகரத் தால்வந்த தாழ்வு. (கூரு)

வறும்புனங்கண்டு தலைவனிரங்கல்.

கம்பத்தா னைக்கடையிற் கட்டினான் கால்சாய
அம்பைத்தா வித்தான்கா லானதே—வம்புசெறி
பூவைகாள் கிள்ளைகாள் பூங்குயில்கா ளன்றில்காள்
பாவையா ளாண்ட பதி. (கூச)

என்னை யிடுக்கடி பாயைச்சுருட்டடி ஏகடியம்பலத்தே
என்றுவரப்பாடியது.

தடக்கட லிற்பள்ளி கொள்வோ மதனைநற் சங்கரனார்
அடற்புலிக் குட்டிக் களித்தன ராமது கேட்டுநெஞ்சில்
நடுக்கம்வந் துற்றது கைகா லெழாநளி னத்தியென்னை
இடுக்கடி பாயைச் சுருட்டடி யேகடி யம்பலத்தே. (கூரு)

போவாள் வருவாள் புகுவாள் புறப்படுவாள் ஆவாள்
இவாளவாளாம் எனப்பாடியது.

செற்றலரை வென்ற திருமலைரா யன்கரத்தில்
வெற்றிபுரி யும்வாளே வீரவாள்—மற்றையர்வாள்
போவாள் வருவாள் புகுவாள் புறப்படுவாள்
ஆவா ளிவாளவா ளாம். (கூசு)

பன்றிக்கு மார்பிலே கொம்பு முளைத்தது என்றுபாடியது.

தெருமுட்டப் பாளை சிதறிவளர் பூகத்
தருமுட்டச் செவ்வாளை தாவும்—திருமுட்டத்
தூரிலே கண்டே னொருபுதுமை பன்றிக்கு
மாரிலே கொம்பான வாறு. (கூஎ)

முச்சங்கத் தலைவரையும் புலவரையும் பாடியது.

நாலாநா லாயிரநா னூற்றுநாற் பத்தொன்பான்
பாலாநா னூற்றுநாற் பத்தொன்பான்—மேலாநாற்

பத்தொன்பான் சங்கமறு பத்துநா லாடலுக்கும்
கத்தன் மதுரையிற்சொக் கன். (௬அ)

திருமலைராயன் பட்டினத்தில் மண்மாரிபெய்யப் பாடியன.

செய்யாத செய்த திருமலைரா யன்வரையில்
அய்யா வரனே யரைநொடியில்—வெய்யதழற்
கண்மாரி யான்மதனைக் கட்டழித்தாற் போற்றீயோர்
மண்மாரி யாலழிய வாட்டு. (௬௯)

கோள ரிருக்குமூர் கோள்கரவு கற்றவூர்
காளைகளாய் நின்று கதறுமூர்—நாளையே
விண்மாரி யற்று வெளுத்து மிகக்கறுத்து
மண்மாரி பெய்கவிந்த வான். (௭0)

நாகபட்டினம் காத்தான் வருணகுலாதித்தன் சத்திரத்தில் இவர்
சாப்பிட்டபோது நிந்தாஸ்துதியாகப் பாடியது.

கத்துகடல் சூழ்நாகைக் காத்தான்றன் சத்திரத்தில்
அத்தமிக்கும் போதி லரிசிவரும்—குத்தி
உலையிலிட வூரடங்கு மோரகப்பை யன்னம்
இலையிலிட வெள்ளி யெழும். (௭௧)

சம்பிரதமாகப்பாடியது.

பூநக்கி யாறுகால் புள்ளினத்துக் கொன்பதுகால்
ஆனைக்குக் கால்பதினே ழானதே—மானேகேள்
முண்டகத்தின் மீது முழுநீலம் பூத்ததுண்டு
கண்டதுண்டு கேட்டதில்லை காண். (௭௨)

ஒருத்தி இவரைக்கண்டு உன்னைக்கொடுப்பேனே என்றபோது பாடியது.

என்னைக் கொடுத்தா லிரக்கமுனக் குண்டாமோ
வன்னக் கமலமுக வல்லியே—துன்னுமதக்
காட்டானைக் கோட்டுமுலைக் காரிகையே நீபயந்த
கோட்டானைத் தானே கொடு. (௭௩)

விகடராமன் குதிரையைப் பழித்துப் பாடியது.

முன்னே கடிவாள மூன்றுபேர் தொட்டிழுக்கப்
பின்னே யிருந்திரண்டு பேர்தள்ள—எந்நேரம்

வேதம்போம் வாயான் விகடரா மன்குதிரை
மாதம்போங் காத வழி. (எச)

ஆமூர் வேங்கட முதலியாரைப் புகழ்ந்து பாடியன.

† ஆறும் பதினாறு மாமூரில் வேங்கட்டன்
ஏறும் பரிமாவே யேற்றமா—வேறுமா
வெந்தமா சும்மா வெறுமா களிகளற
வந்தமா சந்தமா மா. (எரு)

உள்ளங்கால் வெள்ளெலும்பு தோன்ற வொருகோடி
வெள்ளங்கா லந்திரிந்து விட்டோமே—புள்ளபடி
ஆமூர் முதலி யரசர்கோ னிங்கிருக்கப்
போமூ ரறியாமற் போய். (எசா)

கீரைவிற்பா ளொருத்தியின் இடையையு முலையையு நோக்கிக் கூறியது.

வெள்ளையா னேறும் விமல ரடிபணியும்
பிள்ளையான் வாழும் பெருந்தெருவில்—வள்ளை
இலைக்கறிவிற் பாண்மருங்கு லிற்றுவிடு மென்று
முலைக்கறிவிப் பாரிலையே முன். (எஎ)

பிஞ்சு மாங்காயைக் குறித்துப் பாடியது.

திங்க ளுதலார் திருமனம்போ லேகீறிப்
பொங்குகட லுப்பைப் புகட்டியே—எங்களிட
ஆச்சாளுக் கூறுகா யாகாம லாருக்காக்
காய்ச்சாய் வடுவாமாங் காய். (எஅ)

விட்டுணு உலகத்தை யுண்டபோது சிவன் எங்கிருந்தார்
என்றதற்குச் சொல்லியது.

அருந்தினா னண்டமெலா மன்றுமா லீசன்
இருந்தபடி யேதென் றியம்பப்—பொருந்திப்
பருங்கவளம் யானைகொளப் பாகனதன் மீதே
இருந்தபடி யீசனிருந் தான். (எகூ)

---

† மாவென்றான் மாமாறன் மாவேமா வல்லாமல்
மாவென்றான் மாவெல்லா மாவாமா—மாவென்றால்
வெந்தமா சும்மா வெறுமா களிகளற
வந்தமா சந்தமா மா. என்றும் வழங்குகிறது.

ஓர் குயவனைநோக்கிக் கூறியது.

ஆண்டி குயவா வடாவுன்பெண் டாட்டிதனைத்
தோண்டியொன்று கேட்டேன் றரத்தினள்—வேண்டியிரு
கைக்கரகங் கேட்டேனுன் காலதனைத் தூக்கியே
சக்கரத்தைக் காட்டினு டான். (அ0)

தென்றற்காற்று வீசாதபோது பாடியது.

அம்பேந்து கையா னவன்பதியி லம்மாவைக்
கொம்பேந்தி தந்தைபணி கொண்டதோ—அன்பாய்
அரிந்த மகவை யமுதுக் கழைபென்
றிருந்தவன்றன் செங்காட்டி லே. (அக)

பெற்றானென்னும் வணிகன்மீது பாடியன.

முற்றாத காஞ்சியினு முல்லையினும் பாலையினும்
கற்றான்பின் சென்ற கருணைமால்—பெற்றான்றன்
ஆலைப் பதித்தா ரளகத்தி யாட்கயனார்
வேலைப் பதித்தார் விழி. (அ௨)

பாலனைப்பழித்தல்.

கஞ்ச முகையுங் களிற்றானை யின்கொம்பும்
அஞ்சுமுலை நாலுமுலை யானதுவும்—மிஞ்சுபுகழ்ப்
பெற்றான்றன் மாலை பிறர்க்களித்த தும்குதலை
கற்றான் பிறந்தபின்பு காண். (அ௩)

ஸ்ரீரங்கத்து வைணவர்கள் விநாயகருக்கு நாமமிட்
டிருந்ததைக்கண்டு பாடியது.

தந்தை பிறந்திறவாத் தன்மையினாற் றன்மாமன்
வந்து பிறந்திறக்கும் வண்மையினால்—முந்தொருநாள்
வீணிக்கு வேளை யெரித்தான் மகன்மாமன்
காணிக்கு வந்திருந்தான் காண். (அச)

வெறிவிலக்கல்.

முந்நான்கி லொன்றுடையான் முந்நான்கி லொன்றெடுத்து
முந்நான்கி லொன்றின்மேன் மோதினான்—முந்நான்கில்
ஒன்றறிந்தா லாகுமோ ஓஒ மடமயிலே
அன்றணைந்தான் வாராவிட் டால். (அரு)

சிவன் முதலிய ஐவருக்கு மாறுதலையுள்ளதாகப் பாடியது.

சங்கரர்க்கு மாறுதலை சண்முகர்க்கு மாறுதலை
ஐங்கரர்க்கு மாறுதலை யானதே—சங்கைப்
பிடித்தோர்க்கு மாறுதலை பித்தாநின் சீர்த்தி
படித்தோர்க்கு மாறுதலை பார். (அ௬)

ஸ்ரீரங்கத்து வைணவரும் திருவானைக்காச்சைவரும்
சண்டையிட்டபோது கூறியது.

சிரங்கத் தாருந் திருவானைக் காவாரும்
போரங்க மாகப் பொருவதேன்—ஓரங்கள்
வேண்டாமி தென்ன விவரந் தெரியாதோ
ஆண்டானுந் தாதனுமா னால். (அஎ)

எட்டிகுளம் குட்டிசெட்டி பிற்பாதிப் பாவைச்சொல்லிப்
பூர்த்திசெய்யச்சொன்னபோது பாடியது.

எட்டி குளத்தி லிருந்து சரக்குவிற்கும்
குட்டிசெட்டி தன்மகளைக் கொண்டுபோய்—நொட்டுதற்கே
ஆயிரம் யானை யெழுநூறு கூன்பகடு
பாயும் பகடெண்பத் தைந்து. (அஅ)

தண்டாங்கூர் மகாசனங்களை நோக்கிச்சொல்லியது.

தண்டாங்கூர் மாசனங்காள் சற்குணர்நீ ரென்றிருந்தேன்
பண்டங் குறையவிற்ற பாவிகாள்—பெண்டுகளைத்
தேடியுண்ண விட்டீர் தெருக்க டெருக்கடொறும்
ஆடிமுத லானிவரைக் கும். (அகூ)

கம்பர் செய்யுளைப் பரிகசித்துரைத்தது.

நாரா யணனை நராயணனென் றேகம்பன்
ஓராமற் சொன்ன வுறுதியால்—நேராக
வாரென்றால் வர்என்பேன் வாளென்றால் வள்ளென்பேன்
நாரென்று னர்என்பேன் நன். (௯௦)

பூசனிக்காய்க் கறியை வியந்து பாடியது.

கண்டக்காற் கிட்டுங் கயிலாயங் கைக்கொண்டுட்
கொண்டக்கால் மோட்சங் கொடுக்குமே—கொண்டத்தூர்த்

தண்டைக்கா லம்மை சமைத்துவைத்த பூசணிக்காய்
அண்டர்க்கா மீசருக்கு மாம். (கூக)

ஆறுசாதிவரப் பாடியது.

கம்மாள னங்கிக் கணக்கனென வேதுதித்தார்
செம்மான் சதுரைத் திருவரசை—அம்மாகேள்
வாணியனும் பொன்னேரி வாழும்வே ளாளனுமே
சேணியனு மன்றே தெரிந்து. (கூஉ)

அமராபதிக் குருக்களிட்டவிருந்தைப் புகழ்ந்து பாடியது.

ஆனை குதிரைதரு மன்னை தனைக் கொன்றகறி
சேனைமன்ன ரைக்காய்துன் றீயவரை—பூநெயுடன்
கூட்டியமு திட்டான் குருக்களம ராபதியான்
வீட்டி லுண்டு வந்தேன் விருந்து. (கூ௩)

ஒருவன் கலியாணத்தி லாசீர்வதித்துச் சிவனும் விட்டுணுவும்
காக்கவென்று சிலேடையாகச் சொல்லியது.

சாரங்க பாணியரஞ் சக்கரத்தர் கஞ்சனைமுன்
ஓரங்கங் கொய்த வுகிர்வாளர்—பாரெங்கும்
ஏத்திடுமை யாக ரினிதா விவரும்மைக்
காத்திடுவ ரெப்போதுங் காண். (கூ௪)

திருப்பனந்தாள் பட்டன்மீது பாடியது.

விண்ணீரும் வற்றிப் புவிநீரும் வற்றி வெதும்பியழக்
கண்ணீரும் வற்றிப் புலவோர் தவிக்கின்ற காலத்திலே
உண்ணீருண் ணீரென் றுபசாரஞ் சொல்லி யுபசரித்துத்
தண்ணீருஞ் சோறுந் தருவான் றிருப்பனந் தாட்பட்டனே. (கூ௫)

ஒருத்திவீட்டிற் சாப்பிட்டதை நிந்தித்துப் பாடியது.

நீச்சாற் பெருத்திடு காவேரி யாற்றை நிலைநிறுத்திச்
சாய்ச்சா ளிலைக்கறிச் சாற்றையெல் லாமது தானுமன்றிக்
காய்ச்சாப் புளியுநற் கல்லுடன் சோறுங் கலந்துவைத்த
ஆச்சாளை யான்மற வேன்மறந் தான்மன மாற்றிடுமே. (கூ௬)

கயத்தாற்றில் பெருமாளைத் தூக்கும்படி இவரை
வருத்திச் சுமத்தியபோது பாடியது.

பாளைமணங் கமழுகின்ற கயத்தாற்றுப் பெருமாளே பழிகாராகேள்
வேளையென்று விராவேளை பதினாறு நாழிகைக்கு மேலாயிற்றென்
தோளைமுறித் ததுமன்றி நம்பியா னையுங்கூடச் சுமக்கச்செய்தாய்
நாளையினி யார்சுமப்பா ரெந்நாளு முன்கோயி லுசந்தானே. (௯௭)

ஒரூரில் ஏரியுடைந்து ஓட்டை ஏரியாகப்போம்படி பாடியது.

கலங்கற் றுறையதனிற் காராளர் போதத்
தெலுங்கப்ப நாரணன்றென் டிக்கச்—சலம்பெருகி
நட்டாறு கொண்டுகரை நன்று யுடைந்துநீர்
கட்டா தொழிதல் கடன். (௯௮)

வீரசென்னனென்னும் தெலுங்கப் பிராமணனிட்ட
வுணவை யிகழ்ந் துரைத்தது.

ஏழாளை யடித்தபுலி தனையடித்தான் வீரசென்ன னென்றேகாட்டில்
வாழாமற் சிறுபுலிக ளீப்புலியோ டெலிப்புலியாய் வடிவங்கொண்டு
பாழாகிக் காடெல்லாம் பரிதவிக்க வடுகரடுப் படியில்வந்து [தானே.
கூழாகி வயிற்றினிற்போம் பொழுதுகுணம் போகாமற் குழுறுந்

ஓரிடைச்சி கொடுத்த நீர்மோரை வியந்து பாடியது

காரென்று பேர்படைத்தாய் ககனத்து றும்போது.
நீரென்று பேர்படைத்தாய் நெடுந்தரையில் வந்ததற்பின்
வாரொன்று மென்முலையா ராய்ச்சியர்கை வந்ததற்பின்
மோரென்று பேர்படைத்தாய் முப்பேரும் பெற்றாயே. (௧௦௦)

செட்டிகள் பேசிக்கொள்ளும் வர்த்தகப்பாஷையைக் கேட்டுப் பாடியது.

கருந்தலை செந்தலை தங்கான் றிரிக்கால் கடையிற்சுற்றி
வருந்திக் குடவற்குந் தாட்டிக்குங் கொத்திட்டு மாய்வதல்லால்
கரந்தைக ளாண்டி லொருக்கால் வருவது கண்டிருந்தும்
அரும்புக்குங் கொத்துக்கும் வந்தார் பிழைப்ப தரிதென்பரே. (௧௦௧)

கும்பகோணத்தி லோர்சோழியப் பிராமணனை யிகழ்ந்துரைத்தது.

சுருக்கவிழ்ந்த முன்குடுமிச் சோழியா சோற்றுப்
பொருக்குலர்ந்த வாயா புலையா—திருக்குடந்தைக்

கோட்டானே நாயே குரங்கே யுனையொருத்தி
போட்டாளே வேலையற்றுப் போய். (௪0௨)

திம்மியென்னுந் தெலுங்கத் தாசியைக்குறித்துப்பாடியது.

ஏமிரா வோரியென்பா ளெந்துண்டி ஒஸ்தியென்பாள்
தாமிராச் சொன்னதெல்லாந் தலைகடை தெரிந்ததில்லை
போமிராச் சூழுஞ்சோலை பொருகொண்டைத் திம்மிகையில்
நாமிராப் பட்டபாடு நமன்கையிற் பாடுதானே. (௧0௩)

இசைபாடவறியாத ஓர் கிழத்தாசியை நிந்தித்துரைத்தது.

இந்துமுடிக்குஞ் சடையாள ரிருக்குந்தொண்டை வளநாட்டில்
சிந்துபடிக்கக் கவிபடிக்கத் தெரியாமடவா யுன்றனக்குக்
கெந்தபொடியேன் பூமுடியேன் கிழமாய்நரைத்து முகந்திரைந்தும்
இந்தமுறுக்கேன் வீருப்பே னெடுப்பேனுன்னைக் கெடுப்பேனே. ()

கலைச்சிஎன்னுந் தாசிமீது வசையாகப்பாடியது.

ஏய்ந்த தனங்க ளிரண்டுமிரு பாகற்காய்
வாய்ந்தவிடை செக்குலக்கை மாத்திரமே—தேய்ந்தகுழல்
மூக்கலச்சிக் குப்பிடிக்கு மூதேவி யாள்கமலைக்
குக்கலிச்சிக் குங்கலைச்சிக் கு. (௧0௫)

துதியாகப் பாடியது.

நஞ்சுகுடி கொண்டகணை நாலுந் தெரிந்துமதன்
இஞ்சிகுடி தன்னிலும்வந் தெய்வானோ—விஞ்சு
முலைச்சிகரத் தாலழுத்தி முத்தமிட்டுச் சற்றே
கலைச் சிகரத் தாலணைத்தக் கால். (௧0௬)

நாகபட்டினம் தேவடியாளை நிந்தித்துரைத்தது.

வாழ்த்த திருநாகை வாகான தேவடியாள்
பாழ்த்த குரலெடுத்துப் பாடினாள்—நேற்றுக்
கழுதைவிட்ட வண்ணான்றன் கண்டுகொண்டே னென்று
பழுதையெடுத் தோடிவந்தான் பார். (௧0௭)

ஆற்றூர்ச் சோமிஎன்னுந் தாசியை வியந்து பாடியது.

ஆராயு முத்தமி ழாற்றூரிற் சோமி யழகுகண்டு
நாரா யணனெடு மாலாகி னான்மற்றை நான்முகனும்

ஓரா யிரமட லூர்ந்தான்வின் மார னுருவழிந்தான்
பேரான வானவர் கோனுங்கண் ணாயிரம் பெற்றனனே. (கoஅ)

ஓர்வேசை கதைசொல்லச் சொன்னபோது சொல்லியது.

சோமன் புறப்படத் தென்றலும் வீசத் துயிலொழிய
யாமங்க டோறுங் குயில்வந்து கூவிடங் நேரத்திலே
நாமும் பிழைத்து மனிதர்முன் பேசிட நாமமுண்டாய்க்
காமக் கலகந் தெளிந்தபின் னானுங் கதைசொல்வனே. (கoக)

நெல்லிக்கா யூறுகாயைத் திருடியபெண்களைக் குறித்துரைத்தது.

*பாடுபட்டுத் தேடிப் பல்கார முப்பமைத்தே
ஓடுவட்ட மாக வுடைத்தடைத்து—வேடுகட்டும்
நெல்லிக்கா யைத்திருடு நீலிகா ளுங்களிடை
இல்லிக்கா ராப்பேற்று வார். (கக0)

பொது.

சிரித்துப் புரமெரித்தான் சிந்துரத்தைப் பற்றி
உரித்துதிரம் பாய வுடுத்தான்—வருத்தமுடன்
வாடுமடி யாருடனே வானவருந் தானவரும்
ஓடுபயந் தீர்த்தநஞ்சி வன். (ககக)

பாரளக்குந் தூதுசெல்லும் பையரவின் மேனடிக்கும்
சீரகலி சாபத்தைத் தீர்க்குமே—ஊரருகில்
சண்டச் சகடுதைக்குந் தையலாய் கார்நீல
கண்டத்தா ரூரான் கழல். (ககஉ)

திருத்தில்லை.

கம்பமத கடகளிற்றுன் றில்லைவாழுங்
கணபதிதன் பெருவயிற்றைக் கண்டுவாடி
உம்பரெலாம் விழித்திருந்தா ரயில்வேற்செங்கை
உடையவறு முகவனுங்கண் ணீராறுனன்
பம்புசுடர்க் கண்ணனுமோ நஞ்சுண் டான்மால்
பயமடைந்தா னுமையுமுடல் பாதியானள்
அம்புவியைப் படைத்திடுவ தவமதேயென்
றயனுமன்ன மிறங்காம லலைகின்றானே. (ககங)

நாட்டுக்கு ளாட்டுக்கு நாலுகா லையாநின்
ஆட்டுக் கிரண்டுகா லானாலும்—நாட்டமுள்ள
சீர்மேவு தில்லைச் சிவனேயிவ் வாட்டைவிட்டுப்
போமோசொல் லாயப் புலி. (கககச)

தாண்டி யொருத்தி தலையின்மே லேறுளோ
பூண்டசெருப் பாலொருவன் போட்டானோ—மீண்டொருவன்
வையானோ வின்முறிய மாட்டானோ தென்புலியூர்
ஐயாநீ யேழையா னால். (ககரு)

கொங்குலவுந் தென்றில்லைக் கோவிந்தக் கோனிருக்கக்
கங்குல்பக லண்டர்பலர் காத்திருக்கச்—செங்கையிலே
ஓடெடுத்த வம்பலவா வோங்குதில்லை யுட்புகுந்தே
ஆடெடுத்த தெந்தவுபா யம். (ககசா)

பொன்னஞ் சடையறுகம் புல்லுக்கும் பூம்புனற்கும்
தன்னெஞ் சுவகையுறத் தாவுமே—அன்னங்கள்
செய்க்கமலத் தூற்றுலவுந் தில்லை நடராஜன்
கைக்கமலத் தூற்றமான் கன்று. (ககஎ)

ஆட்டுக் கிசைந்தவ ரம்பல வாண ரவர்க்கெதிரே
நீட்டிற்று மால்வட பாலினிற் காலென நீநினையேல்
சூட்டுற்ற முப்புரஞ் செற்றவர் தம்மைச் சுமந்தனுத்த
மாட்டுக்கென் னோவிடங் காணீட்டல் சொல்ல வழக்கில்லையே. ()

வில்லா லடிக்கச் செருப்பா லுதைக்க வெகுண்டொருவன்
கல்லா லெறியப் பிரம்பா லடிக்கவிக் காசினியில்
அல்லார் பொழிற்றில்லை யம்பல வாணர்க்கொ ரன்னைபிதா
இல்லாத தாழ்வல்ல வோவிங்ங னேயெளி தானதுவே. (ககக)

சத்தாதி யைந்தையுந் தாங்காத தெய்வந் தனிமறையும்
கத்தா வெனுந்தெய்வ மம்பலத் தேகண்டுங் கண்களிரு
பத்தான வன்மைந்தன் பொய்த்தேவி யைக்கொல்லப் பார்த்தழுத
பித்தான வன்றனை யோதெய்வ மாகப் பிதற்றுவதே. (கஉ0)

நச்சரவம் பூண்டதில்லை நாதரே தேவரீர்
பிச்சையெடுத் துண்ணப் புறப்பட்டும்—உச்சிதமாம்

காளமேன் குஞ்சரமேன் கார்க்கடல்போற் றொன்முழங்கு
மேளமேன் ராசாங்க மேன். (௧௨௧)

நடுவெழுத்தலங்காரம்.

†திருமால்வா கனநாவா யிராசியொன் று
சினைதெவிட்டார் மாதுலன்கோ லிலமிவ்வேழின்
உருவாமேழ் நடுவெழுத்து மெனக்குச் செய்தான்
உகந்துபதி ஞன்கினையுந் தானேகொண்டான்
ஒருபாகத் திருத்தினன் கையிலேற்றான்
ஒருமதலை தனக்களித்தா னுண்டான்பூண்டான்
பரிவாயொண் கரத்தமைத்தா னுகந்தானிந்தப்
பைம்பொற்றில் லையுளாடும் பரமன்றானே. (௧௨௨)

*தில்லைக்கா வக்குட் சிதம்பரனு ராட்டையெடுத்
தில்லைக்கா ணென்றுமழு வேந்தினர்—சொல்லக்கேள்
மெய்யிலே கண்டேன்யான் மீண்டுங்கே ளாயனுமே
நெய்யிலே கையிட்டா னே. (௧௨௩)

*ஆடெடுத்த தில்லை யனவரதத் தாண்டவனை
மாடெடுத்துப் போவதென்ன மாயமோ—நீடுமுயர்
வானத்தார் போற்றுகின்ற வண்மைச் சிதம்பரத்துத்
தானத்தார் பார்த்திருக்கத் தான். (௧௨௪)

*சித்தசனை முப்புரத்தைச் செந்தழலாய் வீழவொரு
பத்தினியைக் கொண்டெரியப் பண்ணினன்—நித்தம்
மறையோத வீற்றிருக்கு மண்டலமென் றில்லைப்
பிறைசூடும் வேணிப் பிரான். (௧௨௫)

*தில்லைக்குள் வாழுஞ் சிதம்பர ரேயும்மைச் செப்பவென்றால்
அல்லற் பிழைப்பே பிழைத்திருந் தீர்முப்பு ராதிகளை
வில்லைத் தொடுத்தெய்ய மாட்டாம லேயந்த வேளைதனில்
பல்லைத் திறந்துவிட் டெரித்து வோதும் படைத்திறமே. (௧௨௬)

*மாடுகிடப் பாத மனையா ளுடற்பாதி
தேடுதற்குப் பிள்ளை திளைக்கடம்பன்—நாடில்

---

† நாகாரி, கலம் கன்னி, கவடு, ஆரார், மாமன், பல்லி என்றபதங்களாம்.

அரவா பரணம்பூ ணம்பலத்தீர் பிச்சை
இரவாம னீரென்செய வீர். (கஉஎ)

மதுரை.

மாயனார் போற்று மதுரா புரிச்சொக்க
நாயனார் பித்தேறி னாரென்றே—நேயமாம்
கன்னன்மொழி யங்கயற்கட் காரிகையா ளையையோ
அன்னமிறங் காமலிருந் தாள். (கஉஅ)

துதிவாணி வீரம் விசையஞ்சந் தானந் துணிவுதனம்
அதிதா னியஞ்சவு பாக்கியம் போக மறிவழகு
புதிதாம் பெருமை யறங்குல நோவகல் பூண்வயது
பதினாறு பேறுந் தருவாய் மதுரைப் பராபரனே. (கஉகூ)

நல்ல தொருபுதுமை நாட்டிற்கண் டேனதனைச்
சொல்லவா சொல்லவா சொல்லவா—தொல்லை
மதுரைவிக்கி னேச்சுரனை மாதுமையாள் பெற்றாள்
குதிரைவிற்க வந்தவனைக் கொண்டு. (கங0)

கண்டீரோ பெண்காள் கடம்பவனத் தீசனார்
பெண்டீர் தமைச்சுமந்த பித்தனார்—எண்டிசைக்கும்
மிக்கான தங்கைக்கு மேலே நெருப்பையிட்டார்
அக்காளை யேறினா ராம். (கஙக)

மாட்டுக்கோன் றங்கை மதுரைவிட்டுத் தில்லைநகர்
ஆட்டுக்கோ னுக்குப்பெண் டாயினாள்—கேட்டிலையோ
குட்டி மறிக்கவொரு கோட்டானை யும்பெற்றாள்
கட்டுமணிச் சிற்றிடைச்சி காண். (கஙஉ)

கூடல் புனல்வாயில் குற்றால மாப்பனூர்
ஏடகநெல் வேலி யிராமேசம்—ஆடானை
தென்பரங்குன் றஞ்சுழியல் தென்றிருப்புத் தூர்கானை
வன்கொடுகுன் றம்பூ வணம். (கஙங)

பண்புளருக் கோர்பறவை பாவத்திற் கோரிலக்கம்
நண்பிலரைக் கண்டக்கா னற்காலி—திண்புவியை
ஆள்வார் மதுரை யழகியசொக் கர்க்கரவம்
நீள்வா கனநன் னிலம். (கஙச)

போலநிற மாவார்க்குப் பூணார மாவாரை
ஏலவதை செய்தா லியல்பாமோ—சாலப்
பழிக்கஞ்சுந் தென்மதுரைப் பாவையீ ரெட்டு
விழிக்கஞ்ச னீசனலே வேந்து. (கஙரு)

கடம்பவனச் சொக்கர்க்குக் கண்ணன்றான் வேறோ
இடம்பெரிய கண்ணொன்றை யீந்தான்—உடம்பதனிற்
சொம்பாதி யானன் சுமக்க வெருதானன்
அம்பானன் றேனியுமா னன். (கஙசா)

விள்ளப் புதுமையொன் றுண்டால வாயினின் மேவுதென்னன்
பிள்ளைக் கொருகுலே மூன்றே குரும்பை பிடித்ததிலே
கொள்ளிக்க ணன்றிட்டி யாலோர் குரும்பை குறைந்தயிர்தம்
உள்ளிற் பொதிந்த விரண்டிள நீர்கச் சுறைந்தனவே. (கஙஎ)

*காண்டரிய மேனியுமொண் கந்தரமுஞ் சுந்தரனுய்
ஆண்டதுவு மேனிக் கமைந்ததுவு—நீண்டமுகின்
மைக்கலிங்க மாகமணி மாடமணி மாமதுரைச்
சொக்கலிங்க மென்னுஞ் சுகம். (கஙஅ)

திருக்கச்சி.

நேற்றிரா வந்தொருவ னித்திரையிற் கைப்பிடித்தான்
வேற்றாரா னென்று விடாயென்றேன்—ஆற்றியே
கஞ்சிகுடி யென்றான் களித்தின்று போவென்றேன்
வஞ்சியரே சென்றான் மறைந்து. (கஙகூ)

மாக்கைக் கிரங்குங் குருகும் வளர்சக்ர வாகப்புள்ளும்
தாக்கச் சரபங் குழைந்ததெவ் வாறு சகதலத்தை
ஆக்கிப் பெருக்கித் திருவறச் சாலையி லன்னமிட்டுக்
காக்கைக் கொருகொக்கின் கீழே யிருக்குங் கருங்குயிலே. ()

*எருதாய்ச் சுமந்துபோ யேத்திக்கண் சாத்திப்
பொருதாழி வாங்கினதும் பொய்யோ—பெருமாள்
திருநாம மென்றுநெற்றி தீட்டியதுங் கச்சி
ஒருமா விலக்கமல்ல வோ. (கசஂக)

*ஆறு தொருக்காலு மையோவே கம்பருக்கு
மாறு வடுவாய் மறையாதே—பேறுகச்
செங்கையினு லேயழுத்திச் செய்யகஞ்சிக் காமாட்சி
கொங்கையி னலிட்ட குறி. (கசஉ)

*எவர்தமக்கும் ஞானகுரு வேகாம்ப ரேசர்
அவர்தமக்கு ஞானகுரு வாரோ—உவரியணை
கட்டினன் பார்த்திருக்கக் காதலவன் றன்றலையிற்
குட்டினன் றனே குரு. (கசங)

முக்கா லுக் கேகாமுன் முன்னரையில் வீழாமுன்
அக்கா லரைக்கால்கண் டஞ்சாமுன்—விக்கி
இருமாமுன் மாகாணிக் கேகாமுன் கச்சி
ஒருமாவின் கீழரையின் றோது. (கசச)

திருவாரூர்.

ஆடாரோ பின்னையவ ரன்பரெலாம் பார்த்திருக்க
நீடாரூர் வீதியிலே நின்றுதான்—தோடாரும்
மெய்க்கே பரிமளங்கள் வீசுந் தியாகேசர்
கைக்கே பணமிருந்தக் கால். (கசரு)

ஆறு ரிலேயே யயனுந் திருமாலும்
காண ரடிமுடிமுன் காண்பதற்கு—மேனாள்
இரவுதிரு வாரூரி லெங்கைதபிரான் சென்ற
பரவைதிரு வாயிற் படி. (கசசா)

திருந்தா டரவணியுந் தென்கமலை யீசர்
இருந்தாடா தென்செய் திடுவார்—பொருந்த
ஒருகாலே யல்லவே யொண்டொடிக் காவன்
திருகாலுஞ் சந்துபோ னல். (கசஎ)

அன்னவயல் சூழ்திருக்கு மாரூரா னெஞ்சத்தில்
இன்னம் வயிர மிருப்பதா—முன்னமொரு
தொண்டன்மக னைக்கொன்றாஞ் சோழன்மக னைக்கொன்றும்
சண்டன்மக னைக்கொன்றுந் தான். (கசஅ)

திருவொற்றியூர்.

ஆடுந் தியாகரே யாட்டமேன் றூனமக்கு
வீடுஞ் சமுசார மேலிட்டுக்—கூடிச்
செருக்கிவிளை யாடச் சிறுவரிரண் டாச்சே
இருக்குமூ ரொற்றியாச் சே. (கசகூ)

பாரூ ரறியப் பலிக்குழன் றீர்பற்றிப் பார்க்குமிடத்
தோரூரு மில்லை யிருக்கவென் றூலுமுள் ளூருமொற்றி
பேரூ ரறியத் தியாகரென் றேபெரும் பேரும்பெற்றீர்
ஆரூரி லேயிருப் பீரினிப் போய்விடு மம்பலத்தே. (கருO)

மாயூரம்.

வள்ள லெனும்பெரிய மாயூர நாதருக்கு
வெள்ளிமலை பொன்மலையு மேயிருக்கத்—தெள்ளுமையாள்
அஞ்சலஞ்ச லென்றுதின மண்டையிலே தானிருக்க
நஞ்சுதனை யேனருந்தி னார். (கருக)

புள்ளிருக்குவேளூர்.

மண்டலத்தி னூளும் வயித்தியராய்த் தாமிருந்து
கண்டவினை தீர்க்கின்றார் கண்டீரோ—தொண்டர்
விருந்தைப்பார்த் துண்டருளும் வேளூரென் றாதர்
மருந்தைப்பார்த் தாற்சுத்த மண். (கருஉ)

வாதக்கா லாந்தமக்கு மைத்துனர்க்கு நீரிழிவாம்
போதப் பெருவயிறும் புத்திரனுக்—கோதக்கேள்
வந்தவினை தீர்க்க வகையறியார் வேளூரார்
எந்தவினை தீர்ப்பா ரிவர். (கருரு)

தீத்தானுன் கண்ணிலே தீத்தானுன் கையிலே
தீத்தானு முன்றன் சிரிப்பிலே—தீத்தானுன்
மெய்யெலாம் புள்ளிருக்கும் வேளூரா வுன்னையெந்தத்
தையலா ளெப்படிச்சேர்ந் தாள். (கருச)

மருவிருக்கும்வேளூரின்வயித்திமகன்குறமகளைமணந்தானென்றே
உருகியரனஞ்சுண்டானுமையவளுந்தவம்புரிந்தாளுயர்மான்மேனி
கருகிமிகமண்டின்றன்கமலன்முகநாலானன்கடவுளோர்கள்
இருவிழியுமிமையாமலிரவுபகலுறங்காமலிருக்கின்றாரே. (கருரு)

திருவண்ணாமலை.

சட்டியிலே பாதிமற்றைச் சட்டுவத்தி லேபாதி
இட்டகலத் திற்பாதி யிட்டிருக்கத்—திட்டமுடன்
ஆடிவந்த சோணேச ரன்றழைத்த போதுபிள்ளை
ஓடிவந்த தெவ்வா றுரை. (கருரு)

*நடக்கவறி யாதுகா லானு முடக்கிக்
கிடக்கவறி யும் புன்னீர் கேளா—விடக்கை
யரைப்பணியார் சோணகிரி யத்தனா ரோட்டில்
இரப்புணியா ரேறு மெருது. (கருஎ)

கங்கைகொண்டசோழேச்சுரம்.

காவலவ னெங்கள் கனவைப்பாஞ் சோழேசன்
மாவலி கங்கை மணிவாரி—ஆவனலென்
றப்புளங்கை தோய்க்க வதில்வா ரியமுத்தைக்
கொப்புளமென் றாதுங் குரங்கு. (கருஅ)

திருவாலங்குடி.

ஆலங் குடியானை ஆலால முண்டானை
ஆலங் குடியானென் றார்சொன்னார்—ஆலங்
குடியானே யாயிற் குவலயத்தோ ரெல்லாம்
மடியாரோ மண்மீதி லே. (கருக)

கடுக்கை முடியானே காலைமுடித் தான்போற்
கடுக்கைமுடி யானிற் காணார்—கடுக்கை
உரலடிமீ துற்றானு மும்பர்களு மற்றும்
உரலடி மீதுற்றானு மூர். (கசுo)

திருவிடைமருதூர்.

கண்ண னிடுங்கறியுங் காட்டுசிறுத் தொண்டரன்பிற்
பண்ணுசிறு வன்கறியும் பற்றாதோ—தண்ணேடு
மட்டியையுஞ் சோலை மருதீச ரேபன்றிக்
குட்டியையேன் றீத்தீர் குறித்து. (கசுக)

திருத்துருத்தி.

காலையிலும் வேலை கடையக் கயிறாகும்
மாலையிலும் பூமுடித்து வாழுமே—சோலைசெறி

செய்யிலா ரம்பயிலுஞ் செந்துருத்தி மாநகர்வாழ்
பொய்யிலா மெய்யரிடும் பூண். (கஙஉ)

குடந்தை.

அம்பாகி ஞான்பாத மன்னுபிடித் தாயவற்குன்
செம்பாதங் காட்டாத் திறமென்னோ—உம்பர்தொழும்
நம்பகோ ணத்தானே நாகச் சிலைவளைத்த
கும்பகோ ணத்தானே கூறு. (கஙங)

*கப்பணந்தந் தான்குடந்தைக் கார்வேளாண் காசிதனில்
உப்பணந்தந் தானிரந்த மோதுவான்—முப்பணமும்
வப்பணமாய் மாற்றி மணிக்குழையிற் றாக்கினேன்
அப்பணம்போ லாவா ரவர். (கஙச)

திருவீழிமிழலை.

காலாற் படியளக்குங் கண்ணிடந்து பூசிக்கும்
சேலாங் கமடமாஞ் சிங்கமாம்—பாலாகும்
ஆழியப்பி லேதுயிலு மைவர்க்குத் தூதாகும்
வீழியப்ப ரேறும் விடை. (கஙரு)

திருவிரிஞ்சை.

* வேண்டிய சைவனார் விட்டதூ றாக்கோமுன்
பாண்டியனார் கையிலடி பட்டதற்கோ—ஆண்டவரே
வானோர் புகழ்விரிஞ்சை மார்க்க சகாயரே
ஏனோ தலையிறைஞ்சி னீர். (கஙசா)

திருவீரட்டானம்.

* இவரோவீ ரட்ட ரெனுநாம முள்ளோர்
இவரோ வழுவூரி லீசர்—இவரோ
கடத்தடக்க தத்துறப்பி டித்திழுத்த முத்தி
அடித்தறுத்து ரித்துடுத்த வர். (கஙஎ)

திருவானைக்கா.

*கல்லா லடித்ததற்கோ காலா லுதைத்ததற்கோ
வில்லா லடித்ததற்கோ வெட்கினீர்—சொல்லீரால்

டஞ்சுதனைச் சூழு மதிலானைக் காவாரே
நஞ்சுதனைத் தின்றதென்முன் னாள். (கரு அ)

திருமழபாடி.

*வலியமழ பாடி வயித்தியநா தற்குத்
தலைவலியா நீரேற்றந் தானும்—குலைவலியாம்
கையோடு சூலையாங் கால்வாத மாங்கண்மேல்
ஐயோ வெழுஞாயி றும். (கரு௯)

திருவரங்கம்.

பாங்கு பெருந்திரு வைந்நூற் றிரட்டிப் பணவிடையில்
தூங்கு மதிலொரு மாவேற்ற முண்டு சுரர்முனிவர்
ஆங்கவர் செப்பிற் கடங்கா துலக மனைத்தும்பெறும்
ஓங்கு மரங்கத் திருப்பெட் டகத்து ளொருமணியே. (கஎ0)

திரண்டிமை யோர்தொழுந் தென்னரங் கேசர்முன் செங்கைகளா
றிரண்டுடை யோனு மெதிர்சென்ற தாலெதிர்ந் தார்தமைக்கண்
டுருண்டெழு மைவர்க்குத் தேரூர் பவன்கொ ளணைவெருண்டு
புரண்டொரு புற்றைக் கடந்தொரு புற்றிற் புகுந்ததுவே. (கஎக)

திருமோகூர்.

பொன்னனைவா ளரக்கனைநூற் றுவரைக் காவைப்
பொருசிலையைக் கனைகடலைப் பொன்ன னீன்ற
நன்மகற்காய்ச் சுரர்க்காயை வருக்காய்க் காதல்
நட்பினுக்காய்ச் சானகிக்காய் நடவைக் காக
மன்னுகிரால் வடிக்கணையால் வளையாற் புள்ளால்
வயங்குதோள் வலியால்வா னரங்களாலும்
முன்னுடற்கி றிச்சிரங்கொண் டமரில் வீழ்த்தி
முதலொடுங்கொண் டிறுத்தடைத்த மோகூரானே.(கஎஉ)

திருமாலிருஞ்சோலை.

சதுரரங்கர் சங்கத் தழகர்செங்கைச் சங்கை
அதரமிசை வைத்திலரே யாயின்—முதலை
வருங்குளத்தின் முண்டகங்கை வைப்பரன்றே யன்று
பொருங்களத்தி னூற்றுவர்முன் போய். (கஎ௩)

*மீனமுக மாமைமுக மேதினியெ லாமிடந்த
ஏனமுகஞ் சிங்கமுக மென்னுமல்—ஞானப்
பழகரென்றுஞ் சோலைமலைப் பண்பரென்று மும்மை
அழகரென்றும் பேரிட்டார் யார். (கஎச)

திருவத்திகிரி.

எட்டொருமா வெண்காணி மீதே யிருந்தகலைப்
பட்டொருமா நான்மாவிற் பாய்ந்ததே—சிட்டர்தொழுந்
தேவாதி தேவன் றிருவத்தி யூர்வரதன்
மாவேறி வீதிவரக் கண்டு. (கஎரு)

திருமங்கை.

*ஓரொருமா வொன்றுமா வொன்பதுமா வின்கலையை
ஈரொருமா மும்மாவுக் கீந்ததே—பாரறியப்
பொன்மானின் பின்போன பூமங்கை யாள்வாரைக்
கன்மாவின் வீதிவரக் கண்டு. (கஎகா)

திருக்கண்ணபுரம்.

உத்திரத்துக் கோர்நா ளுரோகணிக்குப் பத்தாநாள்
சித்திரைக்கு நேரே சிறந்தநாள்—எத்திசையும்
காராரும் பூஞ்சோலைக் கண்ணபுரம் வாழ்சவுரி
நாரா யணன்பிறந்த நாள். (கஎஎ)

கண்ணபுரங் கோயிற் கதவடைத்துத் தாழ்போட்டார்
மண்ணையுண்டார் வெண்ணெயுண்ட மாயனார்—எண்ணும்
சிரக்கப் பறையேந்திச் செங்காட்டி லீசர்
இரக்கப் புறப்பட்டா ரென்று. (கஎஅ)

கண்ணபுர மாலே கடவுளிலு நீயதிகம்
உன்னிலு நானதிக மொன்றுகேள்—முன்னமே
உன்பிறப்போ பத்தா முயர்சிவனுக் கொன்றுமில்லை
என்பிறப்பெண் ணத்தொலையா தே. (கஎகூ)

வாணியன் பாடிட வண்ணான் சுமக்க வடுகன்செட்டி
சேணியன் போற்றக் கடற்பள்ளி முன்றொழக் திங்கரும்பைக்
கோணியன் வாழ்த்தக் கருமான் றுகிற்றனைக் கொண்டணிந்த
வேணிய னானவன் றட்டான் புறப்படல் வேடிக்கையே. (கஅO)

கரியொன்று பொன்மிகும் பையேறக் கற்றவர் சூழ்ந்துதொழ
எரியொன்று செல்வன் றுலாத்தினி லேற விருண்டமஞ்சு
சொரிகின்ற நாகமின் சோற்றினி லேறித் தொடர்ந்துவரா
நரியொன்று சொந்தக் கனலேறி வந்தது நங்களத்தே. (௧௮௧)

நீறாவாய் நெற்றி நெருப்பாவா யங்கமிரு
கூறாவாய் மேனி கொளுந்துவாய்—மாறாத
நட்டமா வாய்சோறு நஞ்சாவாய் நாயேனை
இட்டமாக் காப்பா யினி. (௧௮௨)

கூற்றுவனை வின்மதனை யரக்கர் கோவைக்
கூனிலவைக் குஞ்சரத்தை யிஞ்சிமூன்றை
ஏற்றுலகின் புறவுருவ மாளத் தோள்கள்
இறவெறிப்ப விமையப்பெண் வெருவ வேவக்
காற்றொழிலா னயனத்தால் விரலாற் கற்றைக்
கதிர்முடியாற் கரதலத்தாற் கணையாற் பின்னும்
ஊற்றழிய வுதைத்தெரித்து நெரித்துச் சூடி
உரித்தெரித்தா னவனென்னை யுடைய கோவே. (௧௮௩)

ஏறுகட்டியகொட்டிலரங்கமேயீரிரண்டுமுகன்வாயிலாயமே
மாறுகண்ணப்பன்வாய்மடைப்பள்ளியேவாய்த்தவோடைதிருமால்வதனமே
வீறுசேர்சிறுத்தொண்டனில்லாளுந்திவேட்டநற்கறிகாய்க்கின்றதோட்ட
நாறுபூம்பொழில்சூழ்தில்லையம்பலநாரிபாகற்குநாடகசாலையே. [மே (௧௮௪)

* திருவிருத்தி நாதர் திருவளியா தென்னைக்
கருவிருத்தி யென்னபலன் கண்டார்—எருதுபோய்க்
கோட்டிபத்தி லேறினரோ கோவணம்போய்ப் பட்டாச்சோ
ஓட்டிலிரந் துண்டதும்போச் சோ. (௧௮௫)

‡ அப்ப னிரந்துண்ணி யாத்தாண் மலைநீலி
ஒப்பரிய மாம னுறிதிருடி—சப்பைக்கால்
அண்ணன் பெருவயிற னாறுமுகத் தானுக்கிங்
கெண்ணும் பெருமை யிலை. (௧௮௬)

---

‡ அப்ப னிரந்துண்ணி யாத்தா ளறநீலி
ஒப்பரிய மாம னுறிதிருடி—செப்பரிய
பட்டணங்க டோறும் பருத்தவீ திக்குளுறை
குட்டுணிக்கிங் கேது குலம், என்றும் வழங்குகிறது.

வண்ணங் கரியனென் றும் வாய்வேத நாறியென் றும்
கண்ணனிவ னென்றுங் கருதாமல்—மண்ணை
அடிப்பதுமத் தாலே யளந்தானை யாய்ச்சி
அடிப்பதுமத் தாலே யழ. (கஅஎ)

*குரங்கனலில் வீழ்ந்துவெறி கொண்டுதேள் கொட்டக்
கரஞ்செறியப் பாம்பலவன் கவ்வி—விரைந்துபேய்
பற்றவே கள்ளுண்டு பச்சைமிள கைக்கடித்தால்
எத்தனைபார் சேட்டைக் கிடம். (கஅஅ)

*சோற்றை யரசிலைமேற் றாவி வழுதுணங்காய்க்
கீற்றை யதன்மேற் கிடத்தியே—ஆற்றிமிக
அப்பச்சி கண்ணே யரசே யருந்தென்பள்
குப்பச்சி யாயி குணம். (கஅக)

கடைமொழி மாற்றாகப் பாடியன.

மாடுதின்பான் பார்ப்பான் மறையோது வான்குயவன்
கூடிமிக மண்பிசைவான் கொல்லனே—தேடி
இரும்படிப் பான்செக்கா னெண்ணெய்விற்பான் வண்ணான்
பரும்புடவை தப்பும் பறை. (ககூO)

ஆயனுக்குக் கண்மூன்று மாதிசிவ னுக்கிருகண்
மாயனுக்குச் செங்கையிலே மான்மழுவாம்—நேயமுடன்
சங்கரற்குச் சங்காழி தான்மா லுக் காலமாம்
மங்கையிடத் தாற்காரு மண். (ககூக)

கொன்றை மலர்தரித்தான் கோபாலன் கோலெடுத்து
நின்றுகுழ லூதினா னீள்சடையோன்—பொன்றிகழும்
அக்கணிந்தான் மாய னரவணையிற் கண்வளர்த்தான்
சிக்கலிலே வாழுஞ் சிவன். (ககூஉ)

கடம்பற்கெண் டோளயற்குக் கண்பதினோ் தாமால்
கடம்பற்கே நால்வாய்கை யைந்தே—கடம்பற்கோ
டானைமுகற் காயிரங்கண் ணாகண்ட லற்கிலம்பா
டானைமுகற் காறிரண்டு கை. (ககூந)

வெண்ணெய் திருடியுண்ட வேணியரா னிருக்கக்
கண்ணன்மேல் வைத்த களவேது—பெண்ணைத்

தலையிற் சுமந்தான்மால் சர்ப்பத்தி லேறி
அலையிற் றுயின்றா னரன். (௧௯௪)

*இந்திரையை மார்பில்வைத்தா னீச னுமையையிடத்
தந்தி பகலமைத்தா னம்புயத்தோன்—கந்தமிகு
வெண்டா மரைமயிலை வேண்டிவைத்தா னாவிலுல
குண்டுமிழ்ந்த தாமரைக்கண் ணோன். (௧௯௫)

*அன்னந் திருமாலுக் காங்கருடன் சங்கரற்காம்
பன்னிடப மிந்திரற்காம் பார்க்குங்காற்—றன்னு
மதவா ரணமளகை மன்னனுக்காம் பஞ்ச
கதிசேர் புரவிவிதிக் காம். (௧௯௬)

ஒருமெய்யான் வந்த செய்யுட்கள்.

தாதிதூ தோதீது தத்தைதூ தோதாது
தூதிதூ தொத்திதத் தூததே—தாதொத்த
துத்திதத் தாதே துதித்துத்தேத் தொத்தீது
தித்தித்த தோதித் திதி. (௧௯௭

தத்தித்தா தூதுதி தாதூதித் தத்துதி
துத்தித்து தைதி துதைதத்தா—தூதுதி
தித்தித்த தித்தித்த தாதெது தித்தித்த
தெத்தாதோ தித்தித்த தாது. (௧௯௮)

‡காக்கைக்கா காகூகை கூகைக்கா காகாக்கை
கோக்குக்கூ காக்கைக்குக் கொக்கொக்க—கைக்கைக்குக்
காக்கைக்குக் கைக்கைக்கா கா. (௧௯௯

ஓரினச்செய்யுட்கள்.

‡துடித்துத் தடித்துத் துடுப்பெடுத்த கோடல்
தொடுத்த தொடைகடுக்கை பொற்போற்—பொடித்துத்
தொடிபடைத்த தோடடித்த தோகைகூத் தாடக்
கடிபடைத்துக் காட்டிற்றுக் காடு. (௨௦௦)

‡மானமே நண்ணா மனமென் மனமென்னும்
மானமான் மன்னா நனிநாணும்—மீனமா

‡ இக்குறியிட்டிருக்கிற செய்யுட்கள் தண்டியலங்காரத்துள் உதாரண மாகக் காட்டப்பட்டிருக்கின்றன.

மாறு மினன்மின்னி முன்முன்னே நண்ணினும்
மாறு மணிமேனி மான். (உ0௧)

‡விரவலராய் வாழ்வாரை வெல்வா யொழிவா
யிரவலவா வேலை யொலியே—வரவொழிவா
யாயர்வா யேயரிவை யாருயிரை யீசாவோ
வாயர்வாய் வேயோ வழல். (உ0உ)

*வருந்தாத நங்கள் குலத்துப் பிராமணி வண்டிகைப்பெண்
சொரிந்தா ளொருபிடி நீர்ச்சோற்றை ராத்திரிச் சூளைவைத்த
கரும்பானை விண்டது போலேதன் பண்டத்தைக் காட்டிக்கொண்டே
விருந்தா ளதுகண்டு சோறிறங் காமல் விழித்தனனே. (உ0௩)

*காணத் தொழப்புகழக் கண்ணுங்கை யும்வாயும்
சேணிந் திரன்வாணன் சேடன்போல்—வேணும்
பனகசய னத்துறைவோன் பாரிடத்துக் காணுக்
கனகசபை யிற்றண்டைக் கால். (உ0௪)

ஆகச்செய்யுள் ௬0௧.

---

## அதிமதுரகவிராயர்.

இவர் திருமலைராயன் சம்ஸ்தானத்தில் அறுபத்துநான்கு கனகதண்டிகைப் புலவர்களைக் கற்றுச்சொல்லிகளாக வைத்திருந்த வித்துவ சிரேட்டர். இவர் செய்ததாக ஓர் நூலுங் கண்டிலம். இவரைப்பற்றிய பிறவரலாறொன்றுந் தெரிந்திலது.

காளமேகப்புலவ ரெதிர்த்தபோ திவர் கூறியது.

மூச்சு விடுமுன்னே முந்நூறு நானூறும்
ஆச்சென்று லாயிரம்பாட் டாகாதோ—பேச்சென்ன
வெள்ளைக் கவிக்காள மேகமே நின்னுடைய
கள்ளக் கவிக்கடையைக் கட்டு. (௧)

ஆகச்செய்யுள் ௬0உ.

---

## திருமழிசையாழ்வார்.

இவர் பார்க்கவ முனிவரது மனைவி கருப்பத்தில் உற்பவித்துத் தொண்டை நாட்டிலே திருமழிசைத் திருப்பதியிலே திருவாளன், பங்கயச் செல்வியார் என்பார் வளர்க்க வளர்ந்தவர். இவர்பா லன்புற்றுப் பாலமுது கொடு

த்துவந்த கிழவருக்கு இவர் திருவருளாற் பிறந்த கணிகண்ணன் என்பவர் இவரிடம் அருளுபதேசம் பெற்ற பேரன்பராவர். நாலாயிரப் பிரபந்தத்தி லுள்ள திருச்சந்தவிருத்தம், நான்முகன் திருவந்தாதி, இவர்செய்த நூல்கள். இவரே சிவவாக்கியராயிருந்து பின்னர் சைவந்தணந்து வைணவந் தழுவினர் என்ப.

இவாறிந்த மதவாராய்ச்சிகளைக் குறித்துரைத்தது.

*சாக்கியங் கற்றோஞ் சமண்கற்றோஞ் சங்கரனார்
ஆக்கிய வாகமநூ லாராய்ந்தோம்—பாக்கியத்தால்
செங்கட் கரியானைச் சேர்ந்தியாந் தீதிலோம்
எங்கட் கரியதொன் றில். (க)

பல்லவராயனால் நாட்டைவிட்டு நீக்கப்பட்டுச் செல்லுங் கணிகண்ண ருடன்போகத் திருவெஃகாவிற் பள்ளிகொண்ட பெருமாளும் எழுந்துவரப் பாடியது.

கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீயிங் கிராதே—துணிவுடைய
செந்நாப் புலவன்யான் செல்கின்றே னீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள். (உ)

பின்னர் அவ்வரசன் வந்து வணங்கித் தன்னூரிலிருக்க விரும்பியபோது பாடியது.

*கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீயிருக்க வேண்டும்—துணிவுடைய
செந்நாப் புலவனும் போக்கொழிந்தே னீயுமுன்றன்
பைந்நாகப் பாய்படுத்துக் கொள். (ங)

பெரும்புலியூரில் நடந்தவோர் யாகத்தி லிவருக்கு அக்ரபூசை செய்ததைச் சிலர் இகழ்ந்தபோது பாடியது.

*அக்கரங்க ளக்கரங்க ளென்றேயாவ தென்கொலோ
இக்குறும்பை நீக்கியென்னை யீசனுக்க வல்லையேல்
சக்கரங்கொள் கையனே சடங்கர்வா யடங்கிட
உட்கிடந்த வண்ணமே புறம்பொசிந்து காட்டிடே. (ச)

ஆகச்செய்யுள் ௬௦௬.

## கணிகண்ணன்.

இவர் திருமழிசை நகரத்தில் நான்காம் வருணத்தில் திருமழிசையாழ்வார் திருவருளால் அவதரித்தவர். பாலப்பருவத்தே சகலகலா வல்லராய் விளங்கி அவ்வாழ்வாரிடத்தே உள்ளன்புடையராய்க் காஞ்சிநகரில் உடனுறையுநாளில் அவ்வூரரசனான பல்லவராயன் இவரையழைத்துத் தன்மீது கவிபாடும்படி சொல்ல இவர் பகவத் விஷயமாகப்பாடுவதன்றி நரஸ்துதி செய்யேனென்றனர். அரசன் தன்னைப்பாடும்படி நிர்ப்பந்தஞ்செய்ததால் அடியில்வரும் பாடலைப்பாடி ஆழ்வார்க்கறிவித்து அவ்வூரைவிட்டுப் புறப்படவே ஆழ்வாரும் புறப்பட்டதுடன் கண்ணபிரானையும்புறப்படும்படி பாடினார். அவ்வாறே எல்லாருஞ்செல்ல நகர்வளங்குன்றுவதறிந்த வேந்தன் வந்து பணிந்துவேண்ட யாவரும் மீண்டு வந்துறைந்தனரென்று கூறுவர். திருமழிசையாழ்வார் காலமும் இவர்காலமும் ஒன்றென்பது வெள்ளிடை.

பல்லவராயன் தன்னைப்பாடச்சொன்னபோது மறுத்துப்பாடியது.

ஆடவர்க ளெங்ங னகல்வா ரருள்சுரந்து
பாடகமு மூரகமும் பாம்பணையும்—நீடியமால்
நின்றா னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ
மன்றார் பொழிற்கச்சி மாண்பு. (க)

ஆகச்செய்யுள் கூ௭௭.

---

## வரதுங்கபாண்டியன்.

இவர் கல்வியிற் பிரசித்திபெற்று மதுராபுரியிற்செங்கோலோச்சிய அதிவீரராம பாண்டியர்க்குச் சோதரர். இவர்க்காசிரியர் வேம்பத்தூர் ஈசான முனிவர். பிரமோத்தர காண்டம், கொக்கோகம் இவர் செய்த நூல்கள் இவரைப்போலவே இவர் மனைவியாரும் கல்வியிற் சிறப்புற்றிருந்தனரென்ப. மரணகாலத்தில் இவர்மனைவி பயப்படுகிறீரோவென்று கேட்டபோது பாடியது.

அஞ்சலென்ற கரதலமுங் கணபணக்கங் கணமும்
அரைக்கிசைந்த புலியுடையு மம்புலிச்செஞ் சடையும்
கஞ்சமலர்ச் சேவடியுங் கனைகழலுஞ் சிலம்புங்
கருணைபொழி திருமுகமுங் கண்களொரு மூன்றும்
நஞ்சையுண்ட மணிமிடறு மூன்நூலு மார்பும்
நலந்திகழ்வெண் ணீற்றொளியு மறிமானு மழுவும்

பஞ்சடிச்சிற் றிடையுமையா ளொப்பனைபா கமுமாய்ப்
பால்வண்ண னுளத்திருக்கப் பயமுண்டோ வெமக்கே. (க)
ஆகச்செய்யுள் கூ0அ.

---

## இவர் மனைவி சொல்லியது.

ஆக்கையெனும் புழுக்குரம்பை யணைந்தனையாப் பொருளை
யருளொளியைப் பராபரத்துக் கப்புறமா மறிவை
நீக்கமற மயிர்முனைக்கு மிடமறவெங் கெங்கும்
நிறைந்துநின்ற முழுமுதலை நினைவிலெழுஞ் சுடரைப்
பாக்கியங்கள் செய்தநந்தந் தவக்குறைகள் முடிக்கும்
பழவடியார் தமக்குதவும் பசுந்துணர்க்கற் பகத்தை
வாக்குமன விகற்பத்தா லளவுபடா வொன்றை
மாசற்ற வெறுவெளியை மனவெளியி லடைப்பாம். (க)

அதிவீரராமபாண்டியன் இவரைப் பகைத்தபோது பாடியது.

செஞ்சுடரின் மைந்தனையுந் தென்னிலங்கை வேந்தனையும்
பஞ்சவரிற் பார்த்தனையும் பாராதே—விஞ்சு
விரதமே பூண்டிந்த மேதினியை யாண்ட
பரதனையும் ராமனையும் பார். (உ)

கணவன் பிரிந்தபோது சொல்லியது.

*என்னையிவ்வா றவர்மறந்தும்யானவரைமிகநினைந்திங்கிருந்துவாட
முன்னைவினைப்பயன்றானோவப்பிறப்பிற்செய்ததவமுடிந்தவாறோ
கன்னன்மதனபிராமன்வரதுங்கராமனியற்காசிநாட்டில்
அன்னவயற்குருகினங்காளினியெவ்வாறுயிர்தரித்திங்காற்றுமாறே.

*செப்பாருமுகிழ்முலையாரெல்லாருங்கணவருடன்சேர்ந்துவாழ
ஒப்பாருமில்லாவென்கணவனுடன்யான்கூடியுறவாடாமல்
வெப்பாலுமிகுகாமத்துயராலுநாடோறுமெலிந்துவாடி
இப்பாடுபடவென்றோவிறையோனென்றலையேட்டிலெழுதினனே. ()

*எண்டிசாமுகத்துந்திங்களிளநிலாவெள்ளங்காயக்
கொண்டமால்பெருகுந்தோறுங்கொழுங்கணீர்முலையிற்சோரப்
பண்டுநாமறியாக்காமத்துயரினாற்படுவதெல்லாம்
வண்டுகாளுரையீருங்கள்வரதுங்கராமனுக்கே. (ரு)

ஆகச்செய்யுள் கூகஙட.

## ஓர்கழைக்கூத்தி.

இவள் கழையேறி விச்சுளிப்பாய்ச்சல் என்னும் வித்தை யாடுவதில் மிகச் சமர்த்துள்ளவளென்றும், பாண்டியனவையில் அவ்வித்தையை ஒரே காலத்திலிருமுறைகாட்டினதி லிறந்தனளென்றும் சொல்லுவர். இவள் சரிதம் மற்றேதுந்தெரிந்திலது.

இவள் அயன்றைப்பதிச் சடையப்பமுதலியார்மேற் பாடியன.

இரவலாளரே பெருந்திருவுறுக
அரவுமிழ்மணியு மலைகடலமிழ்தும்
திங்கட்குழவியுஞ் சிங்கப்பாலும்
குதிரைமருப்பு முதிரைவாலும்
ஈகெனமொழியினு மில்லெனமொழியான்
சடையனையயன்றைத் தலைவனைநீர்போய்
உடையதுகேண்மின் உறுதியுள்ளோரே. (க)

மாருன் றனையபொற் றோளான் வழுதிமன் வான்கரும்பின்
பாகொன்று சொல்லியைப் பார்த்தெனைப் பார்க்கிலன் பையப்பையப்
போகின்ற புள்ளினங் காள்புழற் கோட்டம் புகுதுவிரேல்
சாகின் றனளெனச் சொல்லீ ரயன்றைச் சடையனுக்கே. (உ)

ஆகச்செய்யுள் கூகஉ.

---

## வீரன் என்னும் ஆசுகவிராயர்.

பல்வளமுஞ் செறிந்த பாண்டிநாட்டையே சனனதேயமாகக்கொண்ட இவர் அரிச்சந்திர புராணமியற்றி ஏறக்குறைய முந்நூறு வருடங்கட்கு முன்னர் திருப்புல்லாணி திருமால் சந்நிதியில் அரங்கேற்றி கற்றோரா னன்கு மதிக்கப்பட்டுப் பரிசுபெற்றனர்.

இவர் காலாலுதைத்தும் வருந்தாது பல்லக்குப் பரிசுகொடுத்த கச்சியப்பமுதலியார்மீது பாடியன.

மண்படுமோ வெய்யிலிலே வாடுமோ புல்லரிரு
கண்படுமோ வன்பாகக் கற்றவர்கள்—மண்புகழ
மெச்சியப்பா லும்புகழும் வீறுவல்லை யாளவந்த
கச்சியப்ப னையுதைத்த கால். (க)

*கடல்கிழிய வோடுங் கலம்போல வொன்னார்
உடல்கிழிய வொள்வாள் விதிர்த்து—மடல்கிழியும்
பைம்பொற்றார் மன்னர் படைநடுவே யோடிற்றே
செம்பொற்றண் டேந்தினன் றேர். (உ)

ஆகச்செய்யுள் கூகஎ.

---

## சத்திமுத்தப்புலவர்.

சத்திமுத்தம் என்னும் ஊரில் வசித்த காரணத்தால் அவ்வூர்ப்பெயரையே பெற்ற இப்புலவரதியற்பெயர் சாதி முதலியவற்றி லொன்றுந் தெரிந்திலது. இவர் செய்ததாக ஓர் நூலையுங் கண்டிலம். இவர் மிக வறுமையடைந்திருந்து பின்னர் மதுராபுரிசென்று பாண்டியன்பாற் பெற்ற பரிசு கொண்டு பெருமை யடைந்தவர் எனக் கூறுவர்.

இவர் மதுராபுரிக்குப் போயிருந்தபோது தன்னிலைமையைச்சுட்டிப்பாடியது.

### நாரைவிடுதூது.

நாராய் நாராய் செங்கா லாராய்
பழம்படு பனையின் கிழங்கு பிளந்தன்ன
பவளக் கூர்வாய்ச் செங்கா லாராய்
நீயுநின் மனைவியுந் தென்றிசைக் குமரியாடி
வடதிசைக் கேகுவீ ராயின்
எம்மூர் சத்திமுத்த வாவியுட் டங்கி
நனைசுவர்க் கூரை கனைகுரற் பல்லி
பாடுபார்த் திருக்குமெம் மனைவியைக் கண்டே
எங்கோன் மாறன் வழுதி கூடலில்
ஆடை யின்றி வாடையின் மெலிந்து
கையது கொண்டு மெய்யது பொத்திக்
காலது கொண்டு மேலது தழீஇப்
பேழையு ளிருக்கும் பாம்பென வுயிர்க்கும்
ஏழை யாளனைக் கண்டன மெனுமே. (க)

நகரி சோதனையில் வந்த பாண்டியன் இச்செய்யுளைக்கேட் டிவரை அழைத்துபசரித்துப் பலபரிசுங் கொடுத்தனுப்பிச் சிலகாலஞ்சென்று இவர்கள் யோகக்ஷேமம் விசாரித்தபோது கூறியது.

வெறும்புற் கையுமரி தாங்கிள்ளை சோருமென் வீட்டில்வரும்
எறும்புக்கு மாற்பத மில்லைமுன் னூளென் னிருங்கலியாம்
குறும்பைத் தவிர்த்த குடிதாங்கி யைச்சென்று கூடியபின்
தெறும்புற்கை யானை கவளங்கொள் ளாமற் றெவிட்டியதே. (உ)

ஆகச்செய்யுள் அகக.

---

## படிக்காசுத்தம்பிரான்.

தொண்டை நாட்டிலுள்ள பொற்களந்தைப்பதியே இப்புலவரது சனனத்தானம். இவர் இராமநாதபுரம் சம்ஸ்தானாதிபதியாகச் சுமார் இருநூற்றைம்பது வருடத்துக்கு முன்னிருந்த கிழவன் சேதுபதியென்ற இரகுநாத

சேதுபதியிடம் வித்துவானு யிருந்தார். இவர் செய்தநூல்கள் தொண்டை மண்டல சதகம், புள்ளிருக்குவேளூர்க்கலம்பகம் முதலியன. இவர்க்குச் சபாநாயகர் நாடோறும் பஞ்சாக்கரப்படியில் பொற்காசு வைத்தருளப்பெற்ற காரணத்தால் படிக்காசுத்தம்பிரான் என்னும் பேர் வந்ததென்ப. "பகர்சந் தம் படிக்காசலா லொருவர் பகரொணுதே" என்பதையன்றி இவரினரிய சரிதமேதுந்தெரிந்திலது.

இவர் இரகுநாதசேதுபதியைக் காணவந்தபோது எழுதியது.

* விருதுபெறுகவிராசரிற்சக்ரவர்த்திவாய்வீண்பேசுவார்கள்மிண்டன்
விஞ்சயர்கள் வேந்தன்களந்தைப் படிக்காசுவிவரமுட னெழுதுமோலை
பொருதுபிரபந்தமதுதேர்கவிஞர்சேகரன்புகழ்செய்தளவாய்குமாரன்
பூச்சக்ர மன்னர்பணி ரகுநாத சேதுபதி பூரித்தெழுந்து காண்க
பரிதிமதி யுள்ளளவு நிற்கும்பிர பந்தங்கள் பாடிநின் கீர்த்தி கேட்டுப்
பஞ்சலட் சணதமிழ்க் காணிக்கை யுங்கொண்டு பரிவாக வுனை நாடியே
இருபதின் காதவழி கடலேறி வந்தன மிருந்தமிழ்க் கொள்ள வேண்டி
இந்நேர மேநம்மை யிருகாத வழியளவு மெதிர்காண வரல்வேண்டுமே.

இரகுநாத சேதுபதியைக் கண்டவுடன் சொல்லியது.

மூவேந் தருமற்றுச் சங்கமும் போய்ப்பதின் மூன்றெட்டுக்
கோவேந் தருமற்று மற்றொரு வேந்தன் கொடையுமற்றுப்
பாவேந்தர் காற்றி லிலவம்பஞ் சாகப் பறக்கையிலே
தேவேந்த்ர தாருவொத் தாய்ரகு நாத செயதுங்கனே. (உ)

மாந்தை மகாசனத்தலைவருக்கு எழுதியது.

* தாளிபட வேவந்த கவிவாணர் கவியெலாஞ் சூறையிடு கவிஞர்சிங்கம்
துட்டநிட் ரேகவி சுப்ரதீ பக்கவி துறைக்கெலாந் தூள்ளுசீட்டு
வாளைகுதி பாய்கின்ற மாந்தைகுடி மேவிய மகாசனத் தலைவருக்கு
மட்டிலவு சோலைக் களந்தைப் படிக்காசு வரவிட்ட விஞ்ஞாபனம்
காளமே கம்போல வசைபாட யாமுமிக் காசினியி லவதரித்தோங்
காளத்தி யப்பன்மேற் கவிகளையு மேலுமுள கவிதையு மறிந்த திலையா
ஆளனு மிருக்கவே செய்தகரு மங்களுக் கழிவுதே டுதலாகுமோ
ஆகாத காரியம் போகாது வீணிலே யபகீர்த்தி நிலைநிற்குமே. (ங)

இவர் சீதக்காதிபேரில் பாடியன.

ஓர்தட்டி லேபொன்னு மோர்தட்டி லேநெல்லு மொக்கவிற்கும்
கார்தட் டியபஞ்ச காலந்தி லேதங்கள் காரியப்பேர்
ஆர்தட்டி னுந்தட்டு வாராம லேயன்ன தானத்துக்கு
மார்தட் டியதுரை மால்சீதக் காதி வரோதயனே. (ச)

நேசித்து வந்த கவிராசர் தங்கட்கு நித்தநித்தம்
பூசிக்கு நின்கைப் பொருளொன் றுமேமற்றைப் புல்லர்பொருள்
வேசிக்குஞ் சந்து நடப்பார்க்கும் வேசிக்கு வேலைசெய்யும்
தாசிக்கு மாகுங்கண் டாய்சீதக் காதி தயாநிதியே. (ரு)

ஈயாத புல்ல ரிருந்தென்ன போயென்ன எட்டிமரம்
காயா திருந்தென்ன காய்த்துப் பலனென்ன கைவிரித்துப்
போயா சகமென் றுரைப்போர்க்குச் செம்பொன் பிடிபிடியாய்
ஓயாம லீபவன் வேள்சீதக் காதி யொருவனுமே. (சு)

காய்ந்து சிவந்தது சூரிய காந்தி கலவியிலே
தோய்ந்து சிவந்தது மின்னார் நெடுங்கண்க டொல்பலநூல்
ஆய்ந்து சிவந்தது பாவாணர் நெஞ்ச மனுதினமும்
ஈந்து சிவந்தது மால்சீதக் காதி யிருகரமே. (எ)

தரைகண்ட மட்டும் படர்ந்தண்ட கோளமுந் தாவியெங்கும்
உரைகண்ட கீர்த்தி பெறுஞ்சீதக் காதி யுலகினில்வெண்
திரைகண் டெழுங்கடன் மீதேதன் வங்கத்தைச் செல்லவிட்டுக்
கரைகண் டவனினங் காணுனென் னுசைக் கடற்கரையே. (அ)

தேட்டாளன் காயற் றுரைசீதக் காதி சிறந்தவச்ர
நாட்டான் புகழ்க்கம்ப நாட்டிவைத் தான்றமிழ் நாவலரை
ஓட்டாண்டி யாக்கி யவர்கடம் வாயி லொருபிடிமண்
போட்டா னவனு மொளித்தான் சமாதிக் குழிபுகுந்தே. (கூ)

விண்ணுக்கு மண்ணுக்கும் பேராய் விளங்குமே வேந்தனென்னும்
கண்ணுக் கினிய துரைசீதக் காதி கமலநிகர்
தண்ணுக் கிசைந்த வதனசந் ரோதய சாமியிந்த
மண்ணுக்குள் ளேயொளித் தான்புல வோர்முகம் வாடியதே. (கய)

மறந்தா கிலுமரைக் காசுங் கொடாமட மாந்தர்மண்மேல்
இறந்தாவ தென்ன விருந்தாவ தென்ன விறந்துவிண்போய்ச்
சிறந்தாளுங் காயற் றுரைசீதக் காதி திரும்பிவந்து
பிறந்தா லொழியப் புலவோர் தமக்குப் பிழைப்பில்லையே. (கக)

திருமலைநாயக்கர் இவரைச் சிறைவைத்திருந்தபோது பாடியது.

நாட்டிற் சிறந்த திருமலையா துங்க நாகரிகா
காட்டில் வனத்திற் றிரிந்துழ லாமற் கலைத்தமிழ்தேர்

பாட்டிற் சிறந்த படிக்காச னென்னுமோர் பைங்கிளியைக்
கூட்டி லடைத்துவைத் தாயிரை தாவென்று கூப்பிடுதே. (கஉ)

முடியாத காரியங்களிவையென வுரைத்தது.

பொல்லாத மூர்க்கருக் கெத்தனை தான்புத்தி போதிக்கினும்
நல்லார்க்குண் டான குணம்வரு மோநடு ராத்திரியிற்
சல்லாப் புடைவை குளிர்தாங்கு மோநடுச் சந்தையினிற்
செல்லாப் பணஞ்செல்லு மோதில்லை வாழுஞ் சிதம்பரனே. (கங)

உமாதேவியார்மீது பாடியது.

வேல்கொடுத் தாய்திருச் செந்தூரர்க் கம்மியின் மீதுனக்குக்
கால்கொடுத் தாய்நின் மணவாள னுக்குக் கவுணியர்க்குப்
பால்கொடுத் தாய்மத வேளுக்கு மூவர் பயப்படச்செங்
கோல்கொடுத் தாயன்னை யேயெனக் கேதுங் கொடுத்திலையே. (கச)

திருச்செந்தூர் முருகன்மேற் பாடியன.

முன்னநின் னன்னை முலையூட்டி மையிட்டு மூக்குச்சிந்திக்
கன்னமுங் கிள்ளிய நாளல்ல வேயென்னைக் காப்பதற்கே
அன்னமு மஞ்ஞையும் போலிரு பெண்கொண்ட வாண்பிள்ளைநீ
இன்னமுஞ் சின்னவன் றானோசெந் தூரி லிருப்பவனே. (கரு)

முற்கரை யப்பரை யேறவிட் டாட்கொண் முதல்வருள்ளக்
கற்கரைக் கும்படி போதித் திடுங்கரு ணைக்கடலைச்
சிற்பரைக் குட்டியை யெங்குந்தித் திக்குஞ் செழுங்கரும்பின்
சர்க்கரைக் கட்டியைக் கண்டேன்செந் தூரெனுந் தானத்திலே. (கசு)

சின்னஞ் சிறுபிள்ளை செங்கோட்டுப் பிள்ளை சிவந்தபிள்ளை
பொன்னன் மணிப்பிள்ளை பூலோக மெங்கும் புகழும்பிள்ளை
சொன்னெஞ் சுழல்கின்ற சூரனை வென்ற சொக்கேசர்பிள்ளை
வன்னக் கிளிப்பிள்ளை செந்திக் குறத்திக்கு மாப்பிள்ளையே. (கஎ)

கல்லடிக்கு முளிபிரண்டு காதடிக்கு ளடிப்பதெனக் கவிதைகேட்டுப்
பல்லடிக்கக் கிடுகிடெனப் பறையடிக்கு நெஞ்சர்தமைப் பாடுவேனோ
வில்லடிக்கும் பிரம்படிக்குங் கல்லடிக்கும் விரும்பிநின்ற மெய்யனீன்ற
செல்லடிக்குந் தடவரையிற் சேறடிக்க வலையடிக்குஞ் செந்திலானே.

சிலவித்துவான்களி னியற்கையைக்குறித்துச் சொல்லியது.

குட்டுதற்கோ பிள்ளைப்பாண் டியனிங் கில்லை
குறும்பியள வாக்காதைக் குடைந்து தோண்டி
எட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை
யாதொ டிரண்டொன்று முடிந்துதலை யிறங்கப் போட்டு
வெட்டுதற்கோ கவியொட்டக் கூத்த னில்லை
விளையாட்டாக் கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ வறிவில்லாத் துரைக ளுண்டு
தேசமெங்கும் புலவரெனத் திரிய லாமே. (கக)

பண்டிதரின்றிவருந்தியவோர்சமயத்திற் கூறியது.

அடகெடுவாய் பலதொழிலு மிருக்கக் கல்வி
யதிகமென்றே கற்றுவிட்டோ மறிவில் லாமல்
திடமுளமோ கனமாடக் கழைக்கூத் தாடச்
செப்படிவித் தைகளாடத் தெரிந்தோ மில்லை
தடமுலைவே சையராகப் பிறந்தோ மில்லை
சனியான தமிழைவிட்டுத் தைய லார்தம்
இடமிருந்து தூதுசென்று பிழைத்தோ மில்லை
என்னசென்ம மெடுத்துலகி லிரக்கின் றோமே. (உ0)

ஆகச்செய்யுள் கூஉக.

---

## சீதக்காதியின்பேரில் ஓர்தாசிபாடியது.

தினங்கொடுக்குங் கொடையானே
தென்காயற் பதியானே சீதக் காதி
இனங்கொடுத்த வுடைமையல்ல
தாய்கொடுத்த வுடைமையல்ல வெளியா ளர்கை
மனங்கொடுத்து மிதழ்கொடுத்து மபிமானந்
தனைக்கொடுத்து மருவி ரண்டு
தனங்கொடுத்த வுடைமையெல்லாங் கள்ளர்கையிற்
பறிகொடுத்துத் தவிக்கின் றேனே. (க)

ஆகச்செய்யுள் கூசO.

## பலபட்டடைச் சொக்கநாதப்புலவர்.

இவர் பிறந்தவிடம் சாதிமுதலியன விளங்காவிடினும், மதுரைநகரில் திருமலைநாயக்கர் அரசுபுரிந்தகாலத்தி லிருந்தவரென்பது புலப்படுகின்றது. இவர் சண்பகநல்லூர் சிவபெருமான்மேல் வண்டுவிடுதூது என்னும் பிரபந்தம் பாடி யரங்கேற்றுகையில் சுப்பிரதீபக்கவிராயர் இவரோடெதிர்த்துச் சண்பகமலரில் வண்டுபடியா தென்னு மிலக்கணங்கொண்டு அந்நூலைப் பொருத்த மற்றதென மறுக்கவே, இவர் நாமகளைத் தியானித்து அங்கிருந்த சண்பகவிருக்கத்தின் மலரில் வண்டுகள்வந்து படியச்செய்தனர் என்ப.

சுப்பிரதீபக்கவிராயர் பார்ந்குறடிட்டு நடந்ததைக்கண்டு பாடியது.

*சாணாருங் கள்ளைக் குடியார்க ளீழுவர் தாமுந்தொடார்
கோணுமற் பாத குறடுசெய் வார்க்கதன் கூலியல்லால்
நாணும லேறி நடப்பதுண் டோநடு வீதியெங்கும்
வீணு வடாசுப்ர தீபா வஞ்ஞான விளக்கொளியே. (கச)

சிவந்தான்மல்லைப் பல்லவன்மீது பாடியன.

மாதாம் படியுண்டு மெய்சிவந் தான்குழல் வைத்திசைத்துச்
சேதாம்ப லக்கனி வாய்சிவந் தான்செம் மலர்த்திருவின்
சூதாந் தனந்தைத் துரஞ்சிவந் தானவர் தூதுசென்று
பாதாம்பு யஞ்சிவந் தான்சிவந் தான்மல்லைப் பல்லவனே. (கரு)

பாடுந் தமிழ்க்குச் சிவந்தெழுந் தான்மல்லைப் பல்லவர்கோன்
காடுஞ் செடியுந் திரியா திரட்டைக் கடுக்கன்செய்து
போடும் பொழுதென்ன பூட்டக மோவற்பப் புல்லரைக்கொண் லரைப
டாடும் பொழுதிரு கன்னத்தி லேநின் றடிக்கின்றதே. ல். (கசு)

*குளக்காவி மலர்த்தொடையான் சிவந்தெழுந்த பல்லவனைக் கூடா
இளக்கார மோபிரிந்த வாறுகண்டோ நான்பேதை யென்றுதானோ ச
உளக்காத றூண்டுகோ லாப்பனிநெய் யாவுறங்கு மூசறாக்கு
விளக்காக வெனைத்திரியா விடியளவு மெரித்தனையே வெண்ணிலாக்கிழையைக்

மடைக்கண் குவளை புனலுகுப்ப வரம்பிற் குரம்பை மணிகொழிக்
வயல்சூழ் மருதப் பெருநிலமு மானுங்கருகிப் பரல்பெருகி ளயே (கஎ)
இடைக்கண் ணிறுத்தோர்க் கொருநிழலற் றிருக்குங் கொடும்பா
றிணைக்கத் தருமா மற்றொருவ னிவனுக் கிணையா அடைய
கடைக்கண் சிவந்தான் வேயிசைத்துக் கனிவாய் சிவந்தான் த
கையுஞ்சிவந்தான்றா தெனப்போய்க்காலுஞ்சிவந்தான் கமரம்

[ந்து

தொடைக்கண் சிவந்தான் கிரிபயிற்றித் தொனியுஞ் சிவந்தான் பொறைசும
தோளுஞ் சிவந்தான் சிவந்தான்போற் றுரையார் புலவீர் குரையீரே. (ரு)

*முகரிகை வேந்தன் சிவந்தான் வரையில் முகின்முளரி
நிகரிய கொங்கை முதுவெங் கராவொக்கு நீண்டுயர்ந்த
புகரிப மொக்கு மெனதாவி கண்ணனைப் போதுவிட்ட
திகிரியை யொக்குநண் பாவின்ப மேவு சிறுநகையே. (சா)

*மல்லைப் பதியில் வழுதி சிவந்தெழுந்த
பல்லவனைக் கொன்றாய் பழிசுமந்தாய்—கல்வி
சிறந்தாரைக் காக்குமந்தச் சீமானை யென்றும்
மறந்தார்க்கு வாயிலே மண். (எ)

போசராசன் மீது பாடியன.

பாசநீ யோர்புயலாப் பூமுழுதும் பொன்மாரி
சுவா யங்கதிலோர் விந்தேனும்—பேசுமென்மேல்
டதிலே யென்வறுமை பாரக் குடையாகி
டக் கவித்திடுத லால். (அ)

பாதி மால்கொள மற்றொரு பாதி யுமையவள்கொண்
பூாதி யாலு மிறந்தான் புராரி யிருநதியோ
வா ரிதியிற் பிறைவானிற் சர்ப்பம் பிலத்திற்கற்ப
ரன போச கொடையுன்கை யோடென்கை தந்தனனே. (கூ

செங்குன்றை யூரிலுள்ள ஓர் பிரபுவின்மீது பாடியது.

கே யங்கே யிரும்பறவை யாறுயினும்
கே யுங்கே மலர்மடந்தை—கோலஞ்சேர்
தினை தகைமணக்குஞ் செங்குன்றை யூரனெங்கே
பிரவலரெல் லாம் (க0)

இனந் படிக்காசுத்தம்பிரான் கவிகளைப் புகழ்ந்து பாடியது.

*தென்களந்தைப் படிக்காச னுரைத்ததமிழ் வரைந்தவேட்டைப்
மனங் சூழ்ந்தாலு மூவுலகும் பரிமளிக்கும் பரிந்தெப்போதுந்
தட்ங்கைமணக்குஞ்சொன்னாலும்வாய்மணக்குந்தொய்யற்சேற்றில்
தனங் மிழ்ப்பயிராய் விளைந்திடுமே பாட்டினுறு களினந்தானே. (கக)

பற தட்டாரியல்பைக் குறித்துரைத்தது.

ாட்டியுங் காற்பொன்னின் மாப்பொன் னுபாயமதாத்
ன்பணி செய்யா திரான்செம்பொன் மேருவினைக்

கட்டாகக் கட்டிக் கடுகளை வாநிறை காட்டவல்ல
தட்டானுக் கஞ்சியல் லோவணிந் தான்சிவன் சர்ப்பத்தையே. (கஉ)

கவியென்னுமாதின் முறையைக் குறித்துரைத்தது.

கவியாகு மாதினைப் பெற்றோன் புலவன்கற் றோனணையாம்
செவியாரக் கேட்டங் குணர்வான் சகோதரன் செந்தமிழ்க்கு
தவியா வருமை யறிவான் பதியவன் றனிலேயேல்
புவியாகு மண்ணுக்கு ளென்பல னமைந்தப் பூங்கொடிக்கே. (கங)

தலைவியை வியத்தல்.

பொன்னாகத் தார்பணி மாயோன் கரத்தைப் பொருப்பில்வரும்
மின்னாண் முகங்கண் டனஞ்சாயல் போற்பெற வேண்டியன்றோ
வந்நாட் கமல மலர்கடன் மேரு வணிமயிலும்
தன்னா லயனரி சங்கரன் வேலைனைத் தாங்கியதே. (கச)

நாணிக்கண் புதைத்தல்.

காலையர விந்தங் கழுநீ ருடன்கலந்தால்
மாலையர விந்த மயக்கா தோ—பாலைப்
பழிக்கின்ற மென்மொழியீர் பாண்டியனா ரூரை
அழிக்கின்ற தென்னோ வது. (கரு)

பாலனைப்பழித்தல்.

அரும்பால காமுனம் பூமணஞ் சொற்பொரு ளாகமுயிர்
கரும்பாஞ் சுவையெள்ளு மெண்ணெயும் போலொத்த காதலரைப்
பெரும்பாவி னல்லன்னங் கங்கா சலத்தைப் பிரிப்பதுபோல்
சுரும்பாம் புலவர் யமனாலே செக்கெனத் தோன்றினையே. (கசு)

அரும்பாக் கியகொங்கை பாலாக் கியுமுங்க ளப்பனெஞ்சை
இரும்பாக்கி யென்னெஞ்சைப் பித்தளை யாக்கியவ் வேந்திழையைக்
கரும்பாக்கி யென்னையும் வேம்பாக்கி யிவ்வணங் கண்டனையே
பெரும்பாக் கியமல்ல வோமக னேயுனைப் பெற்றதுவே. (கஎ)

ஒதற்பிரிவு.

விண்ணுக்கு மாமதி காயவெங் காம வெரிகொளுந்தப்
பண்ணுக்கு மாமொழி மாதங்க மாம்பஞ்ச பூதியம்போம்

கண்ணுக்கு மூக்குச் செவியாக்கை யற்ற கடத்திலங்கம்
பெண்ணுக்கு வார்தமைப் போலோதி வாரும் பிரிபவரே. (க௮)

தலைவன்கூற்று.

உனக்கின்று யான்செய்த குற்றமொன் றில்லை யுனைப்பிரிந்தால்
வனக்குன்றி லேறி விழுவறி யேன்வண்மை சேர்மயிலே
எனக்கென்று வட்டமிட் டண்ணாந்து விம்மி யிருக்குமுன்றன்
தனக்குன்றி லேறி விழுவேனின் னல்குற் றடாகத்திலே. (க௯)

தலைவிகூற்று.

ஏராட்டும் பூந்தொங்கன் மோகனக் காரற் கினியசுகம்
பாராட்ட நானினி யானல்ல வேபசும் பொன்குழவி
தாராட்ட வுஞ்சங்கிற் பால்பிள்ளைக் கூட்டித் தடவிமஞ்சள்
நீராட்ட மையிடப் போமே யெனக்குள்ள நேரமுமே. (உ0)

சந்திரதூடணை.

ஊரைச் சுடுமோ வுலகந் தனைச்சுடுமோ
ஆரைச் சுடுமோ வறியேனே—நேரே
பொருப்புவட்ட மானமுலைப் பூவையரே யிந்த
நெருப்புவட்ட மான நிலா. (உக)

உலோபிகளைக் குறித்துரைத்தது.

சுண்ணாம்பு தீட்டநல் லாட்காட்ட மோதிரஞ் சூட்டமலர்க்
கண்ணாரைக் கூட்ட வீரனன் கிருக்கக் கதிர்க்கம்பிபோல்
எண்ணா நடுவிரற் கேதா முலோபருக் கேதுகண்டாய்
தண்ணார் நுதலண்ணால் சேய்வணி காசெந்தில் காத்தவனே. (உஉ)

திருத்தில்லை.

குண்டைக் கொருத்தனைக் கூத்தாடும் பித்தனைக் குண்டுணியைக்
கண்டக் கறுப்பனைப் பிள்ளையைத் தின்னியைக் காணவயன்
மண்டைக் கரத்தனைக் கண்ணப்ப னெச்சிலை வாரியுண்ட
பண்டைப் பறையனை யோதேவ னென்று பகருவதே. (உ௩)

அந்தங் கரும்பள்ளி பாசாங்கு சத்திகண் ணம்படைச்சி
நைந்த விடைச்சி குறத்திக்கு மாமி நவில்வலைச்சி
சந்தம் புழுக்கச்சி பாம்பணை யோனுக்குத் தங்கச்சியாம்
இந்தப் பறைச்சியை யோசிவ காமியென் றேத்துவதே. (உ௪)

தலைவியிரங்கல்.

நிலமே பூளந்த நெடுமால் பணியு நிமலர்பொன்னம்
பலமேவு தில்லைப் பதிநட ராசர் பனிவரையில்
கலமேதி மிங்கில மேசங்க மேநற் களியனமே
சலமே சலஞ்சல மேயென்று தீருமென் சஞ்சலமே. (உரு)

திருக்காளத்தி.

சேராத வேடன் செருப்பா லுதைக்கவுந் தீண்டவுந்தன்
நீர்வா யுமிழவு முச்சிட்டம் போடவு நீண்டசிலைத்
தாரா லிடிக்கவுங் கண்ணீர் ததும்பவுந் தாய்தமர்கள்
ஆரா கிலுமில்லை யோதிருக் காளத்தி யப்பனுக்கே. (உசா)

சீகாழி.

நமக்கின் றொருவர நீர்தர வேண்டு நலந்திகழுங்
குமக்கொங்கை பாகத்துக் கொச்சையுள் ளீர்கொடுங் கோளரவிற்
கிமைக்கும் பிறையை யளித்தா லதற்கு மிரும்பசிபோம்
உமக்குந் தலைச்சுமை போமெங்கண் மானு முயிர்பெறுமே. (உள)

திருநெல்வேலி.

ஆய்முத்துப் பந்தரின் மெல்லணை மீதுன் னருகிருந்து
நீமுத்தந் தாவென் றவர்கொஞ்சும் வேளையி னித்தநித்தம்
வேய்முத்த ரோடென் குறைகளெல் லாமெல்ல மெல்லச்சொன்னால்
வாய்முத்தஞ் சிந்தி விடுமோநெல் வேலி வடிவன்னையே. (உஅ)

*திருக்களந்தை.

இன்றொக்க வேண்டிலெவ் வாறொக்கு மோவெழில் சேர்களந்தைக்
குன்றொக்குங் கோபுரங் கோபுர மொக்குமக் குன்றதுபோல்
அன்றொக்க வேண்டுமென் னல்வினை தீவினை யாமிரண்டும்
என்றொக்கு மோவினித் தென்களக் காடனை யான்பெறவே. (உகூ)

மற்றோ றொருவரைக் கண்டதுண் டோசத்ய வாசகராய்
உற்றோர் களஞ்சுவெண் ணெய்க்கின்ற தாய்க்கொரு கோடிபொய்கள்
சொற்றோனுந் தாழை மலர்சாட்சி யென்றுசொன் னோனுமல்லாற்
கற்றோர்கள் வம்பின்கள் சொன்மின்க ணம்பின் களந்தையிலே. (௩௦)

* இது திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள களக்காடு.

ஆகத்தி லேயொரு பாதியென் னம்மைக் களித்தவடன்
பாகத்தி லேயொன்று கொண்டா யவண்மற்றைப் பாதியுமுன்
தேகத்திற் பாதியுஞ் சேர்ந்தா லிருவருண் டேசிவனே
ஏகத்தி ராம லிருப்பாய் களந்தையு மென்னெஞ்சுமே. (நக)

துணையான நாரி புவியையெல் லாம்பெறுந் தொல்லைவடிக்
கணையா னதுபுவி யெல்லா மெடுத்துண்ணுங் கைச்சிலைகள்
அணையாக நின்று புவியினைத் தாங்குமென் றுலினியான்
பணையார் களந்தைப் பதியார் செயலையென் பண்ணுவதே. (நஉ)

திருக்குடந்தை.

நின்று படியளக்கு நீலக் கொடிகளிரண்
டென்றுமுள வாங்குடந்தை யீச்சுரருக்—கொன்றுக்
குரைக்கு மரையீந்தா ரொன்றதனுக் கென்னோ
அரைக்குமரை யீயா ரவர். (நந)

திருமறைக்காடு.

பாணியிலே புள்ளிமான் பாகத்தே பச்சைமான்
வேணி தனிலேயோர் வெள்ளமான்—காணுமலர்ச்
செம்மா னுலவுந் திருமறைக்காட் டீசரே
எம்மானுக் கெங்கே யிடம். (நச)

முக்கண்ண னென்றரனை முன்னோர் மொழிந்திடுவார்
அக்கண்ணற் குள்ள தரைக்கண்ணே—மிக்க
உமையாள்கண் ணொன்றரைமற் றான்வேடன் கண்ணொன்
றமையுமித னாலென் றறி (நரு)

மதுரை.

*உயிர்க்குயிரென் றோது முணர்வுசொக்கர்க் கல்லால்
அயற்கு மரிக்கு மரிதே—செயற்குக்
கறையடியிற் பட்டவடி கந்தனடி வைகைத்
துறையடியிற் பட்டதுண்டோ சொல். (நசா)

*அன்னமிட வாவென் றழைக்குமே யாதுலர்க்குச்
சொன்னமெலாம் வாரிச்சொரியுமே—முன்னமே
மாபுரத்தைத் தீயெரித்து வாழ்சொக்க நாதரெழிற்
கோபுரத்தி லாடுங் கொடி. (நஎ)

வான்பணிந் தாலவ னென்பே யுரைக்கு மலரிலயன்
தான்பணிந் தாலவன் றன்றலே யேசொலுந் தாரணியுண்
பான்பணிந் தாலவன் கண்ணே பரிந்து பரிந்துரைக்கும்
நான்பணிந் தாலெனக் கார்சொல்லு வார்சொக்க நாயகர்க்கே. (௩௮)

மெய்க்கே யணியும் பணியேயென் பேமுடி மேற்கிடந்த
கொக்கேவெண் கூன்பிறை யேயரை சேர்ந்த கொடும்புலியே
அக்கே யுமக்குக் கிடைத்தவு பாயங்க ளாலெமக்கும்
சொக்கேசர் பாதத்தைக் கிட்டு முபாயத்தைச் சொல்லுங்களே. ()

தாண்டித் திரியும் விடையேறி யோடொன்று தாங்கிப்பிச்சை
வேண்டிக் கலியுக காலந்தள் ளாமல் விரும்பிச்சொக்கர்
ஆண்டித் தொழிலைவிட் டையோ மதுரைக் கரசிருந்து
பாண்டித் துரைத்தனஞ் செய்தே பிரம்படி பட்டனரே. (௪0)

முன்னுனை கூப்பிட வோடிவந் தானை முளரிமலர்ப்
பொன்னுனை யேறி யிருப்பானைப் பூழியன் கைக்கரும்பைத்
தின்னுனை யென்றுகல் லானைக்கிட் டானைத் திருமதுரை
மன்னுனை வீதியி லேறிவந் தானை வணங்குதுமே. (௪௧)

ஆனையுரித்து மதடனைப் போர்த்திட் டடியும்பட்டு
மான மழிந்தங் கிரந்தே திரிந்த மதுரைச்சொக்கர்
ஞான மிகப்பெற்று வாழ்வதெல் லாஞ்சொக்க நாயகியாள்
பானை பிடித்த முகூர்த்தத்தி னுல்வந்த பாக்கியமே. (௪௨)

குதியா னமனை யுதைத்துள்ளங் காலினிற் கூனிமிர
மதியாகந் தேய்த்தவ் விலங்கேசன் மாமுடி பத்துநக
நுதியான் மிதித்து முயலகன் மேனி நொறுங்கவின்னும்
மிதியாநின் றுலரு ளெங்கேசொக் கேசர்தம் மெல்லடிக்கே. (௪௩)

மண்ணென்ற மண்டல மெல்லாம் புரக்கும் வழுதிசற்றும்
தண்ணென்ற நெஞ்சக் தரித்தில னேதனு வேடனெச்சில்
உண்ணென்ற போதுண் டவர்சொக்கர் பாதி யுடலம்பச்சைப்
பெண்ணென் றறிந்து மடித்தானெவ் வாறு பிரம்புகொண்டே. (௪௪)

வடிகொண்ட செந்தமிழ்க் கூடலில் வாழ்சொக்கர் வந்திதரும்
பிடிகொண்ட பிட்டுக்கு மண்ணே சுமந்து பெருமகரக்

[ல்

கொடிகொண்ட வெற்றித் துறைப்பாண்டி யன்கைக் கொடும்பிரம்பா
அடிகொண்ட போதி லடியா ரவர்பொன் னடிகண்டதே. (சரு)

அக்கு வடம்புனை யானந்த வெள்ளத்தை யங்கயற்கண்
பக்கத் திருந்த பவளா சலத்தைப் பழம்பொருளை
முக்கட் கனியைக் கடம்பா டவிக்கண் முளைத்தெழுந்த
சொக்கைக்கண் டாலன்றித் தீராது நெஞ்சிற் றுயரங்களே. (சசா)

உரையேனுன் பேரை யுணரேனின் சீரை யுளைக்கருதிக்
கரையேனெவ் வாறு கடப்பேன் வினையைக் கடந்ததுணை
வரையே யருட்பெரு வாரிதி யேமது ராபுரிக்குத்
துரையே யழகிய சொக்கே தமிழ்தந்த சுந்தரமே. (சஎ)

விரித்தான் சடையை மகமேரு வாசுகி வில்லைவிட்டுச்
சிரித்தான் புரத்தை யெரித்தான் பரகுரு தேசிகன்முன்
உரித்தான் கரியை யுடுத்தான் பகிரண்டத் துள்ளுலகும்
பரித்தான் மதுரை தரித்தான் சவுந்தர பாண்டியனே. (சஅ)

துடியார் கரத்து மதுரேச ரேயும்மைத் துள்ளியசேற்
கொடியா னடித்ததுங் குற்றமன் றேகிழக் கோதையிவள்
அடியாளென் றேசட்ட பிட்டையெல் லாமள்ளி யள்ளித்தின்று
வடியா நதியிற் கரைத்துவிட் டாரவள் வல்வினையே. (சகூ)

கான்றெண்ட னிட்ட கனங்குழ லாளையென் கண்மணியைத்
தேன்றொண்டைவாய்ச்சியைத்தென்கூடல்வாழ்சிறுபெண்பிள்ளையை
யான்றெண்ட னிட்ட பொழுதே யியம னெனக்குமடி
யேன்றெண்ட னிட்டவிண் ணப்பமென் றோலை யெழுதுவனே. (ருo)

அண்டத் தமரரு மாயனும் வேதனு மந்தணரும்
பண்டெத் தனைதவஞ் செய்தன் ரோமணப் பந்தரிலே
துண்டப் பிறையணி சொக்கர்கைத் தாலிக்கு நீதுணிந்து
கண்டத்தை நீட்டினை யேகூடல் வாழுங் கயற்கண்ணியே. (ருக)

அற்பின்ற தாயென் றனைப்பணிந் தாலென் னலதியெல்லாம்
பொற்பின்ற பூடணம் போற்குறித் தாய்புகழ்க் கூடலில்வாழ்
கற்பின்ற கட்டிக் கரும்பே யுனக்குக்கன் னெஞ்சனுதான்
வெற்பின்ற வாசனை யோவுள்ள வாறு விளம்பெனக்கே. (ருஉ)

பேயல்ல வோவொரு வேளை வரந்தந்து பேசிடுங்கல்
லாயல்ல வோநின் மனங்கெட்டி யானது மற்புதந்தான்
நீயல்ல வோமது ரேசர்பங் குற்றவ ணீயெனக்குத்
தாயல்ல வோபிள்ளை நானல்ல வோசிவ சாம்பவியே. (ருந)

செகத்தா யெனவந்த தெள்ளமு தேதென் கயிலையெனும்
நகத்தார் பணியுங் கயற்கணம் மேநின் னயனத்தினால்
மிகத்தான் கருநிறங் கொண்டமை யாலும் விளங்குதிரு
முகத்தா மரைக்கொரு வண்டா னதுமுத்து மூக்குத்தியே. (ருச)

செகமதின் மிக்க மதுரையின் மாணிக்கஞ் செட்டியராய்
மிகமதி ரத்தினம் விற்றசொக் கேசரை மேவியன்பாச்
சுகமதி தந்தெனை யாள்கயற் கண்ணிநின் சுந்தரமா
முகமதி யீன்ற கதிர்மணி யோமுத்து மூக்குத்தியே. (ருரு)

பொன்னே மலையத் துசனு கியபுய லீன்றெடுத்த
மின்னே யுனது வதனத்தை யேவெண் மதியமெனத்
தன்னையத் தாலொரு தாரகை யானது தான்விரும்பி
முன்னே கிடந்தினம் பார்க்கின்ற தோமுத்து மூக்குத்தியே. (ருசா)

பொன்போலுங் கூடற் பிராட்டியைச் சேவிக்கப் போம்பொழுதில்
என்பால் வரவு மெதிர்நின்று பேசவு மென்றலைமேல்
தன்பாதஞ் சூட்டவுங் கேட்டதெல் லாந்தங் தருளவுமே
அன்பாக வந்திடு வாள்கலி காலமென் றஞ்சுவளே. (ருஎ)

முக்கட் பராபரை சொக்கப்பி ரானெனு முன்னவனே
டொக்கச் சிறந்த கயற்கண்ணி சந்நிதி யுற்றுமிகச்
செக்கச் சிவந்தபொற் றாமரைப் பாத தெரிசனைக்கே
பக்கத் தடுத்தவர் சொர்க்கத் தினையெட்டிப் பார்ப்பவரே. (ருஅ)

மட்டார் குழலங் கயற்கணம் மேயிம்மட் டென்றுதொகைக்
கெட்டா தெனது துயரநின் பாற்சொல்லி யேசலிக்க
ஒட்டார நீசெய்ய லாகாது பாருன் னடிமைதன்னை
நட்டாற்றிற் கைவிட்டி டாதே பழிவெகு நாணிற்குமே. (ருகூ)

மைக்கார்க் குழற்பெண் வடிவாளைத் தென்னவன் மாமகளை
அக்காளை யோன்பங்கி லாத்தாளை மாறங்கை யானவளைத்

திக்கார் தொழுங்கயற் கண்ணுளை யோர்தினஞ் சேவைசெய்தால்
எக்கா லமுமவர் சொர்க்காதி போகத் திருப்பவரே. (சுO)

வண்டிட்ட கூந்தலும் வாரிட்ட கொங்கை வரைகளுங்கற்
கண்டிட்ட சொல்லுங் கயற்கண்ணி பாகமுங் கைதொழுதேன்
தண்டிட் டடிக்கு மறலிவந் தாற்சன்னை யிட்டுநகைத்
துண்டிட்டு வாசிறு பிள்ளாயென் றாருக் கனுப்புவனே. (சுக)

பொன்னே பொருந்தற் புதமே பொலிந்தமென் பூந்திருவே
தென்னே சிறந்தசெந் தேனே திருந்தருட் சின்மயமே
அன்னே யமுதே யருளே யமரர்க் கரும்பொருளே
மின்னே வியன்கூட ரேமது ராபுரி மீனம்மையே. (சுஉ)

தேட்டேது மில்லை கொடுப்பாரு மில்லை திறத்துழவில்
பூட்டேரு மில்லையி தெல்லாமெம் பாலிலை பூர்ணவரங்
கேட்டே னதற்குப் பிறிதில்லை யேயினிக் கேட்கவுநான்
மாட்டேனுன் மேற்பழி போட்டேன் மதுரை மனோன்மனியே. ()

உள்ளக் கவலையெ லாம்விள்ளும் போது முனதுமனம்
எள்ளத் தனையிரங் காதிருந் தாயெளி யேனினிமேல்
தள்ளப் புறத்தினி லென்றாலும் போவது தானிலைப்பொன்
வள்ளத் தமுதுண்ணுங் கிள்ளாய் கடம்ப வனவல்லியே. (சுச)

எப்படி யெப்படிச் சொன்னாலு நானிரங் கேனெனவே
அப்படி யப்படி நீயிருக் கின்ற வதிசயத்தை
இப்படி யிப்படி யென்று கிலுமெனக் கேதெரியச்
செப்படி செப்படி யம்மா மதுரைச் சிவாநந்தியே. (சுரு)

செப்பத்தி லுன்னைத் தொழவா யிரங்கண்ணுஞ் செல்லும் பொல்லேன்
தப்பத் தவறத் தொழுதாலுஞ் சொக்கர் தடம்புயத்துக்
கொப்பத் திரண்டகொங் காயுன் னவயவ மொன்றுக்கொன்று
முப்பத் திரண்டுகண் வேண்டுங்கண் டாயென் முகத்தினுக்கே. (சுசு)

கரஞ்சொன்னங் கண்டதெந் நாளோ தொடுத்த கலிக்கெவர்கள்
உரஞ்சொன்ன தோவந் திறுத்ததிவ் வேளை யுதவுனக்கே
பரஞ்சொன்னெ னின்னம் பராமுக மேதிது பத்துலகூம்
தரஞ்சொன்ன தாயெண்ணு வாய்சிவ காம சவுந்தரியே. (சுஎ)

பண்டோ தரிய மறைதேடுங் கூடற் பசுங்கிளியைக்
கண்டோதி னேனென் கவலையெல் லாமினிக் காலன் றிண்டு
முண்டோதி வந்திடும் போதம்மை கோயின்முன் னேதிரியுங்
குண்டோ தரன்கண்டு கொண்டாற் றுடைதட்டிக் கொள்ளுவனே. ()

*எழுவே னுதிக்குமுன் பொற்று மரைதனி லேபடிந்து
தொழுவேன் கயற்கண்ணி பாதத்தைக் காலன்கைச் சூலத்தையே
கொழுவாய் மடக்கி யடித்தவன் பாசத்தைக் கொண்டுகட்டி
உழுவே னெருமைக் கடாவினை நானிந்த வூர்முற்றுமே. (சுகூ)

*செங்கலசக் கொங்கை செறிகுறங்கிற் சீறடிப்பொற்
பொங்கரவ வல்குற் பொருகயற்கட்—செங்கனிவாய்க்
காருருவக் கூந்தற் கதிர்வாட்கைக் காரிகைத்தாய்
ஓருருவென் னுள்ளத்தே யுண்டு. (எ0)

*ஆலம்போ னீலவிழி யங்கயற்கண் ணம்மையே
காலம்போம் வார்த்தைநிற்குங் கண்டாயே—சாலப்
பசித்தார் பொழுதும்போம் பாலுடனே யன்னம்
புசித்தார் பொழுதும்போம் போம். (எக)

ஆகச்செய்யுள் எகக.

---

## திருக்குறுங்குடிநம்பி.

இவர் திருக்குறுங்குடியில் வாழ்ந்தபுலவரெனத் தொண்டைமண்டல சதகம் எண்பத்தெட்டாவது செய்யுளான் விளங்குகின்றது.

இவர் வல்லநகர்க் காளத்திமுதலியார்மேற் பாடியன.

பொரடக் கயம்பிடி யென்றூன் மதனுமிப் பூவையுமா
தரடக்க முஞ்சற் றறிந்தில னேதனைத் தாள்பணியா
முரடக் கவுடக் கெடிமண்ட லீகர் முடிபிடுங்கும்
கரடக் கடாக்களிற் றுய்வல்ல மாநகர்க் காளத்தியே. (க)

பெற்று ளொருபிள்ளை யென்மனை யாட்டியப் பிள்ளைக்குப்பால்
பற்றாது கஞ்சி குடிக்குந் தரமல்ல பாவிரக்கச்
சிற்றுளு மில்லையிவ் வெல்லா வருத்தமுந் தீரவொரு
கற்று தரவல்லை யோவல்ல மாநகர்க் காளத்தியே. (உ)

வழிமேல் விழிவைத்து வாடாம லென்மனை யாளுமற்றோர்
பழியாமற் பிள்ளையும் பாலென் றழாமற் பசிரெனுஞ்சொல்
மொழியாம லென்னை வரவிட்ட பாவி முசித்துச்சதை
கழியாம லாவளித் தாய்வல்ல மாநகர்க் காளத்தியே. (௩)

நற்றோ ரணவீதி நண்ணும்வல்லைக் காளத்தி
கற்றோர் தமக்களிக்குங் கையேகை—மற்றோர்கை
வேங்கை யலகைமுகை வேட்கை பலகைநகை
காங்கை யழுகைவிழு கை. (௪)

*பள்ளமே செய்யுட் பயிரையெல்லாங் கொள்ளுமுடி
வெள்ளமே யும்மையுநாம் வென்றோமே—புள்ளலம்பும்
பொற்காவி வல்லநகர்ப் பூபதிகா ளத்தியெனும்
நற்கார் நெடுமுடியை நட்டு. (௫)

ஆகச்செய்யுள் எகசு.

## ஒப்பிலாமணிப்புலவர்.

ஒப்பிலாமணியான விப்புலவரின்சனன தேசகாலவர்த்தமானங்களில் ஏதும் தெரிந்திலது. தம்பியால் நாடுகொள்ளப்பட்டுக் காடுபற்றியிருந்த குமணன்பாலிவர் பரிசுபெறப் பாடியதாக முன் தனிப்பாடற்றிரட்டுள் அச்சிட்டிருக்கும் ‡ அகவற்பா, கடைச்சங்கத்தவரு ளொருவரான பெருந்தலைச் சாத்தனுர் இயற்றிய § பாவே குறைந்தும் திரிந்தும் வந்ததாய்ப் புலப்படுதலால் இவரை குமணன்காலத்தவரெனச் சொல்லுதற்கிடமில்லை. இவர் பாடியதாக ஓர்பிரபந்தத்தையும்கண்டிலம்.

‡ ஆடெரிபடர்ந்தகோடுயரடுப்பில், ஆம்பிபூப்பத்தேம்பசியுழல [ளுமல்
இல்லிதூர்ந்தனபொல்லாவறுமுலை, சுவைதொறுஞ்சுவைதொறும்பால்கா
குழவிதாய்முகநோக்க, மனைவியெம்முகநோக்கயாமும்
நின்முகநோக்கிவந்தனங்குமண.

§ ஆடுநனிமறந்தகோடுயரடுப்பி, னாம்பிபூப்பத்தேம்புபசியுழவாப்
பாஅலின்மையிற்றோலொடுதிறங்கி, யில்லிதூர்ந்தபொல்லாவறுமுலை
சுவைத்தொறழூஉந்தன்மகத்துமுகநோக்கி, நீரொடுநிறைதரவீரிதழ்மழைக்க
ணென், மனையோளெவ்வநோக்கிநினை இ,நிற்படர்ந்திசினேநற்போர்க்குமண
வென்னிலையறிந்தனையாயினிந்நிலைத்,தொடுத்துங்கொள்ளாதமையலனடுக்கி
பண்ணமைநரம்பின்பச்சைநல்யாழ், மண்ணார்முழவின்வயிரிய [ய
ரின்மைதீர்க்குங்குடிப்பிறந்தோயே. (புறநானூறு கசுச)

முட்டத்துப் பன்றி முளரித் திருப்பதத்தைக்
கிட்டத்துப் பன்றிக் கிடந்தேனே—தொட்டு
மருங்கிலே சங்கெடுத்த மாலே யெனக்கு
வருங்கிலே சங்கெடுக்க வா. (க)

பாட்டா னதைவண்டு பாடுங் குழற்சண் பகவல்லிதன்
தாட்டா மரையைத் தொழுதே னினியென் றலையில்விதி
தீட்டான் கருமுகில் போலே வருமந்தச் சேட்டெருமை
மாட்டா னினிவா மாட்டான்வந் தாலும் வணங்குவனே. (உ)

சீமானு நாமகள் கோமானு மேத்தித் தினம்பணிந்து
பூமாலை சாத்திய ரத்நச பாபதி பொன்னடிக்குப்
பாமாலை சாத்திநின் றேனவ னுண்மிகப் பாடுபட்ட
ஏமாவுன் னுலினி யாமாவென் பானுனி யெய்துதற்கே. (௩)

தடங்கொண்ட கல்வில்லின் மெல்லெனப் பூட்டித் தமதுரத்தில்
வடங்கொண்டு சாத்தி விடங்கொண்டு பார்த்து மணிகிளரும்
படங்கொண்ட பாம்பிற் பழகிய பின்மலைப் பாவைதன்னை
இடங்கொண்ட வொற்றித் தியாகேசர் புற்றி னிடங்கொண்டதே. (௪)

புரந்தனை மாலைச் சதுரா னனத்தனைப் போகியைமுப்
புரந்தனைச் சேதித் திமையாத நாட்டப் புலோமசைவாழ்
புரந்தனை மானுந் திருவொற்றி யூரனின் பொன்மணிக்கோ
புரந்தனைக் கண்டனன் காணே னுதிக்கும் புரந்தனையே. (ரு)

விடங்காட்டிக் கண்டத்திற் றோலுரி காட்டித்தன் மெய்யினைப்புற்
றிடங்காட்டி வாலை யொருபுறங் காட்டிவண் டேறுமலர்த்
தடங்காட் டியபொழி லாரூர்த் தியாகர் தமதுபொற்றாட்
படங்காட்டி யாடிநின் றருல கேழும் பணியென்னவே. (சு)

வாழ்நிலைசேர் பொன் னுலகம் வண்களந்தைக் கோபுரத்தின்
ஏழ்நிலைமே லேறிடினு மேறலாம்—பாழ்மனமே
அன்புன்னைக் காட்ட வரனறிவ தேயருமை
தென்புன்னைக் காட்டனடி சேர். (எ)

கஞ்சி குடியாளே கம்பஞ்சோ றுண்ணாளே
வெஞ்சினங்க ளென்றும் விரும்பாளே—நெஞ்சதனில்

அஞ்சுதலை யாவாருக் காறுதலை யாவாளே
கஞ்சமுகக் காமாட்சி காண். (அ)

அப்பிலே தோய்த்திட் டடுத்தடுத்து நாமதனைத்
தப்பிறு னம்மையது தப்பாதோ—இப்புவியில்
இக்கலிங்கம் போறுலென் னேகலிங்க மாமதுரைச்
சொக்கலிங்கந் தானிருக்கச் சொல். (கூ)

மாதர்க் கிதங்கவி வாணர்க்குச் சால வணக்கங்குரு
நாதர்க்கு நீதியோ டாசார நண்பி னயந்தவர்க்குக்
கோதற்ற வாசகம் பொய்க்குப்பொய் கோளுக்குக் கோளறிவில்
ஆதர்க் கிரட்டிப் பறிவுடை யோர்செய்யு மாண்மைகளே. (க0)

மாந்தையிலே வாழு மகுடத் தியாகியுனக்
கேந்து தழும்போ விரண்டுளதே—வேந்தர்
முடித்தழும்புன் காலிலே முத்தமிழோர்க் கீயும்
படித்தழும்புன் கையிலே பார். (கக)

வில்லை வளையாதே மீசைமுறுக் கிச்சினந்து
முல்லைமல ரம்பையென்மேன் மோதாதே—நில்லடா
வந்தார டாமுருகர் வந்துகடப் பந்தாரைத்
தந்தார டாமன்ம தா. (கஉ)

செந்திக்கு மாரன் றிருவழகைக் கண்டவுடன்
வந்திக்கு மாரன் வதைக்கிறுன்—அந்திக்கு
முன்னமே சென்றெனது மோகமெலாஞ் சொல்லிவந்தால்
அன்னமே கும்பிடுவேன் யான். (கங)

தங்க டனமிருக்கத் தார்வேந்த ரெல்லோரும்
எங்க டனத்துக்கே யிச்சிப்பார்—எங்கடனம்
கச்சிருக்கும் பாலிருக்குங் காமபா ணங்கள்பட்டுப்
பிச்சிருக்கும் வேண்டாம் பிளாய். (க௪)

மையூருங் கண்ணுர் மயங்கப் பொருகரும்பு
கையூருங் காமாவுன் கண்ணுணை—செய்யூர்
வளவனையி னுன்பிரிந்த வாறுனக்குச் சொன்ன
உளவனையி னுனென் றுரை. (கரு)

கோழிவாய் மண்ணென்று கொண்டதோ—ஊழி
திரண்டதோ கங்கு றினகரனுந் தேரும்
உருண்டதோ பாதாளத் துள். (௧௬)

அரவங் கரந்ததோ வச்சுமர மிற்றுப்
புரவி கயிறுருவிப் போச்சோ—இரவிதான்
செத்தானோ வில்லையோ தீவினையோ பாங்கியெனக்
கெத்தால் விடியு மிரா. (௧௭)

முலையுங் குழலு முளைப்பதற்கு முன்னே
கலையும் வளையுங் கழன்றாள்—மலையில்
சிராப்பளியா னேறிவருஞ் சேவின்மணி யோசைக்
கிராப்பளியுங் கொள்ளா ளிவள். (௧௮)

பாண்டியன்றா னானேன் பசலைமுலைப் பாலானேன்
ஆண்டிகையி லேந்தியதொன் றானேனே—வேண்டியபோ
துள்ளங்கைத் தேனானே னோர்மதலை பூத்தபின்
புள்ளங்கைத் தேனா னுனக்கு. (௧௯)

நல்லம் புலியணிந்தோ னைந்தனுக் கெட்டநாள்
வில்லம் புடன்கூடி விட்டாலும்—வல்லி
இடையாளே முன்னுலக மேழளந்தோன் மைந்தன்
குடையான தன்றோ கொடிது. (௨0)

சீதார விந்தபுயன் றென்னவன் றிண்சிலம்பிற்
போதாலுங் கண்ணாலும் போர்செய்வோர்க்—கோதும்
கொடியிடையார் தம்மாற் குணமாமோ விந்தத்
துடியிடையாள் கொண்ட துயர். (௨௧)

ஆகச் செய்யுள் ௭௩௭.

---

## துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்.

இவர் ஏறக்குறைய முந்நூறு வருடங்கட்குமுன் தொண்டைமண்டல வேளாளர்க்குத் தீக்ஷாகுருவாகவிருந்த குமாரசுவாமி தேசிகருக்குப்புத்திரர். இவருக்கு வேலாயுதசுவாமிகள், கருணைப்பிரகாசசுவாமிகள் என்ற இருவரும் சகோதரர்கள். சாந்தலிங்கசுவாமிகள் துறவடையுமுன் மணஞ்செய்

# செய்யுட்சிந்தாமணி.

திருந்த ஞானம்பிகை என்ற ... தமது சகோதரர்களுடன் கல்விபயின்றவரும்ஆளமைபிரு ... திலேயேதந்தையை யிழந்து, "தந்தையொடுகல்விபோம்" என்ற மெய்மொழி பொய்மொழியா மாறு பன்னூல்களுங்கற்றுவல்லபுலமையிற் றலைமைபெற்றவராகி, திருவண்ணு மலையிற் சிலகாலமும், அண்ணுமலைரெட்டியார்என்பவர் வேண்டுகோளின்படி வாலிகண்டபுரத்திற்குத் தென்பாகத்திலுள்ள துறைமங்கலம் திருவெங்கை புரமிவைகளிற் பலகாலமும் வசித்திருந்தனர். இவர்க்குஞானசாரியர்பொம்ம புரம் சிவஞானபாலையதேசிகர். இவர் சகோதரர்களுங் கல்வியிற் குறைந்த வர்களல்லர். இவர்கள்மூவருஞ்செய்தருளிய பிரபந்தங்க ளிவையெனப்பின் வரும்பா வுணர்த்தும். அப்பிரபந்தங்களிற் சில கிடைத்தில.

தெருள்சிவப் பிரகாச வடிகளரு ளியநூல்கள் சீர்ச்சோண சை லமாலை, செந்திலந் தாதிவெங் கைக்கோவை வெங்கைக் கலம்பகம் வெங்கையினுலா; செப்பரிய வெங்கையின லங்கார மேசிவப் பிர காச நல்விகாசஞ், சேர்தர்க்க பரிபாஷை நால்வர்நான் மணிமாலை திரிபில்சத மணிமாலையே; அருளுறுஞ் சிவஞானி நெஞ்சுவிடு தூது தா லாட்டுபிள் ளைத்தமிழ்கலம், பகமொடும் பள்ளியி னெழுச்சிகூ வப்புரா ணம்பிரபு லிங்கலீலை; அமையும்வே தாந்தசூ டாமணி சித் தாந்த சிகாமணி பழமலையினந், தாதிபி க்ஷாடன நவமணி மாலை யுட னறைகொச்ச கக்கலிப்பா; மருளதனை மாற்றுபெரி யம்மைக் கலித்துறை வளர்நெடு விருத்தம்யேசு, மதநிரா கரணநன் னெறி யோடு சிவநாம மகிமைதல வெண்பாமுறை; வதியிஷ்ட லிங்கவபி ஷேகமா லையுநெடுங் கழிநெடில் குறுங்கழிநெடில், மாநிரஞ் சனமா லை கைத்தல மாலையா மற்றும்வே லையர்நூல்கள்; வெருளில்கைத் தலமாலை நல்லூர்ப் புராணமலர் விரிபாரி சாதலீலை, வீரசிங் காதன பு ராணமயி லாசல விரட்டைமணி மாலையொடுலா; மிளிர்குகை நமச் சிவா யர்லீலை கருணைப்ர காசர்மே விட்டலிங்க, விதியகவல் சீகா ளத் திப்புரா ணந்தனை விரித்தனரி மூவருமாரோ.

இவருக்கியற்றமிழாசிரியரான தருமபுரவாதீனத்து வெள்ளியம்பலவாண சுவாமிகள் விருப்பப்படி, கு, என்பதை முதலினு மிறுதியினுங்கொண்டு, ஊருடையான், என்பதை இடைப்பெய்து பாடியது.

குடக்கோடு வானெயிறு கொண்டாற்குக் கேழல்
முடக்கோடு முன்னமணி வாற்கு—வடக்கோடு

தேருடையான் றெவ்வுக்குத் தில்லைதோன் மேற்கொள்ளல்
ஊருடையா னென்னு முலகு. (௯)

திருவெங்கைப் பிடாரியாரது உற்சவாதத்தா லிவர் மடத்திலிருந்த
முருங்கைமரம் விழுந்தபோது பாடியது.

திருந்துதமிழிலக்கணவைந்திணைக்கோவைவிருத்தகிரிச்செல்வற்கோதும்
பெருந்தகைமையுடையம்யாம்வீடுமோலைவெங்கனூர்ப்பிடாரிகாண்க
இரும்புவியிலொருமுருங்கைக்கொம்பொடியாமற்காத்திங்கிருக்குநீநம்
முருங்கைதனைவேரோடுங்களைந்தனையென்றாலுனக்குமுறைநன்றாமோ. (உ)

தாம் துறவுபூண்டதை அண்ணாமலைரெட்டியாருணரப்பாடியன.

சேய்கொண்டா ருங்கமலச் செம்மனுட னேயரவப்
பாய்கொண்டா னும்பணியும் பட்டீச் சுரத்தானே
நோய்கொண்டா லுங்கொளலா நூறுவய தாமளவும்
பேய்கொண்டா லுங்கொளலாம் பெண்கொள்ள லாகாதே. (௩)

நிட்டையிலே யிருந்துமனத் துறவடைந்த பெரியோர்க ணிமல
ன்றாளைக், கிட்டையிலே தொடுத்துமுத்தி பெறுமளவும் பெரியசுகங்
கிடைக்குங்காம; வெட்டையிலே மதிமயங்கிச் சிறுவருக்கு மணம்
பேசி விரும்பித்தாலி, கட்டையிலே தொடுத்துநடுக் கட்டையிலே
கிடத்துமட்டுங் கவலைதானே. (௪)

இவர் தம்பின்னோரிருவருக்கு மணம்புரிவித் தாசீர்வதித்துரைத்தன.

ஐயநின் சென்னிமிசை யுறைகின்ற மடமங்கை யாரென்ன வு
மைமினவவும், அன்னதொரு மடமங்கை யன்றுவெண் டிரைகொ
ழித் தழகொழுகு தண்புனலெனத்; துய்யவொளி யானனங் கரிய
விழி காதுவாய் தோயத்தி லுண்டோவெனச், சொல்லருங் கமலம
லர் காவிமலர் கொடிவள்ளை தூயசெங் குமுதமென்னப்; பொய்யென
நினைத்துநற் கொங்கையுங் கூந்தலும் புனலினிடை யுண்டோவெ
னப், புற்புதஞ் சைவலம தெனவே மறுத்துப் புகன்றிடுதி நங்காயெ
னத்; தையலவ ளேனென்ன நாணொடு வணங்கியென் றன்பிழை
பொறுத்திடென்றே, சங்கர னுரைத்திடத் திருவுள மகிழ்ந்தசிவ ச
ங்கரி யுமைக்காக்கவே. (௫)

அரனவ னிடத்திலே யைங்கரன் வந்துதா னையவென் செவி
யைமிகவு, மறுமுகன் கிள்ளினு னென்றே சிணுங்கிடவு மத்தன்வே

லவனைநோக்கி; விரைவுடன் வினவவே யண்ணனென் சென்னியில் விளங்குகண் ணெண்ணினனென, வெம்பிடும் பிள்ளையைப் பார்த்து நீ யப்படி விகடமேன் செய்தாயென; மருவுமென் கைந்நீள முழமளந் தானென்ன மயிலவ னகைத்துநிற்க,மலைபரைய னுதவவரு முமை யவளை நோக்கிநின் மைந்தரைப் பாராயெனக்; கருதரிய கடலாடையுலகுபல வண்டங் கருப்பெறு நின்றகன்னி,கணபதியை யருகழைத் தகமகிழ்வு கொண்டனள் களிப்புட னுமைக்காக்கவே. (சு)

அம்பிகை யரன்றன்னை நோக்கியுன் றுபரண மரவமென வுமை யைநோக்கி, யரியரவ சயனத்தை யரவுருவ மானத்தை யறியாய் கொல் சிறிதுமென்ன; நம்பிமனை தொழுமிரந் துறுமாண்டி நீயென்ன நான்றுத னறிவேனென, நவையுறும் பொய்புகன் றீரெனப் பாரத நடந்ததே கரியாமென; வெம்பியொரு வன்பிரம் பாலடித் தானென விளங்கிழை யொருத்திதாம்பால், வீசினது சொல்லென்ன வெண்ணு பிரம்பெண்கண் மிகுகற்பை நீக்கினையென; பம்புகற் பினிலோ ரிரட்டிப்பு நீக்கினது பகரும னீகேளெனப். பரமருடனிவ்வாறு விளையாடு பச்சைப் பசுங்கொடி யுமைக்காக்கவே. (எ)

அச்சுத னளிப்பனில முமதுநே யன்வித்தை யருளுவன் பலபத்திரன், அலமுதவு வன்சமன் பகடிவ னந்தமக் கானதோ ரெருது முண்டே; முச்சிர வயிற்படை யினைக்கொழுவ தாக்குவோ மொய்ம்புட னிழுத்திறுக்க, முந்திய வடக்கயிற் றுடன்மற்று நமதன்பர் முன்போ யிரந்துகொள்வோம்; இச்சையுடை நமதிளைய தனையனு கியகந்த னினிமையொடு மாடுமேய்ப்ப, னினியுழுது பயிரிடுத னன்று நன் றிதைவிட் டிரந்துண்ப தீனமெனவே; கச்சுமுலை மாதுமை யுரைத்திடும் புத்தியைக் கைக்கொண் டுளத்திலிதுநற், காரிய மெனக் கருதி மெத்தக் களித்திடுங் கண்ணுத லுமைக்காக்கவே. (அ)

கவுரிகம லாயரனி ரந்தசோ றிதுவெனக் கமலைமண் கண்டேனெனக், காளையொன் றேயரற் கெனமாடு மேய்த்ததைக் கட்டிடைய ரோவெனச்; சிவனொருவர் தாமென்ன வத்தாது சென்றகதை செப்பிலொரு பாரதமெனச், சேரேடு திருடினு னரனெனக் கட்டுண்ட செய்திநா மறிவோமெனை; அவையினட மாடினு னரனென்ன வவ்வாட லரவமறி யாதோவென, ஆலமதை யுண்டன னரனென்ன

மண்ணுண்ட வதனைப்றி யோமோவென; விவரமொடு மலைமகளு மலர்மகளு மிவ்வாறு விளையாடி மிவர்களுடனையா, மேவிவரு புத்ரமித் திரகளத் திரருடன் மேன்மேலு மிகவாழியே. (கூ)

‡விற்ற தார்கலை பாதி யோடு வனத்தி லேயழ விட்டதார்
 வெஞ்சி றைப்புக விட்ட தார்துகி லுரிய விட்டு விழித்ததார்
உற்ற தாரமும் வேண்டு மென்றினி மன்னர் பெண்கொள லொண்ணுமோ
 வுபய டாமண மென்ற வாய்கிழித் தோலை காற்றி லுருட்டடா
வெற்றி யாகிய முத்தி தந்தருள் வெங்கை மாநகர் வேடர்யாம்
 விமல ரானவ ரெமை யடுத்தினி தெங்கண் மிச்சின் மிசைந்தபின்
பெற்ற வேலர் தமக்கு யாமொரு பெண்வ ளர்ப்பினி லீந்தனம்
 பெற்ற பிள்ளை கொடுப்ப ரோவிதெ தன் பேய்பிடித்திடு தூதரே.

‡தளங்குமொழிக் கிங்கடனை யம்புலியென் றுலகமெலாஞ் சொல்லக்கேட்டும், பளிங்கனைய வயிற்றினது விழுங்கியமான் புறந் தோன்றப் பார்த்துங் கெட்டேன், இளங்கொடிய புலிபிறென வறிக் கிலை னறிந்தேனே லென்பட்டாலுங், களங்கணிமா மிடற்றிறை யைத் திருவெங்கைக் காவலனைக் கைவிடேனே. (கக)

திருக்காட்டுப் பள்ளியிலுப்புவிற்ற ஓர் பெண்ணை நோக்கிக் கூறியது.

நிறைய வுளதோ வெளிதோ கொளுவேம்
பிறையை முடிக்கணிந்த பெம்மான்—உறையும்
திருக்காட்டுப் பள்ளி திரிபாவாய் நீயிங்
கிருக்காட்டுப் பள்ளி யெமக்கு. (கஉ)

ஒருநாளிவர் ஞானாசிரிய ரோடிருக்கையிலெழுந்த சந்திரனைக்கண்டுரைத்தது.

* கடன்முரச மார்ப்பக் கதிர்க்கயிற்று லேறி
அடைமதி விண்கழைநின் றாடக்—கொடைமருவும்
எங்கள் சிவஞான வேந்த லிறைத்தமணி
தங்கியவே தாரகைக டாம். (கந)

இவருக்கு மடங்கட்டிக்கொடுத்த சிதம்பர பூபதியைப் புகழ்ந்துரைத்தது.

* வெங்கைப் பழமலை யார்மீது கோவை வியந்துரைக்கும்
எங்கட் கினிய சிவஞான தேவ னிசைவுகொடு
திங்கட் பவனி யிருகான் முதுகுன்றார் சேர்மறுகில்
மங்குற் சிதம்பர பூபதி நல்கு மடமிதுவே. (கச)

‡ இவை வெங்கைக்கலம்பகத்தோடு தனிச்செய்யுட்களாயிருக்கின்றன.

ஓர்மாங்கனிக்காக இவர்மகிமையறியாது ஒருவன் மடிபிடித்தபோது பாடியது.

அடுத்துவருந் தொண்டனுக்கா வந்தகனைத் தாளால்
அடர்த்ததுவுஞ் சத்தியமே யானல்—எடுத்ததொரு
மாங்கனிக்கா வென்னை மடிபிடித்த மாபாவி
சாங்கனிக்கா தித்தன்வரத் தான். (கரு)

கருணைப்பிரகாச சுவாமிகள் சிவலிங்க வைக்கியமானபோது பாடியது.

முன்னமொரு தமிழ்ப்புலவன் றனையுண்டு கண்டசுவை முதிர்ச்சியாலே
தன்னியலை முழுதுமுரைத் தமையாமுன் னினைக்கவர்ந்து தடங்காளத்தி
மன்னவனுண் டானெனது மாதவத்தின் வலிதீர மண்ணின்மீதே
என்னுடன்வந் தவதரித்த விளங்கருணைப் பிரகாசனென்னுங்கோவே. (கசு)

திருக்காட்டுப்பள்ளியி லுப்புவிற்ற பெண்மணி இவரைத் துதித்தது.

தென்னாங்கு தில்லைச் சிவப்பிரகா சப்பெருமான்
பொன்னாங்கு சேவடியைப் போற்றினோம்—அன்னோன்
திருக்கூட்ட மத்தனைக்குந் தெண்டனிட்டோந் தீராக்
கருக்கூட்டம் போக்கினோங் காண். (கள)

ஆகச்செய்யுள் எருச.

---

## வேலையசுவாமிகள்.

கருணைப்பிரகாச சுவாமிகள் சிவசாயுச்சியமடைந்தபோது பாடியது.

ஆண்டதனை வெளையொவ்வாய் வித்தையினிற் றமயனினு மதிகமென்றே
பூண்டவுலகதனினுள்ளோர் புகல்வதுகேட் டிருந்துமென்ன புதுமைதானோ
காண்டகுகண் மணியோல் விளங்கருணைப் பிரகாசக் காளாய்நீதான் [னே. ()
மாண்டனையென் றறிந்திருந்து முயிர்தரித்தேன் யானுமிகு வன்னெஞ்சே

சிவப்பிரகாச சுவாமிகள் பரசிவத்திற் கலந்தபோது பாடியது.

அல்லிமலர்ப் பண்ணவனு மாராய்ந் தறிகவிதை
சொல்லு மிருவரிடைத் தோன்றியயான்—முல்லை
அரும்பிற் பொலியு மணிமுறுவ னல்லாய்
கரும்பிற் கணுநிகர்த்தேன் காண். (உ)

ஆகச்செய்யுள் எருசு.

---

## கருணைப்பிரகாசசுவாமிகள்.

மணஞ்செய்துகொள்ள வேண்டிய கருத்தைக் குறித்துரைத்தது.

நாணி யென்பதை நாரியென் றுரைத்திடு நகையால்
வேணு வானது வளைந்துபோய்ப் புகுந்தது வென்றால்
காண லாவதோ ருருவமெய்ந் நாரியைக் கண்டால்
பூணு வார்மயல் காளைய ரென்பதும் புதிதோ. (க)

ஆகச்செய்யுள் எஙஎ.

---

## சொக்கநாதப்புலவர்.

இவரைப்பற்றிய சரித்திரம் விளங்கவில்லை. இவர்பாடியதாக வழங்கு கிற தனிப்பாக்களையன்றி வேறு ஓர் நூலையும் பார்த்திலம். மாவைப்பதிக் கறுப்பணனென்னுஞ் சீமான்மேற் பாடியன.

சீர்கறுத்த முகிற்கரத்தான் கஸ்தூரி பூபனருள் சேயாவென்றும்
ஓர்கறுப்பு மில்லாத தொண்டைவள நாட்டிற்கு முசிதவேளே
ஆர்கறுப்ப னென்றுசொல்லி யழைத்தாலு நாமுன்னை யன்பினாலே
பேர்கறுப்ப னிறஞ்சிவப்பன் கீர்த்தியினால் வெளுப்பனெனப் பேசுவோமே

பிள்ளைவய தினிற்கல்வி கற்றோம்பின்பு
பெரியநர வாகனமும் பெற்றோம் பூமி
உள்ளளவுங் கீர்த்திநிலை நிறுத்திக் கொண்டோம்
ஒருகுறையு மில்லையினி யுரைப்பக் கேண்மோ
தெள்ளிலகு சிதம்பரத்தைத் தெரிசித் தோம்பின்
சேர்கருங்கட் டளவநகைத் தெய்வ யானை
வள்ளிபுணர் சிவப்பனையுந் துதித்தோ மெங்கள்
மாவைவளர் கறுப்பவுனை வாழ்த்தி னோமே. (உ)

நிணம்போதத் தள்ளிப் பெரும்பூதம் போலப்பின் னேற்றுச்செத்த
பிணம்போற் கிடந்து புரளுவர் காண்பிறர்க் கீட்டிவைத்த
பணம்போன பின்பு விவேகமுண் டாகுமப் பஞ்சைகள்வங்
கணம்போதும் போதுங் கறுப்பாதென் மாவையிற் காவலனே. (ஙு)

ஏவைக்குங் கூன்சிலை தொட்டா னனங்க னிருவிசும்பில்
தீவைக்குந் திங்கட் குடையெடுத் தான்றென் றற் றேறுகைத்தான்

காவைக்குங் கண்மணி கஸ்தூரி யின்ற கறுப்பன்வரை
மாவைக்கும் பாவைக்கும் பூவைக்கும் போது வடுவைக்குமே. (ச)

எல்லப்ப னம்மையப்பன் றருதிருவேங் கடராம னெழிற் சீராமன், வல்லக்கொண் டமனுடனே மாதைவெங்க டேசனைப்போல் வரிசை தந்தான், செல்லத்தம் பியருடனே மாவையில்வாழ் கறுப்பனைற் றெருவீதிக்கே, பல்லக்குத் தான்சுமந்தா னதுமக்கோ ராயிரம்பொன் பரிசு தானே. (டு)

திப்பையராயன்மேற் பாடியன,

இந்திரன் கலையா யென்மருங் கிருந்தா னக்கினி புதரம்விட் டகலா, னமனெனைக் கருதா னரமெனக் கருதி நிருதிவந் தென்னை யென் செய்வான்; அந்தமாம் வருண னிருகண்விட் டகலா னகத்தினின் மக்களும் யானும், அநிலமா தாகு பழுதினைக் கொள்வோம் யாரெதி ரெமக்குளா ருலகில்; சந்தத மிந்த வரிசையைப் பெற்றுத் தரித்திர ராசனை வணங்கித், தலைசெயு மெம்மை நிலைசெய்சற் கீர்த்திச் சாளுவ கோப்பைய னுதவும்; மந்தர புயத்தான் றிப்பையராயன் மகிழ்வொடு விலையிலா வன்றேன், வாக்கினுற் குபேர னாக்கினு னவனே மாசிலீ சானபூ பதியே. (கூ)

வண்டுகிண்டிய தொங்கலோதி குணக்கெழுந்திடு மதிலமோ
மன்னுநூபுர மோபயோதர மூருவானவர் கணிகையோ
அண்டர்பூபதி வனிதையோமுக மமுதவாயிதழ் தும்பியோ
அரிகையாயுத மோபிறந்திட மன்னமென்ன வுலாவுவீர்
கொண்டநண்பு முதாரமுந்தவ ருூதகோகன கானனன்
குத்திபல்லவ ராயமேரு குணுளதிப்பையன் வரையின்மேல்
துண்டவெண்பிறை வேணிகைச்சிலை நாணெனப்புக லாவிடின்
தூரமோவதி பாரமோவரு சேரலற்குறு தொங்கலே. (எ)

கூத்தன்கவியைப் புகழ்ந்துரைத்தது,

துளைபடு மாமர மோரேழு மெய்தவன் றாறுகவி
உளைபடு வாரிதி யொன்றே கடந்த தொளிர்தரள
வளைபடு வாவி மணவைமன் கூத்தன் வகுத்தகவி
தளைபடு காலுட னேகடலேழும் தாண்டினதே. (அ)

சேலம் கெங்காதரனைப் புகழ்ந்தது.

ஆங்கா தராதல மெங்கு மொருமிக்கத் தூய்த்தநர
சிங்கா தராதரந் தானறிந் தோல்கச் சேலம்வந்த
கெங்கா தராநின் புகழ்கேட் டசைப்பன் கிரீடமென்றே
வெங்கா தரவுக்குச் செய்தா னிலைமலர் வேதத்தனே. (௯)

இவர் பல்லக்குக் கொம்பொடித்தவனை இகழ்ந்துரைத்தது.

அட்டாவ தானமுந் தொல்காப் பியமு மகப்பொருளும்
தொட்டாதி தொட்டப்ர பந்தமெல் லாநம்மைச் சொல்லச்சொல்லி
ஒட்டாரங் கட்டிநம் பல்லக்குக் கொம்பை யொடித்தெறிந்த
தட்டாரப் பைய லரிகர புத்ரனைச் சண்ணினனே. (க0)

இரசை வடமலையப்பன்மேற் பாடியது.

புரசை வடமலை யப்பா விருட்கயம் பூண்டுகொண்டு
முரசை வடமலை யப்பா லுஞ் செல்ல முழக்கஞ்செய்தோய்
சிரசை வடமலை யப்பாம்பின் வைத்துத் திருக்கண்வளர்
இரசை வடமலை யப்பாவிப் பாருக்கொ ரிந்திரனே. (கக)

சவரிப்பெருமாள்மேற் பாடியது.

சோதிச் சவரி விழிக்கோ கரவில்லை தூயகுழல்
கோதிச் சவரி முடிக்கறி யாள்கொண்ட கோலமென்னே
நீதிச் சவரிப் பெருமாளென் றோதி நினைந்துருகப்
போதிச் சவரிவட் காரோ வறிகிலன் பூங்கொடியே. (கஉ)

கச்சிக் காளத்திமுதலியார்மேற் பாடியது.

அந்திக்கார் வந்துமய லாற்றுவா ரன்னையிடு
வந்திக்கார் வந்து வழக்குரைப்பார்—நந்திக்கார்
கச்சிக்கா ளத்திக்கார் காதலுரைப் பார்கனகக்
கச்சிக்கா ளத்திக்கார் காண். (கங)

கோவளம் சண்முகன்மேற்பாடியது.

இருப்போமென் றூலு மிராதுளமா னேயிக்
கருப்போமென் றூலுங் கசக்கும்—விருப்பாரும்
காசண் முகனைக் கடல்புடைசூழ் கோவளம்வாழ்
மாசண் முகனை மறந்து. (கச)

பாரவிள நீர்சுமக்கப் பண்டே பொருதவிடை
ஆர வடஞ்சுமக்க வாற்றுமோ—நேரே
புடைக்கனத்த கொங்கையின்மேற் பூங்களபஞ் சாத்தி
இடைக்கனத்தம் வைத்தவரா ரின்று. (கரு)

முன்னே யிரண்டுமுலை முற்றியபின் னானுமுலை
எந்நேர மென்மாதலைக் கெட்டுமுலை—எந்நாளும்
பைந்நாகஞ் சூழ்மதுரைப் பாணுநின் பாகனுக்கிங்
கென்னகை மென்னு மினி. (கசு)

நங்கை யொருத்தியையு நாமிருவர் மூவரையும்
பொங்கு மமளி பொறுக்குமோ—சங்கம்
குழையவரால் பாயுங் குருநாடர் கோவே
பழையவரா லென்ன பயன். (கஎ)

நங்கை பயண நமக்கென் றுரைத்தளவில்
அங்கம் பசலைநிற மானதே—செங்கை
வளைநெகிழப் பாதி மறுத்தேனென் றேதக
உளநெகிழப் பாதி யுடைந்து. (கஅ)

உன்னுயிரு மென்னுயிரு மொன்றென்ப தின்றறிந்தேன்
மன்னுபுகழ் மச்சத்தார் மன்னவா—உன்னுடைய
பொன்னகத் தெங்கையர்தம் போகநகச் சின்னங்கண்
டென்னகத் தேயெரிகை யால். (கசு)

ஒருவர்க் கிடமா யுகந்திருந்த பாயல்
இருவர்க் கிடமாய தென்னோ—மருவலரைக்
கன்னாட்ட வின்னாட்டுங் கண்டன் கரிகாலன்
தன்னாட் டிதுபுதுமை தான். (உ0)

இந்தவிடை நிற்பதரி தென்னாணை யும்மாணை
சந்தேக மாகச் சமைத்தானோ—அந்தவயன்
பாரதிரா மன்வரையிற் பைங்கொடியீர் கொங்கையிள
நீரதிரா மன்னடமின் னீர். (உக)

மேவி லுடனே விடியும் விடியாது
கோவை மணிமார்பன் கூடாநாள்—தேவர்

திரண்டா தரிக்கின்ற தென்னரங்க மாலே
இரண்டாலும் பொல்லா திரா. (உஉ)

அம்பலவா வின்னொருகா லாடினு லாகாதோ
உம்பரெலாங் கண்டதெனக் கொப்பாமோ—சம்புவே
வெற்றிப் பதஞ்சலிக்கும் வெம்புலிக்குந் தித்தியென
ஒற்றிப் பதஞ்சலிக்கு மூர். (உ௩)

செல்லாரும் பொழில்புடைசூழ் புலியூரம் பலவாண தேவாவும்மைக், கல்லாலும் வில்லாலுஞ் செருப்பாலும் பிரம்பாலுங் கடிந்துசாடும், எல்லாரு நல்லவரென் றெண்ணியரு ளீந்ததென்ன விகழ்ச்சியொன்றும், சொல்லாமன் மலரால்விட் டெறிந்தவனைக் காய்ந்ததென்ன சொல்லுவீரே. (உச)

மெய்யிலே யொருபாதி யுமைக்களித்த செங்காட்டு விமலனேரே, மையிலே தோய்ந்தவிழிச் சந்தனமான் றலைக்கறியை வளமாயாவின், செய்யிலே தான்சமைத்துக் கொடுத்திருந்தும் படைத்திருந்து நீர்தானின்று, கையிலே மழுவெடுத்தாற் பொய்யாமோ பிள்ளைகொன்ற களவுதானே. (உரு)

துப்பரையுமரகதத்தின்கொழுந்தரையுமொன்றாகத்துலங்குமெய்யா
செப்பரியபுலியதளைத்தரிக்குமுத்தராபதிபிற்சிவனேநீதான்
அப்பரையும்விழுங்கியொருபிள்ளையுந்தின்றுற்றுமலேயோவின்னும்
கப்பரையுங்கையுமாய்ப்புறப்பட்டாய்நல்லதிருக்காட்சிதானே. (உசு)

அடிபட்டீர்கல்லாலுமெறிபட்டீரத்தனைக்குமாளாயந்தப்
படிபட்டும்போதாமலுதைபட்டீரிப்படியும்படுவாருண்டோ [ணல்
முடிபட்டசடையுடையீர்கழுக்குன்றீர்முதற்கோணன்முட்டக்கோ
இடிபட்டும்பொறுத்திருந்தீர்சிவசிவாவுமைத்தெய்வமென்னலாமே.()

உம்பரை வாழ்வித்த நஞ்சங்கண் டோமொண் புரமெரித்த
அம்பரை யேற்றிய சூலங்கண் டோமரு ளுங்குறைவில்
நம்பரை பாகமுங் கண்டோ மவர்திரு நாமஞ்சொல்லா
வம்பரை யுங்கண்ணிற் கண்டோம்வெண் காடனை வாழ்த்துங்களே.

நல்லாளை யிடமருவுந் தியாகையா வுமதிடத்தி னியாயங்காணேம், கல்லாலே யெறிந்தோர்க்குஞ் செருப்படியா லுதைத்தோர்க்கும்

கடிந்துபோரில், வில்லாலே யடித்தோர்க்குங் கொடுத்திரே யல்லாமல் விழிநீர்சோர, எல்லாமுஞ் செயலென்றே யிருப்போருக் கியாதேனு மீகிலீரே. (உக)

பண்காணும் தமிழ்ப்புலவீ ரினத்தோடே யினஞ்சேரும் பரிசே போலத், தண்காவி மலர்த்தடஞ்சூழ் காவிரிநாட் டொருபுதுமை சாற்றக்கேளீர், கண்காண நரையான்மேல் வெண்காடை வீற்றிருக்கக் கண்டோமந்த, வெண்காடை யிடப்புறத்தே பச்சையன்னங் கலந்திருக்கும் விதங்கண்டோமே. (௩௦)

*மன்னுநரை யானை வனப்பினுக்கொக் கானை
மாந்தியவுச் சிட்டனை மங்கைதங்காக் கையனை
பன்னரிய வலியானைத் தோல்விலங்கா டையனைப்
பஞ்சரங்க ளமைப்பானைப் பகருமளி யானை
உன்னுதலி லாநெஞ்ச மடையானைப் புகழ்ந்தே
யோதினர்க் கருளுகவு தாரியெமுள் ளானைத்
தன்னிகரி லாக்கிழவிக் காட்காட்டி னானைத்
தமிழ்சேர்வெண் காடையருட் கருடனையேத் துவமே.

காப்பிட்ட பிள்ளைக் கறிக்கிச்சைப் பட்டுவை யைக்கரைமேல்
மாப்பிட்டு வந்த மயிலேச னேமலே யானநின்னைக்
கூப்பிட்டு நின்று குனிந்தொரு கோலக்கொம் பாற்றடவிப்
பூப்பட்ட கண்ணிச் சயமாக்கி னன்மைப் புயல்வண்ணனே. (௩௨)

துயிலையி லேயிடர் துன்னையி லேதெவ்வர் சூழையிலே
பயிலையி லேயிருட் பாதியி லேபசும் பாலனத்தை
அயிலையி லேவய தாகையி லேநமக் கார்துணைதான்
மயிலையி லேவளர் சிங்கார வேலர் மயிலயிலே. (௩௩)

போதா சிவகுரு நாதா கலவை புழுகொடுசெவ்
வாதார்ந்த கொங்கைக் குறமாது வள்ளிக்கு வாய்த்திடுமின்
பாதாரு கற்செற்ற வேல்விடுத் தாலென் பகையையறுக்
காதா மனமிரங் காதா சிவகிரிக் காங்கயனே. (௩௪)

ஆலங் கிடக்கு மனத்தார்க் கொருநன்றி யம்பிலிட்ட
கோலங் கிடக்குங் கிடக்குங்கண் டாய்குறை யாதகுண

சீலங் கிடக்கு மனத்தார்க் கொருநன்றி செய்யில்வெகு
காலங் கிடக்குங்கண் டாய்வணி காசெந்தில் காத்தவனே. (கரு)

வெங்காயஞ் சுக்கானால் வெந்தயத்தா லாவதென்ன
இங்கார் சுமந்திருப்பா ரிச்சரக்கை—மங்காத
சீரகத்தைத் தந்தீரேற் றேடேன் பெருங்காயம்
ஏரகத்துச் செட்டியா ரே. (கசா)

சிந்தா மணிசங்கு தேனுமலர்த் தாமரைசீர்
ஐந்தருவு நின்னவே யாயிருக்க—வந்தேதான்
கச்சவிட மேயுண்ட கண்டா கடைதோறும்
பிச்சையிரந் துண்டதென்ன பேசு. (கஎ)

பண்டனைப் பண்டனை யோதுபெம் மானைப் பனிவரைக்கோ
தண்டனைத் தண்டனைச் செய்புமுத் தண்டனைத் தண்டனைமூ
தண்டனை யண்டர் தொழுந்திரு மாற்பே றமர்ந்தமணி
கண்டனைக் கண்டனை யாயினெஞ் சேமுத்தி கண்டனையே. (கஅ)

வேளுக்கு வாம்பரியும் வில்லுக்கு நீலமுஞ்சேல்
வாளொக்குங் கண்மடவார் வாய்க்காடும்—நாளும்
மருதப் பனையே வளர்த்துவிட்ட தாலே
மருதப் பனைவணங்கு வாள். (கசு)

மாதா வுடல்சலித்தாள் வல்வினையேன் கால்சலித்தேன்
வேதாவுங் கைசலித்து விட்டானே—நாதா
இருப்பையிலே வாழ்சிவனே யின்னமோ ரன்னை
கருப்பையிலே வாராமற் கா. (உ0)

காளத்தீ கண்டத்தே காளத்தீ நெற்றியிலே
காளத்தீ யுன்றன் கரத்திலே—காளத்தீ
அங்கமெங்கும் வெவ்வழலை யாற்றினாள் ஞானப்பூங்
கங்கையென்னும் பெண்ணொருத்தி கண்டு. (உக)

சந்திரனுக் குடலூனங் தனதனுக்கோர் கண்ணூனங் தருவினீ மூல், இந்திரற்கோ பகக்குறியா மியமனுக்கோ புழுக்காலா மிரவியீ ன்ற, மைந்தனுக்கோ கான்முடமாம் வனசனுக்கோர் தலைகுறையாய்

வாழ்வராயின், பந்தமுள மானிடரை விதிவிடுமோ வாலவாய்ப் பதியுளானே. (௭உ)

ஆகச்செய்யுள் ௭௧௧.

---

## திவ்யகவி பிள்ளைப்பெருமாளையங்கார்.

பாண்டிநாட்டிலே வேதியர்குலத்திலே அவதரித்து ஆழ்வார்க ளருளிச்செயல்களின் இரகசியார்த்தங்களை நன்குணர்ந்தஇவர், மதுரையில் திருமலைநாயக்கர் அரசுசெய்தகாலத்தில் அவர்பால் இராயசம் என்னும்உத்தியோகத்திலிருந்தனர். அந்நாளிலொருநாள் இவர் தமது உத்தரீயத்தை "கிருஷ்ண, கிருஷ்ண" என்று தேய்த்தனர். அதுகண்டவர்கள் அதைப்பற்றிக் கேட்க, "திருவரங்கத்தில் திருத்தேரின்திரையில் தீபற்றிய தவிர்ந்து பெருமாள்எழுந்தருளுகின்றார்"என்றனர். இதுகேட்டவர்கள் இவரை நகைத்திகழ நாயக்கரோ மிக்க ஆச்சரியமடைந்து அத்தலத்தாரால் உண்மையறிந்து இவர்பால் வந்துவணங்கி யுபசரித்துப் பெரியகோயில் சலவைக்கன்மண்டபப்பிராகாரத்தில் ஒருஅறையும்,தினந்தோறும்தளிகைப்பிரசாதமுங்கிடைக்கும்படிசெய்து அனுப்பிவிட,இவர்அங்குபோயிருந்துதிருவரங்கப்பெருமானுக்குக்கலம்பகம், அந்தாதி, மாலை, ஊசல், அழகர்திருமலைக்கு அந்தாதி, திருவேங்கடத்துக்கு அந்தாதி, மாலை, நூற்றெட்டுத்திருப்பதியந்தாதி அருளிச்செய்தனர். இவைகளையே அட்டப்பிரபந்தமென்பர். அழகியமணவாளதாசர் என்ற மற்றோர் பெயரும் இவருக்குண்டு. இவர் சந்ததியா ரிப்போது மிருக்கின்றார்கள்.

இவர் வைணவமதத்தை யிகழ்ந்த சிலசைவர்களை நோக்கிக் கூறியன.

*அண்ட மளக்க வடிக்கீ ழொடுங்கியுல
குண்ட பொழுதுதரத் துள்ளொடுங்கித்—துண்டமதி
சூடினான் மாலருளாற் றேன்றினா னங்கவனைத்
தேடினான் மாலென்ப தென். (௧)

*ஆவா யதன்கன்று யந்தரியா மிப்பொருளாய்
ஏவாய்ப் பவுத்தனுமா யெம்பெருமான்—காவாக்கால்
போரும் பொருமோ புராந்தகனென் றேபேருஞ்
சீரும் பெறுமோ சிவன். (உ)

* அந்த வரனே யுனுமாறு கப்பிறந்து
சந்தழும் வாகனமாத் தாங்கியதை—யிந்தவுல

கெல்லா மறியமா லேறானா னென்பதென்னோ
கல்லா மடமாந்தர் காள். (௩)

* தாளாய்த் தலைசிதறிச் சுட்டவிடம் புன்முளைத்து
வாளாப் பெயரு மறையாதோ—தாள்வருந்த
வந்தசிவ னுக்கிரங்கி மாயவிரு காசுரனை
அந்தவரி கொல்லாவிட் டால். (௪)

* சக்கரத்தை மிக்கமலர் சாத்தியுபா சித்ததனால்
முக்கவட்டுச் சூல முனம்பெற்றா—னக்கனென
மாமறைநூல் சொல்லவரன் மாற்கஃதீந் தானெனலென்
தாமதநூற் பொய்யில்விழுந் தார். (௫)

* சின்முத் திரைதரித்துத் தெக்கணா மூர்த்தியென
இன்ன மரன்றியா னித்திருக்க—முன்னமரி
போதோர்கண் ணாலரனைப் பூசித்தா னென்றுரைப்ப
தேதோ சிவப்ராந்த ரே. (௬)

* அண்டமுண்ட போதுகட லாலமுமா லத்தையுண்ட
கண்டனையுங் கூடவுண்ட கார்ணனை—மண்டுநெஞ்சக்
கஞ்சினதா கப்பகர்வீ ராகமத்தை நம்பிநம்பி
வஞ்சநர கில்விழுவீர் மாண்டு. (௭)

* மலைமடந்தை தன்கழுத்தின் மங்கலநா ணேதோ
அலைகடைந்த நாளுதித்த வாலம்—கலைகடந்த
நக்கனும் பாத்திரத்தா னாரணனா ருள்ளமுகந்
தக்கணைத்துண் ணாவிடினா வா. (௮)

* புக்க கருடனையோர் புன்மசகம் வென்றதிறம்
ஒக்குங் கனக னுரங்கீண்ட—மிக்கதிறல்
ஆளரியைப் பொன்னனுக்கா யஞ்சிக் கிடந்தசிவன்
கோள்விளைத்தா னென்னுங் குறி. (௯)

* பொன்னனுரங் கீண்டதனாற் பொங்குசின மாறிற்றோ
துன்னு சிவசரபஞ் சோரவுயிர்—அன்னதனைப்
பற்றி வகிர்ந்தபின்னர்ப் பாழி நரமடங்கல்
உற்ற சினந்தணிந்த தாங்கு. (௰)

* இந்திரன்செய் வேள்விக் கிடரிழைக்க வெண்ணுமரன்
ஐந்தலையு மற்றுவிழ வாழியினன்—முந்தரிந்த
அச்சுதனை மைந்தரொடு மம்பிகையாள் வேண்டிடனும்
அச்சிவன்பெற் றுனுயிரை யன்று. (கக)

* கேட்டுமறி யீர்கொல் கிளர்சடையோன் வண்காசி
நாட்டிறப்போர் தம்முயிரை நற்கதியிற்—கூட்டல்
தயரதகு மாரன் றனிப்பெயரன் னோர்க்கு
வயமுறப்போ தித்தன்றோ வாய்ந்து. (கஉ)

* செய்தவங்கள் செய்து சிவனுயி னைனீர்
எய்த மகேச்சுர னென்றேத்தல்—வைதசிறு
புன்கள்ளி தன்னைப் புவியின் மகாவிருக்கம்
என்கையொக்கு மொக்குமே யீங்கு. (கந)

* ஒருகத்தி லூருவினி லோருகத்திற் பூருவிலம்
போருகத்தன் பாற்பிறந்த போழ்ததனிற்—கார்நிறத்த
கண்டத்தான் ரோதனஞ்செய் காரணத்தால் ருத்திரனென்
றெண்டவ நூல்களுரைக் கும். (கச)

* ஞான மறையை நவின்றுரைக்கும் போதெல்லாம்
ஆனமுறை யாலாதி யந்தத்தும்—ஊனமற
அந்தணர்க ளென்போ ரரியோ மெனுஞ்சொல்லைத்
தந்துரைத்தல் கேட்டிலிரோ தான். (கரு)

* பிருகுகோத மன்முன் பெருஞ்சினங்கொண் டின்பம்
பருகுமையீ சன்குறிகள் பாரில்—அருகிவிழ
இட்டசா பத்தினு லிற்றகுறி யன்றோநும்
இட்டதெய்வ மாயிருந்த லீங்கு. (கசு)

* கையிருக்கக் காலிருக்கக் கண்ணிருக்க நக்கனுக்கு
மெய்யிருக்க வன்பா விரும்பாதே—வைதுவிழும்
ஆண்குறியைப் பூசித் தழிவதெல்லா மாயவனை
வீண்குறியாப் பேசும் வினை. (கஎ)

* மோகனநூற் பல்சமய முன்னியற்றுந் தீயவினை
போகநறு நாவலின்கீழ்ப் போந்துமையாள்—பாகனன்னீர்

பம்புசீர ரங்கற் பணிந்துதவஞ் செய்ததன்றோ
சம்புகேசு ரப்பேர்த் தலம். (௧௯)

* பொன்னிலங்கு மெய்யன் பொருவலிசேர் வாலியொடு
தென்னிலங்கைக் கோமான் றிறல்வாணன்—முன்னரனைத்
தாழ்ந்து பெறுவரத்தைச் சாற்றிடவும் வேண்டுமோ
வாழ்ந்துவிடுந் திட்டனரே வாய்ந்து. (௧௯)

* யாரு மறிய வெசுருவே தாரணமெய்
ஆருமொழி யாளனென வாய்ந்துரைக்க—ஓர்வின்றி
வேதவியா சன்பொய் விளம்பக் கரந்தம்பித்
தேதமுறு நின்றதென்ப தென். (௨0)

* முனிவ ரெழுவர் முதுபராச ரன்செம்
பனிமலரா ளுள்ளிட்ட பல்லோர்—இனிதாய்த்
திருமால் பரனென்னச் செப்பினரன் ளோர்க்கென்
பெருநாத்தம் பிக்காத பெட்பு. (௨௧)

* பிறப்பிலியாய்த் தானிருந்து பேருலகின் மாயோன்
உறப்பிறக்கு மென்றுமறை யோத—மறுத்துநீர்
அச்சுதனைச் சாதமுடை யானென் றறிவிழந்த
பிச்சரிற்பி தற்றுவதென் பேச்சு. (௨௨)

* ஆய வறத்தை யறவோரை யாக்கவும்வெந்
தீயர்தமைப் போக்கவுமே திண்புவியில்—மாயுகங்கள்
தோறுமுற்ப விப்பனெனத் தொல்கீதை யிற்கண்ணன்
கூறுமொழி தேர்கிலிரோ கூர்ந்து. (௨௩)

* உடையானுக் கன்றி யுடைப்பொருளைக் காக்கப்
படையார் தமக்குண்டோ பாரம்—அடைவாகச்
சீதரனார் காக்கத் திருவவதா ரஞ்செய்வர்
சேதனருக் கேனச் செயல். (௨௪)

* விச்சுவவ ரன்சுகனு மேலோன் சமதங்கி
அச்சுவத்தா மன்னனுமே னவ்வுருவன்—மெச்சுபுகழ்
பொங்குதுரு வாசன் பொலிசை கிடவியனார்
சங்கரன்பி றப்பன்றோ தாம். (௨௫)

* அங்கி யமன்வாயு வாகண்ட லன்முதலோர்
இங்குதித்த தோற்றங்கள் யாவையுமே—பொங்கறிவின்
மிக்கவர்கண் மாண விளம்பினரோ வில்லையஃ
தொக்கு மரன்பிறப்புக் கும். (உசா)

* மங்கைபாகன் சடையில்வைத்த கங்கையார் பதத்துநீர்
வனசமேவு முனிவனுக்கு மைந்தனான தில்லையோ
செங்கையா லிரந்தவன கபாலமா றகற்றினார்
செய்யதாளின் மலரரன் சிரத்திலான தில்லையோ
வெங்கண்வேழ மூலமென்ன வந்ததுங்க டேவனே
வீறுவாண னமரிலன்று விறலழிந்த தில்லையோ
அங்கண்ஞால முண்டபோது வெள்ளிவெற் பகன்றதோ
வாதலா லரங்கனன்றி வேறுதெய்வ மில்லையே. (உஎ)

* செங்கண் மாலழகன் மஞ்ச னம்விழுந் தொட்டி சங்கரன் றலைகளே
சீர்கொள் கண்ணரடி மலர்நின் மாலியக் குப்பை சம்புவின் றலைகளே
எங்கண் மாயவன் பாய றாக்கிய தூக்கு மாபதி செவிகளே
எந்தெ ழிற்புரு டோத்த மன்றுதி யெழுது மேடராணுக்களே
பொங்கு சீதர னெச்சி லார்படிக் கம்பு ராரியின் கண்டமே
புகலி ராமன தடிகொள் பாதுகை யகலு முக்கணன் கரமதே
திங்கள் சூழ்சித்ர கூட மேவிய வெங்கள் கோவிந்த ராசற்குத்
தினமு மேகூத் தாடி யானவன் றிருச்சிற் றம்பல வாணனே. (உஅ)

* கானேந்து தாமரை வாவியு ளானை கராவினையர்
தானேந்தி மூலமென் றோதிய நாட்சென் றுதவுகையால்
தேனேந்து சோலை யரங்கனல் லாற்றெய்வ மில்லையென்றே
மானேந்து கையன் மழுவேந்தி ஞனிந்த மாநிலத்தே. (உகூ)

* மத்தக் கரியைக் கராப்பற்றி நின்றதோர் வாவியுள்ளே
சித்தந் தெளிந்து முறையிடும் போது செழுந்துளவக்
கொத்துக் கிளர்முடிக் கோவிந்த வென்றது கூப்பிட்டதோ
செத்துக் கிடந்தன வோகெடு வீருங்கள் தெய்வங்களே. (௩0)

திருவரங்கர் திருத்தேர் விஷயமாகப் பாடியது.

* ஒன்று மறியாத வூமர்கா டென்னரங்கர்
இன்று திருத்தேரி லேறினார்—நின்று

வடம்பிடிக்க வாருங்கள் வைகுந்த நாட்டில்
இடம்பிடிக்க வேண்டுமென்றக் கால். (ருக)

இவர் பரமபதம் அடையுந்தருணத்தி லுரைத்தது.

* துளவ துளவவெனச் சொல்லுஞ்சொற் போச்சே
அளவி னெடுமூச்சு மாச்சே—முளரிக்
கரங்கால் குளிர்ந்ததே கண்ணும்பஞ் சாச்சே
யிரங்கா யரங்கா வினி. (ருஉ)

ஆகச்செய்யுள் அருக.

---

## ஸ்ரீமாசிலாமணித்தேசிகர்.

இவர் ஏறக்குறைய முந்நூறு வருடங்கட்குமுன் தருமபுர வாதீன குரு மூர்த்தியாயிருந்தவர். பாண்டிநாட்டிலே ஸ்ரீவைகுண்டத்திலே சண்முக சிகாமணிக்கவிராயர் என்பார்க்குப் புத்திரரா யவதரித்தோதர் துணர்ந்து மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் முதலிய பன்னூல்களு மருளிச்செய்த **குமர குருபர சுவாமிகளுக்கு** ஞானசாரியரும் இவரே.

இவர் பிரிவாற்றுமையால் வருந்திய குமரகுருபர சுவாமிகளுக்குச் சொல்லியது.

* காட்டிருந் தாலு மலையிருந் தாலுங் கருதரிய
நாட்டிருந் தாலு நமக்கென்ன காணல்ல தோர்கமலை
வீட்டிருந் தாண்டருள் ஞானப்ர காசன் விரைமலர்த்தாள்
கேட்டிருந் தாலும் பிறவா நெறிவந்து கிட்டிடுமே. (க)

தமது ஞானசாரியர்மேற் பாடியன.

* ஆய்வார் பதிபசு பாசத்தி னுண்மையை யாய்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல் லாங்கல்வி கேள்வியல்லல்
ஓய்வார் சிவானந்த வாரியுள் ளேயொன் றிரண்டுமறத்
தோய்வார் கமலையுண் ஞானப்ர காசன்மெய்த் தொண்டர்களே.()

* கனக்கும் பொதிக்கு மெருதுக்குந் தன்னிச்சை கண்டதுண்டோ
எனக்கு முடற்கு மெனதிச்சை யோவிணங் கார்புரத்தைச்
சினக்குங் கமலையின் ஞானப்ர காச சிதம்பரவின்
றனக்கிச்சை யெப்படி யப்படி யாக வுரைத்தருளே. (ரு)

* எல்லா முனது செயலென் றறிந்து மெனதுளத்திற்
பொல்லாத சங்கற்ப மேன்வரு மோபுர மூன்றெரிக்க
வல்லாய் கமலையின் ஞானப்ர காச வரதவிது
சொல்லாய் கரண மயக்கமன் ரேறெவன் றெழிலல்லவே. (௪)

ஆகச்செய்யுள் அகூரு.

## தருமபுரவாதீன குருமூர்த்திகளி லொருவர்

திருநெல்வேலியில் தற்காலம் புகைவண்டிகள் நிற்குமிடமாயிருக்கும் நிலத்தில் தாம் இட்டிருந்த பயிர்விளையமட்டும் மழைபெய்யும்படி பாடியது.

* சைவ சமயஞ் சமயமெனி லச்சமயத்
தெய்வம் பிறைசூடுந் தெய்வமெனில்—வையமதில்
ஆனந்த வெள்ளத் தழுந்துவதே முத்தியெனில்
வானங்காள் பெய்க மழை. (க)

ஆகச்செய்யுள் அகூசு.

## சோணைசலத்தேவர்.

இவர் திருப்போரூர் சந்நிதிமுறை இயற்றியருளிய சிதம்பரசுவாமிகளிடம் ஞானோபதேசம் பெற்றவர்.

இவர் சிதம்பரசுவாமிகள்பாற் சொல்லியது.

எடுத்தசன னங்கடோறு மீன்றெடுத்த தாய்மார்
கொடுத்தமுலைப் பாலனைத்துங் கூட்டில்—அடுத்தமணிப்
பைந்நா கணைத்துயின்மால் பாலாழி யுஞ்சிறிதாம்
மன்னு சிதம்பரதே வா. (க)

ஆகச்செய்யுள் அகூஎ.

## கோனேரியப்பக்கவிராயர்.

ஆழ்வார்திருநகரி இவரது சனனத்தலம். உபதேசகாண்ட மியற்றினருமிவரே. இவரைக் காஞ்சிபுரத்தவரெனவும், கச்சியப்பசிவாசாரியர் மாணாக்கரெனவுஞ் சிலர் கூறுவது; இவர் செய்த உபதேசகாண்டத்தின் பாயிரத்துள் அத்தலவிநாயகரைக் குறிக்காது விட்டதினுனே நம்பத்தகாததாயிருக்கின்றது.

இவர் தமக்கரசனுலிட்டிருந்த விலங்குமுறியும்படி பாடியது.

* செய்வதொன் றறிகிலன் செழுமென் போதுதாட்
பெய்வதொன் றறிகிலன் பேதை யேன்சுடர்
வைதிகழ் வேற்படை முருக வன்றனே
கொய்தெனக் கிரங்கியாட் கொள்ள வேண்டுமால். (க)

ஆகச்செய்யுள் அ௲அ.

---

## நமச்சிவாயப்புலவர்.

இவர் பாண்டிநாட்டினரென விளங்குகின்றது. ஏறக்குறைய இருநூற்றைம்பது வருடங்கட்குமுன் இராமநாதபுரம் சமஸ்தானத்தின் மந்திரியாயிருந்த முத்திருளப்பபிள்ளை பேரில் பிள்ளைத்தமிழ், மான்விடுதூது முதலிய பிரபந்தங்கள் இவர் செய்திருக்கின்றனர். இவரைப்பற்றி மற்றேதுந் தெரிந்திலது.

கற்பகவிநாயகர்மேற் பாடியது.

பொருகோட்டு வாரி நிலத்திற் குணங்கெட்ட பூரியரைத்
தருகோட்டுக் கொம்பென் றுரைத்தென் பயன்வருந் தண்டமிழீர்
வருகோட்டுத் திங்கள் முடிக்கூத்தர் தில்லை வனத்தில்வளர்
ஒருகோட்டுக் கற்பக மெல்லாந் தருந்தன்னை யுற்றவர்க்கே.* (க)

மதுரைச் சொக்கநாதர்மேற் பாடியன.

ஏழேழு சங்கத் துடனிருந் தானென் றியம்புகின்றீர்
பாழேழ்மை யுற்றிடு மானிடரே சொக்கர் பண்பறியீர்
ஆழே ழுலகத்துக் கப்பா லிருந்த வடிகளும்பர்
வாழே ழுலகத்துக் கப்பா லிருந்த மணிமுடியே. (உ)
படைத்தாம வேற்கண்ணி கண்ணீர்ப்ர வாகப் பரவைபொங்கி
உடைத்தா லடைத்தற் குபாயமுண் டோமறை யூற்றிதழித்
தொடைத்தார் மவுலியிற் சும்மாடு கட்டிச் சுமந்துசுமந்
தடைத்தா லடைபடச் சொக்கே யிதுவைவை யாறல்லவே. (௩)

முருகர்மேற் பாடியன.

கிட்டாது பெண்குடி மார்க்கங் கணவன் கிழவனல்ல
பட்டாணிச் சேவக னல்லும் பகலுமப் பாற்பிசக

ஓட்டான் பொய்யல்ல மலேமே லிருக்கு முனக்குமிவள்
எட்டாத கொம்பிற் கனிகாண் பரங்குன் றிருப்பவனே. (௪)

சொல்வாரார் வள்ளியுடன் றோய்ந்தருண்முத் தையனுக்கு
வல்லாரார் மானேயென் மையறனே—வில்வாய்ந்த
தெள்ளிருக்கு வேளூர் சிறுகாலுண் பானுமிசை
புள்ளிருக்கு வேளூர் புகுந்து. (௫)

திரைவேலை சுற்றிய குற்றால நாதர் தினம்பவனி
வரவேலை நீயு மயல்கொள வேலையம் மாரனம்பு
பொரவேலை நீசங்கம் போட்டிட வேலை புதியவளே
தரவேலை யாச்சு மகளே யுனைப்பெற்ற தாலெனக்கே. (௬)

மெய்யாரப் புலிகாணப் பொதுவி லாட்டை
மிகவெடுத்தீ ருமையாளுக் கொருபங்கீந்தீர்
பையாரப் பணமெடுத்தீ ரையா நீர்தாம்
பாரறியச் சக்கரத்தை மாலுக்கீந்தீர்
செய்யாரத் தடம்புடைசூழ் கருவை வாழுந்
திருக்களா வீச்சுரரே தேவரீர்தாங்
கையார மழுவெடுத்துக் காட்டினாலுங்
களவும்மைக் கொண்டேநான் காண்பிப்பேனே. (௭)

மான்பிடித்தீர் முயன்மிதித்தீ ரெவருங் காண
மன்றுதனி லாடெடுத்தீர் மகத்து வந்த
ஊன்பெருத்த யானையைக்கொன் றுரித்தீ ரிப்பால்
உரப்பான தலேக்கறிக்கு முவந்தீ ரையா
மீன்பொதிந்த விழிமடவாட் கொருபங் கீந்தீர்
மேலான வேடனெச்சின் மிகவே கொண்டீர்
கான்பொதிந்த வேதகிரி நாதா வும்மைக்
கழுக்கள் வந்துசுற்றுவதுங் காணத் தானே. (௮)

வியந்த நிசாசர னென்று சந்த்ரனும் வெஞ்சனிக்கும்
பயந்தவ னென்று பானுவும் வந்து பணியச்செம்பொன்
நயந்தரு செல்வக் கழுகா சலமது நண்புவைத்துச்
செயந்தந்த தான்மதி யாதவ ரென்னத் திரிந்தனரே. (௯)

ஞாலத் தவரும் புகழ்குடந் தாபுரி நாதனெங்கோன்
காலப் புயல்வண்ணன் கண்மலர் சாத்தக் கருத்திலுன்னிச்
சீலத் தவனம் மடியானென் றியார்க்குந் தெரியவிட்ட
சூலக் குறியல்ல வோநாமம் யாதெனச் சொல்லியதே. (௧0)

வெறிவிலக்கல்.

வண்டுறை சோலை மலைப்பரி காரிவந் தாலிவளுக்
கண்டு படாதவிக் காமச் சுரம்விடு மாதலினால்
பண்டு பழகினர் போலிந்த வேளையிற் பாயசத்தைக்
கொண்டுவந் தீரிதிற் றோஷம் பிறந்திடுங் கோதையரே. (௧௧)

முத்திருளப்பபிள்ளைமேற் பாடியன.

சேதுபதி காத்தமுத்து ராமலிங்க துரைராச சிங்கமந்திரி
மாதுபதி முத்திருளப் பன்கொடிய வரிவேங்கை வளராதிக்கங்
கோதுறுபா மரக்காடு கருணீகர் மும்மதக்கொல் யானைமற்றோர்
மோதுபெரும் புலிக்காடு கல்விமான் களுந்திரிந்தான் மோசந்தானே.
பருப்பதங்க ளொவ்வொரு தூண் பாவுக்கல் வளையாத பாரமேரு
சுரிப்படங்காப் போதிகைநீ செய்தபணி விடையையென்ன சொல்வேனையா
தருப்பணியுங் காதலமுத் திருளப்ப சாமிநின்றாய் தன்பாலுன்னைக் [னே.
கருப்பணுமுன் றிருப்பணிக்கென் றுருப்பணிஞன் மருப்பொலியுங் கமலத்தோ

தாண்டவராயபிள்ளைமேற் பாடியது.

பாங்குயர் பளிக்கு மேடைகொல் லுலையா மாருதந் துருத்தியா நீடும்
பகர்நிலாக் கற்றை பதடியா மூடும் படரிருட் குழாங்குடை கரியா
ஓங்கிய செக்க ருள்ளிடுங் கனலா வுயர்பெரும் பனிகொடும் புகையா [ரையாய்
வுருவிலியென்னுங்கொல்லனென்பொன்னையுருக்குமாறென்கொலோவு
தூங்கிய விழியுந் தாம்புடைக் கயிறுந் தூம்புறு காம்பியற் குழலுந்
துவருடைத் துகிலுங் கவருடைக் கழியுந் தொறுவிய ருறிபடு குடமுந்
தாங்கிய கையு மெய்யுமாய் நின்று தண்ணளி பெய்யுமா முகிலே
தாண்டவ ராயா பாண்டவர் தூதா தாவில்சீர்க் கோவலா திபனே.(௧௨)

அவிசெட்டி வாங்குசுரர்க் கிறைநிகராய் வளமருவு மமரரென்றே
நவிசெட்டி மரம்போல வளர்ந்திருப்போர் தமைப்பாடோந் தனிநக்கீரன்
கவிசெட்டி திருவடியைப் புகழ்வணிக னிசையுடனற் கவிஞர் தஞ்சைச்
செவிசெட்டி பாலடைந்தா னமதுகுறை விட்டோடுஞ் சேற்கண்மானே. ()

சீதக்காதிமேற் பாடியன.

தடக்கும்ப கிம்புரிக் கொம்பா சலப்பெருந் தந்திபட
நடக்குந் துரங்கத் துரைசீதக் காதிநன் னாட்டினல
வடக்குங் குமக்கொங்கை மின்னே யவன்றெரு வாயிலிலே
கிடக்குங் கவியும் பரராஜ ரத்ந கிரீடமுமே. (கசா)

மாகத்தத் தும்புக ழான்பகை வேந்தர் மகுடம்பொடி
ஆகத்தத் தும்பரி யான்சீதக் காதி யணிமலரின்
ஏகத்தத் தும்பி யிசைபாடு மார்பணி லென்மகட்கோர்
மோகத்தத் தண்டென்று சொன்னா ரிலைமுன் மொழிந்தவரே. (களா)

பூமா திருந்தென் புவிமா திருந்தென்ன பூதலத்தில்
நாமா திருந்தென்ன நாமிருந் தென்னநன் னாவலர்க்குக்
கோமா னழகமர் மால்சீதக் காதி கொடைமிகுந்த
சீமா னிறந்திட்ட போதே புலமையுஞ் செத்ததுவே. (கஅ)

மைப்போ தகமும் வளநாடுஞ் செந்தமிழ் வாணர்க்கருள்
கைப்போ தகமனை யான்சீதக் காதியைக் காத்திருந்த
அப்போ தறிந்தில மிப்பாழ்ம் பணத்தி னருமையெல்லாம்
இப்போ தறிந்தன மீயாத லோப ரிடத்திற்சென்றே. (ககூ)

மஞ்சுமஞ் சுங்கைப் பரராஜ சேகர மன்னன்வெற்பிற்
பஞ்சுமஞ் சும்பதப் பாவைநல் லீர்படை வேள்பகழி
யஞ்சுமஞ் சுங்கய லஞ்சுமஞ் சுங்கட லஞ்சுமஞ்சும்
நஞ்சுமஞ் சும்வெற்றி வேலோ வுனது நயனங்களே. (உ0)

காவொன்று கைத்தலத் தண்ணல்செல் லூரன் கனிந்துநம்மை
வாவென் றழைத்திட்ட யோதிர மேவண்மை யானதமிழ்ப்
பாவொன்றுஞ் சற்று மறியாத புல்லர்தம் பக்கலிற்போய்த்
தாவென்று கையெடுத் தேற்காம விட்ட தடையிதுவே. (உக)

பாரார்சொல் லாரார் பறவைக் குலங்கடம்மின்
சீராருங் கிள்ளைமுதற் செப்பவால்—ஓரா
யிரம்பையா னந்தரங்க னின்பரங்க னன்பன்
பிரம்பையா னந்தரங்கன் பேர். (உஉ)

விதுவை யம்பதி யோசையைப் பேரிக விகையெ னும்மதன்
வில்வில்வண் டேற்றினன், மதுவை யம்பதி வேகமோ டெய்தூரு

வலய மீதுகை வைக்கவென் னுள்ளனோ, குதுவை யம்பதி ருலும் புகழ்பெறுங் குமணன் கன்னன் கொடைகளை மாற்றிய, புதுவை யம்பதி வேங்கட ராயன்பாற் புகலிவ் வேளையி னென்றன்கைப் பூவையே. (உ௩)

சொக்கன் என்னு மோர் வைத்தியனைப் புகழ்ந்துரைத்தது.

*மிக்கமது ரைச்சிவனும் வீரபத்தி ரன்சுதனும்
சொக்க ரிருவரெனத் தோன்றினர்—அக்கோன்
பிறவாமற் காப்பான் பிறந்தாரை மண்மேல்
இறவாமற் காப்பா னிவன். (உ௪)

மஞ்சம்புத்தூர் ஆவுடையான்மேற் பாடியது.

*நன்னீரை நன்னீரை நாடோறும் வாராமல்
வெந்நீரைக் காய்ச்சிவிட வேண்டாமா—முந்நீர்
அடுக்குமஞ்சம் புத்தூரி லாவுடையா னேவேள்
எடுக்குமஞ்சம் புத்தூரி லே. (உ௫)

*முக்கணார்தந் தென்னாட்டிற் கற்புளமங் கையர்மகிமை மொழி யப் போமோ, ஒக்குமெரி குளிரவைத்தா ளொருத்திவில்வே டனை யெரித்தா ளொருத்தி மூவர், பக்கமுற வமுதளித்தா ளொருத்தி யெழு பரிநடத்தும் பான்மை யாலே, கொக்கெனவே யிருந்தீரோ கொங்கணவா வென்றொருத்தி கூறி னாளே. (உ௬)

இராமகிருஷ்ணபிள்ளைமேற் பாடியது.

என்னனைக் கன்று முத்தனை குனிக்கு மிறையனை யனைக்குமே யன்று, மன்னனைக் கன்றிப் பின்னனைக் குதவா வன்புளால் வருந்தி வா டுவனே, முன்னனைக் கொன்று பின்னனைப் புரந்த முதுபகை யவன்பிதா வுருமற், கன்னனைக் கொன்று விசயனைப் புரந்த கவுத்து வ ராமகிருஷ் ணையனே. (உ௭)

ஆகச்செய்யுள் அசுரு.

---

## அந்தகக்கவி வீரராகவ முதலியார்.

இவர் செங்கற்பட்டு ஜில்லாவிலுள்ள பொன்விளைந்த களத்தூர் (பொற் களந்தை) க்கருகிலுள்ள புதூரிலிருந்த வடுகநாத முதலியாருக்குப் புத்திரரா யுதித்தவர். இவர் பூர்வ கன்மத்தின் பலனால் பிறவிக்குருடராயிருந்தும்,

கல்வியில் மிகப்பிரசித்தி பெற்றவராயினர். இவர் சிறு பிராயத்திலேயே காஞ்சிபுரஞ்சென்று கல்விபயின்று சிறந்து விளங்கினர். இவர் விரைவில் பல்வகைக் கவிகளுமியற்ற வல்லவர். யாழ்வாசிப்பதிலும் நன்குதேர்ந்தவர்.

இவர் காலம் இற்றைக்கு இருநூற்றைம்பது வருஷங்கட்கு முன்னிருக்குமெனப்பல ஏதுக்களால் ஊகிக்கப்படுகிறது. இவர் பல அரசர் மீதும் பிரபுக்கள் மீதும் கடவுள்மீதும் பல பிரபந்தங்களும் விடுகவிகளும் இயற்றியுள்ளார். இவரியற்றிய நூல்களாவன:—

திருக்கழுக்குன்றப் புராணம், திருவாரூருலா, சந்திரவாணன் கோவை, கயத்தாற்று அரசன் உலா, சேயூர்க்கந்தர் பிள்ளைத்தமிழ், சேயூர்க்கலம்பகம், திருக்கழுக்குன்றமாலை முதலியன.

ஓர் குதிரை பரிசுபெற விரும்பி யெழுதியது.

*ஏடா யிரங்கோடி யெழுதாம னன்மனத் தெழுதிப் படித்த விரக, னிமசேது பரியந்த மெதிரிலாக் கவிவீர ராகவன் விடுக்குமோலை, சேடாதி பன்சிர மசைத்திடும் புகழ்பெற்ற திரிபதகை குலசேகரன், றென்பாலை சேலம் புரந்துதா கந்தீர்த்த செழியனெதிர் கொண்டுகாண்க, பாடாத கந்தருவ மெறியாத கந்துகம் பற்றிக்கொ லாதகோணம், பறவாத கொக்கனற் பண்ணாத கோடைவெம் படையிற்றொடாத குந்தஞ், சூடாத பாடலம் பூவாத மாவொடுதொடுத்துமுடியாதசடிலஞ், சொன்னசொற் சொல்லாத கிள்ளையொன் றெங்குந் துதிக்கவர விடவேண்டுமே. (க)

திரைக்குள் வில்லோடிருந்த சோழனை நோக்கிக் கூறியது.

வாழு மிலங்கைக்கோ மானில்லை மானில்லை
ஏழு மராமரமோ வீங்கில்லை—ஆழி
அலையடைத்த செங்கை யபிராமா வின்று
சிலையெடுத்த வாறெமக்குச் செப்பு. (உ)

இவரைச் சோழராஜன் கண்டசுத்தியாகப்பாடச்
சொல்லியபொழுதுபாடியது.

வடவைக்கனலைப்பிழிந்துகொண்டுமற்றுமொருகால்வடித்தெடுத்து
வாடைத்துருத்திவைத்தூதிமறுகக்காய்ச்சிக்குழம்புசெய்து
புடவிக்கயவர்தமைப்பாடிப்பரிசுபெறுமற்றிரும்பிவரும்
புலவர்மனம்போற்சுடுநெருப்பைப்புழுகென்றிறைத்தாற்பொறுப்பாளோ

அடவிக்கதலிப்பசுங்குருத்தைநச்சுக்குழலென்றஞ்சியஞ்சி
யஞ்சொற்கிளிகள்பஞ்சரம்விட்டகலாநிற்குமகளங்கா
திடமுக்கடவாரணமுகைத்ததேவேதேவசிங்கமே
திக்குவிசயஞ்செலுத்திவருசெங்கோனடாத்துமெங்கோனே. (கூ)

சிதம்பரபூபதிமேற் பாடியன.

மாதரணி மென்முலைதோய் மாரா சிதம்பரபூ
மாதரணி ராசர்மகிழ் மாவசன—மாதர்
மறுகிடத்தே யம்பொன்மட வார்பழிக்க நெஞ்ச
மறுகிடத்தேங் குந்துரைப்பெண் வா. (ச)

சொல்லுமல் லும்பகலுஞ் சோருங் கிடைகிடக்குங்
கல்லு முருகக் கனிந்தரற்றும்—புல்லியணை
விண்கலக்குங் கீர்த்தி வேள்சிதம்ப ரக்குமணு
பெண்கலக்கங் கொண்டுநின்றன் பேர். (ரு)

வந்தனந்த மென்பூ மணந்தோய்ந்து பாயப்பா
வந்தனம்விம் மிச்சோர்ந்தாள் வாகோடி—வந்தனங்கல்
அன்னமனங் கொள்ளாம லாள்சிதம்ப ரக்குமணு
அன்னமனங் கொண்டயலே யாங்கு. (சா)

மாவாரி முத்தவெண்பன் மாதுமய லைத்தணிசோ
மாவாரி முத்தளித்த வைபோகா—மாவுச்
சிதம்பர வையாநீ திக்குளுயர் பூமா
சிதம்பர வையாநீ திக்கு. (எ)

பங்கஜமேன் மேவியசௌ பாக்யசுப மானளித்த
அங்கஜவேள் வெங்கணையா லாவிநொந்த—எங்களிட
மாரஞ் சிதம்பரவு மாதினையாள் கோடிநமஸ்க்
காரஞ் சிதம்பரயோ கா. (அ)

இவர் அரசன்பால் யானைக்கன்று பரிசுபெற்று வந்தபொழுது
மனைவியிடம் கூறியது.

இம்பர்வா னெல்லையிரா மனையே பாடி
யென்கொணர்ந்தாய் பாணாநீ யென்றாள் பாணி

வம்பதாங் களபமென்றேன் பூசு மென்றாள்
மாதங்க மென்றேன்யாம் வாழ்ந்தே மென்றாள்
பம்புசீர் வேழமென்றேன் றின்னு மென்றாள்
பகடென்றே னுழுமென்றாள் பழனந் தன்னைக்
கம்பமா வென்றேனற் களியா மென்றாள்
கைம்மாவென் றேன்சும்மா கலங்கி னாளே. (கூ)

இவர் அரசனிடம் பரிசாக யானைபெற்றபோது கூறியது.

இல்லெனுஞ்சொல் லறியாத சீகையில்வாழ் தானனைப்போ யாழ்ப்பா ணன்
பல்லைவிரித் திரந்தக்கால் வெண்சோறும் பழந்தூசும் பாலி யாமற் [யான்
கொல்லவினைந் தேதனது நால்வாயைப் பரிசென்று கொடுத்தான் பார்க்குள்
தொல்லையென தொருவாய்க்கு நால்வாய்க்குமிரை யெங்கே துரப்பு வேனே.

கோளரவேந் துலகிலிந்தப் புதுமையுண்டோ வெனமொழிந்த குமணு கே
ஆளரைவர் தமைத்தோய்ந்த கற்புடைய பாஞ்சாலி யணைந்த வீமன் [ளாய்
வாளரிபோ லருகிருக்க மலயவெற்பி லிருந்துவந்த மாம னைச்
சாளரவா சலைத்திறந்து வரவழைத்து முலையாரத் தழுவி னாளே. (கக)

கட்டுச்சோற்றைப் பறிகொடுத்தபோது பாடியது.

சீராடை யற்ற வைரவன் வாகனஞ் சேரவந்து
பாராரு நான்முகன் வாகனந் தன்னைமுன் பற்றிக்கௌவி
நாரா யணனுயர் வாகன மாயிற்று நம்மைமுகம்
பாராண்மை வாகனன் வந்தே வயிற்றினிற் பற்றினனே. (கஉ)

பொய்யருக்குப் பொய்யுரைத்தால் வெற்றியா மவருக்குப் பொய்யாகாத [ந்
மெய்யருக்குப்பொய்யுரைத்தாற்றேய்பிறைபோற்றவங்குறையுமிடியுண்டாகு
துய்யதாய் தந்தையர்க்குப் பொய்யுரைத்தால் வறுமைபிணி தொலையாவென்
உய்யவரு டேசிகற்குப் பொய்யுரைத்தா னரகமது வுண்மைதானே. [றும்

பாண்டியன் மாலைகண் டாய்மக ளேநினைப் பார்த்தவர்க்கு
வேண்டிய வின்ப மிகவரு மோவெண்ணெ யேதிருடித்
தாண்டிக் குதித்தநற் கோதண்ட ராமன் றடவரைமேல்
ஆண்டி யிருப்பிடந் தாத னிருப்பிட மானபின்னே. (கச)

முன்னா ளிருவர்க்கும் யாக்கையொன் றாக முயங்கினமாற்
பின்னாட் பிரியன் பிரியையென் றாயினம் பேசலுறும்
இந்நாட் கொழுநன் மனைவியென் றாயின மின்னமுமோர்
சின்னாளி லெப்படி யோவைய நீயின்று செப்புகவே. (கரு)

பணியாரந் தோசையி லக்கொங்கை தோய்ந்திடப் பார்ப்பர்பல்லி
பணியாரந் தோசையி லாச்செந்து வாய்ப்பிறப் பார்களென்றே
பணியாரந் தோசைமுன் றேனுக்கிட் டேத்திப் பழனிச்செவ்வேட்
பணியாரந் தோசைவ ராகாரன் றோர்க்கென்ன பாவமிதே. (கசு)

வீரஞ் சொரிகின்ற பிள்ளா யுனக்குப்பெண் வேண்டுமென்றால்
ஆருங் கொடாருங்க ளப்பன் கபாலியம் மான்றிருடன்
வூருஞ்செங் காடுநின் றன்முகம் யானை யுனக்கிளையோன்
பேருங் கடம்பனுன் றாய்நீலி நிற்கும் பெருவயிறே. (கஎ)

சோனையுங் காத்துநல் லானையுங் காத்துத் துரோபதைதன்
தானையுங் காத்தடைந் தானையுங் காத்துத் தடத்தகலி
மானையுங் காத்தனு மானையுங் காத்து மடுவில்வீழும்
ஆனையுங் காத்தவ னேயெனைக் காப்ப தரிதல்லவே. (கஅ)

ஸ்ரீவில்லிபுத்தூருக்குச் சென்றபோது சொல்லியது.

* வேசையரே மல்குமூர் வீதியிலார் வந்தாலும்
பேசிவலை வீசிப் பிடிக்குமூர்—ஆசைமயல்
பூட்டுமூர் கையிற் பொருள்பறித்தே யோடுகொடுத்
தோட்டுமூர் சீவிலிபுத் தூர். (கக)

அரியலூர் மழவராயன் படிகொடுத்தபோது பாடியது.

* சேயசெங் குன்றை வருமொப்பி லானுக்குச் செங்கமலத்
தூயசெங் கண்ண னிணையொப்ப னேவத் துழாயணிந்த
மாய னளக்கும் படிமூன்று கிருஷ்ணய்ய மாமழவ
ராய னளக்கும் படியொரு நாளைக் கிலக்கமின்றே. (உ0)

தீத்தான்சங்கீதத்தை வியந்து பாடியது.

* வாவிய பொற்பரி யாவூரில் வீரையன் மைந்தன்பஞ்ச
காவியந் தேர்கின்ற தீத்தான்சங் கீதத்திற் காவலர்தம்
ஓவிய சாலையெல் லாமுயிர்த் தேயுள் ளுருகுமொற்றின்
மேவிய கூடமெல் லாந்திரி கூடத்தின் மேற்படுமே. (உக)

செழியன்கொடுத்த பரிசுபெற்றுப் பின்னும்பொருள் விரும்பிக்கூறியது.

* சாலப் பழுத்த மரம்பார்த் தெறிவர்தண் ணீர்சுரக்கும்
ஞாலத் தகழ்வர் கறக்கின்ற வாவைநற் காறளைவர்

நீலக் கடல்விட்டுப் பாலாழி மத்திட்டு நிற்பரென்னீர்
சேலத்து வேந்த னகத்தாகந் தீர்த்த செழியனுக்கே. (உஉ)

விசயராயன் தன் பல்லக்கின்பின் வந்தபோதுரைத்தது.

* திருமாலு மீசனும் பின்போயுந் தூது செலத்துணிந்தும்
அருமா துரியத் தமிழ்வளர்த் தாரவ ரோடுபங்காய்
வருமா மறையவன் பேர்சாதித் தேமிக வண்டமிழ்க்குப்
பெருமான் சிவிகைப்பின் சென்றான் விசயப் பிரமனுமே. (உ௩)

பராசசிங்கம் பொற்பந்த மளித்தபோது கூறியது.

* பொங்குமிடி யன்பந்தம் போயதே யென்கவிதைக்
கெங்கும் விருதுபந்த மேற்றதே—குங்குமந்தோய்
வெற்பந்த மானபுய வீரபர ராசசிங்கம்
பொற்பந்த மின்றளித்த போது. (உச)

சந்திரவாணன் மீதுரைத்தன.

* மாலே நிகருறுஞ் சந்திர வாணன் வரையிடத்தே
பாலேரி பாயச்செந் தேன்மாரி பெய்யநற் பாகுகற்கண்
டாலே யெருவிட முப்பழச் சாற்றி னமுதவயன்
மேலே முளைத்த கரும்போ விம்மங்கைக்கு மெய்யெங்குமே. ()

* மின்னுமாளிகையகந்தையாதிபதிசந்த்ரவாணமகிபாலன்முன்
வீரராகவன்விடுக்குமோலைதன்விருப்பிலுல்வலியவேயழைத்
துன்னுகாவியமதிற்பெருத்தவொருகோவையோதுகெனவோதினன்
ஒதிமாசமொருமூன்றுபோகியொருநாலுமாசமளவாகவும்
இன்னமுந்தனதுசெவியிலேறவிலையென்னிலென்னவுலகெண்ணுமோ
இராசராசர்திறைகொள்ளுமென்கவிதையிங்குவந்துகுறையாகுமோ[வோ
தன்னையென்சொலுவரென்னையென்சொலுவர்தான்றமிழ்க்குமண்ணனல்ல
தன்புகழ்க்குமிதுநீதியோகடிதுதானின்னேவருதல்வேணுமே. (உ௬)

காளத்திகிருஷ்ணப்பவாணனுக்கெழுதியது.

* இனிதினிதெனச்சேரசோழபாண்டியர்மெச்சுமிங்கிதமதுரவாக்கி
யீழமண்டலமளவுதிறைகொண்டகவிவீரராகவன்னெழுதுமோலை
வனிதையர்விகாரமன்மதராஜரூபவளமயிலையாதிபதிசக்ர
வாளத்தியாகிகாளத்திகிருஷ்ணப்பவாணனெதிர்கொண்டுகாண்க
கனதமிழ்த்துறையறிமரக்கலங்கற்பனைக்கன்னிகாமாடனன்னூற்
கட்டுபேர்கொட்டாரம்வாணிசிங்காதனங்கவிநாடகஞ்செய்சாலை

வினவுசிலகாதையிற்சர்க்கரையெனத்தக்கவினையேனுடம்புகோயான்
மெலியுமோமெலியாதவகைபால்பெருத்ததொருமேதிலாவிடவேணுமே.

திம்மய்ய அப்பய்யனுக்கு எழுதியது.

*இந்நா ளிருந்தபேர் புதியபா கப்பண் டிருந்தபேர் பழையபாக
விருபாக மும்வல்ல லக்கணக் கவிவீர ராகவன் விடுக்குமோலை
அன்னுதி தானப்ர தாபன்ப்ர சங்கத் தநந்தசே டாவதாரன்
அகிலப்ர காசனந் திம்மய்ய வப்பய்ய னகமிக மகிழ்ந்துகாண்க
தன்னுளு மோலையும் வரக்கண்டு நாய்வேத சயிலப்பு ராணத்தையித்
தனைநா ளிருந்தோதி னுமரங் கேற்றுவது தான்வந்த லாமலில்லை
நன்னுவலோருடனிதைக்கேட்டெனைச்சோழநாட்டுக்கனுப்பநன்கு
நவிலோலை தள்ளாம லேசுக்ர வாரத்து நாளிங்கு வரவேணுமே.

ஒப்பிலாதான் சங்கீதத்தைக்கேட்டுருகிக் கூறியது.

*வாமொழாப் பிலாதவன் சேயொப் பிலாத மழவதிசை
யாழக் கடல்விட்டு நீபாடுங் காலத் தரிசெல்வனேல்
நீழற் கவுத்துவ நீத்துச்செல் வானந்த நீண்மணிதான்
காமொழாப் பினுநின் னிசைகேட்டுங் காற்கரைந் தேகுமன்றே. (உக)

காஞ்சீபுரத்திலிருந்த அம்மைச்சி என்ற தாசியின்மீது பாடியது.

*கலைமகளு நாணிநின்று கைகட்டிப் போற்றச்
சிலைமதவேள் முன்கணையே தாங்கக்—குலமருவு
கொம்மைச்சிங் காரமுலைக் கோதி திருப்பனங்காட்
டம்மைச்சி வாரா ளதோ. (ந௦)

காஞ்சியில் வரதர் இரதம் அம்மைச்சி வீட்டின் முட்டியபோது கூறியது.

*பாப்புக் குரங்காய்ப் படையெடுத்து வந்தீரோ
தேப்பெருமா ளேகச்சிச் செல்வரே—கோப்பாகக்
கொம்மைச் சிகரலங்கைக் கோட்டையென்று கொண்டீரிஃ
தம்மைச்சி வாழு மகம். (நக)

இலக்கணவிளக்கநூலாசிரியராகிய வைத்தியநாத நாவலரைப் புகழ்ந்தது.

*ஐம்பதின்மர் சங்கத்தா ராகிவிடா ரோநாற்பத்
தொன்பதின்ம ரென்றே யுரைப்பரோ—இம்பர்புகழ்
வன்மீக நாதனருள் வைத்தியநா தன்புடவி
தன்மீதந் நாட்சரித்தக் கால். (நஉ)

இடும்பாவனத்திற் பாடியது.

*பசிமுடுக நோவதல்லாற் பாழ்வீட்டிற் பாழ்த்த
கொசுக்கடி யாலுங் குமைந்தோம்—இசையில்
நெடும்பாவம் யாஞ்செய்தா னீரென்ன செய்வீர்
இடும்பா வனநாத ரே. (கக)

நாகதேவனிட்ட வுணவைக்குறித்துரைத்தது.

*வாயிலொன்று கல்லுமொன்று நெல்லுமான வன்னமும்
வாடலாக வாறுமாதம் வைத்திருந்த கத்தரிக்
காயிலிட்ட கறியுமுப்பி லாதகஞ்சி வண்ணமுங்
காம்பொடிந்த வோரகப்பை கைப்பிடித்த வண்ணமும்
தூயதாய்த் துலக்கலின்றி யழுக்கடைந்த பாத்திரந்
தூக்கியுள் ளசுத்தநீர் துறுத்துவந்த நேர்த்தியும்
ஓயவின்றி யீக்கள்வீழ்ந்து மொலுமொலென்ற சட்டியு
முடன்கொணர்ந்த நாகதேவ னூண்மறப்ப தில்லையே. (கச)

பரராசசேகரன்மீது பாடிய வண்ணம். ‡

தரு ழிப்பு.

தனதத்தன தனனா தனதன தனனதனன தனனா தன
தனதத்தனதன தனனதனனதன தனனதனனதன-தனதனதானா
தனனா தனந்தனா தனனா. (தொங்கல்)

*பதுமத்தடி யிணையாள் பிடிநடை பயிலுமியலு நடையா ளதி
படிவக்கடிதட மிடறுகடிதுபட படலவடவுரக-படமுடிபோல்வாள்
கலைபொற்கலை யுடையாள் பயிரவி கரடமிருக விடையா ளிரு
கடினத்தொடுகுட மகுடவகுடமிடு கபடவடகமிடு-கனதனமார்பாள்
பசலைக்கிளி புகிராள் வளர்கினி பழகுமழகி யகையா ளித
பரதத்திருமத வரததிருமதுர பரமர்திகிரிநிரை-பரவிருதோளாள்
களமே விளங்குகோ டீணயாள்.
புனிமுக்கனி மொழியா ளுடுபதி பரவுமொளிய நகையாள் சிறு
பவளத்துளவளமெவளவவளவுளபளிதவொளிதபரி-மளமுளவாயாள்
பருமுத்துறுகுமிழாள் சததள பதுமவதன மதனுள் பணி [தாள்
யணிபற்றிரணிய புரணகிரணகுண வருணவருணவினை-யவரிணைகா

‡ன் மற்றைப்பாதி கிடைத்திலது.

பருவப்பிறைநுதலா ணறையறி பறவையனைய குழலாண் முகில்
படியக்கடிதடு கடுவைவடுவைவிடு படையைமுடுகுகணே—
படரிருகோவாள்
உனைவீ தியின்கணே தொழுதாள்.

புதுமைப்பிறை யனையா ளெழுபரி புணரிபுணர வுணராள் வெயில்
புதையக்கதிரெதி ருதயமதியமன புதியமதியையும்—விதியையுநோவா
விமிதத்துவ ரதியா ணறுநுதன் மிருகமத திலகமிடாள் பொரு [ள்
விரகப்புரவியைவெருவியுருவிலியைவெருவியருவியிரு—விழிதரவே
புலரிக்கலை தெரியாள் புழுகிரு பொழுதுமுழுதுமெழுதாள் பல[வாள்
புளினத்தளிநளி நளினநளினவிள புளககலபவித—முறுபுனலாடாள்
அயிலாள் கருங்கணே துயிலாள்.

புனிதப்பணி யணியாள் மினிர்தளிர் பொருவலளக முடியா டிசை
புரளக்கரளம துருளுமருளுத்தி பொதுவரதிமதுர-பொருடொறுமா
அயலுக்கய லுகிலாள் தனனையை யமுனுமெனவு நினையாள் மன[ருள்
மயர்வுற்றயி லுவ ளெழுவடொழுதழுவள் விழுவண்மொழிவளுயிர்—
அயருவள் சோர்வாள்

பொழிமட்டணை தனிலே யினியிவள் புலருமயல கலவே மத
புலமைச்சிலைமுலை குலையநிலையமலை புலவிகலவிநிலை—ஸ்ரீதரவேசீ
மருவா ததென்கொலோ புகல்வாய். (நடு)

இவர்காஞ்சீபுரத்தில் படித்தபோது கந்தபுராணம் கச்சியப்பர் பாடியது.

*பொங்குதமி ழயோத்தியில்வாழ் தசரதனென் போனிடத்தும்
பூதூர் வேந்தன்
றுங்கவடு கன்னிடத்தும் வீரரா கவரிருவர்
தோன்றி னரால்
அங்கொருவ னொருகலைமா னெய்திடப்போய் வசைபெற்று
னவனி பாலன்
இங்கொருவன் பல்கலைமா னெய்திடப்போய்க் கவியினு
லிசைபெற் றனே. (நகூ)

---

* இவர்-கந்தபுராணம் பாடிய கச்சியப்ப சிவாசாரியசுவாமிகள் காலமிக முற்பட்டதால் அவரல்லரென்பதும் கந்தபுராணத்திற் றேர்ந்த மற்றொருவரென்பதும் பலர் கொள்கை.

இவர் இராமாயணம் அவதானித்துச் சொன்னபோது அரசன் பரராஜ சிங்கம் பாடியது.

*இன்னங் கலைமகள் கைமீதிற் புத்தக மேந்தியந்தப்
பொன்னம் புயப்பள்ளி புக்கிருப்பா ளென்ன புண்ணியமோ
கன்னன் சயந்தன் கவிவீர ராகவன் கச்சியிலே
தன்னெஞ்ச மேடெனக் கற்றான் கனமுத் தமிழையுமே. (௩௭)

இவரியற்றிய ஆரூருலாவைக்கேட்டு வியந்து அரசன் பாடியது.

*புவியேம் பெறுந்திரு வாரூ ருலாவைப் புலவர்க்கெல்லாஞ்
செவியே சுவைபெறு மாறுசெய் தான்சிவ ஞானவனு
பவியே யெனுநங் கவிவீர ராகவன் பாடியநற்
கவியே கவியவ னல்லாத பேர்கவி கற்கவியே. (௩அ)

இவர் அரசன் பரராஜ சிங்கமீது வண்ணம்பாடி யரங்கேற்றியபோது அரசன் இவரை வியந்துபாடியது.

*விரகன்முத் தமிழ்க்கவி வீர ராகவன்
வரகவி மாலையை மதிக்கும் போதெலாம்
உரகனும் வாணனு மொப்பத் தோன்றினாற்
சிரகர கம்பிதஞ் செய்ய லாகுமே. (௩௯)

இவர்பாடிய கயத்தாற்றுலாவைக் கேட்டு ஒரு புலவர் பாடியது.

*ஒட்டக்கூத் தன்கவியு மோங்கியகம் பன்கவியும்
பட்டப் பகல்விளக்காய்ப் பட்டவே—யட்டதிக்கும்
வீசுங் கவிவீர ராகவனும் வேளாளன்
பேசுங் கவிகேட்ட பின். (௪0)

இவர் சீட்டுக்கவியின்திறத்தை வியந்து அக்காலத்துள்ள நிரஞ்சன நாதர் என்பவர் பாடியது.

*சீட்டுக் கவியென்று சொல்வார் சிலரந்தத் தீட்டுக்கவி
காட்டுக் கெறித்த நிலவாகிப் போஞ்செங் கனகரத்னச்
சூட்டுக் கிரீட முடிவேந்த ருற்பத்தி சூறைகொள்ளும்
நாட்டுக் கிலக்யங் கவிவீர ராகவ னற்கவியே. (௪க)

இவரிறந்ததைக்கேட்டுக் கயத்தாற்றரசன் பாடியன.

*இன்னமுதப் பாமாரி யிவ்வுலகத் திற்பொழிந்து
பொன்னுல கிற்போய்ப் புகுந்ததான்—மன்னும்

புவிவீர ராகமன்னர் பொன்முடிமேற் சூட்டுங்
கவிவீர ராகவமே கம். (சக)

தோற்றா தொளிந்திருந்த தூலக் கவிகளெல்லா
மேற்றா ரகையின் விளங்கியவே—யேற்றாலுங்
கன்னா தாரன் கவிவீர ராகவனும்
பொன்னாருஞ் செங்கதிரோன் போய். (சஉ)

மூன்னாட்டுத் தவமுனியுஞ் சேடனும்வான் மீகனுமுன் முன்னில்லாமல், தென்னாட்டுமலையிடத்தும்பாரிடத்தும்புற்றிடத்தும்சென்று சேர்ந்தார், இந்நாட்டுப் புலவருனக் கெதிரிலையே கவிவீர ராகவாநீ, பொன்னாட்டுப் புலவருடன் வாதுசெய்யப் போயினையோ புகலுவாயே. (சஙு)

ஆகச்செய்யுள் கௌஅ.

## சிவஞானயோகிகள்.

பாண்டிநாட்டிலே பாபநாசம் என்னும் தலத்தைச்சார்ந்த விக்கிரமசிங்கபுரத்திலே பரம்பரைச் சைவவேளாளர் குலத்திலே ஆனந்தக்கூத்தர், மயிலம்மையார் என்பவர்கட்குப் புத்திரராய்த் தமிழ்நாடுசெய்த தவத்தானே திருவவதாரஞ்செய்து முக்களாலிங்கர் எனப் பிள்ளைத் திருநாமங்கொண்ட இவர், அகத்தியமுனிவர் திருவருளால் அருட்புலமை நிரம்பித் திருவாவடுதுறையாதீனம்புக்கு ஞானோபதேசமும், சிவஞானயோகிகள் என்னும்தீக்ஷாநாமமும் பெற்றுவடமொழிக்கடலுந் தென்மொழிக்கடலு முற்றொருங்குணர்ந்துதொல்காப்பியச் சூத்திரவிருத்தி, சிவஞானபோதத்துக்குச் சிற்றுரை, திராவிடமகாபாடியமென வழங்கும் விருத்தியுரை, தருக்கசங்கிரகம் அன்னம்பட்டியமொழிபெயர்ப்பு முதலியன பல வியற்றியருளினார். இவர் பரிபூரண தசையடைந்தகாலம் இற்றைக்கு நூற்றிருபது வருடங்கட்குமுன் "மன்னும் விசுவாவசுவருட மேடமதி, யுன்னிரவிநாட்பகலோதாயிலியம்—மன்னுந், திருவாளனெங்கோன் சிவஞான தேவன், திருமேனிநீங்குந்தினம்" என்றதனாலுணர்க. கச்சியப்பமுனிவரார்முதலியபன்னிருவர் இவர்மாணாக்கர்கள். இவரியற்றிய நூல்களாவன:—

அரதத்த சிவாசாரியர் சுலோக பஞ்சகமொழிபெயர்ப்பு அகவல், சிவதத்துவ விவேகமூல மொழிபெயர்ப்பு, சோமேசர் முதுமொழிவெண்பா, குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி, இளசைப்பதிற்றுப்பத்தந்தாதி, கலைசைப்பதிற்றுப்பத்தந்தாதி, கச்சி ஆனந்தருத்திரேசர்பதிகம், திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு, செங்கழுநீர் விநாயகர்

பிள்ளைத்தமிழ், அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், செப்பறைப்பதிஅகி லாண்டேசுவரிபதிகம், திருவேகம்பரந்தாதி உரையுடன், திருமுல்லை வாயிலந்தாதி உரையுடன், திருத்தொண்டர் திருநாமக்கோவை, பஞ்சாக்கரதேசிகர்மாலை, காஞ்சிப்புராணம் முதற்காண்டம்என்னும் இவைகளாம். அன்றியும் இராமாயண முதற்செய்யுட் சங்கோத்த ரவிருத்தி, எடுத்தென்னும் சொல்லுக்கிட்ட வயிரக்குப்பாயம், சிவச மவாதவுரை மறுப்பு, மரபட்டவணைக்கண்டனகண்டன முதலியபல வும் செய்தருளினரென்ப. நன்னூல் விருத்தியுரை இம்முனிவர்பெரு மானால் திருத்தப்பெற்றதேயாம்.

இவர் விருப்பப்படி திருவாவடுதுறை முனிவரர்களுக்கு அமுதிட் டுபசரித்த தாயாரை நோக்கிக்கூறியது.

*அருந்ததியென் னம்மை யடியவர்கட் கென்றுந்
திருந்த வமுதளிக்குஞ் செல்வி—பொருந்தவே
ஆனந்தக் கூத்த ரகமகிழத் தொண்டுசெயும்
மானந் தவாத மயில். (க)

திருப்பா திரிப்புலியூரில் சில புலவர்கூடி ஈற்றடி சொல்லி எட்டெழுத்துத்திரிபாகப்பாடி முடித்தவர்க்குநூறுபொன் கொடுப்பதாகக்கட்டிவைத்திருந்த பொற்கிழியை ஒருஎழைப்பிராமணனுக்குக் கிடைக்கும்படி செய்து அவ்வாறு சொல்லியருளியது.

வரையேற விட்டமுதஞ் சேந்தனிட வருந்திணைவல் லினமெ ன்றாலும், உரையேற விட்டமுத லாகுமோ எனைச்சித்தென் றுரைக் கி லென்னும், நரையேற விட்டமுத ளைவனுக் கொண்டுவட குலி சை மேவும், கரையேற விட்டமுதல் வாவுன்னை யன்றியொரு கதியு ண் டாமோ. (உ)

ஆகச் செய்யுள் கூக0.

---

## நெற்குன்றவாணமுதலியார்.

இவர் தொண்டைநாட்டினர். இவர் வித்துவசிரோமணிகளுக்குப் பரிசு கொடுப்பதில் மிகச்சிரேட்டர் எனப்புலப்படுகின்றது. திருப்புகலூர்த்திரிபந் தாதி இவர்செய்தநூல்.

இவர் தம்மிடம்வந்த காளிப்புலவருக்குப் பரிசுகொடுத்துரைத்தது.

கற்குங் கவிவல்லே யந்தணர் கோனம்பி காளிக்கியாம்
விற்கும் பரிசன மாகிவிட் டோம்வட வேங்கடமும்
பொற்குன் றமும்புகழ்க் கங்கா நதியும் பொதியமும்போல்
நெற்குன் றமுநம் மரபுமெந் நாளு நிலைநிற்கவே. (க)

ஆகச்செய்யுள் ககக.

## சுப்பிரமணியப்புலவர்.

இவர் பாண்டிநாட்டிலேயுள்ள சிவகங்கை சம்ஸ்தான வித்துவான். **பிரசங்க ரத்நாகரம்** என்ற ஓர் நூலிவரால் இயற்றப்பட்டது. இவரை விரைவிற்பாடுவதின் மிகச்சமர்த்தரென்ப.

சிவகங்கை சம்ஸ்தான மந்திரி சுப்பிரமணியபிள்ளைமேற் பாடியது.

வாரிட்டு விம்மிப் புடைத்திறுகி யிளகிமணி மார்பிடமெலாங்கவர்ந்து
வட்டமிட் டடியிட்டு நாளுக்கு நாண்மேல் வளர்ந்துபூ ரித்துமுத்து
மாலையிட் டிறுமாந்து பட்டவர்த் தனயானை மத்தகத் தோடெதிர்த்து
வாதிட்டுமல்லிகைப்பூச்செண்டினைத் தினம்வாட்டடப்படுத்திவரையைப்
போரிட்டு மைந்தர்கண் மனஞ்சூறை யிட்டுமேற் புளகித்து வச்ரரத்நப் [திற்
புதுச்செப்பினைத்தோழமைக்கொண்டுபொன்னிணைப்பொடியாவராவிமீ
பொட்டிட்ட தென்னவே தேமற் படர்ந்துசெம் பொற்சரிகை வேலையிட்டுப்
புனைதரு ரவிக்கையை யிறுக்கிக் கிழித்துப் புறப்பட்டு வாசனைப்பூந்
தாரிட்டு வரவரப் பளபளப் பாகியுயர் தங்கக் கிணத்தை யொத்துச்
சந்தனம் புகழுருகத் தூரிகற் பூரஞ் சவாதுகுங் குமமணிந்து
சந்த்ரகா விச்சேலை வல்லவாட் டுக்குட் டதும்பியண் ணார்திடையினித்
தாங்கா தெனக்கனத் தோங்கிமன் மதனுஞ் சலாமிட்டு நிற்கவுந்தான்
சீரிட்டு நின்றுதந் தலைவணங் காமற் றிரண்டபூண் முலைக ளுன்றன்
திருமார்பி லணையவோ ரூசிமே லேதவஞ் செய்கின்ற தொக்குமென்னும்
சிறுரோம ரேகையாள் வந்தாள் பராக்கென்று சேவித்து நிற்கிறாள்பார்
திகழ்வடுக நாததுரை மெச்சுபிர தானிசிவ சுப்ரமண் ணியராசனே. ()

ஆகச்செய்யுள் ககஉ.

## நையாண்டிப்புலவர்.

இவர் பிறப்பிடம், இருப்பிடம், பிறந்தகாலம், இறந்தகாலம் தெரிந்தில. செம்பாகமாகப் பொருளமைத்து யாவரும்வியக்கப் பரிகாசமாய்ப்பாடிய காரணத்தால் நையாண்டிப்புலவர் என்னும்பெயர் இவருக்கு வந்ததுபோலும்.

பள்ளிகொண்டான் என்ற சீமான் புகழை வியந்துரைத்தன.

வள்ளிகொண் டான்மயி லேறிக்கொண் டான்மதி போலுமலை
வெள்ளிகொண்டான்விடையேறிக்கொண்டான்விண்ணவர்க்கமுதத்
துள்ளிகொண் டான்புள்ளி லேறிக்கொண் டான்சுப சோபனஞ்சேர்
பள்ளிகொண் டான்புக ழேறிக்கொண் டானென்று பார்ப்பதற்கே.

செங்கை வரிச்சிலைத் தங்க மதைச்சம்புத் தீவுதன்னில்
எங்குளைத் தானுமப் பள்ளிகொண் டான்றமிழ்க் கீவனென்றே
திங்க ளிரவி தினஞ்சுற்றிக் காக்கத் திரைசுருட்டும்
கங்கைக்கு முத்தரத் தேயொளித் தானுமை காதலனே. (௨)

மேலாடை யின்றிச் சுவைபுகுந் தாலிந்த மேதினியோர்
நாலா யிரம்படித் தாலுமெண் ணார்நுவல் பாற்கடலோ
மாலா னவரனரி பொன்னுடை கண்டு மகளைத்தந்தே
ஆலால மீந்தது தோலாடை சுற்று மரன்றனக்கே. (௩)

விற்கம்பத் தடியாலும் படியுண்டான் விண்ணவரை வேலைகொள்ளும்
நற்கம்பத் தடியாலுந் தூக்கவசை யானூர் நாதன்கோயில் [குச்
பொற்கம்பத் தடியினின்று வன்மீகத் தானையுன்னிப் போற்றினோர்க்
சொற்கம்பத் தடியப்பான் மோக்ஷம்பத் தடியாகத் தோற்றுந்தானே

ஆகச்செய்யுள் கககூ.

---

## காளிமுத்துப்புலவர்.

இவரது சரிதம் விளங்கவில்லை.

இவர் குழந்தைக்குருநாதன் என்னும் பிரபுவின்மேற் பாடியன.

*புயங்காட்டுஞ் சயமகள்வாழ் பூம்பாவை வேலப்பன் புத்ரன்யார்க்கும்
நயங்காட்டுங் குழந்தைகுரு நாதமுகிற் கிணைமுகிலை நவிலப்போமோ
பயங்காட்டுந் தடித்திடித்துப் பருவமறிந் துதவாது பாழிலூற்று
மயங்காட்டுந் தரும்போதின் முகங்கறுக்கும் பின்மலைவா யடங்குந்தானே.

நெல்லைச்சொன் னுபர ணத்தைக்கைம் மாவை நிதநிதமும்
வெல்லச்சொன் னவ்லர்க் கீயுங் குழந்தை விசயனின்பால்
செல்லச்சொன் னுளென்னை யிப்போதென் மையலைத்தீர்த்திடென்று
சொல்லச்சொன் னாளந்த மின்னாள்பன் னுண்மலர்ச் சோலையிலே. ()

பழுத்தான் மரத்திற் பறவையைப் போலநற் பாவலர்க்குக்
கொழுத்தான் வழங்குங் குழந்தையென் கொங்கையைக் கூருகிரால்
அழுத்தாத வேளையில் வெந்நீர்பன் னீர்மதி யும்மழல்சேர்
கொழுத்தான் மதனுங் கொழுத்தான் பருவக் குறிப்பறிந்தே. (௩)

பொன்னார் மருமத்தன் பூம்பாளை வேலப்ப பூபனருள்
மன்னு குழந்தைக் குருநாத நீத வரோதயனே
பன்னுண் மலர்க்குழற் பின்னையெந் நாளும் பரிந்தணைய
நன்னாளிந் நாள்வரச் சொன்னாண்மின் னுண்மண நாளென்னவே. ()

புறங்காட்டல்.

மாக மழைக்கரன் பூம்பாளை வேலப்பன் மைந்தன்மின்னார்
மோகன் குழந்தைக் குருநாதன் வெற்பினின் மோடிவைத்துப்
பாக மொழிக்குழன் மாதே விரித்துப் படமெடுக்கும்
நாக மறைத்துக் குழனமக் கீத னலமல்லவே. (௫)

கிள்ளைவிடுதூது.

போதத்தை மேவு மயிலைக் குழந்தைக்குப் போர்மதன்செய்
ஏதத்தை யுங்குயி னாதத்தை யுந்தனக் கிண்ணத்தினுள்
மோதத்தை யுந்துயி லாதத்தை யும்மயன் மூட்டுதென்றல்
வாதத்தை யுந்தரி யாதத்தை யுஞ்சொல்லி வாதத்தையே. (௬)

வெறிவிலக்கல்.

வண்டாங் கிசைபயின் மாலையன் வேலப்பன் மைந்தனிதி
கொண்டான் கிளையை வளர்த்தான் குழந்தைக் குவட்டின்மின்னே
பண்டாங் கிசையினண் மால்கொண்டு பாம்பன் குளத்தினடுக்
கண்டாங் கியைக்கிழித் தாலென்ன பாவங் கருதுவதே. (௭)

வனக்கொந் தளவஞ்சி பூஞ்சோலைத் தஞ்சி வளருமிரு
தனக்குன்று செய்யுந் தொழில்சொல்ல வோதமி யேனைக்கண்டால்
கனக்கும் புளகிக்கும் பாரிக்கும் பூரிக்குங் கண்களிக்கும்
சினக்குந் தனக்கு மெனக்குமுண் டாக்குந் தினஞ்சண்டையே. (அ)

ஆகச்செய்யுள் கஉச.

## கடிகைமுத்துப்புலவர்.

ஏறக்குறைய இருநூறு வருடங்கட்குமுன் பாண்டிநாட்டிலே எட்டைய புரத்திலே பிறந்து அந்த சம்ஸ்தானத்திலேயே பிரபல வித்துவானயிருந்த இவர், கற்றவர் களிப்புறக் கற்பனலங்காரமுடன் செம்பாகமாகத் திரிபு, யமகம் சிலேடை முதலியன பாடுவதில் மிகச்சமர்த்தர். ஊற்றுமலை சமீன்தார் மருதப்பத்தேவர் பேரில் மதனவித்தாரமாலை, சிவகிரி ஜமீன்தார் வரகுணராம வன்னியனர்மேல் திக்குவிசயம், எட்டையபுரத்தார்மேல் காமரசமஞ்சரி, சமுத்திரவிலாசம் முதலியன இயற்றியுள்ளார். இவர் கிரியாணதசையிலிருந்தபோது பக்கத்திலிருந்து வருந்தியழுதமக்களுக்கு "எட்டப்பன் இருக்கையில் ஒரு அப்பனுக்காக அழுவானேன்" என்று தேறுதல் சொல்லினர் என்ப. கடிகை என்பது இவரது குடித்தலைமைப்பெயர். தற்காலம் பார்த்நூஹரி என்ற நீதிநூலைத் தமிழ்ச்செய்யுட்களாகப்பாடிய கடிகைநமசிவாயப் புலவர், இவர் சந்ததியினரே. முகம்மதுநபியின் வரலாறு கூறிய சீறாப்புராணம்பாடிய உமறுப்புலவர் இவருடைய மாணக்கர் ஆவர்.

வெங்கடேசுர எட்டப்பபூபதிமேற் பாடியன.

கராமடியச் சக்கரந்தொட் டெய்தவெங்க டேசுரெட்டன் கமலப்பூமி
கராமடிதொட் டாளுவும் வரவழைப்பார்க் காணேனங் கனைமார்சேவ
கராமடிபட் டிடுபேரி வாரிதியா மிவளையெவர் காப்பாரோசங் [ளே.
கராமடிவிட் டிறங்காத பேதையின்மேற் கணைதொடுத்தான் காமவே

கன்றுதொட்டுக் கனியுகுத்த கீர்த்திவெங்க டேசுரெட்டா கமலக்கண்ணு, கன்றுதொட்ட தத்தையுங் கைநெகிழ்ந்த தறியாயோ கலையுஞ்சோர்ந்த, கன்றுதொட்ட ரவிக்கையெல்லாங் காமனம்பு கிழித்ததுபார் கருத்துந்தானே, கன்றுதொட்டுப் பட்டசிட்டுப் போன் மெலிந்து வாடுவதுங் கண்டிலாயே. (௨)

வளவனேநே ராகவிசை வளர்த்தவெங்க டேசுரெட்டன் மருவாநாளில், வளவனைமா ரையும்வெறுத் தாண் மாரனும்பூங் கணையேவ வருந்தியேய, வளவனையே நினைத்திருந்தாண் மடலெழுத வறியாளாய் மருங்கிலேது, வளவனையசை டையுமிழந்தாள் வண்டினங்காள் கண்ட செய்தி வழுத்துவீரே. (௩)

பாகப்பா வருமையறி யிளசைவெங் டேசுரெட்டா பகரக்கேண்மோ
பாகப்பாமொழிவிழியாணியேறிவருங்களிற்றைப்பார்த்தாளாங்கொம

பாகப்பா மதிக்கவரா வென்றுளம் மதியுதிக்கப் பசந்தேயீசன்
பாகப்பா வையினுக மானுள்யா னின்றெடுத்த பாவைதானே. (ச)

கருக்கோட்டை யாளும்வெங்க டேசுரெட்ட மேந்த்ரனை னைக் கலந்த போகக், கருக்கோட்டை காணுமடி சகியேமுன் போலி ன்னுங் காமனுந்த, கருக்கோட்டை கீர்வீசை முறுக்கிவரக் காணில வன் கங்குன்மாலைக், கருக்கோட்டை யம்பிணையும் பறிவெருட்டு தலைவாசல் கடக்கத்தானே. (ரு)

தமிட்டரா ணுவம்பெருக்கி வந்தெதிர்த்த வேண்முரசு சத்தங்காது
தமிட்டரா வெனப்புலம்புஞ் சிறுபேதை விரகமது தணியவேமுத்
தமிட்டரா மதிமுகத்தின் முகமழுந்த வேபுணரச் சமயம்வாணர்
தமிட்டரா தரந்தெரியு மெங்களெட்டேடந் திரமகிபா தமிழ்ரேறே. ()

பரத்துவசத் துருத்தாயர் பாயன்மிசைப் பூவைமுலைப் பணைப் பிலேம, கரத்துவசப் பாவிமலர் தூற்றுவர்கா ஞற்றுவனே காட்டி லேழு, மரத்துவசத் தொருகணையா லெய்தவெங்க டேசுரெட்டன் மருவாநாளிற், சரத்துவசக் குரங்கெனவே தனித்திருந்து முடியாது சாற்றினேனே. (எ)

நிலமாது திலகனெங்க ளிளசைவெங்க டேசுரெட்ட னின் னைப்பார்த்த, பலமாது வதனமும்பொற் பசலைகொண்டாய் மகளே பெண் படையாமேகங், குலமாது ரங்கமென்ற கிள்ளையின்மேன் மா ரன்வருங் குறியைப்பார்த்துச், சொலமாது கிலுங்கையிலே தொடுவ ளையுந் தோற்றுநின்ற துணிவுதானே. (அ)

கலக்கடமா னத்தொனியை முழக்கமன மலைந்தடையார் கால் சாய்ந்தோடப், பெலக்கடமா நகக்களிற்றை நடத்தும்வெங்க டேசு ரெட்டன் பிணையலீந்தான், சிலக்கடமா மரக்குயிலே யொடுக்குகடற் றொனியடக்கு தென்றற்றேரை, விலக்கடமா மதப்பயலே தலைக்க டைவா சலைக்கடக்க வெருட்டுவேனே. (கூ)

திருக்கரங்கம் வகுக்கவயில் செலுத்துபடை யான்கமலச் சேக் கையாமா, தருக்கரங்கம் பயிற்றுதுரை யிளசைவெங்க டேசுரெட் டன் றழுவாநாளில், அருக்கரங்கம் புரந்திடவு மம்புலியும் வெம்புலி போ லாச்சேகண்டாய், உருக்கரங்கம் பரந்துடைக்க வருக்காமம் பித ந்தானென் றருகுவாளே. (கo)

பொரக்கலக்க முற்றவருக் கிரங்கும்வெங்க டேசுரெட்டன் புய ங்கண் டாண்மேல்,உரக்கலக்க மற்றகணை மதன்விடுத்தா லென்னசெ ய்வா ளோகோகிண்ணச், சரக்கலக்கம் மியன்கடைந்த செப்பலத்தா னேதிரண்ட தனத்தினூடே, வரக்கலக்கண் ணீருகுத்தாள் வண்டின ங்காள் கண்டசெய்தி வழுத்துவீரே. (கக)

இத்தரமே சத்துணிவா ரென்சகிமார் வஞ்சகிமா ரென்றால்வே ளம், புத்தரமே வத்தனமே புண்படுமே யென்புகல்வேன் புலவோர் க்கேபோ, தத்தரமே கத்திணையாய்த் தழைத்தவெங்க டேசுரெட் டன் றழுவினாலே, துத்தரமே தித்தனையு முன்னாலே விளைந்ததன் றோ வொருநிலாவே. (கஉ)

கொட்டமிடு மருவலர்க ளிட்டகற்கோட் டையனைத்துங் கொழிதுளாக, வட்டமிடும் பரிகுல னெட்டமரா சேந்த்ரனெனை மருவாநாளில், துட்டமதன் கணைதுளைத்த துளைவழியே தென்றல் வந்து சுவைத்துத்தள்ளி, விட்டவெறுங் கூட்டையினிச் சுட்டதனா லென்னபயன் வெண்ணிலாவே. (கங)

புவிக்காதி பதியிளசை புரந்தவெங்க டேசுரெட்டன் புலவோர் சொல்லும், கவிக்காதி வள்ளலைக்கண் டாசைகொண்டா ளுக்கமுதை க் கரைத்துப் பால்வார்த்,துவிக்காதிவ் வளவேனும் புகட்டிசகி யேமு கத்தைத் துடைதண்ணீரு, தவிக்காதி லேசுக்கா ளாலும்வைத்தூ திவள்காமத் தகைக்குத்தானே. (கச)

பொருவாசிக் கொருகுல னிளசைவெங்க டேசுரெட்டன் புய ங்கண் டாயோ, இருவாசிக் கெனக்கலையை யுடுத்துபணி திருத்துவனை யெங்கேதேடு, மருவாசிக் குங்குழலை முடியுனக்குத் தரிப்பிடந்தான் மகளேசிச்சீ, தெருவாசிக் கினதுமவன் கைம்மருந்தாண் மெய்ம்மறந் து திரிகின்றாயே. (கரு)

பொரவிசையஞ் செலுத்துவெங்க டேசுரெட்ட மேந்திரன்மே ற் புதுமால்கொண்டேன், கரவிசையங் கசமாரன் கருப்புவில்லை வளை த்துவலக் கையாலெய்யும், சரவிசையங் கத்தில்வந்து தைத்துருவி யப்புறம்போஞ் சகிக்கமாட்டேன், இரவிசையம் புகுந்தொளித்தா னிளங்குயில்கா ளீருமெனக் கிரங்குவீரே. (கசா)

புடவிகட கடெனவுடை படவடவை சிதறவரு பொருதார்ச்சி றும், தடவிகட களிற்றுதய னிளசைவெங்க டேசுரெட்டன் றருவா ன்முல்லை, அடவிகட வுனதுகுடை யகலமத கயமேக வனிலத்தேரை, நடவிகட நிமிர்முகடு தொடுபரிதி யுதயமிதோ நான்கண்டேனே,

கற்றனமின் னுவதென்சொன் முனியென்றான் றநயனம்பாற் கலங்கித்தாபம், உற்றனமின் னரமுதங் கசந்தனையா ராதநெஞ்சே யுணர்ந்தோர்க்கங்கை, யிற்றனமிந் நாளுதவு மிளசைவெங்க டேசு ரெட்ட னினியநோக்கம், பெற்றனமின் னுமையின்றே டொழிந்த தயன் மாதரலர் பேசார்தாமே. (கஅ)

ஆளுக்கே யழகனெங்க ளிளசைவெங்க டேசுரெட்ட னன்பை யீசன், தாளுக்கே விருந்திட்டா னென்னலர்கள் செங்குருதித் தசை யைச் செங்கை, வாளுக்கே விருந்திட்டான் மாதரா ராவியெல்லா மலர்க்கைவாளி, வேளுக்கே விருந்திட்டான் வெண்மதிக்கென் பெண் மதியை விருந்திட்டானே. (கக)

அனங்கலக்க ணங்தெரியாள் சிறுபேதை விரகமிவட் சுதிகமை யோ, மனங்கலக்கப் பக்கமில்லை யுன்னையன்றி யாதலினால் வாராதா லே, தினங்கலக்க ணீருகுத்துத் தேடுகிறாள் வாடுகிறா டிரண்டகும் பத், தனங்கலக்க வருள்புரிவா யிளசைவெங்க டேசுரெட்ட தமிழ்க் கோமானே. (உ0)

எனக்குடந்தை யானவெங்க டேசுரெட்ட னருகில்லைத் திரு த்திவைத்துத், தனக்குடங்கை யாரவெனைத் தழுவாத மனக்குறை யைச் சகியே சொன்னேன், உனக்குடம்பெ லாம்பசக்கும் பாலனமு ங் கசக்குமழ குற்றகொங்கை, கனக்குடங்காத் தொணிகேட்கு மத ன்படையும் வந்தினிக்கை கலக்குந்தானே. (உக)

மாலைமணி முடிதரித்த மருவலர்கள் சேனைதனை மடியத்தாக்குங் கோலமத களிற்றுதய னிளசைவெங்க டேசுரெட்டன் கூடாநாளில் பாலனந்தி வலைபருந்தாள் சிறியாட்கு மதிக்குமென்ன பகையோ மேனி, வேலைநடுக் கலத்தைவிட்டே யெழுந்தலைந்த காகமெனா மெலி கின்றாளே. (உஉ)

ஓங்கியரா மாமதியா தவன்போல வர்வுமிடை யுடையுந்தன்னால் நீங்கியரா மாரசர்த் தால்வருந்து வதற்கிரங்க நேமியாக

பாங்கியரா மாவெனக்கண் பார்த்துமரு வாய்கவந்தன் படக்கையால் வாள், வாங்கியரா மாபூமா விளசைவெங்க டேசுரெட்ட மன்ன ரேறே. (உங)

கனத்துவரை போற்புடைத்த கொங்கைமங்கை கொண்டமை யல் கண்டிரந்தா, வனத்துவரைச் சென்றுமலர் கொய்திவளை யெய்ய வந்தான் வந்தானெப்போ, துனத்துவரைப் புரந்திதவு சொல்லாரைத் தாக்கியவர்த் துருவனேட்டிற், சனத்துவரை யாக்கும்வெங்க டேசு ரெட்ட மேந்திரனே தளசிங்கேறே. (உச)

தரும்பலிக்கு மருவலரைத் தாக்கும்வெங்க டேசுரெட்ட சாமி மாலே, வரும்பலிக்கு நினைத்தபடிக் கிப்போது தப்பாது வலத்திருந்த, திரும்பலிக்கு ரலைப்பார்க்கிற் செயமடிபெண் ணேமதனன் செங்கை யாலெய், அரும்பலிக்கு மென்னபயஞ் சுகமாக வாழ்வாயுன் னதிட் டந்தானே. (உரு)

மின்னமருங் கொடியனைய சின்னமருங் கொடியமுலே விம்மமானுள, முன்னமரும் பெடுத்துமதன் றன்னமருந் தொடுக்கவெகு மோகமாகி, அன்னமருந் தென்னினுமீ தென்னமருந் தென்னவுண்ணு தயர்கின் ருளே, சொன்னமருந் தமிழ்ப்புலவர்க் குதவும்வெங்க டேசுரெட்ட சுகுணமாலே. (உசு)

சடங்கலா மகட்கிளமாந் தளிரேமுத் தம்பொரியச் சகிக்குமாவன்
மடங்கலா னையைப்பாயு மாறுபோற் சீறுதென்றல் வருமாசொர்ணக்
குடங்கலா மதிதனமா னனமாஞ்சேர் வாய்மருவார் கூடியுத்தம்
தொடங்கலாற்பவுரிகொண்டதருமவெங்கடேசுரெட்டசுகுணமாலே.

திருவிருக்கு மணிமார்ப னிளசைவெங்க டேசுரெட்ட தீரனெ ன்னை, மருவிருக்கு மணிகணவ னெனச்சேரா நாண்மோக மயக்கத் தான்மேல், விருவிருக்கு மணிவளையு மேகலையுஞ் சோர்ந்திடுமேன் மேனுந்தேன்பால், அருவிருக்கு மணியனுங்காங் துந்தராள மெனவரு ங்கண் ணருவிதானே. (உஅ)

குருவடியை வணங்கும்வெங்க டேசுரெட்ட மேந்திரன்முன் கூசாமற்போய், இருவடிவெல் லாம்பாரு வீணையைமீட் டனுராக மிசைத்தனேகந், தருவடிதெள் ளமுதநவ ரசமொழுகும் படிபடிசவ் வாதுபூசி, மருவடிபெண் ணேயினிமேன் மகராசி யாய்ச்சுகித்து வா ழ்குவாயே. (உசு)

தெந்தனம்பே சுங்கொழுநர் மயல்கொளுமஞ் சேல்விழியீர் திரண்டமேரு, பந்தனம்போற் றனமுடையீ ரின்சொலுரை யானுரைக்கும் படிநீர்கேண்மின், எந்தனஞ்சே ராதவெங்க டேசுரெட்டன் றனையழைக்க வெழுந்துபோன, சந்தனஞ்சும் மாவந்தாற் பூசலாமெனக்குமதன் றனக்குந்தானே. (கூ0)

வீறுதர மேவலரை வென்றவெங்க டேசுரெட்டன் மேவவேண்டி, நூறுதர மாகவண்டைத் தூதுவிட்டா ளனமருந்தாரெனுந்தாள் கண்ணீர், ஆறுதர மேற்பாய வனங்கன்பூ வாளிமுலை யானையூடே, ஏறுதர மாச்செவியைத் துளைக்குதென்றே யோலமிட்டா ளெனச்சொன்மாதே. (கூக)

இக்கோடி வளைப்பமெனன விருகோடி யிளம்பிறைக்கீற் றெழுந்துவானில், முக்கோடி வளைப்பமத னற்கோடி கணைதொடுத்தான் முன்னிற்பாளோ, கொக்கோடி யிரையெடுக்கு மிளசைநகர் செழிக்கவருங் குமணுவெட்டுத், திக்கோடிப் புகழ்படர்ந்த வடமலையா கடமலைமுன் சென்றமாலே. (கூ௨)

*சூதவள வாவிசையச் சொல்லுமுலை மலையாகத் தொடங்கவேளெய்
யாதவள வாவிசைய வன்மினனை வாயணைவா யார்க்குஞ்சங்க
நாதவள வாவிசைய வில்லியினம் பேந்திளசை நகரில்வாழும்
நீதவள வாவிசைய செகவீர ராமவெட்ட நிருபரேறே. (கூகூ)

ஆர சந்திர ணத்துமட் டுண்டிலா ளருவ ருத்து விருவிருப்பாகியே, ஊர சந்திர விற்பாதி சென்றுமே யுறங்கி லாண்மகட் கென்செயுவேனையா, தீர சந்திர காவி யிடக்கயா சிங்க வுத்தண்ட தூர்த்தண்டனேரண, வீர சந்திர கிரிசுக ராதிபா வெங்க டேசுர வெட்டமராசனே

தடக்க யத்தல ரெல்லா மெடுத்துவேள் சமரச் சோலையில் வந்தா னெனவதை, அடக்க யத்தையுந் தாயர்கொன் ருல்வெறி யாட்டுத் தானிவ ளாசையைத் தீர்க்குமா, கடக்கயத்தடை யார்புவி கைக்கொண்டு கட்டுஞ் சந்திர காவியி டாலெனும், இடக்க யத்தன் னிலைநாட்டு மாமண்ட லேசு ராவெங்க டேசுரெட் டேந்தரனே. (கூ௫)

கலக்கை வாளியை யார்தடுப் பார்தென் றற் காற்றுக் காற்றுவளோமட வார்வசை, சொலக்கை வாய்மொழிக் தி மெய்சோர்ந் திருக்க

வும் தோகை மோகந் தொலையாது பாரையா, உலக்கை வாரி யடிக்குங் கடாசலத் துதய னேகனை யொன்றின் மராமரத், திலக்கை வாலியைப் பார்த்தெய்த மாமண்ட லேசுரா வெங்க டேசுரெட் டேந்த்ரனே. (கசு)

குரங்கிக் காய்ந்திளந் தென்றலு மன்றிலுங் கோபங் கொண்டத ஞன்மாத ரேதுசெய், வரங்கிக் காபொர வாவென் றழைப்பரான் மறுத்துப் பேசவும் வாயிலே மாங்குயில், அரங்கிக் காவென் றிருந்திசை பாடவு மாற்று மோமய லாற்றுத பேதைக்கே,இரங்கிக் காவிக்ர மார்க்கா செகமண்ட லேசு ராவெங்க டேசுரெட் டேந்த்ரனே.(கஎ)

தான வாரண மாமுலை யாளுக்குத் தான வாவெண் டளப்பத்திலேமையல், ஆனவா றறியா ளிவள்கண்ணீ ரான வாறு மறியார் பின் ஞரன்றோ, வானவாகண்ட லாமண்ட லாதிபா வான வாவள வாமது ராபுரி, மீன வாவிசை யாமீன கேதனு வெங்க டேசுர வெட்டம ராசனே. (கஅ)

துரையத் தந்தி தலைமுலை மேல்வைத்துத் தோயு நாளெந்த நாளோ விரகத்தை, விரையத் தந்தி வளவுஞ்செய் தாலிந்த மெல்லி யற்கென்ன சொல்லியுந் தேற்றுவேன், தரையத் தந்தி வரையேந்து மேகம்போற் றணிந்த கொம்பு படத்தன் னிழலைப்பாய்ந், திரையத் தந்தி நடாத்திய மாமண்ட லேசு ராவெங்க டேசுரெட் டேந்த்ரனே.

அந்தி ராமன முன்மேலென் றூற்பக லடங்கு மோமைய லாறுலு மையநீ, வந்தி ராமனம் பேதைக்கு வேளம்பு வச்சி ராயுதம் போல்வந்து தைக்குமே, முந்தி ராமனம் பாலுண்ட வாரிதி முழக்க மேசகி யாளே யிளைசைவாழ், இந்தி ராமனர் வேந்தா செகமண்ட லேசு ராவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (சo)

நிருத ராக வனந்தந்த கங்குலிந் நேரத் தேமத னேறிய வூர்திமேல்,வருத ராக வனந்தந்த மங்கையை மருவு வாய்மலர் மஞ்சத்தின் மீதிலே, விருத ராக வனந்தந்த ளஞ்செறி வேந்தன் ராவுணன் சென்னிபத் தீர்ந்திடப், பொருத ராகவ னந்தந்த குஞ்செய பூப னேவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (சக)

தடக்க டக்கய லோவிட மோவிழி தாம ரைக்குமி ழோகிமி ழோதிரண், டிடக்க டக்குட மாமுலை மாமத னெய்ய வாடி யுருகுதல்

பாரையா, உடக்க டக்குக்ர மாங்கும்ப கன்னனை யுசித விந்திர சித்தைச் செயங்கண்ட, திடக்க டக்கயங் காத்த மனோகரா சீத ராவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (சஉ)

உரைக்கத் தத்துவத் துட்பொரு ளாகிய வொருவன் கையில்லுக் கொப்பா மிவள்கொங்கை,வயைக்கத் தத்துவ சக்கரன் போரிது மட்டுண் டோவந்து முட்டுதல் பார்க்கிலாய், தரைக்கத் தத்து வனையு மெழுப்பிப்பூச் சக்ர வாளத்தைத் தாக்கிக் கடல்கடந், திரைக்கத் தத்துவ யப்பரி யாமண்ட லேசு ராவெங்க டேசுரெட் டேந்த்ரனே. ()

விகடத் தந்தி மதிகாய மாரவேள் விடுத்த வத்திரந் தைத்துருவியென், மகடத் தந்தி வலையாகுங் கட்புனல் வடித்துத் தந்தியிசைவெறுப் பாவளோ, சகடத் தந்திப் பரித்திரட் கூட்டிய சத்துருத்திரட் டைக்குத் திடத்திரும், புகடத் தந்திக் குதயா செயதரபூத ராவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (சச)

சம்பு தைக்குங் கருங்காலன் போற்கங்குல் சார வேலை யொலிக்குப் பயந்துநோக், கம்பு தைக்குமென் பெண்பிள்ளை மேனிக் காம ராச னெடுத்துத் தொடுத்திடும், அம்பு தைக்குமுன் னேயணைந் தாலிவ ளாவி தக்குமிப் பூவி லிருக்குநம், பும்பு தைக்கு ணிதியென வாய்த்தவெம் புண்ணி யாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (சரு)

முடிக்கு மருப்புக் கிசையாப்பைங் கூந்தலம் மூரிமதன்
பிடிக்கு மருப்புக் கிலக்கல்ல வேயெதிர் பேசுமொன்னார்
குடிக்கு மருப்புக் கடலேற்று வித்துக் கொடிமதில்பாய்ந்
திடிக்கு மருப்புக் களிற்று னிளசையி லெட்டமனே. (சசா)

தடத்தத் தளிச்சிறு நாண்பூட்டி மார சரந்தனமு
கடத்தத் தளித்தலை தோற்றுட்குத் தோற்று கடாசலத்தை
நடத்தத் தனிக்குட் பதைத்துக் கிடக்குமொன் னார்கண்முறை
இடத்தத் தளிக்கப் பொரும்வெங்க டேசுரெட் டேந்திரனே. (சஎ)

செல்லுக்கு மல்லுக்கு நேரோதி மங்கலச் சித்தசவேள்
வல்லிக் கிணையிலை வல்லிக் கிணைகந்த மாதனஞ்சொன்
முல்லைக்கு மானுக்கு மாந்தளி ருக்குமிம் மூன்றினுக்கும்
புல்லக்கு மேல்வரு மன்னுவெட் டேந்திர பாண்டியனே. (சஅ)

புத்தியின்பேர்க் குள்ளாய்வேள் பொற்றொடிக்கு முன்புவந்து
சத்தியப்போர் மீது சரந்தொடுத்தான்—நித்தம்
குருபதம்ப ராவுமனு கூலாபோன் மாது
மருவும்வெங்க டேசுரெட்ட மா. (சகூ)

அத்திதனை யூர்ப்பசுப்பே ராக்கிச் சினந்தடித்துச்
சித்தசனென் மேற்சமரஞ் செய்தானே—முத்தமிழ்க்கெந்
நாளும் பசுங்கனக நல்கிடுதல் வள்ளலெனு
வாழும்வெங்க டேசுரெட்ட மா. (ருo)

மன்னன்வெங்க டேசுரெட்ட மாநிதிபாற் றாதுரைத்துக்
கன்னிதார் வாங்கிவரக் காண்கிலனே—மின்னுபசுஞ்
சொன்னவடி வாயிலங்குந் தோகை ரதிகணவன்
கன்னல்வளைத் தெய்யுங் கணை. (ருக)

தண்ணமுத பாவிதவில் தாரன்வெங்க டேசுரெட்ட
புண்ணியவான் வந்து புணராநாள்—உண்ணமுது
மாமனத்தை பேருமட்ட வம்புவிட்டாள் பால்கொடுக்க
விமனத்தை பேரெடுத்தாண் மின். (ருஉ)

தண்டமிழ்தே ருத்தம தயாளுவெங்க டேசுரெட்ட
மண்டலிகன் கூடி மருவாநாள்—செண்டு
முலைமாதுட் கின்ன முதுகொடுக்க வாட்டுத்
தலையானுண் மான்மயக்கத் தால். (ருங)

தெள்ளுதமி ழூக்கருடி யாகிவெங்க டேசுரெட்ட
வள்ளன்மே லாசைகொண்ட மாதுண்மேல்—துள்ளும்
கயவாளி வேட்குவரி கைமுரசா றுற்பங்
கயவாளி யேவாளே காண். (ருச)

கொங்கைகும்ப கோணமாங் கூந்தலுமோ கூடலாந்
தங்கும்விழி யம்பா சமுத்திரமாம்—பைங்கனக
மேருவெங்க டேசுரெட்ட மேந்த்ரா விவள்சகிபுற்
குருடையா னூரிடைய தாம். (ருரு)

மெய்யன்வெங்க டேசுரெட்ட வேந்தன்பாற் சந்துரைத்துத்
தையல்கண்ணி வாங்கித் தரவிலையே—கையதிறல்

துண்டித்தா ணென்றுமென்று தூப்பினுண் மாரனையும்
கண்டித்தா ளச்சமுற்றாள் காண். (ருசு)

நற்றமிழ்வா ணர்க்குநிதி நல்கும்வெங்க டேசுரெட்ட
கொற்றவன்ரு ரன்றியரன் கோயிலின்முன்—உற்றகொடிக்
காலைவிட்டப் பாலேநீங் காதலுமுன் றுண்டுபட
வேலையிட்ட தேது விடு. (ருஎ)

கன்னன்வெங்க டேசுரெட்ட காண்டிபன்மேன் மாமோக
சன்னதங்கொண் டாட்குழலைத் தாரல்லா—தென்னசெய்தீர்
தையன்முன்பூ முன்னட் சரமுற்ற தைத்தெரியச்
செய்யும்பே ரென்ன செயும். (ருஅ)

தாண்டுபரி தூண்டுதிட சாலிவெங்க டேசுரெட்ட
பாண்டியன்மே லாசைகொண்ட பைந்தொடியை—வேண்டியே
ஒன்றிரண்டாப் போக வொருத்தனையிங் கேன்கொணர்ந்தீர்
மின்றுயர்க்கென் செய்யும் விடும். (ருகூ)

கல்விகரை கண்டகும்ப கம்பன்வெங்க டேசுரெட்ட
வில்விசையன் றென்னிளசை வெற்பிடத்திற்—சொல்வதென
கட்செவியு மம்புலியுங் கங்கையுமோர் வெம்புலியிற்
பட்சமுற வைத்தார் பதி. (சுO)

சங்கநிதி யென்னத் தழைத்தவெங்க டேசுரெட்ட
சிங்க மிளசைச் செழுங்கிரியில்—அங்குகண்டேன்
மானிலத்தை முற்றுமொரு வள்ளனடு வாதியந்தத்
தானிருப்ப தேந்திநிற்கத் தான். (சுக)

தாலமுற்றும் வாழ்த்துமிந்த்ர தாருவெங்க டேசுரெட்ட
வாலகிருஷ்ண விம்பன் மணிவரையின்—மேலு
மருக்கமழு நன்மா மனையுமொரு சந்தி
இருக்கவதிற் கண்டுகொண்டே னின்று. (சுஉ)

தங்கள்குல தீபமெனத் தாரணியோர் கொண்டாடும்
எங்கள்வெங்க டேசுரெட்ட மேந்த்ரன்வெற்பிற்—செங்கணரி
உண்ட துடனவனின் றாதினதுஞ் சேர்ந்தவன்பேர்
கொண்டதின்மேற் கண்டேன் குறி. (சுரு)

ஏகாம் பரரிடப்பே ரில்லாத தாழ்வுசொல்லப்
போகாது வேறு புகலிலையே—பாகார்ந்த
சந்த மதுரத் தமிழுக் ககத்யனென
வந்தவெங்க டேசுரெட்ட மா. (௬௪)

திரைக்கலைக்கித் தையலென்ப ரேயிருபத் தேழென்
அரைக்கலைக்கித் தைய லனேகம்—உரைக்கவொண்ணு
தந்தம்ப்ர கண்டா வரசாசிரோ ரத்நமென
வந்தவெங்க டேசுரெட்ட மா. (௬௫)

கூன்கலைநி லாவின் குளிர்ச்சிபொறுக் காதுகல்வி
மான்கலையில் லாமன் மருளுமா—தேன்கலையச்
சந்தநறுங் காவின்மந்தி தாவு மிளசைநகர்
வந்தவெங்க டேசுரெட்ட மா. (௬௬)

*மாதுவத னம்பொற் குடஞ்சந்திர விம்பம் மருங்கோ ரிலக்கணஞ்சி
வந்தவித மொருபிரபந் தந்தந்த மினியதிரு மானிலங் கையுமதுவே
கோதிலாக்குற்றலாதர் தம்மனைவிபெயர்கொண்டசிங்காரமதனைக் [ப்பலர்
கொண்டலென் றுஞ்செழுங்குமுதமென் றுங்கிளிக்குஞ்சென் றுமினையெசெ
காதுவளை மைக்கண் கருங்குவளை சொர்னக் கழுத்துவளை யாருமவளைக்
கமலத்திருப்பவளையொப்பெனவுரைக்கலாங்கைவளைகிலுங்கவணைவாய்
தாதுலவு வண்டளவ மாலிகா பரணு சபாரஞ்சி தப்ரபாவா
தமிழின் மகாகும்ப மாமுனிக் கிணையாகிய
விதரணி காபங்க யாசனத் திருமேவிய
சயில புயாவெங்க டேசுரெட் டமபூபதியே. (௬௭)

*வனமொரு திக்குமிரு தனமுமைக் கண்ணுமா வாகும்வனி தைக்கரும்பாம்
வசனமுந் தசனமும் வதனமு முழந்தாளு மாமதி தனக்குநிகராம்
கனகாம்ப ரன்றனக் கனையென்ற மகிமையைக் காட்டுமெது வேபுயமதால்
கன்னற் சிலைக்குமொரு வாளியென வந்தவன் கைக்கம்பு கந்தரமதாம்
அனவாக னன்றேவி பெயரொன்றின் முதலெழுத் ததிலே பழக்கமதலால்
அப்பாலிரண்டெழுத்தாகும்வடிவழகின்மலரணைமீதுவந்தணைகுவாய்
தனகுபே ரப்பாக்ய சம்பன்ன மிகுயோக்ய சற்குண விலாசவாக்ய
தமிழின் மகாகும்ப மாமுனிக் கிணையாகிய
விதரணி காபங்க யாசனத் திருமேவிய
சயில புயாவெங்க டேசுரெட் டமபூபதியே. (௬௮)

கூபஞ்சலக் கண்மதனி லோரிலக் கணமேழு பாலையடி யாலளந்த [ளாத்தே
பகவனதுபெயர்கொண்டுபொண்டிமாநகர் தனைப்பார்த்துக்கையால்வ
அஞ்சுதலையான்சடைக்கணிவான்பெயருமறந்தயனூர்திபெயர்வெறுத்தே
யானையின்பெயராகிமதனவேள்போர்க்கிலக்காயிஞ்ள்வந்தணைகுவாய்
மஞ்சுதரு வனையகொடை தருமலர்க் கரதலா மகிமைப்ர தாபமணியே
மாமண்ட லேசுரா கவிஞர்கலி நீக்கவரு மன்னவா கருணைநிதியே
தஞ்சமென வந்திடு சனங்கள்வள ரும்படி தனந்தரு துரந்தரிகனே
தமிழின் மகாகும்ப மாமுனிக் கிணையாகிய
விதரணி காபங்க யாசனத் திருமேவிய
சயிலபு யாவெங்க டேசுரெட் டமபூபதியே. (சுகூ)

குமார எட்டப்ப பூபதிமேற் பாடியவை.

சந்தான மேங்கர்கு மாரமுத்து சாமிசகோ தரவான்பொன்னே
சந்தான மேருவென நிறைந்தகுமா ரெட்டனெனைத் தழுவாவாயா
சந்தான மேதரிக்கக் கூடுதிலை யவன்மருங்கிற் சகியேநீபோம்
சந்தான மேலேறி யுபரிசெய்தாற் றீருமடி தனக்குத்தானே. (எ0)

திருமாலை யம்புதொட்ட சிலைமார னம்புவிக்குட் டிடவான் முல்லைத், திருமாலை யம்புயஞ்சூழ் குமாரவெட்ட மனைச்சேரச் செய்தானுள்ள, திருமாலை யந்தெளிந்து சுபசோப னம்பொருந்திச் சிவனைநேசித், திருமாலை யந்தொறும்போ யுனைநினைத்துத் தெரிசிப்பேன் றிருமின்னுளே. (எக)

கன்னியுன்றன் மேற்பிரிய மையாமற் றோரையிவள் கண்டான் மூன்று, மன்னர்தனி லேயொருவன் பெயரையடிக் கடிவழுத்து வாளனத்தைத், தென்னவன்றன் மாலையென்றுண் மதியையதிற் கடையெழுத்தாய்த் தீர்த்தாளையா, நன்னயகு ணாகரகு மாரவெட்ட ராசேந்த்ர நளினமாலே. (எ௨)

பொன்னிலங்கை ராவணனை வென்றவிடை யாட்களகம் புளகக் கொங்கை, தென்னனைநே ராயிருக்குஞ் சொல்வார்த்தை கண்டுபயந் தேன்மகாவிற், பன்னிவடி வூர்கணிதம் பம்மரம்பை யாகுமிவட் பரிந்துசேர்வாய்,சொன்னமொழி தவறாத குமாரவெட்ட ராசேந்த்ர சுகுணமாலே. (எ௩)

மெலக்கணக்காப் பொருந்துவோ மெனவேலை மனங்குறிக்கும் வேலைபார்த்து, நிலக்கணக்கா மனப்புகுந்து தந்தாகப் பாய

வென்மே னிரைத்தானெண்ணிச், சொலக்கணக்கா வழக்காளா னறிந் தவளா தெரிந்தவளா துயரமெல்லாம், இலக்கணக்கா ரிகைதேர்ந்த குமாரவெட்ட பூபதிபா லியம்புவாயே. (எச)

பண்ணப்பம்பர மன்னமுனைமலே பாற்றுப்பம்பரஞ் சோர்ந்து மயல்கொடு,வண்ணப்பம்பர மாங்குயமீறிமே வவிரும்பம்பரக் கண்ணி னட்சேரையா, தண்ணப்பம்பர வைசூழ்பதியர சருங்கப்பம்பரந் தேகொடுவந்தடி, விண்ணப்பம்பர மென்றேதொழுஞ்செக வீரராம குமார வெட்டேந்த்ரனே. (எரு)

உன்னக்காவடிப் பூப்பறியாணதி யும்புகாள்வடி பாலையருந்தென[வாய்
என்னக்காவடிவேண்டாமென்றேதிறுலேதுக்காவடியங்காமற்சேரு
அன்னக்காவடி யார்கழுகாசலத் தாதிக்காவடி மைத்திறம்பூண்டுக
வின்னக்காவடிவேலாவென் றுன்செகவீரராமகுமாரவெட்டேந்த்ரனே.

ஆரிச்சந்தா யம்படிப்பார்மத னுலச்சந்தனக் குண்டாகியேபினும் [ய்
தேரிச்சந்தனமேசொலுவாயெனச்செப்பிச்சந்தரங்கைதனைச்சேருவா
பூரிச்சந்தநம் விம்மியமாதரைப் புலப்பச்சந்தன தாகவுளத்தில்லை
வேரிச்சந்தா மார்பகத்தாய்செக வீரராமகு மாரவெட் டேந்த்ரனே.

பூத்தூக்கி யுண்டவனைப் போங்தேறிக் கொண்டவனே
மாத்தூக்கி யைத்தூக்கி வந்தானே—நோத்திதரும்
பொன்னு பரணு புயசயிலா தென்னிளசை
மன்னு குமாரவெட்ட மா. (எஅ)

அழகிசக்க தேவிக் கனந்தம் பணியால்
விழையுங் குமாரவெட்ட வேந்தே—பழகுமொழி
கூந்தல் களமல் குலகடுசொன் னேன்கனகம்
ஏந்துதன மாந்தளிர்மெய் யே. (எகூ)

ஊற்றுமலை மருதப்பத்தேவர்மேற் பாடியன.

அரைத்தசந்த னம்பொருந்தா ளமளியின்மேற் கண்டுயிலா ளர க்கன்மோலி, நிரைத்தசந்த னம்பாலே துடைத்தமரு தப்பன்வர வினையாளன்னை, இரைத்தசந்த னம்பசலைக் காற்றுமென்று ளேபர வை யிடத்திலேசெள், றுரைத்தசந்த னம்பாருக் குள்ளிலையோ திவாகரனு ரொளிக்கின்றூரே. (அ0)

அரமியஞ்சேர்த் திளவாழைக் குருத்தைவிரித் ததிற்கிடத்த வதுவுஞ்சூடா, கரமியங்கொள் ளாதெழுந்து தரையில்விழுந் தாளத னைக் கண்டுதாய்மார், சரமியங்கு தோவிலையோ வெனமூக்கிற் கையைவைத்தார் சத்யவாய்மைத், திரமியங்கும் கிளுவைமரு தப்ப னுக்கிச் செய்திசொல்லித் தெளிவிப்பீரே. (அக)

திருந்தலரி கலையடக்கும் கிளுவைமரு தப்பசெய சிங்கமென்னைப்
பொருந்தலரி தாயிருந்தாற் பூத்தானஞ் செய்யானோ போர்வேளையா
வருந்தலரி குளையலரி மாவலரி பூவலரி மாதர்கீழ்பால்
இருந்தலரி வாராமுன் னிரவிதனின் மதியம்வந்தா லென்செய்வாளே

வரைத்தூற்று நெடுங்காட்டு வழிப்புலவோ ரலையாமல் வளர்த் ததாய்போல், உரைத்தூற்று மலைபுரந்த துங்கமரு தப்பனொரு நாளு ஞ்சேரான், கரைத்தூற்று நறும்பாலு மன்னமுமவேண் டேனதனைக் கண்டலோமா, தரைத்தூற்று மெனவிடுத்துத் தாய்க்கிழவி கூடநி ன்று சலஞ்செய்தாளே. (அங)

இப்பளப்பா றையிற்படிக்கச் சொல்லுகிறீர் செடிமறைவோ வில்லைச்சூழ, உப்பளப்பா றையுமாச்சு கணவனோ வெகுகோபி யும் மைக்கண்டால், கொப்பளப்பார்க் கினும்பார்ப்பன் பேனைப்பார்க் கி னும்பார்ப்பன் குணமில்லாத, தப்பளப்பா விருக்குதையா கிளுவைம ரு தப்பமன்னு தமிழ்க்கோமானே. (அச)

கவள வளைக்குக் களவுசெய் தோன்வஞ்ச கப்பிணைமேல்
துவள வளைக்குஞ் சிலையான் மருதப்ப துங்கன்வரான்
தவள வளைக்குத் தடையிடு வாரில்லை சந்துசொல்ல
அவள வளைக்கும் பிடப்படு மோதண் ணளிக்குலமே. (அரு)

திருமலைவேலப்பன்மேற்பாடியன.

செருத்தாக்கு மதப்புலியே திருமலைவே லப்பாநின் செவ்வா யூறல், அருத்தாக்கு மரிக்கமுதங் கசப்பாகு மணைவேண்டா ளையோ வாழைக், குருத்தாக்கு மதைவிரித்துக் கிடத்தினுஞ்சூ டெனவிழுந் து கொள்வாள்காமக், கருத்தாக்கு முகநாதன் கங்குல்வரக் கண்டுமு லைக் கண்டிலாளே. (அசு)

*ஒருகுதிரைக் குளம்படிதாங் காதுநைந்தா ளங்கமென்ன வுரு க்காமாரன், திருகுதிரைக் குளம்படியா திருந்தனள்கார்த் திகைத்திங் க டனையேதேடி, இருகுதிரைக் குளம்படியான் றிருமலைவே லப்ப முகி லேறிவீதி, வருகுதிரைக் குளம்படியைக் கண்டுமயல் கொண்டு மிக வாடினளே. (௮௭)

எடுத்துவரி முறத்தினிலிட் டிழைத்தகுறி பலித்ததென வெண் ணித்தந்த, வடுத்துவரி தழுக்கேறு மெனக்கனிவாய் மடுத்துறிஞ்சு மாதைப்பாடு, படித்துவரிம் மாதரென்றுற் சொல்பவரார் வளத்தி லங்கைப் பதிமேற்சென்று, கடுத்துவரி தனைப்பொருத திருமலைவே லப்பனிதைக் கண்டிலானே. (௮௮)

பொருந்தமரங் கசசரத்துக் கல்லாம லம்புலிக்கும் புறம்போ வென்ன, இருந்தமரஞ் சிதமொழியா ளிப்பாடு படமுறையோ வெம தாதாணி, கருந்தமரு மெனையளியே யென்னளியே யாய்ச்சியர்தங் கலையைவாரிக், குருந்தமரங் குழைத்தேறுந் திருமலைவே லப்பனிடங் கூறுவாயே. (௮௯)

திருகலகு வாய்ப்பறந்து சிறகொடுக்கி யிருந்துகடற் சேலைவா ரிக், குருகலகு வளையொதுக்குங் கூடலில்வாழ் திருமலைவேல் கொலு வினிபோய், இருகலகு தலைமொழியா ளித்தனைமா லானளென் றிசைத்தேயன்னம், பருகலகு வளைத்தாரை யாகிலுங்கேட் டாளென ச்சோ பனஞ்சொன்மானே. (௯௦)

பொருவதற்குச் சிலைக்காமன் வருமுனமே மதுரையிற்போய்ப் பொறிவண்டீர்காள், செருவதற்குப் புகழ்விசயன் றிருமலைந ரேந்த்ர ன்வரச் செய்வீரிங்கு, வருவதற்குத் தாமதித்தான் மாலையொன்று கேளந்த மாலைதானுந், தருவதற்கு மதியானேன் மையலையா யினுந் திரும்பத் தரச்செய்வாயே. (௯௧)

விருத்தப்பா கலித்துறையும் வெண்பாவுங் கொச்சகமும் விரி வாய்ச்சொல்லக், கருத்தப்பா வெனதுமகள் காமனர விந்தமலர்க் கணையானெஞ்சில், இருத்தப்பா லனம்வெறுத்தா ளெனையுமவள் சகி தனையு மேசுறாணீ, வருத்தப்பாத் திரமலவே யணைந்திடுவாய் திரும லைவேள் வரிசைமாலே. (௯௨)

கெஞ்சுமா தங்கமுகம் பார்த்திரங்குந் திருமலைவேற் கிரியினனீர்
அஞ்சுமா தஞ்சுமந்து பெற்றபலன் கிடைத்ததெனக் காறுமாதங்
கஞ்சுமா தந்தகனைப் பெ[illegible] றிழந்தோர் போற்றிரிந்து கலங்குதேழை
நெஞ்சுமாதம்பலுக்குநோ[illegible]ந்தொருவன்பின்றொடர்ந்துநோகின்றாளே.

கொடிக்கத்தத் தும்முலையு மடக்கிநெற்கு றியும்பார்த்துக் குணம் பார்த்துப் பார்த்திருந்தப், படிக்கத்தத்து வளைசோரச்சோருமென் பாலனத்துக்குன் பாலனம்வேண்டுங்காண், அடிக்கத்தத்து களையும்பரப் பிழை தண்டகூட முகடும்படரென, வெடிக்கத்தத்தும் பரியாய்திருமலை வேலுராச விவேககுலேசனே. (கூச)

பூசத்தந்தி முலையும்புண் ணாக்கினீர் போதும் போதும் புழுகுஞ் சவ் வாதுமா, காசத்தந்தி மதியுஞ் சுடுமென்ற காமப் பேய்கொண்ட கள்ளிக்கென் சொல்லுவேன், மாசத்தந்திசை யெல்லா மதிரவே மந் த ரத்தை மருப்பிட் டிடித்தளி, வீசத்தந்தி நடாத்துந் திருமலை வே லு ராச விவேக குலேசனே. (கூரு)

ஓரராவுண் டமிழு மதிப்பிள்ளை யூரராவுறங் காதபெண் பிள்ளை மால், கூரராவு கணைகடொட் டான்மதன் கும்பராசி கொழிப்பது முத்தமாம், சூரராவி துடிப்பத் துடிப்பத்திண் டுணைக்கராசலந் துண் டிக்கக் கண்டிக்கும், வீரராகவ ராமா திருமலை வேலுராச விவேக குலேசனே. (கூசா)

சங்கராவை யகமும் பழிக்குமாந் தாயர்தூற்றி லெனும்பேதை நெய்முடை, அங்கராவை யழைக்குங் கழைக்குர லனங்கவேளை ய ழைக்குமென் றேங்குமால், கங்கராவை யடர்வது போலொரு கைக் கடாசலங் கால்சாயத் தாக்கிய, வெங்கராவை யிடறுந் திருமலை வே லுராச விவேக குலேசனே. (கூஎ)

நேற்றிருந்த நிலவுமந் நேரமென் னிணைவிருந்த நினைப்பு மிளந் தென்றற், காற்றிருந்த சுகமுமுன் னணையென் கருத்திருந்ததும் யாதென்று சொல்லுவேன், சேற்றிருந்தசெந் தாமரைப் பூவின்மேற் றிருவிருந்தது போலச் சிம்மாசனம், வீற்றிருந்த துரையே திருமலை வேலுராச விவேக குலேசனே. (கூஅ)

அச்சங்க பாணி பதம்போற்றிச் செந்தமிழ்க் கன்பியற்றி
அச்சங்க மேவுந் திருமலை ராய னணைந்திலனுன்

அச்சங்க லாமதிக் கென்றிருந் தேனென்ற னகத்தைநூல்
அச்சங்க மாகத் துளைத்தான் மதப்பய லம்புகொண்டே. (கூகூ)

அத்திக் குதையன் றிருமலை வேலப்ப னென்புசொல்லத்
தித்திக் குதையன் கருத்தென்ன மோமதி சென்றுகுணக்
குத்திக் குதையன் கதிர்காட்டு மோவிரு கொங்கையின்மேல்
தத்திக் குதையமட் டேறுது காமன் சரங்கள்வந்தே. (க00)

கலவளைக் குண்டிவள் கைவளை போனதுங் காரிகையார்
சொலவளைக் குந்தத் தரம்போலத் தைப்பதுஞ் சொல்பவரார்
நலவளைக் குஞ்சரி யாஞ்செவிச் சானகி நாண்புனைய
மெலவளைக் குஞ்சிலை யானே திருமலை வேலப்பனே. (க0க)

வெஞ்சத் தமரந் துளைக்குந் திருமலை வேலுவந்தால்
வஞ்சத் தமரம்ப னுக்குமஞ் சேனன்னை வாய்க்குமஞ்சேன்
நெஞ்சத் தமரங்க சப்போரை வெல்லுவ னீபுமென்னை
அஞ்சத் தமரஞ்செய் வாயோ வலைசெறி யம்பரமே. (க0உ)

நீகா விதுரா நெருப்பா மிவட்குவிலக்
காகா விதுரா கதம்புரிவார் கன்னியர்கள்
வாகா விதுரா மராமரதி மாரவசா
தேகா விதுரா திருமலைவே லேந்திரனே. (க0௩)

அங்காவித் தாரா வணைவதுகண் டின்பமொரு
பங்காவித் தாரா பதியேயென் றேங்குவளோ
துங்காவித் தாரா துணைமுலையா ராசைகொள்ளும்
செங்காவித் தாரா திருமலைவே லேந்திரனே. (க0௪)

வசுவப்பமந்திரி முதலியோர்பேரிற் பாடியன.

மாதங்கங் கோடிநில வறைக்குளொளித் தாலுமந்த வழியேகம்ப
மாதங்கங் கோடிவிடச் சென்றடிக்கு முயிர்தரிக்கு மாசிவாரா [ய்
மாதங்கங் கோடிகலுங் கடலொலிக்கென் செய்வளினி வந்துசேர்வா
மாதங்கங் கோடிதமிழ்க் குதவும்வசு வப்பமதி மந்திரிநீயே. (க0ரு)

பூரிக்குஞ்சர மாவார மார்கொங்கை பூவைதாங்கப் பொருதத
தொனிக்கடல், பேரிக்குஞ்சர பம்போலுந் தென்றற்கும் பெருமயக்
கம் மாகக்கண் டாங்குவேள், நேரிக்குஞ்சர முங்கொண்டு வந்து

போர் நிறைத்திட்டானினி நீவந்து சேர்மத, மாரிக்குஞ்சர மீதாகு மிந்திரா வன்யராம வசுவப்ப தாயனே. (கoசு)

நகத்துவாரமலர்க்கண்ணி கொங்கைக ணேயவாரறத் தைத்த வழித்தென்றல், நகத்துவாரஞ்செய் தாலந்த வேளம்பைப் பொறுக் கவாரம் புயக்கண்ணி தந்துசேர், சகத்துவாரஞ் செயுநதென் னிளசை ரா சத்துவாரத்து கோர்மந்த்ரி யாய்வந்த, மகத்துவாரஞ் சிதவச ஞூநர வாகஞூநம்புசுவப்ப தீரனே. (கoஎ)

கருத்தவா லை யாள்கர ஞய்வருங் காமஞூுடல் வாடாதின் றின்பத்தை, அநதத்தவாவிலே யாயினிப் பேதையோ வாவிதாங்கரி தாகுமை யார் பார், திருத்தவாவிலே யாத்தன்னை நல்கிய செந்தமி ழ்க்குத் தியாகி நிணைப்புலால், மருத்தவாவிலே யாரயில் வேற்கரா வன்யராய வசுவப்ப தீரனே. (கoஅ)

பருதியாக மகமாக மூர்மதி பனேயெக்காளம் வெடியா மலரம் பு, விருதியாக மகன்வச்ர மாமிவை மின்பொறுத்திடு மோசேர் திரு வருட், கொருதியாக மகவா சகங்கற்றோர்க் குற்பனுவெங்கள் குப் பண வேண்டிமைந்தா, வருதியாக மகமேரு நேர்செல்வ வன்யராய வசு வப்ப தூயனே. (கoகூ)

சந்தனத்தை விடுக்குமுன் னேவில்வ சந்தனத்தை யலைப்பகைத் தெய்வன, சந்தனத்தைத் துளைக்குது பாலுங்க சந்தனத்தையு மப் படிச் செய்ததே, சந்தனத்தை யணிதண்பு யாசலத் தாருவேதண் டமிழ்க்கவி ஞோர்தம்வ, சந்தனத்தைத் துசங்கட்டி பீந்தரு டந்த்ர னேமுத்து மந்த்ரிந ரேந்த்ரனே. (கக0)

சருக்கரைய முதுகனிதேன் கலந்ததமிழ் முனிநிகர்வான் றரியார் பெண்டீர், கருக்கரைய முனிவிசய கிரிவேலைச் சின்னேப கனவானு சைப், பெருக்கரைய வளவலவென் றலேக்கேறி மயககினது பித்த மூர்ச்சைத், திருக்கரைய வுடதமெடு கரைத்துமெல்லப் புகட்டமுது செலுத்தென்றனே. (கக்க)

இலக்கார மணியாள்கண் ணிமைபொருந்தாண் மன்மதனு ரெய் [illegible]க்காரம் பெய்ததெனக் கதிமதியுஞ் சுழன்றெறிப்பக் கனன்[illegible], சொலக்காரம் மியமாக விலக்கணநாற் கவிப்புல

மைத் தொன்னூலோர்க்குப், பலக்கார மருள்விய கிரிவேலாஞ் சின்
ஞேப பதிச்செவ்வேட்கே. (ககஉ)

திடக்குவடக் கடக்களிற்றான் கம்பளவல் லக்கர்ஞன் தெற்குப்பூர்வ
குடக்குவடக் கடற்கரசன் மலையாண்டி ராஜஞ்முல்லை கொடுவந்
தான்னை, மடக்குவடக் கனசெய்வண் மதப்பயனே யுனக்கினியொவ்
வாறுபேரி, அடக்குவடக் கயமீனின் சடக்குநடக் கிதினிமே லறிந்து
பாரே. (ககங)

மாதானை வேந்தர்க்கு மேலோன் பெரியசு வாமிமையன்
மாதானை மேல்வரக் கண்டனள் கண்டு மயங்கியுஞ்சும்
மாதானை யோவரக் காணே னெனது வளவுக்குளம்
மாதானை போச்சென்று வந்தா ளினிச்சொல்ல வாயில்லையே. (ககச)

இந்திரச் செல்வன் றுரைபூலிக் காத்தப்ப னிங்கிவள்பால்
வந்தில னின்னமும் வேள்கணை யாற்கண் வளர்சசி...
கந்திரள் சானுவில் வைத்த துமகர கர்க்கடக
சந்திர யோகங்க ளாமட வீர்கணி தந்திடமே. (ககரு)

சென்றலந்தார் சேர்முத் திருளப்ப பூபதிபால்
மன்றலந்தார் வாங்கி வருமளவும்—குன்றமுலை
ஏழா யிரம்பண்ணை யில்லுடம்பு வாடாதே
ஏழா யிரம்பண்ணை யில். (ககசா)

ஆகச்செய்யுள் கூசo.

---

## நாகூர்முத்துப்புலவர்.

நாகூரிலே பிறந்துவளர்ந்து எட்டையபுரம் சமஸ்தானத்திலே வித்து வானயிருந்த இவர் செய்ததாக ஓர் பிரபந்தத்தையும் பார்த்திலம். இவரும் கடிகை முத்துப்புலவர் காலத்தினரெனத்தெரிகிறது.

வெங்கடேசுர எட்டப்பபூபதிமேற் பாடியன.

தனதனுக நடாத்தி யடர்ந்தபூச் சரத்தைவாங்கித் தனத்திற்
றொடுக்கம, தனதனுக தவிலான்மின் போன்மெய்ப சந்தசந்துசந்
தேசொலென் றுண்மிருள், தனதனுகணத் தொம்மெனப் பையினி
ர்த் தம்புரிந்த சரண சரோருகா, தனதனுக வளரும்ப்ர தாபவித்
தாரனேவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (க)

கனகனங்கம் பிளந்தவ் விலங்கைத்தள கங்களந்திருக் காயமின் மேன்மற்ற, கனகனங்கம் பிடியக் கண்டுகொங் கைக்குளேவினன் சேராத தென்கொலோ, கனக மகம் பளகோத்தி ராவருட் காதலன்றனைக் காத்தடி மைகொண்டவன் கனகனங்கம் பிளந்த நரசிங்க காகுத்தாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (உ)

கடகரிக்கு மதனுன வர்செயுங் காயந்தேர்ந்தன ரோவள வன்னைமார் கடகரிக்கு மரிவாழ்க வேலன்முன் கட்டிறைநிலென்னுமொன் றார்க்குவி,கடகரிக்குரு விக்கன்று கண்ணருள் கர்த்தர்தாளிணை யைத் துதி நேமகா, கடகரிக்கு நிருபா விளைவாழ் கருணைமால்வெங்க டேசுரெட் டேந்த்ரனே. (ங)

தந்தப்பாதுக ஏர்மருங் கம்பிரு தாரையாமிந்த மாதைதமின் றார்சந்தம், தந்தப்பாதுக னற்றவ ரம்புவே டாளெனிக்கச் சரமூலைதாசர, தந்தப்பாது கவிப்பட்டம் வாலியைத் தாக்கியேயவன் றம்பிக்குத் தந்துதந், தந்தப்பாதுகை தம்பிக்கு நல்கிய தாருவேவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (ச)

கனதனந்தன தாவலி ஞலந்தக் கனிக்குமாமலை யாமிடை மின்னிலும், சினதனந்தன மாறகூ றரிதரி தென்னுமலேகுற் றிருவை யணைகுவாய், மனதனந்தன மாடை தமிழ்பகர் வாணர்க்கீந்து மகிழும்ப தாபனே, தனதனந்தன வென்றுடு வோரரு டங்கிவாழ் வெங்க டேசுரெட் டேந்த்ரனே. (ரு)

இந்தக்காவனங் கற்கோர் கவிகையா விருந்துகாந்துதி யானென்ன செய்குவேன், பந்தக்காவன மம்மைகண் டப்பியெப் படியங் கேகுவன் பாங்கியென் மூள்கவி, சிந்தக்காவன சுத்திர சோமதியாகசற்குண பாக மனோகரா, சந்தக்காவனஞ் சூழின சைப்பதித் தானமால்வெங்க டேசுரேட் டேந்த்ரனே. (சா)

இருபந்தந்த மெனும்பொற் பயோதர மென்னசொல்ல மதிக் கெண் மடங்கிவள், சொருபந்தந்தச் சிவிகையில் வந்தனள் சொந்தமாக வுவந்தணை வாய்சுடர், தருபந்தந்த மணியவெற் புப்பெற்றிற் றுய்த்துலங்கித் தனைநம்பு வோர்க்கெலாம், நிருபந்தந்த மனதின் படிக்கருணைசனைவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (எ)

தரகலாதனங் கன்சமர்க் கோகார ஈமைந்துபாணமெய் தான்பூ வலவர, கரகலாதன கும்பம் பொறுக்குமா கன்னியேயெனைக் கண் பாரென் றுள்புல, வரகலாதனன் றோர்க்கசி லாக்கிய மாவசந்தி யாகவ ரோதயா, பிரகலாதனன் புபளத் திருந்தருள் பெருக்குமால் வெங்க டேசுரெட் டேந்த்ரனே. (அ)

மாதமந்திர ணம்போ லிருந்ததை மலைக்கொப்பாக வளர்த்தது மாரன்கைச், சூதமந்திர வோருக மாமதி சோர்ந்துதானிந்த வேந்தி ழை வாடுமோ, போதமந்திர சக்கனி யைக்கவ்விப் பொழிலிற்றுவும் புகழ்க்கழு காசல, வேதமந்திர மெய்க்குக னைத்தொழும் வேந்தனே வெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௯)

வருதுகட்டுமுட் டெல்லாங் கடந்துபூ வாளிவேள்கய வாழி முரசம, திருதுகட்டு வசன மலமலைத் தென்றலாங்கொடுந் தேரை நடாத்தியே, பொருதுகட்டு வதனத்திற் சாடவே பூத்தொடுத்தனன் சந்திர காவிடால், விருதுகட்டு மதிபா விளைசைவாழ் வெங்கடேசு ரெட் டேந்த்ர வசிரனே. (௧௦)

தந்துகந்துகந் தாகந் தணிக்குநீர்த் தடமருங்கு தனமல்குற் றையலே, முந்துகந்துகந் தாகணப் போழ்திலுன் மோகத்தூது மொ ழிவனென் றேவந்தேன், வந்துகந்துகந் தாகழு காசல வாசகாவென வாழ்த்துமன் பாகட்டுங், கந்துகந்துகந் தாகப் புரட்டுங்க டாசலா வெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௧௧)

நம்பரக்கரை யானன ராகிய நாதர்முன்பு நமைவேண்டிச் செல் கவென், றம்பரக்கரை யாயனுப் பத்தன துருவிலாமதன் யுத்தத் துக் கென்செய்வேன், அம்பரக்கரை யானதிற் பாளைய மன்றிறங்கி யடர்ந்திலங் காபுரி, வம்பரக்கரை யாசுகத் தால்வென்ற மாதவா வெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௧௨)

அத்தன்கண்ணுக்குத் தோற்றுனன் றுதலா லரிபிர்ம்மாதிக்குத் தோற்று னவன்மகா, எத்தன்மாமனே யென்றுந் தமையனென் றேசொல்வோன்கணை யெய்யாம லெய்கிருன், கத்தன்பூவுல கே ழையு மேயொரு கவிகைநீழலிற் காத்தருளும்பரி, சுத்தன்மன்னுக் குமாரவெட் டேந்திரன் சோதராவெங்க டேசுரெட் டேந்த்ரனே.

உபையராசியை யூரும்பி ரான்வள ரோங்கனேருந் தனத்தா ளுனை மகிழ்ந், துபையராசிய மாய்க்கூட்டி வாவென்று சொல்லியெ ன்னையுன் பால்விடுத் தாள்பொன்னுர, சபையராசிற் சொருபாவென் றீசரைத் தன்கையாற்றொழுந் துங்கன்கை விடணற், கபையராசி யருள்வல்ல வாபுக ழாகராவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (கச)

சங்கதாதர ளங்கால் கமுகதா தன்கழுத்திணை யென்றுட்குன் றுரின்று, துங்கதாதரத் தாமதஞ் செய்யிலத் தோகைதேகத்தை மாரன் வருத்துவான், அங்கதாதர நீதூது செல்லென்ற வாரியாரண வீரப்ர தாபனே, வெங்கதாதர வீமா செயதரா வெங்கடேசுர வெட்டம பூபனே. (கரு)

பூவலாரை முதலான கற்பங்கள் புரிந்துநிட்டை வசித்திருந் தாலுமென்,ஆவலாரையும் விட்டுவி டாதந்த வரிப்பிரமமாதிக ளாலு லுந் தானென, மாவலாரை மலரதி லுலெய்யின் மங்கையுள்ள மயங் கா திருக்குமா,மேவலாரை யடக்கிச் செயம்பெற்ற விசயனேவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (கசா)

அஞ்சக்கஞ்சனங் கைபா லகனந்த சோகமேவ வடா விடுகுமு தஞ்சக்கஞ்சன மெல்லாங் கரைத்திரு தனத்தைநீலத் தடவரை யாக் கமான்,மிஞ்சக்கஞ்சனந் தாழக்கு லுக்குமெய்ம் மின்னைமேவி விரகந் தணிந்திடாய், வஞ்சக்கஞ்ச னகத்தைத் துணித்தவா வாசவாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (கஎ)

கந்தரப்புய ருஞ்சடை யார்பகைக் காமன்வந்து கணையேவ வே மினுள், அந்தரப்புய லின்பேர் மிகுத்தன னணையின்மீதணை வாய ணை வாய்பர, தந்தரப்புயங் கப்பணி மீதுதெய் தத்தென்றுடுஞ் சர ணும் புயாதிட,மந்தரப்புய பார செயதா வாசவாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (கஅ)

அந்தராசல வன்பன்றி போற்பகை யார்ப்பரிக்க வவர்க்கிசைந் தெய்துமின், பந்தராசல னேபயந் தாள்வெறுப் பாயுரைக்கிற் பல ரென் சொல்லாருல,கந்தராசல வாவூரின் வாய்மறைக் கவுலேழடியுண் டாகொண்ட காதல்தீர், மந்தராசல வாகா சயதரா வாசவாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (கசு.)

முனசநங்கை முகன்கண் ணிருந்துற முற்றும்வெந்தவன் வந்திகல் செய்யவே, தினசநங்கைக் குதுகஞ்சி தட்டுது சேலைசோர்ந்திரு காலை யும் பின்னவே, இனசநங்கை யதுகொட்டிக் கொட்டிவந் தேசவேம யன் மீசுர மாகுது, வனசநங்கை மருவும் புயாசலா வாசவாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (உ0)

படங்குமாதங்க ரேக்காற் சமைத்திட்ட பாரக்கொங்கைக் குறி யுஞ்ச மீபந்தான், சடங்குமாதங் கழிக்குமுன் னுமிது சமயங்கட்டித் தழுவா விடிலவோ, அடங்குமாதங்கள் சித்தமென் பாக்கிய மணைய வேண்டுமுன் னைன்முல மென்னவே, தொடங்குமாதங்க முன்வந்த மாதவா துங்கனேவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (உக)

வாசக்காந்தண் மலர்க்கையி னலணை வாரிவாரிப்பன் னீரொடு சந்தனம், பூசக்காந்தல் பொருமலயர்ந்துவாய் புலம்பத்தாமமும் வெம்பமின் னூர்களும், ஏசக்காந்த முரைக்கிலென் செய்குவா ளெய் துவாய்குற மாதுதெய் வானைக்கோர், நேசக்காந்த ரருள்பெற்று வாழ் மனு நீதனேவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (உஉ)

வந்துவாரவை யநடத் திச்சிலை வளைத்துச்சித்தசன் மாங்கணை யேவப்பு,குந்துவார வளவும்பி திர்ந்திடக் குடைந்துகொங்கைக் குடத் தையு மேயனே, கந்துவாரம தாக்கிவிட் டாலிந்தக் கன்னியென்செ ய்கு வாள்காண் கவியினல்,சிந்துவார மதிலணை கண்டவா சீதராவெங் க டேசுரெட் டேந்த்ரனே. (உங)

அரிசிராவணத் தாலடைத் துந்தொனி யமருதில்லை யதைமுனி யுண்ணவும், கரிசிராகவ லப்பக லோன்வருங் காலமானதெக் கால மென், ருடரும்,பரிசிராமுழ லோபகு டாரிநீ பாரவில்வளைத் துக்கர தூஷண, திரிசிராவிழ வோர்பாணந் தொட்டவா சீதராவெங்க டேசு ரெட் டேந்த்ரனே. (உச)

தொடுக்கவத்திரம் வேளது தானிந்தத் தோகைமெய்யைத் துளைத்து டுருவவே, கடுக்கவத்திரண் மேல்விழ மீயெனக் கலங்கு வாட்குன் னலங்கலின் றீகுவாய், இடுக்கவத்திரங் காவென் றழைக்க வந் திடங்கரைத்திகி ரிக்கிரை யிட்டவா, உடுக்கவத்திர மில்லாத வர்க்கரு ளுத்தமாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (உரு)

சிதமர்ரம்ப னங்கன்ரெட் டான்றனத் தினைத்துளைத்துத் தடாரிக்கு தந்தம்பு, சூதமாரம்ப ராமரா மாவெனச் சொல்லுவேன்சந்து சொல்லவிம் மாதர்க்குள், நீதமாரம்ப லாதிசெய் வாரென்றன் னேமக்காமந் தணிமூல மென்னவே, போதமாரம்பஞ் செய்யமுன் வந்த வா போசனேவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௨௬)

பூசுகந்தந் தனத்திற்பொரிந்தது பொருக்கெழும்பியிப் பூவைதன் மாலுக்கே, நீசுகந்தந் தடங்கவின் றித்தர நேமஞ்செய்திவள் காமந் தணித்திடாய், தேசுகந்தந் தராவணன் சேய்தலை சிக்கெனக் கொண்டு வாவென் றிலக்குவற்,காசுகந்தந்த ராமாபெ ரும்புக ழாகரா வெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௨௭)

பொருப்புக்குஞ்சரி யாகப்பு டைத்தெழும் பூண்முலைக்கன்னி மீதே சமர்செய்யத்,துருப்புக்குஞ்சரி யேறிமெய் யெங்கணுந் துளைக்கமாரன் வளைக்க வவன்செங்கைக், கருப்புக்குஞ்சரி சாமதி மூற்றுந் திங் கட்குடைக்குங் கலங்குவ ளோமன, விருப்புக்குஞ்சரி காந்தற்கு வைத்தவா வீரனேவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௨௮)

அடிதங்கச்சி யிவளென்ன மோதெரி யாதுசிந்தை யயருகிறாளிந்தா, பிடிதங்கச்சி விசையி லிருந்துநம் பிள்ளைதான்கிளிப் பிள்ளையல் லோமயல், கொடிதங்கச்சிப் பரிபோர் சென்றேவரக் கூறென்றுளிகல் கொண்டோ ரமர்கண்டு, துடிதங்கச்சி மையப்புயங் கொட்டுமுத் துங்கனேவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௨௯)

அரகதத்தை மதனசிந்தை தனனிலவைத்த தமபரதத்தை யடித்தார்ப் பரித்துமே, துரகதத்தை நடத்தியம் பாலுமென் றுவதனத்தைத் துளைத்துவிட் டான்கொண்ட, விரகதத்தை யெவர்தணிப் பார்மலர் மெத்தைமீதினில் வைத்தணை வாய்மணி, மரகதத்தை யணியும்பு யாசலா வாசவாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௩௦)

அனங்கனம்பனந் தந்தொட மெய்பசந் தசந்துவாடுவ தல்லாலிடைக்கிரு, தனங்கனம்பனந் தாரா னிருக்குநற் றலத்தின்போர்க் கொடி தாங்காது பெற்றதாய், மனங்கனம்பனம் பின்போ பிருக்குந்தந்த மாதர்சொல்லும் வசைக்கிலக் காகிய, மினங்கனம்பனஞ் சேர்கூத மாயினுள் வெங்கடேசுர வெட்டந ரேந்த்ரனே. (௩௧)

மாதவாவினை மட்டலர் நின்புய மாலைமாலை யகற்றுவ தாசடை, யாதவாவினஞ் சொல்லுந் துராகத வன்னைவாயை யடக்கு வதார் மலர்ச், சீதவாவினந் தங்கந் தரமெனுஞ் செல்விக் கோர்மொழி சொல்லி யணைந்திடாய், போதவாவினங் காத்தருண் மாதவா போசனே வெங்க டேசுரெட் டேந்தரனே. (௩௨)

இருதனங்கனிக் குச்சிலை போற்புடைத் தெழுந்துவிம்மி யிறுமாந் திடக்கயல், விருதனங்கனிக் குச்சிலை வாங்கிமா விசைகொண்டுரு விப்பாய வாளியாற், பொருதனங்கனி வர்க்கமுண் ணுமன்மால் பூண்டிருக்கச்செய் தான்றமிழ் வாணர்க்கு, வருதனங்கனி வாய்ந்தருமன்னவா வாசவாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௩௩)

என்னிலங்குச் சலராச ராசருக் கேற்றதாமவ ரிங்கே வருகப் போய், முன்னிலங்குநங் காரியம் யாவது மொழியென் றுள்ளைங் கிளிதான் மருவுவாய், நன்னிலங்கு வலையத்தி லீதெண நாட்டுங்தென் கருக் கோட்டைக் கதிபனே, பொன்னிலங்கு மணிமார்ப னேதிட போசனேவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௩௪)

அரகராசலங் கொண்டபுண் போன்முலை யானைவிம்ம வதிற்றென்ற ருவவே,உரகராசல வன்குளி ராதன லுருக்கிறுனைந்த மாரற்கிம் மாதருந், தரகராசல ராசிய தாமய றுனெனைப்புணர் வாய்மூலமென்றதோத், திரகராசலங் காத்தசக் ரேசுவரா சீதராவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௩௫)

கஞ்சரஞ்சப் பெடைபோலு மென்னடை கமலத்தாளிரு கண்ணிணை யானது, பஞ்சரஞ்சர்க் கரைவட் டுறைமுலைப் பருப்பதத்திலறுபதத் தான்றெட்டான், வெஞ்சரஞ்சப் பிரமஞ்ச கோளகை மீதிருந்திந்த மின்னுளே மேவுவாய், வஞ்சரஞ்சப் பொருஞ்சய தோர்த்தண்டா வாசவாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௩௬)

மாமனுக்கு மகளுக வந்தகா மனுக்கும்பெற்று வளர்த்தவட் குங்கலைச், சோமனுக்கு மினத்தார்க்கு மஞ்சிமெய் சோர்ந்துவாடினள் சேர்ந்தணை வாயினி, தாமனுக்கு மினியகுமாரெட்ட தருமனுக்குங் குமாரமுத் தேந்திர, பூமனுக்குஞ் சகோதர னேதிட போசனேவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௩௭)

என்னவாவிது ராசிய மாநடை யேனுமாமகள் காலொடு கான்மிகப், பின்னவாவிது ராவன றாவவா பிரமணிப்படிச் செய்தாரென்னுர்கள்வாய், கொன்னவாவிது ராகதத் தென்றிசை குடிபுகக்கையிற் கோதண்டம் வாங்கிய, மன்னவாவிது ராபுக ழாகரா வாசவாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௩அ)

சொலங்கக்காகொண்ட மோகத்தி னல்வருஞ் சோபதாபந் தொலைக்கவென் றூட்குமே, விலங்கக்காம சரத்தாலும் பூந்தளிர் மெய்யிளைத்தன ளல்லாம லொப்பிலா, நலங்கக்காரி சுகக்காரி மேவ வெந்நாளுமேநல்ல நாளடை யார்மனம், மலங்கக்கால்கொண் டடர் பரி மேல்வரும் வாசவாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௩௯)

சரந்தராதரங் கண்டாம தன்விடுத் தானெனது குழந்தை தனியேமால், பரந்தராதர ளக்கச்சி றக்கும்பொற் பார்பயோதர பாரத்தைத் தாங்கவே, உரந்தராதர வம்போற் றுவண்மருங் கொசியுமுள்ளம் வசியா யணைந்திடாப், புரந்தராதர ணிக்கதி பாசெய பூதராவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௪0)

பிலிக்குஞ்சர வங்களைக் கொத்திப் பிடித்துத்தாக்கப் பெரும் பகை யின்றிக்கா, லாலிக்குஞ்சர பஞ்சிங்க மீதுசென் றடிப்பபோல் வந் தடிக்குது தாயென்ற, நீலிக்குஞ்சர சப்பேச்சு மாச்சிவ ணிணை வுங்காணுங் கனவுமிங் கேயொரு, வாலிக்குஞ்சர மேயிய ராகவா வாசவாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௪க)

அராவுக்கேகணை யேசெவி யென்பர தல்லபெற்ற வனைக்கே மின் ருரும்வம், பராவுக்கேகணை யேகுழ லாக்கிய பண்ணுக்கேநொந்த பெண்ணுக் கிரங்கியின், றிராவுக்கேகணை மேற்சென் றிருந்து நல் லின்பலீலைசெய் தன்பாய் மருவுவாய், மராவுக்கேகணை யேவிய ராகவா வாசவாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௪உ)

அல்லைமாலை மருதங் கிளிமையின் னுரைநால்வகைத் தானைய தாக்கிவிட், டெல்லைமாலையும் விட்டடர்ந் தேறிநா னிருக்குமாலயத் துட்புகுந் தேதன்கை, வில்லைமாலை விளைத்து வளைத்தம்மை விட்டு வேண்மட்டு மீறினன் மேவுவாய், குல்லைமாலை யணிமாலைப் போற்றிய குமணனேவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௪௩)

தடிக்கவில்லை முலைதிரண் டேமகள் சமையவில்லை மணந்தான் குழுதுமென், றடிக்கவில்லை பொடிபுழு கத்தர்சேர்த் தணியவில்லை யடற்குமுன் மாரன்போர், முடிக்கவில்லை வளைத்தாற் குழந்தைதான் மோகந்தாங்கவு முற்றுதொன் ஞர்துடி, துடிக்கவில்லை வளைக்கும கோரவுத் துங்கனேவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (சச)

மஞ்சலக்கணங் கன்புற வேகட்டி மருவுதற்குள வாவைத் திரு க்குநாள், அஞ்சலக்கண லார்க்கே தெரியுநின் னுவலோவடங் காதி ரங்காதவன், நெஞ்சலக்கணப் பெற்றியின் வெண்ணெயா நிலவில் வந்து கலவிசெய் வாயையா, பஞ்சலக்கண முத்தமி ழாகர பாவிதா வெங்க டேசுரெட் டேந்த்ரனே. (சரு)

சத்திக்கும்பணி லக்கையி ஞன்பெற்ற தனையன்போர்க்கு விளை யமின் ஞரைச்சு, மத்திக்கும்பணி யாய்நிரைத் துச்சர மாரிபெய்ய வென் மானுரை தானுரைக், கத்திக்கும்பணி சோர்ந்ததுங் காண்கி லாள் காதல்தீரவிப் போதணை வாயையா, எத்திக்கும்பணி வேந்தா மகாமண்ட லேசுராவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (சசு)

தனதுமெய்க்கு மலரணை யானது தழலிமறைக்குந் தனச்சுமை யாலிடை, மினதுமெய்க்குந் துவளுமிம் மானந்த மேனகைக்கும் வெகுமிச்ச நானுண்மை, சொனதுமெய்க்கும ரன்பொற் பதாம்புயந் தொழுந்தொழும்பன் குமாரெட்ட பாண்டியன், மனதுமெய்க்கு முயிர்த்துணை வாபுகழ் வாசவாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. ()

இட்டங்கட்டிய வாறேயல் லாதுவே றில்லைசிந்தையி தெல்லாஞ் சுவாமிய, திட்டங்கட்டி யபரஞ்சி யாற்செய்த சித்ரமஞ்சத்திற் சேர் வாய் தினஞ்சட்ட, வட்டங்கட்டியங் கக்குடிக் கின்றரா வணனைவெ ன்றன்பு வைத்தவன் றம்பிக்குப்,பட்டங்கட்டிய ராமா நவரச பாவி தாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (சஅ)

பருதியானவ ரீராறு பேருங்கோ பாக்னிமிஞ்சி வருவது போ ன்மதி, வருதியானதற் காற்றேனென் றுளையோ மலடிருந்துபெற் றேனிந்தப் பிள்ளையை, ஒருதியான மதுகுல தீபம்போ லுதித்துமோ கத்துக் குள்ளாகி ஞளையா, குருதியான மறவாத வாபுகழ்க் கொற்ற வாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (சகூ)

அம்பமாமுனி வாய்மூலைக் கண்ணைச்சல் லடைக்கண்ணாக வனங்கனைய் யச்சொன்ன, விம்பமாமுனி ருந்தப டிக்கிலை மேனிமாகலைக் யானி யிவளையா, கம்பமாமுனி தம்பெற வந்துதற் காத்தவாவெரு நேர்த்திய தாந்தமிழ்க், கும்பமாமுனி போல்வந் துதித்தவா கொற்ற வாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (௫0)

திருக்கமலக் கண்ணனெனச் சிறந்ததிரு மலைவேலைச் சேரா போகம், சுருக்கமலக் கண்ணகன்ற தொருகடலா மறுத்தேது சொல் வேறுசை, உருக்கமலக் கண்ணருவி யொழுகிவர வேழைவசை யுரைக்கவூரார், வருக்கமலக் கண்ணன்மகன் வரும்போதே சுரும்போத வழக்குண்டாச்சே. (௫௧)

ஆகச்செய்யுள் ௫௧.

---

## சீகாழி அருணாசலக்கவிராயர்.

இவர் தரங்கம்பாடியைச் சார்ந்த தில்லையாடியிலே சாலிவாகன சகாப்தம் ௧௬௩௩-ம் ஆண்டிலே நல்லதம்பிபிள்ளை, வள்ளியம்மை என்பவர்கள் தவப்பேற்றாலே புத்திரராய்ப் பிறந்து, இளமைப்பருவத்தே தாய் தந்தையரை யிழந்தும் கல்வியை யிழக்காது பயின்று தருமபுரவாதீன அம்பலவாணத்தம்பிரான் சுவாமிகளிடம் சார்ந்து கற்று சமஸ்கிருதம், தெலுங்கு, தமிழ் இம்மூன்றிலுமிக்க வல்லவராயினர். பின்னர் சீகாழியிற் சென்று சிதம்பரம் பிள்ளை என்பவரது ஆதரவுபெற்று அவ்விடத்திலேயே இவர் வசித்திருந்த காரணத்தால் சீகாழி அருணாசலக்கவிராயர் என்னும் பெயர்பெற்றனர். அசோமுகி நாடகம், சீகாழிக்கோவை, சீகாழித்தலபுராணம், அநுமார் பிள்ளைத்தமிழ், இராமநாடகம் முதலியவை இவரியற்றிய பிரபந்தங்கள். இவர் தமக்கு அறுபத்தேழாம் வயதிற் சீகாழியிலே தேகவியோகமடைந்தனர்.

இவர் இராமநாடக வரங்கேற்றுகை விஷயமாக மணலி முத்துக்கிருஷ்ண முதலியார்மேற் பாடியன.

*சித்திதரு கிறவல்லி புத்திதரு கிறவல்லி
தேவர்கள் வணங்குவல்லி
தில்லைநா யகவல்லி சிவகாம வல்லியிரு
திருவிழிக் கருணையாலே
சத்தியவா சகனென்று பூமண்ட லாதிபர்க
டாமெங் கணுந்துதிக்கும்

சகலபா ஷாநிபுண மணலிமுத் துக்கிருஷ்ண
சதுரநீ வாழிகண்டாய்
நத்துமலர் குவளைநான் மதியநீ செஞ்சாலி
நான்கருவி மழைமேகநீ
நளினநான் பரிதிநீ பிள்ளைநா னன்னைநீ
நான்கவிஞன் வழுதிநீகாண்
சுத்தமுள ராமாய ணந்தனைக் கொண்டுனது
சுமுகமது பெறவருகிறேன்
சொற்பொரு ளறிந்தளவு சொல்லுவேன் கேட்கவே
துணையாக வேணுநீயே. (க)

அரங்கேற்றமுடிவிற் கூறியது.

* கனந்தந்தான் கனகாபி டேகந்தந்தான் களங்கமிலாக் கருப் பொருளை யழைத்துத்தந்தான், மனந்தந்தான் முடிசூட்டி மாலைதந் தான் வாணிசிங்கா சனத்திருத்தி வரிசைதந்தான், இனந்தந்தா னிராமகதை யெவர்க்குந்தந்தா னெனைராமா யணக்கவிஞ னெனப் போதந்தான், அனந்தந்தான் மணலிமுத்துக் கிருஷ்ணபூப னகந் தந்தா னிருமையிலுஞ் சுகந்தந்தானே. (உ)

பெருமாள் செட்டியாருக்கு எழுதியது.

*கணிகொண்ட பஞ்சலட் சணமும்ரா மாயணக்
கடலையு முணர்ந்தபுலவன்
கவிராசர் புகழ்கின்ற காழியரு ணாசலக்
கவிராய னெழுதுமோலை
மணிகொண்ட மார்பிலங் கப்பமகி பாலன்
மகிழ்ந்தசுதன் வணிகாதிபன்
வருசீர் படைத்தநற் பெருமாண ரேந்திரன்
மனமுவந் தினிதுகாண்க
அணிகொண்ட தியாகேசர் வண்ணமுரை செய்தது
மதற்குவெகு மதிசெய்தது
மதுரமக் குபகார மானதுவு மிப்புவியி
லறியாத பேருமுளரோ

பணிகொண்ட ராமகீர்த் தனையுமப் படியே
 பரிந்துநீ கேட்கவேண்டும்
பாரிலோ ராயிரம் பிறைகண்டு நீபொருள்
 படைத்துவாழ்ந் திடுகமாதோ. (௩)

குளத்தூர் முத்துவீரப்பபிள்ளைக் கெழுதியது.

*எத்திசையு மேபரவு தக்கணு சலமுனி
 யெதிர்த்தபா வலர்குடாரி
யிராமாய ணக்கவியை நாடகஞ் செய்தவ
 னிலக்கண முணர்ந்தபுலவன்
முத்தமிழ்க் காழியரு ணாசலக் கவிராய
 முகில்வர விடுக்குமோலை
முந்துபுகழ் தென்குளத் தூர்முத்து வீரப்பன்
 முகமலர்ந் தினிதுகாண்க
வித்துவ சனங்களுக் காதார மாகியவர்
 வேண்டியவெ லாமக்கணம்
விரகுட னளித்தனை யெனக்கேட்டு நாமுமுனை
 மேவினோங் கவியெழுதினோம்
உத்தம சிகாமணி நீயாத லாலிவிட
 மூன்றுபெரு மழைதொடருமுன்
ஓராயி ரங்கரும் பதுவேண்டு நீமன
 முகந்துவர விடல்வேண்டுமே. (௪)

வேறுபலர்மீது கூறியன.

பத்துரு பாயனைநேர் பாப்பையவே ளேயுனக்குப்
பத்துரு பாயென்ன பஞ்சமோ—முத்தநகை
வீழிவாய்ப் பாலுண்ட வேந்தன் பிறந்தசீ
காழியரு ணாசலன்யான் காண். (௫)

பொன்றேடி மண்புதையான் போரதனி லம்புதையான்
மன்றேடி வந்தவரை வாழ்விப்பான்—நன்றேடும்
எப்பா வலரு மியம்பும் புதுவையில்வாழ்
அப்பாசா மிக்குநிக ரார். (௬)

கால்விழுந்து நம்மைக் கவிபாடச் சொன்னாலே
மேல்விழுந்து நாமே விளம்பினோம்—நூலறிந்து
தந்தக்காற் றந்தான் றராக்கா னமதுமனம்
நொந்தக்கா லென்னாகு மோ. (எ)

தன்னைப் புகழ்வானுஞ் சாக்ஷிசொல்லி நிற்பானும்
பொன்னைமிகத் தேடிப் புதைப்பானும்—ஒன்னலர்தம்
நண்புத்தி கேட்பானு நாணமில் லாதானும்
பெண்புத்தி கேட்பானும் பேய். (அ)

*கொடுப்பா ரருகிருந்து குற்றங்கள் சொல்லிக்
கெடுப்பாரைத் தெய்வங் கெடுக்கும்—நடுக்கடலில்
பள்ளிகொண்ட மாலிருக்கப் பண்டு கரந்திருந்த
வெள்ளிகண்ணைப் பாரீர் விரைந்து. (௯)

சோம னுடாவாழ்வுஞ் சோறிடா நல்லுறவும்
நாமநீ றில்லாத நன்னுதலும்—ஓம
நெருப்பில்லா வேதியரு நெய்யா னுடனே
பருப்பில்லாப் போசனமும் பாழ். (௰)

செங்கமலப் போதலர்ந்த செவ்விபோ லும்வதனம்
தங்குமொழி சந்தனசீ தம்போலும்—அங்கியெரி
கத்திரியைப் போலுமாங் காரிகையே வஞ்சர்மனம்
குத்திரர்பான் மூன்று குணம். (௧௧)

நல்லவர்கள் வாயா னவிலுமொழி பொய்யாமல்
இல்லைபெறு துள்ளமட்டு மீவார்கள்—நல்லகுணம்
அல்லவர்கள் போவாவென் றாசைசொல்லி நாட்கழித்தே
இல்லையென்பா ரிப்பாரி லே. (௧௨)

ஞானம் பெருமை நயங்கருணை யுண்மையபி
மானம் பொறுமை வணக்கமுயர்—தானமுடன்
சற்குணமா சாரந் தருகல்வி நீதிநெறி
துற்குணருக் கில்லென்றே சொல். (௧௩)

ஞானம் பெருமை நயங்கருணை யுண்மையபி
மானம் பொறுமை வணக்கமுயர்—தானமுடன்

சற்குணமா சாரந் தருகல்வி நீதிநெறி
சற்குணருக் குண்டென்றே சாற்று. (கச)

நினைத்த வதுவொழிந்து நேரிடும்வே றொன்று
மனித்த கருமங்கள் வாயா—கனத்த
அயனமர ராலு மரியாலுந் தெய்வச்
செயலினைக்கா ணப்படா தே. (க௫)

மிகப்பட்ட வெம்பசியால் வெம்பருந்தின் வாயில்
அகப்பட்ட கோழிப்பார்ப் பானேன்—நகப்பட்ட
கல்லையோ கைதொழுதேன் காகமணு காமலையில்
இல்லையோ ரத்நகிரி யே. (க௬)

கடம்பவனஞ் சூழ்கூடற் கன்னிமத னம்மை
அடர்ந்தவிழி யங்கையற்கண் ணம்மை—நடந்த
நடைக்குவமை யன்ன நகைக்குவமை முல்லை
இடைக்குவமை யில்லை யினி. (கஎ)

கூப்பிட்டேன் செங்கைதனைக் கூற்றுவனைக் கண்டஞ்சிக்
கூப்பிட்டே னென்னையாட் கொண்டருள்வாய்—கூப்பிட்டே
ஏனமாச் சென்றுற் கிளையவளை யட்டியின்னம்
ஏனமா காமாட்சி யே. (க௮)

வானவரு மிந்திரரு மால்பிரம ருஞ்செத்துப்
போனவிடம் புன்முளைத்துப் போகாதோ—ஞானமருள்
அத்த ரருணேச ரன்பாக நஞ்சதனைப்
புத்தியுடன் கொள்ளாத போது. (க௯)

நெஞ்சடைந்த வேட்கையெல்லா நீங்கி யிருவிழியும்
பஞ்சடைந்துள் ளாவி படுமுன்னே—செஞ்சடைமேல்
வெள்ளாறு வென்னாளும் வேள்விப் புகைமாறு
நள்ளாறு வென்றே நவில். (௨0)

அனங்கனம்பா லந்தநடை யங்குழல்சொற் றையல்
அனங்கனம்பான் மெய்சோர்ந் தயர்ந்து—மனங்கலங்கி
வாடியென்றாள் பற்றியெழின் மாயவனைப் போயழைத்து
வாடியென்றாள் சேர்ந்தணைய வா. (௨க)

வாமாது போகே மனமே துதுதுது
ஆமா பசுமாதை யத்தனார்—தாமாய்
நடித்தவர் பாகர் நடந்தவர் வேணி
முடித்தவர் கங்கணர்கேண் மோ. (௨௨)

கங்கொன்று சோதுமறு கைறைகம் மன்னைபகு
துங்கச் சடைமேற் றுலங்கவைத்தார்—மங்கையிடப்
பாகத்தார் மாதைப் பதியார் பசுபதிப்பேர்
ஆகத்தார் வைக்கு மவை. (௨௩)

வெண்ணெயுற்று நெய்தேட வேண்டுமோ தீபமூற்று
நண்ணு கனறேட னன்றுமோ—மண்மனத்தை
நாடிச் சிவனிருக்க நாடாம லூர்தோறும்
தேடித் திரிவதென்ன செப்பு. (௨௪)

உன்னைப் பணிந்தே னுனக்கடிமை யாயினேன்
என்னைக் கருணைபுரிந் திடேற்றாய்—கன்னியுமை
வாமா பசுமாதை வாசா வலர்ந்தகொன்றைத்
தாமா பசுபதிநா தா. (௨௫)

குவளைத்தார்த் தேவர்கடங் கோவே தணிகைக்
கவளக் கரிக்கிளைய கந்தா—தவளச்
சலசத்தாள் கோவைத் தலைபூட்டி யாக்கை
அலையச்செய் தாய்நன்மை யா. (௨௬)

பிஞ்சகன் றிங்கள் பிறங்க வரும்புனல்
அஞ்சலி கொன்றை யமர்ந்திட—வஞ்சுத
பஞ்செய் தனவோ பசுபதி நாயக
விஞ்சிய செஞ்சடை மேல். (௨௭)

தென்னலங் காட்டத்தாய் சேயிழைமே னட்டத்தாய்
நன்னு யிறுதிங்க ணட்டத்தாய்—வன்னிகையார்
காலகா லாநாக கங்கணு கண்டத்தில்
ஆலகா லாசங்க ரா. (௨௮)

சாரங்க பாணி தலையி லிரந்துண்டான்
சிரங்கம் பாதி சிவனுண்டான்—பாருங்கள்

பாற்கடலை யாண்டான் பசுபதிநா ராயணன்றான்
ஏற்கயிலை யாண்டா னிவன். (உக)

ஆகச்செய்யுள் கசஉ0.

---

## சவாதுப்புலவர்.

பாண்டிநாட்டிலுள்ள பரம்பைக்குடிக்கடுத்த எமனேச்சுரத்திலேபிறந்த மகமதியரான இவர், கல்வியிற் சிறப்புற்று இராமநாதபுரம் சம்ஸ்தானம் வித்துவானாயிருந்தனர். பகுதாது முகியித்தீன் ஆண்டவர் பிள்ளைத்தமிழ் இவர் பாடியது. இவர் கிழவன் சேதுபதியென்ற இரகுநாத சேதுபதி காலத்தினர்.

இரகுநாத சேதுபதிபேரிற் பாடியது.

கிளையாளன் சேது பதிரகு நாயகன் கிஞ்சுகவாய்
இளையார் கலவி யிடத்துநம் மீச ரிடத்துமென்றும்
வளையாத பொன்முடி சற்றே வளையு மகுடமன்னர்
தளையா டியகையிற் காளாஞ்சி யேந்துஞ் சமயத்துமே. (க)

புதுக்கோட்டை இரகுநாத தொண்டமான் பேரிற் பாடியது.

*காயாத பாலுமில்லை பாயாத புலியுமில்லை கற்றோர்வந்தால்,
ஆயாத வேந்தரில்லை மடிகனத்தால் வழிபயமுண் டாகுங்கண்டாய்
சாயாத முடிவேந்த ரகுநாத தொண்டமான் சாற்றக்கேண்மோ
நீயாதி சேடனைப்பாய் கற்றிருந்துங் கேள்வியில்லை நிசஞ்சொன்னேனே. (உ)

புதுவை-ஆனந்தரங்கபிள்ளைபேரிற் பாடியன.

பானுகிர ணம்பார்க்கும் பங்கே ருகநிலவு
தானும்வரப் பார்க்குஞ் சகோரங்கள்—வானமரு
மையைப்பார்க் கும்மயில்கண் மானிசயா னந்தரங்கன்
கையைப்பார்க் கும்புலவோர் கண். (ங)

பாலையிலாள் பின்னங்காற் பஞ்சுளியென் றேசுளிப்பாள்
பாலையிலாள் பின்னென் படுவளோ—சோலையிலே
ஆடு மயிற்பிரம்பூ ரானந்த ரங்கதுரை
நாடுதனி லென்னிளமின் னுள். (ச)

சோலைமுதலியார் பேரிற் பாடியது.

அலைபான் கவடுபடா னொரிடத்துங் காயான்
இலையென்ப தோர்நாளு மில்லை—கலைதேர்ந்த
சாலைமுத்து கிர்ஷ்ணனருள் சற்குணசிந் தாமணியைச்
சோலையென்று சொன்னவரார் சொல். (௫)

செல்லப்பனைப் புகழ்ந்துரைத்தது.

செல்லப்பன் கச்சியிலே சேர்ந்ததற்பி னுமணிகள்
நல்லதரு மேக நவநிதியம்—சொல்லவே
முட்டின்றி யொன்றிரண்டு மூன்றுநான் கைந்தாரேழ்
எட்டொன்பான் பத்தான வே. (௬)

கெவுரிவல்லவத்தேவர்பேரிற் பாடியது.

கள்ளா வகம்படியா காராளா கம்மாளா
வள்ளலொட்டா தொட்டியா வாணியா—உள்ளன்
புலையா கரும்பறையா புன்க வடுகா
வலையா கெவுரிவல வா. (௭)

சந்திரசேகரபிள்ளைக் கெழுதியது.

*திருதிலக் கணகா வியப்ரசங் கத்தின்மனு வேந்தர்கள் சபாரஞ்சித, வித்வசே கரன்கண்ட மூதண்டம் வென்றமா வெகுவித்தையாடம்பரன்; கருதிரெபதி ரிபுபுலவர் தர்க்கமிடு வாயிலே கவிபாப்பிணைக்கடாவுங், காலமா ருதமதுர கவிசொரி சவாதுவளர் கவிராசசரபநிருபய்; தருவிதவி ரணவிரு திலக்கண சுலக்கணந் தாங்குணைலாசன்மகவே, தந்த்ரசே கரவருண சந்த்ரசே கரமதா சலமகா முனிவயாமுய்; இருநிலம் புகழ்வண்ண மென்றவொரு பிரபந்த மிசைபினூற் படிபாடினை, யிருநூறு பொன்னொரு முடிப்பாக வேபரிந் திங்கண மனுப்புவாயே. (௮)

ஆகச்செய்யுள் ௲௧௨௮.

---

## மதுரகவிராயர்.

இவர் அமரம்பேடு என்னுமூரினர். திருக்கேதீச்சுரநொண்டி இவரால் பாடப்பட்டது. இவர் ஏறக்குறைய நூற்றைம்பது வருடத்துக்கு முன்னிருந்த புதுவை ஆனந்தரங்கபிள்ளை காலத்தினர் என்பர்.

அந்திவெடி முல்லை யரும்பெடுத்து நான்வந்தேன்
விந்தையதா நாயகற்கு மெல்லியலே—சுந்தரஞ்சேர்
செண்டுகட்ட வேண்டுந் திருவிளக்கி லேதிரியைக்
கொண்டுவந்து போட்டுக் கொளுத்து. (௧)

சித்திரமா மண்டபங்க டென்றல்வரு சாளரங்கள்
பத்தி யுலாவும் பளிக்கறைகள்—இத்தனைவிட்
டிக்குச் சிலையா னிருப்பிடமென் றார்சொன்னார்
இக்குச் சிலையா னுக் கின்று. (௨)

நீளத் திரிந்துழன்றாய் நீங்கா நிழற்போல
நாளைக் கிருப்பாயோ நல்குரவே—காளத்தி
நின்றைக்கே சென்றக்கா னீயெங்கே நானெங்கே
இன்றைக்கே சற்றே யிரு. (௩)

துங்கவரை மார்பா துரைரங்க பூபதியே
இங்கோர் புதுமை யியம்பக்கேள்—பங்கயக்கை
ஆயிழைக்கு நான்குறுத லைந்துகுழை யாறுமுலை
மாயவிழி யேழா மதி. (௪)

உலங்கொண்ட மணிப்புயனே பிரம்பூரா னந்தரங்கா வுன்பாற் செல்ல, வலங்கொண்ட கருடனையா மிடங்கண்டோ மெழினரை யான் வலத்தே கண்டோம், பொலங்கொண்ட மணிமாட மீமிசையிற் புயறவழும் புதுவை யென்னும், தலங்கண்டோ மினதுநகை முகங் கண்டோ மினிவேண்டுந் தனங்கண் டோமே. (௫)

ஆகச்செய்யுள் ௯௧௩௩.

---

## இராமகவிராயர்.

இவர் தொண்டை நாட்டினர். பொன்னேரித்திருவாயிப்பாடிப் புராணம், சித்தம்பாகை குமாரசாமி என்பவர்பேரிற் சாரப்பிரபந்தம் இவரியற்றியவை. இவரும் புதுவை ஆனந்தரங்கபிள்ளை காலத்தினரே.

கார்படைத்த கரதலத்தான் றுரைதிருவேங் கடமளித்த கன்று வெற்
பேர்படைத்த வானந்த ரங்கமகி பாலாநின் பிரம்பூர் நாட்டில் [றும

நேரிழைக்கு விழியேழு முலையாறு காலைந்து நெற்றிநான்கு
பாரிடத்தி லிப்புதுமை கண்டுவந்தே னிதன்பயனைப் பகர்ந்திடாயே.

கொக்குப்பறக்கும் புறுப்பறக்குங் குருவிபறக்குங் குயில்பறக்கும்
நக்குப்பொறுக்கி களும்பறப்பர் நானேன்பறப்பே னராதிபனே
திக்குவிசயஞ் செலுத்தியுயர் செங்கோனடாத்து மரங்காநின்
பக்கமிருக்க வொருநாளும் பறவேன்பறவேன் பறவேனே. (௨)

மூவொன்ப தென்பதிலோர் நாளில்லை மொய்வனத்தில்
தாவுந் தனிமிருகந் தானில்லை—நேரே
வளையா நடையில்லை வாரிறுக விம்மும்
முலையாளை யான்முயங்கு தற்கு. (௩)

சென்னைபுரி வந்து சிவனுயி னேனல்ல
அன்னமது காணு தவனுகி—மன்னுசிரம்
கைக்கொண் டரைச்சோமன் கட்டிச் சடைமுறுக்கி
மெய்க்கொண்ட நீறணிந்து மே. (௪)

சேராநா ளெல்லாம்வெண் டிங்களன லேசேர்ந்தால்
ஆரா வமுதாமென் னாச்சரியம்—ஓராமல்
நானிவா சையா னரசையன் தந்தருளும்
சீனிவா சையன்மணஞ் செய்து. (௫)

அஞ்சம்பி னலெய்து மன்னநடைக் கன்னிகையை
அஞ்சம்பி னலெய்து மப்பாவி—நெஞ்சமுறும்
காவிக் கணந்தார் கலசைவே தாசலனே
காவிக் கணந்தார் கடந்து. (௬)

தனம்பொன் பணம்படைத்த சம்பரிபாப் பின்னோர்
முனம்பிச்சை கள்வனில மூட்டை—கனம்பெற்ற
மீதலத்தும் போற்றுகின்ற வேதாச லாநினைப்போல்
ஈதலத்த மார்கிலரே யென். (௭)

மதுமேவு குவளையணி புயனென்றேனே
மருவனஞ்சூழ் கலசைநகர் மன்னென்றேனே

மூதுநீதி தெய்வசிகா மணிமா னுக்கு
மூத்தவொரு மகனெனநான் மொழிந்திட் டேனே
பதுமாச னத்திமக னென்மேற் சண்டை
பண்ணுகின்றா னவனுற் பங்குன் பத்தால்
இதுவேதா சலமென்றே ஹிதற்கென் னன்னை
யேதேதோ வைதுபழி யிடுகின் றாளே. (அ)

பூங்கமலன் கலைசைவே தாசலன்போ லுருவமைக்கும் பொற்பிலா னென், றங்கயலார் சொலக்கேட்டு வாணியரி பாலுரைக்க வடைந்தா ளன்னோன், தாங்குவனம் போயிருந்தா னரனிடத்திற் சொலப்பித் தாய்ச் சுழல லுற்றான்; ஏங்கியந்தத் திறங்கற்பா னிவனுவில் வீற்றி ருந்தா ளெழிற்கண் மானே. (கூ)

ஆகச்செய்யுள் தூகசஉ.

---

## இராமச்சந்திர கவிராயர்.

தொண்டைநாட்டிலே இராஜ வம்சத்திலேபிறந்து சென்னைமாநகரைத் தன்னுறைவிடமாக்கிக் கொண்டிருந்த இவர் நாடகப்புலமையில் தமக்குத் தாமே நிகர்த்து சகுந்தலைவிலாசம், பாரதவிலாசம், தாருகாவிலாசம், இரணியவாசகப்பா, இரங்கோன்சண்டை நாடகம் முதலியனவியற்றினர். சென்னையிலிருந்த எல்லீசுதுரை இவர் கல்வித்திறமையைக் குறித்து "செந்தமிழ்ச்செல்வனுமோமாரயிரந்தலைச்சேடனும்யாம், சுந்தரத்தோடிசைவல்லோனும்யாவருந்தோத்திரஞ்செய், கந்தனைச்சொல்லுங்கவிராமச்சந்த்ரனைக்கண்டு வெட்கி, அந்தரவெற்பிழிபாதாளந்தேடியடங்கினரே." எனப்புகழ்ந்துபாடியிருக்கின்றனர். இவர் காலம் சென்றநூற்றாண்டுக் குட்பட்டதே.

வணக்கம்வருஞ் சிலநேரங் குமரகண்ட
வலிப்புவருஞ் சிலநேரம் வலியச்செய்பக்
கணக்குவருஞ் சிலநேரம் வேட்டைநாய்போற்
கடிக்கவருஞ் சிலநேரங் கயவர்க்கெல்லாம்
இணக்கம்வரும் படிதமிழைப் பாடிப்பாடி
யெத்தனைநாட் டிரிந்துதிரிந் திளைப்பேனையா
குணக்கடலே யருட்கடலே யசாரான
குறைகடலை வென்றபாய் குன்றுளானே. (க)

வெண்ணெய்க் கட்டியுஞ் சீனியு மூட்டலாம்
விக்கிக் கொள்வதற் கென்செய்ய லாமொரு
பெண்ணைக் கட்டிக் கொடுத்திட லாம்பின்னை
பெறுவ தற்கு முடன்படு வார்களோ
பண்ணைக் கட்டிய மென்மொழி யாளுந்தம்
படுக்கை வீட்டில்வந் தாளே யவடனைக்
கண்ணைக் கட்டி யணையாம லேன்விட்டீர்
கழனி சூழும் பழனியில் வேலரே. (உ)

புல்லுக்கட்டும் விறகுஞ் சுமந்தபேர் பூர்வகாலத்துப் புண்ய வசத்தினால், நெல்லுக்கட்டும் பணக்கட்டுங் கண்டபின் நீலக்கல்லிற் கடுக்கனும் போடுவார், சொல்லுக்கட்டும் புலவரைக் கண்டக்காற் றாழிப்பாய்ந்து கதவை யடைத்திதிர், மல்லுக்கட்டும் மடையரைப் பாடவோ மலையச்சாரலில் வாழ்பெரி யம்மையே. (ங)

மாசற்றிடு திருமேனியின் மறுவுற்றது போல
மாரப்பயல் கணைதைத்திட வந்தெய்தன னையோ
காசத்தனை புண்ணுனது துட்டத்தனை யளவாய்க்
கையத்தனை யானும்மகன் மெய்பெத்தனை நோமோ
வாசற்படி கடவாதவன் மனமெப்படி யானுன்
மதனன்சிறு கறியாதவன் மயலெப்படி யானுள்
ஆசைப்படு வாரோபுரு டரின்மேன்மட வார்கள்
அருணசல ராயாதமி ழறியும்பெரு மானே. (ச)

சீரிலங்கு மாடகூட வீதிவீறு தில்லையான்
திருவிருக்கு மார்பனெங்க டிருமலைக்கு முன்புபோய்
நீரிருந்து மாலைகேளு மவன்மறுத்து ரைக்கிலென்
நெஞ்சுசொல்லும் வார்த்தையாக நீங்கள்சொல்லும் வண்டுகா
வாரியொன்று பாயிரண்டு மாலைமூன்று நாலுவேய் [ள்
மதியமைந்து கங்குலாறு மாரனேழு வாடையெட்
டாரமொன்ப தன்றில்பத் தடங்கலும் மொறுக்குமால்
அத்தனைக்கெ லாமிலக்கெ ளுவியொன்று காணுமே. (ரு)

ஓரானை வனத்தேதிரு வொண்ணவ னிழற்கீழ்
உறையும்பெரு மான்வீதி யுலாவும்பவ னிகளே

நேராக நடப்பேன்வளை பறிபோனது கேட்பேன்
நில்லென்று தடுத்தால்வகை சொல்லென்று மறுப்பேன்
போரானையை விட்டான்முலை யீரானையை விடுவேன்
பொழியம்பு தொடுத்தாலிரு விழியம்பு தொடுப்பேன்
தோராவழக் கிட்டால்வகை வாராவழக் கிடுவேன்
தொல்லைக்கணை கொண்டோவகை வெல்லப்பெறு வேனே. (சு)

அடல்கொண்டெழு சூலப்படை யாரூர்ப்பெரு மானூர்
ஐயம்பக ரென்றேயெம தகவாசலில் வந்தார்
கடுகும்படி சென்றேபலி கொண்டேயெதிர் நின்றேன்
கைவந்தன மென்றாரிது கைவந்தன மென்றேன்
மடவன்னம தென்றாரிது மடவன்னம தென்றேன்
வல்லோதன மென்றாரிது வல்லோதன மென்றேன்
கொடுவந்தன மென்றாரிது கொடுவந்தன மென்றேன்
கொள்ளார்பலி செல்லாரவர் கோட்பாடறி யேனே. (எ)

வீமனுக்கு மைந்தனார் வேதனாகும் வேதனுக்கு மைந்தனாரீச னாகும், காமனுக்கு மைந்தனார் வீமன்றம்பி கந்தனுக்கு மாமனார் காமன்றானே, மாமனுக்கு முன்றமையன் றந்தைகாலன் வையகத்தி லிம்முறைமை வழங்கலாலே, ராமனுக்குச் சீதைதங்கை யாகவேண்டும் ராவணனுக் குத்தகப்பன் ராமன்றானே. (அ)

வீரவெண்டை யப்ரதாபர் தியாகராசர் கமலைசூழ்
வீதிகண்டு பவனிகண்டு விந்தைகண்டு பந்தியாய்த்
தூரநின்ற பூவைகா ளடுத்துநின்ற கிள்ளைகா
டுன்பமேய லாதுபாவி சுகமறிந்த தில்லையால்
மாரனம்பு பட்டகாய மாறுதில்லை யிரவெலாம்
மங்கைமார் தொடுத்தசண்டை மாறுதில்லை யென்செய்வேன்
ஆரிருந்து முதனியில்லை யென்றனைசை யொழியுமோ
அதுவுமில்லை விதியைநொந்து மாவதில்லை காணுமே. (கூ)

## மும்மண்டில வெண்பா.

சலமேதோ சங்கந்தா பூணாரந் தாமே
கலைதாநற் புங்கவன்மால் காணப்—புலவுடைய

கங்கரா கோணு கலாமதியக் கோமர
சங்கரா சோணு சலா. (௧0)

சத்தபங்கி.

திமிரமருத புலாதிகளேதரு தேடரிதாய் மாறுஞ்
சென்னமகாமால் வசமேமதமுறு சிறுமையின் மதியாலே
குமரசிகாமணி யேகனிவாயருள் கூடெனவே கூறுங்
குருபரகோலா கலனேவிதியொடு குறுகியமிடி தீராய்
நமதுவிநாயக தேவசகோதர நாடொறுமே தேறு
நவிமகள்சேர்வே டுவனேபுதுமண நறுமலர்புனை மார்பா
அமரர்பிரானருள் குஞ்சரிதோள்புண ராடவனே மீறு
மரகரவேலா யுதனேமுதுமறை யறுமுகமுரு கோனே. (௧௧)

சத்தபங்கியின்பிரிவு.

வெண்பா.

(௧) தேடரிதாய் மாறுஞ் சென்னமகா மால்வசமே
நாடொறுமே தேறு நவிமகள்சேர்—வேடுவனே
ஆடவனே மீறு மரகரவே லாயுதனே
கூடெனவே கூறுங் குரு.

கட்டளைக்கலித்துறை.

(உ) திமிரம ருதபு லாதிக ளேதரு தேடரிதாய்
குமரசி காமணி யேகனி வாயருள் கூடெனவே
நமதுவி நாயக தேவச கோதர நாடொறுமே
அமரர்பி ரானருள் குஞ்சரி தோள்புண ராடவனே.

கொச்சகம்.

(௩) தேடரிதாய் மாறுஞ் சென்னமகா மால்வசமே
கூடெனவே கூறுங் குருபரகோ லாகலனே
நாடொறுமே தேறுந் நவிமகள்சேர் வேடுவனே
ஆடவனே மீறு மரகரவே லாயுதனே.

கலிவிருத்தம்.

(௪) மாறுஞ் சென்ன மகாமால் வசமே
கூறுங் குருபர கோலா கலனே

தேறும் நவிமகள் சேர்வே டுவனே
மீறும் மரகர வேலா யுதனே.

சிந்தடிவஞ்சிவிருத்தம்.

(ரு) மதமுறு சிறுமையின் மதியாலே
விதியொடு குறுகிய மிடிதீராய்
புதுமண நறுமலர் புனைமார்பா
முதுமறை யறுமுக முருகோனே.

குறளடிவஞ்சிவிருத்தம்.

(சா) சிறுமையின் மதியாலே-குறுகிய மிடிதீராய்
நறுமலர் புனைமார்பா-அறுமுக முருகோனே.

வஞ்சித்துறை.

(எ) தேடரிதாய் - கூடெனவே
நாடோறுமே - யாடவனே.

நவபங்கி.

அரிமரு காகரு ணாலய னேதிட வாரண னேபோதன்
அரியிமை யோர்சூழ் புனிதா புலவட ரயிலமர் பொற்கரனே
கரிமுக னேயச கோதர னேபடி காரண னேநாதங்
கதியுற வேவா னவனே நலமிகு கயிலைய னற்குருவே
குரவலர் நீபம ணிப்புய னேவடி கூரமு தேயோதுங்
குருமணி சேர்மார் பினனே யுலகருள் குயிலுத வுத்தமனே
மரகத மாமயில் வாகன னேகொடி வாரண னேகோதின்
மதியக மேவாழ் குமரா குலவிய மயிலைம லைக்குகனே. (கஉ)

நவபங்கியின் பிரிவு.

நேரிசைவெண்பா.

(க) ஆரணனே போதன் னரியிமையோர் சூழ்புனிதா
கூரமுதே யோதுங் குருமணிசேர்—மார்பினனே
வாரணனே கோதின் மதியகமே வாழ்குமரா
காரணனே நாதங் கதி.

கட்டளைக்கலித்துறை.

(உ) அரிமரு காகரு ணாலய னேதிட வாரணனே
கரிமுக னேயச கோதர னேபடி காரணனே

குரவலர் நீபம ணிப்புய னேவடி கூரமுதே
மரகத மாமயில் வாகன னேகொடி வாரணனே.

கோச்சகம்.

(௧) ஆரணனே போத னரியிமையோர் சூழ்புனிதா
காரணனே நாதங் கதியுறவே வானவனே
கூரமுதே போதுங் குருமணிசேர் மார்பினனே
வாரணனே கோதின் மதியகமே வாழ்குமரா.

கலிவிருத்தம்.

(௨) போதன் னரியிமை யோர்சூழ் புனிதா
நாதங் கதியுற வேவா னவனே
ஓதுங் குருமணி சேர்மார் பினனே
கோதின் மதியக மேவாழ் குமரா.

குறளடிவஞ்சிவிருத்தங்கள்.

(௩) அயிலயர் பொற்கரனே-கயிலைய னற்குருவே
குயிலுத வுத்தமனே-மயிலைம லைக்குகனே.

(௪) திடவா ரணனே-படிகா ரணனே
வடிகூ ரமுதே-கொடிவா ரணனே.

(௫) அரிமரு காகரு ணாலயனே-கரிமுக னேயச கோதரனே
குரவலர் நீபம ணிப்புயனே-மரகத மாமயில் வாகனனே.

(௬) புலவட ரயிலமர் பொற்கரனே-நலமிகு கயிலைய னற்குருவே
உலகருள் குயிலுத வுத்தமனே-குலவிய மயிலை மலைக்குகனே

சந்தவிருத்தம்.

(௭) போதன்னரியிமையோர்சூழ்புனிதா புலவடரயிலமர்பொற்கர
நாதங் கதியுற வேவா னவனே நலமிகு கயிலைய னற்குருவே [னே
ஓதுங் குருமணி சேர்மார் பினனே யுலகருள் குயிலுத வுத்தமனே
கோதின் மதியக மேவாழ் குமரா குலவிய மயிலை மலைக்குகனே.

வம்பிறைக்குங் கடம்பிறைக்கும் பெரும்பிறைக்கு நிகராக வள
ர்ந்த வொற்றைக், கொம்பிறைக்குந் தாதையராங் கடவுகைக்காரோ
ணர் கொன்றை நல்கார், அம்பிறைக்கும் விழிப்பரவை யாயர்குழற்

கொல்லனுலை யனலிற் காய்ந்த, செம்பிறைக்கும் வெண்பிறைக்குங்
கரும்பிறைக்கு மொருத்திதனித் தெய்வஞ்செய் வாளே. (கங)

ஏதிலே வறியவர்க்கு மினியகவிப் புலவருக்கு மிரங்கியந்தப்
போதிலே தனங்கொடுக்குந் தஞ்சைநகர்க் குருவப்ப பூபனெற்குக்
கோதிலே கிடந்துழலும் பலரிடத்திற் சென்றுதமிழ் கூறுவண்ணம்
காதிலே யொட்டிட்டுத் தாடையின்மோ தக்கடுக்கன் றனிட்டானே.

மூங்கிலிலே யொளித்திருந்தான் மூக்கன்சாமி
முதியகடற் போய்ப்படுத்தான் முகுந்தசாமி
தாங்கமலப் பொகுட்டுறைந்தான் றவோற்சாமி
தடவரையி லுழன்றுநின்றான் றகப்பன்சாமி
வாங்கியுண்ண வழிகாத்தான் வயிற்றுச்சாமி
வாணருக்கிங் குதவுவரார் மற்றோர்சாமி
ஓங்கியசீர் மயிலையிற்பொன் னப்பசாமி
யுதவியவேங் கடசாமி யுசிதவேளே. (கரு)

வெண்பிள்ளைப் பிறைநோக்குங் கரும்பிள்ளைக் குறிபார்க்கும் வேதாவென்னும், மண்பிள்ளைத் திரந்தரற்றுங் கிளிப்பிள்ளை மொழி பயிற்று மடவார்க்கெல்லாம், எண்பிள்ளை சிறுபிள்ளை யெனக்கவளோ வொருபிள்ளை யெளியேன்பெற்ற, பெண்பிள்ளை படுந்துயரம் பெரிய பிள்ளைக் காரொடுத்துப் பேசுவாரே. (கசு)

விறகுதறிக்கக் கறிநறுக்க வெண்சோற்றுப்புக் கடகுவைக்கப்
பிறகுபிளவு கிடைத்ததென்று நொறுகப் பிளந்துகொள்ளப்
பறகுபறகென் றேசொரியப் பதமாயிருந்த பாக்குவெட்டி
இறகுமுளைத்துப் போவதுண்டோ வெடுத்தீராயிற் கொடுப்பீரே. ()

இரவல னேயுனக் கில்லாத தென்ன விதயமென்ன
பரவுண வேது சுவையற்ற தென்னசொற் பான்மையென்ன
தர்வுரை செய்திட வென்று னதற்கொன்றுஞ் சாற்றிலன்யான்
வரதிரு வேங்கட நாதாவென் றேன்பொன் வழங்கினனே. (கஅ)

கல்லாத வொருவனைநான் கற்று யென்றேன்
காடெறியு மவனைநா டாள்வா யென்றேன்
பொல்லாத வொருவனைநா னல்லா யென்றேன்
போர்முகத்தை யறியானைப் புலியே றென்றேன்

மல்லாரும் புயமென்றேன் சூம்பற் றோளை
வழங்காத கையனைநான் வள்ள லென்றேன்
இல்லாது சொன்னேனுக் கில்லையென்றான்
யானுமென்றன் குற்றத்தா லேகின் றேனே. (௧௯)

ஆவின மழைபொழிய வில்லம்வீழ
வகத்தடியாள் மெய்நோவ வடிமைசாவ
மாவீரம் போகுதென்று விதைகொண்டோட
வழியிலே கடன்காரர் மறித்துக்கொள்ளச்
சாவோலை கொண்டொருவ னெதிரேசெல்லத்
தள்ளவொண்ணா விருந்துவரச் சர்ப்பந்தீண்டக்
கோவேந்த ருழுதுண்ட கடமைகேட்கக்
குருக்களோ தட்சணைகள் கொடுவென்றாரே. (உ0)

கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான் குடிக்கத்தான் கற்பித்தானா, இல்லைத்தான் பொன்னைத்தா னெனக்குத்தான் கொடுத்துத்தா னிரட்சித்தானா, அல்லைத்தான் சொல்லித்தா னுரைத்தானோவைத்தானையோவெங்குடல், பல்லைத்தான் றிறக்கத்தான் பதுமத்தான் புவியிற்றான் பண்ணினானே. (உ௧)

வஞ்சகர்பா னடந்தலைந்த காலிற்புண்ணும்
வாசறோறு முட்டுண்ட தலையிற்புண்ணும்
செஞ்சொல்லை நினைந்துருகு நெஞ்சிற்புண்ணும்
தீருமென்றே சங்கரன்பாற் சேர்ந்தேனப்பா
கொஞ்சமல்ல பிரம்படியின் புண்ணும்வேடன்
கொடுங்காலா லுதைத்தபுண்ணுங் கோபமாகப்
பஞ்சவரி லொருவன்வில்லா லடித்தபுண்ணும்
பாரென்றே காட்டிநின்றான் பரமன்றானே. (உஉ)

கள்ளிக்கேல் முள்வேலி கழுதைக்கேன் கடிவாளங் கறுப்பில்லாத, உள்ளிக்கேன் பரிமளங்க ளுவர்நிலத்துக் கேன்விதைக ளொடித்துப்போடும், சுள்ளிக்கேன் கோடாலி துடைப்பத்திற் கேன்கவசஞ் சும்மாபோகும், பள்ளிக்கே னதிவீர மழவரங்க பூபனெனும் பட்டந்தானே. (உ௩)

கயக்காவி நாறுங் குழம்பிற்பர காசண்டா
காரார் கொடைச்செங்கையாரோதன் மைந்தா
இயக்காநின் மார்பிற் செழும்புரிநூன்னை யந்தார்
இபபோது நீலகிலென்பேட்டைபதை மார்பில்
சயககாம வேளம்பு தைக்காதுற்முத்துத்
தாமஞ் சுடாசந்தாம்பூசி துறைலும்
செயக்காது வேயோ செவிக்குமாம் பொறுக்குந்
தீயென்ன மீளாது திங்களைசெலகொளுநதே. (உச)

சொன்னமன்ன மாடைதந்தாற் வீதியில்வெற் றிலைமடித்துச் சுருளுந்தந்தான்,கன்னவின்மோ திரந்தந்தான் சரப்பணிதந் தானிரட்டைக் கடுக்கன்றந்தான், செந்நெல்விளையூர்தந்தான் பேர்தந்தான் மல்லையில்வாழ் சிவந்தானுங்கட், கென்னைநாதந்தா னென்றவர்கட் கெத்தனையுந் தாந்தந்தா னியம்பத்தானே. (உரு)

அத்திரம்வே லாவலய மிராசியொன்றிற்
கமைந்தபெயர் மூன்றினிடை யக்காத்தால்
மெததநடுக் குற்றுணைவந் தடைந்தேனிந்த
விதனமகற் றிடுமற்றை யொழுத்தோராறில்
பத்துடையா னைத்தடிந்து பெண்ணறைச்செய்து
பரிவினுகர் வோனிருதாள் பணிந்து போற்றும்
இத்தசனே தெளியசிங்கன் றவத்திற்றோன்றும்
சீதாரா மப்ரபல தியாகவானே. (உசு)

கல்லாலயமாங் தேவருமாங் கழுதைகசடர் பொதிசுமக்கும்
கடாவோவுழுது பயிரிடற்காங் கட்டம்பன்றிக் கிரையாகும்
புல்லேறீசர் வாகனமாம் பொதியுஞ்சுமக்கும் பிணமேவிலோ
பூசிமுடித்து மறையோர்க்குப் பொருளாயீந்து புகழெய்தும்
மல்லார்குட்டிச் சுவரெனிலோ மாடுமுறைஞ்சு மறைவாகும்
மதியாத்துடைப்பந் தானெனிலோ மாடகூடந் தனைவிளக்கும்
அல்லாதுலுத்தன் றனக்கிணையா யாரையுரைப்பேன் புவிமீதில்
அவனைக்குறித்துக் கூறுமிடத் தவனுக்கவனே சரிதானே.

ஆகசசெய்யுள் கககக

---

60வது அட்டாவதானம் சரவணப்பெருமாட் கவிராயர். (284

இவர் பாண்டிநாட்டிலே பரம்பைக்குடிக்குத் தெற்கேயுள்ள முதுகுளத்தூரிலே வேளாளர் மரபிலே பிறந்து சிவஞானயோகிகளின் மாணாக்கருளொருவரான சோமசுந்தரப்பிள்ளையைப் போதகாசிரியராக்கொண்டு கல்வி கற்றுத்தேறி அட்டாவதானஞ்செய்யுஞ் சமர்த்துடையராகி இராமநாதபுரஞ் சமஸ்தான வித்துவானாயிருந்தனர். இராமேச்சுரம் இராமலிங்கேசர்பேரில் பணவிடுதூது, தருமர் அசுவமேதயாகப்புராணம், விநாயகர் திருமுகவிலாசம் முதலியன இவர் பாடிய பிரபந்தங்கள். இவர் ஏறக்குறைய நூற்றிருபது வருடங்கட்கு முன் இராமநாதபுரத்தி லரசுபுரிந்த முத்துராமலிங்க சேதுபதி காலத்தினர். இவர் சந்ததியார் சிவகங்கை சமஸ்தானம் பார்த்திபநல்லூரையடுத்த புளியங்குளங் கிராமத்தி லிப்போதுமிருக்கின்றார்கள்.

* ஏதுபல விர்வினைவு தழைவிலாக் காலத்தி
லெமதுபே ரூர்விசாரித்
திவ்வளவு தொலைவந்த தொல்லையென வப்பொழு
திரண்டுபதி ஆறுபல்லில்
எவ்வளவு மறையுமோ லவ்வளவு மேதெரிய
விருகரமு மந்திவாய்விட்
டின்புறப் புன்சிரிப் புற்றுமது சற்கீர்த்தி
யெல்லாந் தெரிந்துளத்திற்
காதல்வைத் துத்தமிழ்ப் பாடிவந் தோமெனக்
கழறிறுற் செம்பிருதுலாங்
காய்ச்சியே காதிலிட் டதுபோலு மிம்மொழி
கலக்கமாய்க் கேட்டுமையா
கவிராஜ ரேவிட்டி லொருமாத மாகநோய்
கண்டுபெண் பிளைபிழைத்தல்
சடிலைம்வெகு கடினமத ஞல்வரும் விருந்துகள்
கணக்கில்லை யிவ்வூரிலோர்
பாதக வயித்தியன் கைத்தாது பற்றுமுன்
பைத்தாது பற்றிபின்னம்
பற்றுது பற்று தெனச்சொலியே னடிவயிறு
பற்றாத ூறுகொத்துப்
பின்னயே டெலாம்வாரி வாரிமுன் வாகடப்
பாவிஆள வசிஷ்மெல்லாம்

பாவிமக னெழுதியொரு காசும்வை யாமற்
பருங்கரடி யீசல்வனேயின்
மோதியே வாய்வைத் துறிஞ்சியது போற்றடைய
முழுவது முறிஞ்சிவிட்டான்
மூத்தகுடி யாணமக் கேற்றகுடி யலவென்று
முறைமுறை யெடுத்துரைக்கும்
மூழுமூட ராங்கொடிய லோபியர்கண் மேற்றமிழ்
மொழிந்தவ ரிடஞ்செலாமல்
முப்பொழுது போற்றுமெற் கருள்புரிவை யெங்குநிறை
முதலான பரமசிவமே. (க)

* வெண்பாச்சொல் கவிஞரே வந்ததே தும்மீது
மெய்த்தமிழ்ப் பாடிவந்தோம்
வெகுநேர்த்தி முன்னமே நானூறு கோவையொரு
வித்துவான் பாடிவந்தான்
நண்பாக மனம்வைத்து மூன்றுபடி பெருவரகு
நான்கொடுத் தேனதற்கு
நாடெலாந் தெரியுமென் மனையாட்டி மூன்றுதர
நான்றுகொண் டுயிர்பிழைத்தல்
புண்பா டெலாமறிந் தின்னமீர் கவிசொலும்
புலவரென் றிங்குவந்தீர்
போம்போ மெனச்சொலிப் புலையாடு புலையரொடு
போராட வோபடைத்தாய்
தெண்பா வெனும்பொருட் பாமாலை பூண்டுபத
சேவைதந் தருள்புரிகுவாய்
தேசிகம் பூத்தவுமை நேசபொன் னம்பலவ
தேசிக சிரோரத்நமே. (உ)

* வந்தவரி யாவர்காண் கவிராஜ ரெந்தவூர்
வடகாசி யெங்குவந்தீர்
மகராஜ னென்றுனது கீர்த்தியைக் கேட்டுன்மேன்
மதுரகவி பாடிவந்தோம்
சந்ததமும் வித்துவா னல்லநீ யென்னுடைய
தாதைமூ தாதைவழியில்

தமிழ்கேட்ட தியாவர்காண் டலைமுறையி வில்லாத
தாழ்வினைச் செய்துவந்தீர்
இந்தமொழி மற்றுமொரு தரநீ யுரைக்கிலோ
விரணகள மாகுமப்பால்
ஏகுமென் றோதிடும் புல்லர்தம் பாற்செலா
தெனையாள விதுதருணமே
சிந்திக்கு மன்பருக் கருண்மழை சொரிந்ததிக
செல்வங் கொடுக்குமுதலே
தேசிகம் பூத்தவுமை நேசபொன் னம்பலவ
தேசிகசிரோரத்நமே. (க)

* ஆரடி வீதியிலொ ரேடுகொண் டோடியே
யவசரம தாய்வருகிறார்
ஐயையோ புலவன்மார் போலேயி ருக்கின்ற
தியாரென்று மெள்ளவெட்டிப்
பாரடி தலைமறைய நின்றுகொண் டவர்நெடும்
பாதைவழி போகிறதுதான்
பரண்மே லெனைத்தூக்கி விட்டுவிடு தாளையடை
பழிகாரி கதவுபோடு
கூர்மைமொழி கேட்டதிக சீக்கிரம் வந்திடுவர்
குதிருக்குள் ளேயொழித்துக்
கொள்ளடி யெனப்புகலும் லோபியர்கண் மேற்றமிழ்
கொண்டுபோ யலையாமலே
சீரடித தித்துநற் பாமாலை சாற்றியே
தெரிசிக்க முத்திதருவாய்
தேசிகம் பூத்தவுமை நேசபொன் னம்பலவ
தேசிக சிரோரத்நமே. (உ)

* தலைவாச லின்கதவை யாரடி திறந்தவர்க
டமிழ்வாணர் வரில்விடுவரோ
தாரமலி கிரக சகரமோ வட்டமச்
சனியனோ வேதுகுறையோ
அலையா தலைந்துநான் கவிவாணர் தங்களா
லானந்த வருடத்திலே

யான்பட்ட பாட்டையோ யாவரறி வாரந்த
வாதிபக வானறிகுவார்
மலையாம லுன்மன மிருப்பதேன் புலவன்மார்
வரிற்சுமா போவரோதான்
மனம்பதறு தேயெனப் புகல்பவ ரிடஞ்செலா
மற்காக்க விதுதருணமே
சிலையாரு நுதல்விழிக் கௌரிகௌ மாரிஜக
தீஸ்வரி வராகிநிமலி
தேசிகம் பூத்தவுமை நேசபொன் னம்பலவ
தேசிக சிரோரத்நமே. (௫)

* உலகிலெதிர் பட்டவ னொன்றோனே வுங்களுக்
கொருதொழிற் றானுமிலையோ
வொட்டாரங் காட்டியே நித்தநித் தம்வருத்
துபாதிக்கி றீர்களேயோ
புலவரென் றுற்றனங் கொட்டிவைத் தீர்களோ
புதையல்யா னெடுத்ததுண்டோ
புளுகக்கற் றதுபோலொர் தொழில்கற்க வொண்ணுதோ
புகழ்வதாற் பயனேதுகாண்
கலைகற்ற வர்களென்னி னெஞ்சமெரி கின்றதே
கவிராஜ ரேசெல்லுவீர்
காசென் னிடத்திலை சபிக்கிலஞ் சேனெனுங்
கசடர்மேற் றமிழ்பாடியே
செலும்வழி மறித்தென்னை யாளவிது தருணமே
சிற்சபை நடிக்குமுக்கண்
டேசிகம் பூத்தவுமை நேசபொன் னம்பலவ
தேசிக சிரோரத்நமே. (௬)

✓* வாருநீர் யாரென்ன வித்துவா னென்னவும்
மதிமோசம் வந்ததென்றே
வாய்குளறி மெய்யெலா மிகநடுக் குற்றுநீர்
வந்தகா ரியமேதெனச்
சீருலா வியகாம தேனுவே தாருவே
சிந்தா மணிக்குநிகரே

செப்புவச னத்தரிச் சந்த்ரனே யெனலுஞ்
சினந்திருக னுஞ்சிவந்தே
யாரைநீ மாடுகல் மரமென்று சொன்னது
மலாலரிச் சந்த்ரனென்றே
படாதசொற் சொன்னையே யார்க்கடிமை யாகினே
னார்கையிற் பெண்டுவிற்றேன்
தீருமோ விந்தவசை யென்றுரைசெய் வெகுகொடிய
தீயரைப் பாடிநொந்தேன்
றிருமன்று ணடுநின்று நடமொன்று புரிகின்ற
தென்றில்லை நடராஜனே. (௭)

* மரபுதனி ராகவன் சோமசுந் தரகுரு
மலர்ப்பதம் பரவுதாசன்
வண்டமிழ்ச் சரவணப் பெருமாள் கவிச்சக்ர
வர்த்திதேர்ந் தெழுதுநிருபம்
வளர்காரை யம்பதியின் மேவுதுரை லட்சுமண
மந்த்ரியெதிர் கொடுகொண்கபா
வாணருக் குபகாரி நீயாகை யாலெமது
வல்லமையு மகிமையுங்கேள்
கருணீகர் நால்வர்க்கு நாற்கவிதை சொல்லவாய்
கனவேலு மயிலுமென்னக்
காலிலொரு கவிதையுயர் தோளிலொரு கவிதையிரு
கையிலொரு கவிதையெழுதக்
கணக்கொரு புறஞ்சொல விலக்கொரு புறஞ்சொலக்
காணாத திரைமறைவிலே
கனசூது சதுரங்க மொடுகுதிரை யடிசொலக்
கன்னெல்லு முதுகிலெண்ணப்
பரிவுபெற் றப்புதுச் சேரியிற் சென்றினிய
பண்பரிற் சிணையவாத்தி
பண்புள குமாரபா ரதிமதுர கவிவீர
பத்ரகவி கொண்டாடவே
பாக்யனா னந்தநா தன்சபையி லுஞ்செய்து
பல்லக்கு வரிசைபெற்றேன்

பலகாவி யங்களுந் தெரிவே னளப்பரிய
பஞ்சலட் சணமுமறிவேன்
அரசரி லுயர்ந்ததுரை யாரெனிற் சேதுபதி
யாகுமவன் மணிவாயிலில்
அகத்திய முனிக்குமதி கங்கற்ற பேர்களா
யாயிரங் கவிவாணருண்
டவரிலொரு சிறுவன்யான் பாடவறி யேனென்
றகற்றிவிட் டார்களென்னை
யாதலாற் பூமியிற் சஞ்சரித் தேனின்
னகந்தனின் மகிழ்ந்தருள்வையே. (௮)

* கல்விச் சமுத்திரங் கமலா லயந்தமிழ்க்
கடன்மடை திறந்தவெள்ளங்
கற்பனை பிறப்பிடங் கலைமக ளிருப்பிடங்
கவிமாரி பொழியுமேகம்
சொல்விற் பனம்விளையு மதுரக் களஞ்சியந்
தோன்று கற்பூரதீபஞ்
சுகிர்தகுண வவதானி சரவணப் பெருமாள்கை
தொட்டெழுதி விட்டசனது
வில்லுக் கருச்சுனன் சொல்லுக் கரிச்சந்த்ரன்
வெற்றிக்கு விக்ரமார்க்கன்
வித்தைக் ககத்தியன் முத்துக் கருப்பண
விதட்சணா னெதிர்ந்துகாண்க
மல்வெற்றி யாயென்று தாயென்று நீயென்று
மாலென்று வேலென்றுகா
மாவென்று காவென்று நாவென்று பாவென்று
வருகின்ற தருள்புரியவே. (௯)

* எவ்வன மனோன்மணி பதப்பணிகொள் சேதுபதி
யிறைவன் மணி வாசன்மணிவா
யிலகுமணி சைவமணி சோமசுந் தரகுருவெ
னையன்மகிழ் சிந்தாமணி
செவ்வசன மொழிதமிழ்ச் சரவணப் பெருமான்
சிரோமணி யனுப்புமோலை

செய்யதிரு மலைராயன் பட்டணத் தவரெலாஞ்
சிரசுமேற் கொண்டுகொள்க
இவ்வூரில் வந்துதிரு மலைராய னைப்போற்றி
யிலகுகவி காளமேக
மெமகண்ட மொருதினுசு பாடினு னுமிங்
கீரெட்டு வகைபாடுவோம்
ஒவ்விதை யறிந்துகன தனவரிசை யுதவினு
னுமதுகுடி வாழிவாழி
யுதவா திருப்பிரெனி னுமதுபட் டணமின்னு
மொருமிக்க மண்மாரியே. (௧௦)

* அவ்வொன்று மவதானி தமிழொன்று வெகுமானி
யறிவொன்று சேதுபதிபால்
அணியொன்று வெகுமானி சோமசுந் தரகுருவி
னருளொன்று மடிமைவெள்ளைக்
கவ்வொன்று மலைநாவ னதியொன்று கோத்திரன்
கணியொன்று குவளைமார்பன்
கதியொன்று சரவணப் பெருமாட் கவிச்சுரன்
கையொன்று மெழுதுமோலை
தெவ்வொன்று சமர்வென்று திகழ்மகம் மதுதம்பி
தீரனெதிர் கொண்டுகொள்க
செழுஞ்சென்ன பட்டண மதிற்கேகு வோம்வழிச்
செலவுக்கு வேண்டுமதனல்
உவ்வொன்று யவ்வொன்று லவ்வொன்று டவ்வொன்று
சவ்வொன்று மவ்வொன்றுவவ்
வொன்றுரவ் வொன்றுரவ் வொன்றுகவ் வொன்றுனவ்
வொன்றுவர விடல்வேண்டுமே. (௧௧)

* பைங்குவளை மார்பனெடு வையைவள நாடனுயர்
பார்த்திவர்கள் புகழ்நலூரன்
பாக்யனதி குலதில்கன் யோக்யபரன் மேழிப்
பதாகையன் பூமிபாலன்
மங்கலக் கவிராஜன் விதவஜன சேகரன்
மணத்தமிழ்ச் சம்ப்ரதாயன்

வச்ரதே கன்பத்ம நாபன்வே லாயுத
மகாமந்த்ரி குருபுத்திரன்
துங்கமிகு சேதுபதி மகிழுநே சன்சோம
சுந்தர சுவாமிதாசன்
சோடச வவதான சரவணப் பெருமாள்
சுயம்ப்ரகா சன்கையோலை
பொங்கிவளர் செல்வச் செழுஞ்சென்ன பட்டணப்
பொன்னகத் தெளியசிங்க
பூபனெதிர் வந்துகண் டின்சபையி லவதான
புனிதமறி வுறல்வேண்டுமே. (கஉ)

* நாவலவ ருக்குளொரு நடுநாய கம்புவியில்
ராஜரா ஜர்க்குமகுடம்
ரதிகுலவ ரோதயஞ் சகலகலை ஞாபகமெ
நாளும்வித் யாடம்பரம்
பூவில்விலை மதியாத மாணிக்க மவதான
புனிதமாற் றேறுங்குதங்கம்
புகழுமனு வித்யான நாற்கவி விலாசமெய்ப்
புத்தமு தடைத்தகும்பம்
மாவள மிகுங்கொலுச் சேதுபதி வாசலில்
வயங்குகற் பூரதீபம்
வளர்தமிழ்ச் சோமசுந் தரகுரு பதத்தின்மா
மலரருச் சனைசெயன்பன்
மேவுபுகழ் சரவணப் பெருமாள்கை யோலைஜய
வீரபாண் டியவுதார
விருதரசு கட்டபொம் மேந்த்ரதுரை யெதிர்கொண்டு
வெகுவரிசை வரவிடுகவே. (கங)

* வார்பெறுங் கலசமுலை யார்மதன் சேதுபதி
வாசற்ப்ர சண்டவாக்கி
வடிதமிழ்க் கும்பன்சு வாமிநா தன்றுணைவன்
வளர்நெல்லை யப்பன்மைந்தன்
பார்பெறுங் குணஞான சோமசுந் தரகுரு
பதாம்புயம் பரவுதாசன்.

பைந்தமி ழிலக்கண விலக்கியக் கடலுண்டு
பாரெலாம் பொழியுமேகம்
கார்பெறுங் கையனுயர் சரவணப் பெருமாள்
கனிந்தெழுது கின்றவோலை
கதிகொள்சிவ கிரியில்வர குணராம செந்தொட்டி
காளையெதிர் கொண்டுகாண்க
சீர்பெறுப ஞென்றல கூரங்கோடி பொன்பெறச்
செய்துனைத் தேடிவந்தோம்
திண்புய மதிற்புனைந் தென்றனை யனுப்பிடிற்
செகமெலாங் கொண்டாடுமே. (கஃ)

* பனகசய னத்தன்ப்ர சித்தன்மகி மைச்சேது
பதிமகிழ் தமிழ்ப்ரசங்கன்
பைந்தமி ழகத்தியன் சோமசுந் தரகுரு
பதாம்புயம் பரவுமுறவோன்
பாரகாவி யமதொடு லக்ஷாதி லக்ஷம்ப்ர
பந்தமொரு நாழிகையிலே
பாடியெவ ருக்குமரி தானவவ தானம்
பகுக்குமுயர் சம்ப்ரதாயன்
தனகனக வாகனவி னோதசர் வக்ஞான
சாம்ப்ராச்ய சார்வபூமன்
சற்புத்ர சன்மார்க்க சற்ப்ரபல சற்கீர்த்
சத்சிரோ கப்ரதாபன்
சகலகுண சம்பன சிரோரத்ந முக்கியபுனி
தப்ரதா னச்சிரேஷ்டன்
சரவணப் பெருமாள் கவிச்சரப மெனுஞான
ஜனகனெழு துங்காகிதம்
குணிவில்மக தத்தர்வட கத்தர்நிட தத்தர்குட
கத்தர்முனை மக்கர்மச்சம்
கொச்சிய குலத்தர்குளு வத்தர்துளு வத்தர்குரு
தத்தர்மிது லைக்குளரசர்
கொங்கணர் கவுந்தியர் தெலுங்கரொடு டங்கணர்
குலிங்கருடல் சிந்துமகிபர்

கொங்கர்சில வங்கர்பல கங்கர்செறி யங்கரணி
கொண்டுநிலை நின்றுபணியக்
கனகதைபெறு மஜராதுந பாபுபா லாஜாவுட்
கருணையுற் றுதவுமினிய
கனியுமுமு தத்துலுமு ருபாதர் மகாராச
காவல னெதிர்ந்துகாண்க
கடலெலாஞ் சூழ்ந்திடு புவிச்சக்ர வர்த்திநீ
கவிச்சக்ர வர்த்தியாமே
கண்டாய்சொ லவதான முறைபார்க்கி லுன்புகழ்
கதிக்குமுல குளமட்டுமே. (கரு)

வண்ணப்ர பந்தத்து முக்தமிழ்ப் பாமும்
மதத்தைக் கரத்தொழுக்கி
வறப்பினும் வளர்ந்தரு பொருப்பொப் பெணச்சித்ர
வாய்விட்ட தட்டிவேட்டு
மதுரகவ ளத்தைத் திரட்டித் திரட்டிச்செவ்
வாய்மடுத் துண்டுகோட்டு
வப்பெழுத் தாணிகொண் டேற்றெழுகல் விக்கடல்
வயங்குப்ர ளயத்தின்மூழ்கி
அண்ணவரு வெவ்வினைக் கொப்பத்தை யெற்றிறு
வடிகொண்ட பண்ணடத்தி
யழகியக ளுற்பணிக் கச்சமிட் டெக்கவித்
தாக்ரமித் துக்ரமுற்றி
யட்டாவ தானமெனு முன்மத்த மேறியறி
யாமைமிக வெந்தறித்தே
யாறுந் துதிக்கைபெற் றுக்கட்க டைப்பொறி
யனற்பிறக் கச்சினத்தே
பண்ணரு செனத்திறை கொடாமன வுலுத்தப்
பசாசரை வளைந்துகொண்டே
பழமொழி யிருப்புலக் கைப்படையி னுற்சிதறு
பஞ்சுபஞ் சாவடித்துப்
பரகுரு வெளும்பாக னடிமலர் சுமந்தவண்
பணிமலர்த் தோட்டிதனியாற்

பரிவுடன் வணங்கிநிஞ் சரவணப் பெருமாள்
பரூஉக்களி றனுப்புமோலை
தண்ணமிர்த வாரியுயர் செல்லையம் பதியரசு
சங்கநிதி சேதுபதிவா
சன்மார்க்கன் மகன்மகன் றலைமுறைக ளாகப்ர
தானியாம் யூகிமந்திரி
தந்த்ரமுத் தளகுமரு மகனுன முத்தளகு
சாமியெதிர் கொண்டுகாண்க
சார்வான தூதொன் றுபாடிவர் தனமுனது
தயவுகூர்ந் தருள்புரிவையே. (கசு)

* தொடையெலாந் திரிபுசொற் பொருளெலாங் கற்பனையெ
துகையெலா மாலைமாற்று
சொல்லெலா மதுரம்வெண் பாவெலாங் கதைகலித்
துறையெலா மேகபாதந்
தூதெலாஞ் சந்தமஞ் சரியெலாங் கௌதமா
சுகளெலாந் தனிநிரோட்டஞ்
சுயமெலா நிமிஷமெய்க் கணமெலாங் கணம்வணத்
துறையெலா நாகபந்தம்
அடையெலாஞ் சிவசரிதை சிந்தெலா நீதிகொச்
சகமெலா மடிமடக்கவ்
வடியெலா மெமகமுயர் பதமெலாங் கட்டளா
டகமெலா நவசித்திரம்
அசையெலா மிருபொருள்சொ னூலெலாம் வேதமட்
சரமெலாம் பிர்மலிகிதம்
அளவெலாந் தராசுநிறை முடிவெலாம் பொருளா
வமைத்திதெலாம் பாடுகவிஞன்
படையெலாஞ் சேரனப் புடையெலாஞ் செறிவயற்
பெருநெலார் தேவைமுல்லைப்
பிணையெலாஞ் சேதுபதி புகழெலாம் போற்றிவரு
பெட்பெலாந் திகழ்சிலாக்யன்
பெருநலான் சோமசுந் தரகுரு பதத்தைப்
பிறப்பெலாம் போற்றுமடிமை

பேச்செலா மமுதமொழி யாச்சொலுஞ் சரவணப்
பெருமாள் விடுங்காகிதம்
படையெலாங் கொண்டுபொரு பகையெலாம் வென்றாநற்
பண்பெலா மறியுநிபுணன்
பாரெலாம் போற்றவரு ரவணப்ப பூபனெதிர்
பண்பெலாங் கொண்டுகாண்க
பலனெலாம் பெலனெலா நலனெலாங் கலமெலாம்
பரியெலாங் கரியெலாம்பொற்
பணியெலா மணியெலாந் துகிலெலா நெல்லெலாம்
பணமெலாந் தரவேண்டுமே. (௧௭)

* தண்ணமுத சாகரங் கவிதாப்ர சங்கந்
தமிழ்க்கடலை யுண்டமேகஞ்
சற்குண விலாசமெய்க் கவிராஜ சிங்கம்வெண்
டாமரை மடந்தைவாசம்
வண்ணப்ர பந்தத்து மும்மதக் குஞ்சர
மணத்தவஷ் டாவதாநம்
வாசாம கோசரங் கல்விப்ர வாகந்தெய்
வச்செயல் வரப்ரசாதம்
கண்ணிலவு முல்லையணி சேதுபதி வாசலிற்
கனகாபி ஷேகயோகங்
கற்றவர்கள் கொண்டாடு சரவணப் பெருமாள்
கவிச்சக்ர வர்த்தியோலை
பண்ணுலவு சிவகங்கை யம்பதிப் பேட்டையிற்
பலரெதிர் நடந்துகாண்க
பரிவுறு புராதன மிவூரென்று வந்தனம்
பணந்திரள வரவிடுகவே. (௧௮)

* மாதுபதி தாதுபதி யாதுபதி சேதுபதி
வாசற் கவிப்ரசங்கன்
மங்களா கரபுஞ்ச நாற்கவிக ணிறைகும்ப
மதுரப்ர பந்தமேகம்
வடிதமிழ்க் குஞ்சரங் கவிராஜ சிங்கமநு
ராகமலவ தானசரபம்

வண்ணக் களஞ்சியஞ் சிந்துச் சமுத்திர
மணக்குந் தமிழ்ப்பொக்கிஷம்
சோதிப்ர காசஞ்சி லாக்யசற் பாத்திரஞ்
சுகிர்தசத் சைவநூல்பஞ்
சுசாதிக சுஜாதிக சுதாகர சுயாமக
சுபாகசற் புருஷரத்நம்
சுதந்தர சுமங்கல சுரஞ்சித சுமந்திர
சுயம்ப்ரகா சப்ரதாபஞ்
சுபத்திர சுலட்சண சுகற்புத சுசற்சன
சுகப்ரபல ரத்நாகரம்
காதல்செய் சிவக்யான விற்பன தடாகஞ்சக்
கலகலைக் யானபீடங்
கல்விப்ர வாகம்வித் யாடம்ப ரந்தமிழ்க்
கடன்மடை திறந்தவெள்ளம்
கனசபா பூஷணஞ் சோமசுந் தரகுரு
கடாட்சவிட் சணவிலாசன்
கங்கைகுல திலகனுஞ் சரவணப் பெருமாட்
கவிச்சக்ர வர்த்தியோலை
ஆதிசே ஷனராம வண்மைமக ராஜனே
முடியெதிர் நடந்துகாண்க
வசரது நபாபுசரி பேட்டிபெற் றோமியா
மறியாத தேயமில்லை
யரியதென் றிசைவந்த தேதெனிற் பொதிகையி
லகத்திய னிருக்கிறானை
மவனையுங் கண்டுனது மகிமையுங் கண்டுநா
மறியலா மெனவந்ததே. (௧௪)

* மாறுமல் வாய்வேலு மயிலுமென வேசொல்ல
வாசகங் கைகளெழுத
வருகணக் கொருபுறந் தீரமற் றொருபுறம்
வரைந்திடு மிலக்கமாற
வளைதிரைக் குட்சிறிது கல்லணி வருகின்ற
வன்கணக் கினிதுபகர

மருவுசொக் கட்டானும் விளையாட மறைவாக
வைத்தசது ரங்கமாடக்
கூறுக வெட்டெழுத் தாணியெழு தும்படிக்
குங்கவிதை பகர வதிலோர்
கூரெழுத் தாணிசது ரங்கமுது குப்புறங்
குதிரையடி வெண்பாவரக்
கூறுபுல வோர்சபையி லட்டாவ தானமுல
கோர்புகழ வேநடத்தக்
கோடிலாச் சதுரங்க மாடவய லூரிருக்
குஞ்சுரு ளு மாட வொருபால்
ஏறுமி வண்ணப்ர பந்தமெட் டுப்பேர்க்
கெழுத்தெழுத் தாவுரைக்க
இவ்வாறு நாற்புறக் கவிதாப்ர சங்கம
திசைக்கும்ப்ர சண்டவாக்கி
இலக்கண விலக்கியக் கடலேழு துங்குடித்
தேப்பமிடு காளமேகம்
இனியகவி யவதாணி சரவணப் பெருமாள்கை
யெழுதுமொப் பத்திதென்லே
சேறுமி குங்குமக் கொங்கையார் மடலெழுது
திவ்யரம ணிகமோகன்
சேதுபதி வாசற்ப்ர தாணிமுத் திருளப்ப
சிங்கவே றெதிர்ந்துகாண்க
சித்தபரி பூரண கடாட்சவிட் சணகுண
தியாகபர ணியாகையாற்
செந்தமிழ்க் காதற்ப்ர பந்தமொன் றுன்மீது
செய்துவந் தனமகிழ்ந்தே. (௨௦)

நானூறு வண்ணமற் றைஞ்ஞூறு மஞ்சரி
நடாத்துமறு நூறுதூது
நாலாயி ரம்பரணி யையாயி ரங்கோவை
நாடகம் பதினாயிரம்
நாற்பத்து நாலாயி ரத்துநா னூறுபது
நாலிலட் சங்கொச்சகம்

நாற்பத்தி ரண்டிலட் சந்தாழி சைகளொரு
நாழிகை தனிற்பாடுவோன்
தேனூறு மதுரச் செழுந்தமிழ்க் கெல்லையாச்
சித்தாந்த வேதாந்தரஞ்
சிதவுசித சிரேஷ்டசக லாகம புராதன
சிலாக்யசௌ சன்யாதிகன்
திடசித்த சற்குண சற்சன வரப்ரசா
திபசம்ப்ர தாயதுல்யன்
செய்யாவ கண்டமூ தண்டவே தண்டவித்
யாடம்ப ரப்ரசண்டன்
வானூர் பெரும்புகழ தலவிதல சுதலநித
லங்களில் வயங்குமுசிதன்
மைக்கட் கடற்பொற்பு விக்குட்ப்ர சித்தத்த
வக்கொற்ற வர்க்குரியவன்
மகராஜ ராஜருந் திறைதருஞ் சேதுபதி
வாசற்க விப்ரசங்கன்
வண்டமி ழிலக்கணச் சோமசுந் தரகுருசு
வாமியடி மைக்குமடிமை
பானூறு மென்மொழிச் சரவணப் பெருமாள்ப்ர
பலகவிஞ னெழுதுமோலை
பாவைதென் றேவைரா மீசனருள் பெறுபரா
பரராம நாதமுனிவன்
பாதமற வாதவன் ராமநா தேந்த்ரசம்
பன்னனெதிர் கொண்டுகாண்க
பனிமதிச் சடிலன்மே லினியபண விடுதூது
பாடிவந் தனமகிழ்ந்தே. (உக)

அட்டதிசை பணிசெயும் சேதுபதி மணிவாச
லஷ்டாவ தானசிங்கம்
அருந்தமிழ்ச் சோமசுந் தரகுரு சுவாமியடி
மைக்குமடி மைக்குமடிமை
அசரது நபாபுவை வரச்சொலிக் காதிதமொ
ரான்வச மனுப்பிவைத்தோன்

ஆயிரத் தெட்டடி வரச்சொலிச் சனதுதள
வாய்முதலி யார்க்குவிட்டோன்
எட்டடி வரச்சொலித் தஞ்சைரா ஜர்க்கிலகு
துள்ளுசீட் டுக்கொடுத்தோன்
ஏழடி வரச்சொல்லி மலைராஜ னுக்கோலை
யெழுதியுத் தரவுசெய்தோன்
இனியபா ளையகார ருக்கெலா மொப்பமிட்
டெழுதுநிரு பங்கொடுத்தோன்
இக்கரையு மல்லாம லக்கரையில் யாழ்ப்பாண
மெல்லாங்கி ளாக்குவிட்டோன்
கொட்டமிடு லோபரைப் புத்திவர வன்கவிக்
குறடாவி னாலடிப்போன்
கூறிய கவிக்கர்த்த மறியார்க டலையிலே
குட்டிப்ப யன்சொல்லுவோன்
குற்றஞ்சொல் வோர்களைச் சோழன்மக னைப்போன்று
குத்திச் சிரந்தவிர்ப்போன்
கோளர்களை வசையான கவிதைக் கயிற்றால்
கோத்ததோ ரணங்கட்டுவோன்
கட்டிமா ணிக்கமுயர் சரவணப் பெருமாட்
கவிச்சக்ர வர்த்தியோலை
கனபாவை நகர்மேவு சொக்கலிங் கக்கொடைக்
கர்னனெதிர் கொண்டுகாண்க
கணபதி தருந்திரு முகத்தைமுன் சொன்னபடி
கண்டாங் கேற்றியன்பாக்
கனகமும் பவளமுந் தரளமுங் கோமேத
கங்களுந் தந்தருள்வையே. (உஉ)

* நீதிபெறு கல்விப்ர தானந் தெளிந்திடு
நிதானஞா னப்ரகாசம்
நித்தியசு மங்களக் கவிதாப்ர சங்ககன்
னேயசுந் தரவிலாசம்
வேதாந்த சாகரஞ் சித்ராவ தானதமிழ்
மேகஞ் சபாரஞ்சிதம்

விக்வசன சேகரஞ் சேதுபதி வாசலில்
விளங்குநவ ரத்நதீபம்
சிதரன் சோமசுந் தரகுரு சுவாமியிரு
திருவடி யாதிக்குமடிமை
சீர்பெறுஞ் சரவணப் பெருமாள் கவிச்சுரச்
செயசிங்க மெழுதுமோலை
மாதவன் விசயரகு நாதத் துரைக்கொண்ட
மானெதிர் நடந்துகாண்க
வரிசைபெறு தாதொன்று பாடிவந் தனமுனது
மனமகிழ்ந் தருள்புரிவையே. (௨௬)

* மகபதி நராதிபதி நிதிபதி சேதுபதி
வாசற்ப்ர சண்டவாக்கி
வடிதமிழ்ச் சோமசுந் தரகுருசு வாமியடி
மைக்குமடி மைக்குமடிமை
மயில்வா கனக்கடவு ளருளினா லுபயசா
மரவிருது கொண்டநல்லன்
மலையாள ராஜனருள் தந்தபல் லக்குமெவரு
மதிபெற்ற சார்வபூமன்
யுகமெலா மகிமைபெறு தஞ்சைமக ராஜனையொ
ரேழுடி யழைத்தநிபுணன்
உசிதனஜ ரதுநபா பிருகையாற் றருவரிசை
யொருகையால் வாங்குகவிஞன்
உற்றசிவ கங்கையிற் கவுரிவல் லவராஜ
னுதவுவள நாடுபெற்றோன்
உயரிலங் கைப்பூமி ராஜசமு கத்தினிலு
மொருகோடி வரிசைகொண்டோன்
ககனமூ தண்டவே தண்டபிர் மாண்டங்
கவிப்புகழ் படைத்தவுரவோன்
காசிமுத லாகரா மேச்சுர வரைக்குங்
கவித்துவச நாட்டுவிசயன்
கற்றுச் சொலிக்கும்வரு ஸ்தான பதிக்குமிரு
கனகதண் டிகைகொடுத்தோன்

கவிமதக் குஞ்சரஞ் சரவணப் பெருமாட்
கவிச்சக்ர வர்த்தியோலை
புகழ்மேவு சிங்கநகர் வளருங் குமாரவேற்
பூபனெதிர் கொண்டுகாண்க
பொருவரா வேங்கைகை பாராத தாதுசெம்
புக்குளமை யாதசாயி
புவியிலிரு ளாவேம மேய்ந்துவள ராமாடு
பொங்கிவே காதகாணம்
பூண்டொடி படாவத்த மறுபடா வுடலேழு
பொதிதந்து நீவாழியே. (உ௪)

* செயராம நாதனே தெய்வந் தனுக்கோடி
தீர்த்தமே தீர்த்தமெங்கள்
சேதுபதி யேராஜ னெனவணங் கார்களைச்
சிறிவா யைக்கிழித்துச்
சென்னையை நொறுக்கிவளர் பல்லையு முடைத்துச்
செழுங்குடரை யும்பிடுங்கிச்
சிரசையு மறுத்துக்ர முகவிருது பெறுவிஜய
சிங்கடா கைப்பிரசண்டன்
நயமதுர மறியாத முழுமடையர் செவியென்னு
நல்லபாம் புப்புற்றிலே
நனிநத் திருந்தமிழ்ச் செந்தேன் குழம்பையொரு
நாளுங் கவித்திடாதோன்
நாவலந் தீவினுள நாடெலாம் புகழ்பெறு
நராதிபர் வணங்குதுல்யன்
நாவலர் குழாம்பல துதிக்குமட் டாவதா
னப்ரபவ சார்வபூமன்
இயலா யிரங்கோடி பிரபந்த முழுதுமொ
ரிமைப்பொழுதி னிற்பாடுவோன்
இலக்கண சமுத்திரஞ் சோமசுந் தரகுருவெ
னையனடி மைக்குமடிமை
ஏகசக் ராதிபதி சரவணப் பெருமாட்க
விச்சுரன் செங்கையோலை

இந்த்ரதரு யாழ்ப்பாண மேவிய வயித்யலிங்
கேந்த்ரனெதிர் கொண்டுகொண்க
வயமான கையிலே மூக்குள் தொன்றுதிரு
மாயன் பிறப்பிலொன்று
வாற்புறமோர் கொம்புந் தலைப்புறமோர் கொம்புமுள
வாகனந் தன்னிலொன்று
வலியார் புரங்களைச் சுடுகின்ற பொருளொன்று
வாரமது தன்னிலொன்று
வரவுடன் வெளுத்தசந் திரனென்று நீபின்ன
வரிசைதந் தருள்புரிவையே. (உ௫)

* அவதானி சரவணப் பெருமாட் கவீச்சுரன்
அச்சென்ன பட்டினமுத
லாராம நாதபுரம் வரையுமுள சுங்கப்பி
ராமணர்க் கெலாம்விணப்பம்
நவமுள துருக்கர்க் கெலாஞ்சலா முதலிமார்
நாய்க்கர்வே ளாளர்க்கெலாம்
நன்மைமேன் மேலுமுண் டாகவுங் கம்மாளர்
நட்டுவர்க ளோச்சர்குயவர்
எவரெவரை யுந்நினைத் திருந்தநன் மையிலே
குறையில்லை வள்ளுவர்களுக்
கெல்லாஞ் சொலும்படி யெமதுசா மான்பலவு
மிங்கிருந் தெமதுவீட்டுக்
குவகையொடு முன்னே யனுப்பினோம் பல்லக்கு
நாமும்பி னேவருகிறோ
மூடே தடுக்கிலற் பாயுசு தடாமல்விட்
டோர்க்கெலாந் தீர்க்காயுசே. (உ௬)

* வீரப்ர தாபகவி சரவணப் பெருமாள்வில்
விசையன்ப லக்குவந்த
வேளைதனில் வாரா திருக்கலா மாகொடிய
வித்வசனர் வாய்த்தியினால்
வெந்தபேர் கோடானு கோடியுண் டேயிந்த
மேதினியி னிற்புலவர்தாம்

மெச்சுரச குளிகைகள் கொடாதகண் டன்களோ
விடாதகண் டன்கள்பட்ச
வாரமுறக் கோபிகள் கடும்பச்ச நாவிகள்
வணங்காக் கொடுஞ்சாதிகள்
வச்சிரப் பசைகளீ யக்கதிர்க ளாகாய
வலைகள்மடை வாய்க்கொக்குகள்
வலியவாட் கொல்லிகள் மனுத்தினு நமன்கள்கொடு
மைப்புற்றின் வாய்க்கரடிகள்
மாறு நெருப்புக்கள் மீளா விடங்கள்வாய்
வீணன்க ளரிபூச்சிகள்
காரியக் கள்ளன்க ளாரியப் பேய்கள்வெங்
கவடிகள் புருஷவேசிகள்
கடினநிட் டூரன்கள் தோலா வழக்கன்கள்
கடினன்கள் பிடிவாதிகள்
கலிகால சனியன்கள் தோத்திரப் பிரியன்கள்
கசடலோ பகுடாரிகள்
கடுங்கொலைத் தேட்கள்கொடு நட்டுவக் காலிகள்
கட்டாத பொலியெருதுகள்
நாரற்ற வம்பன்கள் கொம்பேறி மூக்கன்கள்
நச்சுப் பனுப்பாம்புகள்
நாக்கொள்ளி வாயன்கள் தீக்கொளிக் கண்ணன்கள்
நாசகா லன்கள்நாங்கள்
கதிர்கொண்டு வந்தால் மனம்பொறுப் போர்தங்கி
ளொலொருக் காலும்பொரேம்
ராமே சுரந்தன்னில் வேலுமணி யம்பண்ணும்
நசுவற்ப ரமசாமியே. (உ௭)

திருவநந்தை வேந்தர் எந்தவூரென்றபோது பாடியது.

* இலைநாட்டு வேற்காரத்துச் சேதுபதி தனைத்தேடி
யேழு நாளோர்
மலைநாட்டு மன்னன்வந்து காத்திருந்த வாசல்வித்து
வான்யான் கண்டாய்

கலைநாட்டிற் பெண்ணெனவே செய்தசரணசனகன்
கன்னிக் காகச்
சிலைநாட்டி வளைத்ததிற வீரகே ரளராம
செயபூ மானே. (உ-அ)

ஆகச்செய்யுள் கூகக.

---

## அருணாசலக்கவிராயர்.

முன்னர்க் கூறிய அட்டாவதாநம் சரவணப்பெருமாட் கவிராயருக்குப் புத்திரரும், துவாத்திரீம் சதாவதாநம் சரவணப்பெருமாட் கவிராயருக்குப் பிதாவுமான இவர் இராமநாதபுரம் சம்ஸ்தானத்திலேயே வித்துவானாயிருந்தவர்.

* சக்ரவா ளத்தகடு முகடுபட பகிடனப்ர
சங்கத் தெழுந்தசிம்மம்
தத்வலட் சணவித்வ லட்சணா லட்சணதி
தட்சண சபாரஞ்சிதம்
ந்யலோ கத்துமத லத்தும்வித லத்துநி
தலத்தும்ப்ர சித்ததுல்யம்
சற்குண லயமினிமை பெறுசுவைக் கல்வியமு
தத்தலங் காரகும்பம்
உக்ரகா டின்யதிட தடவிகட கடன்மடை
யுடைத்தெழு தமிழ்க்குஞ்சரம்
உசிதத்து கந்தசித் தாந்தவே தாந்தவுர
ராமவா ராக்யசித்தம்
உபயபர் வதவடவ ரைக்கப்பு றத்துமுல
வப்புகழ் நடத்துவீரம்
உரககங் கணமகுட புவனசக் ரேசுர
வுதாரநதி குலசிரேஷ்டம்
கைக்கடா சலகோடி தருசேது பதிராச
கர்த்தன்வா சற்ப்ரசங்கம்
கற்றறி யிலக்கணச் சோமசுந் தரகுரு
கடாட்சகன காபிஷேகம்

கருதுவிரு தவதானி சரவணப் பெருமாட்
கவிச்சுரன் பெற்றரத்நம்
கமலைநா மகள்வளர் நிதானியரு ணாசலக்
கவிவலவ னெழுதுமோலை
திக்கெலாந் திறைகொண்ட கவுரிவல் லவராஜ
சிங்கமெதிர் கொண்டுகாண்க
சீருத நாகமறு காலிலாத் தும்பிவெந்
திடமுடை படாவாரணம்
தீக்குண மிலாதகரி பங்கப் படாக்கயந்
செலத்திலோ டாதகளிறு
திருகாத தந்திமுனை வளையாத வேழந்
சிறப்பொடு கொடுத்தருள்வையே. (க)

* தடக்கட லிடப்புவி புரக்குமகு டத்தர
சரிற்பெரிய சேதுபதிவா
சலிற்கன மகத்துவ மிகுத்திடு சிதக்துவ
சனப்ரபல சற்சனபரன்
தருப்பத மடக்கடி கலித்துறை விருத்தம
தனப்பரணி கொச்சகமுதல்
தமிழ்க்கடன் மடைப்புன றிறக்குமதெனக்கனி
சருக்கரை பொரப்பகருவோன்
வடக்கொடு குடக்கொடு கிழக்கொடு திசைப்புற
மணத்திடு புகழ்ப்ரதாபன்
மடத்தொடி கொடித்துடி யிடைக்குட முலைச்சியர்
மடற்கிடு தொடைக்குவளையான்
வடித்திடு மிலக்கண விலக்கிய வகைக்கொரு
மலைக்குறு முனிக்குநிகர்வான்
மனுக்கிளை தழைத்திடு மகிழ்ச்சியரு ணாசல
மகத்வகவி ராஜனோலை
கடற்கரை யுடைத்திட விடப்பணி சடைத்தலை
கடுப்பொடு மடிக்கவிருநாற்
கடக்கய முடற்பட படக்கவி ணடர்த்திடு
கடிப்புயல் குடற்கிழிபடக்

கடைக்கணி லடற்சிகை கதித்தெழ வியற்புவி
கடைக்கடை கிடைக்குமலையும்
கடும்பொடு பொடிப்பட வடுத்தவெ ளிடைக்கதிர்
கடற்குற நடக்கவருவார்
நடப்படை திடுக்கிட வடிக்கிடு கிடுத்துட
னடுக்கிட வடர்க்குமுனைமா
நடத்துதுரை கனிவாடி மலைபாண்டி யப்பய
நரேந்திர னெதிர்ந்துகாண்க
நயப்பரி மதக்கரி சரப்பணி விரற்பணி
நவக்கொலு சுரத்நமுருகு
நகைக்கிடு சிவப்பவயி ரப்பொடி பதக்கமு
நமக்கிவை கொடுத்தருள்வையே. (உ)

ஆகச்செய்யுள் ௬௯௯.

---

## சொக்கநாதப்புலவர்.

இவர் சரிதம் விளங்கவில்லை.

* எண்படா தெதிரிட்ட பாவலர்க் கிடியேறு
நாவலோர் கனகமேரு
இந்திரன் பணிசுந்த ரேசரருள் சேர்சொக்க
நாதனின் றெழுதுமோலை
திண்படா மதியொத்த முகபடாந் தொடுகின்ற
திரிகடா சலேசன்முத்துத்
திருவுடைய மகிபாலன் மங்கைநக ராதிபன்
சிந்தையொ டெழுந்துகாண்க
கண்படா வத்திரங் கொம்புகொள் ளாதகலை
கழிபடாக் கோடிநஞ்சு
காணாத நாகமுட் டையாத வுடைபண்டு
கட்டுப்ப டாக்கலிங்கம்
பண்படாக் கோசிகம் நெய்படா வாடைபறை
கொட்டாத தானைமுதுகு
பட்டிடாத் தூசொன்று மட்டிலா விலையிற்
பரிந்துவர விடல்வேண்டுமே. (க)

ஆகச்செய்யுள் ௬௭00.

---

## சோடசாவதானம் சுப்பிரமணியக்கவிராயர்.

இவர் தொண்டை நாட்டிரெனக் கூறுவர். இவருடைய பிறவரலாறு கள் தெரியவில்லை.

* மஞ்சரி கலம்பகங் கோவைநூ தனராக
மாலைபல சந்தமாலை
மடலுலாப் பரணியின் ளைக்கவிதை முதலா
வழுத்தும்ப்ர பந்தவாக்கி
மகுடமுடி மன்னர்சிர கரகம்பி தஞ்செயும்
வசனவுசி தப்ரசங்கன்
வாதுபுரி விகடகவி மதகய குழாங்கடமை
வாய்வீ றடக்குசிங்கம்
சஞ்சரித முத்தமிழை யெங்குஞ் செலுத்திவரு
தாட்டீக மானநிபுணன்
தண்டமி ழிலக்கண விலக்கிய மதாம்பெரிய
சலதிநிலை கண்டவங்கம்
தணிகாச லக்குமரர் பாதமற வாதவன்
சரசுவதி நடனசாலை
சரசகவி சோடசவ தானிசுப் பிரமணிய
தக்கோ னனுப்புமோலை
கஞ்சமலர் மாலைமுந் நூலிலகு திண்புயன்
கருவேடு நகராதிபன்
கவிஞர்கற் பகமுத்த ராபதிய னும்பிரக்
கியாதிபழ மறைவேதியன்
காரைநிக ரானகொடை வீரபூ பாலனருள்
காதன்மக னைசுமுகன்
கங்கைநதி யாளன்வேங் கடரங்க மாலிது
கருத்தினின் மகிழ்ந்துகாண்க
விஞ்சுபுவி மீதிலுன் போலரஞ் சிதகுண
விவேகிவே றில்லையென்றே
விரும்பிவெகு நாளாக வுனையடுத் தனனெனது
வெறுமைநீங் கிடவுமினியோர்

வேளை தனி லென்றனவ தானமது நாளுமென்
மீதிலன் பாகமகிழ்வாய்
வினவியிப் புவியிலுன் பேரிலக வின்னுமிகு
மேன்மைசெய் திடல்வேண்டுமே. (க)

ஆகச்செய்யுள் ௩உ0க.

---

## அருணகிரிநாதர்.

இவர் சனனத்தைப் பட்டினத்தடிகள் சரிதத்தில் கூறினும். கந்தரந்தாதி, கந்தரநுபூதி, கந்தரலங்காரம், திருவகுப்பு, திருப்புகழ் முதலியன இப்பெருமானு லருளிச்செயப்பட்டவை.

வில்லிபுத்தூராழ்வார் சிவாலயந் தோற்ருமலிருக்கத் திரையிட்டுச் சென்றபோதிவர் பாடியது.

* புரத்தைநர சிங்கத்தைப் போர்வேளைக் கூற்றை
எரித்தவர்க்குத் தாச னெதிரே—நிரைத்தபுகழ்த்
தேன்கொட்டுஞ் சோணகிரித் தேசிகனைப் போற்ருமல்
ஏன்கெட்டுப் போனு னிவன். (க)

ஆகச்செய்யுள். ௩உ0உ.

---

## சுப்பிரதீபக்கவிராயர்.

மதுரையைச் சார்ந்த திருமங்கலந் தாலூகாவிலே கம்மாளர் மரபிலே சனனமான இவர், மிக வாக்குவல்லமையுடையராய் நிலக்கோட்டைச் சமீன்தார் கூழப்பநாயக்கர்பேரில் காதல், விறலிவிடுதூது முதலிய பிரபந்தங்கள் பாடிப் பரிசுபெற்றனர். இவர் பலபட்டடைச் சொக்கநாதப்புலவரோ டெதிர்த்த விவரங்களை அவர் சரிதத்துட் கூறியிருக்கின்ரும்.

நாகம கூழேந்திரன்மேற் பாடியன.

* பருதியெனப் புகழ்பரவு சதுரர்வேந்தன்
பாகசா தனன்பெரியா னென்பதூரான்
விருதுசக்ர குலந்தழைக்கும் பாண்டிநாட்டில்
விரகமொடு வந்திடிவண் ணுத்தியாரே
கருதுமெங்கண் மயலழுக்கை நீக்கியுங்கள்
கணவனையுங் கைமாற்றுக் காரணுக்கி

வரிசையொப்பிச் சேலையெடுத் திடுவீராகில்
மாரனுக்கு மாராப்புப் போடலாமே. (க)

* நாமகளும் பூமகளும் விளங்குமார்ப
னலற்சேர் கொடியகலி யிருளைநீக்கி
மாமதியோ னெனவிருக்கு மொன்பதூரான்
மருவுதமிழ் நாட்டில்வளர் வலைச்சியாரே
காமனுக்கு மோகவலை கொடுத்திருங்கள்
கசகரணங் கண்டிலோங் கருதியேநீர்
தாமரைநூல் வலையத்தைக் காட்டியேயெந்
தமக்கிரண்டு பிடிகிழங்கு தந்திடீரே. (உ)

* வன்னியர்தம் புடைசூழப் பல்லக்கேறி
மறுகில்வரு பெரியகுல நாகமேந்த்ரன்
அன்னசத்ரக் கொடிவிளங்கும் பாண்டிநாட்டில்
அரைக்கீரை விற்குமகம் படிச்சியாரே
முன்னமே பழக்கமல்லோ வெனக்குநீரு
முழுதும்பா தகத்தியாய் விடவொண்ணாது
சொன்னபடி கோவையிளம் பாலையீந்தாற்
சுகம்பெறுவே னுரையுங்கை தொட்டிடேனே. (ங)

* சந்தமது திகழுமந்த மார்பன்பூவிற்
றனதனென்ப தூரான்றன் றமிழ்சேர்நாட்டில்
வந்தபல வாகடமந் திரங்கள்கற்று
மாவடுவை விழியில்வைத்த மாதராரே
முந்துகரி நாகமலை யெனக்குக்காட்டி
மோகமொடு முத்தமிடு குறியைப்பார்ப்பீர்
பைந்தொடியீ ரெல்லவர்கை பார்ப்பீராகிற்
பண்டாக வெனையொருகை பார்த்திடீரே. (௪)

* வீறுபெறு கவிவலவர் கலியையோட்ட
விருதுபெறு நாகமகா மேந்த்ரனாட்டில்
ஊறுகல மொழிக்கள்ளைக் கொண்டுவிற்க
ஊர்மறுகில் வந்துலவு முழுக்கியாரே

கூறுமும தரியவாய்த் தென்னங்கள்சேர்
குடம்பமது வேயெனக்குக் குடிக்கவாசை
ஏறுவதா றிறங்குவதா ரென்பீராகில்
எனக்கொருசா ணுனுண்டிங் கேற்றுவேனே. (ரு)

ஆகச்செய்யுள் தஉ0எ.

---

## வெண்பாப்புலிக்கவிராயர்

இவர் மதுரையைச்சார்ந்த மேலூர்த் தாலூகா மணப்பச்சேரி கிராமத்தில் வசித்திருந்த சைவப்பண்டார மரபினர். இவரதியற்பெயர் தெரிந்திலது. வெண்பாப்பாடுவதிற் றிறமையுடையரா யிருந்ததுபற்றி வெண்பாப்புலி என்னும்பெயர் இவருக்கு வந்ததுபோலும். இவரை சிவகங்கை, இராமநாதபுரம், புதுக்கோட்டை, நத்தம் முதலிய சம்ஸ்தானாதிபதிகள் ஆதரித்து வந்தனர். இவர் காலம் சென்ற நூறுவருடங்கட்குட்பட்டதே. இவர் சந்ததியார் தற்காலத்திலும் சேவ்வூர், மித்திலைப்பட்டி என்னு மூர்களி லிருக்கின்றார்கள்.

விநாயகர்மீது பாடியது.

*பாசத் தளையறுத்துப் பாவக் கடல்கலக்கி
நேசத் தளைபட்டு நிற்குமே—வாசநறுங்
காரார் வரைபயின்ற கன்னிப் பிடியளித்த
ஓரானை வந்தென் னுளத்து. (க)

இவர் எட்டையபுரத்திற்பாடியது.

*தூது மதுரை துவரை கடையிடைமுன்
ஓதுகின்ற மூன்றெழுத்தை யொக்குமே—சீதிச்
செகராச ராசர்கடஞ் சிங்கே றிளசை
நகரா ரினியார் நகை. (உ)

சிவகங்கை சமீன்தார் வேட்டையாடியதை வியந்துரைத்தது.

*கெசபதி போத குருமக ராச கிரீடிநென்னல்
முசல்கலை மான்கொன்ற வேட்டைப்ர தாப முதுவிசும்பில்
சசிகண்டு கோட்டையிட் டுள்ளிருந் தப்புறந் தானகன்று
நிசிகொண்டு மெல்லச் சமுத்திரம் புக்கன னிச்சயமே. (ங)

*கேசவா வென்று கிலேசிப்பாள் சந்தனத்தைப்
பூசவா வென்று புலம்புவாள்—நேச
அரிகரியென் பாண்மார னம்புபட்ட புண்ணைப்
பரிகரியென் பாள்சகியைப் பார்த்து. (ச)

*தம்பா முதலி சகலகலை ஞானமுள்ள
வெண்பாப் புலியென்றால் வேறுரோ—திண்புவியில்
குத்தகையில் வெற்றிலையைக் கொண்டுவந்தா லென்னபயம்
புத்திகெட்ட மாடேநீ போ. (ரு)

ஆகச்செய்யுள் கூஉகஉ.

---

## வெறிமங்கைபாகக் கவிராயர்.

பாண்டித்தலம் பதினென்கனு ளொன்றான கொடுங்குன்றம் என்னும் பிரான்மலை இவரது சனனத்தலம். இவர் மருங்காபுரிசமீன்தார் ஆதரவுபெற்றிருந்து அவர்மீது கோவை, உலா, குறவஞ்சி, திருவிடைமருதூர் பள்ளுநாடகம் முதலியன வியற்றினர். சென்ற நூறுவருடங்கட் குட்பட்டதே இவர் காலம். இவர் ஒருவனை நோக்கிப் "படுபயலே" என்றுரைத்த அக்கணமே அவன்கீழ்வீழ்ந் திறந்தன னென்ப. இவர் வெறியர்போற் றிரிந்தனராம்.

மருங்காபுரி சமீன்தார்மேற் பாடியன.

*துவளவ ளைக்குமிக் கன்பொர மாதுளஞ் சோர்ந்துவருந்
துவளவ ளைக்கடைக் கண்பார்த் தருள்சிறி துந்தெவிட்டா
துவளவ ளைக்குமுன் னுயர்தம் மில்லந் தொறுந்திகழ்மு
துவளவ ளைக்கரத் தாய்தென் மருங்கைத் அரைச்சிங்கமே. (க)

*பங்கே ருகமங்கை நீங்கா மருங்கைப் பதிபுரக்கும்
கொங்கோர் தடம்புயன் வேள்முத்து வீரன் குமாரனெழில்
சங்கேந்து மோவளப் பூச்சய ராசன் றயவுநமக்
கெங்கே யிருக்கினுஞ் செந்தா மரையு மிரவியுமே. (உ)

இரகுநாதவுடையான்மீது பாடியது.

*நாட்டிலே புகழ்படைத்த வாவுடையான் பெற்றரகு நாதாகேண்மோ, மாட்டிலே யேறுகின்ற சிவனுரைப் போய்க்குதிரை மட்டங்கேட்டேன், வீட்டிலே மூத்தமகன் பெருச்சாளி யேறுகின்றான் வேலன்புன்செய்க், காட்டுமயி லேறுகின்றான் வயிரவனைப் பாரெனக்கண் காட்டினரே. (௩)

விராலிமலை முருகக்கடவுண்மேற் பாடியது.

*காவென் றுஞ் சிந்தா மணியென்று நீயென்றன் கையிலள்ளித்
தாவென் றுரைக்கத் தரித்திரம் பின்சென்று தள்ளியெனைப்

போவென் றுரைக்கவு நாணமங் கேயென்ன போவதிங்கு
வாவென் றிழுக்கவும் வந்தேன் விராலி மலைக்கந்தனே. (௬)

நற்றயிரங்கல்.

*நன்றே நடாத்துமெம் மங்கைபங் காளர்தந் நாட்டினிலே
அன்றே யிராம னணைகட்டும் போதங் கவன்படைகள்
குன்றேன் சுமந்தவெம் மான்சென்ற பாலைக் குறும்பரலில்
ஒன்றே யிடிலக் கடலூற்றும் வற்ற வுறிஞ்சிடுமே. (௭)

ஆகச்செய்யுள். ௬௨௧.

---

## தில்லைவிடங்கன் மாரிமுத்துப்பிள்ளை.

சோழவளநாட்டிலே சிதம்பர க்ஷேத்திரத்திற்கு ஈசான திக்கிலுள்ள தில்லைவிடங்கன் என்னு மூரிலே சைவவேளாளர் குலத்திலே தெய்வப்பெருமாள்பிள்ளை என்பவருக்குப் புத்திரராய்ப்பிறந்த இவர்; நடேசர் திருவருள் பெற்று சிதம்பரேசர் விறலிவிடுதூது, புலியூர்வெண்பா, அம்பலப்பள்ளி, கோவிந்தப்பள்ளி, ஏசற்பள்ளு, வருணைபுரி ஆதிமூலேசர்பேரில் குறவஞ்சி, நொண்டி, நடராசர்கீர்த்தனை, பலவித வண்ணங்கள் முதலியனவியற்றினர். இவர் சாலிவாகன சகாப்தம் ௧௭௦௬-ம் ஆண்டிற் கியைந்த பிலவங்க ௵ சித்திரைமீ ௧௪௨ சோமவாரத்தன்றிரவு தேகவியோகமாயினர்.

வெறிவிலக்கற்றுறைகளாகப்பாடியன.

*குவளைமலர் தோறுங் குருகார்வே ளூரில்
பவளவிதழ்ச் செங்கமலப் பாவாய்—இவள்கண்ணோய்
மைபட்டாற் றீருமோ வந்து வயித்தியனார்
கைபட்டாற் றீருநிசங் காண். (௧)

*தென்றலையிற் றென்றலைத்தண் டீமதியைக் கண்டிரங்கி
மன்றனாறுங் கோதை வருந்தினால்—நின்றபரு
வத்தகரைக் காட்டி மயங்குவதென் றில்லையில்வாழ்
வித்தகரைக் காட்ட விடும். (௨)

*பாயசத்தை யுண்ணாள் பணிபூணா ளொன்றுகத்தும்
வாயசத்தைக் கொல்ல வழியிட்டாய்—நீயிசைத்த
மாற்றந் தலையின்வலி மாற்றமருந் துள்ளடியில்
ஏற்றும் பரிசுக் கிணை. (௩)

*பாயல் வெறுத்துப் பணிவெறுத்துப் பூவெறுத்துத்
தாயைவெறுத் தூணைவெறுத் தாடகைக்கு—நீயுமினித்
துள்ள லடக்கியதாற் றுன்பமடங் காதுதில்லை
வள்ள லடக்குவரிம் மால். (௪)

*கொச்சையே கூறிட்டாற் குற்றமுண்டென் றெண்ணுகிலாய்
இச்சையே கொண்டதுவு மெண்ணுகிலாய்—பச்சைப்பாம்
பாட்டியிவள் சூதை யறிகிலா யம்பலவர்
நாட்டிலுன்னை யென்னசொல்வே னான். (௫)

*அங்கையினெல் லிக்கனிபோ லாருமிவ ளாசைதெரிந்
திங்கிருக்க நீயுமிதை யெண்ணாமல்—மங்கையரே
சத்துருவை யேன்சேர்த்தாய் தாண்டவச பேசருடன்
இத்திருவைச் சேர்ப்ப தினிது. (௬)

*வெறிபடுபூந் தொங்கலணி வேட்கையா ளாசை
மறிபடப்போ காததற்கு மாற்று—நறைபருகி
வண்டார்த்த கொன்றையணி வார்சடைக்கூத் தாடிதான்
கண்டாற் றணியுமுய்வள் காண். (௭)

*ஆறிரண்டில் லாறிரண்டிற் காதியிடர் செய்தக்கால்
கூறிரண்டு செய்யக் குறிக்கலாம்—நீறணிந்த
மெய்யன்செய் வாய்வளைகள் மேவும் புலிசையுறை
ஐயன்செய் வாதென் றறி. (௮)

*பின்னரசி காம வெறிபிடித்தா லுன்னையிந்தச்
சின்ன வெறிபிடிக்கச் செய்ததார்—இன்னவெறி
தீராது தில்லைச் சிவன்வந்து சேர்ந்துமுத்தம்
தாராத நாளளவுந் தான். (௯)

*தம்புருவை வாசியென்று தாயுரைக்கக் கேட்டுமகள்
அம்புருவக் கண்ணருவி யாறாகி—வம்பியுரை
வீணையோ வென்றாள் விழைந்தம் பலத்தாடும்
பூணையே பூணெளிப் போது. (௧௦)

*கொம்மைமுலை மின்னாள் கொடுந்துயர்கொண் டாளதற்குச்
செம்மைகெட நீநினைந்தாற் றீருமோ—தம்மை

அடுத்தவரைக் காத்தருளு மம்பலவர் முத்தி
கொடுத்தருளத் திருங் குணம். (கக)

*பொன்பிதிரு மென்சுணங்கு பூத்திலகு கும்பமுலை
மின்பொருவு நூன்மருங்குன் மெல்லியற்குத்—தென்புலியூர்
அல்லமையுங் கண்டர்செய லன்றி யொருவருடை
வல்லமையிற் றீராது மால். (கஉ)

ஆகச்செய்யுள் ௬உஉக.

## பாலபாரதியார்.

தில்லைவிடங்கன் - மாரிமுத்துப்பிள்ளை காலத்திருந்த இவர்; அவர் கல்வித்திறமையைப்புகழ்ந்துபாடிய இக்கவியையன்றி இவரது மற்றைய சரிதந்தெரியவில்லை.

*தில்லைவிடங்கன் றனில்வாழுந் தெய்வப்பெருமா டிருப்புதல்வன்
தெளிந்தமனத்தன் முத்தமிழோர் தினமும்புகழுங் குறுமுனிவன்
முல்லைநகையார் மதன்மாரி முத்துப்புலமைத் திறம்போல
முயன்றசுகுண மதுபோல முழுதுந்தெளிந்த மனம்போல
எல்லையிகந்த பாரதல மெழில்வான்றனிலு மேகாண
இதயத்தெண்ணி விழிதுயிலா திருந்துமதுவே நினைவாகி
ஒல்லைபரன்மா லயன்பிச்சைக் குழன்றும்பன்றி வடிவெடுத்தும்
ஓங்கிப்பறக்கு மோதிமமா யுயர்ந்துதிரிந்துங் காணாரே. (க)

ஆகச்செய்யுள் ௬உ௩௦.

## தேவிப்பட்டினம்முத்துச்சாமிபிள்ளை.

இராமநாதபுரத்தைச் சார்ந்த தேவிப்பட்டினம் இவரூர். இவர் பாடிய பிரபந்தங்கள் கிடைத்தில. இவர்காலம் இற்றைக்கு நூறு வருடங்கட்குட் பட்டதென்பர்.

* திருக்கஞ் சனப்புட் குபதேசம் வைத்தமெய்த் தேசிகவென்
திருக்கஞ் சனமணி யுள்ளே திகழுஞ் செழுஞ்சுடரே [பொன்
திருக்கஞ் சனத்தொளிர் மெய்யர்க்குத் தூதன்று சென்றசெம்
திருக்கஞ் சநற்பதந் தந்தாண் மதுரைச் சிவக்கொழுந்தே. (க)

* திருக்கந்த மாதனந் தோய்கருஞ் சோதிசெஞ் சோதிமலர்த்
திருக்கந்த மாதனந் தான்சூட்ட வாழிதந் தாள்சிவணத்

திருக்கந்த மாதன மீதெனக் கொண்டுறை தேவைதிகழ்
திருக்கந்த மாதனங் கண்டவர்க் கண்டவர் சீர்முத்தரே.. (உ)

* புயங்கம் புயங்கமணி பொற்பொதுவிற் கோவே
புயங்கநடப் பொன்மாண் புயங்கம்—புயங்கண்
முடியா வடியேன் முடிசூட லென்றோ
முடியா முதலே மொழி. (௩)

* சனகமன் றந்தமின்றேய் சார்ங்கவின்மால் பூத்த
வனகமன்ற லம்புயற்கு மண்ணு—கனகமன்றத்
தாட்டின்பச் சேவடிகண் டார்க்கு மிகவினிதோ
வீட்டின்பம் வீட்டின்ப மே. (௪)

* திருப்பனந்தாண் முக்கட் சிவக்கனியே நின்பால்
விருப்பனந்தாள் போற்றமுத வித்தே—நெருப்பனந்தாள்
செங்கைகளங் காதின்னே தீனவிருட் காதின்னே
சங்கைகளங் காதிமுக்தி தா. (௫)

* தகரவரிக் கூந்தலர்கா மாதிமுக்கீ ராடு
தகரவரி நாலேந்தைச் சாடும்—தகரவரி
மூவொற்றி யூர்பதங்கண் மூன்றுமங்கை யேந்துமொரு
சேவொற்றி யூரான்றாள் சேர். (௬)

* வேதவனத் தாரூது வேதவனத் தார்பணிசு
வேதவனத் தார்பிரம வித்தையென்கோ—வேதவனப்
பாதரசம் போற்சரிக்கும் பாசமனத் தேற்குமலர்ப்
பாதரசந் தந்த பரம். (௭)

* விழி மிழலையுறை வேதியனே முன்னொருமன்
விழி மிழலைமின்றோய் வேணியனே—விழிபின்முன்
மாத்திரையொன் றற்றமலர் மால்புனைதாட் பூபதியென்
மாத்திரைதந் தென்மலநோய் மாற்று. (அ)

* வந்த முருகா மனக்கவலை தீர்த்தருளி
அந்தமிலா வின்ப மருள்செய்வாய்—முந்தவே
வாளைவராற் பாயு மாத்தாண்டி யேசென்றேன்
காளையுரு வழித்தோன் கன். (௯)

* கண்ணன்முன் மேய்த்ததுவுங் கைத்தலத்தி லேந்தியதும்
கண்ணுறங்கு கின்றதுவுங் கர்தலியும்—எண்ணிமிகக்
கோதண்ட ராமாவென் றோதுமே கோதையர்பால்
தூதண்டி வாழுஞ் சுகம். (கo)

ஆகச்செய்யுள் கூஉசo.

## கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர்.

சோணாட்டிலுள்ள கோடீச்சுரம்என்னும் கொட்டையூரிலே சைவப்பண்டாரத்தார் மரபிலே பிறந்த இவர்; கோடீச்சுரக்கோவை முதலியன வியற்றினர். இவர் குமாரர் வடுகநாத தேசிகரும் தமிழ் நன்குணர்ந்தவரென்ப. இவர் காலம் சென்ற நூறுவருடங்கட்குட்பட்டதே.

* புரசைப்பாக் கத்தனையே போர்தியனைப் பொன்வில்
அரசைப்பாக் கத்தனையே யாகும்—உரசமுறு
மாதஞ் சலிக்குமுன மால்கொண் டிடத்தொடுத்தான்
போதஞ் சலிக்குமதன் போந்து. (க)

* முந்தாத் திரியாமற் காத்த முகுந்தனுயர்
சிந்தாத் திரியாசூர்ச் செல்வனெனச்—சுந்தரமார்
கன்றகல விட்ட கருத்தெ னெளியேனை
மன்றகல வாமலிங்கு வந்து. (உ)

ஆகச்செய்யுள். கூஉசஉ.

## திருவாரூர் சொக்கலிங்கக் கவிராயர்.

திருவாரூரினர் என்பதையன்றி இவரைப்பற்றிய மற்றைய சரிதங்கள் விளங்கில.

பனிரண்டுமாதப் பெயர்களு மமையப்பாடியது.

* மாதஞ்சித் திரைகடலை வைதனணி யன்பு
வைகாசி னஞ்சிறியா ளையானி பெருக்கும்
போதம்பன் போராடி ஞானையா வணியாய்ப்
புரட்டாதின் கலம்வெறுத்தா ளைப்பசியில் லென்றே
சாதனைசெய் தேசினந்தாள் கார்த்திகைக்குங் கொடைவேந்
தாசகிமார் கழியார்கோ தையுமாசி லாமல்

காதலுடன் சேர்வணல்ல திட்டமுன்பங் குனிப்பார்
கந்தனெனுங் கலியாண சுந்தரமா முகிலே. (௯)

ஆகச்செய்யுள் ௬௨௯.

## பொன்னம்பலக்கவிராயர்.

இராமநாதபுரம் சமஸ்தானத்திலே வித்துவானாயிருந்த இவர் மிக்க வறுமையாள ரெனமட்டும் புலப்படுகின்றது.

இவர் பரம்பைக்குடியிற் பாடியன.

* சந்தியிலே மூத்தமகன் றன்னைவைத்துப் பயித்தியங்கொள் சாமியேவெள், நந்தியிலே பவனிவருந் தென்பரம்பைச் சொக்கேசா நவிலக்கேண்மே,அந்தியிலே யுந்திதனக் காதரவா மங்காடி யரிசிவாங்க, முந்தியிலேன் சந்திரனோ விந்திரனோ யிருந்ததினுன் முடியொண்ணாதே. (௧)

* கூற்றையுற வுதைத்துமன்றிற் கூத்தாடும் பரமசிவக் கொழுந்தே சூழ்ந்த, நாற்றிசையுங் கீர்த்திபெற்றோன் பேத்தியென்றன் மனையாட்டி நானோவாணி, மாற்றுயர்ந்த பொன்னவளோ விலைக்கடங்காப் பசுந்தங்கம் வழுவாயிந்தக், கூத்திமக்கள் குறைசொல்லப் பார்த்திருப்ப தேதுவெள்ளிக் குன்றுள்ளானே. (௨)

* காட்டுப் பரம்பைநகர்க் கம்வாய்க் கரைமேவும்
வேட்டுடையா னேயுனக்கு விண்ணப்பம்—கேட்டுக்கொள்
செப்புகிறே னோர்வசனந் தின்கொடிக்கா லுங்கருகிச்
செப்புத் தரையாகச் செய். (௩)

மீனாட்சியம்மைபேரிற் பாடியன.

* காசும்பொன்னுங் கனத்திட்ட பேர்க்கிரு காதுங்கேட்கில கண்ணுந்தெரியில, பேசும்பேச்சுமென் பேய்க்கோல முங்கண்டாற் பேயென்றூஉ மிரங்குமிரங்குமே, பூசும்பூச்சுஞ்சந் தான விருட்சத்தின் போதும்மவையை கொழிக்குந்துறையெலாம், வீசுங்கூந்தற் பிடியே சவுந்தர மீனவன்பங்கின் மீனாட்சியம்மையே. (௪)

*அடிக்குங் காற்றுக்குப் படற்கட்டிச் சாத்தல்போ லம்மையுன்னை நினையாம லேதனைப், பிடிக்கும் பேயினைத் தெய்வமென் றூலந்தப்

பேயி னுலிந்தப் பேய்க்கென்ன காரியம், வடிக்குந்தேறற் சுவையே யடியவர் வறுமைநோய்க்கு மருந்தே மருவிலா, வெடிக்கும்போதின் மணமே சவுந்தர மீனவன்பங்கின் மீனாட்சி யம்மையே. (ரு)

* ஏட்டைக்கட்டி யெழுத்தோ டெழுத்தைவைத் திணைத்துக் கட்டி யிசைகட்டி லோபர்மேல், பாட்டைக்கட்டியென் றெண்டையுங் கட்டிய பாவந்தானினி யென்றைக்குத் தீருமோ, தோட்டைக் கட்டுங் குழலே நினதடித் தாளையைக்கட்டிய பேர்க்குப் பரகதி, வீட்டைக்கட்டிய தாயே சவுந்தர மீனவன்பங்கின் மீனாட்சி யம்மையே.

ஆகச்செய்யுள் சுஉசக.

---

## ஊனையூர்ப்பாரதியார்.

இவர் சிவகங்கை சம்ஸ்தானத்திலுள்ள ஊனையூரிலே பிறந்த பிராமணர். கல்வித்திறம்பற்றி பாரதியார் என்னப்பெற்றவர்.

இவர் முத்தப்பசெட்டியா ரியற்றிய செயங்கொண்டார் சதகத்தைக் கேட்டபோது பாடியது.

ஓங்குபத்மா சூரனைக்கண் டோடியொளித் தார்விசையன்
வாங்குதனு வாற்பூசை வாங்கினார்—ஈங்கிருக்கும்
நன்னியமச் சோளீச னார்செயங்கொண் டாரென்றால்
என்னசெயங் கொண்டா ரிவர். (க)

ஆகச்செய்யுள் சுஉருO.

---

## முத்தப்பசெட்டியார்.

சிவகங்கை சம்ஸ்தானத்திலேயுள்ள இளையாத்தக்குடியிலே நாட்டுக் கோட்டை வணிகர் மரபிலே பிறந்த இவர் செயங்கொண்டார்சதகம், எழு நகரத்தார் பெயரால் திருமுகவிலாசம் முதலியன பாடினர்.

இவர் ஊனையூர் பாரதியார் கவிக் குத்தரமாக் கூறியது.

* என்னசெயங் கொண்டா ரிவரென்றா னுமுப்புரத்தைச்
சொன்னமய மாய்ச்சமைத்த சோளீசர்—பின்னுஞ்
சிரித்துச் செயங்கொண்டார் சித்தசனைக் கண்ணால்
எரித்துச் செயங்கொண்டா ரே. (க)

ஆகச்செய்யுள் சுஉருக.

## இராமாநுச கவிராயர்.

இயற்றமிழ் ஆசிரியர் எனப் பெயர்பெற்ற இப்பண்டிதசிகாமணி; பாண்டிநாட்டிலே இராமநாதபுரத்திலே வடுகர் மரபிலே சனனமாகி சோமசுந்தரம்பிள்ளை இடத்திலே கல்விகற்று வல்லவராய் நெடுங்காலம் சென்னையில் வசித்திருந்தனர். பார்த்தசாரதிமாலை, திருவேங்கடவனுபூதி, நன்னூற்காண்டிகையுரை, இலக்கணவிவேகவிபூதிகை, திருக்குறளுக்குப்புத்துரை, வரதராசப்பெருமான்பதிற்றுப்பத்தந்தாதி முதலியன இவரியற்றியவை. இவர் இற்றைக்குஎழும்பது வருடங்களுக்குமுன் வரையிருந்து தேகவியோக மாயினர்.

இவர் பச்சையப்பமுதலியார், சீநிவாசம்பிள்ளை, நாட்டன்துரை யிவர்கள் மேற்பாடிய முக்கூற்றிருக்கைச்செய்யுட்கள்.

* சீர்தெரிந்த நாட்டனற் சீநிவா சப்பெருமான்
பார்புகழ்ந்த பச்சையப்பன் பற்றலர்பால்—ஏர்சிறந்தான்
இங்கிலாண் டானக னெல்லையில்பா வாண...டும்
பங்கிலாண் டைந்தருவாம் பண்பு. (க)

* காத்துப் படைத்தழித்தான் காமர் பொருளறப்பால்
பூத்துத் தரித்தரித்தான் பூம்புகழ்மை—யேத்துபுகழ்
மூவராம் பச்சையப்பன் முன்போன் றியற்பெயரோக
ருவலர்ந்தத் தந்தா னுமாம். (உ)

* மருவினிமை யின்மையுணர் மால்சீநி வாசப்
பொருவில்பேர் பூண்டளித்த பொற்பான்—உரிமைபெற
நாவலர்க்கெ லாமளித்தா னிலமெ லாமணந்தான்
காவலனும் பச்சையப்பன் காண். (ங)

* நீர்முறையி னெவ்வுயிர்க்கு நேர்ந்துதவி செய்கையினால்
பேர்முறையும் பச்சையப்ப னைப்பெற்றான்—ஓர்முறையில்
பஞ்சையப்ப னுமெலிந்தான் பங்கயத்தோன் காவலனாய்
மிஞ்சினனிங் கினீரோ விடம். (ச)

* கரிபரிதே ராளுடையாய் காமருவு கையாய்
பொருவில்புகழ்ப் பச்சையப்ப பூப—தரியலரூர்
சீர்நா னுலகுமறந் தேசநல மின்பிகழ்தோம்
சேரலரைக் கையரைத்தே வை. (ரு)

பிறழ்தலி லாஅற் றனித்தனி சேர்த்துமப் பின்னிரண்டும்
முறையுறச் சேர்ப்பின்வெண் பாவோ டகவன்மும் மூன்றுபத்தே.

* உலகனைத் துந் தீட்டியருக் கொள்ளிய நாண்டு
இலக விரித்திட்டா ரென்ன—நிலவலையத்
தாய்ந்துதிரு வள்ளுவனு ராக்கு மறம்பொருளின்
பேய்ந்தகுறட் பாவிரிப்பி னீங்கு. (௧௩)

* நலனல னேக்குக் குலகனைத் தாடி
எதிர்கவர்ந்து காட்டலி னீங்கு. (௧௪)

தொட்டிக்கலை கிருஷ்ணசாமி முதலியார் முன்னிலையிற் பாடியன.

* வாங்குதிரை யின்பவள மல்குகலை சைக்கருள்வீர்
வாங்குதிரை யின்பவள மாரனென—வோங்குதிரை
போதுவரை யாத்தழைப்பி ருந்தமநா மத்திறமை
போதுவரை யாத்தழைப்பி ருந்து. (௧௫)

* தரலாற்றுந் தொட்டிக் கலைந்தமிழ் வேதா சலன்றிகிரி
வாலாற்றிம் மான்முலைக் கேற்றடி பட்ட வரைக்குலங்கள்
உரலாய்த் திரிகைய தாயம்மி யாய்ச்சின்ன வுண்டைகளாய்ப்
பரலா யுறுதுக ளாய்ச்சிறு காற்றிற் பறக்கின்றவே. (௧௬)

சென்னை கிருஷ்ணமநாயக்கன் குளத்தைப் புகழ்ந்துரைத்தது.

*சாரயீ டிருந்தோர் படிந்துசார்ந் திடிற்சீர் தருயுக ழிலையென்றேவிடு
நாரமா யினரும் படிந்துவீ ட்டையுந் தோற்றமற் றறிந்ததினு
வீரவே ளலைத்த நுதற்கணன் சென்னி மேயதச் சுரநதியென்றால்
மாரகண்ணமநாய்க்கன்றெருகுளத்துமகிமைபாமுரைசெயவற்றே.

* சொல்லிற் பருப்பொருள் காணு ரதனகச் சூழல்புற
எல்லை யொலியுயிர் யாக்கை புளக பிரண்டிடத்தும்
மெல்ல வுயிர்த்தற் கிடன்வே றிலாது விரிந்திலங்க
வல்ல வதிநுட்ப சிற்பொருள் காண்ப ரெனின்மடனே. (௧௭)

*கண்மனங்கை கையாது காரமா வீங்கிகழ்ந்து
கண்மனங்கை கையாத காரணமென்—றன்னாறு
மலைமல்லர் கஞ்சானுயிர் மாமறலிக் கூனு
மலைகொல்லோ வேங்கடவெற் பா. (௧௮)

*சீர்பூத்த வுந்தித் திருமா லடியவர் தேசிகர்தாள்
ஏர்பூத்த நன்மலர் நீரின ருச்சித் திறைஞ்சியென்றும்
ஓர்பூத்த தாரினெஞ் சென்னியெல் லாம்புனைந் தூக்குகிற்பாம்
யார்பூத்த வின்பமும் வான்பூத் தனவுங்கைப் பற்றுதற்கே. (உ0)

ஆகச்செய்யுள் ருஉஎக.

## கச்சப்பாலையர்.

இவரது சனனத்தலம் காஞ்சிபுரம். இவர்பாடியதென ஒருபிரபந்தமும் அகப்படவில்லை. இவர் வியாசர்பாடி விநாயகமுதலியார்பேரிற் பாடியன.

*பாவுரைசீர் நல்வியாசர் பாடி விநாயகன்மேல்
மாவுறையூர்க் கன்னிமிக மாலானாள்—தாவின்மதன்
பூவனந்த மேவிநின்று போவனைந்து நீங்கினைந்து
நோவனந்த மூழுதிந்த நோய். (க)

*பந்தமறை தேர்வியாசர் பாடி விநாயகமால்
இந்தவுறை யூர்க்கன்னிக் கிச்சைகொண்டான்—பைந்தொடியே
பங்ககுங்கு மந்தீட்டிப் பஞ்சதம்ப தங்காட்டித்
தங்ககங்க ணம்பூட்டத் தா. (உ)

கந்தித்தாளே யடுத்தணி சங்கினங் கான்றநித்திலக் கச்சிட்டுக் கைகளால், பந்தித்தாளே மருட்டுமு லேச்சியைப் பாரையாவுன்றன் பாதத்தி லேவந்து, வந்தித்தாளே யினிக்கை விடாமலே மஞ்சமீதி லிருத்தி மகிழ்ச்சியாய்ச், சந்தித்தாளேய மேனினுஞ் சித்திர சத்ரமே வும் விநாயக தூயனே. (ங)

திருக்கோலம் பாரதத்தை மருவவகழ்ந் துங்காணுஞ் சிவனுங் கேற்பப், பெருக்கோலம் பாரதத்தை யகற்றெனமா னேமதவேள் பிறங்கத்தூண்டும், மருக்கோலம் பாரதத்தை மருவுமுண வையுமாற்ற மருவியுன்னைத், தெருக்கோலம் பாரதத்தைப் பொருவவைத்தான் விநாயகனுஞ் சீர்மையோனே. (ச)

அஞ்சனத்தை யணிவிழிமான் மயிலைவிநா யகதுரைமே லாசையாலே, நஞ்சனத்தை யும்விடுத்தா ளுன்சமைத்துத் தருமினிய நலத்ததீம்பால், மிஞ்சனத்தை யும்வெறுத்தா ளவன்குவளைத் தாரினையே வேண்டுகின்றாள், கஞ்சனத்தை யலையிவ்வா றலையவமைத் தானெனில்யான் கருதலென்னே. (ரு)

ஏத்தவளைக் காவெனுங்கண் ணன்மயிலை விநாயகவே ளினிதி னெல்லாம், பூத்தவளைக் காத்தவளைப் பொடித்தவளைப் புனைந்தவளைப் போற்றுமன்பன், நீத்தவளைச் செவிமடவார் பலகோடி சிலகோடி நேர்ந்தமாதர், கோத்தவளைக் கரமடவா ளிதுதெரியா தாசைகொண்ட கொள்கையேதோ. (௬)

திக்திக்கத் திரிபுகலி புனைபுலவோ ருளங்களிக்கத் தியாகமெங்கும்
சந்திக்கத் திரிதலிலா தளிக்கும்விநா யகமுகிலை தகைசேர்காது
குந்திக்கத் திரிபாகல் செவிபுனையாக் குழன்முடியாக் கோதையின்பஞ்
சிந்திக்கத் திரிதலிறாற் பயனிலைசற் றேமனந்தான் சீர்மையோனே.

ஆகச்செய்யுள் ௩௨௭அ.

---

## முத்துராம முதலியார்.

சென்னையில் வசித்திருந்த இவர், ஸ்ரீமகாபாரதகீர்த்தனம் பாடிய வித்துவ சிரேட்டர். இவர் இற்றைக்கு நாற்பது வருடங்கட்கு முன் வரையிருந்து தேகவியோகமாயினர்.

முருகப்பமுதலியார் விருந்தையிகழ்ந்துரைத்தது.

* அட்டைக்கேன் மணிமந்த்ர மறுகினுக்கேன் கூர்வாள்காலைம்பிடிம்பிக், குட்டைக்கேன் பொற்படிகள் குருடனுக்கேன் கண்ணாடி கொல்லுங்கள்ளிப், பட்டைக்கேன் சம்பாரம் படுபாவி முருகனெனும் பழுந்துடைப்பக், கட்டைக்கே னூர்விருந்து புலவீர்காணீங்களிது கழறுவீரே. (௧)

ஆகச்செய்யுள் ௩௨௭௧

---

## சங்கரமூர்த்திக் கவிராயர்.

இவர் திருநெல்வேலி ஜில்லா இராஜபாளையத்திலே கார்காத்த வேளாளர் குலத்திலே பிறந்து வளர்ந்து; திருவாவடுதுறை ஆதீனம் மாதவச் சிவஞான யோகிகள்பாற் கல்வியயின்று,கன்னிவாடிச்சமீந்தார் பேரிற் கோவை பாடி யானைக்கன்றும் வளநாடும் பெற்றவரென்பர். சிவகாசியிற் காசுக்கடை வைத்திருந்து இப்போது சென்னையிலிருக்கும் அ. சு. வேலாயுதம் பிள்ளையவர்கள் இவர் சந்ததியினரே. சேற்றூர் ஜமீந்தாரவர்கள்பேரில் அவர் பாடியபள்ளுப்பிரபந்தம் மிரம்பக் கற்பனலங்காரம் வாய்ந்தது. அதனுள் இவரது முழுச் சரிதமும் நன்கு காணலாம்.

இவரை யார் ? என்று கேட்ட சேற்றூர் மன்னருக்குக்கூறியது.

* செந்தமிழ் கம்பனுரை செய்வதினிற் கும்பனுடன்
வந்தெதிர்த்தோர் தங்களுக்கு மார்பாணி—சந்ததமும்
நங்கருணை மீனாட்சி நாதவே ளீன்றெடுத்த
சங்கரமூர்த் திக்கவிரா சன். (க)

இவர் வரவைக்கேட்டுப் போசனத்தை விட்டெழுந்து
வந்துபசரித்த ஷை மன்னருக்குச் சொல்லியது.

* ஒருகையிலே யன்ன மொருகையிலே சொன்னம்
வருகையிலே சம்மான வார்த்தை—பெருகுபுகழ்ச்
சீமானு மெங்கள் சிவப்பிரகா சத்திருவக்
கோமானுக் குள்ள குணம். (உ)

சேற்றூரை அரசாண்டுவந்த இராமலிங்கத்துரைமீதுரைத்தது,

* சாதகப் புட்குந் தருமப் புயலுக்கும்
பேதகமுண் டோகருணைப் பெற்றவனே—யாதலினால்
எங்கே யிருந்தாலு மெங்கடுரை ராமலிங்கச்
சிங்கேறைக் காத்துதவி செய். (ங)

வாடி ஜமீந்தார்பேரிற்பாடியது.

* புரதவச னுகரகு பேராவி னிமிராதோ புகலென்னுந்தா
யரதவச னுகரகு பேராதி பனைவெல்பணி யதனு லென்னும்
பரதவச னுகரகு பேராமாப் பெரும்புகழா பரனு முற்றும்
சரதவச னுகரகு பேராமுத் துக்குமர சாமிமாலே. (ச)

*தேருந்தும்பைய னைத்திருத் தம்பியா தேனுமேயெளி தென்றூள் விரகமும், நேருந்தும்பைய னைத்திருத் தம்பியா நிறைமயற்கடற் கென்ப நினைக்கிலாய்,பேருந்தும்பைய னைத்திருத் தம்பியாப் பெறும் புகழ்த்தும் பையபாண் டியனருள், கூருந்தும்பைய னைத்திருத் தம் பியாக் கொண்டமுத்துக் குமார சுவாமியே. (ரு)

கன்னிவாடி சமீந்தார் பரிசுகொடுத்தபோது பாடியது.

* கல்லொக்குஞ் சிந்தைமுட் டாட்டுமை காள்கொடை கற்கவென்
வல்லக்க வார்குல நாரசிங் கையன் வரத்துதித்த [றூல்
செல்லக்கு மாரன் மலைபாண்டி யப்பைய சிங்கத்துக்குப்
பல்லக்குக் கொம்பு சுயந்தீரன் றூற்புத்தி பாலிக்குமே. (சா

சிவகிரி ஜமீந்தார்பேரிற்பாடியன.

*விதங்கொடுத்த சுகக்கலவிக் குளங்கொடுத்து மதனனமர் விளைக்கு மாசைக், கிதங்கொடுத்த சுகக்காரிக் கொருகுவளை நின்கரமிங் கினிக் கொடாதோ, பதங்கொடுத்துத் தமிழிசைக்குப் பதிகொடுத்து நிதி கொடுத்துப் பாவல்லோர்க்கு, மதங்கொடுத்த ரகுராமா வரகுணரா மாசரச மதனவேளே. (எ)

* கற்றதுரைச சங்கேந்த்ரன் கண்மணியா வந்ததுரை கனத்த யோகம், பெற்றதுரை வரகுணரா மன்சமய மறிந்துகிளிப் பிள்ளாய் நீபோய், மற்றதுரை யாமலென்மால் வந்ததுரை யதனுலென் மன க்கிலேசம், உற்றதுரை யதற்குமதித் துரைக்குமுரை யென்னுட ன்வந் துரைசெய்வாயே. (அ)

தேவதான உற்சவகாலத்திற் பாடியன.

* பாகரா தனர்போற்று மலைக்கொழுந்தைத் தன்பிராண பத்தா வென்னும், வகரா தனைச்சேறை வீதியிலே யொருபூத மெடுத்துக் கொண்டு, போகவே மனஞ்சகியாள் பெற்றநா யகிரூலப் போர்வே லேந்தி, வாகைசூ டியவீர சிங்கவா கனமேறி வருகின்றளே. (௯)

* முன்னங்கேள் வருக்குமுனஞ் சற்றுங்கூ சாதொருபொய் மொழிந்துபோன, அன்னந்தா னிதுவெனவே யிடப்பாகம் பெற்றவ ணைஞ் சகம்பொறுமல், பொன்னந்தா தவிழ்க்கமலச் சீறடியான் மிதித்தேறும் பொலிவுதோன்ற,வன்னந்தார் வார்சிலையார் மதயானை மேற்பவனி வருகின்றரே. (௧௦)

கன்னிவாடி சமீந்தார் தேகவியோகமானபோது பாடியது.

* ஏமா வுனக்கென்ன ஞாயமந் தோவெம் மிறைவனெனும்
ராமாவ தாரன் மலையாண்டி யப்பைய ராசனுயிர்
போமா றிடர்செய்ய லாமாபொன் மேனி பொரிதழலில்
வேமா விதுவென்ன காரணங் காணிந்த மேதினிக்கே. (௧௧)

*மலைமீது வைத்த விளக்காம் வராக கிரியருகே
சிலையேந்து மெங்கண் மலையாண்டி யப்பைய சிங்கமுயர்
கலையேந்து வாணரைக் கண்டா லெழுந்துகை நீட்டியென்றன்
தலைமே லிருக்கத் தகுமென்ற வாயுந் தழலுண்டதே. (௧௨)

ஆகச்செய்யுள் ௬௨௬௧.

## தாச்சி அருணாசலமுதலியார்.

சென்னையைச்சார்ந்த திருமயிலை இவரது பிறப்பிடம். மயிலைக் கபாலீசர், கற்பகாம்பிகை, சென்னை பிரமராம்பிகை, திருமுல்லைவாயில் மாசிலாமணியீசர் பெயராற் பதிகங்கள் பாடிச் சிறப்புற்ற இவர், இற்றைக்கு ஐம்பது வருடங்கட்குமுன் தேகவியோகமாயினர்.

சோலைமுதலியார்மேற் பாடியது.

* நீர்சொல்லு மேயுமக் கெந்தப்பெண் வேண்டு நிலைவரமாப்
பேர்சொல்லு மேபந்தப் பேரை மறக்கிலப் பெண்ணிருக்கும்
ஊர்சொல்லு மேயவ் வுளவினை முன்ன ருமக்குச்சொன்ன
தார்சொல்லு மேயெந் துரைசோலை யப்பவ களங்கனே. (க)

* அம்மான் மகளினைத் தங்கையென் றெண்ணி யயலளித்துத்
தம்மோ டுடன்பிறந் தாளைநன் னாளிட்டுத் தாலிகட்டி
இம்மா நிலத்தி லியலறியாம லிரண்டுஞ்செய்த
கம்மாளர்க் குற்ற முருகா சராசர காங்கெயனே. (உ)

* குப்பத்துச் செட்டி குமாரன் கடனுண்டி
முப்பத்து முக்காத முங்கடந்து—கப்பலதில்
ஆபத்து வாரா தகற்றி யவனதிக
லாபத்துக் காளாயி னான். (ங)

## பாலனைப்பழித்தல்.

* செய்யாள் வளர்மயிலைக்குளென் னுசைத் திரவியமே
மெய்யார் தனங்குடத் தேவைத்து வாழ்ந்தனர் மேவுதந்தை
கையா டியதனம் பிள்ளை புசிக்கக் கடனெனவே
ஐயா வுனக்களித் தேனத னால்வெறுப் பாயினரே. (ச)

* சிற்பரி நிரந்தரி துரந்தரி யம்பிகை
சிதம்பரி பதம்பணிகுவோர்
சித்தமக லாதபரி சுத்தபரி பூரணி
திருக்குளந் தன்னிலனுகாச்
செங்கண்மா றங்கையெங் குலதெய்வ மாய்வந்த
செல்விசிவ காமவல்லி
திருவடிக் கடிமைதிரு மயிலையரு ணாசலன்
செங்கையா லெழுதுமோலை

மற்புயா சலனெழில் விற்பனவி வேகன்மட
மாதர்மட லூருமாரன்
வளர்கங்கை குலதிலகன் மதியூகி நிறைசெல்வ
வளமைசெறி யாற்றாரினன்
மருமலர்க் குவளையணி மார்பினன் றனைநம்பி
வருபவர்க் கொருசார்பினன்
மங்களா கரவிசய வேங்கடா சலசமுக
வள்ளலெதிர் கொண்டுகாண்க
சற்பனைக் காரர்துற் போதனையி லென்றம்பி
சாலவு மயங்கிநெஞ்சம்
சஞ்சலப் பட்டுளந் தடுமாறி வேறுமொரு
சார்புமில் லாமலேங்கித்
தளர்வெய்தி வந்தவனை யஞ்சலஞ் சேலெனத்
தயவுவைத் தன்றுமுதலாச்
சகலமுந் தந்தினிது செய்கின்ற செய்திகள்
சமஸ்தமுங் கேட்டுகந்தேன்
சொற்பனத் திலுமுனை மறப்பதிலே யவனையொரு
தொழிலில்வைத் தாளாக்கிமுன்
தொந்தரையை நீங்கிமிக வும்புனித னாக்கியுன்
சொல்வழி நடப்பதாக்கிச்
சோலியென் றில்லாது கூழுமுதொ டாகிலுஞ்
சுகமே யிருக்கவைத்துத்
தொல்லுலகின் மாளாத செல்வமுந் தந்தெனது
துதியுநீ பெறல்வேண்டுமே. (௫)

ஆகச் செய்யுள் ௬௨௯.

---

## இலக்கணம் அம்பலவாணத்தம்பிரான்.

இவர் திருவாவடுதுறை யாதீனத்திலிருந்த தம்பிரான்களுள் ஒருவரென்ப. இலக்கணவிளக்க நூலாசிரியர் குமாரர் சதாசிவதேசிகர்பேரில் பாடியது.

* வன்மீக நாதன் வரத்தா லவதரித்த
வன்மீக நாதன் மரபினோன்—வன்மீகர்

தாமோர் தமிழுருவாய்ச் சார்ந்த சதாசிவனை
யாமோ புகழவல்லே மீண்டு. (௬)

ஆகச் செய்யுள் ௫௨௯.

---

## சுந்தரக்கவிராயர்.

இவரது சரித்திரம் தெரியவில்லை.

* நறையொழுகுங் குழலாளை யமுதொழுகு மொழியாளை நயன வேலிற், பிறையொழுகு நுதலாளைப் பிரிந்திருக்க விப்பிறப்பிற் பெரிதும்யான்செய், குறையெதுவோ மதன்கணைக்கு மிகவருந்த வென்னை விதித்த கொடியோனுன, மறையவனுங் கலைமகளைப் பிரிந்திருந்தாற் றெரியுமிந்த வருத்தந்தானே. (௧)

* பாங்காளை வேலை மருட்டுகண் ணாளைப் பகற்பொழுது
தூங்காளைக் காம சுரதஞ்செய் வாளையென் சொல்லுக்குப்பின்
வாங்காளை மோகம் வளரவைப் பாளையென் மார்பைவிட்டு
நீங்காளை யெப்படி யோபிரிந் தாறுமென் னெஞ்சகமே. (௨)

* கூட்டியிருக்குஞ் சப்ரமஞ்சங் குளிர்பஞ்சணைமேல் ரதிவளை
பூட்டியிருக்குங் கரங்களொடு பொருந்தியழுந்திக் கிடவாமல்
மூட்டியுடுத்த சேலையுமாய் முன்கைதலைக்கீ ழாகவைத்து [னே.
வேட்டிவிரித்துப் படுக்கவென்றோ விதித்தான்கமலத் துதித்தா

சங்கையிலா மதன்விடுத்த பகழிதைத்த புண்வருத்தந் தன்னை நோக்கிக், கொங்கையையொத் திடங்கொடுத்துக் குங்குமச்சாந் தப்பற்றுங் குளிரப்பூசிச், செங்கனிவா யிதழ்மருந்து முள்ளுக்கே கொடுத்தெனக்குச் செய்தநன்றி, மங்கையரே யிந்திரவி தெற்குவடக் குதித்திடினு மறந்திடேனே. (௩)

ஒருகோட்டுக் கலைமுனியு மொளிதிகழும் புலியாடை யுடுத்தகோவு, மருமலர்வாழ் திசைமுகனும் வானவர்க ளையகனு மயிடன்றுனுங், கரியநிறத் திருமாலும் வாலியும்ப ராசனுமே காமனம்பால், பெருமையிழந் தனரென்றாற் சிறுமனிதர்க் கெப்படியோ பேசுங்காலே.

வாசவனும் பிறர்நகைக்க வுடலானா னொருவனரா வடிவமானான், தேசுபுகழ்க் கலைமதியு முடல்குறைந்தான் மலர்வேதன் சிரமோ

ன்றற்றான், ஈசனுதல் விழிதிறந்தா னிராவணசுந் தோபசுந்த ிறந் தார்மண்மேல், காசினிப்புன் மானிடரோ மோகசா கரமதனைக் கட க்கவல்லார். (௬)

உணங்கியொருகான் முடமாகி யொருகண்ணின்றிச் செவியிழந்து
வணங்குநெடுவா லறுப்புண்டு மன்னுமுதுகில் வயிறொட்டி
அணங்குநலிய மூப்பெய்தி யகல்வாயோடு கழுத்தேந்திச்
சுணங்கன்முடுவல் பின்சென்றால் யாரைக்காமன் றுயர்செய்யான். ()

கட்டிறலை திருப்பிவைத்தாற் றலைவலியோ மோவந்தக் கதை போலாட்டுக், குட்டியிதென் னடிசகியே கெட்டிவாயித் தியன்பள்ளி கொண்டான்பாம்பின், பெட்டியினுங் கையிடுவ னுண்டையும்பாய்ச் சிடுவனன்றாய்ப் பெலமாய்க்காயங், கட்டிடுவ னிஃதல்லா லாறுதே மதன்விடும்ப கழிப்புண்டானே. (௮)

மரமது மரத்திலேறி மரமதைத் தோளில்வைத்து
மரமது மரத்தைக்கண்டு மரத்திறன் மரத்தைக்குத்தி
மரமது வழியேசென்று வளமனைக் கேகும்போது
மரமது கண்டமாதர் மரமுடன் மரமெடுத்தார். (௯)

ஆகச்செய்யுள் ௩௰௨௯.

---

## இராமசாமிக்கவிராயர்.

இவர் தொண்டைநாட்டினர். இற்றைக்கு நூறுவருடங்கட்கு மேற் பட்ட திவர்காலம்.

மாலைதனைப் புனைந்தாலு மலரணையிற் படுத்தாலு மருவார்பன் னீர், மேலுறத் தெளித்தாலு மெய்வளமே னுங்குளிர விலையென் செய்வேன், கோலமுறு மணவிலே கிளைகளொடு சுகம்படைத்துக் குலாவுமெங்கள், சோலைதனைச் சேராமற் காமவிடாய் தணியாதே தோகைமாரே. (க)

பாலைநிகர் மொழிமாதே யென்னிடத்திற் பூரணமாய்ப் பட்சம் வைத்துக், காலமுகி லனையகரன் மணவியில்வாழ் சோலையெனுங் கன் னன்பாற்போய், மாலைகேண் மறுத்தாலென் மனத்தைக்கேண் மறுக் கின்மதன் வாராவண்ணம், இலைகேண் மறுத்தக்காற் கிள்ளாக்குக் கேள்வேறென் றோதிடாயே. (உ)

அரக்கனலை யிலங்கையைவென் றோன்மருகன் றணிகேச னன்பர்பானெஞ், சிரக்கனலை யாமலுனைக் காப்பானென் றனையடிதே மொழியேமாலை, வரக்கனலை மதிவீசப் படுமோவவ் வேளைதனில் வாதுக்கேம, தூரக்கனலை மதப்பயலென் முனங்குனிக்கத் தகுமோ சொ ரோகைநீயே. (கூ)

முன்னொரு வூரின்பேரா முதலெழுத் தில்லாவிட்டால்
நன்னகர் மன்னர்பேரா நடுவெழுத் தில்லாவிட்டால்
கன்னமா மிருகத்தின்பேர் கடையெழுத் தில்லாவிட்டால்
உன்னிய தேனின்பேரா மூரின்பேர் விளம்புவீரே. (ச)

புதுவையெழுத்துக் குமரதொண்டன் றமிழ்போலக் கவிமதுரம் பொழியப்பாடுஞ், சதுரருண்டோ வெனவிரிஞ்சன் வினவினன் சேடனென் றுனென்றுரைனர், பதமெனினுந் தோன்றுமன் மால்கொண்டு கடல்வீழ்ந்தான் பதுமன்சீறி, மதமுறுநா வைப்பிளந்து காதறுத்து மண்சுமக்க வைத்திட்டானே. (ரு)

மதுகரத்தை யிகழ்ந்தகுயில் வடிவேலர் தமையழைத்து வருவேனென்றே, இதமுரைத்துச் சென்றதென்ன வின்னமுங்கா ணேனதனுக் கிரக்கமேது, சதமெனை வளர்த்தெடுத்த தாய்க்குதவா தார்க்குதவுந் தத்தையேநீ, முதுமறைதேர் குமரர்தமை யழைத்துவா மதப்பயலை முடிக்கத்தானே. (சா)

குருமூர்த்த மாய்வந்து வினையொழித்து முத்திதனைக் கொடுக்கத்யாகர், ஒருமூர்த்தி யல்லாமன் மற்றுமொரு மூர்த்திகளுமுண் டோநெஞ்சே, திரிமூர்த்தியென்பார்க ளவரவர்வாகனமேறிச்சேணிற் சும்மா,திரிமூர்த்தி யல்லாம லொருமூர்த்தி யுங்கதியிற் சேர்த்திடாரே.

இருக்கோல மிடுங்கலைசைத் தெய்வசிகா மணிமுகில்வந் திணங்கானில், உருக்கோல வடிவானுன் மைந்தனுமைத் துனனுநித மோய்விலாமல், மருக்கோலஞ் செய்வதினும் வடவனலைச் சொரிவதினு மயக்கமுற்றுத், திருக்கோலங் கொண்டமக டயங்குகின்றாண் மயங்குகின்ற டினமுந்தானே. (அ)

முந்தனத்தைத் தூதுவிட்டேம் வரவுமில்லை மதராசன் முனிந்தேவில்லால், எந்தனத்துக் கிலக்காக மலர்வாளி யெய்கின்றானினியெ

ன்செய்வாம், கந்தனத்தை யகலாத பூம்பாவை வேலப்பன் கையாற் பூசுஞ், சந்தனத்தைச்சவ்வாதைநினைந்துமனமுருகுதடிதையலாளே.

குருத்துக் கதலிப் பசுந்தேனை யள்ளிக் குரங்குகுட்டிக்
கருத்திக் கனிக்கும் குறுங்குடி வாழ்தரு மன்னைவெற்பில்
பருத்திப் பொதிக்கிட்ட தீப்போலக் காமம் படைத்தவிந்த
ஒருத்திக் கொருவன் பகையோ நடுச்சொல்லு மூரவரே. (கசு)

ஆகச்செய்யுள் கூஙகசு.

---

## தொட்டிக்கலை சுப்பிரமணியத்தம்பிரான்.

சிவஞானயோகிகளின் மாணக்கர் பன்னிருவரில் இவரொருவர். துறைசைக்கோவை, கலைசைக்கோவை, கலைசைச்சிலேடைவெண்பா, சிதம்பரேசர் வண்ணம், திருத்தணிகைத்திருவிருத்தம் முதலியன இவரியற்றியவை.

வல்லைகுளத்திருக்கு மன்னவா வாசமலி
நல்லைகுளத்திருக்கு நாதனே—மெல்ல
வடிவாளைக் கொண்டமனை வாளா கனிச்சி
வடிவாளைக் கொண்டெனிட மாற்று. (க)

* திருவல்லிக் கேணி வடிவந் தனஞ்சொற்கண் சீர்ச்சிலம்ப
திருவல்லிக் கேணிய வல்குன்முன் னேயருள் செய்பவெழுந்
திருவல்லிக் கேணியஞ் சொல்லிற்கண் முத்தங்கள் சிந்துங்கண்டாய்
திருவல்லிக் கேணி மருவிய சங்கத் திருக்கரனே. (உ)

ஆகச்செய்யுள் கூஙகஅ.

---

## குருநமச்சிவாயத்தேவர்.

இவரது ஞானாசாரியரான திருவண்ணாமலைக் குகைநமச்சிவாயதேவர் ஆஞ்ஞைப்படி இவர்; பலதலங்களுந் தரிசித்து சிதம்பரக்ஷேத்திரத்தில் வசித்து நடேசர் திருவருள்பெற்று திருப்பெருந்துறையிலே ஐக்கியமுற்றனர். இவர் காலம் "வந்தீஸ் வரவருடம் வைகாசி தேதிநவம்,இந்துநா ளுழிகை யேழரைமேல்-வந்தகுரு, தாஞ மருணைகிரித் தாணுசிவ லிங்கத்துள், ஆஞ நமச்சிவாயன்" என்றதனுலறிக. இவர்பாடியவை சிதம்பரவெண்பா, அண்ணாமலைவெண்பா, பராபரமாலை முதலியன.

* ஆல்பழுத்துப் பக்ஷியினுக் காகார மானதென
வேல்பழுத்து நின்றநிலை வீணிதெனச்—சாலவனம்
செய்யா வுலுத்தருடன் சேர்ந்து மிருப்பாயோ
ஐயா நமச்சிவா யா. (௧)

* வாக்காலே தியானத்தாலே மனமகிழ் கிருபையாலே
நோக்காலே பரிசத்தாலே நண்ணிய பிறவிதீர்க்கும்
தாக்கான நமச்சிவாயர் சலக்ஷமெய் யாடுகின்ற
நாற்காலிக் காலதானா னான்முத்தி பெறலுமாமே. (௨)

* அண்ணா மலையா ரகத்துக் கினியாளே
உண்ணா முலையே யுமையாளே—நண்ணா
நினைதோறும் போற்றிசெய நின்னடியா ருண்ண
மனைதோறுஞ் சோறுகொண்டு வா. (௩)

* தாயிருக்கப் பிள்ளை தளருமோ தாரணியில்
நீயிருக்க யான்றளர நீதியோ—வேயிருக்கும்
தோளியே விண்ணோர் துதிக்குந் திருமுத்து
வாளியே சோறுகொண்டு வா. (௪)

* மின்னும் படிவந்த மேவுகல தீசருடன்
மன்னுந் திருமுத்து வாளியே—பொன்னின்
கலையாளே தாயேயென் கன்மனத்தே நின்ற
மலையாளே சோறுகொண்டு வா. (௫)

* நன்றிபுனை யும்பெரிய நாயகியெ னுங்கிழத்தி
என்றுஞ் சிவன்பா லிடக்கிழத்தி—நின்ற
நிலைக்கிழத்தி மேனிமுழு நீலக் கிழத்தி
மலைக்கிழத்தி சோறுகொண்டு வா. (௬)

* முத்தநதி சூழு முதுகுன் றுறைவாளே
பத்தர் பணியும் பதத்தாளே—அத்தர்
இடத்தாளே மூவா முலைமேலோ ரார
வடத்தாளே சோறுகொண்டு வா. (௭)

கோபுரங்க ணான்கினையுங் கண்டமட்டிற் குற்றமெலாந்
தீபரந்த பஞ்சதுபோற் சென்றதே—நூபுரங்கள்

ஆர்க்கின்ற செஞ்சரண வம்பலவா நின்பாதம்
பார்க்கின்றார்க் கென்னோ பலன். (அ)

* கண்டமட்டிற் கண்டவினைச் சத்தம்போங் கையிலள்ளிக்
கொண்டமட்டிற் கொண்டவினை கொள்ளைபோம்—வண்டமிழ்ச்சேர்
வாயார வேபுகழும் வண்ணச் சிவகாமித்
தாயார் திருமஞ் சனம். (கூ)

* ஊன்பயிலுங் காய முலறாமை யூந்தனது
வான்பயிலும் பொன்னடியை வாழ்த்துவேன்—தேன்பயிலும்
சொல்லிய னல்லார் துதிக்குஞ் சிவகாம
வல்லியே சோறுகொண்டு வா. (க0)

* சங்கமரா யம்பலவர் தாமே யெழுந்தருளி
இங்கெமக்குப் பிச்சை யிடுவென்ன—அங்கமுறு
திட்ட முடனமக்கு நீதினமு மேசர்வ
கட்டளையுண் டாக்குமென்றார் காண். (கக)

* அல்லலாகிய விருவினை தனையறுத் தடியிணை தருவாரோ
மல்லனீடிய புவியின்மேலின்னமும் வரும்பிறப்பறுப்பாரோ
நல்லமாமுலை பாதுமைநாயகர் நாணிதநவின்றேறத்தும்
தில்லைநாயக ரம்பலத்தாடுவார் திருவுளந்தெரியாதே. (கஉ)

* காத லுடன்சருவ கட்டளையா யுன்னுடைய
பாத மலர்ப்பூசை பண்ணவே—யோது
குருவா யெனையாண்டு கொண்டவனே பிச்சை
தருவாய் சிதம்பரநா தா. (கங)

* அம்பல் வாவொருக்கா லாடினாற் றாழ்வாமோ
உம்பரெலாங் கண்டதெனக் கொப்பாமோ—சம்புவே
வெற்றிப் பதஞ்சலிக்கும் வெம்புலிக்குந் தித்தியென
ஒற்றிப் பதஞ்சலிக்கு மோ. (கச)

* மிதித்தபொற் பதமு மெடுத்தபா தார விந்தமுஞ் சந்தவெம் புலித்தோல், விளங்கிய விடையு முந்தியஞ் சுழியு மேனிவெண் ணீற் றின தொளியும்; கதித்தநற் கனக மேருநான் கனைய கனசதுர்ப் புயங்களுங் காள, கண்டமு முகமுஞ் சென்னியுங் குறியாக் கண்டுகள்

களிக்குநா ளுளதோ; துதிக்துக்கி தங்கள் பலர்புகழ்ந் தேத்தத் தாம்
புரு நாரதர் பாடத், தங்கமா மாயன் மத்தள மிடைமேற் சுமந்து
தொந் தோமென முழங்கத்; திந்திந்தி திருவெண் றம்பிகை கௌரி
திகழ்திருத் தாளமொத் திசைப்பத், தில்லையம் பலத்தே நடம்புரி
வரத தேவனே சிதம்பரே சுரனே. (கரு)

*தூக்கியகால் நோகாதோ நட்ட முயலகன்மேல்
தாக்கியகா லுளுஞ் சலியாதோ—வாக்கார்
தினவரதா தில்லைத் திருத்தாண்ட வாநீ
அனவரதங் கூத்தாடி னால். (கசு)

*கருதித்தா தாதியென் றுடகத்திற் கேற்ற
தகுதித்தா ளுஞ்சிலம்புந் தாளும்—அஃதப்பா
பாரே யினியமையும் பொன்னம் பலத்தாடு
வாரே திருத்தாண்ட வம். (கஎ)

ஆகச்செய்யுள் ௬௨௫.

---

## தில்லைமூவாயிரவருள் ஒருவர்.

குருநமச்சிவாயதேவர் கவியை வியந்துரைத்தது.

*வேடனெச்சின் மிகவிரும்பும் வேளாவன்றன் மேனிபொன்ற
ஆடனித்தங் காளியொடா டம்பலவர் சந்நிதிக்குக்
கோடிலக்கூந் கவிபாடுங் குருநமசி வாயரருட்
பாடன்மெச்சி யம்பலவர் பாதகச்சை யாடியதே. (க)

ஆகச்செய்யுள் ௬௨௬.

---

## அரங்கநாதக்கவிராயர்.

இவர் தஞ்சைநகரினர். இவர் பாடியதாக ஒருபிரபந்தமும் வெளிப்பட்டிலது. ஐம்பது வருடங்கட்கு மேற்பட்ட திவர்காலம்.

விநாயகமுதலியார் பேரில் பாடியன.

*சீர்மலி வியாசபுரித் திண்புயவி நாயகனே
ஏர்மலியிம் மங்கையுன திச்சையிறாற்—பார்தனிலே
வேனிலுக்கு மாமதிக்கும் வேள்தொடுத்த நீள்கணைக்கு
மாங்கிசிக்கு மேமயங்கு மால். (க)

*மானே வியாசநகர் வாழ்துரைவி நாயகன்பாற்
றேனேதா னென்மயலைச் செப்புமோ—காறுருங்
கோகனகத் தைத்தேடிக் கோலவினத் தைக்கூடிப்
போகுமனத் தைப்போகச் சொல். (௨)

*சரசகுண மாதிரதி சங்கீத சாரம்
பரதவிதந் தேரரம்பை பாராய்—விரகமிகு
காமிவாவி நாயகாக ணவனேவி யாசர்பாடி
பூமிபால காமகிழ்ந்து புல். (௩)

*வேத வியாசர் வியன்புரிவி நாயகனே
மாதரசி தன்மயலை மாற்றுவாய்—காதல்கொளும்
மொக்குண்முலை யிக்குமொழி முத்தநகை யத்தமலர்
ஒக்குமுகின் மைத்ததுழ லோர். (௪)

*மேதினிசூழ் கங்கைதல வில்வே யருச்சுனன்செய்
மாதவவி நாயகமா மன்னவனே—காதன்மிகு
கண்டுமொழி வண்டுவிழி கண்டுளேனர் தொண்டுபுரி
செண்டுமுலை யண்டுமிவள் சீர். (௫)

*மன்னு வியாசர்புரி மாலேவி நாயகனே
சொன்னு வலர்க்கிபுரு சுந்தரனே—மின்னட்குச்
சுட்டிநெற்றிக் கிட்டுவட்டத் துட்டெனப்பொட் டிட்டெடுத்துப்
பட்டிடைக்குக் கட்டியிட்டுப் பார். (௬)

* கேரளதே சத்திருந்து கின்னரிவா சித்துவந்தாள்
தாரணிவி நாயக சவுந்தரனே—நேருமிவண்
மஞ்சளக சஞ்சமுக வண்டுவிழி கண்டுமொழி
வஞ்சியை மணம்புணர வா. (௭)

* பூங்கோதை மாமயிலே போசன்வி நாயகன்பால்
தாங்கா மனத்துயரஞ் சாற்றுவரார்—நீங்காத
மோகமிஞ்சி யேதயங்க மோதுதென்ற லோனுமங்கி
யாகவந்து வீசுகின்ற தால். (௮)

* எத்தனைநாள் காமை லேங்கித் தனித்திருப்பாள்
சித்தசவி நாயகவேள் சீமானே—தத்தைமொழி

மாதுமஞ்ச மீதிருந்து வாடவந்த மாமதன்செய்
வாதுகொஞ்ச மாவிரைந்து வா. (௯)

* வாராய் வியாசர்புரி மன்னாவி நாயகனே
தாராய்செவ் வாயிதழைத் தான்சுவைக்கப்—போராடும்
வஞ்சமார னஞ்சியோட மஞ்சமீதி ருந்துகூட
நெஞ்சமார வந்துசேர நீ. (௧0)

* ஆனா வியாசபுரிக் காதிபவி நாயகனே
மானே யழைத்துவர மாட்டாயோ—கானாருஞ்
சோலைகண்டு தேனையுண்டு தாதுகொண்டு போனவண்டு
மாலைகண்ட தோமருண்ட தோ. (௧௧)

* சங்கப் புலவர்தமைத் தாங்கும்வி நாயகனே
மங்குற் பொழுதுமயல் மாற்றிடவே—கொங்கைக்கும்
கச்சிட்டுக் கொப்பிட்டுக் காதிற்கைக் காப்பிட்டுப்
பச்சைப்பொட் டிட்டாளைப் பார். (௧௨)

* தொட்டகணை பட்டுருவச் சுந்தரமா மங்கையைக்கை
விட்டுவிட லாமோவி நாயகனே—நெட்டிலைசூழ்
சங்கரிக்குங் கங்குலுக்குஞ் சஞ்சரிக்கும் பண்குயிற்குங்
கொங்கிருக்குங் கொம்பரிக்குங் கோ. (௧௩)

* பாரோர் புகழ்வியாசர் பாடிதனி லேயுறையுஞ்
சீரார்வி நாயகன்செவ் வாயிதழைத்—தாரானேல்
நெஞ்சுருவ வஞ்சமத னின்றுதொடு கஞ்சமலர்
அஞ்சமன மிஞ்சுதன மே. (௧௪)

* தத்துபரி மாநகுல சற்குணவி நாயகனே
மெத்தமய லானாளோர் மெல்லிநல்லாள்—உத்தமனே
நித்தநித்த முத்துருக்கு நெட்டரிக்க ணைத்துடைத்துச்
சித்தம்வைத்தெ டுத்தணைத்துச் சேர். (௧௫)

* கோடாத கீர்த்தியுள கோமா னெழில்வியாசர்
நாடாள வந்தருள்வி நாயகனாஞ்—சேடார்கோன்
வாரா திருந்ததின மாரா வுனக்குவழி
தாரான மாசமய மா. (௧௬)

* கொத்துமலர்க் கோதையுனைக் கூடியணைந் தின்பமுற
மெத்தமயல் கொண்டாள் விநாயகனே—சித்தினிகாண்
கொஞ்சமிஞ்சும் புன்சிரிப்புங் கொண்டுநின்கண் வந்திருக்குஞ்
செஞ்சொன்மங்கைக் கஞ்சலென்றுஞ் சேர். (க௭)

* சத்துருவா னுலுமதன் சற்றுமன மேயிரங்கான்
வித்தகவி நாயகனும் வில்வேளே—நத்தியென்பால்
வந்துவந்து சிந்தைநைந்து வந்தனந்தி னஞ்சொலென்று
சிந்துதங்க ணம்பணங்கைச் சேர். (க அ)

* தந்தமழுந் தாமலிதழ் தந்தணைவா ளல்லாது
சுந்தரவி நாயகநின் சொற்றவறாள்—அந்தமுள
வாலைப் பலுக்குமுலை மாலைப் பிலுக்குமயில்
வேலைச் சிலுக்கும்விழி மின். (க௯)

* முந்தாநாள் வந்தணைந்த மோகமதை யேநினைந்து
வந்தாள்வி நாயகமா வள்ளலே—பந்தாடும்
மேடைமீதி லோடியாடி வேடனீடு போரினூடு
கூடிநாடி யேகுலாவ வே. (உ0)

* அன்னமே முன்னா ளணைந்து கலவிதந்த
மன்னன்வி நாயகமால் வாரானேல்—என்னசுகம்
நானொருத்தி யேதனித்து நாதனற்று மேதினிக்குள்
ஏனிருக்கி றேனிதைச்சொ லாய். (உக)

* செங்கமலக் கண்கமலஞ் சிந்தமன நைந்துருகத்
தங்கமல ரம்பைமதன் றாவுகிறான்—மங்கைதன்மால்
வீரகாவி நாயகாவி யாசமாபு ராதிபா
தீரவாப ராமுகஞ்செ யாய். (உஉ)

* வந்தணைவாய் கங்கைகுல மன்னுவி நாயகனே
அந்தமதி யைப்பழிக்கு மானனத்தாள்—சொந்தமுள
கோத்திரத்திற் கேற்றிருப்பள் கோக்குலப்பெண் ணுக்குமுன்னைக்
காத்திருப்பள் மாப்பிணைக்கண் ணாள். (உ௩)

* தெள்ளுதமிழ்ப் பாவலரைத் தேர்ந்துநிதம் பொன்னளிக்கும்
வள்ளல் விநாயகமா மன்னவனே—விள்ளரிய

மங்கைவந்த னந்தவந்த னங்களுஞ்செ யுஞ்சிவந்த
செங்கைகொண்ட ணைந்துகந்து சேர். (உச)

* மந்தமாரு தத்திலேறி மங்கைமார்நெ ருக்கமாரன்
வந்துமாத னத்தில்வாளி வைக்குமுனம்—அந்தமுள
சேடிபோடி தேடிவாடி சீலமார்வி நாயகன்கை
கூடியாடி யேகுலாவ வே. (உரு)

* செப்புமுலைக் கச்சவிழச் சித்தசனார் விட்டகணை
வெப்பமறச் சற்றணைவி நாயகனே—யிப்புவியில்
மன்னர்புகழ் கின்றமட மங்கையெழில் பொங்கிரதி
அன்னநடை மின்னலிடை யாள். (உசு)

* நீங்கலாத காமனெய்த நீள்கணைக்கு ளேமயங்கி
வாங்கலாத மையறன்னை மாற்றுவரார்—தீங்கிலாத
நல்லசேதி தன்னையேவி நாயகன்ற னைக்கலந்து
புல்லவன்ன மேபுகன்று வா. (உஎ)

* சித்திரத்த னச்சிறுக்கி சித்தசன்வி டுங்கணைக்கு
நித்தநித்த மெத்தமய னீடுகிறாள்—இத்தினத்திற்
பூமாது வாழ்புயனே புண்ணியவி நாயகனே
மாமாது தன்மயலை மாற்று. (உஅ)

* மாநிலத்தோ ரேத்துபுகழ் மாரா விநாயகனே
மானிலத்து மங்கையரிம் மானனிக்குத்—தானிகரோ
காந்தளஞ்சுந்தாழ்ந்தசெங்கைகாம்புளங்கொண்டேங்கிடுந்தோள்
பாய்ந்தநஞ்சந் தோய்ந்திடுங்கண் பார். (உகூ)

* மாதரசே வாழிபுகன் மங்கலவி யாசபுரிக்
காதிபன்வி நாயகனுக் கன்பாயெப்—போதும்
பதினாறு பேறுபெற்றுப் பல்லாண்டு பல்லாண்
டதிபோக மோடிருப்ப தாய். (௩0)

* பாளைக் கமுகு வயல்சூழ் வியாசர் பதிக்கிறைவன்
வாளைக் கயலைப் பொருவிழி மாதர் மயங்குமதன்
நாளைப் பிணையென்று சொல்லான் றமிழ்வலர் நற்பசியின்
வேளைக் குதவுந் துரையாம் விநாயக விற்பனனே. (௩க)

* மூன்று ளரசர்கண் மேற்கவி வாணர்கண் முத்தமிழைச்
சொன்னு லவர்தரும் வேளேயைப் பார்ப்பரித் தொல்லுலகில்
இந்நாள் வியாசர் பதியான் விநாயக வேந்தனிதி
பன்னாளும் பாவல ரைத்தேடி யீகுவன் பார்மின்களே. (௩௨)

* முகில்போன் முகங்கறுத் தீகின்ற மூடரைப் பாடியெந்த
னகமே சலித்தது நாவும்புண் ணாச்சுகண் ணயிரங்கற்
பகமே நிகர்த்த கொடையா பெனைமுகம் பார்த்திரங்கித்
தகையா யருள்செய் விநாயக பூப தயாநிதியே. (௩௩)

* பாராளு மன்னவர் மன்று நபாபுச பாசெனவே
சீரா னதுபெறுந் தீரா செழித்திடு மர்ச்சுனரு
மாரா சவுந்தர மாரா மயிலை நகர்க்குமரா
வீரா வெவர்க்கு முதலாம் விநாயக விற்பனனே. (௩௪)

*அடங்கா மனத்துள் வாதனையே யன்போ மிகவுள் வாதனையே
யாரோ டுரைப்பே னுளமயலே யவர்க்கோ வாகு முளமயலே
விடங்கா லுவதோ வெண்ணிலவே வினையோ வாகா வெண்ணிலவே
வீசுந் தென்கால் விரைபுலியே வீட்டுந் தென்கால்விரைபுலியே
தடங்கா வேகுங் குயிலினமே தரியாவேகுங் குயிலினமே
தாக்கு மார னலர்க்கணையே தவிப்ப தோவிவ் வலர்க்கணையே
திடங்கா ணூர்த னலமடலே செகத்தோர் செய்ய னலமடலே
செழிக்கும் விநாய கனைநினைந்தேன் செல்வ விநாய கேந்திரனே.

ஆகச்செய்யுள் ௩௩௭௧.

---

## தூரிதகவி திருமலைக்கொழுந்துக்கவிராயர்.

இவர் திருநெல்வேலிக்கடுத்த சிக்கிலியையன்குளம் என்னுமூரிலே கம்மாளர் மரபிலே பிறந்தவர். மிகவிரைவாகக் கவிசொல்லுந் திறமுள்ளவராதலால் தூரிதகவியென்னும் பட்டப்பெயரும் பெற்றனர். இவர் காலம் ஐம்பதுவருடங்கட்கு மேற்பட்டது. இவர் மதுக்குடித்தலிற் பிரியமுள்ளவராய் “தாசீசா வொன்றைத்தராவிடிலோவின்றைக்கே, நீசீசாவென்றே நிகழ்த்துவேன்”என்றொருகடையிற் கூறிவாங்கிப் பானம்பண்ணினரென்ப.

விநாயகமுதலியார்பேரிற் பாடியன

* எள்ளு மலர்புரை நாசிகொண் மாதர்க் கெழின்மதனன்
விள்ளு கவியின் பயன்றோ் விநாயக வேள்புரியுந்

தெள்ளு மணிகள் பதித்தோங்குஞ் சத்திரஞ் சேர்குதிரைக்
கொள்ளுச் செலவினுக் கொவ்வா தரசர் கொளுஞ்செல்வமே. (௧)

* தென்னனிக ரருச்சுனமால் பெறும்விநா யகன்புரிசத் திரத்தைப்பார்க்க, இன்னலறப் பரமசிவன் முக்கணுற்றான் முருகனுங் கண் ணீரா றுற்றான், அன்னமிசை வருபிரம னெண்கணுற்றா னயிரங்க ணரிதானுற்றான், மன்னவனு கியவாண னீராயி ரங்கணுற்றான் வருமங்நாளே. (௨)

* தாட்டிகஞ்சேர் விநாயகமால் சத்திரத்துப் பந்தரின்முன் சார்பிரங்கி, வேட்டொலிக்குப் பயந்துசிங்கங் காளியைச்சேர்ந் ததுவிதியை மேவிற்றன்னம், காட்டிலுறு மான்சிவன்கை கலந்ததுமா யனையேதிண் கலுழன்சேர்ந்தான், நீட்டியவே லவரிடஞ்சேர்ந் தனதகர் மயூரமென நிகழ்த்தலாமே. (௩)

* காவிமலர்த் தாரழகன் மயிலைவிநா யகனென்னைக் கலந்தான் காமா, கூவியிடு மாங்குயிலைச் சுட்டருந்து தென்றலைபக் குவட்டிற் போக்கு, மேவியிடு பூவையுங்கைக் கரும்பையுமீ னையும்விலைக்கு விற்றுப்போடு, தாவிவரு மழன்மதியை வானகத்தோட் டளியை மலர் தோட்டத்தோட்டே. (௪)

* கள்ளிலகுஞ் சோலைமலி மயிலைவிநா யகமகிபன் கங்கைகோத்ரன், வள்ளியர்தம் மிற்சிறந்த கொடைகொடுக்கத் துசங்கட்டி மழைபோற்கையால், அள்ளியிறைத் ததிற்சிந்தும் பொன்னொடுவெள் ளியுமிந்த வகிலந்தன்னில், வெள்ளிமலை பொன்மலையிங் கிவையென்னப் பெயர்மன்னி மிளிர்ந்தவன்றே. (௫)

* பணகமதிற் றுயில்வோனும் பங்கயத்தி லிருப்போனும் பரிவுகூர்ந்து, சனகர்முதன் முனிவர்தமக் குபதேசக் குரவனும்பைந் தருவினனும், மனதுமகிழ் திருமயிலைச் சத்திரத்தை வகுத்தகங்கை மரபோனன, கனகவிநா யகனொருவன் கற்றகவி நாயகனைக் காத்தாள்வானே. (௬)

* பாத்திரமீ தெனவறிந்து தருமயிலை விநாயகமால் பழுதிலாத சாத்திரத்தா லுறமுடித்த சத்திரத்தின் முன்புவிடுஞ் சரவாணங்கள் நேத்திரத்தா லறியவொணுத் தூரம்போ யந்தரத்து நிறைந்துமாநட் சேத்திரங்காண் மீனெனவிப் பூவுலகத் தார்புகலச் செறிந்தவன்றே.

* எத்திசையும் புகழ்மயிலே விநாயகவேள் சத்திரத்தி னிசையத் தீற்றும், முத்தினைநீற் றியசுண்ணக் காந்தியண்ட முகடுமுட்டி முளரிவேதன், சத்தியையூர் தியைப்பரமன் கைலேயையேற் றினைமால் கைச் சங்கைக்கீர,அத்தியையிந் திரன்கரியை யம்புலியைத் தவளநிற மாக்கிற்றன்றே. (அ)

* எல்லார்க்குங் கன்னமிருந் திடவிவனைக் கன்னனென விசையா தோர்ந்து, வில்லாருங் காரியெனின் வடுகனையுஞ் சனியனையும் விளக்குங்கீர்த்திச், சொல்லாரும் பாரியெனி னில்லாளாங் காளத்தீச் சுட்டுக்கொல்லும், பல்லாரும் புகழ்மயிலே விநாயகனைத் தியாகியெனப் பகரலாமே. (கூ)

* வெயில்சிரிசிந் தாமணிமன் னிருநிதியைந் தருதேனு விளங்குங்கீர்த்தி, பயிலுறுசீ தக்காதி பாரிவெண்ணை வாழ்சடையன் பகருங்காரி, அயிலமைதிண் கரத்தொருமா வலிகன்னன் காளத்தி யாதியாரும், மயிலேவிநா யகன்கொடைமுன் மகிழ்நரைக்காண் புதுவதுவை மாதராரே. (கo)

* அரிநிகர் விநாயகவேள் சத்திரத்தி னளவுணர வனுமான்வேண்டும், வரிசையுறு படத்தமைத்தே வரையடிய வரைப்போற்ற வாணன்வேண்டும், திரிவறசித் திரமதனைக் கண்டுமகிழ்ந் திடுதற்கிந் திரன்றான்வேண்டும், உரிமைபெறு மதன்பெருமை சொலவநந்தன் வேண்டுமென வுரைக்கலாமே. (கக)

* மகபதியு மீயானுன் மாரனந்தி யாகமிலான் மறைகளோதுந் தகவன்மிகு பூத்தானக் குமாரனரு னென்றைக்குந் தரமாட்டானே பகலவனுன் றுஞ்செய்யான் பகர்மதியம் புரியாகிப் பனிக்கக்காய் வான்,சகமுழுதும் புகழ்மயிலே விநாயகவே ளென்றைக்குந் தருவான் றானே. (கஉ)

கண்ணனென் றுலவனு மஞ்சக் கரத்தன்வேள்
கருதுகள் ளுணவுண்டனும்
கவினும்வா னிலகுதரு வென்னிலவை யஞ்சதாங்
காமதே னும்பயமுறும்
விண்ணின்மிகு கனமான வேழைமுகி லெனவே
விளம்பப் படும்பொன்பேரு

விழைமூரி யினர்தமக் கென்றும்பொரு வில்லதா
மேவிவரு மலைவேபுறம்
வண்ணமுறு மணிகளெனி னவமாகு நிதியமெனின்
வடிவழிந் தோகையதாம்
வளர்விசைய னேவாளி யான்மதுரை மன்னென்று
மன்னுமீ னக்கொடியவன்
தண்ணாறுஞ் சோழனோ காய்புலிக் கொடியவன்
தகைவஞ்சி வேந்தன்மலைமன்
தங்குமொரு குறைபுமிலன் மயிலையின் விநாயக
தயாபர னெனப்புகல்வனே. (கங)

வெற்றிவிலக்கம்.

* கொந்தலரு மாலைமுத்துக் கோபால சாமிமயல்
வெந்தகரு வாடு விலக்குமா—வந்த
வயித்தியரே பூசாரரே மந்திரரே யிந்தப்
பயித்தியமே னுங்களுக்கப் பா. (கச)

* சாலவிலக் கணம்படித்து மொன்றுக்கு மொன்றரைக்குந் தமிழைப்பாடிக், காலமிகக் கழிக்கநெஞ்சில் வெட்கமிலை யாவிதென்ன கருமஞ்செய்தீர், மாலைகட்டுங் கோணிற்றைக் கொடுத்திரவுங் கோளுரின் மடத்திருந்து, பாலகரைப்படிப் பியுங்கள் கூலிக்காகிலுமறுங்கள் பாவலீலோரே. (கரு)

திருநெல்வேலியையச்சார்ந்த சாலிச்சந்தைப் பெரியமுத்துப்பிள்ளை
தேகவியோகமானபோது கூறியது.

* அரிவளைத்து மருப்பொசித்துச் சோதிச்சங்கை
யத்தம்வைத்துங் கரும்பைவளைத் தொடித்துப்பார்த்துங்
கரியுரித்தோ ஞானைமுகன் கமலக்கண்ணன்
காமனிவர் பெரியமுத்தைக் காணேமேதோ
தெரியவிலை யென்றைய முற்றபோது
செஞ்சாலி தனில்விளைந்து தெளிவாய்வாய்ந்த
பெரியமுத்தைத் தேவர்கள்சா ரும்பர்நாட்டிற்
பெரிதுவந்து கண்டுநலம் பெருகினரே. (கசா)

* வண்டனந் தந்தவழ் கந்துக மாபுரி வாழும்வள்ளல்
வண்டனந் தந்தரம் போலுரு மாரன் மலர்க்கணையால்
வண்டனந் தந்தி மலைமுலை மாது மயங்கிச்செங்கை
வண்டனந் தந்தரம் பூமோந்து மேயின்னும் வந்திலரே. (௧௭)

* தந்தனம் போலு மிடைநடை சாயன் மயிற்சொலமு
தந்தனம் போதக நன்மருப் பொத்தவென் றையலிடைத்
தந்தனம் பேசிக் கலைகவர்ந் தேகினர் தாமருளார்
தந்தனம் போனிறத் தார்கந்து காபுரிச் சங்கரரே. (௧௮)

பாலைப்பழித்தல்.

* நூலார் மருங்கி னுமைபாகர் நெல்லையி னொந்துபெற்ற
பாலா பகலும்வந் தாரிலை யேகையிற் பற்றுகவைக்
கோலால் வரும்புனைத் திட்டமுள் வேலியைக் கோலிமெல்லக்
காலால் வழிதட விக்கங்குல் வாய்வரக் கற்றவரே. (௧௯)

* சீறுக் கருணையர் நெல்லையி லேயன்பர் சிந்தையினை
மாறுக்கி விட்ட மதகளி றேமலர்க் காவியங்கண்
ஆறுக்கி விட்டதும் போதாமல் வேங்கை யடைகிடக்குந்
தூறுக்கி விட்டனை யேதமி யேனைத் துணைவனுக்கே. (௨௦)

* போர்முந்து மோகன் முருகேசன் வெற்பினிற் பூவைக்கென்றன்
தேர்முந்து மோமதன் றேர்முந்து மோவிரு தேர்முந்துமுன்
கார்முந்து மோவந்து முந்துமுன் னேயிரு கண்கள் சொரி
நீர்முந்து மோவறி யேன்வல வாவிது நிந்தனையே. (௨௧)

* கருதுங் கனியு மிரதமும் பாலுங் கருதுமதன்
விருதும் பொழியு மொழியணங் கேசங்க வெண்மணியார்
மருதம் பரவு மதுரா புரிச்சொக்கர் வையையிலே
எருதும் பசுவும் புலியுமொ ரானையி லேறியதே. (௨௨)

* மதுவசன னெங்கண்முத்து வீரப்பேந்த்ரன்
வளம்பாடி வந்தகவி வாணுபெற்ற
தெனுவென்று ளவன்றன்பா லாடையென்றேன்
எனதுமக விணுக்கமுத மிடலாமென்றாள்

பதுமமல ரடிமாதே கலையென்றேன்பின்
பாயாதோ விவ்வனத்திற் பயின்றதென்றாள்
அதுவலவென் றேன்கட்டு வர்க்கமென்றேன்
ஆவென்று ளருந்தவப்பெண் டாவென்றாளே. (உ௩)

*வாளுறும் விழியிரண்டு முத்திறைப்ப மதியனலை வாரித்தூற்றத்
தேளுறும் விடம்போலக் குயில்கூவ வன்றியுமென் சிறியாள்வாசம்
வேளுறுமானக்கான்மெலியாளோமயனேயில்விளங்குங்கொன்றை
நாளுறு மலர்மருந்தை யென்றுவயித் தியநாதர் நல்குவாரே. (உ௪)

*வீசுசடை மேலிருதோள் மீதரையி லணிவதெல்லாம்
வாசுகியென் றுரைத்ததல்லால் வாசுகியென் றுரைத்தேனோ
நேசமிகுந் தவர்போல நிட்டூரஞ் செய்துபரி
யாசவகை செயவேண்டா மருட்சவுந்த ரேசுரரே. (உ௫)

*பருவமா தவள்முடிக்கும் பட்சமிகுந் திடுங்கொழுந்து
மருவவா வென்றதலான் மருவவா வென்றேனோ
உருவமாம் பொருள்களெலா முருப்பெய்த வேமாற்றி
யருவமா மறியீரோ வருட்சவுந்த ரேசுரரே. (உ௬)

*மருக்கமழுந் திருக்கூடன் மதுரேசர் நன்னாட்டில்
செருக்கின்மிக வளர்ந்தருளுஞ் சேயிழையீர் நீர்கேளீர்
அருக்கின்மிக நடைநடந்து மன்பான வார்த்தைசொல்லிக்
குருக்கடலை மேற்சீடன் குடியிருக்கக் கண்டேனே. (உ௭)

ஆகச் செய்யுள் ௩௩௯.

---

## கல்போதுப் பிச்சுவய்யர்.

இவர் பாண்டிநாட்டில் கல்போது என்ற ஜமீனில் வித்துவானயிருந்து 20 வருஷங்கட்கு முன் காலஞ்சென்றவர். விநோதமாகக் கவிபாடுவதில் மிகச் சமர்த்தர். சேற்றூர்ச் சம்ஸ்தானபதியும் தமிழ் வித்துவக் குரிசிலுமாகியிருந்த வடமலைத் திருவனந்த சுந்தர தாசத்தேவரவர்கள் மீது 'வண்டோச்சி மருங்கணைதல்' என்ற ஒரு துறைக் கோவையும் பலசிறந்த பாடல்களுமியற்றினர். கல்போது நகருக்கு வாடி யென்ற பெயருமுண்டு. இவர் போடிநாயக்கனூர் ஜமீந்தாரைப் பார்க்கச் சென்றபோது தக்க மரியாதை செய்யாமையால் ஜமீந்தாரைப்பார்த்து "நான் இங்கு வந்ததில் எனக்குத்தான் மரியாதையில்லை, என் மனைவிக்கு மிகுந்த மரியாதை கிடைத்தது, என்னை

யோ எனின், இதற்கு முன்சிலவேளை கோபம் வந்தபோது போடி என்று சொல்லுவேன். போடி என்ற சொல் தங்கள் நகரைகுறிப்பதால் இனி என் வாயார அவளை வாடி வாடி என்பதன்றி போடி என்று ஒருபோதுஞ் சொல்லேன்" என்றுரைத்து மீண்டனர். வாடி—கல்போது. போடி—போடிநாயக்கனூர்.

விநோதக்கவிகள்.

* அமிர்தசற்கு ணாகரனி லாசந் தன்னி லமருமம ருந்துகையி லல்ல வென்றால்,நிமிடமுறை தவறாது தவறினுன்முன் னிற்பவர்மேற் பாய்ந்திலகி யமுனைபாயும், கமழுமதி னெய்யொளிரும் பாலுண் டாகுங் கனமருவி யகத்தியன்பாற் கற்றுத் தேர்ந்த, தமிழ்வலவா சேறை நக ரிராம சாமி தயாளுவே யிக்கதைநீ சாற்றுவாயே. (க)

* சொல்லுகின்ற கவியாகா தோகோவில் லடுத்திருந்த தோற் றம் பார்த்து, நல்லகுடை யாக்கிவளைத் துத்துயின்று கற்றீண்டி நய ந்து காத்து, வல்லமுறை யாச்செலுத்தி மீகாமா வின்னூட்டி வடிவாய்ச் சென்றெய், தெல்லவரும் புகழுநின்றன் றெண்சேறைச் சுந்தரநா சேந்த்ர கோவே. (உ)

* எழில்கொண்ட வானமதி விசைந்து தோன்றும்
எல்லோரு மறிந்திடலாந் தலைமேற் கொள்ளும்
வழிகொண்ட மாசுணமே லாகக் காணும்
வலிதாம்பல் கணிதம்பா லிருக்கு நல்ல
தொழில்கொண்ட மரக்காலும் படியு முண்டு
சுந்தரநா சுத்துரையே துரித மாக
மொழிகொண்ட கதைப்பயனைச் சொல்ல லாமே
முன்புடையா விருக்குமது மொழிகு வாயே. (௩)

* அன்புடனே யிச்சை கொள்வா ரவனியோர்கள்
அன்றியப்பா னலமுறுமோ ரணிலுண் டாகும்
வன்படிக நிறமாமற் றங்கேண் மோக
வளங்கவள மாயிருக்கு மாடைக் குள்ளாம்
இன்பமுள்ள சுந்தரநா சேந்த்ரா மிக்க
இயல்பான மதுரவுரை யியம்பு நீதா
முன்பினுள்ள வீரெழுத்துஞ் சேர்த்துப் பார்க்கில்
மொழிந்தகதை யின்னதென மொழிய லாமே. (௪)

* அதிசயமாங் கவிதையிது வாமென் பார்கள்
அஞ்சியகர் தனிலமைப்பா ரவனி யோர்கள்
இதினுடைய மிசையுமிக விந்து தோன்றும்
ஈதகன்றன் மற்றுமுட்ட விடங்கு காணும்
மதியுடனே தான்றேடு வாரி யாகும்
வாழ்சேறைச் சுந்தரதா சேந்த்ர மன்னு
நிதிபதியே சொன்னகதை நிசங்கண் பாராய்
நெற்றிக்கு முற்றமுண்டு நீசொல் வாயே. (௫)

* என்னசொல்ல வானாலுந் தானே முந்தும்
இன்னமுங்கேள் கவியுமத னுலு திக்கும்
வின்னமில்லை தண்ணீர்மேல் வாசஞ் செய்யும்
மேலாகத் தந்தத்தை யொப்புக் கொள்ளும்
அன்னமுதற் பட்சிக்குஞ் சேர்க்கை யாகும்
ஆவலப்ப சாமிமகிழ் பழநி யாண்டி
மன்னவா பயனுனக்குச் சொல்லு வேனு
வல்லவா விக்கதையை வழுத்து வாயே. (௬)

* அன்னமருந் தாதிருக்கும் பூவில் வாழும்
அனுதினமு மச்சமுண்டாம் படிக்கு மேலாம்
சொன்னகர மில்லாத வனலை மேலாத்
தோயுமப்பா வெந்நாளுந் தொலையா தப்பா
வன்னமுட னேயழகா னகரை யாரும்
வாஞ்சைகொளும் படிகாட்டு மயிலூர் வேலா
என்னிடத்திற் கதைப்பயனைக் கேட்கிற் சொன்னே
னேதடா கந்தானீ யியம்பு வாயே. (௭)

வேறு.

* தருமா துரைசுந் தரதாசு மன்னு
ஒருமா துரைத்தசொற்கே ளுன்னை—மருவாத
நாளெல்லாஞ் சோமனென்று ளுனதனைக் கூறவந்தேன்
ஆளெல்லாங் கற்றமனத் தால். (௮)

திருமங்கலநகரைப்பார்த்துக் கூறியது.

* நீரோ தொடுமுன் பிடித்திடு காங்கை நிறைந்திருக்கும்
ஊரோ கொடிய வுவர்த்தரை யாமிந்த வூரி லுள்ள

பேரோ அருமை தெரியாத பேரிதைப் பேய்த்தனமா
ஆரோ திருமங் கலமெனக் கூறின ரன்புவைத்தே. (௯)

போடிநாயக்கனூரிற் சொல்லியது.

* வாடி நகரிருக்க மன்னன் றயவிருக்க
ஓடிப் பணிவிடைசெய் வோரிருக்கப்—போடிநகர்க்
கேன்றான் பெரியமலை யேறிவந்தே னையையோ
நான்று னினிவருவே ளு. (௧0)

விநாயகமுதலியார்பேரிற் பாடியன.

*முத்தந் தந்தன தந்த மருங்குலாள் முன்னி றுத்திய கந்தொடு பாயுநா, கத்தந் தந்தன மாதுநின் மீதிலே காதல்கொண்டு வருந்துதல் பார்த்தி லாய், தத்தந் தந்தன தானன வென்னவே சந்தப் பாமுதற் கூறுவர்க் கன்பொடு, வித்தந் தந்தன முந்தரு மால்செய வீம னென்னும் விநாயக வேந்தனே. (௧௧)

*இந்தப் பாவைய வெவ்வழற் போற்கதிரேவு தேயிஃ தன்றியும் வேள்கணை, யுந்தப் பாவையு மீதிற் பொறுப்பர்யா ருள்ள செய்தியு ரைத்தே னணைந்திடாய், சந்தப் பாவையந் தீர்ந்துசொன் னுவலோர் தங்கட் கான மரியாதை செய்திடும், விந்தப் பாவையங் கார்புய மால் செய வீம னென்னும் விநாயக வேந்தனே. (௧௨)

* சுத்த வத்த மரம்பை கரும்புசொற் றுடையெ ழிற்கவுண் மான்விழி மாதையா, தித்த வத்த மனப்போ துமலையுந் தென்ற லும் பொரும் வந்து புணர்ந்திடாய், பத்த வத்தம டாதழ கானவோர் பத்த மைத்தரும் பாப்புகல் வோர்க்கெலாம், மெத்த வத்த மகிழ்ந் தருண் மால்செய வீம னென்னும் விநாயக வேந்தனே. (௧௩)

* பத்தி யாதர முன்பா லலாதிலைப் பைந்தொ டிக்குன தம்புயத் தார்வரிற், சத்தி யாதர சந்தோன்றி டாதுபால் சாமி யுன்னருள் செய் துகண் பார்த்திடாய், அத்தி யாதர ராக்கதி ராவெனு மங்க ணார்நகை யார்க்கெழின் மாரனே, வித்தி யாதர சற்குண மால்செய வீம னென் னும் விநாயக வேந்தனே. (௧௪)

* அத்திரத்தை யொத்தவிழி யம்பிகைபா லன்பதத்தி லன்பா யென்றும், பத்திரத்தைத் தூவிநிதம் பணியும்விநா யகமகிபன் ணட

பாச்செய்த, சத்திரத்தைப் பார்ப்பவர்க்குஞ் சத்திரத்துள் வாய்ந்த சுவர்த் தலமே லோங்குஞ், சித்திரத்தைப் பார்ப்பவர்க்கு மாயிரங்கண் வேண்டுமயன் செய்தி லானே. (கரு)

*புருடநர சிங்கமெனப் புகழுமருச் சுனநிருபன் புதல்வா செம் பொன்,வருபுலவர்க் கருள்புரியு மதனவிரா யகமகிபாவழுத்தக் கேண் மோ, திருமயிலை யூரினினீ கட்டிவைத்த சத்திரத்தின் சிறப்பை யெ ல்லாம், இருநிலத்தைத் தாங்குமரா வதனுவா லெடுத்துரைக்க வேலா தன்றே. (கசு)

ஆகச் செய்யுள் ௩சகச.

---

## முத்துராமலிங்க சேதுபதியவர்கள்.

மதுரை ஜில்லா இராமநாதபுரம் சம்ஸ்தானத்தை அரசாட்சி செய்த இம்மன்னவர் பெருமான் வள்ளிமணமாலை, நீதிபோதம், பாலபோதம், சரசசல்லாபமாலை, சடாக்கரசாரப்பதிகம், முருகரனுபூதி, பிரபாகரமாலை, காயகப்பிரியா முதலிய பன்னூலியற்றிய பெருந்தமிழ்க்குரிசில். கி. பி. கஅஎ௩ ௵ பிப்பிரவரிமீ 28உ மண்ணுலக நீத்து விண்ணுலகெய்தினர். பெருங்கொடைவள்ளலெனப்பேர்பெற்று விளங்கி 4 வருஷங்கட்கு முன் சிவபதமுற்ற ஸ்ரீபாஸ்கர சேதுபதியவர்களும், தினகர சேதுபதியவர்களும் இவரது அருந்தவப் புதல்வர்களே. தற்போது சேதுசம்ஸ்தானம் அரசுரிமை யுடைய முத்துராமலிங்க சேதுபதியவர்கள் இவர்கள் பேரர்.

### சிலேடைகள்.

சிவனுக்கும் யானைக்கும்.

* அங்குசத்தாற் சொற்கேட்கு மாறுக்கம் பங்காட்டும்
அங்கட் கனல்கொள்ளு மாம்புல்லைச்—செங்கையிற்கொண்
டாடுந் துதிக்கையுமுன் டார்ந்தவிரு கொம்புண்டாம்
நாடுபுக ழத்திபித்த னார். (க)

தெய்வத்துக்குங் கள்ளுக்கும்.

* கடைக்குமுடி மேல்வரலாற் கண்டபவ வாயில்
அடைக்கக்கும் பிட்டுக்கொண் டாட்டால்—நடத்தைப்
புரிதிருவு ளைந்திலகு பொற்பார் முகவா
புரியின்மது தெய்வமெனப் போற்று. (உ)

வேலுக்கும் மயிலுக்கும்.

* சேவலைவ னூருந் தினைமீ ராற்பசுமை
தாவுமதின் றோகைவிரித் தாடுமே—மேவுபொழில்
உச்சியிடை யிற்பூர்சூட் டுங்கதிர யிற்றுங்கும்
பச்சை மயிலயில் பார். (கூ)

மயிலுக்கும் முகிலுக்கும்.

* வளர்த்தாற் பசுந்தோகை வாழ்வரையி னூடும்
குளத்தா றுடையவர் கொள்ளும்—உளத்தாற்பின்
அம்பை யுடையவரி யண்டமின் னுட்மிதனால்
கொம்பையுறு மஞ்ஞைமுகில் கூறு. (ச)

சந்திரனுக்கும் கடலுக்கும்.

* வெள்ளையுறு மங்கலையி னேங்கும்வான் மீன்சூழுஞ்
சள்ளையுற நஞ்சுந் தழைக்குமால்—உள்ளபடி
திட்டுறுமால் வெவ்வரவுஞ் சேருமமு தண்டாமால்
எட்டுகடல் வட்டமதி யே. (ரு)

வேசிக்கும் கடலுக்கும்.

* வனச்சேலை யாய்ச்சுற்று மாநத்தைக் காட்டும்
பொனைப்பெறுநற் பூவணியும் போர்ம—தனுக்கு
முரசைக்காட் டுந்தொழிலின் முற்றுமேற் கொள்ளும்
பரவைநிக ராம்விலைமின் பார். (சு)

முலைக்கும் புலிக்கும்.

* வரையி னெருங்கியிள மாந்தரும் பாய
விரைவின் முனைகறுத்து மீறும்—மரைமின்
வலிமிகுத்த தேவை வளர்கடப்ப வெம்போர்ப்
புலிமதித்த கொங்கை பொரும். (எ)

முலைக்கும் எருதுக்கும்.

* முட்டுகையாற் பூணுறலான் மொய்ம்பிற்கச் சிற்கயிற்றிற்
கட்டுகையாற் கோரையுண்டு காவலால்—இட்டங்கொண்
டோட்டம் பொருந்துவதா லும்பர்புகழ் மாமுகவை
நாட்டிலெருத் தந்தனமா நாடு. (அ)

முலைக்கும் பாம்புக்கும்.

* நகவரை வாய்நாடு நஞ்சுவிடும் வண்ணம்
மிகுசட்டை நின்று வெளியாந்—தகைசேர்
பயந்தருமின் புற்றணையும் பான்மைகொளு மான்மான்
குயங்கொடிய நாகமெனக் கூறு. (௯)

முலைக்கும் புகையிலைக்கும்.

* வாசப் பொடிகொளலால் வள்ளுகிரிற் கிள்ளுதலாற்
பாசற்றுக் காம்பு படைத்தலால்—வீசிமேற்
கச்சிருக்கை யாற்சேர்த்துக் கட்டிக் கிடக்குகையால்
நச்சும் புகையிலைநே ரனம். (௧0)

முலைக்கும் பூச்செண்டிக்கும்.

* காம்புறலால் வாசங் கமழுகையாற் கண்ணுறலால்
தேம்பியநூற் சுற்றிக்கை சேரலால்—காம்பிணைய
நாட்டுமிணைத் தோட்குறத்தி நாதன்வளர் மாமுகவை
காட்டுண்மலர்ச் செண்டாந்த னம். (௧௧)

யானைக்கும் வண்டிக்கும்.

* மேனி கரியதனுன் மேவலரைச் சாடுதலால்
தானே சிறையிற் றழுவலால்—தானப்
புழைபுறுகை யாற்றேரல் பொருவுமளி பூமின்
விழைபுமுக வைக்குள் வியந்து. (௧௨)

யானைக்குஞ் செண்டிக்கும்.

* தானங் கமழுந் தடக்கையுறுங் கொம்புறும்வான்
மானுமங்குக் கண்ணி மருவுமே—கானந்
தருமளியி னீட்டமுறுந் தந்திற்கட் டுண்டு
வருகளிறு செண்டா மதி. (௧௩)

எருதுக்கும் புலிக்கும்.

* கொம்புறலான் முட்டுபெறலால் குத்தலாற் செங்குழம்பால்
அம்பினடக் குங்கா யடிக்கையால்—செம்பூ
அளிபிசைத டம்பணைசூ ழாறுமுக னாட்டில்
புளியையெரு தாகப் புகல். (௧௪)

கோழிக்கும் உடைமரத்துக்கும்.

* கம்புண்டும் பூவுண்டுங் காட்டகத்தின் மோட்டிணிற்கும்
தெம்புடன்குஞ் சிப்பற்றுந் தேடியகம்—பம்புமதின்
முட்டைக்குங் காய்க்கு முகவை வளநாட்டில்
வட்டவுடை குக்குடமா மால். (கரு)

வண்டுக்குஞ் செண்டுக்கும்.

* கானமிசை வாழுமலர்க் கண்ணுறமு கந்துகொளும்
வானவெழிற் காம்பை மருவுமே—மோனசிவ
ஞானர்புகழ் தேவைசிவ ஞானபுரி வீதிவரு
தேனிலுறு வண்டுசெண்டு தேர். (கசு)

முகிலுக்குங் கோட்டைக்கும்.

* அரவ முறும்படரு மம்புலிசேர்ந் தூரும்
கருமை யுறும்பயத்தைக் காட்டும்—திருமுகவை
நாட்டையணி காக்குங்கா ணட்டுநலத் தாற்பொதியக்
கோட்டைமுகி லீட்டமெனக் கூட்டு. (கஎ)

ஏணிக்குந் தோணிக்கும்.

* நீண்டவுரு வாகியதா னீர்மே னடக்குகையால்
ஈண்ட விரும்படிதா னேந்தலாற்—பூண்டமலர்
வாணிகாணி யாகவாழு மானதேவை மாநகர்க்குள்
ஏணிதோணி யாகவேயி சை. (கஅ)

யானைக்குங் கடலுக்கும்.

* வால்வளையப் பன்னகங்கள் வாய்ப்ப மருப்புடைத்தாய்க்
கால்வளைத் துப்பா கனைப்பாயும்—வேல்படைத்த
சங்கரிம ணந்தசிவ சம்புவிழி வந்தகுக
வெங்கரிமை பொங்கரியாமே. (கக)

சந்திரனுக்குங் கடலுக்கும்.

* அங்கலையி னேங்குநஞ் சார்ந்தெழும்வான் மீன்சூழும்
பங்கமுறு திட்டும் படருமால்—அங்கதன்பால்
நீண்டவர வஞ்சேரு நேரமுத முண்டாம்வேல்
ஆண்டகையே வேலைமதி யாம். (உ0)

மாதருக்குங் கடலுக்கும்.

* கைக்குமிசை வண்டணியுங் காணவணச் சேலையுறு
மைக்குவளை யங்கண் வயங்குமே—செய்க்குட்
சினைவரா லோங்குஞ் சிவபுரிவாழ் வேலா
கனைகடலு மாதருநேர் காண். (உக)

மலைக்குங் கடலுக்கும்.

* அங்கலையு மம்புலியு மம்புடைய மைம்முகிலும்
பம்பரவ மும்படரும் பான்மையால்—வெம்புகயக்
கும்பமினை கொண்டணி குலுங்குமுலை யங்குறமின்
அன்பன்மலை யம்பரவை யாம். (உஉ)

வேசிக்குங் கடலுக்கும்.

* பூவணைந்து மானத்தை வீசிப் பொனைப்பெற்றுத்
தாவு பலவரையுந் தான்றழுவிச்—சேவலுறு
வேண்மைத் துனர்க்குமுர சைக்காட்டும் வித்தையினால்
வாண்மைக்கண் ணாரலையா வார். (உங)

கணவற்பிரிமாதுக்குங் கடலுக்கும்.

* தங்கணீர் முத்துகுத்துத் தாமரை மயன்மதியாற்
பொங்கித் தணந்து புலம்பலால்—அங்கொருத்தி
தூதுசொலா ளாவென் றுயர்தவிரா ளென்னுமோர்
கோதுகுழ லாழ்கடலா கும். (உச)

முருகன் கொடிக்குங் கடலுக்கும்.

* கான்முற்றந் தோயும்வரை காட்டி நிறைகருவின்
பான்முற்றும் பாசம் படைத்தலால்—வான்முற்று
மண்ணுமளந் தான்மருகன் வாள்வடிவே லன்றுசமும்
எண்ணரிய சிந்து மினை. (உரு)

சிவனுக்குங் கடலுக்கும்.

* கமலை மினைப்பெற்றுக் காறாக்கி முன்வந்
தமலை தனக்கிடமு மாகி—விமலமுத்தர்
தத்தஞ்சித் தத்திருந்த சத்திமுத்தை யற்பயந்த
வத்தன்றத் தத்தியென லாம். (உசா)

* நிதிபெருமை தாங்கி நிறைந்துமீ யான்போல்
கதியலையாற் சீறுங் கடலே—விதிவினைத்தீப்
பஞ்சா யுதவிலியமைப் பாலிக்கும் வேண்மாமன்
பஞ்சா யுதத்தான் பதி. (உஎ)

* சுப்பி ரமணியனென் றோதுபல சொல்லாற்பாற்
றப்பி லிருமா தரைத்தழுவ—லொப்பவுற்றார்
வேலையா வென்று விளம்புதலாற் செற்றமுற்றோ
வேலையாங் கெய்தாய் விரைந்து. (உஅ)

* எங்கோன் கபலேமன்ன னென்னுமண்ணல் பாப்போலப்
பொங்கிநிமிர்ந் தோங்கும் புணரியே—நங்கோன்சொல்
வைப்பாகும் பாகும் வணங்கு நினைநினைக்கில்
கைப்பாகு மென்பர் கவி. (உ௯)

விடுகதைகள்.

* காதிருரு வாளிகொளுங் காட்டும் பலவரையை
மாதரம்ப னங்கொளவோர் வாய்வயிறுண்—டாதரவாய்
அங்கியிட்டு மேனடக்கு மண்டா தெளியோரை
இங்கியற்று வீர்புலவீ ரே. (௩0)

* மட்டையணி யும்பூ வணையுமுடிக் குஞ்சிவிக்
கட்டியா மொட்டேறக் காட்டுமே—வெட்டுவாள்
அம்பனைய கண்ணு ரலவிச் சிலேடையோடு
பம்புகதை யின்பயனென் பார். (௩க)

* கோல்வாங்கு மான்றுரத்துங் கோடணியுங் கொம்மெனச்சென்
றுல்வாய்த் துயிலு மணியாகப்—பால்வளைந்த
மேவலரை வென்றதிரு மின்கணவ னன்றுகொடிச்
சேவலவ விப்பயனைச் செப்பு. (௩உ)

* இருகா லொருவா லிடைகாலொற் றுண்ணு
மிருகா லொருபக்க மெண்ணில்—இருதோல்
இணையும்விழி பூநோக்கு மேண்க நகத்தின்
அணையுமிஃ தியாதென் றறை. (௩௩)

* அறுவகர மெண்ணிலிரண் டாங்கா லெழுத்தில்
குறுகாதப் பேரிற் குலவும்—சிறுகண்
உலவு முலகுலவு மொவ்வக் கரநீள்
உலவுமுனி னுண்போழ் துரை. (கூச)

முருகக்கடவுளைத் துதித்துரைத்தன.

* நின்னையல தியாருடையர் நெஞ்சமலர் வாயிருகண்
பின்னையொரு தெய்வத்தைப் பேணுதே—இன்னவர்க்கு
நந்தாவிந் தாவிலரு நாமமே லாயுதநங்
கந்தாவந் தாளுநன் கடன். (கூரு)

* மங்கையர்கொங் கைக்குடத்துள் வாடிச் சுருண்டுதுயில்
வெங்கட் புழையெயிற்றின் மேவுநெஞ்சே—கங்கை
யருகுமதி தும்பை யணிசெஞ் சடிலர்
குருகுகனை யென்றுங் குறி. (கூசா)

* தந்தமலை சிந்தை தளரீ ரெனவருளும்
வந்தமலை தந்தருளு மைந்தனே—கந்தமலை
யுந்தமலை பந்துமுலை யன்புடைய னும்பர்தொழத்
தந்தமலை சிந்தமலைந் தான். (கூஎ)

* செட்டியெனும் பேர்படைத்த சேவலவ நிற்குரிய
சட்டிகண்டே னெற்குமலர்த் தாடந்தாள்—கட்டிமணிச்
சுட்டிகட்டு மெட்டுளாள்சு ரப்பெணுங்கு றப்பெணுங்கை
தொட்டுமேவு மிட்டனேயி தோ. (கூஅ)

* போற்றும்வடி வேலரசே புந்திமகிழ் தந்தருளும்
நாத்துதிக்குட் சேர்த்து நயந்தீரேல்—தேற்றிடப
வானனத்தான் வானகத்தா னம்புதித ரும்பெருமைத்
தானனத் தானனத் தான். (கூகூ)

* எந்தைமண மேவு மிருகழலென் றேதுதிக்கின்
முந்தைவினை வந்துனையு மூடாதே—சிந்தை
யுயிருருவாய்த் தானே யொருவனெனத் தோன்றும்
மயிலயிலன் றன்னை மதித்து. (௱)

* கூடிச் சிவந்தவிதழ்க் கொவ்வையுண்டு மேவாதிவ்
வூடல் புரிவ துவப்பாமே—கூடல்
சுழிபொருந்தா தாயினுமித் தோகைமயில் செய்ய
விழிபொருந்தா தேயவ் விரா. (சக)

* மட்டிட்ட மிட்டணிமை தொட்டிட்ட தொட்டுநனை
வட்டெட்ட வட்டத்துட் பட்டுழலா—தட்டெட்டி
ருக்கைத்தி ருத்திமல ருக்குப்பொ ருத்துபதக்
கைதக்குக்கு தெளிற்கிக்கா று. (சஉ)

* தங்கைவிட மஞ்சமொழி காணுரிலேக் குந்தருமே
செங்கைமனம் வாய்பொருந்தச் சேவிக்கின்—மங்கையுறு
கங்களநா தாளருளைக் காட்டுமிரு ளோட்டுநிதம்
மங்களநா தாவெனவு வந்து. (சங)

* ஆபத்தை மாசை யருத்து மடமாதர்
தீபத்தை யுற்றபுழுச் சிந்தையே—நீபத்தைப்
பூண்டபணைத் தோளானைப் போர்மயிலை யுற்றானை
வேண்டவினை மாண்டு விடும். (சச)

* மாலைபிட்ட நாதர்வர மாட்டோ மெனிலெனுடல்
ஆலைபிட்ட கன்னலிணை யாகாதோ—வேலைபிட்ட
மாகவணி வாகையனை மாகர்புகழ் வாசகனை
ஆகமகிழ் வாக வழை. (சரு)

* வந்தவரென் பானெருங்கி வார்த்தையொன்றுஞ் சொல்லாமல்
சிந்தை கடுகடுப்பாச் சென்றாரே—யந்தரங்கம்
யாதோ வெவணினைவோ வன்பவள வாயார்செய்
சூதோ வறிந்தெனிடஞ் சொல். (சசா)

* காமமெனுங் கள்ளுண்டு காயாது வேலர்திரு
நாமமெனுங் கள்ளுண்ணை நாடுவாய்—காம
மலேத்துன்பங் காட்டுமற் றந்நாம நெஞ்சின்
மிலேத்தின்பங் காட்டு மிக. (சஎ)

* தந்தமலை யாண்டதுழாய்த் தாமன் றிருமருகா
கந்தமலை யாதெனைநீ காத்தருள்வாய்—தந்தம்

அலையாழி வென்றவே லாயுதா வள்ளி
கலையாழி யன்மொழிபங் கா. (சஅ)

* இருதனக் கன்னி யிணைமனத் துன்னி
வருதனக் கன்னி தயமார்—குருவே
யறிந்திலே கொல்லமர ரையவிடை கொண்டான்
செறிந்தணை யி லின்றிவளைச் சேர். (சகூ)

* காற்றேய் மழைதனக்கோர் கைக்குடையுண் டங்கசன்போர்க்
காற்றே னிதுதருண மாரணங்கே—சாற்றிய
வாயிலைத் தாழிட்டு வாமுன்செ லீதுரைத்துப்
பாயிலைவேன் மன்புணரப் பண். (ருo)

* இவடனத்தை நின்புயத்தி னேய்க்க மனமோங்
குவடனத்தை பொல்லாக் குடிலக்—கவடி
அதனுலின் றிங்குவர லாகாதெய் யும்போர்
மதனுல் வருந்துவணீ வா. (ருக)

* செற்றலரைச் செற்றுவிழச் செற்றமொடு சென்றுசிரம்
எற்றுமிய லுற்றவயி லேந்தல்புயத்—துற்றமலர்த்
தார்வரிலென் சிந்தை தளரேன் சகிமதனன்
போர்வரிலென் செய்வேனிப் போது. (ருஉ)

* மாமலைவாழ் கந்தா மதனன் வெகுண்டெனுடன்
வாமலைவா னென்ன மயங்கியே—தேமலைச்சேர்
சொன்னவட்ட மாமுலையா டோக முன்னமுமோர்
அன்னம்விட்டா ளன்னம்விட்டா ளாள். (ருங)

* வாலை சினமிசைக்க மால்சங் கிசைக்கமுகத்
தோலனோர் கொம்பிசைக்கத் தூயவெள்ளி—வேலவனோர்
குக்குடமி சைக்கவன்பர் கொண்டாட வண்டாட
அக்குடையான் மிக்காடி னன். (ருச)

* திரையாய் முதிர்நரையாய்த் தேய்ந்துமிகக் கூனி
மரைகாய் கரியாகு வானே—விரையேயும்
நீபமணி மாலைவரு நேரமிதெண் புன்றழல்போற்
றூபமிய லேண்மதிநீ தான். (ருரு)

* மாரனம்பு பாயவிள மாமதி யங்காயச்
சீரலேகா ரேயமதி தேய—வாரணிந்த
கொங்கை பசலேயுறக் கொவ்வை யிதழதர
மங்கைதுய ரஞ்சகியாள் வா. (ருசு)

* பாதிமதி யோனுகிப் பாதியிலே கொம்பாகிக்
கோதகலும் பித்தாகிக் கூர்வாலாய்ச்—சாதி
இனைதென் றுணரவொணு வீசனடி யார்தம்
மனமே யுருவான வன். (ருஎ)

* அலேவாய்க்கண் டுஞ்சித்தன் ஞகங் கரியாய்
இலேயிருப்பெ னப்பலர்சொ லேற—மலேக்கு
மரிமான் றுணேயாய் மறிமேய்த்துக் கொக்காத்
திரிவான் பரிபருந் தே. (ருஅ)

* அகமொருத்தி கொள்ள வனத்தையுங்கைக் கொண்டு
மகன்மறைவா யுற்றிருக்க வாம—மிகுமயலான்
மண்பாவை யைப்புணர்ந்து வாய்வழியண் டங்காட்டும்
பண்பானேர் பித்தன் பரி. (ருகு)

* மதியேயுன் ஞம மதியென்முன் சற்றும்
மதியில்லா னிங்கு வருக்கின்—மதியாய்
அகிலேசன் சென்னி யடைந்தும் பயங்கொள்
முகிலே சதமெனலா மோ. (சு0)

* அலேபடிந்து மீன்விரும்பி யண்ணுந்து நின்று
பலருமிகக் காணப் படர்ந்தங்—கலேசோர்ந்து
மூடு மலேநீக்கு மூவைந்து நாளலேவால்
வாடியிறந் துண்டா மதி. (சுக)

* பாகமரு மின்சொற் பராபரியென் னம்மையொரு
பாகமரு வும்பரமன் பாலகனே—யாகமருக்
கோகனகத் தாள்வளருங் கொண்டன்மரு காதேவர்
கோகனகத் தாளருள்செய் கூர்ந்து. (சுஉ)

* செம்முளேக்குக் காரென்னத் தேவருக்கு வேரென்ன
நம்முளனுக் காவியென நண்ணுகுகன்—எம்முதல்செஞ்

சிற்றடியைச் சிந்திக்கத் தித்திக்கு மேலவனைப்
பெற்றவள்பே றென்னும் பெரிது. (௬௩)

* உண்ணிலையா யென்னெஞ் சுறைவோ யிருள்வினைக்கு
வெண்ணலரி யொத்திலகும் வேற்குமரா—பண்ணவர்க்கு
மாமணியே மாமயிலூர் வானவவந் தாளெனுளக்
கோமணியே யுள்ளன்பு கொண்டு. (௬௪)

* கூறுமுகந் தோறுங் குறுமுனியிற் கோலமலை
ராறுமுக மென்று வறைமனமே—வேறுமுகம்
பாராது மற்றோர்ப் பழிச்சாறு பைங்கடம்பு
தாராது தீராது தான். (௬௫)

* பூங்குழன்மைக் கண்ணார் புரிகபடப் புற்றினிடைத்
தூங்குரக மென்றோயுந் துன்னெஞ்சே—பாங்கர்ப்
பிடிமான் றழுவுபுயப் பெம்மானங் குன்றுக்
குடிமான் மருகனையே கூறு. (௬௬)

*இசையுற்றேன் மாயை யிருளறைக்குட் டுஞ்ச
வசையற்றே னின்னை மறவேன்—றிசையுற்ற
தோகைமயி லேறுகுக சூரகுல காலவினை
ஏகமுன நீவருவை யே. (௬௭)

*வீதியிடைச் சென்றுள்வை வேலரைக்கண் டாளுடனே
பாதிமதி மானம் பறத்திறல்—நீதியிலா
தேதோ மகளென்னை யேசுகிறாள் வேள்வரலா
காதோகொண் டேகங் கழைத்து. (௬௮)

*கன்னியே வேலர் கடுகிவரு வாரென்னச்
சொன்னமொழி கேட்டுத் துயிலாமல்—உன்னவுன்ன
வெப்பமுற்றே மேனி மெலிவுற்றே னின்றேனுஞ்
செப்பமுத்தை யன்வருவான் சென்று. (௬௯)

*இன்னம்வரா தென்னென் னிளமுலையி ரண்டுவிம்மித்
துன்னியவீ துண்மை துயரதனைக்—கன்னியே
சொல்லினையே யாதுரைத்தார் சோமனிறை யம்பெய்தான்
வில்லினையே கோட்டி விரைந்து. (௭0)

*காட்டுமருள் வீட்டுமிருள் கல்வி மலர்ச்செல்வி
கூட்டுமன நாட்டுமயிற் றேட்டிரண்டுமேல்—கோட்டுக்
கரிமான் மகமான் கனிவிற் றருகுஞ்
சரிமான் மணந்தான் சரண். (எக)

*காடுதொறு மோடுவதென் காரணமோ நெஞ்சேநீ
வீடுபெறல் வீடலது வேறிலையே—தேடிநிதம்
வேலணிசெவ் வேளடியார் மெல்லியசெம் போதனைய
காலணிதல் சென்னி கடன். (எஉ)

*முத்தையனை யெண்ணியிரா முற்றுந் துயிலாமல்
எத்தனைநாட் பெற்றிருக்கு மென்விழியே—இத்தனையும்
செப்பியிணை யுற்றவனைச் செப்புமுலை யுற்றனையக்
கப்புவிழி யொப்படியார் காள். (எங)

*காரும் பரங்கிரிசெந் தூரேர கங்குன்று
தோரூடல் சோலைமலை தூபமுத்திக்—காரூந்
திருவாவி னன்குடிவேற் சேயின்ப வேலை
ஒருவாவி னன்குடியா கும். (எச)

*திருவே ரகங்கொடுமூர் தென்சீ ரலைவாய்
திருவாவி னன்குடிசெங் கோடு—திருமயிலம்
தென்பரங் குன்று திருத்தணிகை சோணகிரி
அன்பர கங்குகன்வீ டாம். (எரு)

*பரிதிமரை தாய்கன்று பார்த்தா மனைமன்
பெருநகரங் கார்பயிர்முன் பெல்லா—மிருநிலத்திற்
காணாத தொக்கேதென்பின் கண்டேன்கொண் டேன்கனிவு
பூணார்வை வேலற் புகழ்ந்து. (எசு)

*இக்கிறைக்கு மிந்தழற்கு மென்பேதை வாடிமிகச்
சக்கிறைந்த தண்புனலைச் சார்ந்துமே—கற்கரைக்க
வேலையேவு வாகமோக மீறவேலை சீறவாசை
வாலையாக னோகலாகு மா. (எஎ)

*கல்லைவல்லை யொத்தமுலைக் கத்திசத்தி யுற்றவிழிச்
செல்லையல்லை யொத்தகுழற் சிற்றிடையாள்—புல்லவல்லை

என்றுமொன்றி யின்றிணங்க வெண்ணிவந்த பெண்ணைமேவு
அன்றுகுன்று வென்றவேலையா. (எஅ)

*செந்தி லுறைந்திலகு செவ்வேட் டுதிக்கின்வினை
வெந்து கெடவியற்றும் வேலொன்றே—வந்துழலும்
பந்தனத்தைப் போக்கும் பலகலைபுந் தேக்குமுறச்சொல்
கந்தனத்தை சொந்தமுறுங் காண். (எகூ)

*சித்தங் கசிந்துருகிச் செங்கைமலர் கூப்பியரிச்
சித்தங் கிசைந்தோஞ் சிறப்புற்றோம்—நித்தம்
பணியுறையு மாலயனும் பண்ணுரைமெய்த் தொண்டர்
பணிபதத்தன் சண்முகனைப் பார்த்து. (அ0)

*இன்ன மனதிங் கிரங்கிலையோ வேழைசொல்லல்
உன்னுடைய காதி லுறைந்திலவோ—மின்னிடையேய்
வள்ளிக் கொடிமானே மாமயிலி லேறுருக
வள்ளலையென் முன்வரச்செய் வாய். (அக)

*வெங்கலியை வெம்பிணியை வெவ்வினையை மங்கையரைக்
கங்குல்பக ரென்றாக் கலந்திடினுஞ்—செங்கனிவாய்ச்
சொல்லு மனமுமந்தச் சுந்தரப்பா தத்திருத்தின்
வெல்லுஞ்செவ் வேளுமை மே. (அஉ)

*வல்வினையைத் தீர்க்கு மலர்ப்பெண் ணிணைச்சேர்க்கும்
கல்விமுதற் செல்வங்கள் காட்டுமே—வல்லியர்பால்
காமனத்தை நீக்கியிரு காலைபுநித் தம்பணிந்தாற்
காமனத்தை மைந்தன் கழல். (அ௩)

*கோங்கரும்போ செண்டோ குடமோ குகவுன்பால்
தாங்கி யெதிர்நின்ற தாதிணைமின்—ஓங்குமணிப்
பந்திணைந்த டர்ந்திசைந்து பாரமிட்டு வாரைமுட்டு
சந்தனந்தி மிர்ந்தகொங்கை தான். (அ௪)

*கட்டுவய லார்ந்தகவுட் காரானைக் காவில்வரால்
முட்டுவயல் சூழ முகவைபிற்கச்—சிட்டதனக்
கன்னி புனையணையக் காதலுறும் போதிவரும்
பன்னிருகை வேலவருள் பார். (அ௫)

*வள்ளித்தா யெற்கா வருக்கவிலை யாருமையில்
எள்ளளவு மென்கவிதை யேறிலையா—உள்ளபடி
ஆதார முன்னையலா லாரெனக்கென் கண்மணியே
தாதாதார் தாமரைத் தாள். (அசு)

*பொன்மான் கலைமான் புகழும்வள்ளி தெய்வானை
மின்மானுக் கெற்கு விரைந்துவரும்—பெம்மான்றாள்
பெற்றேனெடும்புகழைப் பெற்றேன் பெருங்கல்வி
கற்றே னவனருளைக கண்டு. (அஎ)

*சண்டகண்டன் பண்டுதந்தி தந்தகொடுங் காலவிட
முண்டகண்டன் மேவு முமைசுதனே—விண்டுதொண்டு
செய்யுமெளி யேன்வினையைச் சிந்தவடி வேலெடுத்தாய்
செய்யவடி யெற்கருளிச் செய். (அஅ)

*செந்தமிழால் யானுரைக்குந் தேனருந்த நுண்செவிக்குச்
சொந்தமிலை யாவதிலுன் சொத்துக்கு—வந்தசெல
வேது கலபமயி லேறுமுரு காவிதனை
யோதுவிரை யாக வுவந்து. (அகூ)

*ஆறுமுகத் தெய்வத்தை யல்லாதென் முன்னின்று
வேறுபல பேயை விளம்புதிரேல்—சீறும்
அயில்வேல் வருங்கொலுமென் றுகத்தி லுன்னும்
இயலி துரைத் தேன்பிழைப்பீ ரே. (கூ0)

*புத்திதிருத் தும்பொருளைப் போதிக்கு மெய்ப்பொருளுன்
பத்திக் கிரங்கும் பரமகுரு—முத்தி
வழிமுருக னென்று வணங்கார் முகத்தில்
விழியா திருநெஞ்ச மே. (கூக)

*முருகுகமழ் தண்டையந்தாண் முன்னின் றிறைஞ்சில்
பெருகுபுகழ் கல்வி பெறலாம்—முருகன்
வனசங் கரிக்கோடு மானுமங்கை கொங்கை
வனசங் கரிக்கோர் மகன். (கூஉ)

*பண்டுதொண்டர் பாலெழுந்து கண்டசண்ட னைப்புவிமண்
உண்டுவிழத் தாக்கியதுண் டோவிலையோ—அண்டர்பணி

வேலா வவன்றனக்கும் வேதப் பொருளுரைக்கும்
பாலாவென் பாலருட்கண் பார். (கூஙு)

*நச்சிருக்குந் தோன்முலையை நாரியர்கள் கஞ்சுகத்துள்
வைச்சிறுக்கிக் கச்சிறுக்கி வஞ்சமா—மெச்சும்
படிகாட்டு வாரல்குற் பாழ்ங்குழிவீ ழாதுன்
அடிகாட்டு வாய்வேல வா. (கூச)

*வைத்திருளை நைத்துநினை வாழ்த்த வெனதுநினை
வைத்திருத்தி யாள்வாய் மயிலோனே—மொய்த்தவலிக்
கஞ்சனைவென் றோன்மருக கைதொழுதே னன்புற்றுன்
கஞ்சமன பாதமுளக் கண். (கூரு)

*வள்ளிக்கு வாய்த்த மணவாளா வுன்மீது
தெள்ளித் தமிழுரைக்குஞ் சேயனுக்கு—வெள்ளி
மலையுறையா னந்தற்கு மாமறைபோ தித்தாய்
மலையா தருள்புரிய வா. (கூசு)

*மருந்தும் பொருமொழிச்சி வள்ளி செவிதமிழ்
அருந்துங் குமார வருள்போல்—விரிந்தாடு
தோகைமயில் வாகனவென் றொல்வினையை நீக்கியருள்
ஓகை மிகுந்தென்றைக் கும். (கூஎ)

* உள்ளத் திருத்தியன் புற்று நிதம்பணிந்தால்
உள்ளபடி நன்மகிமை யோங்குமே—விள்ளற்
கொருமுதலை செற்றான்பி னுற்றா ளிமயந்
தருமதலை தன்மதலை தாள். (கூஅ)

* காவரசு மாளவியல் கண்ணரசு தந்தவவிண்
தேவரசு பெற்ற திருக்குகவென்—நாவரசே
கொந்தடர்ந்த கைமலரிற் கொண்டவே லாலலையார்
சிந்தடர்ந்த வாவருளைச் செய். (கூகூ)

* வல்வினைபோங் கல்விநண்ணு மாயக் குழிப்பாய்ச்சு
செல்வியர்க டந்துயருஞ் சேராதே—பல்விதமா
எந்தை குருபரனை யேத்தி யவனிருப
தந்தனையென் றாய்பணிசெய் தால். (௧00)

* முதலையுறு மென்வினையை மொக்குகைவேற் காம
திதலையுற்றா னுக்குமறை தேற்றும்—குதலை
மதலைமொழி மாதர் மயக்கறுத்துக் காட்டும்
மதலைதலை வைத்தாண் மகன். (௧௦௧)

* சிந்திக்கு மன்பர்கடஞ் சிந்தனையைச் சிந்திவிடச்
செந்திக்குட் புந்திக்குட் சேர்குகனே—வந்திக்கும் [கந்தாட்
தொண்டர்பண்டு கண்டதுணைத் தண்டைகொண்ட முண்ட
டண்டசண்டன் கண்டர்சுதா தா. (௧௦௨)

* அந்திமதி நான்கின்முத லாநுதல்பொற் கிண்ணமுலை
ஐந்துமலர் முந்துமுக மாமிவளைச்—சிந்தைமகிழ்
வாகவணை மீதிருத்தி யன்பா வணைவடிவேல்
வாகமயி லூர்மாத வா. (௧௦௩)

* மெய்க்கு ளொளித்த விளக்கொளியே யில்வாழ்க்கைப்
பொய்க்கு ளுலைந்து புலம்பாது—செய்க்குள்வரால்
வளையுகண் மாமுகவை வாழுமுரு காவிந்த
வேளை யருள்வாய் விரைந்து. (௧௦௪)

* வேதனைமுன் வெஞ்சிறையில் வீழ்த்திமன மேயடியார்
ஏதமற வேல்வாங்கி யெண்ணசுரர்—சூதுகெட
மாட்டினோ னன்னெறியை நாட்டினோன் வள்ளிமணம்
சூட்டினோன் பாதந் துதி. (௧௦௫)

* தப்போது வண்டர் தடமார்பங் கீண்டவயில்
கைப்போ தமைத்தகுகன் காலிணைநின்—மைப்போக்கும்
மெய்ப்போதங் காட்டும் வினையையடு மஞ்சாமல்
எப்போது நெஞ்சே யிரு. (௧௦௬)

* கோழிக் கொடியவடல் கொள்ளசுர வெள்ளமறக்
கோழிக் கொடியுயர்த்த கோன்கழலைத்—தாழ்மின்
உடையானென் னெஞ்ச முடையானன் னீதம்
உடையா னுடையானென் றோர்ந்து. (௧௦௭)

* பார்த்தகண் ணையனிரு பாதமலர் விட்டொரடி
பேர்த்துவைக்கு தில்லையே பேய்நெஞ்சே—நேற்றிருந்தார்

இன்றிலேயே நிற்கவன்று னேகதிய லாதிலேயே
நின்றுபணி செய்வாய் நிதம். (க0அ)

* சந்துசென்று யுன்பாற் றணிக்தென் றனைக்குறித்துச்
சொந்தமென யாதேனுஞ் சொற்றூரா—அந்தரங்க
மூட்டும் பொழுதுகுழை காட்டினரா மூராலுண்டா
நீட்டுங் கணைவிழியாய் செப்பு. (க0௯)

* கூடிச் சுகிக்கவருங் கொற்றவர்முன் புற்றுமூலை
மூடித் திறந்தான் முயங்காரோ—நாடிமலர்
மஞ்சம்விரித் தும்பனிநீர் வாடையணிந் தும்பயனென்
வஞ்சிதுயி லஞ்சுகமே வந்து. (கக0)

* மீனவன் றன்றிருக்கு மீசைமுறுக் கிச்சிலையைக்
கூனவளைத் தானுடனே கோவிதந்தாள்—ஆனவட்கே
நந்தங்கண் டஞ்சொலதி லங்குங்கண் டங்கணயில்
பந்தந்தஞ் செண்டுமூலை பார். (ககக)

* சென்றழைத்தேன் வந்தாள் சிலதூரம் பாதையின்முன்
நின்று ளவளத்தை நேர்கண்டாள்—கன்றியே
நெஞ்சங் கடுகடுத்தா ணிட்டூரம் பேசினாள்
வஞ்சியும்பின் சென்றுண் மனைக்கு. (ககஉ)

* காற்றிசை வாய்க்கொளரி கௌவெச்சி லென்றன்றே
மேற்றிசைவாய்ப் புக்கும் வெளிப்பட்டாய்—ஏற்றிசித்தற்
காம்படிமெய் யில்லாற் கணைந்தகுடை யேதழல்போல்
வேம்படியார் சொன்னார் விளம்பு. (ககங)

* கடலில் விழுந்துவட்டங் காட்டிவிண்ணி னோடி
யுடலிற் களங்கமுமொன் றுண்டாய்—அடலின்றிக்
கொம்புவா லாய்த்தேய்ந்த கூன்மதியோ செங்கணிணை
அம்புவே லாட்குறுத லாம். (ககச)

* கான்மதித்தார் வாற்கிசைந்தாய் கால்பாய்ச் சினையேயிக்
கான்மதியே யான்மதியேன் காண்மதிநீ—வேன்மருவு
வாகன் வருங்கணத்தில் வாட்டும் விரைந்தோடிப்
போகயிலே மன்பாற் புகல். (ககரு)

* மேகப்பற் றிற்பொதிந்த வெண்மதியிப் பெண்முகத்திற்
காகப்பற் றித்தவஞ்செய் தல்லவோ—ஆகம்
கரியாய் மெலிந்தலைத்தண் கார்க்கடலில் வீழ்ந்தும்
திரிவாய் திறம்யாது செப்பு. (௧௧௬)

* காத்த பொருட்பகைவன் கையுறுது ரோகியெனும்
வார்த்தையொன்று போதாதோ மானமெங்கே—கோத்த
கடம்பணிதோள் காணக் கருதுமெனை வாட்டி
இடம்பியலும் புன்மதிய மே. (௧௧௭)

* தந்தந்த காந்தனத்துன் ருரநீ சீறிடில்வி
தந்தந்த காவென் றனையிருப—தந்தனையே
தந்தந்த காவில்வைப்பன் சத்திசத்தி யாற்பருப்ப
தந்தந்த காதலிமைந் தன். (௧௧௮)

* மேலவா வேலா விரைந்து பவனியிலுன்
மேலவா வுற்றனை மேவுவாய்—சோலைதரு
முக்கனியி னுக்கதிக முக்கியமி தழ்க்கனியில்
இக்கனிர திக்கதிக மே. (௧௧௯)

* தனையர் செயும்பிழையைத் தாயன்றி யாரென்
அனையே பொறுப்பா ரதனல்—நினையே
பணிந்தே னருள்வாய்பொற் பாதமல ருள்ளம்
அணிந்தேன் வழித்தொண்டன் யான். (௧௨0)

* பாகம் படர்ந்தமுகிற் பற்றைத்தீர்க் கும்படிக்கோர்
பாக மறியானைப் பண்டிதனென்—றேகமாப்
பேசுவதென் பேருலகிற் பேருருவாய் நின்றிலகும்
ஈசனையெல் லோரு மியைந்து. (௧௨௧)

* மதியே யெனைவருத்தி வாட்டினையேவெய்ய
மதியே மதியேன் மதியாய்—சதியே
புரிசூ ருடலுளைத்த போர்வேல னின்று
வருவா னெனக்கண்டு வந்து. (௧௨௨)

* வேலா று மாமுகனை வேண்டுதிரேல் வெவ்வினைகள்
நாலா று காத நடக்குமே—மேலா று

மாமதிய மூருசடை வாமியொரு பாகமுறை
நேமனருள் சேயெனவெண் ணி. (கஉ௩)

* மங்கையர்தங் கொங்கை மலைக்குகைக்குட் பட்டடியே
னுங்கைத் திடாதுன் னுபயபதம்—செங்கைமனம்
நாவாற்கண் ணல்வணங்க நாடத் துதிக்கநின்றெம்
தேவா வெனக்காணச் செய். (கஉ௪)

* நெஞ்சே நினையாதே நின்னறிவைக் கைக்கொளச்செய்
நஞ்சே யனதிவர்க ணரியலர்—மிஞ்சேசல்
குருகுகனை வாவி குலவுமுக வைக்குட்
குருகுகனை யென்றுங் குறி. (கஉ௫)

* கண்ணிலவே வென்றுநிதிக் கிண்ணமுலைக் கண்ணிவலைக்
குண்ணிலையா வென்னெஞ் சலையாது—வெண்ணிலவைச்
செஞ்சடையி னொத்தபொருள் சேய நினதுமலர்ச்
செஞ்சரண மெற்கருளிச் செய். (கஉ௬)

* கண்டையா மாதுமொழி கானமயில் சாயறனைக்
கண்டை யுறுங்காந்தள் கையிடைமின்—வண்டயில்சேல்
ஆகும்விழி மாதின்மே லாசையுற்றுண் மேவுபொருள்
ஆகுமிவ ளேயனையை யா. (கஉ௭)

* உள்ள மருளேயை யோட்டுமருந் தேவனமாண்
வள்ளி மனங்கனிய வாழ்கனியே—புள்ளி
மயிலூர்ந்து மாயை வரையீர்ந்து வெற்றி
அயிலேந்து வாகா வருள். (கஉ௮)

* அருட்பால்கட் டிக்கொண்டா லன்னையே கொங்கை
மருப்பாற் பொறுக்க வசமா—சுருக்கில்
தனைய ரிடம்வருந்தத் தாமதமெ னீங்கா
மனையாசை யாவேல வா. (கஉ௯)

* தேவைநகர்த் தேவர்குலத் தேவமன்னர் தேவைதரச்
சேவைதரு மெந்தை திருவடியை—ஆவலாய்
வந்தித்தேஞ் சிந்தை மகிழ்ந்தேம் வினையட்டேம்
சிந்தித்தே மென்றுஞ் சிறந்து. (க௩0)

* பெண்ணிடத்தும் பொன்னிடத்தும் பேருருவைக் காட்டிநகர்
மண்ணிடத்து மையல்கொண்டு வாடாது—கண்ணிடத்து
நன்மணியே போதநிலை நாட்டுமதி தந்தெனுளம்
மின்மணிவள் ளிப்புணர்வாய் மேவு. (௩௩௧)

* வரையளந்த மற்புயா மங்கைவள்ளி செங்கட்
டிரையளந்த மார்பா சிறியேன்—கரையளந்து
கண்டறியா நெஞ்சுட் கவலை தவிர்த்தருள்வாய்
வண்டறியாப் பாத மலர். (௩௩௨)

* பணிந்தா லுனதுவினைப் பந்தமெலா நீபம்
அணிந்தா னயிலா லறுமே—தணிந்தூரும்
செஞ்சடையான் வாழ்த்தமறை செப்பியெமைக் காத்திடம
னஞ்சடையான் பாதநளி னம். (௩௩௩)

* பாலமரு மின்சொல்வள்ளி பாலமரு மெந்தைசெங்கை
வேலமரு மென்சிந்தை மேலமரும்—கோலமருப்
பாத மவன்புயத்துப் பத்தனென்சொற் றூமரும்
காதமர்கட் டெய்வக் களிறு. (௩௩௪)

* கடக்களிற்றை வென்றான் கடற்கடுவை யுண்டான்
தடக்குளக்கட் கன்றே தருண—மடற்கனல்வேள்
எய்யம்பு வந்தென் னிளமுலையூ டேறுமுன்னின்
செய்யம் புயஞ்சேரச் செய். (௩௩௫)

* அன்னை யுடனேக யானலைந்து காணேகத்
துன்னுமலர் பன்னிருகை சோர்ந்ததே—இன்னம்
பிறவாது செவ்வேளின் பேருளை நெஞ்சம்
மறவா தருள்வாய் வரம். (௩௩௬)

* கடைவா ணியனத்தான் கால்வண்ணன் மன்சேய்
இடைபன்மரு வுங்குயத்தி யெண்ணும்—திடமருகன்
வேடுவர் பெண்ணை விரும்பிமணந் தூங்குகனை
நாடுபுக ழூங்குலனென் னும். (௩௩௭)

* அபயாவா காவிவே காருகா வம்மை
உயயபுய மேவிய யோகா—விபமுகச

மாசிவசே யாபாவ மாசிகமே யப்போகா
பாச வகம்பவ மப்பா. (௧௩௮)

* அம்புயமா வாக்குமா வாய்க்க வகமீய
மம்புகமீ யேய்சேவே யாசையாய்ப்—பம்பும்
இமையமா சேயாகு மெம்மகமேய் சாமி
அமையமிகக் காப்பாயை யா. (௧௩௯)

* கன்மனத்து வஞ்சக் கயமுகனைக் கீண்டவயில்
மின்மனத்தன் கைவைத்த வேளடங்கா—என்மனத்து
நோயடங்கக் கண்ணருளா னேகுகினெ னெம்பகைவர்
வாயடங்கக் கண்டேன் மகிழ்ந்து. (௧௪௦)

* வினையே மடிந்திடுவாய் வேண்டாம்போ வேழாய்
அனையாங் குகற்பணியு மன்பர்—தனைநீ
அடையவுன்னி னேயுன் னையனையுங் காவல்
இடையவைத்தான் பார்வே றிடம். (௧௪௧)

* திருக்கார்த் திகையிலுன்னைச் சேவித்தேன் றன்பத்
திருக்கார்த் திகைக்கவென் சிந்தை—நெருக்குண்டு
வாடாது சூரையடு மாவடிவே லாவருள்பூந்
தோடாரு மார்பா சுகம். (௧௪௨)

நடுவெழுத்தலங்காரம்.

* என்னிரு கண்ணே யிசையுணர்ந்த செங்கையே
கன்னியரின் மிக்க கனகமே—என்னிடத்தில்
நின்னிறைவ னும நிகழ்த்தா மலைநிரைபூ
மன்னுகொன்றை மிக்கநல மாம். (௧௪௩)

* தோளி லணிந்த தொடையளித்தார் யாவரென்பால்
வாளிணைத்த கண்ணே வழுத்துவாய்—கேளாய்
நதிகுணமி ரண்டுதனி நாதரெனை யாள்வோர்
கதிமயில யிற்படைவாழ்க் கை. (௧௪௪)

* இங்கையர்க்கும் வல்வினைக ளெய்தா தகற்றயில்வேற்
செங்கயர்க்கு ளங்குதனிற் சீர்தருமே—கங்கைமுடிக்

கங்கையர்க்கு மைந்தனொரு கங்கையர்க்கு நன்மருகன்
மங்கையர்க்குண் மிக்கவள்ளி மன். (௧௪௫)

* முதலை யழித்து முகிலொருதோல் கொண்டான்
மதலையணி வேழனொருதோல் வாட்டி—மதிநூல்
இடைக்கிடையுந் தையற் கிசைந்தான் றெழிலோ
விடைக்குமாண் டிக்கு மிது. (௧௪௬)

* அஞ்சியிருந் தேனே யறியாம லித்தனைநாள்
பஞ்சரத்தி லுய்த்த பறவைபோல்—கெஞ்சியனை
நாளறிய வோதினமு நாதவுயிர் மாரன்விதிர்
வாளறியு முன்ன மகிழ்ந்து. (௧௪௭)

* வரைக ளிளகுமெனில் வாய்ந்ததுப்பு மிக்க
நரையாகு மென்னி னளின—மரையிதழும்
நீல முறையுமெனி னோர்தந்து பாறருமேல்
வேலனணை வானே வியந்து. (௧௪௮)

* வாணிசமே தன்காணான் மைந்த விவளையணைந்
தாணிசமா லுற்றா ளவயவந்தால்—நாணி
அருப்புத்தந் திக்குமறு கன்னநடை மின்னாள்
மருப்புத்தந் திக்குதவு மால். (௧௪௯)

* பாளைபிறை யாடிமரை பைங்குமுதம் வள்ளைகுமிழ்
வாளைமுலை கந்தி வரைவரைமின்—கோளியிலை
வண்டணிநீ ருந்தியரா வாழைவரான் ஞெண்டாமை
கண்டனம்வே ணாட்டோர்கொடிக் கண். (௧௫௦)

* கங்கையறா காத்திபுனை கந்தரமைக் கந்தரனோர்
பகையிடங் கொண்ட பராசத்தி—செங்கண்
கதிர்மதியைச் சூழ்குழைபிற் காய்கருத்தொன் றுண்டேல்
விதியிருப்பை யொப்பிடலா மே. (௧௫௧)

சிலேடை விநாயகருக்கும் பானைக்கும்.

* அங்குசவன் கைக்கொளலா லாருங்குட் டிக்கொளலாற்
பொங்கலிட்டுப் பூசை புரிதலால்—கங்குல்பகல்

தானீர் தாங்குகைபோற் சாரப் பகந்தரலால்
ஆனைமுகன் பானையென லாம். (௧௫௨)

* மோடியாகு மாவிதேது மோகமான தாலெறுவி
வாடவாடை யோடுநீடு வாடையூடு—தேடிநாடு
மாரனம்பு தைத்திடுமே வந்தணைவாய் கந்தவுனை
ஆரனம்பு பேதையல்ல வா. (௧௫௩)

* குஞ்சரம்போற் றன்மகற்கோர் கொம்புகிடை யாமையினால்
அஞ்சுதலை கொண்டா னரனென்று—குஞ்சமதி
யான பிதாவுக்கோ ராறுதலை காட்டியவா
வானவர்கோ வெற்கருள வா. (௧௫௪)

* வானத் துடுவொளிநீர் வந்ததென மின்னியொளிர்
வானத் துலவுமுக வைக்குளத்தில்—நாணம்
புரிவோர் பகலிற் புதுமையென்பர் மான்குஞ்
சரியைமணந் தான்வாழ் தலத்து. (௧௫௫)

வினாவுத்தரம்.

* நின்மாம னுண்டதுவு நேர்ந்தவனன் றெய்தறுவும்
நின்மார்பா ரந்தரனு நின்முன்னோன்—மன்னி
அமர்வா கனமு மடியார்வாய்ச் சொல்லும்
குமரா முருகா குகா. (௧௫௬)

* சம்பு களமுடியிற் றாங்கினவும் வேளூர்த
லும்படர்வே லேந்தியது மோங்குதனஞ்—செம்பொன்
கடம்புரையும் வள்ளிநடை கண்டயர்ந்த தும்பூங்
கடம்பு மயில்வா கனம். (௧௫௭)

* விண்டுமனை யாரழியா மெய்ப்பொருளென் வச்சிரத்தான்
பண்டுசிறை கொய்ததெது பார்ப்பதிசேய்—கொண்ட
முதலாம் படைவீடென் முத்தமிழோய் கேண்மோ
அதுவாந் திருப்பரங்குன் றம். (௧௫௮)

* வல்லவா வேலா மலரணையி லென்மனம்போல்
புல்லவா வென்றென் புதுமையெலாம்—சொல்லிவி

சந்தனஞ்சொ லுங்கடம்பு தந்திடுங்கொ ணர்ந்திடும்ப
சந்தநந்த னம்பொருந்தத் தான். (௧௫௯)

* தாயேற்ற நிற்பணியுந் தாச ரெமையகலா
நோயேற்ற ஞாயமா நுங்கணருள்—வாய்தேற்றி
என்றும் புரந்தருள்வா யெங்கள்குடி காத்தவதிண்
குன்றடர்ந்தாய் வந்தெமையாட் கொள். (௧௬௦)

* இன்னமுமுன் னெஞ்ச மிரங்காதா யானுனையே
அன்னையென நம்பினவ னல்லவா—மின்னியொளிர்
வேலிலையோ நோயை விலக்க வறியாயோ
காலனையட் டான்குழந்தாய் கா. (௧௬௧)

* வள்ளிமா னேயெம் மரபினுதித் தாத்தினமா
அள்ளிக் குகற்களித்த வன்னையே—யுள்ளபடி
எங்க டுய்ரையெயற் கியாருரைப்பர் நின்னையன்றி
மங்கையே காப்பாய் மகிழ்ந்து. (௧௬௨)

* நெறியேதும் போத நினைநெஞ்சில் வைத்து நிறுத்தநிலை
அறியேன் பொறுத்தரு ளென்றுகண் ணற்கரு ளையனெற்றிப்
பொறியே நினதுபொற் றாளிணைக் கேயன்பு பூண்டுவளர்
சிறியே னியற்றிய செந்தமிழ்ப் பாடல் செவிக்கொள்வையே.

* மருந்தா மறைமதி வாணுத லார்புன் மயக்கறுத்துத்
தருந்தா மரைக்கைப் பிரானுந் தராப்பதந் தண்கடம்பு
பொருந்தா மரைக்கரத் தானும்விண் ணோரும் புயனிறத்தே
கருந்தா மரையனும் போற்றுங் குறவள்ளி காதலனே. (௧௬௪)

* வந்திக் கிணையடி தந்தான் புதல்வ மருங்குமொழி
தந்திக் கிணைவிழி வேல்வள்ளி நாதநின் றாள்பணிவார்
புந்திக் கிணைதெள் ளமுதே யெனது புராணவினை
சிந்திக் கிணைத்தருஞ் செஞ்சிலம் பாவருள் செய்குவையே. ()

* மருந்தால் வினையின் மயக்கிச் சிறிய மருப்புமுலை
விருந்தால் விழியத னன்மைய லூட்டி விரிந்தகுழிப் [ன்
பொருந்தா வலையச்செய் மின்னையன் னார்செய்ய பூவிதழ்த்தே
அருந்தா துனதடித் தாமரைத் தேறலுண் டாடுவனே. (௧௬௬)

* ஆடுவ னின்னவை முன்னின்று செய்ய வடிமலர்மேல்
பாடுவ னின்னன்பு பூண்டார் தமையும் பரிந்துளன்பாய்த்
தேடுவ னின்னுரு யாவுமென் றேமெய்யிற் றேர்ந்துகொள்வன்
வேடுவ னின்ன றவிர்த்தான் குமரவை வேலரசே. (கசு௭)

* நாடுவ னல்ல னினைப்பணி யார்தமை நாணிலத்தில்
கூடுவ னல்லன் கொடுங்கொடி மாதரைக் கூற்றெனினும்
வாடுவ னல்ல னினதருட் டேனுண்ட வன்மைகொடு
சாடுவ னல்லன வெம்பகை யோடத் தடக்கையினே. (கசுஅ)

* காலன் வரிற்கழற் காலன் வருவன் கடுகிவெய்ய
சூலம் வரிலெந்தை வேலா யுதமெதிர் தோன்றிவெல்லும்
மாலை நிறத்தன்கைப் பாசம்வந் தான்மஞ்ஞை பாசம்வெல்லும்
மேலக் கடாவுறு மிண்டர்க்கஞ் சேன்றுணை வேள்பதமே.

* கலைக்குட் சிறந்த முலைமாதர் செய்யுங் கபடமென்னும்
வலைக்குட் சிறிது மயங்காம லென்றுநின் மாமலர்த்தாள்
இலைக்குட்சிக் கியென வென்மனஞ் சாரவை யின்சொலின்கு
தலைக்குட் சினைக்குபின் மால்கொள்ளு மான்குஞ் சரிக்கரசே.

* சுழிக்கு ளலையுமென் றன்மன மானது தோகையர்தம்
விழிக்குளுந் தேமன் முலைக்குளும் போதம் விலக்குபெருங்
குழிக்குளு மேசென்று வீழா தருள்புரி குன்றடங்க
ஒழிக்குந் திடவயில் வேலாநின் றுளினை யுள்ளுவந்தே. (க௭க)

* தனக்காட்டிப் போதத் தனத்தைக்கைக் கொள்ளுமித் தையல
இனக்காட்டி லென்மன மேகா தருள்புரி யெந்தைமுனம் [ர்தம்
தினைக்காட்டில் வள்ளியைத் தேடிப் பணியுந் திருக்கரநீள்
சினைக்காட் டியவஞ்ச மாவடர்த் தாய்நின் றிருவடியே. (க௭உ)

* சக்கர மஞ்சு குழல்வள்ளி நாதமுன் றுருகன்கொள்
சக்கர மஞ்சு மணிவண்ணன் பெற்றுயத் தானவர்மா
யக்கர மஞ்சுடர் வேலெடுத் தாயெனை யாதரிப்பா
யக்கர மஞ்சுடை யார்க்கருள் போத வகமகிழ்ந்தே. (க௭௩)

* வேட்டை பெரிதென வேவெறி நாய்க்கு விருதுகட்டிச் [ல்
சாட்டையிற் பூட்டிக்கைக் கொண்டான் மனது தயங்குதல்போ

நாட்டையும் வாழ்க்கையு மேபெரி தாயெண்ணி நாரியரை
வேட்டைக்கு ளீயொத் துழல்வேனை யாண்டருள் வேலவனே.

* வட்டார் முலைவள்ளி மாதினைத் தேடியு மாமறையால்
கிட்டாப் பொருளூர மாடல் கொண் டொற்றியுங் கேளடர்சூர்
அட்டாங் கருளியு மாலயன் சென்னி யணியவிழ்ந்தோர்க்
கெட்டாநின் றுந்தொண்ட னென்னுள மேவிய வேண்பதமே. (கஎ௫)

* சொல்லா திருகை தொழாதென் னிருபதஞ் சோரவெதிர்
நில்லாது நெஞ்ச நினையா திணைவிழி நேர்ந்தருவி
செல்லா திணைச்செவி கொள்ளாது தொண்டர்சிந் தித்தவரம்
எல்லாந் தருங்குக னல்லாது வாய்மற் றெவரையுமே. (கஎ௬)

* அடுத்துப் பறிப்பர் சிலர்சிலர் வெப்பமுற் றுயுதங்கொண்
டடித்துப் பறிப்ப ரிரும்புபொன் னுமென் றருமையுறப்
படித்துப் பறிப்பரிப் பாரோ ரறிவைப் பரிந்துகிட்டப்
படுத்துப் பறிப்பரிப் பவையர் மோசமென் பார்மனமே. (கஎஎ)

* மலையா முலைகொண் டிரத்தே யழுத்தி மலர்ந்தமுகம்
மிலையாசை யுற்று வெயர்வெழச் செய்ய விழிசெருகக்
கலையா சறக்கை வளைதெறித் தோடக் கலவிசெயும்
இலையா தனத்தன் மருகா மயலி லிடாதருளே. (கஎஅ)

* ஓடுந் துயர்கெட் டொருகோடி காத முயர்ந்தபொருள்
கூடுங் கலைமின்னு மன்னுமுன் னுகக்கை கூப்பவிரித்
தாடுங் கலப மயிலோ னயிலனை யன்புளன்பாய்
நாடுங் கவிமலர் சூடுமென் னெஞ்சுமென் னுவுமின்னே. (கஎ௯)

* கலைக்குட் பதுங்கி யுரங்கொண் டெழுந்திரு கண்கறுத்து
மலைத்துட் குழைந்த வரைப்பாய் புலியெனு மாமுலையார்
வலைக்குட் பொதிந்துழ லாவண்ணம் வந்தருள் வாயலைமீ
திலைக்குட் டுயின்ற திருமான் மருக விணையடியே. (கஅ0)

* பணைத்தாட்டும் பிக்குக் கரும்பூட்டி மாசலப் பாவைசெங்கை
அணைத்தாட்டுந் தொட்டில் வளருங் குழந்தை யடர்ந்தெழுந்த
பிணைத்தாட்டு பம்பரம் போன்முலை யாள்குறப் பெண்கணவன்
இணைத்தாட் டுகடரு மெய்த்தொண்ட ரெண்ணிய யாவையுமே. ()

* வில்லடி தாங்கி மகன்செந்தில் வாழ்வடி வேலவன்பால்
செல்லடி நில்லடி நின்றுயர் சொல்லடி சேர்ந்தணையில்
புல்லடி சோகத்தைப் போக்கடி மேற்கடி பூண்டமலர்
மெல்லடி யானுனக் கேயிசை வானடி மெல்லியலே. (கஅஉ)

* நகிறி துளநெனத் தோன்றிடை யாண்மதி நாட்டியத
பசிறினு முள்ளவ ரெண்ணுது மையற் படுத்துமையான்
முசிறினு மிக்க குணத்தா ரகத்தினு மூர்தொழிலாள்
விசிறி சுழற்றியிங் கேகின் றனளிது வேளியல்பே. (கஅ௩)

* நினைத்தா லுருகி நெடுமூச்சுங் காய நெருப்புமடர்ந்
தெனைத்தா வியமன மேங்கிய தோங்கிய வேந்துமுலைச்
சினைத்தாவி வாழுங் குயிலினங் காளிந்தச் செய்திதனைத்
தினைத்தா வியல்வள்ளி மன்வரு வான்சென்று செப்புமினே. (கஅ௪)

* வாடியக் காவில் வளைத்தா னனங்கன் மனமுருகி
வாடியக் காற்புனற் சிந்தி வருந்து வளைவனைமார்
வாடியக் காவல் கடிந்துசெல் வேனந்த மட்டுமுடன்
வாடியக் காள்வடி வேலனைக் கூடி மணந்திடவே. (கஅ௫)

* கரும்பைமுன் னீட்டித் தளிரைத் துளக்கிக் கணைசெலுத்தி
அரும்ப மரையி லரைக்காட் டியுநின் னறிவவள்பால்
விரும்பக் கலவி விளைத்தா ளழைத்திட வேண்டினள்காண்
துரும்பைத் துடியை யடுமிடை யாள்வள்ளி தோய்புயனே. (கஅ௬)

* செஞ்சங்க ளார்களங் கூந்தலன் ஞர்சிறி தேனுமுன்னி
வஞ்சங்க லாருயிர் போனீ ருடையவர் மாலளிப்பார்
நெஞ்சங்க லாரிதற் கோராது நித்த நிமலர்சென்னிக்
குஞ்சங்க லாமதி யாரிளஞ் சேயையுட் கொண்ணெஞ்சமே. (கஅ௭)

* படுத்தானை வேலணி கந்தரைத் தந்தியைப் பண்புறப்பெற்
றெடுத்தானை யீச னிருதோள் புளகுற வின்பமுற்றும்
கொடுத்தானை யெண்ணக் குவலய மீதருள் கூடும்வினை
தடுத்தானை நல்கு மடியார்தஞ் சிந்தை தனிலுறைந்தே. (கஅ௮)

* திருப்பரங் குன்ற முறைந்தசெவ் வேளென் றிருந்துமதி
இருப்பரங் குன்ற னிணையடி யேயரு ளேந்துமுலை

அருப்பரங் குன்றங் கனிவள்ளி நாதநி னன்புசெய்யும்
விருப்பரங் குன்றனித் தோகையி லேறிய வேலரசே. (௧௮௯)

* தாளிற் சிலைசெஞ் சிலைநுத லாகத் தரணியின்முன்
றுளிற்செய் தான்மரு கோன்வரை வாயி னளிர்பணைமென்
றோளிற் சிறந்தநின் பொற்கிணங் கைக்கொளத் துன்னியபின்
வாளிற்கை வைத்தனை யான்வெருண் டேனடி வார்குழலே. (௧௯0)

* ஒருமானைக் கைவைத் துலகமெ லாந்தரு வோன்புகழும்
பெருமானை நித்தமும் வாழ்த்துநெஞ் சேபிணி தீர்த்தருளைத்
தருமானைப் போலும் விழிவள்ளி நாதன் றடகடத்துக்
கருமானைப் பின்வந்த காளையென் றேநிதங் கைதொழுதே. (௧௯௧)

* வண்டு விழிமினைக் கொண்டிரு பாலும் வளருங்குகன்
உண்டு வழியிவ னன்றி யொருவரை யுள்ளமது
விண்டு பணிவது மில்சிவ ஞான விரிநகரில்
கண்டு பணிந்துய லாமன மேருகன் காலிணையே. (௧௯௨)

* மாலைக் குழலிடை வஞ்சிக் கொடிநடை மத்தகரி
வேலைப் பொருவிழி மெல்லிய லாளுனை மேவவெண்ணிப்
பாலைப் பழத்தினைக் கைப்பெனத் தள்ளிநின் பட்சமுற்றாள்
வேலைச் சுவற விடுமயி லார்புய மேவுவையே. (௧௯௩)

*பைங்கோ தையரைக் கனல்போலக் காயப் படித்தவித்தை
எங்கோன் முருகன் புயத்தார் வரிலென்னை யென்னசெய்யும்
சங்கோ லிடுங்கட னஞ்சோ டுதித்துத் தனிவிசும்பில்
செங்கோழி முட்டைக் கருப்போ லெழுந்த செழுந்திங்களே.(௧௯௪)

* மலைக்கு மலைக்கும்வெம்.மாவுக்கும் வேறிட்டு மாகன்முடி
நிலைக்கும் படியருள் செய்தாண் முருகனை நெஞ்சினில்வைத்
திலைக்கும்பிட் டென்னகும் பிட்டென்ன கெட்ட விருண்மனங்கு
தலைக்குஞ் சரிக்கும் பிணைக்குங் கணவன்பொற்றாளிணையே. (௧௯௫)

* பாலுங் கனிபசுங் கிள்ளையுஞ் செம்மொழி பாரில்விரி
யாலுஞ் சரிசொல்ல லாமே யிவள்வயி றன்னநடை
சேலு மயிலும் விழிவள்ளி நாதன் றிருவடியும்
வேலு மயிலு முளவெற்கெந் நாளும் வினையில்லையே. (௧௯௬)

* நிலந்தனி னின்னை மறவாதுள் வைத்தவென் னெஞ்செனுமோ
ரிலந்தனை யார்க்குங் கொடேனிது சத்திய மென்றுமெங்கள்
குலந்தழைத் தோங்கச் சிவபுர மேவுங் குமரையவுட்
சலந்தவிர்த் தெம்மைப் புரந்தருள் வாய்சிவ சண்முகனே. (௧௯௭)

* செழுந்தே னொழுகிய பூங்கடம் பாசிவ ஞானம்வளர்
கொழுந்தே நமன்கையிற் காட்டிக் கொடாது கொடுநரகில்
விழுந்தே யுழல விடாதரு டந்தருள் வேந்தரொடும்
தொழுந்தேவர் தேவனை யோர்நிரை காட்டிய தோகையனே. (௧௯௮)

* பொருந்தே னுலவு பொழிற்சிவ ஞான புரியிலன்பர்
பொருந்தேது வாக வருங்கும ராநினைப் போற்றிமன
விருந்தே தருமெனை யாண்டவ வின்னமும் வெம்பிணியால்
வருந்தே லெனமனந் தேற்றிப் புரந்தருள் வாய்குகனே. (௧௯௯)

* விளக்குஞ் சுடர்மணிக் குன்றே தினைப்புன மேவியகோ
மளக்குங் குமத்தன வள்ளியை வேட்டு வரையுடலைப்
பிளக்குந் திடவயி லேந்திய வாநினைப் பேணுளத்தை
இளக்கும் பிணியை விலக்கரி தோவெமை யீன்றவனே. (௨00)

* இலக்கந் தரமுறை யிட்டாலுங் கேள்வி யிலாதிருந்தால்
சலக்கந் தரத்துயர் சார்தனன் றேபத்தர் தன்மனத்துள்
மலக்கங் குலோட வருநற் சிவபுரி வாழ்குமரா
கலக்கந் தவிர்த்தெமைக் காக்கமுக் காலுங் கடனுனக்கே. (௨0௧)

* சேய்க்கோர் மருந்து முதிருமுன் கற்பித்தல் சேணுலவா
வேய்க்கோர் மருந்து மிதித்துடல் வாட்டன்மின் னுரையண்டும்
பேய்க்கோர் மருந்து பிரம்படி மெத்தப் பிதற்றவிடு
நோய்க்கோர் மருந்து சிவஞான வேலநின் னொண்கழலே. (௨0௨)

* அஞ்சேல் குமரைய வாறு முகவ னருள்பெறுமென்
னெஞ்சே நமனு நினையான் பகைவினை நீறுபடு
மஞ்சேய் குழல்வள்ளி தெய்வப் பிடிமண வாளனொரு
செஞ்சேவ லோர்மயி லோரயின் மேவிய சேவகனே. (௨0௩)

* காதா றிரண்டுசெங் கையா றிரண்டுகண் ணாறிரண்டு
தாதார் மரைவத னம்பன் னிரண்டு தழுவவளர்

நாதா நினைநம்பு நாயேன் றமிழ்க்கு நலந்தருவாய்
கீதாவி னோதவுல் லாசசல் லாபக்ரு பாநிதியே. (௨௦௪)

* இடங்கொண்ட தெய்வப் பிடிவள்ளி மேவ விசைந்துவிம்மித்
தடங்கொண்ட பன்னிரு தோட்பொருப் பேநின் றனையரமை
அடங்கொண்ட நோய்வருத் தாதறுத் தாதரித் தாண்முருகா
வடங்கொண் டரிதுயின் மான்மரு காமயில் வாகனனே. (௨௦௫)

* வேலவன் சந்நிதி நீறுகண் டாற்கொடு வெம்பிணிநம்
பாலணு காதிது சத்தியம் பத்தர்சொற் பத்தியங்காண்
காலனை வென்ற கழலான் மதலை கருணைவெள்ள
மேலவன் றாட்டுணை யெண்ணுநெஞ் சேபுல் வினையறுமே. (௨௦௬)

* பனையொன்று கைக்கட மாமுகத் தான்றம்பி பத்தர்தம்பால்
வினையொன் றிடாது விடுமயி லோன்குக வேள்பொழில்சேர்
சினையொன் றியகுயின் மென்மொழி யாள்குறச் சேயிழைபால்
றினையென்று கெஞ்சிய வாயனைச் சேயனைச் சிந்திப்பனே. (௨௦௭)

* வானோ விடைவறக் கண்விழித் தோன்பவ வாயடைக்கும்
வானோ விடையுறை வானருள் வேழன் வரையிடத்தே
யேனோ விடைவருத் தாலாந் திருக்கிக் கிளமுலையூ
டேனோ விடைவருத் தானில்லை வாணிக் கினியவனே. (௨௦௮)

* உறவிக்கன் றோர்தக் கனைச்சிரங் கொய்து ளுறுதிசொன்மெய்த்
துறவிக் கருளளித் தானுமை பாகன் சுடர்விழிச்சேய்
குறவிக் கனமொழி யாண்மண வாளற் குறித்திலிரேல்
பிறவிக் கடலையென் றோகடப் பீர்புவிப் பேதையரே. (௨௦௯)

* உரகத்திற் றூங்கி மருகன் முருகனை யோதுகிலீர்
விரகதி லாழ்ந்த மனமுடை யீரினி விறுநம
னரகத்தில் வீழ்த்தி யிடும்பியல் போது நயம்பெறவோர்
வரகத் தினையள வாரற மீவரிம் மாநிலத்தே. (௨௧௦)

* செப்படி யொத்த தனமீதிற் றுஞ்சிய சித்தர்களே
யொப்படி செய்ய நமனார் திருக்கரத் தொப்பம்வந்தால்
தப்படி யோசையுஞ் சங்கும் பவனியுஞ் சார்ந்திடுமால்
இப்படி யிப்படி யேகுக வேள்பத மேத்துமினே. (௨௧௧)

* மாலை யாக்கிய முத்தத்தைத் தந்தவர் மாலை யாக்கிய முத்தத்தை த்தந்திலீர், வேலை யார்கட லெய்தசெவ் வேளிதே வேலை யாவினி யாகிலு மேவையா, காவி லேமத னேறிச் சிலையைத்தன் காவி லேபுற வைத்து வளைத்துமென், மேவி லங்கணை விட்டன னெற்கினி மேவி லைச்சகிக் கத்திகழ் வேலனே. (உ௧௨)

* மட்டப் பார மிலைந்து துலங்கிய வட்டப் பார முலைத்தட மேற்சி லை, தொட்டப் பார மதன்விட வேங்கிய தோகை யைப்புணர் வாயவு ணப்படை,அட்டப் பாவென வும்பர் பணிந்திட வாழுப் பாடரி யோட முற் சாடயில், விட்டப் பாவுரை தொண்ட ரகந்திகழ் மெய்ய னே பரங் குன்றுறை வேலனே. (உ௧௩)

* கோவை யுண்டு குலாவிய கிள்ளைகாள் கோவை யுண்ட குறைவினை ம.மன்னனைப், பூவை யண்டு கிளைகிளை யோடும்வாம் பூவை கண்டிலி ரோசின மார்மதப், பாவி கொண்ட சிலைபிடை தொட்டவம் பாவி யுண்டிட வந்தன சந்தனந், தாவி ளங்குயி லேதுய ரோதிநீ தாவி ளங்கிய வேள்முரு கோனையே. (உ௧௪)

* பாலை யாலை மொழிவழி றுற்றிடும் பம்பரங் கிண்ண மும்பொரும் வண்டனஞ், சேலை வேலை யிணையுங் கருவிழி தேய்ந்தி லங்கிய சிற் றிடை மாதராம், மாலை வேலைக் கிசைந்த கரும்பெறு வாக நோகுமு று முகன்கழல், காலை மாலை யிராப்பல போழ்துநீ கண்டு மெய்க் குட் கலந்தணை நெஞ்சமே. (உ௧௫)

* குருக னங்கள் குலாவிய சோலையிற் குறுக னங்கன் மதிசினங் கொண்டதாற், குருக னங்கண் முலைதடித் தேங்கியுங் குலவி யாதர வின்றிய சொல்லையன், பருக னங்கனி யங்கனை வாட்டினும் பதறு மாலினிப் பைந்தொடை தந்தருள், பருக னங்கனி பால்வெறுத் தாள் பொழில் பரவு தென்பரங் குன்றுறை வேலனே. (உ௧௬)

* குத்து மாமுலை மெத்தத் தடித்திடக் கொம்பி லங்குயில் கூவச் சி றந்தணி,முத்து மாலைக ணைக்குறப் பாங்கரான் மூசப் பூசிய சந்தனந் தீயவா,னத்து லாவலை தத்துமிவ் வேலையா ளுளும் வாடுவ ளோவிவண் மேவையா, பத்து மாமுடி யற்றிட வெற்றிகொள் பச்சை மால்பர ம்பரங் குன்றனே (உ௧௭)

* வண்ண மாலைதந் திரிலை யாதலான் மாரன் மாலையைத் தந்தில குஞ் சொனக், கிண்ண மாமுலை சென்னியிற் றைத்திடக் கிட்டி மாமுலை தொட்டிடி னுய்வனோ, வெண்ண மான்மயி லுன்னிட முந்தியே யெங்கு மாலவள் பாங்கனை குருடல், சுண்ண மாகவை வேலிடு கொ ற்றவா தூய மாபரங் குன்றுறை சோதியே. (௨௧௯)

* இன்பப் புணரி யெழுஞான விரவி யேகின் னடியார்பால் றுன்பைப் புணரா தகற்றுமியற் சுடர்வேற் கையா வென்னுள்ளத் தன்னைப் புணர்ந்த வருட்கனியே யருள்வாய் வரமென் மதிநிதியே முன்பப் பரனை யடுத்துவள்ளி மொழிக்கு மயல்கொண் முருகோனே.

* அரங்கண்மினன் மருங்குவள்ளி யணங்கையொரு புறந்தழுவெ ன் னைய னைச்சொல்; கரங்கள்பனி ரண்டுடைய கடவுளையென் னுயா முடைய கர்த்த னைப்பொன், வரங்கருணை தருங்குகனை மன்னவனை யுன்னிமன்னி வளர்நற் சோலைப், பரங்கிரிவாழ் பெருந்தகையைப் ப ணிந்துபத மணிந்துபுகழ் படைத்தேன் மாதோ. (௨௨௦)

* வாய்ந்தநுத றேய்ந்தமதி வாங்குகொடி தேங்குமிடை மாலை சூ டிச், சாய்ந்தகுழ லேய்ந்தபுயன் மாங்குயிலி னேங்குமொழித் தானை சூழக், காய்ந்தமத னைய்ந்தமல ராங்கணையின் வேங்கணிவிற் காத றீ ராய், தோய்ந்தவரி பாய்ந்தவிழி கோங்குமுலை வீங்குமலைத் தோகை வேளே. (௨௨௧)

* கலைநெகிழ விடைதுவளக் கருக்குழ சா ணையிற்றிருத்துங் கனை க்கண் ணின்மால், வலைமருரு மகரமொத்து வாடுபித்தத் தையறனை மணந்தாண் முந்தோர், மலைமருவக் கிரியுருவக் கரிவெருவக் கதிர்பொ ருவ வயங்கித் தோன்றும், இலைபயில்வே லிறையவநின் னிணையடியே கதியலதிங் கிலைவே றென்றே. (௨௨௨)

* குதித்துகளுங் கயற்கணிபொற் கும்பமது டங்குவடுகொங்கை முத்தைப், பதித்தநகை சிவத்தவிதழ்ப் பாவைகித மருந்தனத்தைப் பாலைத் தள்ளித், திதித்தகனல் வளைத்தனங்கன் சினத்துவிடு மலர்க் கணையாற் றேங்கி வந்தாள், மதித்தபுய மணைத்திவளை மருவுசிவ ஞா னபுரி வாழ்செவ் வேளே. (௨௨௩)

* திரண்டமுலை யிரண்டுமலை சிறந்தமதி யிலங்குமுகஞ் சேல்வா ணின்று, மருண்டநவி பொருந்துவிழி வணங்குகன லிணங்கியதோ ண் மாலை போல, இருண்டகுழ லலர்ந்தமரை யிசைந்தகரம் வசந்தன் மனை யிவளை ராமோ, தெருண்டமணி யிலைந்தமுடி புனைந்துமக னக ம்புரந்த தேவாள் வாயே. (௨௨௪)

* மதிவருத்தக் கடலொலிக்க மாங்குயிலுங் கூவவந்து வந்து பா யப், பதமிணைத்து மெருகுவைத்த பருப்பதத்தைப் பொருந்துமு லைப் பசலை தோய, நிதமலர்ச்செங் கரதலத்தி னிவந்தகிள்ளை தனை ம றந்து நின்றேண் மேவத், திதிபொருந்தந் தனையுணர்ந்து தேறிமயன் மீறிவந்தாள் சேர்ந்தாள் வேளே. (௨௨௫)

* கோட்டுமுலைக் கூட்டுமலை நீட்டுமயிற் றீட்டும்விழிக் கூரார் தம் மில், தோட்டுமுலை யீட்டுறமுற் சூட்டுகுழற் காட்டுண்மதி சோரா துந்தப், பூட்டுமுலை காட்டுமிவ ரீட்டுமருந் தூட்டநமன் போர்நோய் கையில், சீட்டுமுலை வாட்டுமையும் வாட்டுமுனி னருட்டுணைதா சீர் வே லோனே. (௨௨௬)

* காமியிவ ளுனைமருவக் கருத்தின்மயல் வருத்தம்வந்து காத்தாண் முன்றில், தாமதன்செய் தான்மலர்ச்செந் தாளுருகு மழைத்தனை வாய் தடத்தைப் பற்றி, மாமிவரு வாளெனவும் வஞ்சிபய மிஞ்சியி தை வகுக்கச் சொன்னாள், நேமிதரு வாமியருள் சாமிநின தாளிணை முன் னின்று தானே. (௨௨௭)

* பண்ணுமுலை சொன்னமலை பாகுமொழி யாகும்விழி பாணம் பொன்னின், மின்னலிடை யன்னநடை வெம்புமத னம்பின்மிக மெ லிந்து சூழத், துன்னுமிவ ளன்னையரைச் சோதரரை மாதரறை சொ ல்லைத் தள்ளி, நின்னையணை வன்னமதி நீண்டுமயல் பூண்டுவந்தா ளே ர்ந்தாள் வேளே. (௨௨௮)

* சக்களத்தி கட்கூமிந்தத் தையலர்க்கும் யானிழைத்த தவறிதெ ன்று, சிக்கெனச்சென் றறிந்தென்மதி திருந்தவவர் பொருந்தவினிச் செய்யா விட்டால், கைக்கழைகொண் டம்புகவங் கசன்வருவான் வ சைபுரிவான் கண்டா யென்றன், மெய்க்குள்வருத் திவைபொருமின் விரும்பும்வடி வேலரைத்தா மினிர்பூ மானே. (௨௨௯)

* தானைபல கோடியுடை சூழவரு தாருகற் சமரினிடை வாட்டி நித்தம், மோனசிவ ஞானநிறை பூணுமக வானவர்கண் முருககுரு பர குகவெனத், தேனுலவு பூமலரி னூடுமேவர் நாவலர் சிறந்ததுதி கொண் டதாளின், யானினிது ளாவலுட னோதுசிறு பாவணிகொ ளாறுமுக வருள் புரிகவே. (உ௩0)

* தொல்லடி யளந்த மாயன் றோன்றலே மதனை செவ்வேள்
மெல்லடிக் கமலத் தார்ந்த வேரியுண் மனவன் டாநின்
வில்லடி நாணு காது வேண்டினை நாணு தின்றே
மல்லடி தருவே னிற்நின் மறந்திடம் மதியை மாதோ. (உ௩க)

* கடிதங்கு மலரினிடை குடிதங்கு மளிவிழிகள்
கறைதங்கு குழல்செங்கை கமலநறு மலர்மின்
துடிதங்கு மிடைகதலி துடைகண்டி னினியமொழி
தொடிதங்கு மிணைமுன்கை யாழினியல் வெம்போர்ப்
பிடிதங்கு நடையர்வினை யடைதங்கு முடையர்முலை
பிடிதந்து போகநுகர் பவரெனிற் குன்றைக்
குடிதங்கு வள்ளிபிடி புடைதங்கு குமரவிவ
ரிடைதங்கு மதிவிலக வடிகளருள்வாயே. (உ௩உ)

*குயிலிலே யினியமொழி கயலிலே கரியவிழி கொவ்வைச் செவ்வாய்
மயிலிலே சாயலிடை செயலிலே தந்துநடை மலரோ னூர்தி
தொயிலிலே திகழுமுலை மயலிலே முதிருமலைத் தோகை யார்தம்
பயிலிலே மதிசென்று வெயிலிலே புழுவென்று படாதாள் வேளே. ()

* முலைபொருந்த வளைகுலுங்க முகமிலங்க வணமிகும்
கலைமருங்கி னிடையொதுங்க விழிதுளங்க மதனுறும்
சிலையிருந்த நுதனெருங்க மனமிணங்க மயறரும்
விலைதிருந்து நகைமுருந்து மெலியல்கந்த வணைவையே. (உ௩ச)

* தத்தைக் கினியமொ ழிக்குட் குத்துமு லைக்குட் புட்டுழல்சித்
தத்தைத் திருகிய டிக்குட் பற்றும திக்கைக் கொள்குகபா
வத்தைத் திரையென வொத்தக் கடலுழை பித்தர்க் கருடருமோ
வத்தைக் கிணைசெய்க டப்பக் குரிசிலென் மெய்க்கட் டிகழ்குகனே.

*வள்ளிக் கிணைத்தவிடை புள்ளுக் கிணைத்தநடை விழியாலேயே
வள்ளிக் கிணைத்தவடி கள்ளுக் கிணைத்தமொழி மயில்சாயலே
வள்ளிக் கிணைத்தபுய மெள்ளிக் கிணைத்தைதவெணு முலையாகியே
வள்ளிக் கிணைத்ததுற வள்ளிக் கிணைத்தபுய வடிவேலனே. (௨௩௬)

* வணமிகு நூலுநிடை யனுவோ விலையோ மதிமுகி குழல்வன மிரவோ முகிலோ, கணையக மிணைவிழி கயலோ வயிலோ கனியிவள் கனிவிதழ் கொவையோ வெவையோ, பணைமுலை யிணைமரை முகிழோ வரையோ படமுடை யரிகரி சடையோ நடையோ, பணிமணி முறவுட லணிபாள் பணிவாள் பலகல விபினிவ டணையாள் குகனே.

* சாதிபார்க் குண்ணா வாய்ந்தாய் தலமுழு தோடி யோய்ந்தாய் சோதிப்பொன் மனையைத் தோய்ந்தாய் சுடர்முன மொளிபோய் மாய்ந்தாய், தீதியன் மகன்கை யேய்ந்தாய் சேண்வரு மதியே பெண்ணால், பாதியாய்த் தேய்ந்தா யென்றன் பாவையைக் காய்ந்தாய் நன்றே. (௨௩௮)

* கோலப் பம்பர மாமுலை யாள்விழி சேலொக் கும்பிடி யாமிடை யாண்மொழி, பாலொக் கும்புய மேகலை நேர்கர மலராமே
வேலைப் பைம்புனல் சிறவு மாமர மேலக் கொம்பிடை யேகுயில் கூவவும், வாலச் சுந்தர மார்மத னார்கணை சகியாமன்
மாலைப் புந்திகொண் மாதுனை யேவெகு லீலைக் கின்பமு ளாயென வேயிருண், மாலைத் தந்தியி னூல்வெரு வாவரு மிணிதாக
வேலைப் பண்டொரு சூரமேல்விடு சீலத் திண்புய நீபுணர் வாய்திகழ், சோலைச் சந்தன நீண்முக வாபுரி முருகோனே. (௨௩௯)

* தாதகி சூடுமு தலுக்கு ரைத்திடு சாமிய வேளையின் மிகுத்த டத்தொடு,வாதக லாதுற வளர்க்க மிக்கலர் வாடிய வோடிய வளைக்க ணத்தொடு,கேதகை வாள்சிறு கிளைப்ப ரிக்கொடு கிதமுல ரவிய வளிக்க ணப்புகு, பாதக னாகிய மதப்ப யற்கென பார்திறல் வேலனை மதிக்த ழைப்பையே. (௨௪0)

* திரிபுர மெரிதர வருபொறி யுருவுறு தேசிகனே நினது
சேவடி யெனும்விரி பூவடி தனைநித நாவது துதிபுகல
எரியிடை யிடுமெழு கெனமன முருகிட விருவிழி வழியிருநீர்
இடையடி றுவடர வுடல்புள குறமல ரிடுமிரு கரமுடிமேண்

மருவுத லுறவனு தினமுன திசைசொலும் வழியடி யவர்மனமே
மாதிரு வேரக மாதிய மூவிரு வாழ்படை வீடெனவை
கருதிய வயில்வளர் சரவண பவகுக கழலிணை யருள்புரிவாய்
காவர சொடுபல தேவர்கள் பணிமுரு காசிவ குருபரனே.()

* சிக்கிழை மைக்குழல் சிக்கியு யிர்க்கவர் கைக்கணை விழிபாய
உக்கிம னத்துயர் கக்கிமி குத்திடு மிக்குவ ளவர்பாலே
இக்கிளர் புத்திவி லக்கியி ணைக்கழ லிக்கண மருள்வேலை
யைக்கிரி யைக்கரி யைச்சுவ றத்துளை வித்திடு மயிலோனே. (௨௪௨)

* துவளவளை கனன்மதனன் றொடுகணையிற் றுடியிடையாள் சோ
ர்ந்து வால்பாய்ந், துவளவளை யரிகதற மதிசிதறி யுடல்பதறித் துண்
ணுற் றங்கேங், குவளவளை யணையிலணை குணமமிர்த மொளிர்முகி
லிற் கூந்த னல்லாள், குவளைவளை மரையிலகு தடநிரைசூழ் பரங்கிரி
வாழ் குமர வேளே. (௨௪௩)

* தொன்றையக மனையாகம் பொருளிவைக டொலைவிலெனச்
சொல்லென் னெஞ்சே, மன்றையக லாதுநடி மகரதுவ சாரிதரு மத
லை யாமுன், வென்றயனை யறையிலிடு வேலனைநற் சீலனைப்பொன்
மிளிர வோங்கும், குன்றையனை யன்பகர மொன்றயனைப் பணிய
வினை குன்று மாதோ. (௨௪௪)

* இரண்டுமதி தெருண்டகனி யிணங்கியுனை யணையமதி யிசை
ந்தாண் மெத்தச்,சுருண்டமுது குடையகிழட் டோரியிவ டுயினீத்தா
டொடர்ந்து கூவி, இருண்டடரு மாலைவரி னெனையகலா ளவரைவர
வியற்று மென்னத், திரண்டமுலை மிசைவிழிகள் செலவுரைத்திங்
கெனைவிடுத்தாள் சேர்ந்தாள் வேளே. (௨௪௫)

* நாதனெனை யணையவரு நாளின்றென் மாமிசொல்லா ளுத்தி
யாளுள், சூதுநினைந் துனையணுகித் துயிலவா வென்றுசொலித் தொ
டர்கின் றாளால்,ஏதினியா னிசைப்பதென வேங்கியவென் மதியிதனு
லெழுந்த குன்றை, மீதினில்வாழ் வேலவரை மேவியிதை யோதிவர
வேண்டு மானே. (௨௪௬)

* கச்சுக் கடங்காட் டிப்படர்ந்து கண்ணிற் சிறுகக் கருகிவிம்மி
அச்சுக் குடங்காட் டணிமுலைமே லனங்க னம்பங் கனலாக

நச்சுக் கிடங்காட் டும்பிவிழி நாடு மிவளைக் கூடியவே
குச்சுக் கடங்காட் டுள்ளுறையுங் குறவர் தருமான் கோமானே. ()

* கடைதுவண்ட கழைபொருநது கணைநெருங்க மதனனால
இடைதுவண்டு ளுருகவங்க ணிணைமருண்ட வெகினமா
நடைகள்கொண்ட சிறுசிலம்பு நனிபுலமப நணுகினள்
தொடைகள்கொண்டு புயமிணைநத சுதணகுன்றை முருகனே. ()

* கண்டிருந்த மதனகணையாற் சென்டிருந்த முலைசமிகக கருத்தின் மையல், கொண்டிருநத மனியமணி கொள்ளாள்வின் ளாயுன மனக் குறிப்பென் றுலும, எண்டிருந்த வெனதுமுக நோககாள்காக காளவட னிதயச் சோரவை, வண்டிருந்த மணிநீப மாலையருள பரங் கிரிவாழ் வடிவே லோனே. (௨௪௯)

* இடக்குவளை கடற்றெனிபி னிரங்குவதெ னிணக்குமைச் செப பெடுத்துக கையில், அடககுவளை கொடுகதமணி யணிமுலைமே லணியெனதம மணியெண் ணுமன், மடக்குவளை மதபபயலை மதிதத மதி தனைசசிறிது மதிகக நனனிர்த், தடககுவளை புடைதத்தழுவு திடக் கிரிவாழ் கடப்பனையான் சார்விப பேனே. (௨௫0)

* இல்லையெனு மிடைதுவள விறக்கியவண் கச்சுமிடைநந தேங்க விம்மிக், கல்லைவெனு முலைதடிககக கரியவிழி செருகமனங் கசிந் தா றெருத்துச், செல்லரின வசியிணைதோள் சேரமயற் பாவையுறத் தேங்கி வந்தாள், புல்லமல ரணையணைததிப பூவைமனந திருத்திமதப போர்செய் வானே. (௨௫௧)

*பாதபங்கய மீதில்வைத்திடு பததிசித்திய தாகவும்
ஏதமானவை காதமோட வியற்றுமேலவ ளைபபெறு
மாதர்மாமணி யேயுனககிசை வானசொற்றமி ழோதவே
நாதனன்பனென் மீதிலன்புட னீகனிநதரு ளலகுவாய். (௨௫௨)

* அல்லையடும் பரிதியொளி யடங்கவின னெருங்கைமணி யணியி னூடு, புல்லும்வள்ளி தனச்சுவட்டா னீலமணி புதைததகதெனப பொலிதிண் டோளின், மல்லணியைத் தனியணிநத வல்லவனை யுன்னி வினை மழுக்கி வாழ்வாய், தொல்லையெதிர் சூரகத்தைத் தொலைத்தம ரர்ப் புரநதவனீ துணர்ந்தென் னெஞ்சே. (௨௫௩)

* மருவரையி னிருமுலைசெம் பவளமிதழ் துவளுமிடை பாலே சொல்லா, மருவுறைசெம் மலரிசையுங் குழல்ககன முகிலீணையு மா ஞர் காமச், செருவறைய மனமுருகித் தினமவர்த மிடையிடைந்து தேங்கா தாள்வாய், உருவரைவிற் பகறிகழ்வுற் றுலவயில மயிலினித மோங்கு வேளே. (௨ருச)

*செப்புக் கொப்புத் தனகவோதி சிக்கித் துக்கித் தகமெலி வாகி விழியான, வப்புக் குத்தக் கடியித ழேற வச்சப் பட்சத் தொடுவிணி ஞேடி யலைவாகி, யெய்ப்புற் றுக்கித் துயரலை மூழ்கி யெட்டித் தட்டிக் குவுளவர் நாடி நகையாமுன்,செப்பற் கொத்தக் குறமகண் மேவு சித் தத் துற்றுத் திகழ்குக வேளை நினைவீரே. (௨ருரு)

* தனம்பெருக வினைந்துளசந் தனங்கருக மனமுருகத் தடித் தேய் மேக, வினம்பருகு கனம்படர விலங்குதிரை யிருந்தகய லிரு கண் ணுடி, கனம்பருவ மினம்புருடர் கலந்தணையு நலந்தனையோ கா ஞள் பூங்கா, மணம்புருவ வனம்பழமு மறநதுன்மயல் சிறந்தனள் சேர் வடிவே லோனே. (௨ருசு)

* கானடையான் சமர்க்கணுகக் கனகத்தே ருடையவிவள் கை யாற் றுமல், வானடையா லிலையெனமான் மனமலையக் கூந்தல்வண்டு மயக்குற் றுண்ணும், தேனடையா தேங்கவிணைச் செங்கணியர் பூசு சந்தந் தீயாய்க் காய்ந்த, தானடையாக் கன்றெனவென் வரவையு னு மாதலிஞ லருடார் வேளே. (௨ருஎ)

* கருப்புவிலி சினந்துமிகக் கருகியாடீ சையைமுறுக்கிக் கணைக ளேவ, அருப்புமுலை தனிற்படிய வணங்குமதி மயங்கியுனை யணையத் தானே, விருபபுளவ ளமைதநெனையுண் மிகுத்தமயல் வகுத்தன ளால் விரைபூங் காவேய், திருப்பரவு முரத்தர்பணி திருப்பரங்குன் றிருப்பவனீ சேர்ந்தாள் வாயே. (௨ருஅ)

* அடல்வசந்தன் விடுசரங்க ளம்பொன்முலை பம்பமய லழுந் திக் காமர், உடல்பசந்து ளுடைமறந்த வலையணேந்த மெழுகெனநெக் குருகி வண்ண,மடல்வரைந்து கிளையிருந்த வனமிகுந்த கிளைதுரந்தும் வாரா தென்னே, தடநிகறந்த குவளைவண்டு தனிபயின்ற விசைக ளொன்று தடக்குன் றேனே. (௨ருகூ)

* தடங்கொண்முலை யடர்ந்துதிகை படர்ந்துமிகத் தடித்துவம் பைச் சாடிச் சீறித், திடங்கொடணுந் தோங்கிவிம்மத் தெருண்டன

ளாற் சுற்றமொடு சிறந்து செய்யும், சடங்குமுடிந் ததந்துதினந் தரு ணமிது தருணியிவ டமூவிச் சேராய், அடங்கொளவு ணப்படைக ளற்றுவிழ வெற்றிபுனை யணிவே லோனே. (௨௬௦)

* வட்டாரு முலைச்சியர்கண் மாலைகொளாத் தோளியர்கண் மைதோய்ந் தோங்கு, கட்டாரிக் கண்ணியர்கள் கவடியர்க ளென்ற ணிரு கண்காணத்தான், விட்டார்க ளாதினமு மிகவருத்து மதனனம் பின் மெலிந்தே ளுள்வாய், தொட்டார்வை வேலெறிந்து சூரைவெ ன்று பரங்கிரியிற் றுலங்கு வேளே. (௨௬௧)

*அளிகிண்டு மலரினிடை குடிகொண்ட திருமகளை
யகமொன்ற மிலைகின்ற வரிபுகழு மருகா
துளிகொண்ட மதுவுலவு தொடைகொண்ட புயசயில
துதியன்பர் சொலுமுன்பு துயரகல விடுவோய்
களிகொண்ட வவுணரெனு மிடியும்பர் பொருமுனம
கலவுந்தி மகனம்பொன் முடியருளு மயிலா
வெளிகொண்ட விடைவளியி னிசைகொஞ்சு மொழிகுழையின்
மிசைகுன்றை தனிலென்று மிளிர்குமர வருளே. (௨௬௨)

*பாதகத்தி தூதுசொன்னாள் பரிந்துவரக் காணேனென் பால் வின் மாரன், வாதியற்றிக் கணைவிடுக்க வாடுவனோ கூடியணை மயி லோன் முன்னின்,நீதகத்தி யஞ்சொலிநீ யிங்கழைக்கின் வங்கணத்தி லென்போ னின்போல், மாதிகத்திற் சுகம்பெறுவர் மற்றெவரங் குற்றிதய மகிழ்ந்து மானே. (௨௬௩.)

*வட்டமதி யிலங்குமுக வனிதைமதி திருத்தவெண்ணி வணங்கி மெத்தக், கிட்டவட ருறவினர்சொற் கேளாது தாழாது கிளர்த்து மையற், பட்டணிசேர் பட்டணியாள் பைங்குழலின் மாலையிடாள் படர்புன் மாலை, விட்டமத னெட்டுகணை தொட்டதனு மெலிவளி னி மேவு வேளே. (௨௬௪)

*கடைந்தசிறு சிமிழ்முலைசெங் கைகமல மைகலந்த கள்த்தன் சென்னி, அடைந்தமதி யிருந்தநுத லளகமுகில் களபமொளி ராகந் தந்தில், உடைந்தவொரு விழைமருங்கு லுடையவம்பொ னுடை யொதுங்கி யுகந்து மேவாய், இடைந்தவுணர் புறந்தரவே லெறிந்தமர ர்ப் புரந்தருளு மெம்பி ரானே. (௨௬௫)

*கலசமுலை பசலையுற மணமிளக மதனன்விடு கணையால் வாடிப் பலசகுன மிருகணியர் பால்விரும்பி மாறிரையாப் படருங் காமச்,

சலதியிடை யாழ்ந்தனணின் றடைப்புயத்தா ரம்பியென்பாற் றந்தாள் வேடர், குலதிலகி கிளைபயில்வண் குயின்மொழிவா ரயில்விழிமான் குலவு வேளே. (உ௬௬)

*சேலிருந்த விழியணங்கு தேங்கிமயல் வீங்கமதன் சீறுந் தென்றற், காலிருந்து கணையுருக்கக் கலங்கிமதி மயங்கிமிகக் கருதி மஞ்சம், மேலிருந்து கனியிதழை விரும்பிமுலை யரும்பழுந்த மிலைத்துக் கட்டி, மாலிருந்த வுளத்தியுனை மருவவந்தா ளருள்புரிந்தாள் வடிவே லோனே. (உ௬எ)

*மின்னனையார் கூந்தலுக்கா மிகவூட்டு மகிற்புகைவிண் மேற்போ யப்பக், கன்னனிரைத் தோகைதடம் புரிந்தெழுந்தக் கறைதுடைப்பக் கண்ண னெஞ்சின், மன்னுமின்னுண் மனைகடொறும் வளாவளர் சிவஞான மாநா டோங்கப், பன்னியர்க ளிருவரொடும் பரவு குரு பரகதியுன் பாத மாதோ. (உ௬அ)

*நிலவுகதி ரெறியவளி நிறையமரை விரியும்வரை நின்றோண் மேவிக், கலவிசெய மனமுளதென் கருத்தவர்பா லொருத்திசொலக் காணே னம்மா, இலவுபடு கனலெனவிங் கெதிர்த்துமதன் வருத்துமுன மிசைப்பா யென்னைப், பலவுலவு பரங்கிரிவாழ் பண்ணவயா னண்ணினனீ பரிந்தாள் வாயே. (உ௬௯)

*பான்முறுகு மொழிகுழறிப் பணிசிதறிப் பணைமுலைமேற் பசலை யேறி,வேன்முருகன் பவனிகண்டு விழிசெருகி மதிமறுகி விம்முற் றேங்க, நான்முதுநாட் செய்தவத்தி னண்ணுமிவண் மையறனை நாடி நாடித், தான்முளரி நீரெனநெஞ் சங்கலங்கு தங்கணைந்து தார்தா மானே. (உஎ0)

* பம்பரந்திண் கும்பமுலை பம்பவரி வம்பாரம் பகைத்துக் காய, அம்ப ரஞ்செங் கயல்விழிகள் செருகவிடை யம்பரஞ்சுற் றம்ப ரஞ்சோர்ந், தும்பரம்பொன் முடியழுத்த வடியளித்த தேவமைய லுற்றுள் சேர்முன், வம்பரந்தண் டடல்சிதற வானவர்கோன் முடியருளும் வடிவே லோனே. (உஎக)

* சீவியே யெண்ணெ யிட்டுத் தினமய லுறையு மாந்தர்
ஆவியோ டளிமு டிக்கு மளகத்தா ரிவர்க்கோ ராது
தேவியோர் பாக னெற்றித் திருவிழி சிறப்புற் றோங்க
மேவியோர் வேலைத் தாங்கும் வேள்பதந் துதிப்பாய் நெஞ்சே (உஎஉ)

* காமநோய் வருத்த நொந்து கனமுலை மலைமீ தேறித்
தாமத னாகி யல்குற் றடக்குழி வீழ்ந்து லைந்த
பாமர னான வெற்குன் பழவடி யருள்வாய் கொன்றை
மாமலர்ச் சடையார் சிந்தை மகிழ்வுறு குமர வேளே. (உஎ௩)

* சந்தனந்தி மிர்ந்தகொங்கை தன்னை யெண்ணி லோமலர்ப்
பந்தனந்தி னம்பணிந்து பயிலு மென்ன டைச்சிகோச்
சிந்தனந்த றணிலுமாது சிந்தை மேவு சிந்தையாய்
வந்தனம் புரிந்திரங்கும் வந்த ருள்செய் கந்தனே. (உஎச)

* தடப்பனைசூழ் தரப்பொலிவு நிலைத்தசிவ ஞானபுரந் தழைக் குந் தேவைத்,தடப்பனைய விடுத்தருளை யடுத்தவர்பாற் கொடுத்தரு ளுந் தளிர்வே லோனைக், கடப்பனைய விழிக்குறவர் குலக்கொடிதோ ண் மணக்கணிவேய் கணவ னைப்பூங், கடப்பனைமா வடர்த்தவனைத் தடுத்தெமையாட் கொளும்பொருளைக் கருது வாமே. (உஎ௫)

* பச்சைவயல் பக்கமுறப் பரவுசிவ ஞானபுரம் படர்வே லோ ன்றாள்,இச்சைவயல் வினைநீககு மிருள்போக்கும் பகைதாக்கு மிதயந் தேக்கும், கச்சைவயக் கிப்படர்ந்து கண்கறுத்த கொங்கைவள்ளி கணவன் றோளில், செச்சைவயங் கறுமுகவன் றிருமுருக னொருமு தல்வன் றிருந்தென் னெஞ்சே. (உஎசா)

* கஞ்சுகத்தின் முடிப்பவிழ விடைபிதுங்கி யிடைதுவளக் கன த்த கொங்கை, நஞ்சுகலங் கலந்தனமை நயனவுரை யஞ்சுகமே னுடி வேளம், பஞ்சுகவங் கனையருத்து மனம்வெறுத்து நினைநினைத்து ளகலா மோக,நெஞ்சுகதித் தனளளைவாய் மஞ்சுகந்தான் முடியருளு நீள்வே லோனே. (உஎஎ)

அகில மாமெ னகத்து ளோமு னடர்ந்த மாத ரிருட்டனை
இகல்செய் தோட விடுக்கு மாதவ விமைய வர்க்கிறை யானவ
பகலு மெய்த்துயி றணிலு நின்னிரு பாத பங்கய மேதுதி
புகலு மிச்சிறி யேன்ம னத்துறை போத னேபிர சாதனே. (உஎஅ)

* பொருதி டந்தரு தானவர் போர்வெலக்
கருதி டந்தவ லாரியைக் காத்தவா
எருதி டந்தனி யேறிமைந் தாவந்தாள்
மருதி டந்தவன் வாழ்த்துங் குகேசனே. (உஎகூ)

* வண்டு விண்டு விழிபுய மைக்குழல்
செண்டு கண்டு முலைமொழிச் செல்வியர்க்

கண்டு தொண்டு செயாமதி காட்டுவாய்
பண்டு விண்டுளங் கும்பர்க் கதிபனே. (௨௪0)

* தாய்க்கு வந்திடு மின்பவ டந்திடும்
சேய்க்கு முண்டிது சேகர நெஞ்சமே
காய்க்கு மாவடு வேலவர்க் கிற்றைநாள்
வாய்க்கு மாமண நின்னைப் புரக்குமால். (௨௪௧)

* நச்சை யட்டு நயனத்தொண் டாக்குவார்
கச்சை முட்டு மிளமுலைக் கன்னியர்
இச்சை யிட்டு னிணையடி போற்றினேன்
செச்சை யிட்டுத் திகழ்புயத் தெய்வமே. (௨௪௨)

* சேலை நீக்கித் திரண்முலை காட்டுதீம்
பாலை நீக்கிய வின்மொழிப் பாவையர்
மாலை நீக்கி மலரடி தந்தருள்
வேலை நீக்கிய வேலணி பாணியே. (௨௪௩)

*மாது ளம்பம் பரந்தந் தனம்பொரு
மாது ளம்பம் பரந்தந்த முற்றொருத்த
தேது ளம்பம் பரங்கண் ணிடைபொருந்
தேது ளம்பம் பரந்தன்ன வாரனே. (௨௪௪)

* தனதடங்கண் மிகவடர்ந்
தனதடங்கண் வாள்கொளத்
தனதடங்க ணார்மறு
தனதடங்கண் வேளையே. (௨௪௫)

* இடைகொடி பிடிதுடி யிழைமின லொளிபடு
மிலையயில் கணைவடிவாள்
இசையளி யலைமரை யிதழில கியவிழி
யிருசெவி வளைமலரேய்
சடைபட மொடுவிட மிடுபணி மணியணி
தனமுலை முகிழ்மலையே
தளிரிதழ் கொவைநுதல் சிலைமதி மொழிநறை
தருதரு வளர்குயிலே
நடையட விடுபிடி யனமிவை வளையின
நனிதரு மணிநகையே
நலகுல மயிலிவள் கலவிசெய் விழைவொடு
நணுகின ளருள்புரிவாய்
அடர்கட லுடைபட லெனவன லனசின
வவுணர்கள் சிதறிடவே
அடுகடு விடுபடை தொடுதிட தடபுய
வறுமுக குருபரனே. (௨௪௬)

* கன்னியர்கண் மையல்வலை கட்டுண்டு மைதோய்ந்த
கட்கட்க வெட்டுண்டுசெங்
கனிவாயி னறையுண்டு வெறியேறி யலமந்து
கருகிமன முழலவிட்டு
நின்னைமற வாவறிவு தன்னையுங் கொள்ளைகொள
நெடுமூச் செறிந்தயர்ந்து
நீணிலத் தவரிகழ நாணமுற் றுடன்மெலிய
நிலைவாத பித்தமையம்
தன்னிலொரு பிசகுவர மன்னுபல வுடதஞ்செய்
தக்கவா ரியர்நெருங்கிச்
சாடைசில பேசிநிதி யாடைசில கைக்கொளத்
தருணமிது வென்றுதெற்கின்
மன்னுமன் னவன்வந்து பின்னுமோ ரன்னதா
மைந்தன்யான் வாடுவேனோ
மகராசன் முடியருள நகராசன் மகளருளு
மகவான வடிவேலனே. (௨அஎ)

* புவிமீது நசையான நிதியாசை கொண்டுபலர்
போதனைக் குட்பட்டுநற்
போதமு மிழந்துமத னார்சேனை யெனும்வெய்ய
பூவையர்செய் போரிலஞ்சித்
தவியாவு மன்றுமதி யலைவாய்த் துரும்பெனச்
சஞ்சலித் தடலின்றியே
தலைமயிர் நரைத்துடல மிகமெலிந் தங்கையிற்
றடிகொண்டு தள்ளாடிமுன்
கவியா நடந்திளைஞர் நகையாக் குவித்திடக்
கண்கள்வெண் டிங்களென்னக்
கண்டவர்க ளிகழுமுன் றண்டைபல கொண்டசிறு
கழலிணைக் கன்புசெய்யச்
செவிதோய் விழிச்சிறுமி நவிமா மகட்கிறைவ
திகழ்கருணை யினிதருளுவாய்
சேவைப் பிடித்தகொடி யார்நற் றவத்தில்வரு
சேவற் கொடிக்குமரனே. (௨அஅ)

* குளிர்கொண்ட தளிர்மண்டு பொழிலண்டு சிறைவண்டு
குதிகொண்ட நறவுண்டுமேற்
குலவியிசை பயிலவள மிகுமுருகவை நகரில்வரு
குமரவுய ரமரரெண்ணக்
கனிகொண்ட வடியராங் குவளைக்கு மேவாத
கசடராந் தாமரைக்கும்

ககனத்தி னிடைதத்து மதியொத்த வயில்வைத்த
கர்த்தபணி முத்தரத்த
ஒளிகொண்ட வுடைசுற்று மிடையுடைய ரிடையிடைந்
துழலாத கழலாதசீர்
உலவுலக மதினினது பதமலர்க் கன்புசெய
வுற்றருள்செய் குற்றமற்ற
வளர்கொண்டல் பனியொன்று மலைதந்த மகடந்த
மைந்தமிகு மைந்தமைந்த
வாரண முகன்கரிய வாரண னகங்குலைய
வாரண முகந்தகுகனே. (உ௮௯)

* நீயேயெ லாவுயிரு நீயேயெ லாவியலு
நீயேயெ வைக்குமேலாய்
நின்றபரி பூரணா நந்தபர நிர்மல
நிராமய நிரஞ்சனமறைத்
தாயே நினைக்கருதி நாயே னினிச்சிறிது
சாற்றுகவி யேற்றுமிந்தத்
தருணமதி லெனதுவினை யிருணைவிரி கிரணமணி
சார்ந்தமுடி வேந்தர்போற்ற
வாயே னெனக்கதறி மாவான சூரிரிய
மாதிர மரிக்குரிசில்பாய்
மதமாறு முகன்வென்று மதமாறு தருசமய
மதமாறு முகமானவா *
பாயே விலங்கைகொளு மறவர்தரு சிறுமிவிண்
பாவையிவர் முகமரைக்குப்
பரிதியென வருமுருக குமரகுரு பரநினது
பதமலரி னருள்புரிகவே. (உ௯0)

* தெங்குபூ கங்கதலி சங்குதா மரைகுவளை
சினைவரால் வாளையாமை
சேருகா வயன்முகவை யம்பதியி னரசியற்
செயராஜ ராஜேஸ்வரி
சிங்கவா கனிகருணை பொங்குவா ரிதிகவுரி
திரிபுரை வராகிஷீரி
செந்திருமி னுந்தமிழ்மி னுந்துதித் தடிபரவு
தேவியுமை தந்தபாலா
கொங்கைமலை யங்கைமலர் தங்குமதி மாமுகக்
கோதைகுற மின்னையொருபால்
கொண்டுமக வான்மகளை யொருபுற மிருத்தியிக்
குவலயமெ லாமடன்மிகப்

பொங்குமத மாமுகனை யுஞ்சூர னையும்வென் று
　　புநிதிக முன்பருள் ளம
பூணுபொரு ளேயெனமதி காணுதெரு ளேயயிற்
　　புரவல வெமக்கருள்வையே. (௨௯௧)

*மகபதி துதித்தடி வணங்குமிம யக்கனி
　　மனங்கனிய வந்தகனியே
வள்ளிகுஞ் சரிமருவு வள்ளலே நின்னவையின்
　　மைந்தன்விண் ணப்பமதுகேள்
அகமெனு மிலாயமிசை வளருமென் மனப்பரி
　　அகிர்த்யமதை யென்சொல்லுவேன்
ஆணையி லடங்காதி வண்டமுழு துமபுடைத்
　　தடல்செய்ய மீறுதந்தோ
தகுதியுள வறிவெனுங் கசைகொடு நடாத்தவொரு
　　தக்கவனு நீயென்றெணித்
தகைமையுள வப்பரியை நிற்குரித் தாக்கினன்
　　சாமியதின் மேலேறியும்
மொகுமொகென விரியுமண மிலகுபத வுணவிந்த
　　முளரியிற் பத்திபென்ற
முறுக்கிய கயிற்றினிடை பூட்டியுங் கொள்கவருண்
　　மூவர்புக ழாதிமுதலே. (௨௯௨)

* பரிதிசத கோடியென வொளிர்மகுட மாறினைப
　　பன்னிரு புயத்தின்வடிவைப
பாதபங் கயமிசைக கிண்ணெனு மொலிச்சிலம்
　　பபயமென் றிடவங்ஙனே
கருதிமன முருகிவிழி செருகிமொழி குழறியடி
　　கவருமடி யவர்களுளமுங்
கண்ணயிற் கிண்ணமுலை விண்ணவர்கள் பெண்ணரசி
　　கண்ணுநித நண்ணுபொருளைச்
செருவிலமர் தருமசுரர் குருதிபெரு கச்சிரஞ்
　　சிந்தமேல் விட்டுறைத்துத்
தெந்தின வெனக்கொட்டி நின்றலகை மண்டுபசி
　　தீரவடல் செய்தவேளைத்
திருமுகவை நகர்மேவு சிவஞான புரமருவு
　　திவ்யதே ஜோமயத்தைத
தேடிமன நாடிமலர் சூடியருள் பாடிநிலை
　　நாடியறி வாலறிகுவாம். (௨௯௩)

* கனமருவு குழல்வள்ளி தெய்வயா னைக்குங்
　　கருத்துக் கிசைந்தகணவா

கனமுக டணவுமுடி திகழ்சோலை முகவையிற்
கருதரிய மறைமுதல்வனே
வனமிலகு பதயுகையி ராஜரா ஜேஸ்வரி
வராகிதரு குமரகுருவே
மண்டலமு மெண்டிசையும் விண்டுபுகழ் கொண்டுதுதி
கொண்டதொண் டர்க்கருளியும்
சினமொடெதி ரசுரர்முடி புவியிடை புரண்டிடச்
செய்யுமடல் வேற்கையனே
தேனேயெ னவியே செண்டுமுலை மாதரைச்
சேர்ந்துலைந் துணைமறந்த
மனமெனுந் துள்ளொருதை யறிவுக் கயிற்றால்
வயக்குநற் றிடமுதவுவாய்
மாமயிலி லேறிவரு சேமவே ளுதனே
மாறுத கருணையுற்றே. (௨௯௪)

தந்திமுக னுந்திகிரி யுந்துகர னும்மறைத்
தலைவனுயர் மாகவேந்தும்
தன்னிகரி லாததவ மன்னுமுனி வோருமதி
தாவெழு பரிக்கிறைவனும்
முந்துகண நாதரி லுயர்ந்தவன் கைப்பிரம்
புந்துநந் தியும்யாவரும்
மூதாவெ னுதாந னீதாவெ னத்தொழுது
முகமலர்ந் தடியுன்னவும்
வந்துசிறு தென்றலிட மங்களா வணமெலாம்
வருணனன் னீர்தெளிப்ப
வண்டுவிழி கொண்டுலவு செண்டுமுலை மின்னார்கண்
மாமயிலை யொத்துலாவக்
கொந்துலா விமயமகள் சிந்தைபோற் றிருமணங்
கொண்டுகூ ரகமடங்கக்
குத்தியடி யார்கடம கத்துறை குழந்தைகைக்
கொண்டான் புராரியின்றே. (௨௯௫)

*எந்தையிரு பாதபங் கயமதனை யென்னுளமு
மெங்கணும் விடேனென்குதே
எம்மைமந்து பூதங்க ளொன்று யுறைந்தவனை
யேபத்தி செய்தாடுதே
முந்தைவிதி யில்வாழ்க்கை யிற்புக விடுத்தமையு
மூடாது கழுமாறுதே
மூவுலகு ளோர்பணிசெய் தேவகுரு நாதனை மு
முதல்வர்முத றந்தபொருளை
ஐந்தொன்றை யணைதிதியி லன்புற்று வந்துதொழு
யான்செய்த தவமறிகிலேன்
ஆயினு முயிர்க்கனைய தாய்வளரு வோனென
வகத்திடை துதித்துநின்று
பைந்தமிழி னவனருட் பெருமையாற் பாக்கள்சில
பகரலுற் றேனங்ஙனே
பாதமலர் தந்துமுனை யாளுவ னெனக்கவுரி
பாலனருள் செய்தானரோ. (உ௬௪)

*கீதமிய லளிவரப் போதுவிரி பொழிலெழிற்
கிள்ளையொடு வள்ளைசுற்றுங்
கிளைவந்து லவுமந்தி மதியந்த னைவளைந்த
கிளைமந்தி யளையென்றெனுச்
சீதநறை வழியவிறை வற்றடி வழுக்கிடச்
செய்யபூந் துகள்கையப்பிச்
சென்றேற வளமைமிகு தொன்றேர கமலையுறை
தென்றேறு மினன்மருங்குற்
சூதவள விளமுலையின் மாதுவளி மகமன்மகள்
தோட்கினிய வேட்கைபூண்ட
துறையுன்ற னிருசெம்பொ னடியென்றன் மனமொன்று
சுகமின்று தரவென்றிசேர்
மாதினொடு வாதுநட மாடுசிவ னேடுகுரு
மாமயிலின் மீதுவருவாய்
மலைதந்த வுமைசெங்க மலைசெங்கை தொழுமுந்த
மலைபுந்தி வருகர்த்தனே. (உ௬௫)

* தடக்குவ டெடற்றுகள் படத்திரை கெடப்பணி
சதக்கிரு தனிப்பொன்மகுடந்
தரித்திட வுரத்தொடு தடக்கையி னெடுத்தவெஞ்
சமரவேற் குமரதமியேன்
மடக்குபல் வினைக்கடு மிகுத்தெனை யடுத்துயிர்
மடுத்திட மருட்டுமுனமே
மணத்திடு தினைப்புனம் வளர்த்திடு குறத்தியை
மணத்தவ கணத்தில்வருவாய்
படக்குல முடித்திர ளுடைப்பணி யுடற்பட
படக்கவி னுடுக்களுதிரப்
பணிக்கதிர் பணிப்பகை நடத்தும் ரதத்தொடு
பசைப்புற வளைக்குலமுலாம்
கடற்புன லுடைத்தெழ மகத்திடை யுதித்தத
கரைப்பரி நடத்துகுமரா
கந்தரஞ் சடைகொண்ட சுந்தரன் கடுவுண்ட
கந்தரன் றருகந்தனே. (உ௬௪)

நடுவெழுத்தலங்காரம்.

* பங்கய விழித்துணைமி னேநினது கணவன்யார்
பகரெனப் பகரமானைப்
பார்த்துமோர் வாய்மைக டினம்பத மனஞ்சங்கு
பன்முனிவர் பயிலும்வேள்வி
செங்கண்மா லறிதுயிற் கிடமான வாழிமலை
சிறையளிக ளூடுமலரைச்
சேர்ந்தகா வரியென்ன விடையிலா ளிடையிலுள்
ளிடையாது செப்பியெண்ணிக்
கொங்கைவிம் மியதுடல் மிகமெலிந் ததுவுணவு
கொள்ளாது சாந்துமாலை
கூந்தற் கிடாதுவளை யணியாது துயிலாது
கூடமன முற்றவேளை
இங்கித மறிந்தநிற் கியானுரைப் பதுமியா
திணங்கியவள் வளவில்வருவாய்

ஏதமென் றதடங்க மோதிநின் றதிடங்கொ
டேதுலங் கியவேலனே. (உ௬௬)

*யாதுசொல்வாய் நின்கணவன் பெயரென்ன வஞ்சியஞ்சி யம்மா கைம்மா,மோதுகங்குல் மாரிமன்ற றனுசுசிறை யங்கியிதை முற்று மோர்ந்து, மீதுநடுக் காணிலென துயிர்க்கினிய துணைத்தலைவன் மேவுஞ் செஞ்சொற், போதுலவும் புயக்குரிசில் சிவஞான புரத்தில் வரும் பொருளா மாதோ. (௩௦௦)

*மலைமதலை கிழவனுதல் விழிவாயு தித்துமறை
மரைமதலை மதிகனிய மகிழ்வா யுரைத்துமலை [வே
வடியவரை யிடியவொரு விளையாட லுற்றமரர் துயரோட
சிலைவளைகு லிசமிகுவை வடிவாள் பெருத்ததடி
சிலசிலகை யுறவமர்செய் களமே யடுத்தவுணர் [திராகவே
திறமினிது சொலிவலியி னிறைசூர் துணைப்படையொ டெ
இலையயிலி னருளினொடு திகழ்பார்வை வைத்தவர்க
ளிருபிளவு படவுமொரு நொடியா னடத்திமக
மிலகுமவன் முடியருளி யடியா ரகத்தினிதம் வளர்சோதியே
கலைசகல முலவுதிரு முகமா றுடைக்கடவுள்
ககனமுடி தடவுதிட முயர்தோகை பெற்றகழல்
கலகலென விசயநட மிடவே வரக்குறமின் மணவாளனே.()

இராஜராஜேஸ்வரிபேரிற் பாடியன.

*கண்டுமொழி கெண்டைவிழி செண்டுமுலை மண்டுபொழில்
கண்டண்ட ரிச்சொண்டுகிர்
ககனத்தி னடலுற்று மழைவைத்த முகிலொத்த
கறைமொய்த்த குழல்சத்தமேய்
தண்டலை வரும்பிரம மொன்றுமொரு துண்டுநுதல்
தளிர்செவிதழ் குமிழ்நாசியே
தந்தினிடை தந்திநடை தங்குகுற மங்கையைத்
தழுவுபன் னிருபுயத்தன்
விண்டன நடந்தவன் மகந்தனை யடைந்தவன்
வியந்துபணி கொண்டதாளான்

மீதுகவி யோதிவினை மோதியெதிர் வாதோது
வீணர்மதி வீறடக்கும்
திண்டிறற் சத்தியணி சத்திமக னித்தனைச்
சித்தம்வைத் திடுசத்தியன்
சீர்பெருகு மாரிகவு மாரிசுகு மாரிநின்
சேவைபெற் றேனருள்வையே. (௩0௨)

*தேவிசிவ சத்திமக மாயிபரை நித்யகலி
யாணிமுகி லைப்பொருவு வேணியிமையோர்கள்
தாவியிரு பொற்கமல மேவியவ ருக்குவரு
நோயெனவு தித்தமயி டாசுரனையோதப்
பூவினு மினித்தகர மீதுலவு சத்திதொடு
போதவன் முடித்தலைவிண் மீதிடையுலாவ
மாவடரு முத்தையனை மானமுனி வர்க்கருள்வ
ராகியிரு பத்மபத சேவைதருவாயே. (௩0௩)

*கங்கைமதி யறுகரவு தும்பையணி வேணிமைக்
காலகண் டர்க்கினியதாய்க்
கருதரிய மறைமுதல் வழுத்திமக வான்முடிக்
கரசுநிலை நாட்டியசுரர்
தங்கள்குடி மங்கவிடு துங்கவே லன்குகன்
சததளாம் புயபதத்தன்
சந்தன மிலைந்ததன வஞ்சியிடை மிஞ்சுகன
மஞ்சுகுழல் வள்ளிமானும்
மங்கள மிலங்குபிடி தங்குநடை விண்டுமினு
மருவுபன் னிருபுயத்தன்
மாமயிலின் மீதுலவு சிவசுப்ர மண்யத்தை
மைந்தனென வன்றுதவிய
மங்கையே நின்னருட் பெருமையைத் தமியேன்
வழுத்துதற் கெளிதாகுமோ
வழியடிய னேற்கருடி ராசரா சேஸ்வரி
வராகிகௌ மாரியுமையே. (௩0௪)

*சீர்மேவு தென்முகவை யம்பதிக் குள்ளே
செழிக்குமர சர்கடுதிப்பச்
சிந்தையிலு வந்தவர் நினைந்தவை யெலாந்தருந்
தேவிமகா மாயியுமையே
பார்மீதி லன்பர்க ணிதந்துதிக் கத்துணைப்
பாதபங் கயமுதவியும்
பண்ணமுத முண்ணுமொற் காதமுகி யேயினது
பத்தியுங் கருணைபூண்ட
ஏர்மேவு வள்ளிகுஞ் சரிநாத னைமுமும்
என்றைக்கு மென்னுள்ளம்விட்
டேகாது கொடுவினையில் வேகாது நல்லறிவை
யெம்மையிம் மையிலருளுவாய்
கார்மேவு மேனியன் கஞ்சவயன் முதலான
கடவுளர்கண் மலர்பெய்திடக்
காசினி யெலாம்புக ழிராசரா சேசுவரி
காதலுறு கருணைவாழ்வே. (௩௦௫)

*ஆதிமறை யோனுமக வானுமுனி வோரும்வெவ்
வசுரர்கள் வருத்தமுடிகள்
அடிமீ தணிந்துரம் படிமீ தணிந்துதுய
ரடியோடு போகவுன்னிச்
சோதிவடி வாயிலகு சேமவே னுதனே
சுருதிமுத லேயருளெனத்
தோத்திரஞ் செய்யச் செழுங்கருணை கொண்டுவெஞ்
சூருட றுணித்தகுகனைக்
கோதிலடி யவரிதய மாதனம தாய்வளர்
குழந்தையைப் பெற்றபேறே
கொற்றவர்க் கினியகுல தெய்வமே யெனதுபணி
கொண்டுநின தருள்புரிகுவாய்
பாதிப் பிறைச்சடைச் சோதிப் பொருப்பினொரு
பாகம் படர்ந்தகொடியே
பராசரா தியர்பணி யிராசரா சேஸ்வரி
பராசத்தி சிவசத்தியே. (௩௦௬)

*தென்னரி லுயர்ந்துலகு செங்கோல் செலுத்துமிச்
சேதுபதி பணிபுரியதத்
தேவிமக மாயிசிவ காமிசிவ சங்கரித்ரி
யம்பகி நிரந்தரிவிஞேரர்
சென்னிமுடி மேவித் தழும்புற்ற சிற்றடிகள்
சேவிக்கு மன்பருள்ளம்
சேர்ந்தவர்கள் வினைதுன்பம் யாவையுங் கேடுறச்
செய்தவரை யங்கண்ணருள்
துன்னவவர் சொன்னதமிழ் கன்னலென வுன்னியே
தொல்லுல கெலாம்புரக்கும்
தோகைமயில் வாகனனை யாகமகிழ் வாகவரு
டோகையே சுருதிவடிவே
மன்னுபொரு ளேகருணை வாரியே நின்புகழ்
வழுத்துதற் கெளிதாகுமோ
மயிடசங் காரிசிங் காரியோங் காரிநித
மகிழ்வாக வருள்புரிகவே. (௩0௭)

*செங்கமலை நாமகள் சிறந்தமால் வேதனுந்
தேவாதி யர்யாவரும்
தெண்டனிட விண்டுபத தொண்டுபுரி தொண்டருஞ்
சேர்ந்திட வுதிர்ந்தமணிகள்
எங்கணு நிறைந்திட விளங்கதிர்கள் வந்தடி
யிறைஞ்சல்பொரு நின்கொலுவினின்
றேத்திப் பணிந்திடுமெ மிருவர்கண் மனத்தினிடை
யெண்ணிய வெலாந்தந்தருள்
எங்கள்குல தெய்வமே யென்னிதய பங்கய
மிலங்குதே னேசோதியே
எழின்மிக்க வள்ளிகுஞ் சரிநாத னைப்பயந்
தெவ்வுலகு மரசடற்செய்
யுங்கய முகாசுரனை யுஞ்சிங்க வானனனை
யுஞ்சூர னையும்வென் றுபண்

டும்பர்குடி காத்திடும்மி ராசரா சேஸ்வரி
யுமாதேவி யருள்புரிகவே. (௩௦௮)

ஆகசெய்யுள்-௲௭௨௨.

---

முத்துராமலிங்க ஸேதுபதியவர்கள் வினக்களும்
துவாத்ரிம் சதாவதாநம் சரவணப்பெருமாட்கவிராயர் விடைகளும்.

*பூவயனுற் பூவிலுண்டாம் புன்மரங்கள் வேறுநிறம்
மேவாதொன் றுபதென்ன விள்ளுவீர்—தாவசர
மெய்யறிவொன் றுனமையால் வேறுநிற மினறுசரம்
ஐயறிவாற் பன்னிறம தாம். (௧)

*நஞ்சுடைய கண்டத்து நாதன் முடிமீது
குஞ்சு மதியணிந்து கொள்வானேன்—அஞ்சாமல்
மூத்தபிள்ளை யன்று முறித்தகொம்பைக் கேட்குமென்று
சேர்த்துவைத்துக் கொண்ட திறம. (௨)

*இருப்புக் கிணைமுலையென் றெண்ணுமன் மாரன்
அருப்புக் கணைதொடுக்க லாமா—நெருப்பனைய
வன்மொழிகரு மஞ்சார் கயவர் மகாகனத்தோர்
இன்மொழிக்கு மஞ்சலுண்மைத் தே. (௩)

*பாரிலின்ப துன்பம் படர விதித்தானே
வாரிசத்தான் யாதுகவி வல்லவா—வோர்தொழுவில்
பல்லாவுட் கன்றுதன்றாய் பார்த்தணுகல் போற்புவியில்
எல்லாருஞ் செய்வினையா லே. (௪)

*வரையழுத்துஞ் சேடனொடு மாருதம்போர் செய்தால்
தரையைச் சுமந்தவர்யார் சாற்றாய்—விரைமலர்த்தார்
ஏந்து புயத்துலக மேந்துநின்போ னின்குலத்து
வேந்தர்சும வாது விடார். (௫)

*விதுகண்டு கூம்பாத மென்கமல முண்டோ
இதுகண்டு சொல்கவிதைக் கேந்தால்—முதிருமெழில்
மாதர் வதனமதி கண்டு மலர்பருவப்
போதிரண்டுண் டாகம புடைத்து. (௬)

* தென்னார் கபோலச் சிவப்பாடி கண்டுகையால்
மின்னார்கா ணாதழித்தான் மிஞ்சியதென்—நன்னுதல்வீழ்
சிந்தூரங் காந்தன்வாய்ச் செந்தம்ப லென்றழிந்நாள்
அந்தோகைச் செம்மைமிக்க தால். (௭)

* சேயாங் குகற்பணியுஞ் செந்தமிழோய் தாளத்தை
ஓயா தடிப்பதெவ னோதுவாய்—வாய்பாடத்
தானாட்டி வைக்குமின்னார் தன்முலைக்கு நீதிகெரன்
றேனுஞ்சொல் வாயென் றெடுத்து. (௮)

* துஞ்சுவரை மூட்டை துளைக்கச் சுகங்கொடுக்கும்
பஞ்சணையை மோதுவதென் பாவலவா—வஞ்சகரைச்
சேர்ந்தவரு மன்னவர்தந் தெண்டனைக்கு ளாவதுபோல்
சார்ந்ததனால் வந்தவினை தான். (௯)

* வாய்ந்தசிவ ஞானபுரி வாழ்முருகன் சந்நிதியில்
சேர்ந்தமனங் கன்னை திரும்பாதென்—ஆய்ந்தநால்
வேதமுங்கா ணாப்பதத்தை விட்டுவரு மோநறுந்தேன்
போதகனு மோவறுகாற் புள். (௧0)

* கூனல்வா யம்பிறைபோற் கொண்டவெயிற் றேறுமுகில்
ஏனவா யானதென்ன வெண்டமிழோய்—ஆனதனால்
அன்றேமண் கிண்டியது வன்றியதை வாரியுண்ட
தென்றேது மிவ்வுலகை யே. (௧௧)

* வாய்சிவந்து மெய்பசந்த வாலைமண வாளனொரு
வேய்பெறவந் தானதென்ன விள்ளுவாய்—தாயரெலாம்
அன்னைபிதா வில்லா வநாதியென்ப ரப்பழிச்சொல்
தன்னைமரு வாதிருக்கத் தான். (௧௨)

* பொறியுலவு பாலவிழிப் புத்தே ளொருநாள்
சிறுவனைத்தின் றானதென்ன செப்பீர்—செறியலைவாய்
நஞ்சுண்டு பித்தேறி நாடுமன்னந் தானறியா
தஞ்சுதலை யாகிலென்செய் வான். (௧௩)

* போத மெவர்க்கும் புகன்ஞான சோதியென்போன்
மாதுமயல் கொண்டுடலம் வாடியதென்—ஆதரவாம்

தானசைந்தல் லாலணுவுஞ் சற்றசையா போகமுயிர்
ஆனவைக்கெ லாம்விளைவிப் பான். (கச)

*வீடேற வுன்னுமன்பர் மெய்யில்வள ரீசனொரு
மாடேறு நீதி வழுத்துவீர்—நாடோன்றென்
கண்மலரைத் தாங்குமிரு கான்மலரைத் தாங்குவனென்
றெண்ணிமால் வேண்டுகையா லே. (கரு)

* விண்மதிக்கு மேனி மெலிவு கறைவளர்ச்சி
நண்ணலுடன் பாம்படுத்த நாட்டமெவன்—எண்ணு
தடாதனசெய் தாரெவரா னாலுமத னாலே
படாதன படாரோ பரிந்து. (கசு)

* தேங்கனிதாம் பூலந் தினம்படைப்பார் தெய்வத்திற்
காங்கதனை யுண்டகுறி யாதுசொல்வீர்—ஓங்குதெய்வ
மெய்யுருக்கண் டாரதுண்ட மென்குறியுங் காண்பதன்றி
வையமதில் யார்காண்ப வர் (கஎ)

* வீடடுத்தோர்க் கீயும் விமல னரன்றொருநாள்
ஓடெடுத்துப் பிச்சையெடுத் துண்டதென்னோ—வீடின்முனி
பத்தினிமார் கற்பழித்த பாவமிழிந் தோருயர்ந்தோர்
எத்தகைய ரேனும்விடா தே. (கஅ)

* இருசுடரொ ருங்கெதிர்க்கி னெய்துமிரு ளென்றே
மருவுமுறை நிச்சயமா மன்றோ—இரவியுடல்
தன்னையராத் தீண்டுஞ் சமயத் திருண்மிகுக்கும்
அன்னதறி யாருலகில் யார். (கசு)

* தன்னைத் துதிக்குந் தவத்தினர்சா பத்தாலோர்
பின்னமுற்ற லீசனைப் பேசுவீர்—பன்னுளா
வில்விபுறங் காண விரும்புமுமை யால்விளைந்த
வில்லங்கம் பட்டதென்சொல் வேன். (உ0)

* மாவலியா னென்றுங்கா மாலை வடவாலின்
மேவிலைதாங் கிற்றும் வியப்பன்றோ—பூவரசே
மேருவணு வாவணுவு மேருவாச் செய்யுமவன்
சீர்மைசிறி தோபெரிதோ செப்பு. (உக)

* வரங்களுயிர்க் கீந்தளிக்கு மால்வால் படைத்த
குரங்குதனைக் கொண்ட குறிப்பென்—உரங்கொண்ட
வல்லவர்க்குப் புல்லும் வலியபடை யென்பாரச்
சொல்வலிகாக் கைக்குமதித் து. (உஉ)

* ஆரமணி வேணி யரனார் கிளியேறும்
மாரனைக்கண் ணாலெரித்த வாறென்னே—ஆரழலில்
வீழ்ந்தாருய் வாரோ விளக்கில்வீழும் விட்டிலுயிர்
வாழ்ந்ததுண்டோ தேவைமன்ன வா. (உந)

* வல்லபெரி யோரும் வனிதையர்தஞ் செவ்விதழில்
இல்லையெச்சி லென்பரது வென்புலவீர்—மெல்லதரா
பானத்தைத் தேனென்றும் பாலென்றுங் கூறுமபி
மானத்தான் மாலான் மதித்து. (உச)

* கத்தரிக்கா யென்றாயின் காணயிலான் றாய்பெறாவிக்
கத்தரிக்கா யென்றான் கவித்தேனே—சித்தசனை
முன்புடலங் காய்ந்தான் முளைசேது வேந்தரின்
அன்புடந்தை யாந்தமிழ்க்கின் பாய். (உரு)

* பாகற்காய் வேலனிரு பாதநறைப் போதைவிரும்
பாகற்கா யென்ன வருளினான்—மோகத்தென்
பச்சமிளகாயென்று பாடு தமிழ்க்கார்தான்
நிச்சமிளகார்நிருப னே. (உசா)

* வெண்டிக்காய் தெண்டிரைகொள் வீறடக்கும் வேல்சொல்லிற்
கண்டிக்கா யங்குறமின் காதலமெய்க்—தொண்டிற்காம்
தூயவரைக் காயசுரர் சுண்டக்காய் கந்தவென்ற
வாயவரைக் காசினியாள் வாய். (உஎ)

* கோழி யவரையினுக் கொத்தவரை வெற்றிபெறு
பாழியயில் வேலர் பதமலரே—வாழ்வருளு
மென்பரங்கிக் காய்விருந்தாட் டேந்தா னலமாங்கா
யன்பரங்கிக் காதலகன் றார். (உஅ)

தனிக் கவிகள்.

* துவரம் பருப்பிதழ்கண் பேரைகை வண்ணங்
கவரம் பருப்பதக்கொங் கைம்மான்—புவிசூழ்

கடலைச்சுண் டற்கயில்கொள் கந்தன் புயஞ்சேர்
மடலைக்கொள் கூந்தல்வள்ளி மான். (உகூ)

*எட்டுவய லாகெண்டை பேண்களிற்றுக் காலடியின்
முட்டுவய லார்முகவை முத்தயனைக்—கிட்டுநல
மாங்கனிதார் வாங்கெனச்சென் மாதுவரு மாதலின்வே
ளோங்கனிதா னிக்கிலமு கோ. (௩௦)

*கோழிமுட்டை யாதா குறுங்க லழுத்தாதா
வாழியொன்று னுடல்வெப் பாகாதா—பாழியபிற்
கந்தா வடையப் பழுங்குறத்தி காதல்கொண்டு
சந்தாடக் கானிலலைந் தால். (௩௧)

*பொருப்பச் சடியிற் புடைபார்ந்து விம்மி
யிருப்பச் சடுதியிலங் கெய்திக்—கருப்புமொழி
நேயசத்தி பாலன்வர நீபுரியா யேயிவட்குப்
பாயசத்தி லென்றும் பகர். (௩௨)

*அதிரசத்தை மோதகத்தா லண்டர்குடி யாண்டான்
பொதியவிழ்கஞ் சத்தாள் புரிந்தான்—எதிரும்
கடலைப் பொரியவிட்டான் கைப்பொறிமாப் பின்னோன்
கடலையொத்த வென்வினையைக் காய்ந்து. (௩௩)

*தேங்குழலாள் வள்ளி தினம்புணருஞ் சண்முகவேள்
ஆங்குழலா யுன்மனந்தேங் காயென்றான்—நீங்காப்
பருந்தோசை வேலான் பணியாரம் பேணி
தருந்தேவுன் பாவுளன்ப தாய். (௩௪)

ஷை கவிராயரவர்கள் வினாக்களும் சேதுபதியவர்கள் விடையும்.

*தன்றம்பி பெண்டிரண்டைச் சார்ந்திருந்தான் றந்திமுகன்
மன்றலின்னஞ் செய்யாதென் மன்னவா—என்றும்
இருகொம் புடையானை யில்லையென்றார் சொன்னார்
ஒருகொம்பு கையி லுளது. (௩௫)

*அந்திமதி கண்டுகுவி யம்புயத்தி னுச்சியின்மேல்
வந்தகறுப் பியாதுபுவி மன்னவா—சந்தக்
கலைகாட்டும் வண்டுறைந்து கால்வருடி வெள்ளத்
தலைநீட்டன் மானுந் தனம். (௩௬)

*கச்சையிட்ட மென்முலையங் கன்னி துரோபதையை
மெச்சியிட்டங் கொண்டறவர் மேவாரோ—நிச்சயமா
மின்னனையாள் குந்தி வியந்து முனம்பயந்த
கன்னனைநீக் காதிருந்தக் கால். (௩௭)

*அன்றொருவ ளைவரைக்கா வென்றவர்மே லைவருஞ்சேர்ந்
தின்றுபதி னெண்டினம்போ ரேன்செய்தார்—வென்றிக்
கணைமாரி யாரழியாக் காண்டீபர் தந்தந்
துணைவர்சப தத்தைமதித் து. (௩௮)

*பருத்தகனி வாழைவிண்ணைப் பார்த்துநெடுந் தோகை
விரித்தசைப்ப தென்முகவை வேந்தே—கருத்ததுகேள்
என்பெயர்கொண் டின்றொ ரிவர்க்கிங் கிணையலவென்
றன்புறச்செங் கையசைத்த லாம். (௩௯)

*வாரியகை நீரையொரு மாறுகண்டு திண்கரையில்
சேரவிட்டுத் தேடியதென் றேர்வேந்தே—ஊரியுலாம்
மச்ச மிரண்டுகையில் வந்துசிக்கிற் றென்றுளத்தின்
மெச்சிக் களித்து விரைந்து. (௪0)

*கிஞ்சுகவாய் மாதுமையாள் கேள்வன் முடிமீது
குஞ்சுமதி யேறியதென் கோமானே—நஞ்சோ
டலையிற் பிறந்ததனா லன்றரன்கா றீண்டத்
தலையேறிக் கொண்ட தரம். (௪௧)

*மங்கை யருணன் வரவறிந்து தாணிக்கிப்
பங்கையத்தைக் காட்டிமெள்ளப் பார்த்தலேன்—கங்குலெலாம்
பன்னு கலவியினாற் பட்டகுறி யைச்சகிகண்
டென்னநினைப் பாளோ வென. (௪௨)

*கையிலிரு கும்பங் கனதனத்தி னேர்தாங்கித்
தையலெதிர் வந்ததென்ன தார்வேந்தே—வையம்
வணங்குங் கவிவலவர் மானுமென்பார் நீர்தா
மிணங்குவீ ராபாரு மென்று. (௪௩)

*பெண்ணொருத்தி மற்றொருத்தி பிள்ளையைக்கண் டன்புகொண்டு
கண்ணமையப் பார்த்தனளென் காவலவா—நண்ணுமறு

மின்கணிகை யார்பால் விருப்ப மிகவுடைய
தன்கணவன் போயிருந்த தால். (௪௪)

*கூடிப் பிரிந்தமின்னாள் கொஞ்சுகிளிச் சோடுகண்டு
வாடினா ளென்கருதி மன்னவா—நாடி
விரைவில் வரவுரைத்த மென்சுருணீத் துந்தான்
மருவியதே யென்றுண் மதித்து. (௪௫)

*நண்ணுகண வற்பிரியா நாயகியோர் நாள்விரலை
எண்ணி வருத்தமுற்று ளெந்தலே—கண்ணினீர்
சிந்தினா ளாடை சிதறினா ணிற்பிரியும்
ஐந்துநாள் வந்ததென வாய்ந்து. (௪௬)

*தத்தை யொருத்திதன்கைத் தத்தையையோ யாதடித்த
வித்தையென்ன தென்முகவை வேல்வேந்தே—மெத்தையின்மேல்
புல்லினவென் மன்னன் புகன்மொழிகற் றுச்சகிடால்
சொல்லிணையே யென்று துடித்து. (௪௭)

*மாமின் னிருசுடர்க்கண் வாய்ந்தமுகி ரேய்ந்துவெட்கித்
தாமவனோர் கண்மறைத்தா டார்வேந்தே—மாமதனால்
காமமிஞ்சி மேவிக் கலவிவிளைத் தாடல்செய்ய
மாமதியை வேண்டி மதித்து. (௪௮)

*நித்தனொரு காறாக்கி நின்றொருகை காட்டுகின்றான்
சித்தமென்ன பார்புரக்குந் தேர்வேந்தே—சித்தம்
மதிப்பிரஞ் சீர்யமனை வாட்டுதுமென் றுள்ள
மதிக்குங் குறிப்பெனலா மால். (௪௯)

*புட்பம் விரும்பிவன்ம் போம்பொழுதே நொந்தசையும்
நுட்பவிடை கொய்தபின்னு நோவாதோ—அற்பர்
வணங்கொ ளிறுமாப்பும் வாடிநையு மேலோர்
வணங்கிக் கனத்தையடை வார். (௫௰)

*மல்லிகைசூ டுங்குழலின் மண்கூடை யைச்சுமந்து
மெல்லவொல்கிச் செல்வதென்ன வேல்வேந்தே—கல்விவல்லாய்
சொல்லெல்லா நற்சுவையுந் தாயதெல்லா மன்னமும்விண்
கல்லெல்லாந் தெய்வமுமா கா. (௫௧)

* அரசிற்கும் வேம்பிற்கு மன்பின் மணஞ் செய்யின்
மருவியுய்ப்பு மோமுகனை மன்னு—தரணிமிசை
இல்வாழ்க்கை யேபெரிதா மின்பமிது வேயிகத்தென்
சொல்வாய்மை தோன்றத் துணிந்து. (௫௨)

* வாவிப் படித்துறையில் வாய்த்த வராலினங்கள்
மேவிச் சுழல்வதென்ன வேல்வேந்தே—தாவுகயற்
கண்ணார் விழிநிழனீர் காட்ட வதனைவிரைந்
துண்ணுவான் கூட்டமிட் டு. (௫௩)

* தேனிலுந்தித் திப்புளதுந் திண்புலியின் மிக்கவலி
ஆனதுவு மியாதுபுவி யாளரசே—கானமலர்த்
தேனி லதிகமின்னார் செவ்விதழே வெங்கலியே
கானப் புலியிலதி கம். (௫௪)

* வாசனையின் மிக்கதுவும் வானவரின் மிக்கோரும்
பூசனையின் மிக்கதுமென் போர்வேந்தே—மாசற்ற
கீர்த்திமணந் தெய்வமுரு கேச னவனடியில்
சாத்துமன நற்பூ சனை. (௫௫)

* வாழ்ந்தமுருக் குச்சேண் மருவா தகழியிடைத்
தாழ்ந்தது வென்னைமுல்லைத் தார்வேந்தே—சூழ்ந்தவன்னப்
பேடனையார் செவ்விதழ்நேர் பேசியதன் பூவெழிலை
ஆடியன்ன நீர்பார்ப் பதற்கு. (௫௬)

* மாரன் சிலைவளைத்தும் வாளியொன்றும் பூட்டாமல்
வீர மடங்கியதென் வேல்வேந்தே—சேருமலர்த்
தோடலருங் கூந்தலருஞ் சுந்தரரும் பஞ்சணையில்
ஊடலற மேவ லுணர்ந்து. (௫௭)

* சேணளவுஞ் சிந்தளவுந் தெள்ளியவிண் மீனளவும்
காணினுங்கா ணாமையென்ன காவலவா—பூணுமனத்
தாசையளத் தற்கரிய தாயினும்வேற் கண்வீசும்
வேசைமனம் போலுமல்ல வே. (௫௮)

* நஞ்சிற் கொடிது நமனிற் கொடுஞ்செய்கை
மிஞ்சியதும் யாது விறல்வேந்தே—நெஞ்சத்

திடங்கனிவி லாதா ரிடுமமுது மிக்க
கொடுங்குணப்பெண் டீருமெனக் கொள். (ருகூ)

* வண்டுகண்ட போதே மலர்ந்தகம லங்குவிந்து
கொண்டிருப்ப தென்முகவைக் கோமானே—கண்டுகொண்டேன்
வண்டுவளை கெண்டைவிழி மாதர்செங்கை யாங்கமலம்
கொண்டுகொள்ளக் கூடம்புங் குறி. (சு0)

* ஓராழி நீரைமுகி லுண்டு பொழியினல்ல
நீராவ தென்னை நிலவேந்தே—சீராய்ந்த
மேலோர் தமைச்சார்ந்த வீணருமே லாவரன்றோ
நூலாய்வல் லோயுளக்க ணோக்கு. (சுக)

* அடியிணைப் பார்த்தோ ரணங்கு முலைமுகத்தை
நாடியையந் தீர்ந்தா னரபாலா—கோடவிழாப்
பங்கயத்தை முச்சியின்மேற் பாங்கியணி யத்தனங்க
ளங்குவந்த தாமென் றயிர்த்து. (சுஉ)

* பூவி லழகு பொலிந்து மலர்முருக்கம்
பூவைவிரும் பாதென் புவியரசே—பூவையரை
மெச்சி யிதழ்க்கிணையா மேவியதா லேயதினும்
எச்சிலுறு மென்றெண்ணி யே. (சுௗ)

* தெங்கிளநீர் கொண்டுவிண்ணிற் சேர்ந்து சிரத்தையசைத்
தங்குநிற்ப தென்முகவை யாளரசே—அங்கொளிரும்
விண்ணரம்பை மார்தனத்தை வெல்லநினைத் துச்சென்றும்
வண்ணமிக்க தாலே மகிழ்ந்து. (சுச)

* சம்பு முடியின்மதி சார்ந்திருக்கு மேலுலகில்
பம்பிருள்போக் கின்றதெது பார்வேந்தே—சம்புபுவி
நல்லோர் மனத்திருளை நாட்டா னவன்முடியூர்
வல்லோற் கரிதோ மதி. (சுரு)

* ஆருமடக் கற்கரிய தாயு மணையின்றி
வாரி யடங்கியதென் மன்னவா—கூரயில்வேல்
மன்னவனை யன்பருள்ளம் வைத்திருக்கும் வித்தைதனை
இன்மையறி யாதோ விதால். (சுசு)

* ஊடுங்காற் புன்னகையு மோர்மடந்தை கொண்கனொடு
கூடுங்கா னெட்டுயிர்ப்புங் கொண்டதென்னே—யூடவன்றோய்
மாற்றாள் பிரிவை மதித்துமன்னுள் பெற்றசுகம்
ஆற்றாமை யாலு மவள். (௬எ)

* சித்தம்போற் றந்தமன்னன் சென்னியிலவ் வாமனன்றாள்
வைத்தழுத்த னீதியா மாமகிபா—முத்தலமும்
ஈந்தானி யாசகர்முன் னேங்குவா னென்றுமவன்
வாய்ந்தபுகழ் நிற்ப மதித்து. (௬அ)

* ஓர்விளக்கின் சோதியரு குற்றபளிங் காதியெலாம்
சார்விளக்காத் தோன்றியதென் றார்வேந்தே—ஓர்பொருளாம்
மாதுவள்ளி கேள்வன் மருவடியா ருள்ளமெலாம்
சோதியெனத் தோன்றுவதென் சொல். (௬௯)

* தெய்வப் பிடிமைமணஞ் செய்தகுகன் வேடர்குலத்
தையன்மணஞ் செய்ததென்ன தார்வேந்தே—செய்யதரு
மேவுலகத் தேவரைப்போல் வேண்டுமையுங் காவென்ற
பூவுலகத் தேவர் பொருட்டு. (எ0)

* வாரிமணி யுந்திருவு மாயவனுக் கிந்தரற்குக்
காரி கொடுத்ததென்ன காவலவா—வாரணத்தோல்
ஆடையான் சின்னமதி யார்சடையான் வெம்பணியான்
தோடுடையா னென்றுமதித் து. (எக)

* மச்சமென்று செம்பருந்து வாரிப் பறந்தோட
இச்சைகொண்டு மண்ணுண் டிருந்தானே—நிச்சயமாய்
மாமியார் மேலேறி மானத்தைக் கைக்கொண்டால்
நாமதனைப் பேசலவ ளு. (எஉ)

* பெண்டாட்டி மண்பாவை பிள்ளை யுருவில்லான்
கொண்டாட்ட மெல்லாங் குளிர்கடலே—வண்டோட்டும்
கைம்மா வுரம்பாயக் கண்ணிரண்டும் பூவேலென்
பைம்மாப் பணியாற் பயன். (எ௩)

* ஓர்கண் குருடா யுடல மிகக்கருகிக்
கார்கடலிற் போய்வீழ்ந்த காரணமென்—பாரில்

கருப்பிணியைக் காய்ந்தான் கைலையா னிற்கோர்
இருப்பிலையென் றானகனு லே. (௭௪)

* ஆனைமருப் பன்னமுலை யன்னார்தின் கற்பிளவைத்
தானைகொண்டு மோதுவதென் றார்வேந்தே—மானக்
கலைப்பகைநீக் கற்கன்று காலம்பார்த் துததம
முலைப்பகைநீக் கற்கு முயன்று. (௭௫)

* மாதொருத்தி பெற்ற மதலை தனைமுனிந்து
போதுயிலென் றாள்புதுமை போர்வேந்தே—மாதமொன்று
வாராக் கணவன் மலரணையில் வந்திருக்கும்
நேரம்பா லென்றழுதா னென்று. (௭௬)

*தானை துவைத்துநின்ற தையலைநேர் கண்டமத
யானைமுகஞ் சாய்த்ததென்ன வண்ணலே—மேனாளத்
தன்பகையா னூர தரையிற் றலைபொருத்தில
என்புரிவர் வல்லோர்க ளே. (௭௭)

* காருருக்கா வேளையொரு கன்னி யுடன்முழுதும்
நீருருக்க வந்தா ணிலவேந்தே—மாரனெதிர்
அம்புருக்கக் காந்த னணைந்தபின்னா ராந்தளர்வால்
அம்புருக்கா தாகூந்த லம்பு. (௭௮)

ஆகச செய்யுள் ௩௮00.

---

## துவாத்திரீம் தசாவதானம்சரவணப்பெருமாட்கவிராயர்.

இராமநாதபுரம் சம்ஸ்தான வித்துவானாயிருந்த இவர்; முன்னர் கூறிய அட்டாவதானம் சரவணப்பெருமாட் கவிராயருக்குப் பௌத்திரர். அருணசலக்கவிராயருக்குப் புத்திரர். மதுரைச்சிலேடைவெண்பா, குன்றக்குடிச்சிலேடை வெண்பா, கந்தவருக்கச்சந்தவெண்பா, திருச்சுழியல் ஓரெழுத்தந்தாதி, மகரவந்தாதி, கழுகுமலையோரெழுத்தந்தாதி, பனசைத்திரிபந்தாதி, கயற்கண்ணிமாலை, புவனேந்திரனம்மானை முதலிய பன்னூல்க ளியற்றினர். இவரிற்றைக்கு இருபது வருடங்களுக்கு முன்னர் தேகவியோகமாயினர்.

பொன்னுசாமித்தேவர் அவர்கள்பேரிற் பாடியன.

தொன்றுதா திசே துதுதுதிப் பாண்டவர்க்காச்
சென்றுவென்று காத்த திருநாதா—வொன்றுதா

தான்மியமுற் றூன்றதவத் தாரு மஃாஞ்சேது
மான்மியமுய்த் தற்செனுள்ள வா. (க)

அஷ்டநாகபந்தவெண்பா.

இது தனித்தனி எட்டுப்பாம்பினுள்ளடைக்கவுஞ் சந்தியமையும்.

* மாரா விதுநய மாலை யணிபுப
காராமா வின்ப கலைவல—தீராவெண்
பூபதிமா விரா புதுவைப் புயபலவீ
மாபொன்னு சாமி மதி. (உ)

* புராதன மான புலவணி யானே
னிராதர வாத னெறியோ—தராதர
மாராய் துரைநி னருளண் டியுமிபதி
மாரபொன்னு சாமி மதி. (௩)

* மார விதுரமா வள்ளிய பூபகவி
சாரமா நீகே று தாய்மன—துள்ளாய்வை
நீதாத ஞைடயா சாரநீ காஅல
மீதுபொன்னு சாமிமா லே. (௪)

இதுமாத்திரைச்சுருக்கமுமாம்.

* ஓராபு போய வரைகணித் தோம்புமா
தீரனே வாசத் திருமானன்—பாரு
மருமாகா ஞான மணியா யவனி
வருபொன்னு சாமி மனு. (௫)

இவை நடுவெழுத்தலங்காரமுமாம்.

* கோதா ரிடைபோமோ கோறிநிகா வாநீயோ
ராதேதீன் றூரி லளியற்கா—வாதா
வருளே ரணிமாம னுவாடி யன்றேய்
நிரையான் புவிநாத னே. (௬)

* தாதாவன் பாநீ தலைமை யறனையோ
ராதாரை நீதோ யலைவேனி—ஞதாநின்
போல்வாமா வேத்து புரப்பாமா மாமனு
மாவீர னேசாதி மரன். (௭)

* விரையி னுலா மிகுசலனி நீராம்பு
லாரையப ராரைமல யத்தென்றல்—சாருமி
தாதாது பாஅணி யான நயவுரு
வாதாயா சாடு மதி. (௮)

இதுமாத்திரைவருத்தனையுமாம்.

* வரையள வொன்றேறு வாகா மதனு
விரைவிலெலீன யாள்சேம வீரா—பிரதாப
சேதுபா ராபொன்னு சாமிமா சீதரா
நீதமா ருவிரத னே. (௯)

முத்துராமலிங்கஸேதுபதி யவர்கள்பேரிற் பாடியன.

* முன்பேறு சீர்படைத்த முத்தமிழ்வல் லோரெவரும்
என்பேறு பெற்றுரென் றியார்புகல்வார்—அன்பேறு
தேவைமுத்து ராமலிங்கச் சேதுபதி யென்மேற்சொல்
பாவையொப்பா யாவர்பெற்றூர் பார். (௧0)

* தந்தமரும் பாமகவுந் தண்கனிபா லீருநர்பால்
வந்தமரும் பாராட்ட வாவினுல்—அந்தவிளை
யாட்டுமுற்றி லாயையடுத் தன்றியிரா தன்றேசீர்த்
தேட்டுமுற்றுந் தேவையர சே. (௧௧)

* பெற்றூரு ளன்பிரியப் பெற்றூலும் பெற்றூரின்
மற்றூர் சிறந்தார் மதலைக்கிங்—குற்றேறெனுஞ்
சென்பாலில் லென்றற் கிலக்கன்றே வெந்தையுளத்
தன்பாவ தென்னுண்ட வா. (௧௨)

* படிதழைக்க மறுநீதிப் பயிர்தழைக்க வுயிர்தழைக்கப் பரவி வாழுங், குடிதழைக்கக் கற்றோர்தங் குலந்தழைக்க நலந்தழைக்கக் கோதி லாங்ன், முடிதழைக்கச் செய்ததனிக் கடவுட்கென் கைம்மாறு முற்றுந் தேறேன், வடிதழைக்கும் வேற்கைமுத்து ராமலிங்கச் சேதுபதி மன்ன ரேறே. (௧௩)

* நினக்குமுடி கிடைத்தபடி முத்துவீ ரப்பகவி நிபுண னென்னே, தனக்குமுடி கிடைத்தமகிழ் வெனக்கடித மெனக்குவரை தந்தான் கண்டேன், எனக்குமுடி கிடைத்ததெனக் கிடைத்தபெரு

மகிழ்ச்சியி னுக் கெல்லை காணேன், சினக்குமுடி யரசரிக லடக்குமுத்து ராமலிங்கச் சேது வேந்தே. (௧௪)

* எனதுகுலஞ் செய்ததவப் பேறென்கோ யான்செய்தவ மென்கோ ஞான, திநகரன்பொன் னுச்சாமி செய்தநல் பயனென்கோ செகமேழ் செய்த, புநிதமிகு தவமென்கோ நீமௌலி புரிந்தரசு புரியப் பெற்ற, தநகனடி பரவுமுத்து ராமலிங்கச் சேதுபதி யரசரேறே. (௧௫)

சமுத்திர வருணனை.

* பாரிற் கொடிக்கணிவான் பைந்தருவின் பூவையலை
வாரிக் கரையொதுக்கும் வாரிதியே—பூரிப்பொன்
வண்ணத் துடையான்றன் வாய்முளரி வாய்முழங்கும்
வண்ணத் துடையான் மனை. (௧௬)

* தெண்டிரைமஞ் சத்துண்முகிற் சேயைத்தா லாட்டுதல்போல்
வண்டிரையா நிற்குமணி வாரிதியே—தண்டுளவார்
அம்புயத்தா னத்தா னனத்தா னுதித்தவுந்தி
அம்புயத்தா னத்தா னகம். (௧௭)

* அண்டர்மின்னார் மென்றுகில்கொண் டன்றுகுருந் தேறியொப்ப
விண்டருவில் வெண்டிரைசேர் வேலையே—பண்டுகன்மின்
னாடரவத் தாடிருத்தி யன்பருளத் தாடிருத்தி
ஆடரவத் தாடியகம். (௧௮)

* பாசொளியிற் கட்குவளை பன்மையிற்கார் மேற்கொளலின்
வாசவனை நேருமணி வாரிதியே—வீசுகதிர்ச்
சங்கப் படையான் சரணர்பவஞ் சார்ந்துளங்க
சங்கப் படையான் றலம். (௧௯)

* ஏந்துமர வத்தா லிருமுத் தலைகொளலால்
வேய்ந்தமதி வேணியொப்பாம் வேலையே—பூந்தவிசார்
மாவிசையன் பாகனார் வன்பா ரதமுடித்த
மாவிசையன் பாகனார் வாழ்வு. (௨௦)

* போதனத்தை யூருகையாற் பூவாய்த் திருக்கையால்
வேதனுக்கொப் பாகுமணி வேலையே—தீதால்

வரும்பா தகமலத்தான் வாடாதென் பாக்க
வரும்பா தகமலத்தான் வாழ்வு. (உக)

* விண்மீ னளாவமலே வெண்பட்டின் முத்தழுத்தும்
வண்மையினை ... டுமணி வாரிதியே—யெண்ணில்
கருப்புக்கா தாண்டார்மெய்க் காட்சியரா கென்றென்
கருப்புக்கா தாண்டார்தங் காப்பு. (உஉ)

* விண்ணூடு மங்கையர்க்கு வெண்மதிதோன் றும்பதத்தில்
கண்ணாடி யிற்காட்டுங் கார்கடலே—உண்ணாடி
வாசவனத் தாமரையான் வந்தணைக்கு வந்தருளும்
வாசவனத் தாமன் மனை. (உங)

* கண்மகரந் தங்குலவுங் கற்பகத்திற் றூய்மகரம்
விண்மகரந் தன்னொடுலாம் வேலையே—திண்மலையால்
வண்ணம் படைத்தான் மழைமுகில்கா யாவினுடல்
வண்ணம் படைத்தான் மனை. (உச)

* பல்லுயிருந் தந்துபின்றம் பாலடக்கு மோர்பொருளின்
மல்குதிரை யுள்வாங்கும் வாரிதியே—தொல்லமரர்
அத்தியா னத்தா னடியார்க்கு வீடுதரும்
அத்தியா னத்தா னகம். (உரு)

ஊற்றுமலைச் சமீந்தாரவர்கள் மீது பாடியன.

* வட்டக் கஞ்ச மதிமுகத் தாண்மதன் வாளிக் கஞ்ச மதியந் தழலள்ளிக், கொட்டக் கஞ்ச முலைமே லிதையெலாங் குறித்த கஞ்சற் றிரங்காதென் வாவியின், முட்டக் கஞ்சம் பயில்விரை யாவென்ன மூடக் கஞ்சம ராடத் தொடங்கிய, துட்டக் கஞ்சனை வென்றூர் பதாம் புயந் துதிப்ப வாவித யாலய வேந்தனே. (உசு)

* ஓடைக் குஞ்சரக் கொம்பா முலைமல ரோதிக் குஞ்சரக் கொன்றையொப் பாமிவள், சாடைக் குஞ்சர ணம்பொரு மாரவேள் சண்டைக் குஞ்சர வேகத்துக் குந்தென்றல், வடைக் குஞ்சர மஞ்சனி யாளந்த மானுக் குஞ்சர ணேகதி யாமையா, ஆடைக் குஞ்சர வின்மே னடித்தவர்க் கன்ப னேயித யாலய வேந்தனே. (உஎ)

*எவி யங்கச னற்பூக் கடலிரு ளொழிவி லங்கச னுக்கிளை யானெனும், பாவி யங்கசன் பாணத்தி னவிந்தப் பாவை பங்கச னங்கசங்

தாளினி,மேவி யங்கச னத்தத்தை மாற்றையா விபுத ரங்கசன் மார்க்கர்க்கெ லாமட,மாவி யங்கச னந்தாலூர் சுப்பிர மண்ய னோரித யாலய வேந்தனே. (உ௯)

* வண்ணக் கோல விழியாள் வருந்தவே வாளிக் கோல மதன் றொடுத் தானதை, எண்ணக் கோல முடியா தினிமன மிரங்கிக் கோல மடந்தையைச் சேரையா, தண்ணக் கோல மலிகடற் பாமுற்றுந் தழையக் கோலங்கை கொண்டாய் புகழுண்டு, பண்ணக் கோல வடிவெடுத் தார்பதம் பரவுங் சோவித யாலய வேந்தனே. (உ௯)

* அந்த மாதங் கனிகனி யாமிவ ளங்க மாதங்க மாமுமக் கல்லது, சொந்த மாதங் கருதிலிங் கார்க்குடல் சோரு மாதங்க நீக்காமை யென்னவள், ஏந்த மாதங் கடந்தாளுஞ் சொல்லவா றிருக்கு மாதங் கருத்தென்சொல் வீரர, விந்த மாதங் கணிமார் பணைப்பணி விரை யாளித யாலய வேந்தனே. (௩0)

* கான வல்லியங் கும்பன் மலைத்தென்றல் கருக வல்லியம் போருகஞ் செய்பகை, ஆன வல்லியங் கும்பிறை காயவேட் கடுத்த வல்லியந் தாவ வரிவிழி, மீன வல்லியந் தோவரூந் தாதணை மேவ வல்லியங் கெம்மன்னர்க் கும்பிர,தானவல்லிய மாரும் பிரான்புகழ் சாற்று மாலித யாலய வேந்தனே. (௩௧)

* சொலத்த காமன மாலவன் மேலின்று தொடுத்த காமன் மலர்க்கணைக் கோதொகை, அலத்த காமன்றி லோசைக்கு மாற்றில ளணைந்து காமன்ற லோதியை வச்சிர, வலத்த காம லுலகுக் கெனவந்த மன்ன காமன வாலிக் கரைதொறும், பலத்த காமன் னியவிரை யாள்பரி பால ஞவித யாலய பாண்டியனே. (௩௨)

* அன்னக் காவடி கட்டித் திரிந்தவ ளன்புக் காருணத் துக்காவடிவுக்கா, என்னக் காவடி நீர்விழிக் காவடி யேதுக்காவடி வைத்தாரெனநொந்தாள்,மின்னக் காவடி யோடுகை விழ்ந்தன மேவிக் காவடி வேற்கரத் தாய்வயல், மன்னக் காவடி தேன்பாய் கிளுவையாண் மன்ன வாவித யாலய பாண்டியனே. (௩௩)

* சேர வாரணங் கெய்தத் தகுந்தனந் திரண்ட வாரணங் கண்டங் கயலயில், ஆர வாரணங் கண்டா மரைமுக மணைய வாரணங் கைப்

புண்ணர்ந் தானையா, மார வாரணங் கற்று ரியல்கொடு வாழ்த்து வாரண் வைத்துப் புரப்பவா, வீர வாரணங் காத்தோன் பதம்பணி வீரை யாளித யாலய வேந்தனே. (௩௪)

* வந்த னம்பு வருத்திய தானெஞ்சு வந்த னம்புசி யாள்கட்கு மையிடாள், சந்த னம்புணர் கொங்கைக் கிடாள்மெய்ய சந்த னம் புனை மங்கையை மேவையா, முந்த னம்பு மதவேழங் காத்தருண் முகுந்த னம்பு வியாவும் பராவுகோ, விந்த னம்புயத் தாள்மற வாத வா வீரை யாளித யாலய வேந்தனே. (௩௫)

* வெண்ம திக்குங் குபிற்குங் கடலுக்கும் விளைம திக்கு விலா ன்பக ழிக்குமப், பெண்ம திக்குந் தளர்வுற்ற தாலெங்கள் பெருமதி க்குனை யன்றியின் றுளையா, விண்ம திக்குங் கடல்வந்த மாப்புய வீம திக்கு முலகே ழிரண்டினும், எண்ம திக்குந் தரமேற் கொளுநம்புக ழிருத யாலய ராமதெய் வேந்தனே. (௩௬)

* ஆர வாம்பரிக் குஞ்சடை யாரெதி ரமர வாம்பரி யான்களை யானுடல், சோர வாம்பரி வன்றுட்கி யாவருஞ் சொல்ல வாம்பரி .சன் றணைந் தாள்வதுன், தீர வாம்பரி யங்கத்திற் சேர்ந்துனை நிகர வாம்ப ரி சேய்பவர் யாவர்போர், வீர வாம்பரிக் கோர்நகு லாவெற்றி வேல வாவித யாலய வேந்தனே. (௩௭)

* ஏவு மாசுகம் போதாஞ் சமர்க்குவே ளேறு மாசுக மாம்புலி போல்வந்து, தாவு மாசுகந் தென்றலென் றுல்மெய்யிற் றுக்கு மாசுகந் தக்கணை யான்செய்கை, யாவு மாசுக மார்பொழு தென்றுநோ மவட் கு மாசுகந் தந்தணை வாயையா, பாவு மாசுகந் தக்கவி ஞோர்க்கருள் பாண்டி யாவித யாலய வேந்தனே. (௩௮)

* அல்லி யாம்பல் கனிவா யதில்விளை யார மாம்ப லயில்விழி யா மிடை, வல்லி யாம்ப விருபுய மானுளம் வாடு மாம்ப லிருளான் புரிய மர், சொல்லி யாம்பல் கணைக்கோ விலக்கிலை சுகந்த வாம்பலங் கொ ண்டணை வாயையா, வில்லி யாம்பலஞ் சேர்ந்த துரந்தரா வீரை யா ளித யாலய வேந்தனே. (௩௯)

* வண்ட லம்பு நிகர்குழன் மேனிது வண்ட லம்பு வளைசோர்ந் துன் பாண்மயல், கொண்ட லம்புரி வேட்குநொந் தாடிவன் கொண்ட

லம்புயக் கோலமொப் பாமிரு,கண்ட லம்புயல் போற்கொட்ட நீர்மு
லைக் கண்ட லம்புரண் டாளைக்கண் பாரையா,மண்ட லம்புரக் குந்தனி
நீதிக்கோல் மன்ன வாவித யாலய வேந்தனே. (௪0)

* கண்ட னந்தந்தங் காவியம் போதிரு கண்ட னந்தந்த மின்மொ
ழி மென்னடை,கண்டனந் தந்த ஞளிடை யாகுமு கண்ட னந்தந்தண்
பூங்கணை பாய்ந்ததோர், கண்ட னந்தந் தனிரியற் காமெனக் கண்ட
னந்தந் தயைவேண்டுஞ் சத்துரு, கண்ட னந்தந் தவர்திறை கொண்
டருள் காவ லாவித யாலய வேந்தனே. (௪௧)

* குதிரைக் காக்கிளை கொண்டவ ஞன்முழுங் குதிரைக் கார்சகிப்
பார்தென் றலையடக், குதிரைக் காய மடவீ ரினமொலிக் குதிரைக்
காகக் குயிலிடும் பைக்கொரு, குதிரைக் காத்திர மென்பதென் னெ
ன்றுரோ குதிரைக் காநின்ற றவளைக்கண் பார்பெரு,குதிரைக் காந்தி
மணிச்சித்தி ராநதிக் கொற்ற வாவித யாலய வேந்தனே. (௪௨)

* சந்த னம்பயில் வாடைக் கலாதுவ சந்த னம்பயில் போற்பா
யப் பானுங்க, சந்த னம்பரு காளென் றிதுவரை சந்த னம்பக ரா
தோவென் றேங்கிய, சந்த னம்பின் மொழிக்குமுகைவன சந்த னம்
பரி வாயணை நல்லவா, சந்த னம்பரி சீந்துகற் றோர்குடி தாங்கு மாவி
த யாலைய வேந்தனே. (௪௩)

* காவி யங்கண் ணிணைக்கிணை யாகத்த காவி யங்கவள் சொற்
ருக் கருப்பம்பா, காவி யங்களி கண்டிமொவ் வாதுவர்க் காவி யங்கம்ப
லன்ஞட் கருள்செய்து, காவி யங்கட லான்பொரு முன்புதுங் காவி
யங்கலர் முல்லைப் புயாபன்னுல், காவி யங்களெல் லாங்கற் றயர்சன
காவி யங்கித யாலய வேந்தனே. (௪௪)

* அம்ப ரம்பயில் வாள்சே லயில்விரி யம்ப ரங்கண் ணிணைநிக
ராமிடை, யம்ப ரம்பசும் பொன்மய மேயவ ளம்ப ரம்பிரி வாற்று
ளிதுசத்தி, யம்ப ரம்பத மேன்மற் றனதுரே யம்ப ரம்பரி வாயணை
பாண்டித்தே, யம்ப ரம்பர மாகச்செங் கோல்கைக்கொ ண்டாள்ப வா
இத யாலய வேந்தனே. (௪௫)

எட்டையபுரம் சம்ஸ்தானபதியவர்கள்பேரிற் பாடியன.
பன்னிரண்டு ராசிகளை அமைத்துப்பாடியது.

* மேடமிட பந்தலையான் மிதுனக் கொங்கை
மென்கடகஞ் சிங்கவிடைக் கலையுஞ்சோர

வாடுகன்னி மீதுலாம் விரக வெப்பு
மாறுமோ விருச்சிகநாண் டனுசிற் பூட்டி
நீடுமக ரக்குழையான் கணைக்கும் பஞ்செய்
நினைவுமீ னமதாக்க வேண்டின் முல்லைத்
தோடவிர்சுந் தரபாண்ட்ய வெட்ட மேந்த்ரன்
றோள்புனைமா லிகையலதென் சொல்வாய் மானே. (சசு)

பன்னிரண்டு மாசங்களை யமைத்துப்பாடியது.

* மாதஞ்சித் திரைக்குள்ளே வைகா சிக்கு
வலையாரு மானினம்போ லுடல மாடி
ஏதமுறு தாவணியாண் டவன்சேய் வாளி
யெய்துபுரட் டாதிவளைப் பசிய தோள்சேர்
ஆதரவாக் கார்த்திகைமார் கழியன்பா லூட்
டமுதையுண்டா னனையாய்முன் கஞ்சனைவு
தோதகமா சிபங்குனிய வென்ற மாலே
சுந்தரவெட் டமராஜ துரைச்சிம் மேறே. (சஎ)

* கொடியேறும் பிஞ்சுவிடுங் காயு முற்றுங்
கொடுபழக்குந் துவையல்செய்தாற் கசக்க லாகும்
அடியேறுங் கிள்ளியதைக் கொய்வார் நன்னூ
லாராய்ந்து மடிப்புளதா மடுத்தார் மானம்
நொடியேனு மகலாது காக்குங் கண்டாய்
நூவலுகலை கற்றுய்ந்து புகழ்வா யேழு
படியேறும் படிவளர்த்த சிவஞா னேந்த்ரா
பயன்கதைக்குப் பகர்ந்தெம்மைப் பாலிப் பாயே (சஅ)

* காரென் றுரைக்கிற் றருணத்தி லேகொடுக் காதுகொடைத்
தாரென் றுரைக்கிற் கவடுள்ள தாமுயர் தங்கமகா
மேரென் றுரைக்கினும் வில்லங்க மாமினி மேலவனை
யாரென் றுரைக்கப் புகுவேனெ னப்பன்செல் லப்பனையே. (சகூ)

ஆற்றங்கரை ஜமீந்தார் பேரிற் பாடியன.

* சந்த்ரகிரி யாதிபதி சொக்கலிங்கப் பெத்தணலென் றன்பாற்
றந்த, இந்தயச் சரிகைவஸ்த்ர முலகையெலாம் வாங்குமெங்கோ
னிருகையிகை, சொந்தவிலை யாவாங்குங் கவிஞோரை மற்றென்றன்

றுரைசற்கீர்த்தி, மைந்துடைய மன்னர்பெற்ற புகழினையெல்லாம் விலைக்கு வாங்குந்தானே. (௫0)

* கற்றுமிருப் பார்சிலர்நூல் கற்றாலுங் கற்பனைசொற் கவியின்சாரம்
சற்றுமறி யாரவர்க ளறிந்தாலு மன்புடைய சாமிநின்போல்
பெற்றிதெரிந் துதவாரிப் பேருலகி லவரிருந்தென் பெருவார்பண்ணை
நெற்றிரண்டு விளைபொய்கைச் சொக்கலிங்கப்பெத்தணமா னிருபரேறே.

* கரும்பாட்டிச் சாரங் கவர்வது போனின் கருத்துக்கொப்ப
வரும்பாட்டிற் சாரம் வரச்செய் ததுநின் வலமையன்றோ
விரும்பாட் டிறல்கொண் டவ் வொன்றுரை நீரந்த விண்ணிடைப்போ
யிரும்பாட்டி லென்றுசெய் சொக்கலிங் கப்புவ னேந்திரனே. (௫௨)

சேற்றூர் ஜமீந்தாரவர்கள்மீது கூறியது.

* கற்றாழ்ந்தா ராய்ந்தாராங் காவலரைப் பூவிலெண்ணில்
நிற்றாழ்ந்தா ரன்றியுன்முன் னிற்பவர்யார்—சேற்றூர்
பரசுந் தரதாசம் பத்தென்பார்க் கீயும்
வரசுந் தரதாச மால். (௫௩)

சேற்றூர்ச் சம்ஸ்தானவித்துவான் இராமசாமிக்கவிராயரவர்கள்
தமக்குச்செய்த உதவியை வியந்து கூறியது.

* தருமதுர கதகுல வெனப்புகழ்பா வலர்க்குநிதி தருபூ முல்லை
தருமதுரம் பெருகவணி சுந்தரதா சேந்த்ரன்மகிழ் தருசெங் கோல
மருமதுரந் தரராம சாமியென வருமலைய மாத வன்போல்
மருமதுர கவிவலனெற் கியற்றுதவி யெப்பிறப்பு மறந்தி டேனே.()

முகவூரில் கந்தசாமிக்கவிராயரவர்கள் கட்டுவித்த
விநாயகர் கோயிலுக்குச் சென்றபோது கூறியது.

* ஆலையஞ்செய் தமராடி யுடல்பொடித்தான் பதம்பெறுவா னகத்துள ளன்பாய், ஆலயஞ்சேக் கையதாக்கொண் டவன்விகடங் கண்டுவளை யளித்த முன்னோற், காலையஞ்செய் திசைபடைத்தா னெக்கலையு முணர்ந்ததனை யார்க்கும் புத்தி, யாலையந்தீர்ந் திடவுணர்த்துங் கந்தசுவா மிக்கவிநல் லறிஞரேறே. (௫௫)

அங்கே மாங்கனியுண்ணும்போது கூறியது.

* கந்தசா மிக்கவிவல் லவனுமவன் கனிட்டனெனக் கற்றோர் போற்ற, வந்தசா மியையனைய ராமசா மிக்கவியு மகிழ்வா யெற்குத்,

தந்தசா மியமகன்ற மாங்கனித்தித் திப்பினைநேர் சாற்ற வேண் டிற், பந்தசா மியல்பகற்று மரன்மகற்கீ கனியுமிணை பகரொண் ணாதே. (௫௬)

அக்கவியைக் கேட்டவுடன் இராமசாமிக்கவிராயரவர்கள் குமாரர் சே. ரா. சுப்பிரமணியக் கவிராயர் கூறியது.

* தனிக்கவிகைப் படையாக்கொண் டவன்பணியுஞ் சிவன்றிரு ப்பா தத்தை யென்றும், உனிக்கவியு மால்சரவ ணப்பெருமாட் கவி ச்சிங்க முவந்தன் பாக, இனிக்கவிகை மன்னரெலாங் கொண்டாட வெந்தையர்மீ திசைத்த செஞ்சொற், கனிக்கவிபோ லினிக்கவினிக் கவிபுகல்வோ ரிவ்வுலகிற் கண்டிலோமே. (௫௭)

ஆகச் செய்யுள் ௲அ௫௭.

---

## அட்டாவதானம் கிருஷ்ணய்யங்கார்.

இவர் இராமநாதபுரம் சமஸ்தான வித்துவான். இவர்பாடிய நூலெ‌ன எதுவும் வெளிப்பட்டிலது. இவரும் முத்துராமலிங்கஸேதுபதி காலத்தினரே.

சமுத்திரவருணனையாகப் பாடியன.

* தக்கவய துற்றபினுந் தாம்பெற்ற மக்கடமைப்
புக்ககத்திற் சேர்க்காத புல்லியர்மேல்—அக்கணவன்
பாரித் தெழுவதற்கொப் பாகுநதி கட்கிறையாம்
வாரிநிதி விண்படரு மாறு. (க)

* திங்கட் குழவியினைச் சேண்மணிப்பூண் டொட்டிலிட்டுப்
பொங்குதிரைக் கைமேற் பொருத்திமிக—மங்கலநல்
ஓசை செவிமடுப்ப வூழிவரை தாலாட்டும்
ஆசைத்தா யாழியன்றி யார். (உ)

* வானேறத் தக்க வலிமையுனக் குண்டேனும்
நானே பெரியவனென் றுநினையாக்—கூனேறு
சங்கைத் தரிக்குஞ் சலநிதியே கும்பமுனி
அங்கைத் தலமுண் டறி. (௩)

* நின்னிடத் திற்பிறந்த நீலவிடந் தீண்டிடினும்
தின்னுமவர்க் கேதுயரஞ் செய்யுமன்றி—நின்னைப்போல்

தொட்டவர்கள் பிறகணத்திற் றுஞ்சா ருனையடுத்தேற்
கிட்டம் பெறுவதெங்ங னே. (௪)

* ஆர்கலியென் னுஞ்சொல்லிற் காதார மாயினபின்
ஆர்கலியுந் தோய்ந்தனைநீ யானதனால்—சீரில்
கடைபட்டாய் நெஞ்சங் கலங்கினாய் கட்டுண்
டடைபட்டா யின்ன மலை. (௫)

* ஓங்குமறை நாவா யுறுதலினா ற்றலையும்
தாங்குதலால் வேதாவாஞ் சாகரமே—ஈங்குமெமை
ஆண்டவரா கத்தா ரருமணியா ரன்றுதித்த
நீண்டவரா கத்தார் நிலம். (௬)

* அம்புலிமே லோங்குதலா லாரை யணிந்திடலால்
நம்பனெனச் சொல்லு நரலையே—அம்பரன்முக்
கண்ணா னனத்தான் கருத்துக்கெட் டாதிருக்கும்
வண்ணா னனத்தான் மனை. (௭)

* நந்தனங்கொண் டோங்கியமை நாகத்தை யாள்வதினால்
சிந்துரமூ ரிந்திரனாஞ் சிந்துவே—தந்தமக்கு
வைகுந்தத் துக்குடையார் வண்புகழை யாதரிக்கும்
வைகுந்தத் துக்குடையார் வாழ்வு. (௮)

* நீலமயி லேறுதலா னீண்டவடி வேற்கையினால்
வால குமரனொப்பாம் வாரிதியே—கோலமலர்ச்
செங்கமலத் தாளான் றிருவடிக்காட் பட்டவரைத்
தங்கமலத் தாளான் றலம். (௯)

* ஓர்கோ டொளிர்தலினா லோங்கன்முகத் தோங்குகையால்
சீர்கொள் கணபதியாஞ் சிந்துவே—ஏருடைய
செம்பவள வாயான் சிறந்தவர்பாற் கைமாறாச்
செம்பவள வாயான்றன் சேர்பு. (௧௦)

* நங்கோன் விசையரகு நாதமுத்து ராமலிங்கச்
சிங்கம்போ லாழ்ந்த திறம்பெற்றும்—பங்கம்
விடுத்திலையெ னுட்பயமும் விட்டிலையென் வஞ்சர்த்
தடுத்திலையென் வாரிதியே சாற்று. (௧௧)

விநாயகமுதலியாருக்கெழுதியது.

* சீருலவு மேன்மாட மீதுவிளை யாடல்புரி
செங்கமல நயன மடவார்
செந்தளிர்க் குவமைபெறு பாதபங் கயமதிற்
சேர்த்திடு சிலம்பி னொலியைத்
திருவளரு மாநதப் பொய்கையிற் பயில்கின்ற
செங்கழ னங்கள் வினவிச்
சேனுலகு மேலோதி மங்களே தென்றானங்
தேங்கிமே னொக்கு மைந்து
திணைகள்படு திரவியமி யாவுமொரு தலமதிற்
சேர்த்திட நினைத்திட் டயன்
செய்வித்த தென்றுலகின் மெய்வித்து வான்கள்புகழ்
சென்னைநகர் மன்னு மன்று
திகழொளி கபாலீச ரடிபணி யருச்சுனச்
செம்மலருள் செல்வ மைந்தா
சீர்த்திபெறு நாயக விநாயக மகீபால
செப்புமொரு செய்தி கேண்மோ
பாருலக மென்றவொரு விப்பிக்கு முத்தெனப்
பகர்கின்ற முகவை நகரில்
பரமனுதல் விழியிலக் காகாத மன்மதன்
பாக்கிய மிழந்தி டாத
பதியரிச் சந்திர னுண்மைவிட் டகலாத
பார்த்தன் சுதந்த ரமதாப்
பலநிதிக் குவைகொண்ட வளகேசன் முனிவராற்
பாவமணு காத மகவான்
பல்லுயிர்ப் பயிரெலாம் வாட்டமுறு வேளையைப்
பார்த்தருள வந்த மேகம்
பரிதல்வின வுதனினைத லல்லாதி யார்க்குமருள்
பஞ்சதரு சுரபி மணியோர்
பக்கமதின் மிகுதிகுறை யின்றிவளர் கின்றவுடு
பதிநா விரண்டில் சேடன்

பரராசர் முடிதிகழு மணிமகுட ரத்நவொளி
பதியுமிரு பாதன் முல்லைத்
தாருலவு மார்பன்முத் துச்சாமி மகிபதி
தவத்தில்வரு சிந்தா மணி.
சச்சிதா னந்தமய ராமநா தச்சாமி
சரண்மீதில் வைத்த சித்தன்
ததிகண்டு பகைவென்று வெண்குடையி னிழலிலித்
தாரணியை யாள்கின் றவன்
தகுதியுள சிவஞான மன்னர்க்கு மைத்துனன்
றபநகுலம் வாழ வந்தோன்
தைதயிரியந் தனிலிமய மலையிற் சிறந்தவன்
றனைநம்பி வந்த வர்க்குத்
தடையற்ற செல்வமரு டாசரதி சேதுபதி
தாங்குபரு வதவர்த் தநித்
தாமரைமி னுடன்வந்த சோமனென் பார்க்கினரு
டந்துதன் சமுக முன்றைத்
தமர்களுட னவதாந நாலெட்டு நோக்கியே
சகலரும் புகழ வைத்தோன்,
ஏருலவு மானேசர் வீசுபுகழ் கோட்டைமா
லெங்கள்கோ னங்கு வரவும்
எளிதான திலையந்த நகர்செய்த தவமன்றி
யேதுசொல லாகு மன்றை
இங்குசில புன்மதிய ரெண்ணம்வே றுகவு
மிருக்கின்ற காரி யத்தை
இன்றுமுத லெட்டுநா ளளவிற் புராட்டமென
வெற்றியுங் கவர்னர் பேட்டி
இசைவாய் நடப்பித்து மவர்வரிசை செய்வித்து
மேத்துநவ ராத்ரி வருமுன்
இராசரா சேஸ்பரி பூசைக்கு விரைவாக
விங்குவர வேண்டு மதிலே
ஏதுமொரு விக்கினம் வாரா திருப்பதற்
கேற்றபெயர் நீபெற் றதால்

எம்மன்ன னிங்குவர வும்மகிழ்வு யாங்களுற
விசையுமிக நீகொள்வை யே. (௧௨)

ஆகச்செய்யுள் ௩௮௬௬.

---

## சேஷகிரிராயர்.

இவரும் இராமநாதபுரம் சம்ஸ்தான வித்துவானே.

சமுத்திரவருணனை.

* நன்னீ ரெழிலிக்கு நல்கி யறுசுவையோ
டன்ன முலகோர்க் களித்தலால்—மன்னிச்
சுரர்க்கமுத மீதலாற் றொல்லுலகைக் காக்கும்
நரலையே நாராய ணன். (௧)

* ஓங்கியெழுந் தார்ப்பரித் தோய்ந்து மறிதிரையைத்
தாங்குமுன் னீர்வெய்யோர் தங்கேண்மை—ஆங்கவர்கள்
தீவினை யாலீட்டுஞ் செல்வத்தைப் போன்றதே
பாவலர்கள் பாரீர் பரிந்து. (௨)

* சேர்ந்த வரைக்கெடுக்குந் தீய குணங்களையுள்
ளார்ந்தகன வஞ்சகர்போ லானதே—ஈர்ந்தழிக்கும்
வன்மீன் முதலியவை வாரியடக் கித்தெளிந்த
நன்னீர்மேற் காட்டு நலம். (௩)

* நாலு திசைவதன நண்ணுதலா லோதிமம்
மேலுறலான் மாலுந்தி மேவியதால்—மேலான
சத் தியத்தி ருத்தலாற் றாமரைமேல் வாழ்தலால்
அத்தியுல கீனு மயன். (௪)

* கரைகாண வந்தோர கங்களெலா நீக்கித்
திரையாற் புரிபடியைத் தேர்ந்து—பரமபதம்
சேருமெனப் பேரொலியாற் செப்புவதை மானுமே
ஆர்கலி யார்க்கு மது. (௫)

* சங்கரி மேவுதலாற் றனழ லேந்துதலால்
வெங்கனற் கண்ணரனும் வேலையே—அங்கயற்கண்
தந்தா வளமளித்தார் தாக்கு மிராவணற்கும்
தந்தா வளமளித்தார் சார்பு. (௬)

* ஆயிரந்தி ருக்கை யடைத[illegible]மர்சசி
மேயதனு லிந்திரனும் வேலை[illegible]—ஆயர்
குடநட மாடினன் கோக்குல[illegible] காத்துக்
கடநட மாடினன் காப்பு. (எ)

* வாளை வெடிபாய்ந்து மந்தா[illegible]ருகுத்து
மீளும் பொருதரங்க வேலையே—காளியனும்
பன்னக மேனடந்தான் பற்றுதுமென் ருன்கஞ்சன்
வன்னக மேனடந்தான் வாழ்வு. (அ)

* சேண்மையி லேறுதலாற் றேவானை யைப்பெறலால்
வேண்முருக னைப்பொருவும் வேலையே—நீண்மகிக்கு
காவலவன் கண்ணன் கமலமொப் பான்கமலை
பூவலவன் கண்ணன் புரம். (கூ)

* ஆமகர மீன்மேலா மார்க்கு மலையுடனே
மீமகர மீனுடுலாம் வேலையே—நேமியுடன்
சுந்தரவண் ணத்தான் சுரர்க்க முதமீந்தான்
கந்தர வண்ணத்தான் காப்பு. (கo)

விநாயகமுதலியாருக் கெழுதியது.

* வீசுபுகழ் கொண்டநற் சேதுபதி மானேசர்
விண்மணி குலத்து தித்த
மேன்மைபெ றிராகவனே யனையகோட் டைச்சாமி
வேந்தர்க்கு நேச ரத்நம்
தேசத்தி லுயர்சென்னை மாநகரில் வாழ்கின்ற
செல்வன்மா தர்க்கு மாரன்
செப்புநிஜ வசனத்தி லேயரிச் சந்திரன்
செங்கோல் தவாத சுமுகன்
தேசுபெறு செவ்வருச் சுனவிநா யகராஜ
சேகரனை வசமாக் கினோர்
தீக்கலிய னெனுமிந்த்ர சித்தன் புரிந்திட்ட
தீவினைக ளென்னு நாக
பாசபந் தந்தனைப் பஞ்சுபஞ் சாகப்
பறந்தோட வேய றுத்துப்

பலகூத னனின்மேன்மை பெறுவரே லன்னவன்
பான்மைபுக லற்கெ ளியதோ. (௧௧)

ஆகச்செய்யுள் ௧௮௭௦.

—

## முத்துவீரப்பிள்ளை.

இவர் இராமநாதபுரம் சம்ஸ்தான வித்துவான். இவரூர் சாளக்கிராமம். மதுரை திருஞானசம்பந்தசுவாமிகள் ஆதீனத்திலிருக்கிற ஸ்ரீலஸ்ரீ மாணிக்கவாசகசுவாமிகள், இவரது புத்திரர்.

முத்துவீரப்பிள்ளை.

* எம்மைப் பரைவீசி யிட்டசிலை யேந்தியுய்த்த
செம்மைச் செயலமைந்த சிந்துவே—மும்மைப
புவனந் தலையளித்தோற் பூத்ததிரு வுந்தி
யவனந்தத் நன்மேச ரகம். (௧)

* ஆன்றறிஞ ருள்ளமென வாழ்ந்தகன்றோங் கிக்குளிர்ந்து
தேன்றவழும் பங்கயஞ்சேர் சிந்துவே—வான்றிரியும
செஞ்ஞா யிறைநிகர்த்த செகக்கர்மணி மார்பனுபிரக
கஞ்ஞானம் போர்ப்பா னகம். (௨)

* தற்புகழ்போ யண்டமெலாஞ் சார்வனபோன் மீனுகளும்
சிற்பவயிர் வார்கரைய சிந்துவே—பொற்பமரும்
மங்கையிர திக்குருவாய் மாயிருஞா லககருவாம
ஐங்கணையான் றுதை யகம. (௩)

* புன்னையுள நெய்தலுள பூங்கே தகையினுள
தென்னையுள வின்னறவார் சிந்துவே—முன்னையிடத்
தாட்படுத்தி மண்ணைவலத் தாட்படுத்தி விண்ணையினை
ஆட்படுத்தி நின்ற னகம். (௪)

* பொங்கெழிற்செவ் வேட்சுமந்த போர்சசிகியின் வைகறையில்
செங்கதிர்த்தாங் கித்துலங்கு சிந்துவே—பங்கயம்போல்
கையான் கழலான் கடிமார்ப னன்னதான்
ஐயா யுதத்தா னகம. (௫)

ஆகச்செய்யுள் ௧௮௭௫.

—

## இரகுநாதபாரதி குப்பணையங்கார்.

இவர் இராமநாதபுரம் சம்ஸ்தானத்தில் மானேஜராயிருந்த கோட்டை சாமித்தேவர் காலத்து வித்துவான்.

விநாயகமுதலியாருக் கெழுதியது.

* திருவோங்கு மாதவன் சேதுபதி யாயரசு
செய்யுமுக வாபுரிக்கோர்
சேமந் தருங்கோட்டை யாய்வீசு புகழையெண்
டிசையிற் செலுத்துங்குகன்
செல்வக் குலத்திலுயர் மன்னன்முத் துச்சாமி
தீரனரு ளுங்குமாரன்
சேதுபதி ராணிபரு வதவர்த்த னிப்புகழ்ச்
செல்விமகி ழுஞ்சோதரன்
தருவோங்கு முகிலாழி வெளிறவே கன்னிகா
தானன்ன தானவஸ்த்ர
தானுதி வெகுநிதிக ளாதுலர்க் கருளியவு
தாரகன் றைவதாரன்
தனதானி யத்திற் குபேரனுயர் சங்கான
சவுபரி குமாரவீரன் *
தையலார் மையலான் மடலெழுது மாரன்
றயாதிகுண மேருதீரன்
குருவோங்கு மாகம விதிப்படிக் கன்பினோர்
கோட்டைமா தேவபூசை
கோகனக மலராதி யாற்செய்து செல்வமுங்
கொற்றமும் வளர்பாண்டியன்
குண்டலமு மண்டலமு மெண்டிசையும் வீசுபுகழ்
கொண்டகோட் டைச்சாமிமால்
கூறிய படிக்கெலாஞ் சீரிட்டு மாற்றலர்
குறும்படக் கினதுகேண்மை
மருவோங்கு நற்சந்த மெனலாகு நின்புகழ்
வழுத்துதற் கெளிதாகுமோ
மதிமா னருச்சுனப் பெருமான் வரத்தில்வளர்
மதியெனத் தோன்றுகிதியே

மன்னுமா னேசர்கோட் டைச்சாமி மகராஜ
மனுவுடன் னீபுமுயிரும்
மருவுமெய் யென்னவும் விநாயகக் குரிசிலே
வாழிநல் வாழ்வுமிகவே. (௧)

ஆகச்செய்யுள் ௧௮௮௬.

## இராமலிங்கக்குருக்கள்.

இவரும் இராம்நாதபுரம் சம்ஸ்தானத்திலிருந்த வித்துவானே.
விநாயக முதலியாருக் கெழுதியன.

*மண்டலிகர் மணிமகுட வர்த்தனர் திரண்டுதிறை
வைத்தடி வணங்கமுன்றில்
மனுமுறைப் போராழி வாராழி வரையாழி
வரைசுற்றி யுலவவொற்றை
வண்குடை நிழற்குட் சராசர மனைத்துமணி
மல்கமழை மல்கவிளைவு
மல்கநில மல்கநிதி மல்கதவ மல்ககுல
மல்கநிரை மல்கசெல்வம்
மல்கசிவ சமயநெறி மல்கநிக மாகமமு
மல்கசெங் கோல்கைகொண்ட
மங்கைபரு வதவர்த்த னிச்சேது பதிராணி
மாதுசோ தரவுதார
வங்கசிங் களவங்க கொங்ககொங் கணதேய
மன்னரவை மெச்சுசேது
மானேஜர் வீசுபுகழ் கொண்டகோட் டைச்சாமி
மகராஜன் வாசல்வித்வக்,
கொண்டறண் டுறைசவிர்த் தாசல முனீசுரன்
கோகனக பதமனத்துட்
கொண்டிலக் கியவிலக் கணவிலக் கருதிரைக்
குரைகடற் கண்டுண்டலக்
கொடியுயர்த் தவர்முதற் சிவமுறக் கரமருட்
கொடுவிரித் திடுசற்குணக்

குருராஜ னைசு[illegible]ர்க்தி மாதவ
குமாரன் ற[illegible]சங்கம்
கூறற்பு தானந்த [illegible]லிங்கக்
குருக்கள்வர [illegible]முகம்
குச்சரரு மிச்சகரு மெச்ச[illegible] மெச்சுமிசை
யொச்சிவரை யை[illegible]கா
குலமணிகு ணமணிபுரு [illegible]நவ மணிபிரபு
குலதிலக மணிமுமம[illegible]
கும்பமுலை விம்பவிதழ் [illegible] மம்புவிழி
கொஞ்சுமொழி வஞ்[illegible]டையீர்,
அண்டரமு தங்குமுத மனமெய்வாய் நடைவாய்ந்த
வரிவையரை மதநூ[illegible]ணர்ந்
தைய்மூன்று தானத்த முதநிலை வகைப்படி
யணைந்திர[illegible] மதனை வெல்வோன்
அம்பொனுப் ப[illegible]வைத் ததிநிலைக் கஞ்சன
மனேக[illegible]யபடாம்பஞ்
சஞ்சமளி ப[illegible]யாளி வால்சேட் குளோபுமணி
யாரமன[illegible]ற்றி
அணிபெற[illegible]மும் விசித்துப்பல் பொருளுமவ
ணடையவு [illegible]றைத்துமறையோர்க்
கனதான மன்பொடு துவாதசி தொறும்புரிக்
கருள்சத்ர மணிமுகப்பில்
அருமைதரு தன்பெயர் வரைந்தகுமர னன்கன
னருச்சுனமு தலிகுமார
வதுலனம துபயகண் மணிவிநா யகமுதலி
யாருள முவந்துகாண்க,
தண்டுளவ மாலிகா பரணபுய பலசைலவணி
தனபதிக யபதிதுரக
தபதிசே துபதிகோட் டைச்சுவா மித்
சமுகத்தி னுக்கனுப்பு
தங்கடிதம் வந்துள முவந்ததின் னன்சுண்
சகலகா ரியமுஞ்செயம்

தடவிகட கடகரியி னடையுமடை யலரைத்
தகர்த்துச் சினந்திகழ்ந்து
சண்டப்ர சண்டமா ருதவுக்ர வேகமொடு
தாவித்தி காந்தவரைநம்
சக்ரபதி பவனிவரு துரகத சிகாமணி
தனக்கமைத் திடுகலணையைத்
தந்த்ரமதி பதிபகற் றீவட்டி வெற்றிவர
தாசாரி யரிடங்கொடுக்
தனையிவ ணனுப்புவித் தத்தமது சேமலிகி
தங்கமட் டிலே வேண்டுமே. (க)

* சீரேறு பரிதிகுல திலகமதி வதனசெய
சிங்கசங் ராமவிஜய
செகவரசர் மணிமகுட [illegible] யுகமேரு
திரகம் பீரமருமத்
திற்புடைத் துக்கனத் து[illegible]க் கொத்துத்
திரண்டணைந் தாரம[illegible]
செப்பிகழ்ந் தொப்பகன் [illegible]க் தியர்மயற்
செய்துமட லூரநறவ[illegible]
தேக்கித் தெவிட்டவிசை [illegible]சு ஞிமிறுவா
சிகைமௌவற் புயசயிலவெண்
திங்களொற் றைக்குடை நிழற்குளர சுரிமையின்
செங்கோல் செலுத்துராணி
வங்க சேதுபதி மாதுபர் வதவர்த்த னிச்செல்வி
ட திருவுட னுதித்தசேதா
மானேக னெக்கும் வீசுபுகழ் கொண்டகோட் டைச்சாமி
மகர சித்தமகிழ் வித்வமணிசூற்,
கொண்டற பொழின்மர்க் கடம்பலக் கனியுனூடக்
சே பகக் காமஞ்சரிக்
கொண்டிலக் ன டப்பொன்வண் ணத்தொடுப வணமிசைக்
கு கவங் குலவுபிலவங்
கொடியுயர்த் தினமிதன் றெனவெரீஇத் தாவமாங்
கொ ரசஞ் செசெல்விளக்கும்

காவிரித் துறைசைவிர்த் தாசல முனீசுரர்
கழற்கண்மற வாதநேயன்
கங்கைமர பினர்தர முணர்ந்துமல பாசவன்
கட்டவிழ்த் தருளுமுத்திக்
கைசெய்கரன் வடிவமுட் காட்டுசுந் தரமூர்த்தி
கனதேசி கன்பாலகன்
கவிமாரி பொழியிலக் கியவிலக் கணவாரி
கண்டுசிவ சித்தாந்தநூல்
கருதுகல் விப்ரசங் கன்ராம லிங்கருரு
கலதரத் தெழுதுலிகிதம்,
தேரேறு மணியாவ ணக்கூல மமராவ
தியினுமரி தெனவமுதர்பார்த்
திட்டமுக் காலினிமை யாநாட்ட மாகச்
செயூஉச்செழுஞ் சென்னைநகரா
திபதனு திபதளா திபநரா திபசுயா
திபகயா திபதுரகதா
திபதரா திபபுரா திபபரா திபகுலா
திபகலா திபபிரபலா
திபதொண்டை மண்டலா திபவண்ட மண்டிசை
திகாந்தமெட் டினுமுழங்கச்
சீனமலே யாளபங் காளசெங் கீழபல
தேயரதி காரவிர
தீரபிர தாபநிதி வாரிவா ணர்க்கருடி
யாகவித ரணவிவேக
சிற்சுக விலாசப்ர சன்னகண பதியருள்
சிறந்தசற் புருடரத்ந
வாரேறு மும்முரச முன்றினிலி யங்குமணி
வாசலர்ச் சுனமாதவன்
மாதவகு மாரநிஜ ராமபல ராமமத
வாமவன சோமப்ரபு
மால்விநா யகமுதலி யாரவர்க ணமதுகண்
மணியுளமு வந்துகாண்க

வம்பர்செய் குறும்படக் கித்தேனைவ யரசுதம்
வழிவழி புரக்கநாட்டு
மகராஜ னெங்கள்கோட் டைச்சாமி மானேசர்
மானேசதயை நன்றுநீ
மகிழ்வுடன் பெறநினது தந்தைதவ மோவலதுன்
வமிசத்தர் செய்தவமதோ
வள்ளனீ புரியுமா தவமதோ விதனினும்
வாய்த்தசெல் வங்கள்யாவே
மன்னுலகி னுன்னைநிக ராராகை யாலுன்றன்
மைந்தரொடு வாழிமாதோ. (௨)

* அருச்சுன மாலை புனையும்பி ரானன்ப னனசென்னை
அருச்சுன மாதவன் பாலன்வி நாயக வண்ணன்முன்றில்
அருச்சுன மாடத் தடையின் புலவாநும் மாசைப்படி
அருச்சுன மாடைதந் தின்னமும் வாருமென் றுளுவனே. (௩)

ஆகச்செய்யுள் ௧௮௮௬.

---

## சந்திரசேகரக்கவிராஜபண்டிதர்.

சோணாட்டிலேயுள்ள தில்லையம்பூர் இவரது ஜனனத்தலம். இவரே முன்னர் பொன்னுச்சாமித் தேவரவர்கள் அனுமதிபெற்றுத் தனிப்பாடற் றிரட்டு என்னும் புத்தகத்தைப் பரிசோதித் தச்சிட்டனர். சோதிடத்தி னும் வல்லவராய் வநுஷாதிநூல் முதலிய நூல்கள் செய்தனர். துலுக்கா ணத்தம்மைபதிகம் இவர் பாடியது. இவர் 25 வருடங்கட்குமுன் தேகவி யோகமாயினர்.

பொன்னுச்சாமித் தேவரவர்கள்பேரிற் பாடியன.

திருமகட்குத் தன்னிறமாஞ் செய்யம் புயமும்
பொருமகட்குப் பொன்னம் புயமும்—தருபொன்னுச்
சாமிவள்ளன் மாலைதந்தான் றண்கமல மானேநற்
சாமிவண்ண மாலைதரா தான். (௧)

இய்யூர் தகா வெடுத்ததிரு மான்மருகன்
மையூர் குமரன் மலரடிக்கு—மெய்யூர்

மனத்தை யளித்தபொன் னுச் சாமிக்கு மானே
அனத்தைமறந் தாளென் றறை. (௨)

ஆடிமா தம்ப வணிபுயத்தா ரன்றியே
ஆடிமா தம்பார்கண் ணீர்மாற்றி—நீடியயல்
போக்குமோ வன்றாய் புலவர்மிடி யைக்கொடையால்
நீக்குபொன் னுச் சாமிநிரு பன். (௩)

பொன்னாரம் பூணும் புகழ்ப்பொன் னுச் சாமிவள்ளல்
துன்னாரா ராமன் றுயர்புரிவான்—மன்னனிதேன்
நற்கரும்பு மற்சுரும்பு நற்கரும்புங் கைக்கொளும்வேள்
எற்கரும்புண் ணுப்கவெய்வ னே. (௪)

அளகைப் பொறித்தகொடி யண்ணலடி போற்றும்
அளகைக்கோ னும்பொன் னுச் சாமி—துளிமதுத்தார்
தந்தான் மதனடங்கத் தண்மதியந் தானடங்க
இந்தாவிந் தாமுகத்தா யீது. (௫)

செவ்வே றிகழ்கரன் மாமலர்ச் சேவடி சிந்தைசெய்யும்
தெவ்வே றிகல்பொன் னுச் சாமிபூ பாலனற் சீர்க்கிரிவாய்
வெவ்வே றினமணி மேவமு தக்கட னீர்மறைத்து
உவ்வே றினமத கவ்வினைக் காட்டலென் னெஞ்சொடியே. (௬)

கைக்கார் நிதிதரு தேனுசிந் தாமணி கன்னன்கார்த்தி
கைக்கார் நிகரல வாங்கொடை யோன்பொன் னுச் சாமிகடக்
கைக்கார் வரையிற் பவனிவந் தான்கண்டு மால்கொள்காரி
கைக்கார் துணைபுரி வாரிற வாது கருணைசெய்தே. (௭)

என்றுகண்ட விந்துவைப்போ லிவண்முகஞ்சோர்ந் தாளம்மா
என்றுகண்ட னம்பாலு மெனவயிலா னென்கண்ணே
என்றுகண்டங் கம்மவழைந் திடினுமுறை யாக்கினிக்கே
என்றுகண்டன் னீர்தடப்பா யெழிற்பொன்னுச் சாமியன்னே.

வாராரக் கொங்கைபுல்ல மால்பொன் னுச் சாமிவள்ளல்
வாராரா வெல்லா மதியழலாந் தென்றலன்றில்
வாரார் கலியொலியும் வருத்தமன நொந்தனள்சொல்
வாரார்நீ யல்லாலம் மன்னர்பெரு மான்றனக்கே. (௯)

போதம் புடனே மதியளிநற் பூங்குயிறென்
வாதம் புரிதுயரால் வாடுமிவ ளைப்புரப்பாய்
போதம் புரமெரித்தோர்க் கோதும்வேள் பொற்கமல
பாதம் புனைபொன்னுச் சாமியெனும் பார்த்திபனே. (௧௦)

அச்சுப் போற்புல வோரை மதித்திடு மண்ணை லேபொரு மங்கசன் வாளியாம்,நச்சுப் போது துறக்கத் துறந்தன ளுறும் பூணுந் துகிலு மிவடனம், கச்சுப் போனதுங் காணா் முகவைவாழ் காவ லாவள கேச னிவள்கண்டும், கைச்சுப் போனக முண்டிலள் கெண்டைநேர் கண்ணி யைப்புரப் பாய்பொன்னுச் சாமியே. (௧௧)

அத்தி கத்த வடுத்துக் கராவினை யட்ட வாழி நெடுமான் மருகனற்,சத்தி கத்தன்சந் தாசலச் செந்தூர்வாழ் தாரு காரி வலாரி மகணைகைப்,பத்தி முத்துக் குறத்திம ணாளனைப் பணியு நம்பொன்னுச் சாமி மகிபனைத்,தித்திக் கத்தகு மென்மொழி கூறிநீ சேரச் செய்திடு வாய் மடக் கிள்ளையே. (௧௨)

ஆரம் பூணும் வரைக்குய மீதிலே பகாங்க வேட னலர்க்கணை தூவவே,ஆரம் பூணுண் டுகிலுந் துயிலுநல் லம்மனைகழுங் கும்மடக் கிள்ளையும், ஆரம் பூணுந் துறந்துமெய் சோர்ந்தன ளவளைக் காத்தனைத் தாள்வதுன் பாரமே, ஆரம் பூணுடை நற்குந்த வீரனே யண்ணை லே பொன்னுச் சாமிகு பேரனே. (௧௩)

எங்குந் தம்புக ழோங்க வளித்தழு வேழு வள்ளல் களுமிவ னீகையால், தங்குந் தங்கு மிவற்கே புகழெனச் சாற்றுஞ் சற்குண னும் பொன்னுச் சாமிமா,தங்க மேற்கொடு போந்தன னோர்தினஞ் சாரும் வீதியிற் கண்டார் மயல்கொடு, சங்குந் தங்கலை யுந்தரி யாதுளந் தளர்ந்து நாணமுந் தாமிழந் தார்களே. (௧௪)

மட்டுத் தார்க்கணை யான்மதன் மாதினை வருத்தத் தான்மன நொந்து மயங்கிப்போர்,கட்டுத் தார்புர விக்கொரு வீரநின் கருத்துத் தானிரங் கிப்புய மேவுபூ, மொட்டுத் தார்தர வாங்கி வரச்சொனுண் முத்தத் தார்நிரை யொத்த முறுவலாள், தட்டுத் தானுரை யாம லருளிச் சந்த்ர னேபொன்னுச் சாமிந ரேந்திரனே. (௧௫)

பாலனத்தை விடுத்துநின் கண்ணிவள் பாலனத்தை விடுத்தன
ள் வேணுகோ,பாலனத்தை யுடையோன் மருகன்கோ பாலனத்தை
யல் பாகனருள்பரன்,பாலனத்தை யணிநாசி வள்ளிகோ பாதபத்மம்
பணிபொன்னுச் சாமிநீ,பாலனத்தைப் புரிசிலை மாரனம் பால்வருத்
தப் படாமலிப் பாவையே. (௧௬)

மானேசரங்கொடுத்தமதனங்கம்விழித்தெரித்தோன்மான்மலர்க்கோ
மானேசர் தவர்பரவும் பரனன்பன் சேதுபதி மன்னன் வாயில்
மனேச ராம்பொன்னுச் சாமிவள்ள லென்னையவர் மருவ நல்ல
மானேச ராதும்வகை நீபுரிந்தா லிவ்வுலகில் வாழ்வேனே. (௧௭)

கோர்ச்சகக்கலிப்பா.

சுரர்க்கோர் சுவையமுதைத் தூநெடுமா லீந்தனன்று
சுரர்க்கோ ரறுசுவைசேர் தூவமுதை யீந்தனைநீ
மண்டலத்தின் மூன்றடிமண் மாலிரந்தான் றீனர்கள்க
மண்டலத்தி னல்குரவு மாறநிதி சொரிந்தனைநீ
எனவாங்கு,
சக்கரத்தா னிருதர்களைத் தான்றணித்தா னாரணனன்று
சக்கரத்தா னுட்பகையைத் தான்றணித்தாய் நீசபையில்
எல்லார் வணக்காடை யீந்தரிமா னங்காத்தான்
எல்லார்க்கு நீயாடை யீந்தபிமா னங்காத்தாய்
நல்லா ரணிகவர்ந்தா னாரா யணனறிந்த
நல்லா ரணியவணி நல்கினைநீ நானிலத்தில்
வான்றரு வெனவே வழங்கு கொடையோய்
மீன்றரு கண்ணினள் விழைவெனு நறவை
உண்டு களித்தே யொளிவிளை சோரக்
கண்டுபோ லனமுங் கொண்டில னணைமேல்
கண்டுயி லாது தொண்டைவாய் துடிப்பக்
காவிநீர் வார வோவியம் போன்றனள்
கருப்புக் கழையைக் குழைத்துத் தேத்தாளி
அருப்புக் கணையை விடுத்தன னனங்கவேள்
வெம்புலி யேறென விண்மிசை யூர்தரும்

அம்புலி யோலிவ ளாவிமேற் ருவின
தோவறு தென்றலுங் காவுறு குயிலும்
தண்ணுறு மஞ் சிந்தும் பெண்ணேவா மூன்றிலும்
சந்தத முடற்றும் வெந்துயர் தணிப்பாய்
நன்னய விராம நாத புரம்வாழ
பொன்னுச் சாமி யெனும்பூ பதியே. (௧அ)

ஆகச்செய்யுள் ௩௧0௭.

---

## நல்லவீரப்பபிள்ளை.

இவர் இராமநாதபுரம் சம்ஸ்தானத்தைச்சார்ந்த முதுகுளத்தூரினர். கொடுமளூர் முருகக்கடவுள் பத்தியுடையராய் அப்பெருமான்மீது பள்ளு, குறவஞ்சி முதலிய நூல்களியற்றினர். இவர் காலம் ஐம்பது வருடங்கட்கு மேற்பட்டது.

* வேண்டா மடாகாலா வேலா யுதப்பெருமான்
ஆண்டுகொண்ட தென்னை யறியாயோ—தீண்டாதே
அப்புறத்தே போடா வறுமுகவன் கண்டக்கால்
தப்பாமற் கொல்வான் க்ஷணம். (௧)

* காலாவென் மீதினில் வந்தா லுனையுங் கடாவையுங்கைச்
சூலா யுதத்தையு நேரே பிளந்து துணிக்கும்படி
வேலா யுதன்வரு வானவன் முன்னுக்குன் வீரியமங்
கேலா தடாதப்பிப் போடா யிவிடம்விட் டெங்கிட்டுமே. (௨)

* கிறுகிறுப் பாவெதிர்த் தாயந்த காபுத்தி கெட்டவுன்றன்
குறுகுறுப் பென்னையென் செய்யுமடாகொடு மூரவன்வேல்
மொறுமொறுப் பாக விருக்குது பாருன் முயற்சியெல்லாம்
வறுதுறுப் பேசெய்து வேறே நமனை வருவிக்கவே. (௩)

* வைவே லுடையவன் கிண்கிணித் தாளை வழுத்திநித்தம்
மெய்யாகப் பூசிக்குந் தொண்டர்தம் மேலுன்றன் வீரமொன்றும்
செய்யாதுன் னுக்கினை செல்லாது நீயுந் திரும்பிமிகக்
கையாரக் கும்பிட்டுப் போடா வெருமைக் கடாநமனே. (௪)

* நமைப்போலும் பத்தர்க்குஞ் சித்தர்க்கு முத்தர்க்கு நாவலர்க்கும்
சுமைப்பார கர்த்தர் கொடுமூர்க் குமரர் துணையிருக்க
எமைக்கா பராச்செய்வை யாறு லுனேபிரண் டாகவெட்டிக்
குமைப்பா னடாநம னேவீர பாகு குரவைப்பிட்டே. (௫)

* கெட்டாய் மதியற் றவனேயென் செந்தமிழ் கேட்டிருந்தும்
முட்டாட் டனஞ்செய் தனையே குகற்கு முறியடிமைப்
பட்டார்க்குன் னுக்கினை செல்லாது நீயிந்தப் பாம்பையிங்கே
விட்டாட்டி னுலுமிங் காடாத டாவிரு தாகானே. (௬)

* நமனுமென் முன்வரு வானு லவன்வரு நாளிலங்கே
யமரர்சும் மாவிடு வாரா வரவதற் கப்புறந்தான்
சமரச மாய்வில கானு விளைவு தானெனவே
குமரனும் பார்த்திருப் பானு விதென்ன கொடுமைகளே. (௭)

* பேயா தடிமுர டாவந்த காபொய்ப் பிரட்டுருட்டா
நீயாவென் முன் னுக்கு வார தடாநெடு மான்மருகன்
மாயாவ தாரன் கொடுமூரன் றந்த வயதெனக்குத்
தோயா விதமென்ன போடாநின் புத்தியுந் துற்புத்தியே. (அ)

* சமராடு துட்டநெட் டூரரைக் கொன்று தகர்த்துவென்றி
அமரா பதிப்பட்டங் கட்டும்வை வேல னறுமுகவன்
குமராதி பன்றிரு நாமநன் மந்திரங் கூறுவர்க்கிங்
கெமராச னேலேயுந் தூதரு மில்லையெக் காலமுமே. (௯)

* பருவத மிங்கில்லை மீனுக்ஷி பேச்சில்லைப் பைம்பொனள்ளித்
தருமுத்து சாமிக்குத் தோற்றலே யேயென் றமையன்றம்பி
யருமில்லை யெங்கண் மிராசில்லைக் கைப்பொருள் யாதுமில்லை
ஒருவரு மில்லை குமராவிவ் வேளைக் குதவுவையே. (௧௦)

ஆகச்செய்யுள் ௩௯௭.

---

## சுப்பிரமணியபிள்ளை.

இவரும் முதுகுளத்தூரினரே. பஞ்சதந்திரம், நாலுமந்திரிகதை, வீர குமாரநாடகம், விடநிக்ரகசிந்தாமணி முதலியவைகளைச் செய்யுளாகச் செய் திருக்கின்றார். கல்வியிற் றேர்ச்சிபெற்றதுபோலவே வைத்தியத்திலும் மிகச் சிறப்புற்றிருந்தனர். இவர் தமக்குத்தொண்ணூற்றைந்தாவது வயதிலே இருபது வருடத்துக்குமுன் தேகவியோக மாயினர்.

* கதியானை மயினடக்குங் கதியானை யருமறையின் கருத்தை யோரா, விதியானைச் சிறையிலிட்ட விதியானை மூவர்களு மேவு மெய்ச்சன், னதியானைச் சரவணநன் னதியானைப் பலவளமு நண்ணுஞ் செந்திப், பதியானை மனத்திலென்றும் பதியானே யருநரகிற் படிவானன்றே. (க)

* சிலைக்கடைக்கு விழக்குனிந்துப் பூந்தோட்டங் கொள்ளை கொண்டு சேர்ந்து பின்னை, முலைக்கடைக்குங் கலைக்கடைக்கு முந் நூறு கணைமதனன் மூட்ட நெஞ்ச, மலைக்கடைக்கு மச்சுடலும் வாடியுறங் காள்விழியு மட்டும் வாசற், றலைக்கடைக்கு மனைக்கிடைக்குஞ் சுழலுவதை வேலனுங்கார் சாற்று வாரே. (உ)

* சினத்தடங்காச் சமர்புரிய வில்வளைத்தான் மதன்கணைகள் சேர்த்தான் வாரிக்,கனத்தடங்கா வொலிசெய்தான் சதிரவன்போன் மதிவந்தான் கண்டாள் சோர்ந்த, மனத்தடங்கா ளுயிரவளை மருவுவாய் மலரணையில் வளர்பூஞ் சாலிப், புனத்தடங்கா வளமிலகு செந்தினக ரத்திருக்கும் புனித வேளே. (ங)

* பொருக்கலக்க மதன்பகழி புகுந்தவழி யூடுதென்றற் புலிபோற் பாய்ந்து, உருக்கலக்க மதிமயங்கி யனம்வெறுத்தாள் சிறுபேதைக் குள்ள மையற், றிருக்கலக்க வொருவரால் முடியாது மலரணையிற் சேர்வாய் சூரைக், கருக்கலக்க வேலேவு செந்திநக ரத்திருக்குங் கடம்ப வேளே. (ச)

* குவித்தனத்தைக் குறிவைத்தே மதன்கோடி கணைதொடுக்கக் கொதித்து நெஞ்சங்,கவித்தனத்தை வெறுத்தாள்பின் மலரணையிற் கண்டுயிலா டன்கை யாலே, செவித்தனத்தைத் தூதனுப்பச் சேணிலே பறந்ததுபின் செய்வ தோராள்,கவித்தனத்தை யறிந்திரங்குஞ் செந்திநக ரத்திருக்குங் கடம்ப வேளே. (ரு)

* புன்னைக்கா யுள்ளளவு தனமுமில்லை கலவிநயம் புரியாள் பேதை
தன்னைக்காயுதன்மதியோ தணியவில்லைமன் மதன்கைசலியான்பெற்ற
வன்னைக்கா யுள்ளளவு மாறாதே யித்துயர மறிந்தே சென்று
தென்னைக்கா யுதிர்சோலை சூழ்செந்தில் வேலவற்கார் செப்பு வாரே.

* சூதனைய தனத்தி[illegible] துறந்த புண்ணியன், வேதனை[illegible] ...னவ வளவோ மேன்மேற் கொண்ட, காதனைய தனத்தைவசை பேசவுங் கற்கண்டுபோல் கசக்குதென்ற, சாதனைய தனந்தனைவெறுத் தாளொனவும் வேலனுக்குச் சாற்று வாயே. (எ)

* முத்தையலைக் கொடியைபங்கை குழலிடைக்குச் சரியெனவும் மொழியப் போகா, இத்தையலைக் கொடியபதன சல்லடைக்கண் ணுதநுனைக்கா லென்செய் வாள்பூங், கொத்தையலைக் கொடிப்பவளத் தனியைவெறுத் தாரநகன நொற்றமோலி, பத்தையலைக் கொடியைவிட்டு மான்மருக னுக்கிதனைப் பகரு மானே. (அ)

* சுபமெகிபார் கனிப்பவிலை பனைவரை யோய்விலைவிற் றொட்ட னையார், கெடுமதியார் மதனகீழ போடவில்லை மென்மலர்ப்பூங் கிள்ளை யன்னாள், பமதியார் சகிப்பார்தென் செந்திநக ரத்திருக்கும் பரமனிக்க, நமதியார் சகிபேரீ யாகிலும்போய் வருத்தமெல்லாம் நவிலு வாயே. (கூ)

ஆகசெய்யுள் ருகூஉகூ.

---

## வசைகவி ஆண்டான் கவிராயர்.

இவர் பாண்டிநாட்டில் ஒட்டப்பிடாரத்தில் பிறந்த வைணவ வேதியர். வசை பாடுவதையே மேற்கொண்டிருந்த காரணம்பற்றி வசைகவி என்னும் பட்டம்பெற்றனர். நூறு வருடங்கட்கு முற்பட்டதிவர்காலம்.

ஆவுடை என்னுந் தாசிக்குப் பொட்டுக்கட்டியபோது கூறியது.

* நீண்டபி ரான்கட்டி னன்றிரு மாதுக்கு நெட்டரவம்
பூண்டபி ரான்கட்டி னனுமை மாதுக்குப் புண்டரிகம்
மூண்டபி ரான்கட்டி னன்கலை வாணிக்கு முன்னற்சிக்கல்
ஆண்டபி ரான்கட்டி னன்றிரு நாணித்த வாவுடைக்கே. (க)

* பேசிக்கல் லாரமுந் திங்களும் போனட்புப் பேணியரை
வாசிக்கல் லாலரைக் காசுங் கொடார்கடன் வாங்கினதை
யேசிக்க லாக வெடாதுவி டாரிவ ரென்னசென்மம்
சீசிக்க லாருற வாகாது காணிச் செகதென்றுமே. (உ)

* உக்ராணப் பையனுமோ வொன்றுதந்தா லொன்றுதரான்
அக்ராரச் சேஷிபுமோ அப்படித்தான்—இக்கறியில்
உப்பா புளியா ஒருகறிபு நீர்மோரும்
அப்பாவி தாரர்லே யாம். (௩)

* வாயெரியக் கைபெரிய வயிறெரியச் சட்டிவைத்து வறுத்துக் கொட்டிக், காயெரியக் கடினமுட னரைவயிற்றுக் கன்னமிட்ட கடினக் காரி, தாயெரிய மகளெரியச் சேஷியெனு மொட்டைமுண்டை தலைமேற் பற்றித், தீயெரியக் கண்டக்கா லென்னுடைய வயிற்றெரிச்ச றீருந் தானே. (௪)

* கானை நகர்கண்டேன் கன்மவினை யைத்தொலைத்தேன்
ஆனைமடு விற்றீர்த்த மாடினேன்—ஞானம்
பொருந்தினேன் காளீசர் பொற்று மரையில்
வருந்தினேன் பெற்றேன் வரம். (௫)

ஆகச்செய்புள் ௩௯௩.

## பூலாறுசாமிபிள்ளை.

இவர் முதுகுளத்தூரினர். இவர் கவிகள் மிரம்ப வியக்கத்தக்கன. சென்ற சருவதாரிஞ் ஆடிமீ த்தில் சிவபதமடைந்தனர். இவர் குமாரர் ஆறுமுகம்பிள்ளை யென்பவரும் மதுரை யமகவந்தாதி முதலிய நவப்ரபந்தங் களும் அரிச்சந்திரவெண்பாவும் பாடிய வித்துவானே.

பொன்னுச்சாமித்தேவரவர்கள்பேரிற் பாடியன.

* மதிக்கணைநெ றித்தபுரு வச்சிலைபின் மாட்டிக்
கதிக்குமடை யாரிலக்கங் காட்டி—மதித்தெவரும்
அஞ்சப் புவிபுரக்கு மண்ணல்பொன்னு சாமிமன்னன்
தஞ்சத்தை யாரடையா தார். (௧)

* கச்சணி கொங்கை மடவார்கண் மோகன் கனம்பெருகும்
அச்சுத னமெங்கண் மால்பொன்னுச் சாமி யணிவரையில்
உச்சித மாமத யானையி லேறி யுவந்தொருபெண்
தச்சன் படைக ளிரண்டேற்றி வைத்தன டார்குழற்கே. (௨)

* புதுமண்ட பத்திற் புதிதாய்வந் தோரை
முதுகண்ட கோளமட்டு முட்டி—மொதுமொதென

எல்லையிலா மூட்டைவெளி யேற விடாததினுற்
றொல்லை வினையினைந் தோம். (௩)

* போம்போமென் றந்தணரைப் போக்கின னன்மையுறு
தாம்பூலம் வந்ததையுந் தள்ளினன்—வீமபாய்க்
கடுகடுத்தான் றாவற் கருப்பணசிங் காரன்
வெடுவெடுத்தான் செல்கால மே. (௪)

* பார்ப்பா ரெனப்பார்க்கும் பாற்கரன்கண் பார்குமுன்னே
சேர்ப்பாம் பொருளையெனத் தெனகமுதிக—கூர்பபாலம்
போடுவபோன் மண்ணைவெட்டிப் போட்டோவர் சீயர்பொருள்
தேடுவதை யென்புகல்வ தே. (௫)

ஆகசசெய்யுள் ௬௬௩௬.

## அழகிய சொக்கநாதபிள்ளை.

இவர் திருநெல்வேலியிலே, வேளாளர்மரபிலே, தசசனல்லூர் வன்னியப்ப பிள்ளைக்குப் புத்திரராய்ப்பிறந்து கல்வியிற்றேறி நெல்லைக்காந்திமதியம்மை பேரில் பிள்ளைத்தமிழ், அந்தாதி, மாலை, இவரையாதரித்து வந்த இராசவல்லி புரம் முத்துசாமிபிள்ளை பேரில் காதல் முதலியபலநூல்களியற்றினர். இவ ரிற்றைக்கு 25 வருடத்துக்குமுன் தேகவியோகமாயினர்.

* வேழமுகத் தோன்றலைவில் வினமணிபார் நெல்லைநகர்
வேழமுகத தோன்றலைவி மெய்பபுதலவன்—வாழும
ஒருகோ டுடையா னுளமபதியா தார்க்கு
வருகோ டுடையானுண் மை. (௧)

* மேவினிய பேரமுதின் மிக்கான வாக்குநல்கும
பூவினர சாட்சி பொருநதநல்கும—நாவினிடத
தாள்கமலத் தாளபயத் தாள்வரதத தாளெங்கினத்
தாள்வெணிறத் தாள்கனகத் தாள். (௨)

முத்துசாமிபிள்ளைபேரிற் பாடியன.

### சிலேடைகள்.

சிவனுக்கும் மகாவிஷ்ணுவுக்கும்.

* ஆனைமுகங் காணுதலா லஞ்சக கரங்கொளலான
மேனியுமை சேர்வணத்தால் வெண்கோட்டால்—நாணிலத்தின்

மங்காத கீர்த்திபெற்ற வள்ளல்முத்து சாமிமன்று
கங்கா தரன்றிருமால் காண். (௩)

சிவனுக்கும் தேங்காய்க்கும்.

* கல்லா லடியுறலாற் கண்மூன் றிருப்பதனால்
எல்லோரும் பூசைக் கெடுத்திடலால்—வல்லோடு
கொள்ளுகையாற் கங்கா குலமுத்து சாமிமன்று
கள்ளிதழி யானிகர்தேங் காய். (௪)

சிவனுக்கும் வாழைப்பழத்துக்கும்.

* நஞ்சுந்தின் னப்பெறலா னற்றோ லுரித்திடலான்
மிஞ்சுங் கனிதலை மேற்கொளலால்—விஞ்ச
உரமருவுஞ் சீர்ப்பணியா லோங்குமுத்து சாமீ
பரமசிவன் வாழைப் பழம். (௫)

விஷ்ணுவுக்கும் கைக்கடியாரத்துக்கும்.

* சக்கரத்தி னலரவந் தாங்குதலி னேடுமுள்ளொட்
டக்கரத்தி னல்வேலை யார்வதினன்—மிக்கவன்பர்
முக்கியமாய்க் கைக்கொளலான் முத்துசுவா மித்துரையே
கைக்கடியா ரந்திருமால் காண். (௬)

மகாலட்சுமிக்கும் தேருக்கும்.

* சக்கரங்கொ ளச்சு தனையுறலாற் பூமேலே
புக்குகையான் மிக்கவடம் பூட்டுகையால்—தக்ககொடை
ஐந்தருவை நேரு மதுலமுத்து சாமிமன்று
செந்திருவை யொப்பாகுந் தேர். (௭)

மன்மதனுக்கும் நெருப்புக்கும்.

* கரும்புகையி னலெரியுங் காட்சியினல் யாரும்
விரும்புதலான் மையல் விளக்க—வரும்பொலிவால்
எத்திசைக்குங் கீர்த்திபெற்ற வெங்கண்முத்து சாமிமன்று
சித்தசனை யொப்பாகுந் தீ. (௮)

வேசைக்கும் உப்புக்கும்.

* மெத்தவிருப் புள்ள விடமெலியத் தீங்குசெய்தே
எத்திசைக்குங் கைச்சரச மிட்டிடலால்—நத்தளப்பான்

மெய்ப்பொருளை யீட்டுதலால் வேண்முத்து சாமிமன்னு
வுப்புவே சைக்கிணையா கும். (௯)

சவுளிக்கடைக்கும் வேசைக்கும்.

* ஆர்வந்தா லுஞ்சேலை யைத்தூக்கிக் காட்டுதலால்
பார்வையினு லேபணங்கைப் பற்றிடலால்—சேரும்
அவிகயத்தாற் றேடுதலி னுன்முத்து சாமீ
சவுளிக் கடைநிகர்வே சை. (௧௦)

வேசைக்கும் நாய்க்கும்.

* ஆட்டுக்கா வற்படலா லாரிடத்தி லுநயப்புக்
காட்டிச் சுணங்கிக் கடித்திடலால்—நாட்டிலெங்கும்
போமியல்பாற் றம்மினமேற் போராட லான்முத்து
சாமிமன்னு நாய்க்கிணைவே சை. (௧௧)

பேய்க்கும் வேசைக்கும்.

*ஆட்டுவிக்க வாடுதலா லாரையும்பற் றிப்பிடித்துச்
சேட்டைசெய்ய லான்மயக்கஞ் சேர்த்திடலால்—கூட்டமதால்
தாய்க்கிணையாய் வாணர்தமைத் தாங்குமுத்து சாமிமன்னு
பேய்க்கிணையாய் வேசைகளைப் பேசு. (௧௨)

கொங்கைக்கும் மாமரத்துக்கும்.

* பட்டையுமேன் மூடுறலாற் பைஞ்சினையுங் காட்டிடலால்
இட்டவடுக் காயத்தோ டெய்தலினுல்—கட்டுரைக்கின்
மீதும் பசப்புறலால் வேண்முத்து சாமிமன்னு
மாதர்முலை நேர்மா மரம். (௧௩)

கொங்கைக்கும் யானைக்கும்.

* வன்பிடியை மேவுகையால் வட்டவடி வாலுறலால்
இன்பமா தங்கமென்று மெய்திடலான்—முன்புசினந்
தேமற் பொருந்துதலாற் செல்வமுத்து சாமிமன்னு
காமர்முலை நேராங் கயம். (௧௪)

கொங்கைக்கும் பணியாரத்துக்கும்.

* காம்பிற் சுவைக்கக் கசக்கரசங் கக்குதலால்
ஆம்பருப்ப தான்மா வதிலுறலால்—கூம்புமிடை

மங்கையர்க்கு மன்மதன்போல் வந்தமுத்து சாமிமன்னு
கொங்கைபணி யாரமெனக் கூறு. (கரு)

பெண்குறிக்கும் தேங்காய்க்கும்.

* அடித்துடையின் மேல்விரியு மாசிசுவை யாக்கும்
வெடிப்பிலே நீரொழுகு மெய்யாய்—படைப்பதுடன்
அங்கங் குளிர்ந்துருள்வ தாகுமுத்து சாமியெனும்
கங்கைகுலா பெண்குறிதேங் காய். (கசா)

பெண்குறிக்கும் கடியாரத்துக்கும்.

* தண்டுமுள்ளே யோடத் தனியே மணியடிப்பான்
மிண்டிநின்றக் காற்றிருப்பி விட்டிடலால்—கொண்டமைய
மல்கக் கரமிடலால் வள்ளன்முத்து சாமிமன்னு
அல்குல்கடி யாரமென லாம். (கஎ)

பூமரத்துக்கும் பெண்குறிக்கும்.

* ஏற்றவிறக் கத்தா லிதழ்விரியப் பூப்பதனால்
காற்றுண் டரவமென்றுங் காட்டுதலால்—ஊற்றிறைநீர்
உண்டாவ தாலின்ப மோங்குமுத்து சாமிமன்னு
கொண்டாடும் பூந்தருவல் குல். (கஅ)

நெல்லுக்கும் பெண்குறிக்கும்.

* சாதப் பொலிவுறலாற் றண்டுலவித் துள்ளுறலான்
மாதவி டாயும் வருதலினால்—பாதம்வைத்துக்
கல்லுக்குட் பெண்ணேவரக் காணுமுத்து சாமிமன்னு
நெல்லுக்கு மல்குலுக்கு நேர். (ககூ)

அம்மிக்கும் பெண்குறிக்கும்.

* அரைபடலா னீள்குழவி யைப்பெறலாற் பூப்பால்
வரைபடலா லாங்கு வழிப்பால்—விரலிடலால்
வீறு புகழ்படைத்த வேண்முத்து சாமிமன்னு
கூறுமம்மி நேர்பெண் குறி. (உ0)

மிருதங்கத்துக்கும் கலவிக்கும்.

* மார்போ டணைத்து மடிமே லெடுத்துவைத்துத்
தீர்மானங் கண்டடிக்குஞ் செய்கையினால்—சேர்நாதஞ்

சார்ந்தகரு விப்பழுக்கத் தான்முத்து சாமிமன்ன
ஆர்ந்தமத்த ளங்கலவி யாம். (உக)

சந்திரனுக்கும் புல்லுக்கும்.

* கூடி வளர்ந்து குறைபடலாற் பைத்தலைவா
னீடுரக வாயுறலா னேர்மூல—நாடுதலான்
மெய்த்தவள மாய்நிலவாய் மேவிடலான் முத்துசுவா
மித்துரை யேவிதுபுல் லாம். (உஉ)

தாம்பிரபன்னிக்கும் சந்திரனுக்கும்.

* மீனைப் பொருந்திடலான் மிக்ககலை தோய்ந்திடலால்
தானக்க மண்டலமே சார்ந்திடலான்—மானந்தால்
அம்புவிக்கோ ராபரண மானமுத்து சாமிமன்ன
செம்புநதி நேர்சந் திரன். (உ௩)

பாவிகளுக்கும் மொட்டைப்பனைக்கும்.

* கருத்துட னுள்ளீரங் காணா ததினால்
குருத்துரோ கத்தைமிகக் கொண்டே—இருத்தலினால்
காவியைமார் பத்திலணி காதன்முத்து சாமிமன்ன
பாவியைநேர் மொட்டைப் பனை. (உச)

திருடனுக்கும் செருப்புக்கும்.

* அங்கங் களவா லதுகண்டு தைப்புறலால்
எங்கு மிதியடியென் றேசொலலால்—வெங்கற்
கரடுமுட்கஞ் சாததினாற் காமர்முத்து சாமீ
திருடனையொப் பாகுஞ் செருப்பு. (உரு)

குரங்குக்கும் சிரங்குக்கும்.

* சும்மா வலிக்குஞ் சொறிந்தாற் றினவெடுக்கும்
அம்மேக முள்ளவரை யார்ந்திருக்கும்—எம்மா
தரங்கண் டளிக்குமுத்து சாமிரா ஜேந்த்ரா
குரங்குந் திரண்டசிரங் கும். (உசு)

மயிலுக்கும் கரும்புக்கும்.

* மேனியெல்லாங் கண்ணுறலால் வேள்விரும்புந் தன்மையினால்
ஆனபசுந் தோகையினா லாடலினான்—மீனவனேர்

மானபரா னெல்லோர்கர் வாழுமுத்து சாமிமன்னு
கானமயி லொப்பாங் கரும்பு. (உஎ)

திண்ணைக்கும் கண்டசரத்துக்கும்.

* செங்கற் பதித்திடலாற் சீரா மெழுகிடலால்
இங்கிதமாக் கோல மிடுதலால்—தங்கவிலை
நண்ணுதலால் வாணர்கட்கு நல்குமுத்து சாமிமன்னு
திண்ணைநிகர் கண்டசரஞ் செப்பு. (உ௮)

யானைக்கும் மரத்துக்கும்.

* தும்பியென்று மேவுதலாற் சூழ்ந்துநிழல் பாய்தலினால்
கொம்பினு லாளேற்றங் கொள்ளுதலால்—கம்பமதான்
மெத்த விலையால் விளங்குமுத்து சாமிமன்னு
மத்தகய மானு மரம். (உகூ)

மரத்துக்கும் பீற்றற்குடைக்கும்.

* பிஞ்சு கிடக்கும் பெருமழைக்குத் தாங்காது
மிஞ்ச வதனுள் வெயிலொழுகும்—தஞ்சமென்றோர்
வேட்டதருண் முத்துசுவா மித்துரைரா ஜேந்த்ராகேள்
கோட்டுமரம் பீற்றற் குடை. (௩0)

ரு-சன். வரப்பாடியது.

* வாதாபோ நேரா வருஞ்சன்சன் சன்சன்சன்
தாதாரு மார்பன்முத்து சாமிமன்சீர்—ஓதுவன்கேள்
ராசவல்லி யீசருக்கு நற்சபைக்கு நாவலர்க்குக்
கல்சூரண மென்றோர் களுக்கு. (௩௧)

கா... ல்லுக்கு பருந்தோசைசுட்டாளப்பா, என்றுபாடியது.

...மிமன்னு நீள்போர்க் களத்துறங்கிழ்ச்
* நீதிமுத்து சா... ...க்கத் தக்கதுபார்—மீதில்
சாதியர்தின் பார்... ...றன் னச்சுதனு மேய்த்தான்
அருந்தாபந் தீர்ப்பதுபோ... பா.
பருந்தோசை சுட்டாளப... (௩௨)

பணியாரம் தேன்கு... ...ல் அப்பம், என்றுபாடியது.

மாயனுக்கோர் பாயல் வனிதையர்க்கோ ராபரணம்
...யினங்கள் சேர்ப்ப திசைவளர்த்தல்—தீயை

அணியீசன் றேவியசை யாகுமுத்து சாமீ
பணியாரந் தேன்குழலப் பம். (௩௩)

கழுதைக்கு முட்டிதட்டுகால், என்றுபாடியது.

* நேசமுத்து சாமிமன்னு நேர்சமணர் மீதேறல்
காசினியோர் பொங்கலிடல் கள்ளிறக்கல்—பேசப்
பழுதிலடைக் காயேந்தல் பாதியிலே பாதி
கழுதைக்கு முட்டிதட்டு கால். (௩௪)

காயென்றெடுத்து இலையென்று முடித்தது.

* காய்சினமில் லாதான் கருணைமுத்து சாமிவள்ளல்
வாய்மையுளான் பாடி வருவோர்க்குத்—தாய்நிகர்வான்
எல்லையில்லா மாண்பொருளை யீவா னிவனிடத்தில்
இல்லையென்ற சொல்லே யிலை. (௩௫)

படித்துறையென்றெடுத்துக் குளக்கரையென்று முடித்தது.

* படித்துறையும் வாணரைக்காப் பாற்றிடவும் பொல்லா
மிடித்துயரா லேழையரை மேன்மேல்—துடித்துநிதம்
நையவிடா தாண்டிடவு நாட்டன்முத்து சாமியெனும்
ஐயவுன்போல் யார்க்குளக்க ரை. (௩௬)

நேரியலென்றெடுத்து வாரியலென்று முடித்தது.

* நேரியலு மெங்க ணிதிமுத்து சாமிமன்னு
நாரியர்தங் கண்குழற்கு நாட்டுவமைப்—பேரிதன்றி
மீனை யுயர்த்தசிலை வேட்கு முரசெனலாம்
ஆனையெனலாம்வாரி யல். (௩௭)

கைதேறாத ஒருவன் மத்தளம் அடித்ததைப்பார்த்துச் சொல்லியது.

* எங்கண்முத்து சாமிமன்னு விங்கே யொருவன்மிரு
தங்கமதை யோயாமற் றட்டினான்—அங்கங்கே
கூடிநின்ற பெண்களெருக் கொள்வதற்குக் கூடையெடுத்
தோடிவந்தார் நீபார்த்தா யோ. (௩௮)

* கூடலமர் கோயில்செல்வோர் கும்பிட் டுரைப்பதொன்று
கேடில்குய மக்களுடன் கேட்பதொன்று—நாடுகுடுக்

கையாக்கச் செப்புவதுங் கப்பல்விஷ்ணு வின்பெயரும்
மெய்யாய்த்தா முத்துசுவா மீ. (௩௯)

* முன்னெழுத்தில் லாக்கமலை மொய்ம்பா முழுக்கமலை
மன்னும்வத னநடுமே வாக்கமலை—தன்னின்மிகு
முத்துசுவா மித்துரையே முற்றுங் கவியிலின்பம்
வைத்துங் கமலை மகிழ். (௪0)

* நல்லவச னம்பெறலாம் ராத்திரிக்கு மிக்கசுகம்
வில்லிசையா முத்துசுவா மித்துரையே—மெல்ல
அடிக்குங்காற் றுலுமெலி யாதிருக்க வின்னே
கொடிக்குளம்போய்ச் சேர்ந்தாற் குணம். (௪௧)

* நீதாவா தென்னவனே கந்தரத்தி னிடியின்பம்
நீதாவா தென்னவனே கந்தரத்தின்—மீதுமயின்
மோகமன்றே கல்விதெளி முத்துசுவா மீமதன
சோகமல ரேவினனி தோ. (௪௨)

* கோமகனே யங்குன் கொடைக்கென் கொடையதிகம்
வாமமுத்து சாமி மகிபாலா—நீமுன்
ஒருகை தனங்கொடுத்தா லுண்மைவைத்திப் போதே
இருகை தனங்கொடுப்பேன் யான். (௪௩)

* ப்பாதணைவாய் வாதுரையே பூமணம்போ லேயெனையிப்
போதணைவாய் வாதுரையே பூசமேலன்—மாதயைசேர்
அஞ்சொன்முத்து சாமிமன்ன வைஞ்சரத்தை மோதியென்மேல்
வெஞ்சினத்தி லேவினன்மா வேள். (௪௪)

* விரும்ப வனிதையர்சூழ் வேண்முத்து சாமீ
வரும்பவனி தையல்கண்டுன் மாலே—பொருந்திநிதம்
தாகமிகுந் தாள்வளையுந் தானையிழந் தாள்கரையும்
தேகமறந் தாள்சொலவந் தேன். (௪௫)

* மலைகடலை யிங்கு வரவிடுத்தா ளையா
உலகமதை நீயனுப்பி னுய்வாள்—பலகலைதேர்
முத்துசுவா மித்துரையே முத்துசலா பத்துடனே
நித்தனுமே யப்புணர்வாய் நீ. (௪௬)

* இந்திரவில் வாளுதலா ளெப்பொழுது மையல்கொண்டே
இந்திரவில் வந்தழகை யீந்ததனால்—சந்ததமும்
வாடிமுத்து சாமி மகிபதியை நீயழைத்து
வாடியென்றாள் சேரவரு வாய். (சஎ)

* தூதுவண்டே நீசென்று சொல்லுமா லாகியுட
லேதுவண்டே வாடினண்மே லேவாதா—காதுவண்டேன்
காவித்தார் வேட்ட கனிமுத்து சாமிவள்ள
லேவித்தா ரத்தொடணை யென்று. (சஅ)

* சுந்தரஞ்சேர் முத்து சுவாமிமால் கைத்தலமும்
அந்தரஞ்சேர் மங்குலுமொப் பானதுவே—சந்ததமும்
நன்றுபத முண்டாக்கி நாட்டிற் கலியகல
அன்றுகன கம்பெய்ய லால். (சகூ)

ஆலமரம், அரசமரம், தென்னமரம், தேக்குமரம், பாக்குமரம்
ஆகிய இந்த ரு - மரங்களையும் அமைத்துப்பாடியது.

* ஆலமரம் போல்விழியின் ளுண்டே லரசமரத்
தாலழிந்தான் றென்னமரஞ் சம்பெய்தான்—மேலுமின்பம்
தேக்குமரம் பைக்கிணையாட் சேர்முத்து சாமீயன்
பாக்குமர னம்பிழைக்கப் பார். (ருo)

மும்மண்டில வெண்பா.

* வையமே நித்தமும் வைக்குமன்பாய் நீமொழிவாய்
தையலே மைத்திரத்திற் றக்கவரும்—மையல்கொளும்
சத்தியத்திற் சற்குணத்தின் மூவரச ருங்கூட
முத்துசுவா மிக்கிணையா மோ. (ருக)

* வைய மதனிற் றேவடியாண் மகனென் றிருப்போர் களிற்சிலபேர்
மான மின்றித் தமக்கைதங்கை மாரை யெவர்க்குங் கூட்டிவிட்டுக்
தையற் கூரார் கொடுத்தபொன்னுற் றுமும் பிலுக்கிக் கொள்வார்தந்
தரத்தை நினையார் பிரபுக்க டமைப்போற் றிரிவா ரன்னவரை
வெய்ய நாய்பேய் கழுதைசவம் விளக்கு மாற்றுக் கிணைசொல்ல
வேண்டு மென்றே முத்துசுவா மிப்ர புரைக்க வவ்வாறே
ஐயோ வவர்க ளவைகளுக்கா ளுலு மிணையா கட்டுமென்றென்
றைற்கூ டுமட்டும் பார்த்துமிணை யாகா ரவருக் கவர்சரியே. (ருஉ)

அடிமடக்கு.

* வனசத் துருவே யானனங்காய் வனசத் துருவே யானனங்கை
மாரன் பொன்று வதுமறந்தார் மாரன் பொன்று வதுமறந்தான்
பனகப் பாய லானனையாய் பனகப் பாய லானனியான்
பாலும் கைச்ச ரசமாக்காய் பாலுங் கைச்ச ரசமாச்சே
தனியா யமனு வனையுமுற்ற தனியா யமனு வனவுடைதா
சகசத் திரங்கட் டியதுரையே சகசத் திரங்கட் டியதுரையேன் [ய்
முனியார்மலைத்தென் றலைவிதிக்குமுனியார்மலைத்தென் றலைவிலக்கா
முத்து சாமீ யணைவாயே முத்து சாமீ யணைவாயே. (௫௩)

இடைமடக்கு.

* தனதா முத்து சாமிமன்னு தயவாய் முத்து சாமியென்றே [யால்
தையு லுடைவாள் விழிகளினீர் தான்சோர்ந் துடைவா ளுருவெளி
அனைமார் கைக்கும் பாவில்வைத்த வமுதுங் கைக்கும் பாகமென்பள்
அனங்க னைந்து மலரான்மின் னகந்தா னைந்து மலறுகின்ற [யா
தெனசொல் வேன்சங் கொடுமையிடா ளிவட னவசங் கொடுமையை
எழுந்த மாதைப் போதைவெல்ல வினியுன் மாலைப் போதைநல்கி
மனதே கனிவா யிதமுறவே மாலாங் கனிவா யிதழ்பருகி
மதன கலவிப் பொலிவுடனே மயல கலவிப் பொழுதணையே. (௫௪)

கடைமடக்கு.

* மாரன் வளைத்தான் கைக்கனலே மதிது வுதுகொங் கைக்கனலே
வளையார் கடலுஞ் சத்திக்குதே வள்ள வடுபால் சத்திக்குதே
சூர மிகுந்தென் காற்புலியே சுழற்று தெனைப்பல் காற்புலியே
சோர்ந்தேன் றுகிலுஞ் சங்குமே தூற்று மடவார் சங்குமே
ஈர மிலையென் வள்ளலுக்கே யினியென் செய்வேன் வள்ளலுக்கே
யிறைவன்பாலிந் நீதத்தையே யியம்பி யழைப்பாய் நீதத்தையே
வீரன் முத்து சாமிமன்னை மேவுங் கால்யா னுனையுமன்னை
விழியென்றெண்ணக்கடவேனேவிளம்புன்வார்த்தைகடவேனே.

* முருகனேர் முத்துசாமீ முதலெழுத் தில்லாவிட்டால்
இரவிடு விளக்கிற்சேரு மிடையெழுத் தில்லாவிட்டால்

கருணைசேர் மனைவிபேராங் கடையெழுத் தில்லாவிட்டால்
அரையின்பே ரதுகிறிஸ்து மதக்குரு மரத்தொன்றாமே. (௫௬)

* பவ்வொன் றுகவ்வொன் பான் பயந்து மவ்வஞ்சு
தவ்வஞ்சு கவ்வஞ்சு காட்டச் சாடுவ
னவ்வொடு தவ்வுமூன் றுள்ள நாயக
னௌவிய மிலன்முத்து சாமி யாகுமால். (௫௭)

* பாலையைக் காட்டியம் போதிலைக் காட்டிப் பகைக்கியமன்
ஓலையைக் காட்டிய வேண்முத்து சாமி யுயர்வரைமேல்
வேலையைக் காட்டிய கண்ணேயென் காம விடாய்க்குநறுஞ்
சோலையைக் காட்டி யிளநீ ரிலையென்ற சூதுநன்றே. (௫௮)

* செப்பும் புகழுடை யான்முத்து சாமிதன் றென்றல்வெற்பில்
பைப்பகஞ் சேரெழின் மானே கயிறொடு பம்பரத்தை
எப்பொழு துங்கைக்கொண் டேவிளை யாடு மெனைச்சினத்தே
மெய்ப்புத் தகமெடுத் தோதிவைத் தாயிது வேளையென்றே. (௫௯)

* வரைப்புயஞ் சேர்முத்து சாமிதன் றென்றல் வரையிடத்தே
துரைப்பெணுன் பாற்றனம் பெற்றுவந் தோர்க டொகையிலையென்
றுரைப்பதை நம்பியென் பாட்டையெல் லாமுன் னுடனுரைத்தும்
அரைப்பணங் கூடக் கிடையாமற் போச்செ னதிஷ்டமிதே. (௬௦)

* மழவேற ஞன்முத்து சாமிதன் றென்றல் வரையிடத்தே
அழகான ரூப மயிலேநல் வாழை யடிக்கிடந்து
சுழனுகத் தைப்பிடித் தாட்டவிந் நேரமுஞ் சோர்ந்துமிகக்
குழல்வாசிக் கக்கண்டுங் காணுத தேனந்தக் கோளரவே. (௬௧)

* பொறுக்குந் தயையுடை யான்முத்து சாமி பொதியவெற்பில்
சிறுக்குந் துடியிடை மானேயுன் மோகமென் சிந்தைதனை
அறுக்குதெப் போது மதலாற்பன் னேவுற் றதையறிந்தும் [ந்தே.
முறுக்குடன் றேங்குழ லைக்கொண்டெவ் வாறென்றன் முன்வைத்
(௬௨)

* அரித்திர ளேறனை யான்முத்து சாமி பதுலனென்னை
வரித்திரள் கொங்கை நெருடியெப் போது மலரணைமேல்
உரித்துடன் பால்புனல் போலே கலந்த வொருமையெல்லாம்
பிரித்திட வோமக னேயன்னம் போலப் பிறந்தனையே. (௬௩)

* கண்டிக்கு மென்மொழி மாதர சேயுன் கழுத்திலிட்ட
கண்டிக்கு மிந்த வுருக்கமென் னேகொடுங் காமனையே
கண்டிக்கும் வண்ணநம் முத்துசு வாமிசி காமணியைக்
கண்டிக் குறைகளைச் சொன்னாற்கை கூடுமுன் காரியமே. (௬௪)

* சகியேன் விரக மொருக்கா லுமென்மன சாரவும்வஞ்
சகியேன்வம் பாயென்னைத் தள்ளிவிட் டாரின்று சத்தியவா
சகியேன் படுஞ்சங் கடஞ்சொல்ல வேமுத்து சாமிமுன்போஞ்
சகியேன் வரவின்னங் காணேம்பெண் ணேசொல்லொர் தந்திரமே

* பூவம் பகரும் புவின்மார வேனிந்தப் புத்தியென்முன்
வாவம் பகரும் புருவவில் லாலுன்னை மாட்டிடுவேன்
காவம் பகரும் புகழ்முத்து சாமி கலப்பனென்றே
மூவம் பகரும் புகன்றா ரினிப்பய மோவெனக்கே. (௬௬)

* நஞ்சாதிக் குந்தொடுத் தேயிழுக் காவவ னைத்தொடர்ந்தேன்
அஞ்சாதிக் குந்தொட வேடுணிந் தானென் றயர்ந்தனண்மே
லுஞ்சாதிக் குந்தொழி லாமோவிப் போதி லுமக்கெனகல்
நெஞ்சாதிக் குந்தொழு முத்துசு வாமி நிதிபதியே. (௬௭)

* பசியக லாப மயிற்சாயல் பால்செழும் பாகனைய
ருசியக லாவித மாணித்தம் வாடனன் றேவெவர்க்கும்
வசியக லாவுன் மனந்தா னவளை மருவிலுய்வாள்
சசியக லாமுத்து சாமிமன் னேயிது சத்தியமே. (௬௮)

* வித்தைத் திறத்தி லுயர்முத்து சாமிவந் தானினிமி
கத்தைத் திறத்தின மம்பெய்யும் வேளனு காவெனனுரை
மித்தைத் திறத்தித் திரிப்பலச் சத்திய மேயுன்குழு
தத்தைத் திறத்தித்திக் கும்பா லருந்தடி தாழ்குழலே. (௬௯)

* பொருந்தென் றலைவி சனித்தா ளிவண்மதன் பூங்கணைக்கு
விருந்தென் றலைவிளக் குந்தொனி கேட்டுவிம் மித்தனியா
இருந்தென் றலைவிதி யென்றனள் வேறிங் கிதற்கினிமேல்
மருந்தென் றலைவி தனைச்சேரு முத்துசு வாமிமன்னே. (௭௦)

* குடங்கடங் காதுந் திரண்முலை மேல்வைப்பங் கொண்டுமுத்து
வடங்கடங் காது பொரிந்திடு மேவட வாக்கினிக்கெண்

மடங்கடங் காதுகொண் டாள்விர காக்கினி மன்மதன்மேற்
றொடங்கடங் காதுரைப் பெண்ணையிப் போழுத்ற ஸ்வாமிமன்னே.

* பன்னு ணிலாவில் விளையா டினவை பவத்தையெண்ணித்
தன்னுணி லாமன் மகள்சோக முற்ற சமயங்கண்டு
வின்னுணி லார்கணை தொட்டான் மதனும்மை வேண்டிவரச்
சொன்னுணி லாமல் வருவீரை யாமுத்து ஸ்வாமிமன்னே. (௭௨)

* திணமே கலைவளைக் கண்மிடற் றானுளைச் சேர்வதவள்
குணமே கலைவளை யாவுன் வராமைக் குறிப்பறிந்தால்
வணமே கலைவளை சோர்ந்தா ளவளை மருவுவையி
க்ஷணமே கலைவளைத் தோனருள் சேர்முத்து சாமிமன்னே. (௭௩)

* செஞ்சந் தனந்தனி மார்பினிற் பூசுவ டிவ்யரச
புஞ்சந் தனந்தனில் வேள்கணை சாடப் புலம்புகின்றாள்
நஞ்சந் தனந்தனிட் டத்திலெங் கோடி னவோசொலென்றாள்
தஞ்சந் தனந்தனி யாளுக்கு நீமுத்து சாமிமன்னே. (௭௪)

* எழுமுலைப் பேதை தினமுன் வராமையை யெண்ணியெண்ணி
அழுமுலை வாய்மெழு காகிடு மேனி யயர்ந்திடும்வேள்
செழுமுலை யெய்தனை யா வவண்மைய றீர்துவரி
தழுமுலை யாக்கொங்கை யுந்தருங் காண்முத்து சாமிமன்னே. (௭௫)

* கண்பனி ரண்டுகொங் கைபதி னென்றள கத்திற்பத்துண்
டெண்புரு வம்மொன் பதுகாமத் தாற்குண மெட்டவட்கு
வண்பர டேழு ருதுவா றிடையைந்து மான்முழுந்தாள்
தண்பெரு நான்கணை வாய்ராசி யாய்முத்து சாமிமன்னே. (௭௬)

* துதிசேரு மன்னவன் முத்துசு வாமித் துரையைவிட்டு
விதியோ பிரித்த தறியே னுனையெந்த வேளையுமென்
அதிரூப மாமுகத் தாலேவென் றிட்ட வடத்தைவைத்தோ
மதிநீ யெனக்குக் கொழுந்தீ யெனவந்து வாய்த்தனையே. (௭௭)

* சிங்கார மன்மதன் முத்துசு வாமியைத் தேடியிப்போ
பொங்கார மாமுலை விம்முத டையென்றன் புத்தியெல்லாம்
சங்காரஞ் செய்துகொண் டோடினன் வேளித் ததிக்குதவ
இங்காருங் காண்கில னம்மா வுனையன்றி யென்றனக்கே. (௭௮)

* பலவித லீலைகள் பாராட்டு வாரென்னைப் பஞ்சணையில்
குலவிமுத் தாவென் றோயாமற் கோழிகள் கூவுமட்டும்
புலவிசெய் தானு நலவுசொல் வான்முன்பு போகம்விடான்
கலவியி லென்முத்து சாமியைப் போலெங்குங் கண்டிலனே. (எகூ)

* கலையைப் பிடித்திழுப் பானதி லேயென் கருத்தறிந்து
முலையைப் பிடிக்க வருவானப் போது முனிந்துரைத்தால்
உலையைப் பிடித்த மெழுகாகி யுள்ள முருகுமென்பான்
சிலையைப் பிடித்த மதன்முத்து சாமி செயசிங்கமே. (அ௦)

* வாதாயில் வேளையென் முத்துசு வாமி வரவுமில்லை
கோதா யெனைமதன் கையினிற் காட்டிக் கொடுத்துவிட்டான்
தூதா யனுப்பவென் குல்யாரு மில்லையித் துன்பொழித்தால்
நீதா யெனக்கு நிலைவே றிலையிது நிச்சயமே. (அக)

* அலையடங் காம லொலிக்குதை யாவென் னரையிலுற்ற
கலையடங் காம னழுவுதை யாவுன் கருணையென்மேல்
இலையடங் காச்சின மேனிரங் காவிடி லென்மனக்க
வலையடங் காதினிச் சேர்முத்து சாமி வரோதயனே. (அஉ)

* நிறக்குங் குமமுலை தோய்ந்துமென் மேல்வைத்த நேயமெல்லாம்
மறக்கும் படிகுற்ற மென்னசெய் தேன்பிர மன்விதியோ
சிறக்கும் புகழ்முத்து சாமிக்கென் வாக்கினிற் சீருடனே
பிறக்குஞ்சொல் யாவும் விபரீத மாச்சென்ன பேசுவதே. (அங)

* வழுத்திடுங் கீர்த்திப்ர தாபாவென் முத்துசு வாமிமன்னு
தழைத்திடு மென்றனை வைப்பென்று பேரிட்டுச் சுந்தியிலே
இழுத்துவிட் டாயுனக் கேசரி யாவிங் கெனதுதலை
எழுத்தினை நோவதல் லாலுன்னை நோவ விடமில்லையே. (அச)

* தேனு லுறுமொழி யான்முத்து சாமி தெளிந்தபுத்தி
மானு லுங் கற்று மிதுநாள் வரைக்கென் மனமறியான்
போனு லும் போகட்டு மென்றே யிருக்கப் பொறுக்குதில்லை
ஆனு லுங் கன்னெஞ்ச னம்மா விதைமுன் னறிந்திலனே. (அரு)

* மானே யுனைப்பிரி யேனே யுனதுசெவ் வாயமிர்தத்
தேனேயல் லாற்பின்னைத் தானே யெனையுமிச் சிப்பதுண்டோ

நானே யெனச்சொன்ன முத்துசு வாமி நராதிபனுக்
கேனேயம் விட்ட தெவள்போ தனைசொல்லென் னேந்திழையே. ()

* பைந்தார் விரும்புகின் றுளொரு மானுன் பவனிகண்டு
சிந்தா மணிக்கு நிகர்முத்து சாமிநிற் சேரவெண்ணி
மந்தா நிலப்புலி யாற்குயி லானில வாலுடல
சந்தாடுைந் தாளுண்மை தந்தாள்வந் தாளணைந் தாளென்னவே. ()

* கழலாடி மீதன்பு சேர்முத்து சாமி தடக்கையைக்கண்
டுழலாடி வண்டிருக் குந்தா மரைக ளுயங்கித்தத்தம்
நிழலாடி டாதொரு காலால் வனத்தினி னின்றுநின்று
குழலாடிக் காலுஞ் சலித்தேகண் ணிர்விட்டுக் கொண்டனவே. ()

* தளங்கும் பிடவெதிர் மாற்றுரை வெல்சமர்த் தாவடுத்தோர்
உளங்கும் பிடர்தொலைத் தாள்சுகு ணவர சுற்றகயம்
விளங்கும் பிடாரி னுனைக்கண்ட மாதர்கை மெல்விரற்ப
வளங்கும் பிடவந்த மான்முத்து சாமி மகிபதியே. (அ௯)

* செற்புல மைக்குந் துயர்தரு தோளியர் சேர்மதனு
பொற்புல மைக்குந் திருராஜ வல்லி புரேசதெவ்வா
யிற்புல மைக்குந் தனையும் விடாப்புலி யேயெனது
சொற்புல மைக்குந் தருவா யருண்முத்து ஸ்வாமிமன்னே. (௯0)

திரிமூர்த்திகளுக்கும் - காய்மரத்துக்கும்.

* பருப்பதம் வெண்மையி னன்முழு மேனியும் பச்சையினல்
விருப்புட னனு தலையுற்ற தாலுன் வியன்பொழிற்குண்
மருப்பொலி கொன்றையன் மாலயன் போலு மரமதுகாய்த்
திருப்பது கண்டுவந் தேன்முத்து சாமிந ரேந்திரனே. (௯௧)

* திடத்தினில் வைத்துனைப் பாடிய காதலின் சீர்த்திகளைக்
குடத்தினில் வைத்த விளக்காக்கி டாதுபொற் குன்றத்துமேற்
றடத்தினில் வைத்த விளக்காக்க வேயுள்ளந் தங்குமன்பென்
னிடத்தினில் வைத்திடு வாய்முத்து சாமிந ரேந்திரனே. (௯௨)

* தொடுப்பார் கவிதையுன் மேற்புல வோரத் துதியறிந்து
கொடுப்பாய் நிதிகளை யப்போது லோபக் குலாமர்கண்டு

தடிப்பாரப் போதகனை தான்கெட்டு நீயுஞ் சரியென்னிலோ
எடுப்பார்கைப் பிள்ளையென் பார்முத்து சாமிந்த்ரேந்திரனே. (௯௩)

* அருத்தம னந்தம் பிரியமும் பேசுவ னன்பினில்வ
ளருத்தம னந்தம் பிழையின்றி வாய்த்தமு காரவிந்தப்
பொருத்தம னந்தம் பிரபுவென் றேயடிப் போரைத்தன்பால்
இருத்தம னந்தம்பி யான்முத்து சாமிந்த்ரேந்திரனே. (௯௪)

* கல்வியி லோசு குணங்களி லோசுமு கம்பெருகும்
நல்வச னங்களி லோபுல வோர்க்குள நல்குரவை
வெல்வதற் கோபெற்ற செல்வத்தி லோவிந்த மேதினியில்
இல்விச யன்முத்து சாமிக்கு நேரெங்கு மேயில்லையே. (௯௫)

* நட்டமுண் டோமுத்து சாமியைப் பாடிநீ ரூவவிர்கள்
இட்டம்வைத் தாற்கலி தீர்ந்திடு மேமுன்ன மேதும்புகல்
முட்டிக் கயவரைப் பாடிய காயித மூட்டைகளைப்
பட்டம தாய்க்கட்டி விட்டாலும் வேடிக்கை பார்ப்பவர்க்கே. (௯௬)

* இரக்கம் பயமற்ற லோபரைப் பாடி யினியவின்பம்
வரக்கம் பனுக்க வறியா தவர்தரும் வண்ணமென்னே
தரக்கம் பனும்புகழ் முத்துசு வாமி சபாசென்றுசெய்
சிரக்கம்ப மொன்று கவிவாணர் துன்பத்தைத் தீர்த்திடுமே. (௯௭)

* காதணி கைக்குகற் கன்பாவென் றேத்துங் கவிஞர்மயல்
காதணி சேரத் தினந்தின மாயிரங் கண்ணுடையான்
காதணி யும்படிக் கீவோன் வயிரக் கடுக்கனையென்
காதணி யாப்புனைந் தான்முத்து சாமிசி காமணியே. (௯௮)

* இரத்தினம் போலும் புவியோர் புகழ விராஜவல்லி
புரத்தினின் மேவிய பாபவி நாச புரவலன்றன்
வரத்தினில் வந்திடு மன்னவன் முத்துசு வாமிவள்ளல்
கரத்தினை நோக்கி மிகநாணும் வானுள்ள கற்பகமே. (௯௯)

* உடையிற் சிறந்தன பீதாம் பரங்க ளுலகின்மிசை
நடையிற் சிறந்தன செங்கா லனங்கண்மன் னர்க்குரிய
படையிற் சிறந்தன குஞ்சரக் கூட்டந்தப் பாமலென்றும்
கொடையிற் சிறந்தன மான்முத்து சாமி குடங்கைகளே. (௪௦௦)

* அரஞ்சி விடாதியற் கூர்வே னிகர்விழி யாய்தருக்கள்
ஒரஞ்சி விரக்கந் தயைபிவன் போன்றன வோசொல்சரா
சரஞ்சீவிக் கச்செய் பவனரு ளான்முத்து சாமிவள்ளல்
சிரஞ்சீவி யாயிருக் கின்றான் கவிஞரா திட்டங்களே. (௪0௧)

* சுந்தரந்தங்கியவதனன்முத்துசுவாமித்துரைபாற்சொல்வாய்பூவஞ்
சுந்தரந்த ரமதாக வேடொடுப்ப துங்கைவளை சோர்ந்துமுண்ணஞ்
சுந்தரந்த னைப்போன்ற கண்ணினின்று நீரருவி சொரியத்தாயே
சுந்தரந்த னித்துயான் புலம்புவதுங் கண்டிலையோதோகைமானே.

* துங்கவிக்குங் குமமுலையா ளிங்குன்விருப் பங்கொடுபூந் துகி லுஞ் சோர்ந்தொ, துங்கவிக்குங் குணமாகி யனம்வெறுத்தாண் மன மகிழச் சுகிப்பா யெப்போ, துங்கவிக்குங் குடையெனவோர் வரை யெடுத்த வாகவிஞர் தொன்னு லாய்ந்தோ, துங்கவிக்குங் குமணனை ப்போ லுதவுமுத்து சுவாமிமன்னு துரைச்சிங் கேறே. (௪0௩)

* மருங்கோதாய் வாய்க்குநான் பயந்துநடக் கவும்வேறு மத னே யாக, மருங்கோதாய் வாடவென்மேற் பெருங்கோப மொடுபுரி ந்தான் மானே கார, மருங்கோதாய் வாசமலர் மார்பன்முத்து சாமி யெனு மகரா ஜன்றன், மருங்கோதாய் வாய்மையுடன் பிரியாம லெ ன்னையவன் மருவத் தானே. (௪0௪)

* கண்டனந்தந் தரஞ்சிமிழ்நித் திலமனைய சொன்மெனடை கா ண்ம ருங்குல், கண்டனந்தந் தரஞ்சிதமின் னுண்முத்து சாமீயுன் கா தல் கொண்டாள், கண்டனந்தந் தரஞ்சிலபுள் ளொலிமுழக்க வேண் டிநமல் கார முன்னைக், கண்டனந்தந் தரஞ்சிறியாள் செய்தேனென் னுரையென்றாள் கருணை செய்யே. (௪0௫)

* கசங்கமஞ்ச விறிடுஞ்சே னுபதியே நின்மீது காத லாய்ப் போ,கசங்கமஞ்ச தாகாலஞ் செயவிரும்பி னேன்வேட்குக் கலக மே ச, கசங்கமஞ்சத் துடையவனுக் கினமறந்தா ளினியவன்றன் கனை க ளெல்லாம்,கசங்கமஞ்சத் தெனையளைவாய் முத்துசுவா மித்துரை யே கருணை மாலே. (௪0௬)

* வாய்ச்சரச மொழிக்குயிலாள் காய்ச்சியபா லுங்குடியா மனு மே செந்தீ, வாய்ச்சரச மெனவுருகிப் போய்ச்சிலை மாசரம் வருஞ்

தாள் பர்த்தா, வாய்ச்சரச ரெனவவள்பால் வந்தனைவாய் செந்தமி ழின் மதுரந் தானே, வாய்ச்சரச மென்றுமுவந் தருளுமுத்து சாமி மன்னு வசிய மாலே. (௧0௭)

* தங்கரவிக் கைக்குள்விம்முங் கனதனத்தாண் மனவிதனத் தால னங்கர், தங்கரவிக் கைக்குனிக்கத் தளர்தலுற்றாள் கொடியமதி தனைரா குப்போ், தங்கரவிக் கைக்குழந்தைக் காவருந்தா தோவுனிரு தயமா குஞ்சேத், தங்கரவிக் கைக்குருதித் தாமரையாய்ச் சேர்வண் முத்து சாமி மாலே. (௧0௮)

* சந்துரைத்தா லேமணக்கு மாதவினு லெனதுமுத்து சாமி யால, சந்துரைத்த மரைமுகமும் வாடிமெய்சோர்ந் துளமெலிந்தேன் றையலேநீ, சந்துரைத்தாள் வணங்கியெய்த விதத்திலுமென் விரக மது தணியும்வண்ணஞ், சந்துரைத்தா ணையிட்டழைத்திங் கவனை யொரு நொடியில்வரத் தான்செய்வாயே. (௧0௯)

* வானரம்பை நாந்தகந்தா மரைமலர்மென் றுடைநெடுங்கண் வதனமாளுள், வானரம்பை நாணவெழில் வாய்ந்தமின்னுண் மாதவரு மயக்கம்பூணு, வானரம்பை நாடிமியாழ் வாசிப்பா ளுனைவிரும்பி வந் தாளையா, வானரம்பை நாகணைசேர் முகுந்தமுத்து சாமிமன்னு மகிழ்ந்துசேரே. (௧௧0)

*காமனையு மழகினுக்கு மெதிர்சொலலா மோவும்மைக் கண்டுமாறுங்
காமனையு மதிரூப மானவொரு கன்னிமெத்தக் கலங்குதல்பாங்
காமனையு மட்கலமுப் பானலிதல் போனலியுங் கருத்தளாளுள்
காமனையு மவளாவாண் முத்துசுவா மித்துரையே கலந்துசேரே. ()

* போதாதா ரகைப்பதியின் பகைப்பதிஞன் றிகைப்பதிகம் பூணச் செய்தாய், போதாதா ரக்ஷியென்றே னிரக்கமவற் கிலேநீயிப போதே தூதாய்ப், போதாதா ரங்குவளை மார்பன்முத்து சாமிமனம் பொருந்த வென்றுன், போதாதா ரமிலாத பேர்க்குதவி செய்வதன் றோ புண்ய மாமே. (௧௧௨)

* தனம்பிடித்துச் சேரமுத்து சாமிமன்னன் வாராத தருண மன்ம, தனம்பிடித்து வாடவுமென் றலைவிதியோ வெனச்சோர்ந்து கொதி பால்வக், தனம்பிடித்துஞ் சிபவிடையாள் புரிந்துமனந் தளர்வ

தெல்லாஞ் சங்கராபார்த், தனம்பிடித்தும் பிக்கையன துடையாளுள் ளுடையாது தற்காப் பாயே. (௧௧௩)

* கரும்பாலை யம்புதொடா மாரன்முத்து சாமிமன்மேற் காத லாய்நு, கரும்பாலை யனத்தைமறந் துடன்மெலிய வலத்தகத்தாள் கனலை யேகி, கரும்பாலை யதினடக்கப் பொறுக்குமோ வென்மகட்குக் காவல் வஞ்ச, கரும்பாலை யவனெனத்தா மறிந்திருந்துந் தனிவிடுத் தார் காலந் தானே. (௧௧௪)

* எசமானே யாருமெங்கள் முத்துசுவா மித்துரைவந் திணங் கா நாள்வென், கசமானேர்ந் துடலமெல்லாங் கண்ணுனேன் பாவிம கன் கணைகள் பாய்ந்தே, நிசமானே யுனக்குரைத்தே னவர்க்கிதைநீ யெடுத்துரைப்பாய் நீல வேள்கை, வசமானே னென்செய்வேன் றன் னையுநான் மறந்துபர வசமானேனே. (௧௧௫)

* நன்கணவன் பாவெனது முத்துசுவா மித்துரையே நான்முன் விதி, யின்கணவன் னப்பரிமே லுன்னைவரக் கண்டேன்மண் ணொட் டிப் பார்த்தேன், உன்கணவன் மேனோட்டங் கொண்டதென்னென் றென்னையடித் தூறாக்கி விட்ட, வென்கணவன் கண்டுகொண்டா லுயிர் வையான் சீக்கிரத்தி லெனைச்சேர் வாயே. (௧௧௬)

* கரியமஞ்சங் கக்குழலா ளுண்டுயிலற் றுள்கையிற்சங் கங்க ளெல்லாம், நெரியமஞ்சங் களிற்படுக்கை விரும்புகிலாண் மற்றவரை நினையா ளுன்மேற், பிரியமஞ்சாங் கட்டடியா வெங்கனத்தான் மருவில வள் பிழைப்பாள் சொன்மா, துரியமஞ்சங் கம்புகழப் பேசுமுத்து சாமிமன்ன சமுக மாலே. (௧௧௭)

* செம்முருக்கம் பூவனைய வதரமின்னை யொருத்தியுன்னைச் சேர வெப்போ, தும்முருக்கம் பூநிருவ விடுத்தனபோன் மாரனெய்ய வுடைந்தா ணிநெஞ், சம்முருக்கம் பூரணமா வைத்தவடன் மாநீர்ப் பாட் டையலார்போ, தம்முருக்கம் பூகரசே புயமுத்து சாமிமன்னா கருணை மாலே. (௧௧௮)

* பன்னிலைக்குதேபோல தென்னடியொன் றுள்காமப் பைத்தியங் கொண்டா, வின்னிலைக்கு நிகர்வயிற்று ளுன்னிடத்திற் சேர்த்திட வென் னிடத்தில் வந்தாள், முன்னிலைக்கு வரவழைக்க மின்னரசே

செய்வனென் றுன் முன்வந் தேனென்,சொன்னிலைக்கும் படியணைவா யெங்கிலத்தும் புகழுமுத்து சுவாமி மாலே. (௧௧௯)

* அந்தரமோ டிருக்கின்று ளந்தரமோ கத்திரிகட் கணங்கைகம் பால்சூற், கந்தரமோ வியமனையாள் கந்தரமோ துந்திரள்சங் கமிடை நாட்டம், தந்தரமோ னியர்க்கும்விவா தந்தரமோ டிகள்புரியுந் தைய லாள்சேர், சுந்தரமோ சேடனும்பே சுந்தரமோ வென்னுமுத்து சுவாமி மாலே. (௧௨௦)

* விண்மதியந் தண்மைவிட்டுப் பகன்மதியம் போற்கனற்ற விர கங் கொண்ட,பெண்மதியந் தோமயங்கிப் பூமதியங் குங்குணத்தைப் பிறிதென் சொல்வேன், கண்மதியம் போருகநின் சம்மதியங் கவளறி யாள் கலங்கு கின்றாள், உண்மதியம் மின்னரசை முத்துசுவா மித் துரைநீ யுவந்து சேரே. (௧௨௧)

* விரலைவிட விடங்கொடுத்தா லுரலைபுங்கூ டக்கொண்டு விடு கின் றுயே,மூரணரசர் மனங்கோணி ஞற்றிரும்பா தன்றேவிம் முத் து சாமிப்,பிரபுகுண மறியாய்நீ பயித்தியகா ரத்தனமாய்ப் பேசா தே யா, யிரமிருந்த போதினுந்தா னுனக்கடங்கி யவனடப்பா னென் றெண் ணுதே. (௧௨௨)

* மாமச் சந்திருந் துங்கண் மடந்தையுன் மைய லாலெனை வைபு முடல் வற்றிப், போமச் சந்தினங் கொள்ளு மிவ்ளவும் புகலக் கேட்டு மனமிரங் காமலே, நாமச் சந்தி தெரிந்துரைப் போமென்று நவிற்றி ஞர்பிழை யாளவட் சேரையா, ராமச் சந்திர னேமுத்து சாமிமா ராச னேராச வல்லிபு ரேசனே. (௧௨௩)

* கலசந் தானங் கவள்கொங்கை திங்கண்மு கஞ்சங் கங்கமுத் தம்பரங் கண்கள்கோர், கிலசந் தானங்கன் றேவியுன் பாற்சொலக் கெஞ்சி னுலந்த வஞ்சியை யின்றுநீ, குலசந் தானங் கமழ்சோலை யில்வைத்துக் கூடி நன்மலர் சூடிப் புணருவாய், பலசந் தானங்க ளூற்றசெல் வாநெல்லைப் பதியில் வாழ்முத்து சாமிந ரேந்த்ரனே. ()

* ஐயி ராவண மாவுரித் தோனுத லழலிற் பட்ட வனங்கன் கணையெய்ய, மையி ராவணங் கண்ணீர் சொரிந்தனண் மையன் மீறின ளையா வணைகுவாய், சையி ராவண மின்றிக்கொல்வேனென்று சாற்றி

யோர்கும்ப கன்னனை நாலைந்து, கையி ராவண னைப்பொரு திரமா காருத் தாமுத்து சாமிந ரேந்த்ரனே. (௧௨௫)

* தனங்க லங்கு வளைக்கண் டிகைகவி சாற்றும் வாணர்க்குத் தந்தருள் சம்பனு, மினங்க லங்கு வளைகண்ட மாதுன்னை வீதி யிற் கண்டு மெத்தவு மோகித்தாள், தினங்க லங்கு வளைக்கண் மலர் கொண்டு சித்த சன்பொரு தத்தனி யேமிக, மனங்க லங்குவ ளைக் கண்டு சேரையா மன்ன வாமுத்து சாமிந ரேந்த்ரனே. (௧௨௬)

* குத்து மாலைக் கரும்பன் கொடுஞ்சரக் குப்பை யான்மழைச் செப்பைக் குடையவும், ஒத்து மாலை மதிதழ லைப்பெய்ய வுங்கண் டே விர கங்கொண் டிருக்கிறாள், நத்து மாலைத் தவிர்த்துக் கலையுட னழு வுங் கைவளை யைக்கொடுத் தாளையா, முத்து மாலை திகழும் புயாசலா மோக னுமுத்து சாமிந ரேந்த்ரனே. (௧௨௭)

* உவந்த னைக்கும்பண் பாகச்சொல் லாள்சற்று மூணு றக்கமில் லாளுன்ற னக்குக்கோ, டிவந்த னைக்கும்ப மாமுலை சொல்லிக்கூட் டிவர வென்னைவிட் டாணி யவட்குமுன், புவந்த னைக்கும் பரிதியொப் பாகி யே பொய்யி லாவவண் மையலைத் தீரையா, கவந்த னைக்கும்ப கன் னனை மாட்டிய காருத் தாமுத்து சாமிந ரேந்த்ரனே. (௧௨௮)

* இந்த ராமத னுகத்தின் வாய்ப்பட்டு மென்கொல் காய்வதென் றேங்குமைம் பாலெனா, வுந்த ராமத னும்புயப் பேதையை யுவந்து சேர்முன் கவந்தனை மாட்டிட, வந்த ரீமத னுயிர் போலெண்ணி வாணர் துன்பிருண் மாற்றுந் திவாகரா, சுந்த ராமத னுபுக மூரகா சோம னேமுத்து சுவாமிந ரேந்த்ரனே. (௧௨௯)

* கல்லை யம்பதிர் வாரியை நேரதாய்க் காட்டுங் கொங்கைய னாட் டமு மாகிய, சொல்லை யம்பதி யுஞ்சிற்றி டைச்சியுன் சுந்த ரங்கண்டு சந்தத மோகித்தாள், வில்லை யம்பதி னுலெய்ப மாரனை வென்று மெத் தையி லென்றும்வைத் தாளையா, நெல்லை யம்பதி வாழ்ப்ரபு டீகரா நேமி மான்முத்து சாமிந ரேந்த்ரனே. (௧௩௦)

* மாமஞ் சங்கை விளங்கிய வள்ளலே வலம்பு ரிச்சங்கை யொத்த கழுத்தினாள், காமஞ் சங்கை தவமத னால்விட்டாள் கையி லேசங்கைக் காணேனுன் காவியர், தாமஞ் சங்கையி லாம லனுப்புவாய் தையலே

சங்கை மேற்பலிக் குங்கனி, யாமஞ் சங்கைக் கிளையுற் றிருந்தன
ளன்பிற் சேர்முத்து சாமிநரேந்த்ரனே. (௧௩௧)

* உதிர்கணீர்சிறுங் கலசந்தர்ப் பத்திரு லுடைந்த தோபணைக்
கலசந்திப் பேய்தொட்டோ, எதிரி ராப்ப கலசந் திருத்தலென் றெணி
யிட்டோம்பொங் கலசந் தனை வெட்டி, அதிலுஞ் சோகங் கலச முலை
யினுட் கடங்கு யோமங் கலசந் தனப்புயா, விதிபொருந்துச கலசப்ப
ரமத்துடன் மேவிச் சேர்முத்து சாமிநரேந்த்ரனே. (௧௩௨)

* ஏழிலே யொன்றதுபோ லெழுந்து லாவி
ஏழிலே யொன்றதுகாய்ந் திடமால் கொண்டேன்
ஏழிலே யொன்றதுநீ பருகிச் சேர்வாய்
ஏழிலே யொன்றதுநேர் மதியுள் ளோனே
ஏழிலே யொன்றதுசொற் றவறு நேயா
ஏழிலே யொன்றதுபோற் புகழ்ப்ர காசா
ஏழிலே யொன்றதுபோ லன்னை யுற்றுச்
இன்சொன்முத்து சாமிமன்ன வென்னைச்சேர் வாயே. (௧௩௩)

* முற்பாதி போய்விட்டா லிருட்டே யாகு
முன்னெழுத்தில் லாவிட்டாற் பெண்மை யாகும்
பிற்பாதி போய்விட்டா லேவற் சொல்லாம்
பிற்பாதி யுடன்முனெழுத் திருந்தான் மேகம்
சொற்பாகக் கடைதலைசின் மிருகத் தீனி
தொடரிரண்டா மெழுத்துமா தத்தி லொன்றும்
பொற்பார்திண் புயமுத்து சாமி மன்ன
புகலுவா யிக்கவியின் புதையல் கண்டே. (௧௩௪)

* வெள்ளனத்து மீதேறும் பிரம னல்ல
மேனிகறுப் பாயிருக்கு மாலு மல்ல
தள்ளரிய வறுகாற்பூ சிக்க நாடும்
சங்கரனு மல்லவிடந் தலையிற் கொண்டும்
தெள்ளுமத னுயிர்போகா தெந்த நாளும்
சிறையிருக்கும் விடிதலையாய்ச் செகத்து லாவும்

பள்ளிகொள்ளு முகுந்தனிகர் முத்து சாமிப்
பாண்டியனே யிக்கதையின் பயனீ சொல்லே. (௩௩௫)

சேலம் சிவகிரி சீரங்கம் ஆலங்காடு மயிலை கொடிக்குளம் திருப்பதி திருக்குற்றாலம் மதுரை புலியூர் ஆகிய இந்த ௧0-ஊர்களையும் அமைத்துப் பாடியது.

* சேலங்கண் சிவகிரிபொற் கொங்கை யாகும்
சீரங்கந் தர்ப்பனெடுஞ் சிலைசொல் லாகும்
ஆலங்கா டும்மயிலே நிகர்த்த பண்டி
யழகியசா யலுற்றகொடிக் குளந்தா னுன்மேல்
நீலங்கண் திருப்பதியு மலரை யந்த
நேரிழைமே லெய்தான்பா திருக்குற் றாலம்
போலுங்கைப் பாச்சுதன்ம துரையே மின்னைப்
புலியூருக் கனுப்புமுத்து சாமி மாலே. (௩௩௬)

பன்னிரண்டுமாதங்களையும் அமைத்துப்பாடியது.

* மாதஞ்சித் திரைகடலை வைதனனி யன்பு
வைகாசி னஞ்சிறிபா ஷயானி பெருக்கும்
போதம்பன் போராடி ஞனைபா வணியாப்
புரட்டாதின் கலம்வெறுத்தா யைப்பசியில் லென்றே
சாதனைசெய் தேசினந்தாள் கார்த்திகைக்குங் கொடைவேந்
தாசகிமார் கழியார்கோ தையுமாசிலாமற்
காதலுடன் சேர்வாணைல் லதிட்டமுன்பங் குனிப்பார்
சாமிதனைச் சேர்முத்து சாமிதயா நிதியே. (௩௩௭)

பலசரக்குப்பை ராயபுரி பால் தேன் அரிசி வசம்பு சூடன் சாம்பிராணி காணம் துவரை கடலை மாயக்காய் சுக்கு அதிமதுரம் சீரகம் மிளகு பாக்கு கடுகு காயம் ஆகிய இந்த ௧௬-ம் அமைத்துப் பாடியது.

* பலசரக்குப் பையெடுத்தான் வேள்ராய புரியாள்
பயந்தேனென் றரிசி வசம்போவென் றழுதாள்
மலர்சூடன் சாம்பிராணி யானேனென் றணீ
வரக்காண மென்றழுதி துவரையெதிர் பார்த்தாள்

அலைகடலை வைகின்ற னென்னமா யக்கா
    யான்பிழைப்பே னென்றாள்பேச் சுக்குமதி மதுரா
கலைமுத்து சாமிசீ ரகமிளகன் பாக்கு
    கடுகவா விதில்வெருச காயமுண்டு குணமே. (கஙஅ)

கந்தமாதனமலை திருமலை நீலகிரி பொதியம் மேரு விந்தம் வெள்ளிமலை
ஆகிய இந்த ௭-மலைகளையும் அமைத்துப்பாடியது.

* கந்தமா தன்மலைமேற் கிடந்தழுந்து வடங்கள்
    கரிந்திடுவா னெனதிரு மலைகடற்குப் பயமென்
அந்தமா நீலகிரி கொண்டலைகின் றதுமென்
    னணிமுத்து சாமிவள்ளன் மணிப்புயங்கண் டாயோ
சிந்தமா ணிககவளை பைப்பொ றாக்கு பொதியச்
    செங்களப மணிமேருப் பன்னீரா லுனர
விந்தமா முகங்கழுவு கண்ணீரைத் துடைவா
    வெள்ளிமலைப் புகழ்படைத்த வேந்தனைர்சேர்ந் திடவே. ()

செவ்வந்தி பிச்சிப்பூ தாமரை இருவாய்ச்சி சந்திரகாந்தி தாழம்பூ
முருக்கம்பூ மாதுளம்பூ வாடாமல்லிகை ஆகிய இந்த ௯-மலர்
களையும் அமைத்துப்பாடியது.

* செவ்வந்தி கண்டனண்முன் பிச்சிப்பூ டாடித்
    திரியுந்தந் தாமரையாட் கிருவாய்ச்சி போலுந்
தைவருசந் திரகாந்தி காய்ந்தறுக்க மதனுந்
    தாழம்பூ தரநிர்த்த முலைபின்முலை யெய்யப்
பொய்வசன மலவுடைல முருக்கப்பூ டுருவப்
    போதவயர்ந் தேனென்ற மாதுளம்பூ ரிக்க
எவ்விதமுஞ் சரசசுகம் வாடாமல் லிகைப்பா
    யெத்துரையேன் முத்துசுவா மித்துரையே யிரங்கே. (கசO)

வேம்பு கமுகு கல்லத்தி பனை உடை மா தென்னை இலவு பலவு வாகை
இலுப்பை கொய்யா நாவல் வாதமடக்கி கருவேல் புன்னை
அகத்தி பூவரசு அரசு ஆகிய இந்த க௯-விருக்ஷங்
களையும் அமைத்துப்பாடியது.

* அன்னமும்வேம் பாகும்வெறுத் தழுதுகமு குரலா
    யங்கல்லத் திமேலறுங் கரும்பனைக்கண் டுடையும்

சின்னமா தென்னைவிட்டாள் பொய்யிலவம் பகை
செல்வாகை யிலுப்பைவைத்துச் சொல்வேன்சத் தியமா
வன்னமலர் கொய்யாது ஞவலுற்றான் புளிபோல்
வரும்வாத மடக்கியந்தக் கருவேல மின்னைப்
புன்னையா தகத்தியம்வா முத்துசுவா மியெனும்
பூவரசே ராஜவல்லி புரத்தரசே யிரங்கே. (கசக)

* மாயனைக்காக் குங்கடவு ளென்றதெவ்வா றிரண்டு
மக்களைப்பெற் றனவர்க்குண் மூத்தமக னென்னை
நேயன்முத்து சாமிமன்மே லாசைகொள்ளப் படைத்தான்
நீங்காம லிளையமக னதற்குதவி யிருந்தான்
தீயமதித் தீயுடனே காற்றுங்கூ டினதே
சிவனொருக்கா லெனக்குதவி செய்வனென்றா ளெண்ணி
ஏயநஞ்சு போட்டுவிட்டான் பாம்புக்கும் பசியே
யில்லாமன் மருந்திட்டா னேதுசெய்வேன் மானே. (கசஉ)

* அடுபாலுங் கசக்கவந்து பிரிந்தானென் முலையை
யன்பாலுங் கசக்கவரான் றன்பாலுன் சரத்தை
விடுபாவம் பெண்பழிவந் திடுமெனமாத் திரமிவ்
வேதனையே செயும்படிக்கார் போதனைமன் மதனே
படுபாதித் திங்களுக்குப் பறக்கும்வண்டே முழுமைப்
படுபாவித் திங்களையுண் டாற்பசிதீர்ந் திடுமே
நடுபார்மே லுரைக்குமுத்து சாமிமன்னைச் சகியே
நாடியின்னே கூட்டிவந்தாற் கோடிபல னுனக்கே. (கசங)

* நம்புமுத்து சாமிமன்ன னின்னம்வரக் காணே
னகத்தி னுணவுவந்தென் றேகத்திற் பாயக்
கும்பமுனி யைப்போலு மம்பிகையைப் போலுங்
குறுகியரை யுடம்பானே னிறுகுமுலை மீதே
சம்புமுன்னங் கொம்புநிற வெம்புதழல் சிந்தச்
சாவில்லா ராசாவைத் தான்றொடர்ந்து வந்த
கொம்பில்லா மேதிதனைக் கொடும்பாம்பு தீண்டிக்
கொல்லாதோ நீதூது சொல்லாயோ துரைக்கே. (கசச)

* சங்கரனார் தம ... னாறு யவர்தந்
தங்கையுமா யமுதனைன்று லவடகப்பன் றலையாய்ப்
பங்குமுற வவனுடைய மருமகனு லவனைப்
பயந்தவன்னை யாலனையைப் பருகினன்போ லாகிக்
கொங்கையவன் பிறப்பிடம்போல் வாண்மயங்க னன்றோ
குறித்ததைவைத் துச்செபிப்போர் விளையாட்டை முடித்தால்
நங்கையதின் மகிழ்வாளோ மதுரையின்பேர் குறித்தா
ணண்பழுத்த சாமிமன்று நதிகுலபூ பதியே. (௧௪௫)

* சங்கரா விந்தநிகர் கண்டமல்குன் முலைசேர்
தையன்முத்து சாமிமன்மேன் மையலுற்றாள் வேமா
சங்கரா விந்தமலர் தொடுத்தவிதந் தானோ
தயங்கினளெப் போதும்போ தாக்குறைக்கு முடல்க
சங்கரா விந்தமுலாய் வந்ததென்று ளங்தோ
சாதமொரு வாய்கவளந் தானுமருந் துகிலாள்
சங்கரா விந்தவிதி யாவிந்தப் பேதை
தலையிலே யெழுதிவிட்டான் சதுமுகத்தோன் றானே. (௧௪௬)

*பாரதிபோற் படித்தமுத்து சாமிமன்று நேற்றுன்
பவனிகண்ட பேதையடி பரந்துகடைக் குறைசேர்
பாரதிமே ருப்போலுந் திரண்டெழுந்த முலையாள்
பாலின்மொழிச் சேலின்விழிப் பாவைமுதற் குறைசேர்
பாரதிபோ லழகுமிகப் படைத்துவந்த மாதுன்
பைந்தொடையல் விரும்பியுள்ள னைந்துமிடைக் குறைசேர்
பாரதியு டம்பாகிப் பரிதவித்தா ளருட்கண்
பாரதிக பக்ஷமுடன் பாரதிபா நீயே. (௧௪௭)

நடுவெழுத்தலங்காரம்.

*அருந்தவன்பேர் நடுவின்பேர் கூடலின்பேர் புவிப்பே
ரகிலநாட் பேராகா யப்பெயரிவ் வாறு
பெருந்தகைச்சொ லொவ்வொன்று மூன்றெழுத்தா நாப்பண்
பெறுநாம விருபாலும் பேணுமெழுத் ததுவே
திருந்தியவொன் றினனுபய முகன்மூன்று கரத்தான்
செய்யாகா னன்கினைப்பன் சமகானை வோலன்

பொருந்தலர்மேற் சீறியவா றினன்ராஜ வல்லி
    புரத்தினன்பா பவிநாசன் புத்ரதயா நிதியே. (௧௪௮)

* படைக்குமெய்த் தேசது பரிதி போன்றுளான்
கடைக்குறைப் பரிதிவா கனமுள் ளான்புவி
இடைக்குறைப் பரிதியென் றிசைப்ப வாழ்பவன்
சடைக்குநெஞ் சிலன்முத்து சாமி யாமரோ. (௧௪௯)

* தோடிகழ்காம் போதியிளந் துடையிதழ்நுண் ணிடைமஞ்
    சுகதலிக்கம் பந்துவரா ளியல்குல்பைர விக்கை
போடிரண்டு கனதனமுங் கல்யாணி கரஞ்சொற்
    பூவையன்று ளுன்னைவிரும் பிலகிரியா வசந்தாள்
நாடிமத பரசெனவி முகாரிகைமீ தன்பு
    நாட்டையா கிரிமார்பா வாரபிமா னமும்வை
மோடியதா போகனவா னேயுனக்கே தாரம்
    முத்துசுவா மித்துரையே சித்தமகிழ்ந் தணையே. (௧௫0)

* தாயுடுத்த சேலையையுங் கவர்ந்தடித்த பாவி
    தமயனது குடியிருப்பைத் தான்பறித்த பாவி
தேயுடற்றன் மாமனைத்தன் னூனைகுளிப் பாட்டச்
    சிவனைத்தன் குடைசுமக்கச் செய்தகொடும் பாவி
பேயிடத்து முலைகுடித்த பிதாவின்பேர் விளக்கும்
    பெரும்பாவி யெனைக்குதிரை பிடிக்கவைத்த பாவி
காயடத்தா லேயடுத்தான் கணைகசங்கக் கீர்த்தி
    கமழுமுத்து சாமிமன்று வமளிபிற்சேர்ந் தணையே. (௧௫௧)

* விண்போ லுதவுங் கொடைமுத்து சாமியுன் வேட்கைகொண்ட
பெண்போலுந் தேடக் கிடையாதை யாவவள் பேரெழில்கேள்
கண்போலுந் தோளுங் குழல்போலுஞ் சொல்லுங் கங்களைவைத்
தெண்போன் முலையு முலைபோலும் பல்லு மிருக்கின்றவே. (௧௫௨)

* தணல்பற்றி வீடெரி யும்போ ததனைத் தணிப்பதற்குக்
கிணறுவெட் டத்தினம் பார்த்ததொப் பாந்தமிழ்க் கேயளவில்
பணமகிழ்ந் தேயருண் முத்துசு வாமி பனிவரைமேல்
வணமுலை மாது மணஞ்செய்து கூடென்ற வாசகமே. (௧௫௩)

அம்மான் மகன் மருமகன் என்று பாடியது.

* சூன்சொலக்கூ டாத சொருபா தனக்கீடு
தான்சொலக்கூ டாதமுத்து சாமிமன்னா—நான்சொலக்கேள்
செம்மான் மழுவேந்துஞ் செங்கைச் சிவனுருக்
கம்மான் மகன்மருமகன். (கருச)

எழுகிழமைகளையும் பாதிவெண்பாவிற் பாடியது.

* தாழ்வில்லாக் கீர்த்திமுத்து சாமிமன்னா வல்லமைகள்
சூழ்தரவே யென்னுடனீ சொன்னபடி—யேழ்கிழமை
யின்விபரங் கேண்ணா யிறுதிங்கள் செவ்வாய்பு
தன்வியாழம் வெள்ளி சனி. (கருரு)

* கன்னனைநே ரானகொடை மன்னுமுத்து சாமிமன்னா காகுத்தன்ம, கன்னனையா யடிக்கடியென் வீட்டிற்கு நீவரத்த காதென்னுப, கன்னனையி லாவேளை சொல்லிவிடு வேனீயக் கணமே வந்தென், கன்னனைபோல் விம்முமுலை தோய்ந்தெனையா னந்தமுடன் கலந்து சேரே. (கருசு)

* பங்காய்கிற் சேரவிருப் பானுளு மானுளோர் பாவை மாதா பங்காய்வதென மதியென் றயராலுற்றாள் சயனமற்றாள் பக்ஷ மாமுன் பங்காய்மார் தருமமுதுஞ் சத்தித்த னளிதுகசப் பதென மாவேப் பங்காய்தந் திரோவென் றுண்முத்து சாமிமன்னா பரிந்து சேரே. ()

*மாவலவா சனைக்குழறு வதனமினு ளுனைக்கருதி வாடி னுள்பூ, மாவலவா மிகப்புணர்வா ளிக்கணமே நீயவள்பால் வருவ துண்டு,மாவலவா விரண்டிலொன்று சொல்கவினி யுயிர்தரிக்க மாட்டாள் வேட்டாள், மாவலவா காவலவா முத்துசுவா மித்துரையே மகிப ரேறே.

* அவனண்ணு னையினுனை வைதாட்சூன் மேலாசை யையா தென்றே, துவனண்ணு வ்டைத்துலர்ந்தா ணிறக்கமில்லை யுறக்கமில்லை தோய்ந்தா ளாத,தெவனண்ணு லவளையணை யின்றிரவு கனவில்லிசை யாகும் பாலக்,குமனண்ணு வெனவழைக்கும் ராமமுத்து சாமிமன்னா குரிசி லேறே. (கருகூ)

* ஆடியங்க போலமதி யனைவதனை மினைவளுன்மா லதிக மாலைத்
தாடியங்க னன்றேம தனம்பாரத் தினம்பாரத் தனம்பா ரித்தே [ச்
வாடியங்க மெலிந்துமனந் தகித்தாளைச் சுகித்தாளை வரைமுன் காத்து
சோடியங்க மருதமு டலைத்தமுத்து சாமிமன்ன துரைச்சிங் கேறே.

* நிலமெழுகி யுண்டுபெற்ற தாயையும்வை கின்றளுன் னிமித்
தத் தாற்றி,யிலமெழுகி னுருகியவள் வடித்தகண்ணீ ரையாவுண் டிர
ண்டு மூன்று,கலமெழுகி ளிவளையுடை யசனசய னமுமறந்தாள் கண்
பார் பொய்யோ, திலமெழுகி ரியினிறகை யரிந்தமுத்து சாமிமன்ன
செயசிங் கேறே. (௧௬௧)

* துவளவளை கலைபோன விடங்தெரியா மற்கிடந்து துடிக்க
விப்பெண், எவளவளை திரள்பாலோங் கரித்தனளீ தென்கொடுமை
யென்றங் குள்ளார்,அவளவளைப் பார்த்தொவொருத் திகளுமூக் கினி
ல்விரல்வைத் ததிச யித்தார்,தவளவளை பிடித்தசெங்கைத் தலத்தமு
த்து சாமிமன்ன தழுவிச் சேரே. (௧௬௨)

* நலையரிவை வேல்விழியா ளுன்விரகத் தான்மெலிந்தா ளுளு
ஞ் சூதா,முலையரிவை யறியாம லுபசரிப்ப துபயோக மோச மார்ந்த,
கிலையரிவை ராயுதனுந் தேடக்கிட் டாளுனையிச் சித்து வந்தாள்,கலை
யரிவை வடிவாக்கும் ராமமுத்து சாமிமன்ன கலந்து சேரே. (௧௬௩)

* நிதந்தையா லெனத்தவளை கணக்கிடவொன் றுவிரண்டா
நெகிழ்ந்த காமா, யுதந்தையா நின்றதிலென் னுடலம்பு ளனதிவை
யுரைத்துன் பாலன், புதந்தையா வணைகுவள்வா வென்றுநீ ராசவல்
லி புரத்தின் மேனி, யதந்தையா டகமலர்த்தாள் பணியுமுத்து சாமி
மன்னை யழைத்து வாவே. (௧௬௪)

* ஏதக்கா வடியம்மா வுனக்குநா னென்னசெய்தே னிரங்கா வே
டன், சீதக்கா முலைச்சிலம்பை முலைச்சிலம்பை நோக்கிவிடத் தினைத்
தேன் கண்டாய், போதக்கா வெணவோதி யழைத்துவா தனைழைத்தக
யம் புரவி யொன்னார்,பூதக்கா ணிக்கைதருங் கீர்த்திமுத்து சாமிமகீ
பதியைத் தானே. (௧௬௫)

* கரும்படித்துண் டெனவெளிதழ் கடித்துமுத்து சாமியெனை க் கலந்திப் போத, வரும்படித்துப் படித்துப்பே சுகிறார்வே றோர் போக்கு வரத்தான் மேலும், இரும்படித்துக் கொண்டிருக்கி றவிட த்தி லேதானிக் கென்ன கார்யம், பெரும்படித்த றையைப்பிடித்தும் வழுக்கில்விழுந் தாற்பினுண்டோ பேச்சுத் தானே. (கசுசு)

* மிஞ்சித்திக் குந்துலங்கு கீர்த்திமுத்து சாமிமன்ற வெறு ப்பா லும்மை, வஞ்சித்திக் குந்தகமா னதுமலச்ச மயம்வாயா மற்று னென்றாய்க், குஞ்சித்திக் குந்தெரியா மல்வருவா யாகினின்றைக் குனது காரி, யஞ்சித்திக் குந்தவறு தேதெனிறு யகனூருக் கில்லைத் தானே. (கசுஎ)

* மென்றனத்தை விழுங்கவொட்டா துவட்டுதுன்மோ காவே ச மிகவே ளான, வன்றனத்தை யம்புவிட்டான் மருவுவதற் கென் வீடு வசதி யல்ல, என்றனத்தை கொடும்பாவி யென்கணவன் கடுங் கோபி யிடம்வே றுறல், நன்றனத்தை யாழிதொட்ட முருகுந்தமுத் து சாமிமன்ற நளின மாலே. (கசுஅ)

* தொடியனந்தா மூணிநடையாள் சோர்ந்தாளுன் றைசைகொண் ட துமுத லாபோர், பிடியனந்தா னுமிலேபவள் புசிப்பதையா விக்க தையே பிடித்தோ ஞன, கொடியனந்தா மரைதொடுத்தான் கடிது னேயே பொருந்தமனங் கூர்ந்தாள் சேர்ந்தாள் படியனந்தா வெனப்பு கழுங் கல்விமுத்து சாமிமன்ற பச்சை மாலே. (கசுகூ)

* சசிவசிவான் முகத்தரசி சரசியவண் மட்டுமக்கேன் றனிக் கன்ம, னசிவசிவா ரதற்கெனகா ரணம்வலிய வந்தவள்கி ழவியென் றேவ, டசிவசிவா வென்சொலிப்போ துதெரியுமா ரமித்தாற்கண் டறிவீ ரந்த, ருசிவசிவாள் பிடித்தமுத்து சாமிமன்ற வருணசரோ ருகக்கண் மாலே. (கஎO)

* தெள்ளக்கூ டார்சடைபா னெரித்தமதன் வருத்தநொந்தோ ர் தெரிவை சோலேந்,குள்ளக்கூ டாரத்துள் வந்திருக்கி றளொருவர் க் குந்தோற் றமல், மெள்ளக்கூ டாசையைத்தீர் தாறுக விருஞ்சிதே விலைக்கா லாலே, தள்ளக்கூ டாதுநெல்லைத் தலத்தாசே யெங்கண் முத்து சாமி மாலே. (கஎக)

* பொனதிட்ட மாரதிதிட் டினதிட்ட மாசங்கியார் பொறுத்துக் கொண்டே, யெனதிட்ட மாவுன்வர வுரைத்தாலு நம்புகிறு னில்லை யென்பான், மனதிட்ட மார்ந்துமுனைத் தன்பாலன் பாலழைத்து வரச்சொன் ஞள்வா, உனதிட்ட மார்க்குவரு முத்துசுவா மித்துரை யே யுசித வேளே. (௧௭௨)

அடைமொழிகளின்றிப் பாடியன.

* நெல்லையப்ப பிள்ளைபழ னிக்குமா ருப்பிள்ளை
நல்லசிவன் பிள்ளைகுரு நாதபிள்ளை—செல்லப்
பெருமாள்பிள் ளைநயினு பிள்ளைமுத்துப் பிள்ளை
அருணகிரி நாதபிள் ளை. (௧௭௩)

* தன்யாசி காம்போதி சாவேரி யட்டாணு
கன்னடா நாட்டை கலியாணி—புன்ணு
கவராளி சௌராஷ்ட கம்பூபா ளம்பந்
துவராளி தோடிபர சு. (௧௭௪)

* நாய்நரிசிங் கம்மாடா னைமிளா பன்றிகடு
வாய்கு திரைக வரிமான்புல்—வாயொட்
டகங்கழுதை யாட்டுக்க டாபுலிகாண்* டாமி
ருகங்க ரடியெ ருமை. (௧௭௫)

* சக்கரவா கங்கிளியாந் தைநாரை யன்னங்க
ரிக்குருவி கௌதாரி காடையன்றில்—கொக்கு
குயில்கருடன் காக்கைபுரு கோழிபிரா சாளி
மயில்கழுகு கோட்டான்வௌ வால். (௧௭௬)

இப்பாட்டுடைத்தலைவர் வினு.

* தக்கபுகழ் நாவலர்கள் சாற்று மழகிய
சொக்கநா தேந்த்ராவித் தொல்புவியோர்—மெய்க்க
எனக்கினிய காத லியற்றியதா லிப்போ
துனக்கினிய காத லுரை. (௧௭௭)

அதற்கிவர் கூறிய விடை.

* தனக்குவமை யின்றெனவு தித்தகா தற்பரம்
தப்பொரு ளொலாமு ணர்ந்தே

சகலமு மறிந்தநின் றிருவுள் மகிழ்ந்தென்
றரித்திர விருட்கு மிதய
தாமரைக் கும்பரிதி யாமெனச் சொற்சுவை
தழீஇச்சங்க வாண ரெல்லாஞ்
சாற்றுபல செய்யுளினு மிஃதருமை யெனவே
தழைக்குமோர் வெண்பா வினால்
உனக்கினிய காதலுரை யென்றுவந் தென்னிடத்
துரைசெய்த வுன்ற னிடமு
மோயாம னிதிதா விருக்கைக்கு மெத்தைவீ
டொன்றுதா வென்றும் யான்வைத்
துண்ணவே விளைநிலந் தாவுபய சால்வைதா
வுயர்மணிப் பூஷ ணந்தா
வுச்சிதப் பொற்சரிகை யிற்சரிகை வேஷ்டிதா
வொளிரிரவி திசைமா றினும்
எனக்குமதி மாறாத தயவுதா மகிமைதா
வென்றுமற வாதி ரென்றே
யானெடுத் துச்சொல்ல வேண்டுமோ விவ்வண்ண
மேன்செலவு செய்கி றீரென்
றிஷ்டமே போற்புத்தி சொல்லவரு வார்தம
திடத்திலொரு வாணர் வந்தா
லெட்டுவீட் டிற்கப் புறம்போ யொளிப்பர்சற்
றீயாம லபகீர்த் தியே
தொனிக்கவுஞ் சாண்வயிறு பெரிதென வளர்க்கின்ற
தூர்த்தராங் கயவர் சொல்லைச்
சொற்பனத் துங்கேட்ப துண்டோ மிகுந்துமலர்
தூற்றுமோர் பஞ்ச தருவைச்
சுரபிதனை நீள்வான வரையே யடுக்கத்
துரத்துகர தலதி யாகா
சுரதமத ஞநித்ய சரதமத ஞமுத்து
ஸ்வாமிரா ஜேந்த்ர நிதியே. (௧௭அ)

ஆகச்செய்யுள் ௨௩௧௧௪.

## முருகேசக்கவிராயர்.

பனையஞ்சேரியிலே கருணீகர்குலத்திலே பரசுராமபிள்ளைக்குப் புத்திரராய்ப்பிறந்த இவர்; புதுக்கோட்டை சம்ஸ்தானத்திலும் தஞ்சை சம்ஸ்தானத்திலும் மிகப் பிரசித்திபெற்ற வித்துவானாயிருந்தனர். பதங்கள் பாடுவதில் மிகத்தேர்ச்சிபெற்றவர். இவர் தமக்கு ௬௬-வது வயதிலே 20 வருடங்கட்கு முன் தேகவியோகமாயினர்.

* மாபாலா சோழ வளநாடா மாராஜ
கோபாலா விந்த்ர குலதிலகா—பூபாலா
கண்டனங்கை வேல்குரும்பை கஞ்சமின்று நான்மகிழ்ந்து
கண்டனங்கை தேவரம்பை காண். (௧)

* மாராஜ கோபாலா மாதங்கங் கண்டமிடை
சீரார் நடைமுலைபல் சிற்றடிகாண்—பேரான
தங்கஞ்சங் கந்தந்தஞ் சங்கந்தம் பந்தந்தம்
பங்கந்தங் கங்கஞ்சம் பார். (௨)

* மேருநி கர்புயன் ராஜகோ பால விவேகிதன்னைத்
தாருகர் னன்புய லென்பார் புலவர தன்றடுக்கச்
சீருடன் கேட்கச் சமயங்கள் பார்க்கத் திரிகுற்றமுண்
டோருழிக் குற்றமு மில்லவ னேநிக ரொண்ணுதலே. (௩)

* கைவழங்கா லோபியரைக் கன்னனென்பா ரெக்காலும்
மெய்வழங்கா ரைத்தரும வேந்தனென்பார்—பொய்வழங்கும்
வாணர்கட்கு மல்லாற்ஜி மன்னவா நின்சமுகங்
காணவுண்டு வேணதெல்லாங் காண். (௪)

* கல்லை யுருவம தாக்கிய மால்சன கன்கொடுத்த
வில்லை வளைத்தவன் றன்னரு ளால்முன்பு மெய்யுரைத்தோன்
சொல்லை நிகர்த்தவன் மல்லாற்ஜி தீரன் சுகுணமென்ன
இல்லையெ னுஞ்சொல தில்லையெக் காலமு மேந்திழையே. (௫)

* மதிக்குடை யான்சிலை மாரனென் பாருண்மை மாதுசந்த்ர
மதிக்குடை யானரிச் சந்த்ரனென் பாரொளி வாய்ந்தபிறை
மதிக்குடை யான்சிவ னென்பார்க ளன்றன்று வண்மைவெகு
மதிக்குடை யான்றுரை மல்லாற்ஜி நாயகன் மாமயிலே. (௬)

* சலாமென் றுரைமுன்பு மன்மத ராஜன் சமரினில்மிஞ்
சலாமென்று பூங்கணை வாங்கவுங் கோகிலந் தானினியே
சலாமென் றிருக்கிற தென்றுமல் லாற்ஜியுன் றன்னிடங்கொஞ்
சலாமென்று நேமகஞ் செய்தா ளெனச்சொல் சதுரனுக்கே. (எ)

* நல்லெட்டுத் திக்கும் புகழுமல் லாற்ஜி நரேந்திரனால்
வெல்லட்டு மென்றனை மன்மதன் றாது விளம்பமனம்
செல்லட்டு முன்னெஞ்சில் வந்திலை மாதென்று தேர்ந்துசும்மா
சொல்லட்டுந் தான்பய மாநல்ல தாகட்டுந் தோகையரே. (அ)

* வனமேவு மாலையன் வாரே னெனச்சொன்ன வஞ்சகனை
மனமே நினைந்திட வேண்டா மெனச்சொன்னன் மாரனம்பு
தனமேற் பொழியவுந் தூதாகச் சென்று சலுகைசொல்ல
முனமே நடந்து தினம்வரக் காண்கிலென் மொய்குழலே. (கூ)

* அறந்தாங் கியசெங்கை மல்லாற்ஜி மன்னவ னன்றுவந்து
திறந்தாங் கியமத லீலையி தென்றெனைச் சேர்ந்தணைந்த
நிறந்தாங் கியபுய னிவ்வேளை யென்னை நினைப்பதற்கும்
மறந்தா னவனை மறந்திட யானு மறந்தனனே. (கo)

* மதுமைகுடி யாயிருக்குங் குழல்வனிதை சிலைமதவேள் வாளி தூவ, விதுமயலோ வென்கதுரை யேயிரங்கா வாறதுதா னென்கொலோசொல், புதுமையிலும் புதுமையிவள் வடிவழகைக் கண்டபின்னல் புகழ்ந்து நாணும்,பதுமையெதிர் மொழிபேசுஞ் சித்திரமுந் தலையசைக்கும் பாராள் வாயே. (கக)

* கந்தமட்டு மலர்க்குழலா யென்சாமி தன்னிடம்போய்க் கலகஞ் செய்திங், கெந்தமட்டும் வந்தவரை வாராம லிருக்கவைத்தாயினமென் செய்வாய், சொந்தமட்டு மிகப்பேசு மென்சகியே வஞ்சகியே தோத கத்தி,இந்தமட்டும் வந்தமட்டு மெந்தமட்டுந் தானமட்டு மென்னைத் தானே. (கஉ)

* தலமெலாம் புகழ்புதுவை நகரில்வா ழிந்த்ரகுல
சந்த்ரமுக நயதந்திரா
சதுரவித ரணைசமுக கருணைபர வியமஞ்ஞ
சங்க்ராம விஜயவதுலா

தனதசௌ பாக்கியபரி பாலன விநோதசுக
சரதமுறு மரியவரதா
சங்கீத ரசிகநா யகராஜ கோபால
சாமிநீ யொன்றுகேண்மோ
கலசமதி முலைவதன கனிகையவள் நீவந்து
கலசமதி யாவண்மேலும்
கருதரிய வழகுபொலி யிரதியுமி வட்குநீகர்
கழறவரி தரிதுமந்த
காசநகை புரிபருவ நேசரத தருணியிது
காலமணை மீதுபுணரும்
கலவிசுக முலகிலிவ ளிணையொருவ ரிலைசகல
கலைவலப மதகிரீடி
குலவுமீன் கொடியனுங் கொடியனாற் கொம்பிலாக்
கொடிபோற வயங்கமாதர்
குருநேச வாவென்ன வின்னமு மெக்காளக்
குருநேச வாவெனகிறாள்
குழன்மாலை யெஙகெனச் சத்தசுர முளவாயர்
குழன்மாலை யிதுவெனகிறாள்
கூறுவது புதுமையென கண்ணீர் கரைத்திடுங்
கூறுவது புதுமையென்றாள்
இலகுகலை மதிகெட்ட தேதெனக கலைமதி
யெனக்கெனே கெட்டதென்றாள்
என்னமோ கவலையென் றலவளு மிபபோது
மென்னமோ கவலையென்றாள்
என்கணீர் வருவதென வென்கணீர் தாம்வந்த
தேதென்று நகைசெய்கிறாள்
இவ்விதங் கிளிபோ லுரைத்திடுங் காமிதனை
யின்றுவந் தருள்புரிவையே. (௬௬)

ஆகச்செய்யுள் ௨௧௩௨௭.

---

## மூத்துச்சுப்பையர்.

இவர் திருநெல்வேலிசசில்லா சேற்றூரையடுத்த புனல்வேலி என்னு மூரினர். வேதாந்தநாடகமென்னும் ஓரரியநூல் செய்தவர். இற்றைக்கு 25 வருடங்கட்கு முன் தேகவியோகமாயினர்.

கலிகாலத்தைக்குறித்துரைத்தது.

* மேட்டைத் தணித்துக் கிடந்தாலை விண்விர மேல்லைத்துக்
காட்டைப் புறஞ்செய்து காடாக்கி யூரைக் கருதிமர

மூட்டைப் பிடுங்கித் தலைகீழ நட்டு முளைக்கவைக்குஞ்
சேட்டைக்கென் றேகலி யேயுனை வேதன் சிருட்டித்ததே. (க)

* அண்டின பேரைக் கெடுப்போரு மொன்றுடைத் தாமுடிந்து
குண்டுணி சொல்லுங் குடோரிக ளுங்கொலை யேநிதஞ்செய்
வண்டரைச் சேர்த்தின்ப சல்லாபம பேசு மறையவரும்
சண்டிப் பயல்களு மேகலி காலத்திற் றூட்டிகரே. (உ)

* ஊசிக்கும் நூலுக்கு மாகாமற் செய்தொழி லுள்ளவெகு
தோசிக்குஞ் சாமித் துரோகிகட் குந்தொலை யாவழக்காப
பேசிக்கொள் வோருக்குங் கற்பாலி லங்கிய பேதையரை
யாசிக்கும போகட்கு மேகலி காலம யதார்த்தமதே. (ங)

* அள்ளித திரவிய மீந்தாலும பொய்யுரை யாதவரைக்
கள்ளரென் றேதுங் கலியுகத் தேகடை தேயெடுத்துத்
தெள்ளமு தொக்க நொடிககா யிரம்பொய் செலுத்துமதி
உள்ளவ ரேபெரி யோர்புவி யோர்கரு முவந்தவரே. (ச)

* ஊட்டி யினித்தசொல் லுத்தமி யென்றாள் ளொருத்திவரக்
காட்டிக் கணவனைக் கண்ணுறக காட்டிக கனத்தமதக்
கோட்டிகொண் டாரையு மேகுடி மாதர்கள் கூடுவதால்
ராட்டுவைத் தார்களின் றேகலி யிற்றூசி நங்கையரே. (ரு)

* வில்லாய் வளைந்து நிசங்காட்டி வாங்குவர் மீளவந்தே
அல்லும் பகலும் கடன்கொடுத் தோர்க ளலைந்திடினும்
வல்லங்கம் பேசுவ ரில்லையென் றேதுவர் வாளுருவிக்
கொல்லவும் பார்ப்பர் கலிகாலத் தேகடன் கொள்ளிகளே. (சு)

ஆகசசெய்யுள் உ௲கநூ.

---

## வேதநாயகம்பிள்ளை.

திரிசிரபுரத்தையடுத்த வேளாண்குளத்தூரிலே சவுரிமுத்துப் பிள்ளை என்பவருக்குப் புத்திரரான இவர்; சீகாழி, மாயூரம்முதலிய விடங்களில் டிஸ்திரிக்ட்டு முனிசீபாகவிருந்தனர். நீதிநூல்,சருவசமய சமரசக்கீர்த்தனை, பிரதாபமுதலியார் சரித்திரம், சுகுணசுந்தரி சரித்திரம், பெண்மதிமாலை முதலியன இவரியற்றியவை, இவர் கத்தோலிக்கிறித்தவ சமயத்தவராயி னும் சமரசமாகவே தந்நூல்களைக்கூறுவர். மகாவித்துவான் திரிசிரபுரம்

மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் மாணாக்கர்களுள் இவருமொருவர். இ. பி. ௧௮௬௫ ஞு ஜூலைமீ ஆதிவாரத் தன்றிரவு தேகவியோகமாயினர்.

கடவுள் வணக்கம்.

* ஒன்றிரண்டு மூன்றுதலை யுருவுடையா யருவுடையா யுலகமீது, நின்றிரங்குநான்குதலை யஞ்சுதலை யறுதலையு நேசம்பூண்டு, நன்றிதனி லெழுதலையு ஞானமெட்டுத் தலையுமரு ணல்லோர்போற்றும, பொன்றிகழு நின்னடிகட்கொன் பதுபத்துத் தலைவணக்கம் புரிந்திட்டேனே.

தமது உத்தியோகத்தை விட்டிருந்தபோது கூறியன.

* தறைநீங் கினவுத்தி யோகத்தைக் கைவிட்ட தன்மையினாற்
சிறைநீங் கினபல தீயர்களுள் ளாகிச் சிறுமையுறும்
குறைநீங் கினதுட்டர் கூட்டமு நீங்கினங் கூடுந்துன்பப்
பொறைநீங் கினநங் கறைநீங் கினமகிழ் பூணெஞ்சமே. (௨)

* தண்டுகொண் டோட்டினும் போகாம னமமைத் தரிசிக்கவே
பண்டுவந் தோரின்று தாமபூலம வைத்துப் பரிந்தழைத்தும்
திண்டுமின் டுஞ்சொல்லி வாரா திருந்தனர் செய்கையெலலாம்
கண்டுகொண் டோமினித் தொண்டுகொண் டோநங் கடவுளுக்கே. ()

* வீடு நிலங்கள் பொருளைவிற் பாரிந்த மேதினியில்
நீடுமெண் சாண்மெய்யை யோர்சா ணுதர நிமித்தம்விற்று
நாடு மரசர்க் கடிமையென் றேமுன்பு நாங்கொடுத்த
ஏடு கிழிபட்ட தன்றோ வுத்யோக மிழந்ததுவே. (௩)

* ஈனத்தி லேபிறந் தோனிறை யாய்வரி னென்றுமது
பானத்தி லேபரி தானத்தி லேகை பழகியவ
மானத்தி லேமிகுத் தோர்க்கதி காரம் வழங்கிடுவன்
ஞானத்தி லேசிறந் தோரையெல் லாந்தள்ளி நைவிப்பனே. (௫)

* அழையாமல் முன்வரு வோரிப் பொழுதிங் கழைத்தும்வரார்
கழையா மெனவின்சொல் கூறி யவர்வன்சொல் கற்றுகொண்டார்
பழையார் நமையறி யாராயி னாரிப் படியுறநம்
பிழையா தெனினுத்தி யோகத்தைக் கைவிட்ட பேரிழவே. (௬)

* ஒருநாளு மேயுனைப் பாரா திரோமுனை யுற்றிடுநாள்
திருநாள்மற் றியாவும் வெறுநா ளெனமுன்பு செப்பியவர்
அருநாள் பலசென்றும் பாரா திருந்தன ரண்டிநம்பால்
வருநா ளவர்க்குக் கருநாளென் றுயமெதன் மாயநெஞ்சே. (௭)

*பேருள்ள மட்டுந் குளநாடும் பக்கி நிதிமடவார்
சீருள்ள மட்டுந் தொடாவாருந் யோக சிலாக்கியமாம்
பேருள்ள மட்டு முறவாடிப் பின்பு பிரிந்திடுவார்
பாருள்ள மட்டும் பழிசுமை தாங்கிய பாதகரே. (அ)

* தோமிருந்த தொழிலொன்றே தொலைந்தன்றி யறிவொழுக்கஞ் சுகங்க ளோடு, நாமிருந்தோ முறையாட நாவுமிருந் தறுபழைய நடபினோரும், தாமிருந்தா ரவாநடக்கத் தாளுமிருந் தனந்தமுந் தடையொன்றின்றித், தேமிருந்த நமவீடு திறந்திருந்து மவாவாராச செய்கை யென்னே (கூ)

* தாயிலன் புடைய நினைத்த கரிசித்தல சாலுமவேறு
கோயிலென் குாமே னெனமோ கூப்பிடும் வாராமுனனம
வாயிலை யறிபா நல்லோா வந்தினனே ளளளுறறா
ஆயிலுந் யோக நீபபா லறிந்தன முலகையமமா. (க0)

* அருங்கால பதரை யகறறலபோற பாரில
ஒருங்கா வதிகார மோய—நெருங்கிவரும
துட்டரெலா மமைவிட்டுத் தூரவகன றார்நமபால்
சிட்டரெலாம வந்தார் தெரிந்து. (கக)

* ஆதியையர் சுபபைய ரபபைய ரென்றுபய
வாதியைய ராக வருவோரபோ—ஓதியே
பன்னாள் கழித்தேன பரனேயுன ளுமினி
எந்நாளும் பேசவர மீ. (கஉ)

திருவாவடுதுறைச் சுப்பிரமணியதேசிகசுவாமிகள் பேரிற் பாடியன.

*விதியிருந்த பதியெனுஞ்சுப் பிரமணிய தேசிகமெய்ஞ் ஞானக் குன்றே, துதியிருந்த நின்புலவன் சொல்வழியே பல்வழியுந் தோன் றநீயே, மதியிருந்தாய் பிரிந்திடவு மனம்பொருந்தா யெனவிருந் தேன் வான்கோ முதலிய, பதியிருந்தா யெனவந்த மாபுலவன் பொய் சொலவும் படித்தான மாதோ. ID (கங)

* இல்வாழ்வை நீத்தற மேற்கொண்ட நீபிற ரில்விடத்துச்
செல்வாழ்வு சற்றும் விரும்பாயென் பாரிது சித்திரமே
புல்வாழ் வுடையவன் வீடெங்கு நீபரி பூரணனாய்
இல்வாழ்வுற் றாய்சுப் பிரமணி யானந்த நற்றவனே. (கச)

* கற்றவர் சிரோமணியா மீனாட்சி சுந்தரமா கலைவல் லோய்மா
சற்றவன்சுப் பிரமணிய தேசிகனைத் தினங்காண வவன்சொற்கேட்க
மற்றவனோ டுரைகூறப் பெற்றநின்கண் காதுநா மண்ணிற் செய்த
நற்றவம்யா தறிதரவென் கண்காது நாவறிய நவிலு வாயே. (கரு)

* குருவுங் கிரகணமுங் கூடலாற் கங்குல்
மிகுமென் றுளமே வெருவல்—நகுதுறைசைச்
செப்பரிய மாச்சுப் பிரமணிய தேசிகனும்
அப்பரிதி யீங்குதித்த தால். (கசு)

* மாதவச்சுப் பிரமணிய தேசிகமே லோயுவர்ப்பு வாரி சூழ்கும், ஆதவன்கீழ்த் திசையுதிக்குஞ் சுடுமணுகு மதியழிக்கு மத்தமிக்கும், சாதகமேற் றிசையுதிப்பாய் நிழலளிப்பாய் மதியளிப்பாய் தரணி மீது, போதகுணக் கடல்படிவா யத்தமியா யுனைக்கதிரோன் பொருவா னன்றே. (கஎ)

* அன்னம் பசித்தவர்க் கீயீர் பசியற் றவன்சிலைக்கு
முன்னம் படைத்துப்பி னுண்பீர் சிறிதச் சிலையருந்தில்
இன்னம் படைத்திடு வீர்கொல் சிலையினை யேசிச்சின்ன
பின்னம் படவுடைக் காதிருப் பீர்கொன்மெய் பேசுங்களே. (கஅ)

* மேகங்கள் யாவுமுயர் விண்ணீங்கி வேசையர்தம்
தேகங் களில்வாசஞ் செய்கையால்—மாகமிசை
ஆசைக்குங் கார்காணே மவ்வே சையர்கொடுப்பர்
காசைக் கொடுப்பவர்க்குக் காண். (கக)

வஸ்திரம் விற்பவரைக் குறித்துரைத்தது.

* கட்டிய கந்தல் புதிதென்று விற்பர் கணக்கிற்றொகை
ஒட்டி யெழுதுவர் கைமேல் விலையை யுடன்றரினும்
வட்டியி லாபங்க ளொன்றுக்கு நூறென வாங்குமந்தச்
செட்டிகட் கஞ்சி யலவோநம் மீசன் றிகம்பரனே. (உ0)

* பெண்ணைச் சடையில் வைத்தவன்போற் பெண்கள் புலனை யொளிப்பதற்கோ, பிறர்கண் டாலு மாண்பெண்ணும் பேதந் தெரியா திருப்பதற்கோ; பண்ணைப் பழிக்கு மொழியரொடு பாய்போல் விரித்துப் படுப்பதற்கோ, பாசக் கயிறு போற்பிறரைப் பற்றி யிழுத்

துப் பறிப்பதற்கோ; மண்ணைத் தழுவி நடக்குமின்னார் மலர்க்காற் றாசி தட்டுதற்கோ, மாயத் துறவு பூண்டதன்றி மயிருந் துறவோ மென்றுகொலோ; விண்ணைத் தழுவப் பழிச்சுமைபோல் மிகவே சடையை நீர்வளர்க்கும்,விதமென் சொல்வீர் பண்டார வேடம் பூண்ட மேலோரே. (உக)

மதுவூனுண்ணும் அந்தணரைக்குறித்துரைத்தன.

* ஆரணா வாயினர் மாடாடு கோழி யடித்தவித்துப்
பாரணஞ் செய்யப் பழகிக்கொண் டார்மது பானத்திலும்
பூரணா ராயின ரின்னவர்க் கிந்தத்துற் புத்திதந்த
காரணங் கண்டயற் கோர்சிரங் கொய்தனன் கண்ணுதலே. (உஉ)

* தேனோடு மூனுணு மந்தணர்க் கஞ்சிச் சிவன்கரத்தில்
மானோடிப் புக்க தசங்கோழி புக்கன மைந்தனிடம்
மீனோடிப் புக்கன விண்ணினுஞ் சிந்தினும் வெவ்விலங்கும்
வானோடி யேபல் லிராசிக ளாயுயிர் வாழ்ந்தனவே. (உங)

* கூனைக் கியகட லாறு குளங்களைக் கூட்டிமது
தானைக்கித் தம்மையு மீனைக்கி மற்றைச் சராசரத்தை
ஊனைக்கித் தாமுண்ண வேனைக் கிலனென் றுருக்கிநிதம்
தேனைக்கி னாந்த நானைக்கி னன்றனைச் சிறுவரே. (உச)

* ஊன்றாக்கி யுண்ணும் பிராமணர்க் கஞ்சி யுமாபதியும்
மான்றாக்கி னன்கையில் வேலவன் றாக்கினன் வாரணத்தை
மீன்றாக் கினன்கொடி யாக வுருவிலி மேடமது
தான்றாக்க வேயதி லேறிக்கொண் டானந்தச் சண்முகனே. (உரு)

விளைவிலாக்காலத்தினும் வரிவாங்கு மதிகாரிகளைக்குறித்துரைத்தன.

* உழவுக்கு மாடுண் டதைமேய்க்க மைத்துன னுண்டுநெடுங்
கொழுவுக்குச் சூல மலமாந் தருநிலங் கொண்டிருந்தும்
அழலொக்குங் கோடைநட் பிப்பாழி லேயதி காரிகள்செய்
இழவுக்குத் தானஞ்சி யேர்விட் டரன்பிச்சை யேற்றனனே. (உசா)

* மாவலி தந்த நிலமுமுன் மேய்த்தபன் மாடுகளும்
காவலெட் டாமத தாரக் கலப்பையுங் கையிருந்தும்
ஆவல்செய் தீர்வை யதிகா ரிகள்வம்புக் கஞ்சிப்பயிர்ச்
சீவனம் விட்டுமண் ணுண்டுயிர் வாழ்ந்தனன் சீதரனே. (உள)

நாவிதரைப்புகழ்ந்துரைத்தது முதலியன.

* நெடுமுடி பூண்ட வரச ரெனினு நெருங்கியவர்
குடுமியை யெட்டிப் பிடித்துத் தலையைக் குனியவைத்துக்
கடுமை யொடுதொடை தட்டிக் கழுத்தினிற் கத்திவைத்தே
இடுவென நாடொறும் பொன்வாங்கு நாவிதர்க் கீடில்லையே. (௨அ)

*இட்டமுடன் முதலியார் வாங்கிவந்த காளைதின மிருபோர் தின்னும், சட்டமுடன் கொள்ளுண்ணும் புல்லுண்ணு மதைப்பண்டி தன்னிற் பூட்டக், கிட்டவரின் முட்டவருந் தொட்டவர்மே லேகழியுங் கீழே வீழும், எட்டாள்க ளேக்கிடினுந் தடிகொண்டு தாக்கிடினு மெழுந்தி ராதே. (௨௯)

முகஸ்துதிபேசிப் பரிசுகேட்கும் கவிஞரைக்குறித்துரைத்தன.

* அருங்கிரியே கற்பகமே காளையே யனந்தனே யரியே யென்ன, ஒருங்குரமை யேபுகழ்ந்து பொருள்கேட்ட வொருவனையா முற்று நோக்கி, இருங்கல்லே மரமேமா டேபாம்பே மிருகமே யென்றேங் காய்ந்தான், மருங்கவன்வார்த் தையைத்திருப்பி நாஞ்சொன்ன லவனுக்கேன் வருத்த மம்மா. (௩௦)

* கற்பக மேருசேடன் காமதே னுவநீ யென்னப்
பற்பல சொல்லி நின்று பரிசுகேட் பவரே யென்னை
வற்புறு மரங்கல் லென்றீர் மாடென்றீர் பாம்பு மென்றீர்
பொற்பினம் மரத்தாற் கல்லாற் பூசையே பரிசுமக்கே. (௩௧)

* இந்திரனீ சந்திரனீ யென்னல் பிறன்மனையைத்
தந்திரமாக் கூடுஞ் சழக்கனீ—வந்தகுரு
பத்தினியைச் சேர்ந்தபடு பாவிநீ யென்பதாம்
துத்தியமோ நிந்தையோ சொல். (௩௨)

* கன்னபொன் னவெழிற் காமாவென் றேகவி கட்டியென்முன்
உன்ன திரக்குங் கவிப்புல வீருமக் கொன்றுங்கொடேன்
முன்னறும் பாட லெனக்கலக் கன்னன் முதலியர்க்கே
அன்ன ரிடஞ்சென் றரங்கேற்றிக் கொண்மி னருநிதியே. (௩௩)

* பூவென்று மாவென்று கண்ணார்பொன் னென்றிச்சை பூண்டற்பரைக், காவென்று கோவென்று தாவென்று பாடுங் கவிப்புல

வீர், தூவென்று மேயொன்று மாநன்று தானென்று தோன்றமொன்றைத், தேவென்று கோவென்று காவென்று பாவென்றுஞ் செப்புமினே. (௩௪)

* தனதனி வள்ளனீ யெனப்பாடும் புலவனுக்குத் தாயா னெல்லீ, கனதலமீ கலைமணியீ யென்றப்பா னிறுத்தினம்போ கவிஞ வென்றோம், நினதுபரி செங்கென்று னெனைத்தனதன் வள்ளலென நீ பொய் சொன்னாய், மனதறிய நாமும்பொய் பகர்ந்தனமென் றோஞ் சென்றான் மதிவல் லோனே. (௩௫)

* சுந்தரியே புறமேகி வந்ததுணை வரைநோக்கிச் சுபமென்னென்றேன், வந்ததோ ரசுவமென்றார் கோரமென்றார் மயங்கினின்றேன் மாமா வென்றார், நொந்தழுதேன் பலர்மொய்த்தார் வாசியெனத் தேறினே னுவன்ற யாவும், அந்தமுறுங் குதிரையென்று சொலிச்சினந்தார் நாணமிகுந் தஞ்சி னேனே. (௩௬)

மழையிலாதகாலத்துப் பாடியன.

* காரேயுன் னீரையெல்லாங் கள்ளன் கவர்ந்தானோ
நீரே யுதவாய் நெறியாமோ—நேரேதான்
வாரியுண்டு வாரிமொண்டு வாரியுண்டு வானிருண்டு
பேரிகொண்டு நீதிரண்டு பெய். (௩௭)

* அம்புவியைத் தீயா லபிடேகஞ் செய்ததுபோல்
வெம்புகதி ரெட்டிக்கண் விட்டெறிக்கப்—பைம்புயலே
வானமலை யும்வே கவனமன மும்வேக
ஈனமா நீவரா தென். (௩௮)

* செல்லென்றன் னாமத்தைச் செப்பினதே யல்லாது
செல்லென் றுனைநாங்கள் செப்பினமா—அல்லென்று
மெய்யா வுவமிக்க விண்மீது தோன்றியநீ
பெய்யாமற் போனதென்னோ பேசு. (௩௯)

* செய்வே னெனச்சொல்லிச் செய்யா வுலோபரைப்போல்
பெய்வே னெனக்காட்டிப் பேர்முகிலே—மைவானில்
ஓடுவாய் நிற்பா யுருமுவாய் மின்னுவாய்
நீடுவாய் பின்பெய்யாய் நீ. (௪௦)

* வேண்டுங்கால் நீபெய்யாய் வேண்டாத போதுபெய்வாய்
தாண்டுநீ செய்வதெல்லாந் தப்புகளே—நீண்டுலவும்
வட்டமுகி லேயுனக்கு மாசெனப்பேர் தந்தோர்க்குப்
பட்டமது கட்டுவேன் பார். (௪௧)

* செல்வரெனப் பேர்படைத்தூந் தீனர்க் குதவாத
புல்வழியோர் போலப் புயலேநீ—பல்வர்
பலதரங்கேட் டும்பெய்யாய் பாரிலேன் பூண்டாய்
சலதரமென் னும்பெயரைத் தான். (௪௨)

* உண்ணீரி லாமையினு லுண்ணீரும் வற்றியழக்
கண்ணீரும் வற்றியது கந்தரமே—தண்ணீரின்
பஞ்ச முனக்குமுண்டோ பாரோர்க் கிரங்காத
நெஞ்ச முனக்கிருப்பு நேர். (௪௩)

* மேகமே நீயுமந்த மேகரோய் போற்கறுத்தாய்
சோகமே செய்துளியைத் தூறியே—வேக
மிகுவெட்டை யைக்கிளப்பி வேதைசெய்வ தாலே
தகுமேயுன் பேருனக்குத் தான். (௪௪)

* மையே யெமைமுன் வளர்த்தநீ கைவிட்டால்
ஐயே யினியெமையா ராதரிப்பார்—பெய்யே
கடகட வென்றுங் களகள வென்றுஞ்
சடசட வென்றுநீ தான். (௪௫)

* மின்றொழில் சூரியன் றன்றொழி றுங்குதன் மிக்கபுவி
யின்றொழி றீக்குச் சுடுந்தொழில் காற்றுக் கியக்குந்தொழில்
உன்றொழில் பெய்தன் மழையே யுணையுண் டுயிருய்குவ
தென்றொழி லுன்றொழி னீமறந் தாற்புவிக் கென்றொழிலே. (௪௬)

வேனிற்காலவெப்பமிகுதியைக்கண்டுரைத்தன.

* சூரியா நின்பரிகள் சோம்பன்மேற் கொண்டனவோ
ஆரியத்தே ரச்சாணி யற்றதோ—ஓரிமையிற்
செல்லென்றாற் செல்லாமற் றீமாரி பெய்துநின்றாய்
இல்லென்றார் சொன்னார் நினை. (௪௭)

* பகலேபா கன்போற் பரிகண் முடமோ
அசல்வான் வழிதூர்ந் ததுவோ—அகலா

திருந்தாய் திருந்தா யெரிந்தாய் விரிந்தாய்
விருந்தார் புரிந்தார்கண் மேல். (சஅ)

* வேலைக்குண் மூழ்கினு மேகத்துட் சேரினும் விண்ணின்மண்ணின்
மூலைக்கு மூலை யொளியினுங் காரிருண் மொய்க்குங்குளிர்ச்
சோலைக்குண் மேவினுங் கோடைப் பரிதி தொடர்ந்துசுடு
மாலைக் களங்கன் சுடுமென்று பொய்சொல்வர் வம்பர்களே. (சகூ)

காரைக்கால் தனக்கோடிமுதலியாருக் கெழுதியன.

* இத்தலம் போற்றுந் தனக்கோடி பூபனின் னின்கழு தம்
கைத்தல மேந்தி விழித்தல மொத்திக கனசிரமாம்
அத்தலஞ் சூடி யகத்தலம பூரித் தரசுரிமை
மூத்தலம் பெற்றவர் போலே சுகக்கடன் மூழ்கினனே. (௫௦)

* வாடும் பயிர்க்குநன் மாரியென் கோபல் வறுமையுற்றுத்
தேடு மவர்க்குநற் செல்வமென் கோபெருந் தீவினைச்
சாடு மவர்பெற்ற சித்தியென் கோவித் தரணியெங்கும்
நீடும் புகழ்த்தனக் கோடிமன் விட்ட நிருபத்தையே. (௫க)

* உனக்கோடி யலைவதே யுறுதியெனக் கருதும்
உள்ளமே கள்ளமற விள்ளுமென்சொற் கேளாய்
இனக்கோடிக் கருள்பொழியுங் கனக்கோடி போல்வான்
ஈசனடி மறவாத நேசன்விசு வாசன்
மனக்கோடி லாதவெழின் மாரனதி தீரன்
மண்ணுலகும் விண்ணுலகு நண்ணுபெரும் புகழோன்
தனக்கோடி பூபாலன் றனக்கோடி நீவந்
தனக்கோடி சாற்றினது தனக்கோடி தானே. (௫உ)

* மையகமி லாத்தூயன் மாகவிஞர் நேயன்
மானமுந்தா னமும்பெரிய ஞானமுமே யுடையோன்
பொய்யகமி லாப்புனிதன் புண்ணியன்றிண் ணியவான்
பூமகிழுந் தனக்கோடி மாமகிபன் ருனம்
செய்யகமுற் றடுத்தவிடை யூறுகளைத் தீர்த்தான்
திருக்குறளிற் செய்யாமற் செய்தவுத விக்கு
வையகமும் வானகமு மாற்றலரி தென்னும்
வள்ளுவனார் மொழியையென்று முள்ளுவாய் மனமே. (௫௩)

* கணமேனு மருள்மறவாத் தனக்கோடி பூபதின்கை யொப்ப மின்றிப்,பணமேனு நிலமேனும் பதியேனு நிதியேனும் பாரின் மீதெ வ்,வணமேனும் வாங்குவரார் கொடுப்பவரா ரெப்பொருட்கு மன்ன னீயே, குணமேரு வாமுனக்குத் தனக்கோடி யெனுநாமங் குறிக்கோ ளன்றோ. (ருச)

ஒரு பஞ்சகாலத்தில் திருவாவடுதுறைச்
சுப்பிரமணிய தேசிகசுவாமிகள்பேரிற் பாடியன.

* எரியொத்த பஞ்ச மிடங்களை யொத்த நிடங்கர்பற்றும்
கரியொத் தனபல் லுயிர்களப் பஞ்சக் கராமடிக்க
அரியொத் தனன்சுப் பிரமணி யைய னரிசக்கரம்
சரியொத் தனவவ னீந்திடும் பொன்வெள்ளிச் சக்கரமே. (ருரு)

* தடையில் கொடைச்சுப் பிரமணி யையநிற் சார்ந்தவர்கொள்
கொடையை யவர்சொல வேண்டுங்கொ லோவவர் குக்கிசொலும்
இடைசொலுங் கண்டமுங் காதுஞ் சொலுமிறு மாப்புடைய
நடைசொலுங் கையிற் குடைசொலும் வேறென்ன நான்சொல்வதே

* நேரென்று மில்சுப் பிரமணி யாதிப நின்னைப்பல்லோர்
காரென்று சொல்வரக் காருமவ் வஞ் சித்தவிக் காலத்திலே
ஊரென்றும் வாழ வறுசுவை யுண்டி யுதவியுன் றன்
பேரென்று நிற்கச்செய் தாயுனைக் காரெனல் பேதைமையே. (ருஎ)

* நிசியோடத் தோன்றுந் தினகரன் போலவிந் நீணிலத்தோர்
பசியோடப் பஞ்சம்பஞ் சாப்பறந் தோடப் பதார்த்தமெலாம்
சுசியோ டளிக்க வவதரித் தானற் றுறைசைதனில்
சசியோடு நேர்முகச் சுப்பிர மண்ய தயாநிதியே. (ருஅ)

* பானு நிகர்சுப் பிரமணி யாரிய பல்லுயிரை
வானு மறந்தவிந் நாள்சோ றுடைபொன் மடிசுரந்து
தேனுவை நீவென்ற தாலா வடுதுறைச் செல்வப்பெயர்
தானுன் பதிக்குத் தகுந்தகுங் காணிது சத்தியமே. (ருகூ)

* மாமேக நீரொன்றை யேதருஞ் சுப்ர மணியப்பெயர்ப்
பூமேக மன்னமுஞ் சொன்னமு மின்னமும் பூண்டுகிலும்
மீமேக முட்டும் வளமாடம் பூமி விடைபசுவும்
தோமேக வேதமு நீதமும் போதமுந் தூவிடுமே. (சுo)

* படிபடி யாகப்பொன் கொட்டிநெற் கொள்ளுமிப் பஞ்சத்திலே
பிடிபிடி யாக மணியுங் கனகமும் பெட்புறுவோர்
மடிமடி யாக்கட்டிச் செல்லத்தந் தான்பெரு வள்ளலென்றே
குடிகுடி யாகத் தொழுஞ்சுப்ர மண்ய குணாகரனே. (சுக)

* அம்மையு மத்தனு மாஞ்சுப்ர மண்ய வனகனைத்தான்
சும்மை நிதிசொற் கவிஞர்க ளானுந் துதிப்பதல்லால்
இம்மையி லோர்பொருள் வேண்டாத நாமு மினிதுவந்து
செம்மை யவன்குணம் வாழ்த்துவ மேலவன் சீர்த்தியெற்றே. (சுஉ)

* இலக்கண மெய்க்கரை மாத்திரை யாமிவ் வளவுமின்றி
மலக்கண் விளைபிணி யாற்பலர் மாய்ந்தனர் மண்மிசைந்நோய்
விலக்க வருள்புரி முப்மல நோய்கெட வித்தகனாய்
நிலக்க ணமர்சுப் பிரமணி யானந்த நின்மலனே. (சுங)

* போத முறுசுப் பிரமணிய புனிதா நின்பால் வருவதற்கு
வேத வியாழ னாகாதாம் வெள்ளி மேற்கே சூலமாம்
ஆத லாலே திரவார மருணோ தயமுன் னவனுடன்
சீத மலரை நாடிவருந் தேன்போல் வருவேன் றிரமிதுவே. (சுச)

* நீர்நாடு வளத்திருவா வடுதுறைச்சுப் பிரமணிய நிமலகேண்மோ
கார்நாடு பைங்கூழ்போற் கதிநாடு தொண்டர்கள்போற் கமழாநின்ற
தார்நாடு மதுகரம்போற் றுய்நாடு சேயினைப்போற் றயையின்மிக்க
சீர்நாடு நின்சமுக நேர்நாடி வந்தனன்யான் றெரிந்துகொள்ளே. (சுரு)

* பொங்குபுகழ் சேரமல போதவடி வோய்நீ
தங்குமிட மென்னுளமெ னத்தனி நினைத்தேன்
மங்குதலி லாவடு துறைக்கணும் வசித்தாய்
இங்குமுளை யங்குமுளை யெங்குமுளை நீயே. (சுசா)

* வானென் றுதவ வருஞ்சுப்ர மண்ய வரோதயனே
தானென்று வெண்ணரன் பாடையிங் நாட்டிற் றலையெடுக்க
ஏனென்று கேட்பவ ரில்லாத் தமிழை யினிதளிக்க
நானென்று கங்கணங் கட்டிக்கொண் டாயிந்த நானிலத்தே. (சுஎ)

* நல்லார்த மிதயமலர் தனில்வளர்சுப் பிரமணிய நல்லோய் நீதான்
கல்லாத நூலிலைநீ காணாத பொருளிலைபல் கவிஞர் நின்மேல்

சொல்லாத பாவிலேநிற் றறியாத மன்னரிலே தூய நின்கண்
இல்லாத குணமிலேயா யிரநாவா ஞலுமுன்சீ ரியம்பற் பாற்றே. ()

* சுருதியோ ருருக்கொண் டன்ன சுப்பிர மணிய மேலோய்
கருதியின் னொருகா றுன்னைக் காணலா மெனும வாவால்
பொருதியென் மனம்பின் னீர்க்கப் பொறையுறும் பண்டி பூட்டும்
எருதுகள் முன்னே யீர்க்க வென்பதி யடைந்தே னுனே. (சுகூ)

* சூர்வந்து வணங்கு மேன்மைச் சுப்பிர மணிய தேவே
நேர்வந்து நின்னைக் கண்டு நேற்றிராத் திரியே மீண்டென்
ஊர்வந்து சேர்ந்தே னென்ற னுளம்வந்து சேரக் காணேன்
ஆர்வந்து சொலினுங் கேளே னதனையிங் கனுப்பு வாயே. (எ0)

* புயமிருக்குங் கரதலச்சுப் பிரமணிய வள்ளானின் புலவன் பன்னூல், இயலிருக்கு மீனாட்சி சுந்தரவேண் மைந்தனுனு மிடர்க ளெல்லாம், அயமிருக்கும் பலராலு மறிவுற்றேன் பரிவுற்றே னவ னுக் கிங்கே, உயலிருக்குங் கயலிருக்கும் வயலிருக்கு மொன்றினைநீ யுதவி னம்மா. (எக)

* கந்தனை நேர்சுப் பிரமணி யைய கவிஞரெலாம்
வந்தனை செய்தற் குரியன் பெரியன்மண் வாழ்வைவிட்டென்
சிந்தனை வாழ்பவன் மீனாட்சி சுந்தரச் செல்வனென்பான்
மைந்தனை நிந்தனைப் பஞ்சமு ருவண்ணம் வாழ்வருளே. (எஉ)

* அருந்தவஞ் செய்த தவத்தாற் புவியி லவதரித்துப்
பெருந்தவஞ் செய்சுப் பிரமணி யையநின் பிள்ளையிவன்
வருந்து மிடிப்பிணிக் கோர்மருந் தின்றிமெய் வாடினனம்
மருந்து விளையு மிடம்யா தெனினின் வளவயலே. (எ௩)

* பல்லார் புகழ்சுப் பிரமணி யையவிப் பாலனைத்தான்
இல்லாமை யென்னு மதகரி பற்றி யிடுங்கடும்போர்
வில்லா லடிக்கினுங் கல்லா லடிக்கினும் விட்டிலதால்
நெல்லா லடிக்கும் படிநீ பலகல நீட்டுவையே. (எச)

* பாவிற் பெரியவன் மீனாட்சி சுந்தரப் பாவலனே
தாவிற் பெரிய னவன்சேய் நினக்கதைத் தானுரைக்க
நாவிற் பெரியவ னுனென்சொற் கேட்டு நலம்புரியப்
பூவிற் பெரியவ னீசுப்ர மண்ய புகழ்மணியே. (எரு)

வாறூடு மண்ணூடு மலிபுகழ்ச்சுப் பிரமணிய வள்ள லேகின், பாறூடு மாவிர பத்திரவே ளைனக்கினியன் பாலர்க் கரசான், தாறூடுந் தொழிலுறுவான் சூரியமூர்த் திச்செல்வன் றனக்கோர் மாற்றம், தேனூடன் றிருவாக்காற் செப்பின்மனோ பீட்டமெலாஞ் சித்தி யாமே. (எசு)

* கோவைமறைப் பொருளையெலா முணர்த்திடுசுப் பிரமணிய குருவே வண்டு, பூவைமறப் பினும்வறியர் பொன்னைமறப் பினுந்தமிழ்நூற் புலவ ரெல்லாம், பாவைமறப் பினுங்கமலம் பகலைமறப் பினுநேசம் பழுத்த தொண்டர், தேவைமறப் பினுநினது சேவை மறப் பறியாதென் சிந்தை தானே. (எஎ)

* பொறைநிறை வாய்மை தூய்மை புண்ணிய முதல்யா விற்கும்
உறையுளாஞ் சுப்ர மண்ய வுத்தமா வீத லன்றி
இறையுங்கொள் ளாநி னக்கொன் றீந்திடக் கோபா லப்பேர்
மறையவன் வருகின் றனீ மனமகிழ்ந் திசைத னன்றே. (எஅ)

மீனாட்சிசுந்தரம்பிள்ளை யவர்களியற்றிய
சீகாழிக்கோவை அரங்கேற்றுகையன்று கூறியன.

* வாதவூ ருதித்தந்நாட் டிருக்கோவை யுரைத்த
மாணிக்க வாசகரே சிரபுரத்தி லிந்நாள்
ஆதவனிற் றோன்றிமீ னாட்சிசுந்த ரம்மென்
றரும்பெயர்பூண் டொருகோவை யறைந்தனன்கா ழிக்கே
ஏதமில்லிலக்கோவை யாயுகத்தின் மூத்த
தென்னினுங்கற் பனைநயத்தி லிக்கோவை முன்னும்
மூதறிஞர் வைகலும்பா டப்பாட வாக்கின்
முதுமைகொள்வா ரெனவுலக மொழியுமொழி மெய்யே.

* திருவமர்கோ வையைமகிழ்ந்து வாதவூ ரரைத்தன்பாற் சேர்த்துக் கொண்ட, பெருவில்சிதம் பரநாத னினுமோர்கோ வைக்காசை பூண்டன் னானை, மருவுசிர புரத்தின்று மீனாட்சி சுந்தரப்பேர் வழங்கிக் காழிக், கொருகோவை செய்வித்தான் சிதம்பரநா தன்சே யென் றுரைத்தன் மெய்யே. (அ௦)

* பிரமபுரத் தீசர்மேன் மீனாட்சி சுந்தரமால் பெட்பிற் செய்த, வரமுறுகோ வையைக்கேட்டோர் மகிழுவரஞ் சுவன்றம்பியேன் வள்

ளனிற்கேட், டரவர்சு சிரமசைக்கிற் றரையசையும் வரையசையு மசையு மாழி, மரமசையு மனையசையு மன்னுயிரெ லாமசைந்து வருந்து மென்றே. (அக)

* குற்றமில்சீர் மீனாட்சி சுந்தரவா ரியநின்றைக் கோயின் மேவ, நற்றவமென் செய்தனனோ மகடமிழ்செய் தவமெவனீ நவிலு மேன்மை, உற்றதிருக் கோவைபெறப் புகலிசெய்பாக் கியமெவனவ் வுயர்நூல் கேட்கப், பெற்றவென்போ லியர்புரிந்த மாதவமென் னேதுறுவாய் பெருமை மிக்கோய். (அ௨)

* வித்தகமார் மீனாட்சி சுந்தரவே ளேயொருநூல் விளம்பு மென்னைப், புத்தமுதார் நின்வாக்காற் றுதித்தனைநீ பாடியது புகலியொன்றே, எத்தனையோ கோவைகண்மற் றெத்தனையோ புராணமின்னு மெண்ணி னூல்கள், அத்தனையு மித்தனையென் றெத்தனைநா விருந்தாலு மறையற் பாற்றே. (அ௩)

* பன்னூலு மாய்ந்தாய்ந்தோர் பயனுறா துளம்வருந்தும் பாவ லீரே நன்னூலோர் மீனாட்சி சுந்தரமா லொருகோவை நவின்றான் காழிக் கந்நூலு ளொருபாவி லோரடியி லொருசீரை யாய்வி ராயின் எந்நாலுங் கற்றவரா யிகபரமும் பெற்றவரா யிலகு வீரே. (அ௪)

* பரமசுக மறியாதார் சிற்றின்பம் பெரிதென்னும் பான்மை போல, வரமுறுமுற் கோவைகளே சிறந்தவென வின்றளவு முன்னினோம், தரமறுசீர் மீனாட்சி சுந்தரப்பேர்த் தமிழ்ப்புலமைத் தலைமை யோன்சொல், பிரமபுரக் கோவையே பரிதியக்கோ வைகளுடுக் கள் பேசி னெஞ்சே. (அ௫)

* தண்டமிழுன் பாலுணர வாசைகூ ரனந்தன்
தனமீய வகையின்றி நின்சேட னாகிக்
கொண்டனனங் நாமமே யகத்தியன்றான் றன்னைக்
கூடாம லுனைமேவிக் குலாவுதமி ழகனை
அண்டலரின் முனிந்ததாற் றமிழ்முனிவ னெனும்பேர்
அடைந்தனனா தலினகிலத் தியாவருனை நிகர்வார்
வண்டமர்தார் மீனாட்சி சுந்தரவே ளேநீ
வளப்புறவக் கோவைசொல்லி னெவர்வியப்பா ரையா. (அ௬)

* இன்பாவிற் கோவைசொன்ன மீனாட்சி சுந்தரப்பே ரிறைவ யானும், உன்பாவிற் கவிசொல்வே னென்கவிபாரப் போரதைமீண் டோரா தான்றோர், முன்பாச்சொன் னூல்களையே துதிப்பருன்பா வுணர்வோர்கண் முன்னோர் நூலைப், பின்பாகச் சொலிவெறுப்பர் வல்லவனு ளோநீயோ பேசுவாயே. (அஎ)

* விண்ணேறு மாதவனோர் மீனாட்சி சுந்தரவில் வேளோ நீசொல்
எண்ணேறு கோவையினைப் புகழுயான் றிறமிலே னெனினு முன்சீர்
மண்ணேறும் வானேறு மதியினர்த நாவேறும் வகையா லுன்னைக்
கண்ணேறு மேவாமற் கறையேறு மென்புகழுங் கைக்கொள் வாயே.

* நலம்விளக்கு மீனாட்சி சுந்தரமா லொருகோவை நவின்றான் சண்பைத், தலம்விளக்க வவற்குநாம் புரிகைமா றெவனழியாத் தன மே கங்கா, குலவிளக்கே கற்பகமே குருமணியே திருவணியே குண க்குன் றேயிந், நிலம்விளக்குந் தினகரனே யெனவவனை வாழ்த்திடு வாய் நிதமு நெஞ்சே. (அகூ)

* சொல்வள முறுமீ னாட்சி சுந்தரப் புனிதன் சொல்லும்
நல்வள முடைய கொச்சை நகர்த்திருக் கோவை யாயில்
பல்வள முடையே ஞானம் பதிவள முடையே மாலை
வெல்வள முடையே யின்ப மிகுவள முடையே நெஞ்சே. (கூ0)

*விதியெதிரி லரிமுதலோர் புகழ்புகலி யீசரே விண்ணோர் மண்ணோர்
துதிபொதிபல் பாமாலை பெற்றிருப்பீர் மீனாட்சி சுந்த ரப்பேர்
மதிமுதியன்கோவையைப்போற்பெற்றீர்கொலிக்காழிவைப்பினீதி
அதிபதிநா மெனவறிவீர் நம்முன்னஞ் சத்தியமா வறைகு வீரே. ()

* நம்மாலே பெரியனெனும் வைணவரே சுரர்க்கமுத நல்கச் சென்று
நம்மால்வெண் மேனிகரு மேனியா னைரர்தா நுகரவேண்டி
எம்மாலா மீனாட்சி சுந்தரவேள் கோவையமு தீந்து சீர்த்தி
வெம்மாலில் பிரதாப வெண்மேனி செம்மேனி விரவி னானல். (கூஉ)

* காளேடு கமழ்தாரான் மீனாட்சி சுந்தரமால் காழிக் கோவை
தேனோடு பாலோடு நிகருமவன் பிரதாபஞ் சீர்த்தி யோங்கி
வானோடு மண்ணோடு மற்றேடும் வகையின்றி வடிவி ரண்டாய்
மீனோடி வான்றிரியும் பானுமதி யென்றுலகோர் விளம்பு வாரால். ()

* தண்டமிழ்முந் நீர்பருகி மீனாட்சி சுந்தரப்பேர்த் தருமக் கொண்டல், தொண்டர்கள்சூழ் சிரபுரத்திற் பொழிகோவை யெனுமமுத தூய வாரி, மண்டலமும விண்டலமும் கரைபுரண்டு திரைசுருண்டு வருத னோக்கி,அண்டர்தொழும் புகலிபிறை தோணியுற்றா னஃதின் றே லமிழ்ந்து வானே. (௬௪)

* தேவேநேர் மீனாட்சி சுந்தரக்கோ னொருகோவை செப்பிப் பாரில், தாவேயில் புகழ்படைக்கி னமக்கென்ன வவற்குமவன் றமர்க் கும் பாடாம், நாவேகா தேமனமே யவன்சீரைச் சொலிக்கேட்டு நணியிங் குன்னி, ஓவேபி லாதருங்கா லங்கழித்தீர் பிறவினைமற் றொன்றில் வீரோ. (௬௫)

* அரியவமு தொருங்குகவர்ந் தசுரரைவஞ் சித்தவினை யாட்ட வரே மேன்மைக,குரியவனா மீனாட்சி சுந்தரமால் கோவையமு துவந் தீந் தானும், தரியலர்பெற் றிடினவரை வெல்லரிது விரைவினீர் தாம தைக்கொண், டரியயன்சூழ் புகலிபிறைக் கற்பணஞ்செய் துண்டுய்ம் மின் னுவி தானே. (௬௬)

* நல்லார்க்கு நல்லவனா மீனாட்சி சுந்தரவே ணவின்ற கோவை
இல்லார்க்கு நிதிதுறவா வில்லார்க்கு விதிபுவிவாழ் வெல்லா நீத்த
வல்லார்க்குத் திதிஞானங் கல்லார்கரு மதிவேலை வைய கத்திற்
பல்லார்க்குக்கதிபுகலிப்பதியார்க்குத்துதிபதன்சீர்பகர்வார்யாரே. ()

* தேமாரி பொழிபொதும்பர்த் திருக்காழி யிறைமுன்
திகழாண்டு சித்தார்த்தி திங்கள்பாத் திரத்தில்
பூமாரி சுரர்பொழியச் செல்வர்பலர் கூடிப்
பொன்மாரி மிகப்பொழியப் புலவர்குழாந் துதிக்துப்
பாமாரி நனிபொழியப் பல்லியங்கண் முழங்கப்
பலம்புரிய நலம்புரியும் வலம்புரிமண் டபத்துத்
தூமாரி யன்புகலிக் கோவையைமீ னாட்சி
சுந்தரப்போ மதிவல்லோ னரங்கேற்றி னானே. (௬௮)

சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கள்பேரிற் பாடியன.

* உயர்வாந் தாமோ தரபூபா வுன்னைச் சசியொவ் வானவன்றான்
சுயமாஞ் சோதி யிலன்ஞானச் சோதி யுடையாய் நீயன்றோ

கயரோ கத்தாற் கலைதேய்வன் கலையுமதியும் வளர்வாய்நீ
அயர்வா மவனை களங்கமுற்று னகளங் கன்று னீதானே. (கூகூ)

* நள்ளுநர்க் கினிய தாமோ தரநரா திபன்று னும்
தெள்ளுதண் டமிழாற் செய்யுந் தீங்கவி யமுதந் தன்னைக்
கொள்ளுவோர் செவிதித் திக்குங் கூறுவோர் வாய்தித் திக்கும்
உள்ளுவோர் மனந்தித் திக்கு மென்னில்யா முரைப்ப தென்னே. ()

* நிகரறுசுந் தரத்தாமோ தரமகிபா புறவிருணீக் குவன்ப தங்கன், அகவிருணீ நீக்கிடுவை யவன்வெய்யோ னீசாந்த னனுகித் தன்பால், நிகழ்மதியை யழிப்பனவன் பலர்க்குமதி தருவையவ னிசியிற் றோன்றான், பகலிரவு மாறாது விளங்குவைநீ யுனையொவ்வான் பகலோன் றானே. (கoக)

* வரகம்ப னனைய தாமோ தரமன்ன நின்பாக் கேட்டுச்
சிரகம்பஞ் சேடன் செய்த செய்கையாற் சிலதே யத்தில்
நரகம்ப மொடுபூ கம்ப நடந்ததென் றடுத்த டுத்துப்
பரகம்ப முறவு ரைக்கும் பற்பலபத் திரிகை யம்மா. (கoஉ)

* ஆதவ னனைய தாமோ தரவண்ணல் போல வின்பா
ஓதென வனந்தற் கன்ன வூர்திசெப் பியுமே செய்யான்
ஆதலி னயன்மு னிந்தவ் வனந்தன்கால் செவியை நீக்கிப்
பாதலச் சிறைவைத் தேமண் பாரத்தைச் சுமத்தி னானல். (கoந)

* திறமேய் தாமோ தரமாலே நீதான் சுயமே கவிபாடத் [லாம்
திறமே யுனையென் றிருந்தேன்யான் றெரிந்தே னின்றுன் கள்ளமெ
புறமே யறியப் பகர்ந்திடுவேன் புவியி லோர்பெண் ணுதவியினால்
அறமேய் கவிகள் பாடுகின்று யவளா ரென்னிற் கலைமகளே. (கoச)

* மருமலர்த்தார் புனைதாமோ தரமகிபா நான்முகன்றன் வஞ்சங் கேட்டி, அருநயவாக் குனக்களித்தான் றன்மனையை யுன்னாவிலமர வைத்தான், திருவையுமுன் னொடுசேர்த்தா னுன்பகைவ ரொடு மூத்தாட் சேரச் செய்தான், தருமமிலா விச்செயலாற் கோவிலற் றான் பூசையற்றான் றலையற் றானே. (கoரு)

* வானி ருக்கவே வண்பயிர்க் கென்குறை வயமார்
கோனி ருக்கவே குடிகளுக் கென்குறை குவ்வில்

காணி ருக்குந்தார்ப் புயத்தன்தா மோதர கனபூ
மானி ருக்கவென் குறைநமக் குள்ளமே வருந்தேல். (க0சு)

* பொன்னக ரேர்புயத் தாமோ தரப்பெயர்ப் பூபதியே
மன்னக நீதிப் பரிவர்த் தனத்தில் வழக்கின்படி
யென்னகந் தன்னிலெஞ் ஞான் றுங் குடிகொண் டிருக்கின்றநீ
நின்னகந் தன்னி லெனைக்குடி யேற்ற னெறிவழியே. (க0எ)

* வம்பமர் பூந்தார்த் தாமோ தரவள்ளால் வாக்கி லுன்னைக்
கம்பனே யென்கோ மேலாங் கவிச்சக்ர வர்த்தி யென்கோ
கும்பச னென்கோ தேவர் குருவென்கோ திருவு ருக்கொண்
டிம்பர்வாழ் குமர னென்கோ வென்னென்கோ வறிகி லேனால். ()

* இலக்கணநூ னன்குணர்ந் தோ ரிலக்கியமே தேரார்
இரண்டுமுணர்ந் தோரெனினுங் கவியியற்ற வறியார்
கலக்கவிசெய் வோர்வசன காவியமே யறியார்
காவியஞ்செய் வோர்பதங்கள் கழறிடவே தெரியார்
தலக்கணுணர்ந் தோர்கள்பிர சங்கமதே தெரியார்
தரையியற்கை யினையவெனிற் றமிழோடைங் கிலியக்
கலைக்யான முழுதுணர்ந்த பூரணபண் டிதனுங்
கனதாமோ தரவேட்குக் கலைமகளு நிகரோ. (க0கூ)

* பன்முக நூலுணர் தாமோ தரப்பெயர்ப் பாவலனே
பொன்முக நோக்கும் வறியவர் போலவும் போந்தவனை
தன்முக நோக்குங் குழவிகள் போலவுஞ் சந்ததமும்
உன்முக நோக்கிடு மென்னெண்ண முற்ற வுதவுவையே. (கக0)

* நீடிய சீர்பெறு தாமோ தர்மன்ன நீள்புவியில்
வாடிய கூழ்கண் மழைமுகங் கண்டென மாண்புறநீ
பாடிய செய்யுளைப் பார்த்தின்ப வாரி படிந்தனன்யான்
கோடி புலவர்கள் கூடினு நின்புகழ் கூறரிதே. (ககக)

* அதிகார மும்பெருஞ் சீருடைத் தோமென் றநுதினமும்
மதியே மயங்கற்க நீதமும் பேதமும் வாய்மையும்வாழ்
பதியே யெனுங்கன தாமோ தரவள்ளல் பட்சமெனும்
நிதியேபெற் றோமினி யாரு நமக்கு நிகரல்லவே. (கக௨)

* சாற்று முவமையிலாத் தாமோ தரவேணி
நேற்றுவர விட்ட நிகரில்கவிக்—கேற்றபொருள்
இன்ன தெனவறியா தேக்கமுற்றேன் றாக்கமற்றேன்
றன்னருறச் செய்வாய் நயந்து. (௧௧௩)

வாரி கடைந்தமுதம் வான்புலவர்க் கேயீந்த
சாரியனுந் தாமோ தரனென்ன—நேர்தமிழின்
ஆழிகடைந் தின்பா லமுதுபுல வர்க்கீந்தான்
வாழியதா மோதரமால் வந்து. (௧௧௪)

கவித்தலம் துரைச்சாமி மூப்பனர் பேரிலியற்றியன.

* மண்வைத்த பிடரோ னன்ன மாதுரைச் சாமி மன்ன
பண்வைத்த நின்பன் னூலோர் பாவலன் கொடுக்க வாங்கிக்
கண்வைத்தேன் சிரமேல் வைத்தேன் காரண மறையோன் றன்னை
எண்வைத்து வாழ்த்தி னேன்பா ணிதையவற் கியம்பு வாயே. (௧௧௫)

* தார்கமழுந் துரைச்சாமி மகிபால சகத்திரநாத் தாங்குஞ் சேடன், ஓர்கவியுஞ் செய்திலன்பன் னூல்கள்செய்தா யவன்சுமந்தா னெண்பார் தன்னைச், சீர்கலைகள் சுமந்தாய்நீ கேள்வியுற்று யவன்கேளாச் செவிட னானன், ஆர்விடவாக் கினனவனீ யமுதவாக் கினனுனைத்தா னவனெவ் வானே. (௧௧௬)

வேடிக்கை விடுகவிகள்.

* பாரதத்தை முற்றுமே பார்த்துணர்ந்த பண்டிதர்காம்
சாரமுற்ற வச்சரிதை தான்கேளீர்—ஆரமுற்ற
தேகமெலாம் பச்சை சிறகிரண்டுங் காலிரண்டும்
ஆகப் பறக்கு மது. (௧௧௭)

* பாரதத்தை முற்றுமே பார்த்துணர்ந்தோம் பொய்சொல்லோம்
நாரதத்தை முட்டுமத னற்கொடிஞ்சி—பாரிடத்தில்
சக்கரங்க ளோடுபலர் தாமிழுக்கச் செல்லுமே
விக்கிரகந் தங்குமதன் மேல். (௧௧௮)

* பாரவிரா மாயணத்தைப் பாராமற் சொல்லவல்லோம்
சூரனொரு கள்வன்போற் றாக்கிவந்து—சேரனவே
தந்த விலங்கணியைத் தாசரதி கைப்பிடித்த
கந்த புராணமது காண். (௧௧௯)

மனைவி தேகவியோகமடைந்தபோது கூறியன.

* என்னொடுவாழ் சாகாதே யென்று பலமுறைநான்
உன்னொடுதான் சொன்ன வுரைகடந்து—பின்னொடுசேர்
பொன்னே யிறந்தாய் புருடன்மொழி யைக்கடந்த
தென்னேமின் னேநீ யியம்பு. (கஉ0)

* ஆண்டபண்ட மெல்லா மழியா திருக்கநீ
பூண்ட வுடையிருக்கப் பூணிருக்க—மாண்டனையே
அன்னமே யுன்னை யடித்தேனோ வைதேனோ
சொன்னமே யேன்போனாய் சொல். (கஉக)

* ஆகும் பிரசவத்துக் கப்பனூர்க் கென்னைவிட்டுப்
போகும் படியிசையாப் பூவையே—ஏகமாய்
முக்கா லமுமுணர்ந்த மூலனு மப்பனூர்க்
கிக்கால நீபோன தென். (கஉஉ)

* மாதரின்றி வாழின் மதன்பகையா நாமணஞ்செய்
காதலியர் மீதுபகை காலனும்—பூதலத்தில்
கள்ளமின்னு ரைக்கூடிற் கத்தன் பெரும்பகையாம்
உள்ளமே வேறென்செய் வோம். (கஉங)

* ஆனமண மின்றிச்சும் மாவிருப்போ மென்றாலோ
ஈனவுட னேயுற் றெனைவருத்தும்—மானனைய
மாதர்தமை யேகொண்டான் மண்ணி லவரிறார்
நாதனே யென்செய்வே னான். (கஉச)

* நீயாவி நானுடல நீபோனாய் நானிருந்தேன்
மாயாமல் வெற்றுடம்பு வாழுமோ—தூயானோ
நானோநா னல்லவோ நாட்டினான் வேறொருவன்
தானோவி தென்னநவுஞ் சாற்று. (கஉரு)

ஆகச்செய்யுள் உகஉரு.

---

## மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்கள்.

திரிசிரபுரம் சிதம்பரநாதபிள்ளைக்குப் புத்திரரான இவர்; திருவாவடுதுறை ஆதீனத்தில் மகாவித்துவானாக விருந்தனர். இவர்பாடிய புராணங்களும், பிள்ளைத்தமிழ், கலம்பகம், அந்தாதி, கோவை முதலியனவும் அளவில.

இவர் நாளொன்றுக்கு முந்நூறு கவிகட்கு மேற்கூறுஞ் சாமர்த்தியம் உள்ளவரென்ப. இற்றைக்கு ௨௰-வருடங்கட்குமுன் சிவபதமடைந்தனர். இவரிடம் கல்விகற்ற மாணவகர்கள் பலர். அவருள் உலகத்துக்கோர் அரிய பேருபகாரமாகப் பழையதமிழ்ச்சங்கநூல்களை ஆராய்ச்சிசெய் தச்சிட்டு வெளிப்படுத்திய ப்ரும்மஸ்ரீ மகாமகோபாத்தியாயர் உ. வே. சாமிநாதய்யரவர்களும் ஒருவர்.

வேதநாயகம்பிள்ளைபேரிற் பாடியன.

* கலைபுகலும் பதமிலாக் கடவுள்கொளத் தமையடைந்தோர் களிப்ப நாளும், தொலைவில்சுவைப் பதமுதவு வேதநா யகவள்ளல் சூட்டுந் தூய, விலையில்பல பதத்துளொரு பதத்துளொரு பதமுணர்ந்த மெய்ம்மை யோரத், தலைமையவ னிருபதமே பெறுவரவ ரெப் பதமுந் தரவல் லாரே. (க)

* கனியிற் பொலிபொழில் சூழ்குளத் தூரன் கரிசறுத்த
வனியிற் பொலியும் புகழ்வேத நாயக வள்ளனட்பு
நுனியிற் கரும்பு தினல்போ லினிக்கு நுவலரிய
பணியிற் பொலிபிறை போல்வள ராநிற்கும் பான்மதியே. (௨)

* குலமே வியசு குணவேத நாயகக் கோன்றுறைநீர்க்
கலமே யிலங்கல மேவிழி நீருங் கலங்கலமே
சலமே சலஞ்சல மேயொழி யாதென் சஞ்சலமே
வ[illegible] யுருவல [illegible]யன்பர் தோளை மருவலமே. (௩)

* [illegible] கண்[illegible]பாகன் காரிய மற்றிதுதான்
பொ[illegible]முகிற் [illegible] மாறு பொறையினொடு
மெய்[illegible]கொள் பு[illegible] நாயக வித்தகன்றன்
கையே [illegible] வேண்[illegible]றிலைக் கண்டுகொள்ளே. (௪)

* நாட்டுக்கு நல்லதுளத[illegible]வேத நாயகநன் ஞைம மாலே, வீட்டுக்கு வாயிலெனும் [redacted]கார் கோவையெனை விளம்பச் செய்தே, எட்டுக்கு மடங்காத[redacted]பல் சொற்றனைநின் னியற்பாட்டுள்ளோர், பாட்டுக்கு நா[redacted]க [redacted]ருபல் செய்தாலும் பற்றுதன்றே. (௫)

* மன்னரு ள[redacted]மா[redacted] வாமலற வழிந டாத்திப், பின்னரெனு மறங்கடி[redacted]க[redacted]தண பெரியாய் நாளும், நன்

யான் றருத லன்பின், ஒருவேடன் றருதசையு மமிழ்தினுஞ்சீர்த் தெனவுண்ட வுறுதி கொண்டே. (கக)

* தெள்ளியசெந் தமிழ்க்கடலைக் குறுமுனிவற் கெதிராகச் செவியா லுண்ட, எள்ளலிலா முனிவர்குழா மலிதுறைசைப் பதியதனி லெவரும் போற்றும், வள்ளலெனத் திருவுருவா யெளியன்மனத் தருவாகி வதியும் பிள்ளை, வெள்ளைமதி கரந்தருள்சுப் பிரமணிய பிரானடியை வேண்டு வேனே. (உ0)

* அற்புதக் கடலே கற்பகக் கனியே யடியவ ராருயிர்க் குயிரே, நற்பரம் பொருளே முப்புரம் பொருத நாதனே கடற்பெரு வமுதே, பொற்புறு முனது திருவடிக் கமலம் போற்றினேன் பிறவிமாற் றுவைநீ, சொற்பொரு ளறிந்த கைப்பணி கரந்த சுப்பிர மணியசற் குருவே. (உக)

* மின்னிய மதியு மன்னிய நதியு மிளிர்மலைப் பதியையுங் கரந்த முன்னவ வேண்டு மொருவரம் யாரு மொழியுநின் றிருப்புகழ் கேட்க என்னிரு செவிகள் போதுமோ போதா வின்னநா ருயிர கோடி துன்னவே யருளி லொருவித மமையுஞ் சுப்பிர மணியசற் குருவே.

* உன்பத கமல மலரைநா யடியே னுளமெனுங் குளத்திடை யூறும் அன்புநீர் பெருகி யிருந்ததா லதனு ளலர்ந்திடத் திருவருள் புரிவாய் மன்பதை யுலகிற் றரித்திர நோயின் வருந்திடா திருநிதி யமுதம் துன்புறு தளிக்குந் துறைசைவாழ் பரனே சுப்பிர மணியசற் குருவே

* சந்தமிகுங் கயிலையெனுந் துறைசையினி லருள்வடிவாய்ச் சடைகரந்து, வந்தருள்சுப் பிரமணிய குருபரனைத் தரிசிக்க மதுரவாய்ச்சொற், சுந்தரன்போ லுதவிசெய்தா னெளியவெனக் குங்கந்த சுவாமி யென்னும், முந்துகவி நாலுமத னலருள்பெற் றிருவினையின் முதலற் றேனே. (உச)

* பன்னகச்செஞ் சடைகரந்து வந்தருள்சுப் பிரமணிய பரமனேநீ என்னகத்து ளகலாம லிருந்ததனாற் றுறைசையுறு திங்கு வந்தேன் அன்னதறி யாதுசிலர் குற்றமெனப் பலதாமு மறைந்திட் டாலும் உன்னுடைய திருவுளத்தி லுணராத தொன்றேனுமுளதோ மன்றே,

* குருமணியா யெழுந்தருள்சுப் பிரமணிய பரநாத குணக்குன்றேயான், மருமலியென் னூர்க்கேக விடையளிப்பா யெனக்கேட்க

வருவே ளாகில், திருமயிலைம் விடைவேலைக் கனுப்பிவிட்டோ மில்லையினஞ் சிலநாட் சென்று, தருகுவமென் பாயதனு னின்னையுரு தார்க்குவந்தேன் றருமமூர்த்தி. (உசு)

* பதுமமல ரடிபரவி யேகவிடை யளிப்பையெனப் பகர்வேனாகில், இதுவரையும் யாவருக்கு முரையாத விலையெனுஞ்சொலெனக்குச் சொல்வாய், அது நினது கொடைத்தன்மைக் காகாதென் றுறையாம லகன்றேன் யானீ, எதனாலென் மேற்சினங்கொண் டாயருள்சுப் பிரமணிய வினிய தேவே. (உஎ)

* நின்சுமுகத் தினைப்பார்க்க நின்னமுத மொழிகேட்க நின்பாற் பேச,என்னிருகண் ணிருசெவிவாய்க் கெப்பொழுதுங் கிடைக்கவிலை யிவைகண் மூன்றும், மன்னுபெரும் பாதகங்கள் புரிந்திருக்கலாமெனது மனமெப் போதும், உன்னையக லாதிருத்திக் கொள்ளவென்ன தவம்புரிந்த துரைப்பாய் மன்னே. (உஅ)

நமச்சிவாயதேசிக சுவாமிகள்பேரிற் பாடியன.

* வாய்ந்தவளம் பொலிதிருவா வடுதுறைவாழ் குருநமச்சி வாயா நின்பேர், ஆய்ந்ததிரு வைந்தெழுத்துஞ் சிலையெழுத்தா வடியேனு ளழுத்த லாற்பூத், தோய்ந்தவிதி முயன்றெழுது தலையெழுத்து நீரெழுத்தாத் தொலைந்த தென்றால், ஏய்ந்தநின்பே ரினைப்புகழ்கோ வெனைப்புகழ்கோ நினைப்புகழு மியல்பொன் றுண்டே. (உகூ)

* சீர்பூத்த கயிலாய பரம்பரையி னுமாபதிதே சிகப்பி ரான்றன்
ஏர்பூத்த கண்மணியிற் சிவப்பிரகா சப்பெரியோ னென்பாற் குற்ற
பார்பூத்த கண்மணியிற் றுறைசையிற்சுப் பிரமணிய பரமற் குற்ற
வார்பூத்த கண்மணியாங் குருநமச்சி வாயனிணை மலர்த்தாள் போற்றி!

* தந்தைபெய ரெடுப்பானிம் மைந்தனென வொருவரைமண் சாற்றல் பொய்யே, நிந்தையில்லாத் தந்தைபெயர் தோற்றும்போ தேயெடுத்தோ னீயே நீயே, அந்தையிலா நினைப்போல்வார் நினைப்பணியு மெனைப்போல்வா ரகிலத் தியாரே, சிந்தைகளிப் புறத்திருவா வடுதுறைவாழ் குருநமச்சி வாய தேவே. (௩க)

தானப்பமுதலியார் மீது கூறியது.

* தானப்பா வடிக்களிறும் பாய்மாவுங் கலையுணர்ச்சி தன்மைசால்வி, தானப்பா வலர்க்குதவிப் புகழ்ப்படாங் கொடுபுதுவை தன்

னில் வாழும், தானப்பா வில்லையினின் சத்திரச்சீ ரென்னுரைக் கேன் சகிகூர் மன்றம், தானப்பா வரம்பையிலாங் கலிமுதல பலதரு க்கள் சார்த லாலே. (௯௨)

ஆகச்செய்யுள் ௨௨௯0.

---

## போற்றிமுத்துப்பிள்ளை.

திருநெல்வேலி யிவரூர். இவர் கவிகள் மிக விசித்திரம் வாய்ந்தவை. பொன்னுச்சாமித் தேவரவர்கள்பேரிற் பாடியன.

* கன்னனுமக் கென்னசெய்தா னதுபோ கட்டுங்
கருணைமிரு குமணனுமக் கென்ன செய்தான்
தென்னனுமக் கென்னசெய்தா னளனென் செய்தான்
சிசுபால னென்னசெய்தான் யாதொன் றின்றே
அன்னவர்கள் பெற்றபுகழ்ச் சேயர் நாண
வடுததவர்கள் கவிகளைநீ கெடுத்தே போட்டாய்
பொன்னுசுவா மித்துரையே புதுவை வாழும்
புரந்தரநீ செய்ததும நீதிதானே. (௧)

* இப்புவியி லென்கவலை யெப்பொழுது தீருமினி
யேதுமொரு வழியுமறியேன்
ஈசனார் தம்மிடம் பேசுவோ மென்னினு
மிரந்தவனு மலைகிறானே
மற்புயன் றிருமா லிடத்தினிற் செல்லவோ
மண்ணுண் டுறங்கினானே
மலரயனு மனமெடுத் தலைகிறு னேபுதுவை
வளர்பொன்னு ஸாமிசமுகம்
இப்பொழுது சேரலா மொப்பிலா முத்தமிழி
லெதினும்வல் லவனாச்சுதே
என்கவி யவன்செவிக் கன்பா யிருக்குமோ
விருநிதிய முதவுவானோ
செப்புநீ புகலிடம் ஞானநெறி யடையவோ
சித்தமொரு நிலையில்லையே
தினமெனுளம் வேண்டவரு கருணைமழை சார்ந்துபொழி
திருவருள்செய் காந்திமதியே. (௨)

அல்வருமுன் னம்மாதுக் கங்கசனு லேவிடுமாம்
பல்வரலால் வந்தசந்தா பம். (௧)

நடுவெழுத்தலங்காரம்.

* ஆய்ந்ததவப் பெண்ணேக் கருந்திவற் றின்னடுவெற்
கிந்தெஞ் சியவெழுத் திவ்விரண்டில்—தோய்ந்தாயர்
பொற்பதியி னுண்டும் புனைந்தா ரிசையின்மகிழ்
நற்பெரிய சாமிநிபு ணு. (௨)

சிவஞானத்தேவரவர்கள்பேரிற் பாடியன.

நாணிக்கண்புதைத்தல்.

* தேன்படி யாத்தரு முல்லைபங் தாரணி திண்புயகோ
மான்படி காக்குஞ் சிவஞான சாமி மணிவரைமேல்
மீன்பிடி கைவலை வீசிக்க ளிற்றினை விட்டுக்கெண்டை
தான்பிடித் தாயதை நான்பிடிப் பேனடி தார்குழலே. (௩)

அட்டநாகபந்தம்

* மாதா கமாதங்க மானுளை யேயாளு
நாதாசெ வாயாகா மாநலநு—மீதவா
வானுண்மீ தாமீர மாராவை தெர்ங்கலணி
மீனவா சிமைச்சா மீ. (௪)

* பொருவரிய கடவுளெங்கும் பூரணமா யிருப்பரெனப் புகன்ற நூல்பொய், கருவிலுரு வாகியறி வறிந்தமக்கள் வருந்தவுமேற் காலந் தேராத், துருவிருந்த மனமூடர் சுகம்பெறவுஞ் செய்திடுஞ் சுண்ணிச் சாமி, அருவுருவா யிருந்தாலென் போனுலென் மாண்டாலென் னுர்க்கா மன்னே. (௫)

ஆகச்செய்யுள் ௨௩௦௭.

---

## மருது பிள்ளை.

இவர் சிவகங்கைக்கடுத்த மானகுடியிலே வேளாண்மரபிலே பிறந்தவர். இவரை வடமொழியினுந் தேர்ச்சிபெற்றவரென்ப. இவர்சந்ததியா ரவ்வூரி லிருக்கின்றார்கள். இவர்காலம் முப்பத்தைந்து வருடங்கட்கு மேற்பட்டது.

பொன்னுச்சாமித்தேவரவர்கள் பேரிற் பாடியன.

* விண்ணுக் கழகு விரோசன னூர்தல் விளைவுற்றுறை
பண்ணுக் கழகுபஞ் சாட்சரஞ் சேர்தல் பமரவிழிப்

பெண்ணுக் கழகு சுகுணசந் ரோதயம் பேருலகில்
கண்ணுக் கழகுபொன் னுச்சாமி ராசனைக் காண்பதுவே. (க)

* இருகாலொன் றான்றி யிரவிமுன் றேற்றற் கிசைந்தமரை
வருகால்விண் வாவு மனமேயிந் நாளென் வருத்தமெலாம்
குருகா னுணர்த்தியும் வந்தா னிலைசற் குணம்படைத்த
தருவார் கரப்பொன்னுச் சாமி மகிப தயாநிதியே. (உ)

* மறுவெட்டு வெட்டும் வழக்கங்கொள் ளார்பின்பு வந்துநிதி
உறுதற் குரைக்கு மிரவோரைக் காண்கில ருண்மைமிகும்
அறிவுற் றவருக் கிரண்டுரைக் கத்தெரி யாதவரைத்
திறலுற்ற மால்பொன்னுச் சாமியென் றீர்சொல்லுஞ் சீரியரே. (ங)

* ‡ நின்னுவிநா யீயிலலோ நீதப் ரபுலெவ
ருன்னரு தன்ம உதிஷ்டிரா—மன்னுஸ்ரீ
ராமச்சந்த்ரு டேநீவு நன்னுபுரோ வுப்புரோநவு
பூமபொன்னு சாமிப்ர பு. (ச)

புல்லத்திக் கறுப்பணசாமி பேரிற் பாடியது.

* மாட்டுத் தலைதனை மான்றலை யாக்கிய வல்லவன்மா
பாட்டைப் படித்துத் துதிப்போர்க்குச் செல்வத்தைப் பாலிப்பவன்
நாட்டுக்குட் கண்கண்ட மெய்யான தெய்வ நமதுகலிக்
காட்டைத் தகர்த்துப் புரப்பான் புல்லத்திக் கறுப்பணனே. (ரு)

ஆகச்செய்யுள் உஙகஉ.

---

## பரராசசிங்கம்.

இவர் ஈழ நாட்டின் வடபாகத்தை யாண்டுவந்த வரசர்; இவரே அந்தகக் கவிவீரராகவ முதலியாருக்கு யானைக்கன்றும் வளநாடும் பரிசளித்தவர்.

அந்தகக் கவிவீரராகவ முதலியார்செய்த திருவாரூருலாவை
வியந்துபாடியகவி.

* புவியோர் பெறுந்திரு வாரூ ருலாவைப் புலவர்க்கெலாம்
செவியே சுவைபெறு மாறுசெய் தான்சிவ ஞானவநு
பவியே யெனுநங் கவிவீர ராகவன் பாடியநற்
கவியே கவியவ னல்லாத பேர்கவி கற்கவியே. (க)

---

‡ தமிழ்ப்பாக்களைப்போலவேதெலுங்கிலும் பாடலாமெனச்சொல்லியது.

தன்மீது கூறியவண்ணங் கேட்டுப் புகழ்ந்துரைத்தது.

*விரகன் முத்தமிழ் வீர ராகவன்
வரகவி மாலையை மதிக்கும் போதெல்லாம்
உரகனும் வாணனு மொப்பத் தோன்றினால்
சிரகர கம்பிதஞ் செய்ய லாகுமே. (உ)

ஆகச்செய்யுள் உஙகச.

## பரராசசிங்கம் என்ற அரசனுடைய பத்தினியார்.

இவரும் தன்னாயகன் போலவே கல்வியறிவிற்சிறப்புடைய ரென்பது கவிவீரராகவ முதலியார் கவித்திறத்தை வியந்து இவர்கூறிய செய்யுளானே விளங்கும்.

* போத வழகன் கவிவீர ராகவன் போற்றுகவி
ஓதையைக் கேட்டுக்கொண் டாடாத பேரில்லை யோங்குபுவி
மாதை யெடுக்கும் வலமுடிச் சேட மகிபற்கன்றே
காதை வகுக்கிலன் வேதா சிரக்கம்பங் காண்பதற்கே. (க)

ஆகச்செய்யுள் உஙகரு.

## நிரஞ்சனநாதர்.

இவர் சரிதம் விளங்கவில்லை. இவர் அந்தகக் கவிவீரராகவ முதலியார் சீட்டுக் கவியைவியந்த அடியிற்கண்டசெய்யுள் கூறினரேயன்றி வேறேது மிவர் செய்ததாகப் புலப்பட்டிலது.

* சீட்டுக் கவியென்று சொல்வார் சிலரந்தத் தீட்டுக்கவி
காட்டுக் கெரித்த நிலவாகிப் போஞ்செங் கனகரத்னச்
சூட்டுக் கிரீட முடிவேந்த ருற்பத்தி சூறை கொள்ளும்
நாட்டுக் கிலக்கிய மாம்வீர ராகவ னற்கவியே. (க)

ஆகச்செய்யுள் உஙகசு.

## கந்தபுராணம் கச்சியப்பர்.

இவர் கந்தபுராண நூலாசிரியரோ? அல்லது அப்புராணபிரசங்கத்திற் றேர்ந்தவேறொருவரோ ? அறிகிலம்.

கவிவீரராகவ முதலியாரைப்புகழ்ந்து கூறியது.

* பொங்குதமி ழயோத்தியில்வாழ் தசரதனென் போனிடத்தும் பூதார்வேந்தன், துங்கவுடு கன்னிடத்தும் வீரரா கவரிருவர்

தோன்றினால், அங்கொருவ னொருகலைமா னெய்திடப்போய் வசைபெற்றா னவனிபாலன், இங்கொருவன் பல்கலைமா னெய்திடப் போய்க் கவியினா லிசைபெற்றானே. (௧)

* நாரேனும் பூவா னறுமணமா நின்கவிதை
ஆரேனுங் கேட்கி லவர்க்குந் தமிழ்வருங்காண்
போரேறே யெங்கும் பொழியவருங் கல்விக்குக்
காரே கடலே கவிவீர ராகவனே. (௨)

ஆகச்செய்யுள் ௨௩௯.

## கயத்தாற்றரசன்.

இவர் சரிதம் தெரிய வில்லை.

கவிவீரராகவ முதலியார் தேகவியோகங்கேட்டு விசனித் துரைத்தன.

* இன்னமுதப் பாமாரி யிவ்வுலகத் திற்பொழிந்து
பொன்னுலகி னும்பொழியப் போயதால்—மன்னும்
புவிவீர ராகமன்னர் பொன்முடிமேற் சூட்டுங்
கவிவீர ராகவமே கம். (௧)

* தோற்றுந் தொழிந்திருந்த தூலக் கவிகளெல்லாம்
மேற்று ரகையின் விளங்கியவே—ஏற்றுலுங்
கன்னுவ தாரன் கவிவீர ராகவனும்
பொன்னுருஞ் செங்கதிரோன் போய். (௨)

ஆகச்செய்யுள் ௨௩௦.

## பாண்டியன்.

இவரது சரித்திரம் யாதும் விளங்கவில்லை.

வித்துவான்களின் நிலைமையைக் குறித்துரைத்தன.

† போற்றினும் போற்றுவர் பொருள்கொ டாவிடில்
தூற்றினுந் தூற்றுவர் சொன்ன சொற்களை
மாற்றினு மாற்றுவர் வன்க ணாளர்கள்
கூற்றினும் பாவலர் கொடிய ராவரே. (௧)

† இக்கவியைச் சோழராசன் பாடியதாகவுங் கூறுவர்.

* தேயாத செருப்புமொரு பயலும் வேண்டுஞ் சென்றிருக்க விடம்வேண்டுந் திரிய வென்றால், ஓயாத கால்வேண்டு முண்ணுஞ் சோற்றி லுருசிகெட்ட நாவேண்டு முலுத்தர் தம்மைக், காயாத மனம்வேண்டும் பொறுமை வேண்டுங் கசடருக்கு வசையுரைத்துக் காட்ட வேண்டும், தாயாகப் புலவருக்கித் தனையுண் டானாற் றரணி யெங்குஞ் சஞ்சரிக்கத் தகுங்கண் டீரே. (உ).

ஆகச்செய்யுள் உ௲உஉ.

## திருக்கண்ணபுரம் தாசி.

சரிதம் விளங்க வில்லை.

முனையதரைய னென்ற அரசனுக்கு எழுதியது.

* இன்றுவரி லென்னுயிரை நீபெறுவை யிற்றைக்கு
நின்று வரிலதுவு நீயறிவை—வென்றி
முனையா கலவி முயங்கியவா றெல்லாம்
நினையாயோ நெஞ்சத்து நீ. (க)

ஆகச்செய்யுள் உ௲உ௩.

## திருவழுந்தூர்த் தாசி.

சரிதம் விளங்க வில்லை.

சோழன் இவளை யெந்தவூரென்று கேட்டபோது சொல்லியது.

* கம்பன் பிறந்தவூர் காவிரியி லங்குமூர்
கும்பமுனி சாபங் குலைந்தவூர்—செம்பதுமத்
தாதகத்து நான்முகனுந் தாதையுந்தே டிக்காணு
தோதுமத்தர் வாழுமழுந் தூர். (க)

ஆகச்செய்யுள் உ௲உச.

## கண்டியதேவன்

இவரது சரித்திரம் சிறிதும் விளங்கவில்லை.

சிற்றம்பலவன் என்னும் பிரபுவின்மீது பாடியது.

* அலைவ ளைத்த திருப்பாற் கடலிலே யாட்ட ராவி னணையிலே பச்சையால், இலைவ ளைத்த மணிமண் டபமிலே யிங்கு நீவந்த வாறே தியம்புவாய்,கொலைவ ளைத்த விலங்கேசன் மாமலர்க் கொத்து மாமுடி பத்துக்கு மன்றொரு, சிலைவ ளைத்த கரசது ரங்கனே திங்கள் வெண்குடைச் சிற்றம் பலவனே. (க)

ஆகச்செய்யுள் உ௲உ௫.

## தத்துவப்பிரகாசர்.

இவரது சரிதம் விளங்கவில்லை.

ஒருவனிவர்க்கு விட்டபடுக்கை வீட்டின்றன்மையை யுரைத்தது.

* மூட்டை கலம்புழுதி முக்கலஞ் சுத்தப்பாழ்
வீட்டை விடுதியா விட்டாயே—போட்ட
தடுக்கெல்லாம் பீற றலையணையோ வைக்கோல்
படுக்கலா மோசொல்லப் பா. (௧)

தன்னியற்கைகளைக் கூறியன.

*நினைவுகவி சொல்வோ மெனச்சொலிப் பலகவிதை
நினைவினைத் திருடி வையோம்
நீடுலகின் மனிதரைப் பாடிலோ நாமென்று
நீள்வசைகள் பாட வறியோம்
பிணையிளைய நாவல ருடன்பங்கு பேசிப்பிர
பந்தங்கள் பாடிக் கொடோம்
பேசுவது தேவார மேயலால் வாய்க்கெளிய
பேய்க்கிரந் தங்கள் பேசோம்
இனிமைதரு பூருவத் தூக்குருக் களைமறந்
தெங்கணுந் தீட்சை யேற்கோம்
இட்டவொரு பேர்மாற்றி மாதமொரு பேரிட்
டிடப்பெறோ மிறுமாந் திரோம்
தனியிருந் தெம்மைப் புறங்கூறு வார்கணெஞ்
சமுமுருகு கவிபா டுவோம்
சமணரால் களைப்பொரு ளெனக்கொளோந் திருஞான
சம்பந்த ரடியர் நாமே. (௨)

*பாம்புகடித் தாலதுவு நீக்க வல்லோம்
பசாசறைந்தா னீறிட்டுப் பார்க்க வல்லோம்
வேம்புகசப் பறக்கறியு மாக்க வல்லோம்
விறல்வேழத் ததிகமதந் தணிக்க வல்லோம்
சாம்பொழுது திடமாகப் பேச வல்லோம்
தரணியின்மேற் கல்லாத தொன்று மில்லை
தேம்பரைநல் லவராக்கிக் குணமுண் டாக்குந்
திறமதறி யாமனின்று திகைக்கின் றோமே. (௩)

* கவடிகளா கத்திரியுங் கள்ளர்கா ணன்னூற்
சுவடியிருந் தாவதென்ன சொல்வீர்—குவலயத்துள்
காட்டுக் கெரித்தநிலாக் கண்ணிரண்டு மில்லாதான்
வீட்டுக் கெரித்த விளக்கு. (ச)

ஆகச்செய்யுள் உகஉக.

## ஆசுகவி ராசசிங்கம்.

இவர் எட்டயபுரம் கடிகைமுத்துப்புலவர் இனத்தவரெனப்புலப்படுகின்றது. இவரதியற்பெயருங் காலமும் தெரிந்தில.

நீர் யாரென்றொருவர் கேட்டபோது சொல்லியது.

* செந்தமிழோர் தங்களின்ப சீபாத தாளிபொர
வந்தபுல வோர்கடம் மார்பாணி—கந்தன்
அடிகையா ரப்பரவு மாசுகவி ராசன்
கடிகையார் கோலா கலன். (க)

ஆகச்செய்யுள் உகஉ௦.

## பரமேசுரப்புலவர்.

இவர் சரிதமுந் தெரியவில்லை.

ஆசுகவி ராசசிங்கம் திருவண்ணாமலையார்பேரில் வண்ணம்பாடி யரங்கேற்றிப் பரிசுபெற்றுப் பவனிவந்த தன்மையைக் குறித்துரைத்தது.

* கண்ணார் மதிக்குங் கவிராச சிங்கங் கனிந்துதிரு
வண்ணா மலையப்பர் மேல்வண்ணம் பாடிமுத் தாலத்திகொண்
டெண்ணா யிரமட வார்சூழப் பல்லக்கி லேறிவந்தான்
உண்ணா முலையெல்லன் மூலைக டோறு மொதுங்கினவே. (க)

ஆகச்செய்யுள் உகஉக.

## உண்ணாமுலை யெல்லப்பநயினார்.

இவர் செவ்வந்திப்புராணம், அருணாசலப்புராணம், அருணைக்கலம்பகம் முதலியன வியற்றிய எல்லப்பநாவலரோ? வேறொருவரோ? அறிகிலம்.

தம்மையிகழ்ந்த பரமேசுரப் புலவர்மீது பாடியது.

* பார்ப்பார் மடத்துப் பரமாவுன் பாழ்ங்கவிதை
கேட்பா ரெலாம்புத்தி கெட்டபேர்—தோட்பாங்கில்
ஒன்றன் விழுந்தாலு முண்டுபரி காரமிலை
வான்றா ளனவேள் வரும். (க)

ஆகச்செய்யுள் உகஉஉ.

## கல்விக் களஞ்சியப்புலவர்.

இவர் மதுரையை யடுத்த மேலூரிலே சீறாப்புராணம்பாடிய உமறுப்புலவர் மரபிலுதித்தவர். சீறாப்புராணவண்ணம், சித்திரகவித்திரட்டு முதலியன இவர் செய்தநூல்கள். இவர்கவிகள் நிரம்பவியக்கத்தக்கன. சென்ற 1891-ஆ தேகவியோகமாயினர். இவர் மகமதியராயினும் சைவசமயந்தழுவியகவிகளும் சொல்லியிருக்கின்றார். இவரது கனிட்டசகோதரரும் எமது நண்பருமான தங்கமீரான் புலவருந் தகுதியான வித்துவானே.

சுப்பிரமணியர் மீது பாடியன.

* வண்ணத் தாமரை யாமுலை யூர்தரு வானத் தாமரை யாகளங் கண்களுங், கிண்ணத் தாமரை யார நரந்தமை கெட்டுத் தாமரை யாடையுங் காண்கிலாள், கண்ணத் தாமரை யார்வயற் றென்கிரிக் கடப்பந் தாமரை யாதிகட் காகியைத், திண்ணத் தாமரை யாடல்செய் வேலரைச் சேரத் தாமரை யாவிபிற் செல்வையே. (௧)

* கானக் குஞ்சர மும்பயந் தோடிடக் கன்னிற் குஞ்சர ணஞ்செயு மாமுலை, ஊனக் குஞ்சரக் கண்ணிக்கு ஞைசையா லுயிர்தக் குஞ்சர முண்டில்லை காணுமே, மீனக் குஞ்சரக் காம்பலிற் பாய்வயல் மீதிக் குஞ்சர முத்தரு டென்கிரி, மானக் குஞ்சர தாதிப ரும்பணி வன்னிக் குஞ்சர வள்ளி மணாளனே. (௨)

* நல்ல வந்தனை விற்பிணைக் கண்மின்முன் றுட்க வந்தனைக் கையரிங் திட்டவன், செல்ல வந்தனை பன்கணை யாலுமைச் சேர வந்தனை கோடிசெய் தாளையா, பல்ல வந்தனைக் கிள்ளியர்ச் சிக்குமன் பர்க்கு வந்தனை யாமென வாண்டவா, சொல்ல வந்தனை யாபரங் குன்றில்வாழ் சூறை வந்த னையமயிற் றுங்கனே. (௩)

* சீல வேதனை யாமொழி யாமிடைச் செறிந்த வேதனை யன்பதிக் கொங்கையாள், சால வேதனை யார்வசைச் சொல்லையுஞ் சகிக்க வேதனை யார்துன் பையுமையா, ஏலவேதனை யும்மறந் தஞ்சியே யிதஞ்சு வேதனை பாவியும் வேண்டிலாக், கால வேதனை தீர்த்தனை வாய்செழுங் கமல வேதனை யாட்கொண்ட கந்தனே. (௪)

* மானச் சங்கரி ணிக்கண் ணடையினென் மகளச் சங்கரி கால்கணை யாணொந்து, பானச் சங்கரி காணெனக் கூறிமெய் பதைத்துச் சங்கரி பாலக னேயென்றுன், மேனச் சங்கரி தாங்கவி பாடுமென் மின்னச் சங்கரி தல்கெடப் புல்குவாய், தானச் சங்கரி பின்னுதித் தந்நிலத் தவரைச் சங்கரி யாநின்ற தாணுவே. (௫)

* வண்ண மாதங்க மேனியு மோரெழு மத்த மாதங்கப் பூண்முலை யுங்கடித், தண்ண மாதங்கப் பூமுக முங்கொண்டு சமைந்து

மாதங் கழித்தில னன்றன்மேல், எண்ண மாதங்கங் கோடிக ளீருண வெடுக்கு மாதங்கள் சித்த பிரங்கியே, திண்ண மாதங்க வன்னையர் செய்கைக்குந் தியங்கு மாதங்கஞ் சேர்ந்தணே வேலனே. (௬)

* தேசத் தந்துளி போற்சுணங் கம்மமுஞ் செவரத் தந்து வரி கழுஞ் செம்பொற்ப்ர,காசத் தந்து நிகரிடை யுங்கொண்ட கனியைத் தந்துணைப் பாங்கியர் கூடியே, ஏசத் தந்துகில் சோர்ந்து கடல்குபி லிசைச்சத் தந்துனேக் காதடைத் தாட்குநீ,போசத் தந்துசெய் யாது கடம்பிணே முடுகத் தந்து முயங்குவை வேலனே. (௭)

* மோதக் காதலே வாரியைப் பேரியா முழக்கக் காதலே வுற்ற டைக் கச்செய்தும், போதக் காதலே மீசுர மாக்கிறைற் பொறுத்தற் காதலேத் தேடுவ தாரையா, மாதக் காதலே யானேயென் றஞ்சுமிவ் வலத்தைக் காதலே யைவளர்த் தேனினி, யேதக் காதலே யின்விதி யோவென்றுட் கிரங்கக் காதலே வாசுரர் வேலனே. (அ)

* சூது பந்தன கன்பதி வேண்முடிச் சொம்பி பந்தனக் கன்னி நின் வாயிலின், மீது பந்தன மாயிருந் தாலுமென் விண்ணப் பந்தன தாய்ச்சொலென் றுளேயா, ஒது பந்தன கங்களே யம்மணேக் கொத் தொப் பந்தன ளன்கரத் தேற்றியச், சேது பந்தனங் கட்டிய மால் தொழுந் திண்சம் பந்தன லங்கிளர் தீரனே. (௯)

* மாது ரங்க மரிதள மற்கிளி மருத்து ரங்க நிதம்பமின் னார் களாஞ்,சாது ரங்க முளமத னேவிய சரத்து ரங்கண் டெவர்சொல்லு வார்மகள், காது ரங்க மிதுவென்று பார்க்குமா கறைத்து ரங்க முறு முன மேசென்று, சேது ரங்க வரிமரு காகலந் திடத்து ரங்கம்வை தென்பரங் குன்றனே. (௧௦)

* ஒதிமங்கொண் டோரா றுழுபடைநா லஞ்சினடுக்
காதுவடி வேலன் கடைதலேபோற்—போதடங்தோள்
கண்ணளகங் கண்டங் கவிஞரு மானீன்ற
வண்ணவள்ளி மாதுகண வன். (௧௧)

ஆகச்செய்யுள் உ௩௪௩.

---

## ஆபத்துக்காத்த பிள்ளை

மதுரையைச் சார்ந்த மேலூர்த்தாலூகா சொக்கம்பட்டி என்ற கிராமத்திலே வேளாளர் மரபிலே பிறந்த இவர்; எந்தச்சபையிலும் கேட்டோரெல்லாம் ஆநந்தமுறப் பேசத்தக்க வாக்கு வல்லபமுடையவர். இவர் தம்மூரில் கிராமமுனிசீபாயும் மருங்காபுரிசமீந்தாரிடம் மானேசராயு மிருந்தனர். வசன ரூபமாகச் செய்யுட்கள் பாடுவதின் மிகச்சமர்த்தர் என்பது அடியிற் குறித்த

பாக்களால் விளங்கும். சோதிடத்தினுந் தேர்ச்சியுற்றவர். இவர் இற்றைக்கு 16-வருடத்திற்கு முன்தேக வியோகமாயினர். இவர் கவிகளிற் சில மாம் பழக்கவிச்சிங்க நாவலர் கவிகளுடன் சேர்க்கப்பட்டுள்ளன காண்க.

திருவாவடுதுறைச்சுப்பிரமணியதேசிகசுவாமிகளைத்தரிசித்தபோதுகூறியது

*திருவா வடுதுறைப் பண்டாரச் சந்நி தியவர்களைத்
தெரிசனஞ் செய்த வடியா ரிகத்திற் சிறந்தவைசு
வரியமுந் தேவப் பிரசாத மும்பெற்று வாழ்ந்துபின்பு
பரலோக சாதக மும்பெறு வாரென் பதுநிசமே. (க)

மதுரைச் சொக்கலிங்கப் பெருமானுக்குரைத்தது.

* சொக்கலிங்க மேசோம சுந்தரமே மீனும்பி
கைக்குமண வாளா கடம்பவனத்—துக்குளுறை
யுந்தெய்வ மேயென் றுரைத்தாற் சகலவினை
யுந்தீர்ந்து நன்மையுண்டா கும். (உ)

ஆகச் செய்யுள் உ௲சகு.

---

## சர்க்கரைப்பாரதி.

இவர் சிவகங்கைச் சம்ஸ்தானத்திலே யுள்ள வேம்பத்தூரினர். சிலேடை, வெண்பாக்கள் விரைவிற்பாட வல்லவரான பிச்சுவையர் என்ற மூத்துவேங்கட சுப்பையருக்குக் கனிட்டர். சங்கீதத்தினும் நிரம்பிய தேர்ச்சியுள்ளவர். இவரிற்றைக்கு 15-வருடத்திற்கு முன் தேகவியோகமாயினர்.

ஊற்றுமலை ஜமீந்தார் பேரிற் பாடியன.

* வாசி யாதவ ருன்சமு கத்தினில் வந்த டுப்ப தரிதடுத் தார்பச்சை
வாசி யாதவர் காந்திமுன் பங்கய மாமெ னக்கல்வி வாய்விரிந் தாலிலை
வாசி யாதவ ரைப்புரக் குங்கணு மாத வாடொன் மகிழு மகானுபா[ வே
வாசி யாதவ போத வெனத்துதி மருதப் பேந்த்ர வெணப்பா வரைவ
* மாதரங்க மாவெனச்சொன் மாவேகப் பரிப்பவனி வருதல்கண்டு
மாதரங்க மாதுறங்க மனமின்றி யனமின்றி வாடி னுள்பூ [செய்து
மாதரங்க மாகிளுவை மருதப்பேந் திரவொன்னார் மடங்கச் [ரேறே.
மாதரங்க மாநிகர்வாண் மனங்களிக்கச் சேர்வையெங்கண் மன்ன

* விடங்கடங்கா வெனப்புகலும் விழிதனக்கூந் தற்குமரி மேற்கா மன்போர், தொடங்கடங்கா மர்ச்சரந்திர்த் தாளிவளைக் கருதலர்க டொகையா மாம, குடங்கடங்கா விதந்தேய்க்குங் கழற்காலா வீரை நகர்க் குமணு வீரை, மடங்கடங்கா முரசமதிர் முன்றின்மரு தப்பேந்த்ர மன்ன ரேறே. (ங)

ஆகச்செய்யுள் உ௲சஅ.

---

## நமச்சிவாயக்கவிராயர்.

இவர் திருநெல்வேலிச்சில்லாபாபநாசம்என்னும் க்ஷேத்திரத்திற்கடுத்த விக்கிரமசிங்கபுரத்திலே வேளாளர் மரபிலே சனனமானவர். பாபநாசம் உலகாம்பிகை பிள்ளைத்தமிழ், பதிற்றுப்பத்தந்தாதி, சந்தவிருத்தம், மாலை, சிலேடைவெண்பா முதலிய நூல்களியற்றியவர். ஒருகாலத்தில் நபாபு அரசன்கான உலகம்மையின் திருக்கரத்திலிருந்த பூஞ்செண்டு தன்கரத்தில் வரும்படி பாடினரென்ப. இவர்காலம் சற்றேறக்குறைய நூற்றறுபது வருடத்திற்கு முற்பட்டதெனத் தெரிகிறது. இவரது முழுசரித்திரமும் அநேக தனிப்பாடல்களும் இரண்டாம்பாகத்தில் வெளியிடப்படும்.

* தாட்டா மரைதந் தருளுல கேபட்ட சஞ்சலங்கள்
கேட்டா ருருகுவர் கெட்டே னினியென் கிலேசமெலாம்
பாட்டா வுரைசெயப் பட்டோலை கோடிபற் றுதுகற்றோர்
ஏட்டா யிரம்வரி தீட்டவல் லார்சற் றெழுதுவரே. (க)

* பண்டிருந்தா ரின்றிருந்தா ரநுபவியாத் துன்பமனு பவித்தே னின்ப, முண்டிருந்தா யறிந்திலைநீ யுண்ணுதார் பசிவருத்த முண்டார்க் குண்டோ, வண்டிருந்து வயிரமறத் துளைத்தமர மானேனென் வாட்டங் கண்ணுற், கண்டிருந்தா ருயிர்விடுவர் காணுர்கேட் டுளங்கரைவர் கயிலை வாழ்வே. (உ)

* குழக்கன்று தென்றன் மலைப்பா ரிசத்திற் குடியிருக்கும்
பழக்கன் றிருவுருப் பாதிசெய் தோயிந்தப் பாவிகண்ணீ
ருழக்கன் றரியன் றொருகோட்டை யுண்டுகண் ணேட்டைபட
அழக்கன் றியதுயர் தீரா யுலகம்மை யாமமுதே. (ஙு)

ஆகசெய்யுள் உஙுருக.

---

## பொன்னுச்சாமிக்கவிராயர்.

இவர் மதுரைச்சில்லா கரிசற்பட்டிச சமீனைசசார்ந்த புதுப்பட்டியிலே வேளாண் மரபிற் பிறந்தவர். வாராப்பூர் சமீன்தார்பேரிற் காதற்பிரபந்தம் இவர் பாடியநூல். இற்றைக்கு 22 வருடத்திற்குமுன் சிவபத முற்றனர்.

* பொட்டுக்கண் டொட்டுக்குட் கிட்டுக்கொப் பாய்மயல் பூட்டுமிரு
வட்டுக்கொப் புற்றுத்தித் தித்துத்தள் ளாடு மதுக்குடம்போற்
பட்டுக்கச் சிட்டுச்சொற் கொட்டுப்பொற் பாரப் பணைத்தமுலை
தொட்டுப்பத் தெட்டுப்பொன் னிட்டுககண் டாலுஞ் சுகமெய்துமே.

ஆகசெய்யுள் உஙுருஉ.

---

## பொன்னுச்சாமித்தேவரவர்கள்.

இராமநாதபுரம் சமஸ்தானத்திலே, புதுவைச் சிவஞானத்தேவர் அவர்களுக்குப் புத்திரரான இவர்; மிகப் பிரசித்திபெற்ற மானேஜராக விருந்து இற்றைக்கு முப்பது வருடங்கட்கு முன்னர் தேகவியோகமாயினர். முத்துராமலிங்கஸேதுபதி அவர்கள் இவரது கனிட்டர். தற்காலம் இராமநாதபுரம் பாலவநத்தம் ஜமீன்தாராகவும், தயாளகுணோத்தமராகவும் மதுரைத் தமிழ்ச்சங்கம் அக்கிராசனாதிபதியாகவும் விளங்குகிற ஸ்ரீ-பாண்டித்துரைஸாமித்தேவரவர்கள் இவரது கனிட்டகுமாரர்.

சமுத்திரவநணனை.

* தாவரங்கந் தாகணவன் றன்னிறஞ்சார்ந் தாகமலை
மேவரங்கந் தாயதின்மை வேல்கருநீர்—தூவிபதா
காசறைவி ராயகொலென் காரொளிகால் காசினியின்
காசுறையா டைத்துதிக்கா சு. (க)

* மண்டமரில் விண்டமீன் வானூர் மதியமுதம்
உண்டுயப்போய் மீளு முவரியே—கண்டவரி
யம்புளா னன்புளா னைந்தலையி லாறுரும்
அம்புளா னம்பிற் ககம். (உ)

* வெள்ளத்தான் வாய்வெரீஇ மேலோரிற் பொங்கிஅவர்
உள்ளமென மீளு முவரியே—நள்ளுருும்
கங்குலங்கு பொங்குதெனுங் காயத்தான் கையிலொரு
சங்குதங்கு புங்கவற்கி தம். (ங)

* வல்லனுக்கு வல்லனுளன் வையகத்து மாற்றுரை
வெல்லான் றிறனறியான் மேதினியென்—சொல்லைட்
பழக்குஞ் சிரல்சுறவு பால்வைத்து வாஞை
றழக்கவலை போக்கிவ் வுவர். (ச)

* கால முறுங்காறுங் காப்பதனிற் கள்வரையும்
காலனையுஞ் சூழ்ச்சிக்கட் கர்த்தரையும்—கோலத்தைச்
சிந்து பிணியினையுஞ் சேருஞ்சே ரேருவெர்க
சிந்துசிந்து சிந்தின் றிறம். (ரு)

* வான்மீக் கிளர்தொறாஉ மண்டி யுகள்ந்தயரும்
மீன்மீ னெனச்சொலச்செய் வேலையே—கான்மீக்

கடும்பரறச் செய்தாக் கவலைதெறக் கன்று
இடும்பரறச் செய்தா னிடம். (சு)

* தண்மதிக்கும் வெஞ்சுடர்க்குந் தத்தி யடங்கியுளக்
கண்மதியி லாரிற் கரைகடலே—மண்மதியாத்
தின்றான்வன் றானவனைச் செற்றான்சொற் றன்றாது
கன்றான்பின் சென்றான கம். (எ)

*வெங்கரிக்கை வில்வேந்தும் வேங்கறிக்கைக் கொண்கர்களும்
சங்கரிக்க நின்ற தடந்திரையே—பொங்கி
வரிசித்தா னந்தமுற்று வன்புயற்குக் கல்லைப்
பரிசித்தா னந்தமுற்றான் பால். (அ)

*நேசற் பிரிந்தயரு நெஞ்சினர்க்கு நீந்துநற்கும்
பாசந் தொடக்கும் பரவையே—மோசத்து
வந்தமரைக் கொன்றரு வந்தமரைக் கூட்டிமுனம்
தந்தமரைக் கொன்றார் தலம். (கூ)

*இச்சைப் பரத்தியரு மேற்றுமதி செய்குநரும்
மச்சம்பார்க் குங்கரைசூழ் வாரிதியே—விச்சைமகிழ்ந்
திட்டமரு மத்தனியா னென்னதென்றி டார்க்கிணங்கும்
இட்டமரு மத்த னிடம். (க0)

*எடுத்தும் படுத்து மியம்பியுநின் றேங்கிக்
கொடுத்து மிரிந்துங் குறுகி—அடுத்துந்தாம்
உன்னு பொருட்குழல்வா ரொத்திடுமுள் ளாழத்தால்
கன்னியரைப் போலுங் கடல். (கக)

*வாடு வறிஞரிற்கும் வாழ்வின் மருணர்கைக்கும்
ஓடுகணத் தீயு முவரியே—நீடுறிநெய்
உண்டாக்கு வித்தா ருதிட்டிரனே டைவரையும்
உண்டாக்கு வித்தா றுறை. (கஉ)

இராஜராஜேஸ்வரி பேரிற் பாடியன.

*இராசரா சேசுவரி யெண்ணிலளேல் வீண்மத்
தராசரா சேசுவரி தம்மிற்—கராசலமோர்

வேலினுளைக் தாங்குளைய விட்டிடுவர் மேவாரே
பாலருள்யான் சிலனெனப் பார்தது. (௧௩)

*தேரிரு வேலிணையிற் றேனனையார் செய்நோய்திர்
தேரிரு வேலியுறை தெய்வத்துள்—கூரருளில்
சாரமா காளிதய சாந்தமிலார்க் கென்னையன்றி
வீரமா காளியெனு மின். (௧௪)

*சிந்தித்தோம் வந்தித்தோந் தேனூர் மலர்மலரிற்
சிந்தித்தோ மெல்லாஞ் சிதைவித்தோம்—சிந்திற்
கருநிறமால் வேதாமுன் காணாக் கதிரைக்
கருவுருவில் காரணனைக் கண்டு. (௧௫)

*வயசுமனை கல்வியெழின் மாண்பிதனி னின்னைச்
செயிலுறவு நேரெனத்தான் சிந்தித்—தயிலிலகு
வேற்கைமுத்து ராமலிங்க மேவினன்போ லும்மவன்செங்
கோற்கையத்த னுகவருள் கூர். (௧௬)

*மன்றலைக்க ணிந்தசல மானைச் சுவற்றுவிப்பான்
றன்றலையிற் கந்தரத்தைத் தாங்கினளோ—வன்றியமான்
றுன்றுநா ரத்திற் றொடக்கினள்கொல் லென்சுரியல்
என்றாய் புரந்தருள்வை யே. (௧௭)

*தந்தைசிறு வற்கறுப்பிற் றுயா தரிப்பளற்றே
இந்துவைத்த ரித்தனளோ வீசனுக்குச்—சந்திரனோர்
கண்ணென் பதிவளிடங் கண்ணியதா லென்முகத்தாய்
எண்ணுடையே னைப்புரப்பை யே. (௧௮)

*தம்பதிகு மைக்கிறுதி சாருமெனிற் சாத்துமென்றே
தன்பிறவி மாயனெனுந் தன்மையினோ—கம்பிகவா
வைத்தனையெ னுங்களத்து மானே மழுவாளி
மெய்த்தேனே காத்தருள வே. (௧௯)

*மாதவற்கா ணுராதை மத்திற் கடந்ததிவிட்
டாதரித்துக் கொட்டினளங் காட்காணுச்—சீதரனும்
கற்றுவிட் டேற்றிற் கறந்தான் பயசிதனுள்
எற்றே சிறந்ததென்பா மீங்கு. (௨௰)

*கத்தரிக்காய் சொற்பயிற்று கண்ணுறங்கா கன்றியா
கத்தரிக்கா யாவியனங் காவெனுமா—கத்தரிக்காய்
சக்கரமுய்த் தான்மருக சண்முகமெய்ச் சத்துறுமா
றக்கரமுற் றுய்வந் தருள். (உக)

*கத்தரிக்காய் சொல்லினரைக் காத்தல் கடன்காரா
கத்தரிக்காய் வேதனுக்குக் காட்சிதராய்—கத்தரிக்காய்
கத்தரிக்காய் வேலீந்த காளாய் கவன்றனனே
கத்தரிக்காய் கன்னியபா கா. (உஉ)

*கத்தரிக்காய் கத்தரிக்காய்க் கைவேறெட் டாய்பிறர்போ
கத்தரிக்காய் கத்தரிக்காய் கண்டமெலா—கத்தரிக்காய்
வைமதியி லெய்துறுங்கான் மாற்றுவர்மாற் றுயெனினும்
வைமதிநீ யன்புமரு மான். (உங)

* மலையா சலங்கொன் றளித்துத் துயின்றவன் வந்தலைபா
மலையா சலந்தவி ரென்றேவத் தந்தையம் மாலின்பொரு
மலையா சலம்புரச் சூரொடு சேர்த்தவன் வந்தருள்வாய்
மலையா சலம்பொலி மாமுனி போற்றிய வானவனே. (உச)

* கங்கைத் திருமுடி யாமுனங் காவெனுங் கற்றவர்க்காக்
கங்கைத் திருமுடிச் சூலந்தை நீக்கின கைக்கிரங்கும்
கங்கைத் திருமுடித் தாய்மங்கை யாமயிற் கண்ணியன
கங்கைத் திருமுடித் தாம்பவத் தாமெனைக் காத்தருளே. (உரு)

* முக்கண வாவறு காலயி டாமதி முன்னருஞ்சொம்
முக்கண வாவறு காலா னெனத்தச்சின் மூமெனவீ
முக்கண வாவறு காலாந் தகமைந்தர் மோதுவிழா
முக்கண வாவறு காலாலஞ் சூடியுண் முத்தெனினே. (உசா)

* கற்றவ ரைக்குழைத் துப்பயின் றென்றன கங்குழைக்கக்
கற்றவ ரைச்சென்று மீளரி யாது கவலமயல்
கற்றவ ரைச்சென்ற பாலற்றந் தாரைக் கறுத்தும்பியார்
கற்றவ ரைய நினைக்கத் துதிக்கமெய் கைவருமே. (உவ)

* திரிபுர மட்ட தசையால் வளர்தொறுஞ் சிறுவையர்
திரிபுர மட்டடை காறுங் குறையிலே சேர்ந்திடினேய்
திரிபுர மட்டவள் கோதையங் கோதைமெய் சேண்டொடுமத்
திரிபுர மட்டவ னேயென்று சொல்லுண்மை சித்திக்குமே. (உஅ)

* தளம்பலஞ் சேர்மல ரான்மதன் செய்கொடுந் தன்மையெலாம்
தளம்பலந் தோழி யுரைதரு தார்கொடு தாதனியா
தளம்பலங் கொண்டடார் சூர்செகுத் தானுக்குந் தண்டருமா
தளம்பல மொத்த சுவர்க்கக் குறமின் றலைவனுக்கே. (உசு)

* வாலைப் பருவந் தளிரன்ன மெய்யெனு மம்மரைவிட்
டேனு மளவுடற் றத்தகு மின்னி திதழ்க்கமலம்
கோலச் சுரும்பிற் சிதைவுறு மோகுமைத் தன்றிநற
வாலைக் கழைதரு மோவெண்ணு வாயெம் மடன்மனனே. (௩0)

* கருமணியன் றுவரியலக் காயாம்பூ வெனமருட்டுங் கருங்கொண் மூவாய், வருநறவை யுண்டளிக்கும் வேய்பெறுதி வந்தனமவ் வள்ள னின்னே, இருமலர்கொண் டொருமலர்வாழ் மும்மலரி னொருமலரி னிடுபோ தெய்த்தாள், அருமருந்து தருமருந்து குருமுருந்து நகையெனக்கா தறைகு வாயே. (௩௧)

* வஞ்சனையே னஞ்சுதல்விட் டுஞ்சிடுவா னஞ்சனையார் மாட்டு நின்னே, எஞ்சமன நஞ்சுழலச் செஞ்சரண மாட்டுவித்தே னென்னே பாவம், துஞ்சிடவே மஞ்சனகோ மஞ்சனையேத் தத்துணிந்தேன் றுயர்தீர்ந் தாடி, கொஞ்சுகிளி யஞ்சுமொழி வஞ்சியிடைத் தாய்கலை மான் குணத்தின் வாழ்வே. (௩உ)

* ஆர்கொலா லமர்கடவு ளரிகொலோ வானூர்தி
யண்ணலோ காம நாசன்
அற்றெனிற் கருமமிங் கியாவதோ சசிநாத
னமரரிறை யோப சுபதி
கூர்கொண்ட கொம்புள்ள தோபூத நாதனக்
குண்டோத ரன்கொ றூனு
கூற்றுமுண் டோசூலி திங்களொத் தனையதோ
கொல்சூல பாணி நமனே

தார்கொண்ட நீலகண் டன்குமர னேகொடிய
சண்டற் றடிந்து ளானஞ்
சனகியைப் பற்றிடு மரக்கனே கூவெனுந்
தடமுலைத் தம்பி ராட்டி
யேர்கொண்ட சொற்குவிடை யிலனாகி முறுவலித்
திதழ்சுவைத் தினையு மெந்தைக்
கின்புவர மன்புரந் தன்புறங் கொண்டதா
யிணையடி யிறைஞ்சி வாழ்வாம். (௧௧)

* திரைசுற்று தரைமுற்று மிறைபெற்று நிரையுற்ற
திரைபற்று தென்முகவையின்
சேதுபதி மாதுபதி யாதுவிதி யோதுநிதி
தேவிமதி யாதமதியார்
உரைசுற்று பரைவெற்றி விரைநெற்றி பிறையொத்த
வுமைகொற்றி பதயுகளமென்
உள்ளமென் றள்ளரும் வெள்ளிதழ்க் கள்ளழிந்
தொழுகுமலர் வைத்துமொருவா
விரைசுற்று புரையற்ற நூரைபெற்றி மீறுபர
மின்னார் குயக்குடத்தின்
விள்ளவல துள்ளவரு மள்ளலங் காமநதி
விளையாடு வேட்கைமேவார்
வரைசுற்றி மரைமுற்ற பறைதுற்ற கறைவற்ற
வானெழூஉ வருபானுவின்
வண்மையென் றிண்மையென் கண்மையென் னிவைதழுவு
மரபினர்கள் வாழ்கமாதோ. (௧௪)

* அரனிணையே பாடியெது பெறுவா யென்றாட்
கடியென்றே னையோவென் றழுதாள் பாதம்
தருவனென்றே னோட்டினுமா வென்றாள் காலைத்
தருமென்றேன் கூரைக்குஞ் சனியா மென்றாள்
சரணமென்றேன் குமரன்வருஞ் சண்டைக் கென்றாள்
தாளென்றேன் றனமிருக்கிற் சலமி லென்றாள்
பரவிடமங் கிரியென்றேன் பயனே தென்றாள்
பதமென்றேன் சதமொழிந்து பரவி னாளே. (௧௫)

௩௫-வது கவியைப்பார்த்து முத்துராமலிங்கஸேதுபதிஅவர்கள்சொல்லியது.

* யான்குழை யுற்றபய னெய்தியதென் முன்னவவண்
தேன்குழையு மின்சொற் றிகழ்வாயா—பானு
கிரணவடி வான்மேற் கிளத்துபொருள் கண்டேன்
சரணமென்ற தொன்றைத் தவிர்த்து. (௩௬)

அதற்கு பொன்னுஸாமித்தேவரவர்கள் கூறியது.

* சரணமென்ற தென்னையென்றாய் தம்பிநீ வாழ்த்தும்
இரணவே லோனை யெடுக்கும்—தருணமழைக்
கூலிருக்குந் தேர்கைவரிற் றோகைவிரிக் குஞ்சிறிய
காலிருக்கும் வாலிருக்குங் காண். (௩௭)

அஞ்சிரட்டி செய்வருட மாளடிமை யிற்றிரிந்தும்
கஞ்சியன்றிக் காணயக் காவலனால்—மிஞ்சியது
பூணு புதுமனையா பூவாசொல் புத்தியிலா
வீணு இராமலிங்க மே. (௩௮)

எட்டு மணியோ விலையதற்கு முன்னெனைநீ
விட்டுப் பிரிந்த விதமதற்குத்—திட்டமுலை
மாலா பசியா மடியா மமதையா
சீலா இராமலிங்கஞ் செப்பு. (௩௯)

கற்பகஞ்சு லாஞ்சுகம்வீழ் கன்னிக் கனிக்கசிவால்
உப்பகன் றோங்கு முவரிவாய்—இப்பிகஞன்
றார்புதுவை யூரணுகி யுற் ் முவகைமிகுஞ்
தார்புனையுந் தம்பியொடுந் தான். (௪௦)

நாகப்பாம் பின்றுபத்து நாழிகைக்கு மேலாயும்
சாகமன மில்லாமற் சாகுமா—பாகந்தான்
ஆகவிலை யாமறந்த தாவென் குருசாமி
நாகரிக யிற்றை நவில். (௪௧)

கோட்டுமலை கூவுமுனங் கூம்பா மலர்க்கதியைக்
காட்டு கிருட்டிணனின் காகிதத்தைப்—போட்டுவிட்ட
தன்றியுமவ் வுட்பொருள யர்த்தா மருவரா
தின்றுமொன்று தந்திடுவை யே. (௪௨)

மூட்டுப்பூச் சிக்கடியு மொய்த்த கொசுக்கடியும்
கேட்டையே தேட்டமுறுங் கேடரும்—நாட்டமிகும்
கேதபுர மானசிவ கெங்கைவிட்டு மால்ராம
நாதபுரஞ் சேர்வதெந்த நாள். (சங)

காதலியெங் கேரெடிய கார்முகமெங் கேகடக்கும்
தூதுவனெங் கேயிளைய தோன்றலெங்கே—சேதுதரா
வின்றெமைப்போற் றேணிமிசை யேறி னிரகுபதி
அன்றுபடும் பாடேத தாம். (சச)

## விருத்தம்.

கடல்கடந்தான் காகுத்த னெனுமொழிபொய் மெய்யெனிலோ கரையிற் கான்ற, குடல்கிடத்தல் வேண்டுமையோ கூகூவென் மொழியுலகிற் குலவல் வேண்டும், மடல்மடலோ டணைத்தவர்செல் வழிச்சுவடு வயங்கிடவும் வேண்டு மம்மர்த், தொடரறுவான் சுவைத்தகனித் தோலாங்குச் சுடர்தரவும் வேண்டு மாதோ. (சரு)

திருவாவடுதுறை மஹா சந்நிதானம் ஸ்ரீமத்-சுப்பிரமணியதேசிக சுவாமிகளுக்கு எழுதியன.

கடிதஞ்சல் வழிமுன்மதி காட்டுதே திகளொன்று காணு நாளில் கடிதஞ்செய் கந்தரனு மெந்தைபுனை பூதியுடன் கனிவி னுய்த்த கடிதஞ்சார்ந் ததுமுடியைக் காட்டியத னுட்பொருளுங் கண்டேன் கன்மம், கடிதஞ்ச மென்றார்க்குக் கருணைபுரி சுப்ரமண்ய கருணை வாழ்வே. (சசா)

பரிகரிந டாத்தொட்டம் பார்ப்பான்கூ டற்கேகிப் பயின்றே னங்கண், அரிகரியெற் பற்றியநோ யெவ்வளவோ வவ்வளவு மணியார் வெள்ளிக்,கிரிகரியா யனைத்துள்ளு நிறைந்தபிரான் றிருவருளாற் கெடுத்துப் பின்னெற், புரிகரிசின் றிப்புகுவா னுன்னிவந்தேன் பாம்பனுக்குப் புகழ்க்கோ மானே. (சஎ)

வந்தமைகை வந்தனவான் மற்றைநாட் பதிபுகுவேன் மறவா தென்னைச், சிந்தையுணீ வைத்ததுங்காண் பான்கருது மருளுமியான் றேறே னல்லேன், எந்தையதற் கமையமுள தியம்புவல்பின் னென் செய்வே னீரைந் தாண்டா, நொந்துளே னூணர்தரு வாதிலெம்ம னோர்பரவு நோன்றா ளோனே. (சஅ)

உக்கம்பட் டிடையார்க ளுயர்த்தநிமிர் பெருவாழ்வு முவர்வே லாய, அக்கம்பட் டிடைந்தவர்பா லனுபவிக்கு மின்பமுமெய் யாகா வந்தோ, பொக்கம்பட் டியமனுண வாகாதீ ரெனப்புகலும் புனிதர் பெம்மான், சொக்கம்பட் டித்தலைவர்க் காண்குவனின் சொல்வழி யான் றுறவ ரேறே. (சக)

ஆகச்செய்யுள் உச0௧.

---

பொன்னுச்சாமித் தேவரவர்கள் வினாக்களும்
முத்துவீரப்பபிள்ளை விடைகளும்.

* உண்டென்று மில்லையென்று மொப்பிலா மெய்ப்பொருளை
விண்டுபழி கொள்ளும் விதமெவனோ—மண்டலஞ்சேர்
பொற்போங்கு மற்புயனே பொன்னுச்சா மித்துரையே
தற்போத நீங்காமை தான். (௧)

* காட்சியிலி லாதிருக்கக் கர்த்தனுண்டென் றாகித்தல்
தாட்சியன்றோ மாட்சிமைசேர் சற்குணா—சேட்கிளர்ந்த
தூமத்தால் வன்னியுண்மை சொற்றறுபொய் யோநீண்ட
நாமத்தார் வேலோய் நவில். (௨)

* தூமமுள தேனெருப்புத் தோன்று மெனவறிஞர்
நாமறியச் சொற்றதெதை நாட்டுவான்—பாமலியும்
வண்புகழா யிவ்வுலகம் வைகுதற்கோர் காரணமாம்
பண்புறுதே வைத்தெரிப்பான் பார். (௩)

* எம்மைப் புரந்தருளு மீச னிறநெருப்பென்
றும்மைப்போல் வாண ருரைப்பதெவன்—கொம்மைக்
குவிமுலையார் வீழ்மதனை கூடிநின்று காட்டும்
சவியுடையோ னதலினுற் றான். (௪)

* எப்பொருட்கு முட்பொருளா யீச னிருக்கமதத்
தப்புப் பலவந்த தன்மையெனோ—துப்புடையோர்
அந்தக னானைக் கடையாளங் காட்டவவர்
தந்தமுணர் வாலிழைத்த தால். (௫)

* தேவருக்குப் பெண்டிருத்த றீதன்றோ தேர்ந்திடுநீ
யாவ திதையிண் டறைகுவா—எவருக்கும்

கற்புடைமா தோடு கலந்திருத்த லாற்பழுதின்
றொப்புரவோய் நீயறியா யோ. (சு)

*பெண்ணொருத்தி மெய்யிருக்கப் பேதையொன்றைப் பேணுசடைக்
கண்ணிருக்க வீசன்வைத்த காரணமென்—நுண்ணிடையை
வேணிமிசைக் கொள்ளானேல் விண்ணுமண்ணும் வெள்ளமுண்டு
கோணிநிலை பேருமெனக் கொள். (எ)

*அங்கையன லாகமதை யட்டிடா தாவிதுவென்
சங்கைசிவன் றனு சயம்புவிற்குச்—சங்கரனார்
மேனியனல் கண்ணுமனல் வேகவிட முண்டழியா
மோனியையென் செய்யு மொழி. (அ)

* அங்கியிடை வெப்பு மருநீ ரிடைக்குளிரும்
தங்கியிருந் தற்குவமை தானுளதோ—செங்கதிரோன்
தன்னிடத்துச் சூடுளது சந்திரன்பாற் றட்பமுள
தென்னினிவேண் டும்முவமை யே. (கூ)

*வெண்பளிங்கு தண்ணியதா மேவியிருந் துஞ்சுடர்நம்
கண்கரிப்பச் செய்வதென்ன காரணங்காண்—ஒண்கழலாய்
தீயருப சாந்தகரைச் சேரினுந்தந் தீயவியல்
பாயதொழில் செய்வா ரறி. (க௦)

முத்துவீரப்பபிள்ளை வினக்களும் பொன்னுச்சாமித்
தேவரவர்கள் விடைகளும்.

*தேவா சுரரிவர்கள் சேர்ந்துறையு நண்புதமின்
மேவாமை யென்னுரைசெய் வேல்வேந்தே—பூவுலகில்
தத்தங் குணத்தைமெச்சுந் தன்மை நமக்குமுண்டேல்
உத்தமவ தென்குறையா கும். (கக)

*வெண்பிறையைக் கண்டவுடன் வீறுசிலை நின்றுருகித்
தண்புனலைக் கால்வதென்ன தார்வேந்தே—எண்புயனைக்
கண்டுநீ கண்ணீர் கரைப்பதெவன் கற்றுய்க்கு
விண்டியான் சொற்றல்குற்ற மே. (கஉ)

*ஆரா தனையி லபிடேக மைமுகற்குச்
சீராய காரணமென் றேர்வேந்தே—நேராய

கைந்நெருப்புக் கண்ணெருப்புக் காமுறினுங் காணாத
மெய்ந்நெருப் பென்செய்யு மே. (௧௩)

*பாகத்தோர் பெண்ணிருக்கப் பாண்டரங்கன் கங்கையையும்
மோகத்தாற் றாங்கியதென் மும்முரசோய்—ஆகமொன்றக்
கூடுதொழி விற்பெரிய கூறுகும் கோடுமுகத்
தூடுசுவை காணுமா று. (௧௪)

*மெல்லியலா ரென்றறிந்தும் வேண்மடவார் தம்மேல்விற்
கல்விவலி காட்டுவதென் காண்டீவ—சொல்லுமவற்
கேயமெயுண் டோமலடி யெற்றுணருங் கர்ப்பநோய்
ஆயருங்கற் றுங்குமெய்ய ராம். (௧௫)

*உற்பலஞ்செம் பங்கயமீ துற்றலரக் கண்டதுண்டோ
மற்புயனே வாழிதிரு வாய்மலராய்—கற்புடையாட்
சேருமறஞ் சேருநீ தேறுமதென் செங்குமிழ்செய்
யாரும்வள்ளை யும்மடையா ளம். (௧௬)

கூடக் கடையசுரர்க் கூட்டியுத வாதமுதம்
வாடச்செய் தான்மாயன் வள்ளலே—நாடி
உழுநர் பயிரையெரு துண்ணு வுதவார்*
தழுவுபு கழாயிதுபோற் றான். (௧௭)

*ஊக்கமிலார் கைம்மீ துறைகழித்த வாளேந்திப்
போர்க்கெழுத லுண்டோ போர்வேந்தே—பார்க்குளெங்கும்
புக்கபுகழ் நீயிருக்கப் புல்லியே னுந்தமிழை
மிக்குரைத்தல் குற்றமா மே. (௧௮)

*உத்தமனை வேதமெலா மோதியருள் கண்ணுதலைப்
பித்தனென்று பேசுவதென் பேரரசே—சுத்தமிலாப்
பொய்மெய் கரப்பவரைப் புண்ணியச னங்களெனில்
ஐயபொரு ளெற்று மது. (௧௯)

ஆகச்செய்யுள் உ௪உ०.

---

## சுந்தரதாசப்பாண்டியரவர்கள்.

திருநெல்வேலிஜில்லா சேற்றூர்ச் சமஸ்தான கர்த்தராகி யிருந்து அரசு புரிந்துஇற்றைக்கு13வருடங்கட்குமுன்புசிவபதமுற்றஇப்பிரபுசிகாமணி புவி வேந்தராதலுடன் கவிவேந்தராகவு மிருந்தனர். கவிபாடுந்திறமைபோலவே பாரத ராமாயணாதி நூல்களைப் பிரசங்கிப்பதினும் மிகவல்லுநர். எப்போ தும் பற்பல தமிழ்வித்துவான்களைப் பக்கமேவைத்து ஆதரித்து வந்தனரெ ன்பது இப்புத்தகத்துள்ளாங்காங்கு வரும் பலகவிகளா லறியத்தகும். தமது குலதெய்வமாகிய அம்மையப்ப ரெழுந்தருளி யிருக்கும் தேவதானம் பெரிய கோயிற்றிருப்பணி சிறப்புறப் புரிவித்தனர். சிவநேயச்செல்வர். தற்போது சேற்றூர் சமஸ்தான கர்த்தராக இருக்கும் பெருந்தகைக்குரிசிலாகிய ஸ்ரீமத் வடமலைத் திருவனாத சேவகப்பாண்டிய ரவர்கள் இவர்களது அருந்தவப்புத ல்வர். இவர்கள் பரம்பரையார் யாவரும் தொன்றுதொட்டுத் தமிழ்ப்புலவர் களை ஆதரித்து வருவதுடன் தமிழ்வித்துவான்களாகவுமிருந்து வருகின்றனர்.

## சேற்றூர்.

### வெயிலுகந்த விநாயகர்துதி.

---

*செயிலுகந்தோ திமம்பயிலுந் தென்சேறை நகர்புரக்குந் தேவ ன் மேலாம், அயிலுகந்தோன் றனக்குமுன்னோன் மாலயனு மினம றியா வாதி தேவன், கையிலுகந்த கனியைவலம் வந்துபெற்றோ னுய ர்ந்தமுக்கட் கடவு ளென்னும், வெயிலுகந்த விநாயகன்செஞ் சீரடி யைத் தினந்தினமும் வேண்டு வேனே. (க)

### வேறு.

### சிவபெருமான்றுதி.

*நந்திவனக் கொண்ட கரத்தோ னயனுநன் றுகமுனம்
வந்தனை செய்யும் பதாம்புய னேமகிழ் வாகநிதம்
சிந்தனை செய்யுன் னடியேன் றனக்குத் திடம்பெறுமெய்ச்
செந்தமிழ் பாட வரந்தாதென் சேறைத் திகம்பரனே. (உ)

### நச்சரவை தவிர்த்தவர்மீது இயற்றியன.

*தருப்பொலி யமர சேகரன் பிரமன் றரங்கமீ துறைபவன் முத லோர், விருப்புடன் பணியும் பரிசுடைப் பாதா விண்ணவா வேதநா யகனே, கருப்பம தினிநூ னுருவமை யருண்முக் கண்ணனே கண்ணி

ளின் னருளே, மருப்பொலி குழலா ளுமையொரு பாகா வரதனே சேறைநா யகனே. (௩)

*காவியங் கண்ணா ரிடம்புடைத் தெழுந்த கனதன முயக்கினால் வாடிப், பாவியே னுழலா வண்ணநல் லறிவைப் பகர்ந்தருள் புரிகு வாய் பரனே, தாவிய சரம சரங்களுக் கெல்லாந் தண்ணருள் பரப் பிய முதலே, ஆவியே யொளியே யபயனே விமலா வணிதிகழ் சே றைநா யகனே. (௪)

*துய்யநின் னருளைப் பெறுவதற் குரிய தோத்திர முரைத்து நன் மலரால், செய்யபங் கயத்தா ளிணைதொழ வறியாச் சிறியனைக் கருணையா னோக்கிப், பொய்யினிற் றினமும் புலன்களைச் செலுத் தும் புல்லறி வினைத்தவிர்த் திடுவாய், அய்யனே யனகா பனகவா பர ணா வன்புறை சேறைநா யகனே. (௫)

*ஆசையே பெருக்கி மோசமே கிளைக்க வன்பனு ராகமே விளை த்துக், காசையே விரும்பு கனக்குழன் மடவார் கண்வலைப் படாது நின் புகழைப்,பேசியே யுருகி நேசமே கனியும் பேரறி வென்றருள் புரிவாய், மாசிலா மணியே கருணைவா ரிதியே வளமிகு சேறைநா யகனே. (௬)

*சத்தியந் தவரா திருந்துநல் வழியே சார்ந்துமெய்த் தவநெறி யொழுகிப், பத்திசெய் துன்னைப் பணிவதற் கறியாப் பாவியே னுய் யுமா றருள்வாய், நத்தியல் பழன வாளைக டாவி நாகமீ னுடனமர் புரியச், சித்திர மதில்சூழ் மாடநீள் வீதி செறிந்திடுஞ் சேறைநா யகனே. (௭)

*ஆவியே பேணுந் தொழிலிலே முயற்சித் தனுதின மனமலைவு றுமல் நாவினா லுயர்ந்த பாவினா லுன்னை நாடொறும் புகழ்வதற் கருள்வா ய்மாவிலோர் வேலை யேவியே வகிர்ந்த மகவினை யீன்றருள் புரிந்த [ய் தேவியோர் பாகா மாலய னறியாத் தேவனே சேறைநா யகனே.(௮)

*பந்துநேர் முலையார் முறுவல்பூத் தொளிரும் பார்வையான் மன மய ருறவே, வந்துதே ராக வருமத னம்பால் வருந்திடா தெளிய னைக் காவாய், தந்தியீ ருரியா யென்றனக் குரியாய் தமனியப் பொரு

ப்பிணை வளைத்தாய், இந்துசேர் சடையா யடியவர்க் கெளியா யெந், தையே சேறைநா யகனே. (௯)

*நாற்றமு மிருந்த தசையுநீ ளென்பு நரம்புநல் லிரத்தமு மாகித், தோற்றுமிவ் வுடலை யின்னமும் பிறந்து சுமந்தலுத் திடாவகை யருள்வாய், கூற்றினை முடித்தோ யாற்றினை முடித்தோய் குரைகழற் பாண்டியன் காண, ஏற்றடி பகவன் பாறையிற் காட்டு மிறைவனே சேறைநா யகனே. (௧0)

*ஆணவ முதலாம் பலபெருங் குற்ற மகற்றிநின் னருந்தரி சனமே, காணுறு கண்ணும் பரிவுறு கருத்துங் கருணைசெய் தருள்புரிந் திடுவாய், பாணனுக் காக விந்தனஞ் சுமந்து பகையொழித் தடிமையாக் கொண்டோய்,சேணுயர் பூகம் வானினை யளாவிச் செறிவயற் சேறைநா யகனே. (௧௧)

*இம்பரம் பொன்னு மாடையும் பூணு மின்னமும் பலவெலாம் விரும்பிப், பம்பரம் போலச் சுழலுமென் மனநின் பால்வசப் படுவதெந் நாளோ, செம்பியன் முன்னஞ் சூதினை யியற்றித் திகழ்விட மூட்டியே யனுப்பும், அம்பரந் தவிர்த்தே வழுதியைப் புரந்த வண்ணலே சேறைநா யகனே. (௧௨)

## ஸ்தலயாத்திரைக்கவிகள்.

தேவதானம் பெரியகோயிலிற் சொல்லியது.

*கரகரகம் பிறந்ததென்றற் றேருடையான் றனைக்காய்ந்து கருணை பொங்கும், அரகரகம் பிரமனிடத் தொன்றையறுத் தோய்சேறை யாளு மம்மை, சிரகரகம் பிதம்புரியத் தேவர்களெல் லாம்வணங்கத் தித்தித் தையென், றரகரகம் பிறழுநடம் புரிந்தமுத லேபதங்களுதவு வாயே. (௧௩)

திருப்பரங்குன்றத்திற் சொல்லியன.

*பரங்குன்றத் தக்க தொழில்புரி சூரர்கள் பாழ்படவும்
பரங்குன்றன் பாத மலர்தொழு தேத்தநற் பாரணியம்
பரங்குன்ற மன்ன விழிமுலை வள்ளியம் பாவையொடு
பரங்குன்ற மர்ந்த குமராவென் றன்னைக்கண் பார்த்தருளே. (௧௪)

*சினக்கவரு மசுரரைவென் றமரருக்கு வாழ்வளித்துச் செறிந்தி ருண்ட, கனக்குழற்குஞ் சரியைமணம் புரிந்துமகிழ் வொடுமணந்த கருணை மூர்த்தி, எனக்குனையல் லாதெவரே யருள்புரிவா ரானதினு லிப்போ தேயென், மனக்குறைதீர்த் தருள்புரிவாய் திருப்பரங்குன் றத்திலுறை வடிவே லோனே. (௧௫)

மதுரையிற் சொல்லியது.

பொன்கூடக் கலைமகளுங் குற்றேவ லியற்றவருள் புரியுந் தேவி
நன்கூட றணியவெம்மான் றினம்பரவு மம்பிகையென் னுளுந் தானே
என்கூடற் புதமகிழ்ச்சி யுறக்கருணை புரிந்தருளு மிறைவி யாகுந்
தென்கூட லங்கயற்க ணம்பிகையை மறவாமற் சிந்திப் பேனே. (௧௬)

திருவானைக்காவிற் சொல்லியது.

*திருவானை முகத்திலொன்று குறையுற்றோன் றருமுதலாஞ் செல்வ மிக்க, பெருவானைப் புரந்தருள்வோ னிவர்களா லறியானைப் பெண்க ளென்னும், உருவானைத் துழல்பிறவித் துயர்தீர்ந்தே யெனதுமன முயர்வுற் றோங்கத், திருவானைக் காவிலுறை சிவபர னைக் கண்காணத் தெரிசித் தேனே. (௧௭)

திருவிடைமருதூரிற் சொல்லியது.

*பெருவிடை யதனிற் றோன்றும் பெருங்காட்சி பத்தர்க் கீயும்
திருவிடை மருதூர் வாழுஞ் சிவபரஞ் சுடரே யின்னம்
மருவிடை யூறு செய்யு மறலிகைக் கேது வான
கருவிடைப் புகுதா வண்ணங் காத்தருள் செய்கு வாயே. (௧௮)

திருவாவடுதுறையிற் சொல்லியது.

*பாசிழை சுமந்த கொங்கைப் பாவையர் புணர்ப்பு நீங்கி
வாசியை யொடுக்கும் யோக மாதவர்க் கருளா நின்ற
தேசிக வடிவ மான வாவடு துறையுட் செல்வ
மாசிலா மணியைக் கண்டேன் மனவிரு ளகன்ற தன்றே. (௧௯)

சிதம்பரத்திற் சொல்லியது.

*சிதஞ்சபி லத்தின் மிசையே யெழுதிய நீர்மையென
இதஞ்சலி யம்புரி பாவையர் தன்மயற் கேபொருந்தா

விதஞ்சலி யாம லெனைபபுரந் தேயருள் வீடுதரும்
பதஞ்லி மாமுனி காணநின் றாடிய பாதங்களே. (௨0)

திருப்புவனத்திற் சொல்லியது.

*திருப்புவன மாதுமதி திகழ்சடையான் மாலறியாத் தேவ ஞன
திருப்புவனத் தீசனிரு செங்கமலப் பாதமிசைத் தினமு மென்னைத்
திருப்புவன மெலாந்திரியு மரைபோலு மலையாமற் றெய்வ லோகத்
திருப்புவன மெய்துறுநன் மனமேநிச் சயமிதுவே செப்பி னேனே.

திருவாரூரிற் சொல்லியது.

*மருவாரூர் பொடியாக வசுரர்குல முடிவாக வானோர்க் கின்பம், தருவாரூர் தியும்விடையாய்த் தாங்கியமா லறியாதார் தமையே போற்றி, வருவாரூர் வனமுதலாம் பலபிறப்பி னுழலாது மாற்றி வைப்பார், திருவாரூர்த் தியாகேச ரெனதுநெஞ்சே யெப்போதுஞ் சிந்திப் பாயே. (௨௨)

திருப்பதியிற் சொல்லியது.

*தங்கடே கத்துறுபல் பிணியெலாந் தீரவெனிற் சகத்து ளோர்க் குத், திங்கடே யப்பொருந்திக் கோவரையும் வளர்குடுமிச் சிகரந் தோறும், செங்கடே னிறைத்துவைக்கும் பொழினெருங்க வளம் பொருந்தச் செவ்வி யாகீள், வெங்கடே சனைப்பணிந்தாற் பிணிமிடிக ளவையெல்லாம் விலகுந் தானே. (௨௩)

திருக்காளத்தியிற் சொல்லியது.

*கீளத்தி நாதனை யேகூற வோடு நிமலன் கைமத்
தாளத்தி னாதத் துடனே நடிக்குந் தனியை யண்ட
கோளத்தி நாத வனோர் சிகரி குலவு திருக்
காளத்தி நாதனைக் கண்டேன் பவத்தைக் களைந்த னனே. (௨௪)

திருவாலங்காட்டிற் சொல்லியது.

*குருவாலங்காட்டுரைத்துத்தெளிவித்துந்தவநெறியிற்குணமிலாதார்
கருவாலங் காட்டுசென்ம வினையதனைக் களைந்துவிடக் கடலின்முன்னம்
உருவாலங் காட்டுகண்டத் தெழிலோடு மண்டவரை யுலாவுகின்ற
திருவாலங் காட்டுறையு நடராஜன் பாதமதைத் தெரிசித் தேனே. ()

திருச்செந்தூரிற் சொல்லியது.

*தந்திரவி மாமதிய மிடைமுலைகள் வதனமெனத் தகைமை பெற்று
வந்திரவி மான்வருந்தி மையலினால் வாடுகின்றாண் மதனம் பாலே
இந்திரவி மானமெனக் கோபுரங்கள் சூழ்செந்தூர்க் கிறைவா பரும்ம
மந்திரவி மாசலமின் னருள்புதல்வா மனமகிழ்ந்து மருவ வாயே. (௨௬)

ஸ்தலயாத்திரையிற் சொல்லிய கவிகள் முற்றிற்று.

அவ்வவ்வமயங்களிற் சொல்லியன.

*தங்கள் பிறவி தனையகற்ற வாதவனும்
திங்களுடன் வந்துபணி சேறையே—மங்குலிதென்
னாக முடையவெய்தா னடைசுர ரோடுசெத்த
னாக முடையவெய்தா னடு. (௨௭)

*கலகவிழி யார்நுதலுங் காண்மறையோர் கையும்
திலகமீங் காதிருக்குஞ் சேறை—நலமிகுத்த
மாவன் முலையரம்பை மாதர்சுக போகமுறச்
சேவற் கொடியுயர்த்தான் சேர்வு. (௨௮)

*காவலரை யுற்றதனாற் காணரம்பை மேவுதலாற்
றேவருல கம்பொருவுஞ் சேறையே—மேவரிய
ஆலமுண்ட வீச னருளுங் குமரனெனும்
பாலன் வளரும் பதி. (௨௯)

மகர ரவிப்பூசத் திருவிழாவிற்குச் சொல்லியன.

*தருவளரும் தென்சேறைத் தனிமுதல்வ னச்சாடை தவிர்த்த வன்றன், அருமைமக வெனவுதித்த வறுமுகவன் றன்பேரி லன்பு கூர்ந்தே, ஒருமனதா யுள்ளுருகித் தைப்பூசத் துவந்துதரி சித்த பேர்க்கு, வருமதிக வைஸ்வரிய பலனுறுமென் றேதினமும் வழுத்த லாமே. (௩௦)

இடபரவித் திருவிழாக்கொடியேற்றத்திற்குச்சொல்லியது.

*வடியேறும்வேற்கண்மலைமடந்தைதவம்பெற்றவட்குமகிழ்ச்சிகூர
அடியேனைப் புரந்தருளத் தென்சேறைத் திருநாளுக் கணியதாகப்
படியேழும் புரந்தருளு நச்சாடை தவிர்த்தருளும் பரமனார்தம்
கொடியேறும் படிசெய்வித்தா ரிடபரவி தனின்மனது கூர்ந்துதாமே

*தவசதனை யியற்றியதா லிடப்பாகம் பெற்றவளாந் தையற் கன்பர், சிவசரிதை மனமுருகிப் பகர்ந்துமிகத் தொழும்பதனைச் செய்யு மன்பர்க், கவசமதை யகற்றுமையர் தென்சேறைத் திருநா ளுக் கன்பு கூர்ந்து, துவசமதை யேற்றுவித்தார் நச்சாடை தவிர்த்த பரஞ் சோதி யாரே. (கூஉ)

*அம்பத்தி நலமிகுந்தம் மடியாரி னகவிருளை
விம்பத்தி னகரனென விலக்கியருள் புரிவதற்குச்
சம்பத்தி னிறைசேறை தனிற்றுவசந் தனையுயர்ந்த
தம்பத்தின் மிசையணிந்தார் நச்சாடை தவிர்த்தவரே. (கூகூ)

*அத்தியேற் றதழுடையா யாளுடையா யெனப்பணிவா யன் புட் கொண்டு, நத்தியேற் றடியேனைப் புரப்பவர்தென் சேறைவிழா நடத்து தற்குப், பத்தியேற் றம்புரிமெய் யடியார்கள் காட்சிபெறும் படிக்கின் றன்பாய்ச், சத்தியேற் றம்புரிந்தார் தவம்புரிந்தா ளிடத் துறையுந் தம்பி ரானே. (கூச)

*நாக மொட்டிநிமிர் பூக நெட்டிலைகண் மாக முற்றதரு வோடு மேல், நாடி யெட்டியதி வேக முற்றுலவி நானி லத்தினுறை சே யினை, மேக மொத்தகுழல் பாகை யொத்தமொழி வேலை யொத்த விழி மேவியே, வேக மிக்கமத யானை மத்தகப யோத ரத்தையுறு மாமினுள், யோக முற்றிலகு மாது பெற்றவளை யாகம் வைத்துவள ரீசனுர், ஓது நச்சுமிகு மாடை யைச்செழிய னேடு செப்புமரு கீச னுர், ஆக மத்தின்மறை யோர்கள் செப்பியவி ழாந டத்திவரு வோ மெனு, ஆர்வ முற்றிடப கேத னத்தைவிரை வோடு கட்டினரின் னுளரோ. (கூரு)

நான்காந்திருவிழாவிற் சொல்லியன.

*செய்க்கோர மாகவுறு நந்தினங்க டாமிகவுஞ் செறிவா யிந்தின் [றுப
மெய்க்கோல வடிவுறுந்தென் சேறைநகர் விழாநான்கில் விருப்ப முற்
மைக்கோல விழியுமையா டன்னுடனன் பர்க்கருள மகிழ்வாய்மாலாம்
வைக்கோலை மாடாக்கிக் கொண்டெழுந்தா ராளுடைய வரத னரே.()

*ஒள்ளிய கமலப் பொய்கையை யுழக்கி யுதறியே மீறிய வாளை
துள்ளிமா வருக்கைச் சுளைகளை யுதிர்ப்பச் சுரும்பினை முரலுந்தென்

சேறை, வள்ளிநா யகனுங் குமரனைச் சுதனு மகிழுமெய் யாளுடை நாதர், வெள்ளிவா கனத்தின் மீதெழுந் தன்பர் வினையெலாந் தவிர்க் கவந் தனரே. (கஎ)

*சடையிலுய ராறுடையான் றவழுமதிப் பிஞ்சுடையான் றவளநீற்றான், இடையில்வளை யரவுடையா னென்றுமெனை யாளுடையானெந்த நாளும், தடையிலா தருள்புரியத் தென்சேறை விழாநான்கு தன்னில் வெள்ளி,விடையில்வரும் பவனிதொழு தாற்சுவர்க்க மணித் தாக விளங்குந் தானே. (கஅ)

*காவகத்தி லரசுபுரி யிந்திரன்மா லுடனேவெண் கமலை தன்னை [ரிப் நாவகத்திற் கொண்டுறைவோன் முதற்பணியுந் தென்சேறை நாதனு பூவகத்தி லனைவோருந் தன்பெயரைச் சேவகத்தே வென்று போற்றச் சேவகத்திற் காட்சிதந்தார் நச்சாடை தவிர்த்தருளுஞ் செல்வனுரே.

ஏழாந் திருவிழாவிற் சொல்லியன.

*திருமருவுந் தென்சேறை விழாவேழி லாளுடைய சிவனார் தாமும், கருமையுறுங் குழலுமையாள் பெற்றவளை மணம்புரிந்தக் காட்சி தன்னைப், பெருமையுறத் தரிசிப்போ ரிமையாரா யிருக்கின்ற பெற்றி யாலே, அருமையுடன் மண்ணுலகோர் விண்ணுலகத் தவரென்றே யறைய லாமே. (சo)

*கங்கையுறு பழனமதில் வருமள்ளர் பரிவோடுங் கலந்து வெண்மைச் சங்கினமு முத்தினமுந் தார்க்கோலாற் றள்ளியுழுந் தகைமை சேர்ந்து செங்கமல மாதுலவப் பெறுஞ்சேறை விழாவேழிற் சீர்பெற் றோங்க மங்கையெனும் பெற்றவளை மணம்புரிந்தா ராளுடைய வரதனுரே.

*விண்டலமே லமரர்முதல் யாவரும்வந் திறைஞ்சிநிற்ப விருப்ப முற்றே, தண்டமிழோ ரேத்தெடுப்ப நச்சாடை தவிர்த்தவர்தாந் தவம்பெற் றுளைத், தெண்டிரைசூ ழுலகுபுகழ் தென்சேறை விழா வேழிற் றிருக்கல் யாண, மண்டபத்தின் மணம்புரிந்த காட்சியைக் கண் டடியரெல்லாம் வாழ்வுற் றுரே. (சஉ)

*வணக்கோல வடிவுபெறு மால்துணைவி பெற்றவளை மகிழ்ச்சி கூர்ந்தே, கணக்கோல வரம்பையர்கிர்த் தனம்புரிய முறசொலிப்பக் கனிந்து வாயால், இணக்கோல மறைமுழங்க நச்சாடை தவிர்த்தரு

ளு மீசர் செய்த, மணக்கோலத் தரிசனஞ்செய் தன்புற்றோ மேலான வாழ்வுற் றோமே. (சங)

*முன்னவனோ முகந்தூங்கல் பின்னவன்சே யென்பரந்த முத்தி வீட்டுக், கின்னமொரு நன்மகவைப் பெறுதுமென வெண்ணமுற்றோ வெந்த நாளும், பன்னுதமிழ் வளம்பெருகுஞ் சேறைநகர் வேழத தனிற் பரிவு கூர்ந்தே, அன்னைதவம் பெற்றவளை யாளுடையார் திரு மணஞ்செய் தன்புற் றோமே. (சச)

தனது பிதா நாடுநீங்குஞ் சமயத்து தனக்குவந்த சுரநோய் நீங்கும்பொருட்டுச் சொல்லியது.

*உன்னடிமையென்பதுமிவ்வுலகமெலாமுணர்ந்திருக்கவுண்மையாக நின்னடிமை யனேகமதா னினைவிலையோ மறந்துவிட னீதமாமோ மன்னுமென் றன்பிதாவருத்தமறிந்துமெனையிச்சமயம்வருத்தலாமோ கன்னிமதில் சூழ்சேறை நச்சாடை தவிர்த்தருளுங் கருணை வாழ்வே.

தேவதானம் பெரிய கோயிலிற் றெரிசிக்கச் சென்று ஏற்றடியுட னற்புதத் திருவடியுங் காட்டக்கண்டு தெரிசித்தபோதே சொல்லியது.

*நீயடிமை கொண்டாயெங் குடிமுழுது மென்பதையின் னிலத் தோர் காணப், பூவடியிற் பெய்துதொழ வறியாத நாயேனைப் பொரு ளாக் கொண்டு, சேவடியுந் திருவடியுங் காட்டியநின் கருணைதனைச் சிந்தை தன்னின், மாவடியி லடியேனு லறிதரமோ மலைக்கொழுந் தாம் வாம தேவே. (சரு)

*நந்தை வான்மதியெ னந்த மாகுவளை விந்தை யோடுமலர் வாவியிற் பந்து மாமலைநெ ருங்கு மாதர்கள்ப யின்று மேவிவளர் சேறையில் இந்து வோடிரவி வந்து மேபணியு மைந்து மாமுகவர் பாலனைக் கந்த சாமியென வந்த வேளைமகிழ் சிந்தை யோடுபணி வாமரோ. ()

ஒவ்வொரு அமையங்களிற் சொல்லிய கவி.

*அதிமதுர மாங்கனி பலாக்கனி யரம்பையின
தற்புத மிகுத்த கனியும்
அண்டத்தி னளவினையு மிவ்வள வெனத்தெரிந்
தறியும் படிக்கு யர்ந்தே

யாவரும் புகழவே யணியணிய தாகவே
யடர்தென்னை யின்கனிகளும்
அனேகங்கள் கூடியே பிதிர்விட்ட செங்தேன்க
ளாறுக வேதி ரண்டு
மதியைநிகர் சங்கினந் தவழ்கின்ற கழனிகள்
மடமடென வேபு குந்து
வண்மைபெறு செஞ்சாலி வளரும் படிக்குமே
வரிசையாய்ச் சென்று பாய்ந்து
வருடமதின் முப்போக மெப்போது மேசெங்நென்
மாறும லேவி ளைந்து
வானுலக மின்றியே யின்னகர்க் கிணையெனெ
மாவள மிகப்பொ ருந்தி
நிதிபெருகு தென்சேறை வாழுமுரு கேசனே
நெடுமாறன் மருகீ சனே
நீலவிழி மாதுமைக் கன்புமிகு பாலனே
நேயர்கட் கனுகூ லனே
நெஞ்சிறக் கஞ்சற்று மில்லாத வசுரர்களை
நீறுக்கி யெழுவ ரையுறும்
நெடியவெழு வரையுமிரு கூறுக்கி வந்திடவு
நேமித்து வேல்வி டுத்துத்
துதிசெயுந் தேவருடன் மூவருமி குந்துவளர் சி
தொல்லுலகின் மற்றியா வருந் அ)
துன்பமில் லாமலே யின்பமா வென்றுநற் னருளி
சுகமேவ வாழ்வித் தவா த்தருளும்
சுருதிக ளனைத்துமன் புற்றுத்து திக்கவே மீந்தாலென்
தோன்றுமெய்ஞ் ஞான முதலே னும்பேரன்
சொர்தவடி மைக்குனது சிந்தையின் மகிழ் (ருசு)
றுணைப்பதந் தந்தருள் வையே.

*கன்னலின் வெடித்த முத்தங் கழனியிற் சிதறி வி| விமலன் மேலாம்
சென்னெலின் குலைகண் மீது செறிந்துதன் பிரபை|ஞ்சேர் தேவ
நன்னகர்ச் சேறை வாழு நாதனே யெனைநீ காக்கத்| கீழ் தாழ்த்தும்
தன்னமை யுடனென் னுளுஞ் சரணமே பணிகின் |பயப்ப டேனே.()

தேவதானம் பெரியகோயிலிற் றிருவாதிரையிற் சொல்லியன்.

*பார்புகழு மாணிக்கப் பலகை சேர்த்துப் பைம்பொன்னு லரி முகமாம் பணிகள் கோத்து, ஏர்பெறுநல் வயிரத்தாற் கால்க ளூட்டி யிணங்கிடுகோ மேதகத்தால் வளையும் பூட்டி, நீருருவெண் முத்தத் தாற் பந்தர் வேய்ந்து நிலவுபொழி யூசலின்மேற் கொண்டு வாய்ந்து, ஆருறுசெஞ் சடையெம்மா னன்பாற் காண வன்னைதவம் பெற்ற வளே யாடி ரூசல். (ரு0)

*செல்லாருங் குழலதனிற் பின்ன லாடச் சிறந்தமதி நுதன் மிசைப்பொற் சுட்டி யாட, எல்லோனு மதியுமா வியம்பு கின்ற விரு சுடர்போற் காதணிக ளிலங்கி யாட, வில்லாரு மணிவளைக ளார்த்தே யாட மேதினியோர் கண்களித்து மிகக்கொண் டாட, அல்லாருங் குழல்மடவார் கரந்தொட் டாட்ட வன்னைதவம் பெற்றவளே யாடி ரூசல். (ருக)

*மின்னுமதி முகமடவார் நடன மாட வீணையிசை தும்புருநா ரதர்கள் பாட, நன்னயமா மறையோர்க ளாசி பேச நலம்பெறு பொன் விசிறிகளா லருகில் வீசப், பன்னுதமிழ்ப் பாவலர்கள் கவி கள் கூறப் பரவடியார் மனமிகவா னந்த மீற, அன்னநடை யரமக ளிர் கவரி போட வன்னைதவம் பெற்றவளே யாடி ரூசல். (ரு௨)

*மும்மையுல கம்பரவு மிமைய ராசன் முத்திபெறப் புதல்வியென வு தோன்றி, எம்மைநிதம் புரந்தருளக் கருணை கூர்ந்தே யெழுந் தரு ளித் தேவிநதி தன்னின் முன்னம், செம்மைபெறு தவம்புரிந்த *நங்தை ...க்க தேவிதவம் பெற்றவளென் றெவரும் போற்ற, அம் பந்து மாமரெனுநாம மிறைவற் கீந்த வன்னைதவம் பெற்றவளே இந்து வோடி (ருரு)

கந்த சாமியெ.

வருக்கையுறு கனிக டன்னை யூகங்கள் பிடுங்கியெறி ...ன்னியொடு குலைசாய்ந்தக் கனியுஞ் சிந்திக் கயத் *அதிப..டிப் பெருகி முட்ட, மின்னுதல்சேர் வாளையே ...ண்மீனைப் பாய்வததனுல் வெருவி மிக்க, அன்ன அண்ட... தன்னில் வாழு மன்னைதவம் பெற்றவளே (ருச)

திருவாவடுதுறை மாகாசன்னிதானமாகிய ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள் பேரிலியற்றியன.

ஞானக் கடலே தவமணியே நால்வர்க் குபதே சித்தருளும்
மோனப் பொருளே வேதாந்த முடிவே சைவ நெறிமுதலே
கூனற் பிறையங் கொழித்துவந்த கோவே தேவே தென்றுறைசைத்
தானத் தலைவா சுப்ரமண்ய சாமி யெனைக்காத் தருள்வாயே. (ருரு)

ஆசையெனும் பெருங்கடலி லமிழ்ந்தியுனைப் பணிவதற்கே யறிவிலாத, பாசமுறு மென்னெஞ்சு தெளிவித்தே யாண்டருளப் படுவதென்றோ, நேசமுள வடியவர்க்கா நெற்றிவிழி கரந்துவந்து நேமிதன்னில், தேசுலவுந் துறைசையின்வாழ் சுப்ரமண்ய குருபரனே தேவ தேவே. (ருசு)

உலகிலறி யாமையினுன் முத்திவழி காணவென வோடி யோடிப், பலநதியிற் படிந்தும்பின் சிலதலங்கள் பணிந்துமுழல் பாவி காணும், சொலவரிய பலவளஞ்சேர் தென்றுறைசை மாநகரிற் றோன்றி யெங்கும், இலகருள்சேர் சுப்ரமண்ய குருபரனை யெக்காலு மிறைஞ்சுவீரே. (ருஎ)

தருவடியி லுறைபவனும் பாற்கடலிற் றுயில்வோனு மயனுந் தாமும், திருவடியைத் துலக்கியுறு கறைமிடறு நுதல்விழியுந் திங்கட் பிஞ்சும், மருவடியார்க் கினந்தெரியா வகைமறைத்துத் துறைசையின்கண் வந்து தோன்றும், குருவடிவாஞ் சுப்ரமண்ய தேசிகன்றா ளினைப்பணிந்து கும்பிட் டேனே. (ருஅ)

ஆவடுதண் டுறையுறைநஞ் சுப்ரமண்ய குருபரன்றன் னருளினோடு, பாவலர்க்கு மியாவருக்கு நினைத்தவெலாங் கொடுத்தருளும் பரிசை யோர்ந்து, தேவருல கத்தெழிற்கற் பகந்தனையு மீந்தாலென் செய்வ தென்னக், காவெனமுன் னிரந்ததிறற் காவெனும்பே ரென்னுருங் கழறு வாரே. (ருகூ)

வேதமஞ்சு வேதமுற வுரைத்திடுஞ்சுப் பிரமணிய விமலன் மேலாம்
நாதனென்றுன் னுதவரா லறியாத திருநோக்கு நலஞ்சேர் தேவ
கீதமிங்கீ தருமையெனப் பாடுமரக் கனைப்பிலத்தின் கீழே தாழ்த்தும்
பாதமுந்தப் பாதெனகம் பதிந்ததனா லந்தகற்கும் பயப்ப டேனே. ()

கந்தபுராண முதலாகிய சில புத்தகங்களும் தம்புரு வொன்றும் கட்டளையிட்டருளப்பெற்றபோது கூறியது.

மதிவந்த னங்குலவி விளையாடு பொய்கையு
மலர்ப்பொழி லும்பொ ழிலின்வாய்
வானரங் குதிகொண்டு வாவொலியி னலங்கண்
மதுகரத் திரண்மி கவெரீஇ
வண்போதில் வீழ்போ தெழும்போ துடைந்தோடு
மதுவாறு சென்று விரைவாய்
வளமீறு பணையேறி மிகவோடு புனலூடு
மருவிநிறை கின்ற வதனால்
விதியின் படைப்பெனவும் விரையொன் றனந்தமாய்
மேவியம் மாணி றமதாய்
மேற்கொண் டெழுந்துபின் சூற்கொண்டு வந்தீன்று
விமலனடி யார்கள் கலைபோல்
மெய்யருண நிறமுற்று மாதேவ னருளென்ன
விளைவுற்ற சாலி யுஞ்சூழ்
மிக்கவள முற்றகோ முத்திநக ரென்றுரைசெய்
மேன்மைபெறு தென்று றைசையம்
பதிவந்து வந்திரத மானவன் பகைவென்று
பகரரிய சைவ மென்னும்
பயிர்தழைய வருண்மழை பொழிந்துவரு கொண்டலே
பரசமய விருள கற்றும்
பரஞான பானுவே யெனதிதய வரிகண்டு
பருகுநல் விரத மதுவே
பாரெலாம் பணிசுப்ர மணியசற் குருபரா
பகரும்நின் னப்ப மினிதாத்
துதிகொண்ட கந்தவேண் மான்மியந் தன்னைச்
சொலுஞ்சிவ புராண முதலாத்
தொகையுற்ற வறுவகைப் புத்தகமு மேழிசைச்
சுருதிக்கு மிகுது ணையதாய்த்
துலங்குதம் புருவொன்று மென்மீ துறுங்கருணை
தோன்றிட வனுப்பி யுமெலாம்

தூய்மையுற வந்திடக் கண்டுதரி சித்துமெய்ச்
சுகவாரி முழுகின னரோ. (சுக)

ஆகச்செய்யுள் உசஅக.

---

## முத்துக்குமாரத்தேவரவர்கள்.

சிவகங்கை சம்ஸ்தானம் புலிக்குளம் ஜமீந்தாராகிய இவர்; திரிபு யமக முதலிய பாக்கள் பாடுவதில் வல்லவர். தனிப்பாக்களாகப் பாடினரே யன்றிப் பிரபந்தமாக ஏதுஞ் செய்திலர். இவர் இற்றைக்கு 15-வருடத்திற்கு முன்னர் தேகவியோகமாயினர். சிவகங்கையி லிப்போதுள்ள முத்துவடுகநாத துரை இவரது மைத்துனர்.

எட்டயபுரம் இளவரசர் மீதுரைத்தன.

*மருவலரை மதமடக்கும் வாட்கைவெங்க டேசுரெட்ட மாலே மாலை
மருவலரைத் தாதிவசம் வரவனுப்பி மனதுவந்து வந்து பின்பு
மருவலரை வம்பாக மடக்கொடியார் தூற்றுமுனம் வன்ன மேய
மருவலரைத் தரமுநிக ராமுலைமா தவளைமன மகிழ்ச்சி யாயே. (க)

* தனத்துவந்து தனைநடத்திச் சலநிதித்தப் படித்துமதன் மூவிக் கும்பத், தனத்துவந்து ளைப்பமலர்ச் சரந்தொடுக்கத் தயலசந்தாடழுவிச் சேர்வாய், மனத்துவந்து மனைதுயிலும் வயலிளைசைப் பதியினிற்பா வாணர்க் கெல்லா, மனத்துவந்து நிதியளித்தந் தருளும் வெங்க டேசுரெட்ட மன்ன ரேறே. (உ)

* வளைக்குமலைக் கடற்குமதிக் குங்குயிற்கும் வருந்துமங்கை வைது சீறும், தளைக்குமலைக் கண்டயர்வாள் கண்டனங்க சந்தருந்தாடரிக்காள் பூவின், முளைக்குமலைக் கடல்கொடுக்கு மொய்ம்பவெங்க டேசுரெட்டா முழுதும் போகம், திளைக்குமலைக் கவிடுவதி யல்பல சேர்ந் தணைந்திடுசிங் கார வேளே. (௩)

*வடவனலைப் பிழிந்துரசம் வடித்ததினுற் செய்ததெனு மதியம் வானில், சுடவனலைப் பயோததியுந் தொனிகாட்டத் துடிதுடிக்குந் துயர நீக்கக், கடவனலே யாதபடி கனிக்கரசே கற்பகங் கரிலுஞ் சீர்த்தி, தடவனலை யென்றமரர் சாற்றுவெங்க டேசுரெட்ட சரசமாலே. (௪)

*கம்பரம்பம் பரங்கர்க ரங்கருங்கண் டனமடமான் காம னம்பால், இம்பரம்பம் பரவவலை வாரிதியா லிளைத்துமன மிரங்கி யேங்க, வம்பரம்பம் பரமரத்தை யீர்த்திடல்போன் மதிகாய மயங்குமாமோ, சம்பரம்பம் பரவிந்தத் தடவிளசைப் பதியிலெட்டப் பேந்த்ர மாலே. (௫)

*கருங்கலசங் கனந்தனங்குந் தளமென்மினை வெருவாதிக் காவி லெப்பாங், கருங்கலச லதியொலியா லும்மதியா லுங்கலங்கிக் கவலை யாற்ப, கருங்கலசல் செய்தனர்கன் ருயபரெனக் கதிர்த்தரளக் கணத்தை யேங்கி,கருங்கலச லங்கணிறுற் கரைப்பளெட்டப் பேந்த்ர னெனுங் கருணை மாலே. (௬)

*சிலவிலைக்கா மப்பய லும் வளைத்துமல ரேவவலர்த் திரளையூர்பு, கலவிலைக்காத் திருக்குமுதி யருஞ்சினக்க வருந்துங்றேன் கருத்தி லேதும்,நலவிலைக்கா தலியரிட நான்படும்பா டறிந்துநங்காய் நாளு மென்னைப்,புலவிலைக்கா மற்பொருந்திச் சொல்லுவெங்க டேசு ரெட்ட பூமான் பாலே. (௭)

*கலகவட்டை கடித்ததெனக் கனலனங்கப் பயல்கணையங் கத்திற் கவ்வ, விலகவட்டை நிகர்த்ததனத் தேந்திழையா ளின்னல்கொ டேங் குவது சொற்ப, மலகவட்டை மலர்த்தருப்போ லருளும்வெங்க டேசுரெட்ட வண்ண லேயிவ், வுலகவட்டை விகத்தினளென் றுரைக்குமுனக் காதலினு லுவந்து சேரே. (௮)

*மடைத்தலை கடக்கு மாமைமல் லார்ந்து வயலிற்செந் தாமரை மலரில், படுத்திடத் திரியும் பகட்டடி யதன்மேற் பதிந்துகவ் வியசெயல் பார்க்கில், தடக்கரக் குறட்டாற் றண்பணைக் கமியன் றகட்டிர சிதந்தனைத் தழலில், படப்பிடித் துருக்கும் பரிசுநே ரிளசைப் பதிவெங்க டேசுரெட் டரசே. (௯)

*வளைமருட் பகன்ற பகடுக ளுரப்ப மள்ளர்கள் வளர்கரும் பொடித்தே, உளைதர முதுகி லடித்திட வவைமே லுகுத்திடு முத்தமார்ந் தொளிர்தல், வளமைசா ருர காகணத் திரள்கண் மாகமார்ந் திருந்திடன் மானும், இளசையம் பதியி லிசைப்பயிர் வளர்க்கு மெழில்வெங்க டேசுரெட் டிறையே. (௧௦)

*கனக்கவலை தரளவடந் தனச்சிலம்பி லருவிநிகர் காட்சி காட்டத், தனக்கவலை விசிவசப் படுத்திடுமிந் திரைகணவன் றமிழ்தேர் விற்ப, னனக்கவலை யெறிநளினத் தடவிளசைப் பதிமனற்ச மூசங் கா ணுத, மனக்கவலை வகுக்கவந்தேன் மனதுவக்கப் பெருங்கருணை வழங்கு வாயே. (கக)

ஆகச்செய்யுள் உ௪கூ௨.

---

## சிதம்பரம் இராமலிங்கசுவாமிகள்.

இவரது சரித்திரம் இவரியற்றியருளிய திருவருட்பாவில் விரிவா யெழுதப்பட்டிருத்தலால் ஈண்டு வரைந்திலம்.

இராயல் ஹோட்டல் வேலுமுதலியாருக்கெழுதியது.

* திருமயிலா புரியீசன் றிருவருளால் வேலெனும்பேர் சிறக்க வாழ்வோய், ஒருமையிலா மற்றவர்போ லெனைநினைத்தல் வேண்டாமெம் முள்ள நின்றன், கருமையிலாக் கருணைமுகங் காண்பதற்கு விழைந்தங்கே கலந்த திங்கே, அருமையிலாப் பெருமையிலே யிருக்கின்றே மிதுகடவு ளாணை யென்றே. (க)

ஆகச்செய்யுள் உ௪கூ௩.

---

## சூரியமூர்த்திதேசிகர்,

இவர் இலக்கணவிளக்க நூலாசிரியர் வைத்தியநாத நாவலரின் சந்ததியிலுதித்தவரென்பது இலக்கண விளக்கப் பதிப்புரையாற் பெறப்பட்டது.

ஸ்ரீநிவாச முதலியார் பெருமையைக் குறித்துரைத்தது.

* தேடிநிதி யங்கொடுக்குஞ் செல்வரைப்பார்த் தெள்ளளவும்
பாடிப் படிக்கப் படியாதே—நீடுபுகழ்
வாச மலர்த்தடஞ்சூழ் வண்களர்வாழ் வாஞ்சீநி
வாச னெனச்சொன்ன வாய். (க)

ஆகச்செய்யுள் உ௪கூ௪.

---

## ஆறுமுகதேசிகர்.

இவர் செங்கோட்டையிலே பரம்பரைச் சைவவேளாளர் மரபிலேயுதித்து, திருவாவடுதுறையிலே சிவதீட்சை முதலியனபெற்று, மகா வித்து

வான் மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்களிடம் கல்வி பயின்று, திருவானைக்கா ற்வி சிலகாலம் வதிந்திருந்து பின்னர் திருவண்ணாமலையாதீனம் பண்டார சந்நிதியாயெழுந்தருளியிருந்தவர். 20-வருடத்திற்கு முன் பாண்டித்தலம் பதினான்கனுளொன்றான கொடுங்குன்றம் என்னும் பிரான்மலையிற் சிவபத மடைந்தனர்.

திருவாண தீக்ஷாகாலத்திற் கூறியன.

* அன்றுகல்லா னிழலமர்ந்தெல் லாமுணர்ந்த பெருந்தகையார்க் களித்த மாண்பை, இன்றுபல ரிருக்கவொன்று முணராத நாயேற்கு மிசைத்திந் நாளும், ஒன்றுறவொன் றினைச்செய்தன் முதன்மூன்றும் வலமியாமென் றுரைத்தா யென்றும், நின்றுநிலாம் புகழ்படைத்த துறைசையிற்சுப் பிரமணிய நிமல வாழ்வே. (க)

* மறைபலவன் பருக்கொளித்தன் பருக்கெளிதா நின்கமல மலர்த்தா ளென்றென், றறைதரற்கேற் புறப்பன்றி வடிவெடுத்துப் படிமுழுது மகழ்ந்த மாற்கு, முறையின்வெளித் தோன்றாதின் றடியேனுக் கெளிவந்து முடிமே லேறித், தறைமிசையின் பாக்கியதா லன்பிலனு யினுமுன்னைச் சாற்று வேனே. (உ)

* இம்மைமுத லெப்பயனு மெய்துவதெங் கெனவாதிங் கென்றோ டாற்று, மும்மைமலங் களும்வேரோ டறக்களைந்த பயனின்றே முற்றும் வண்ணம், செம்மைசெய்தாண் டனையிதற்குக் காரணநின் னருளன்றிச் சிறியேன் பான்முன், எம்மையினுந் தவங்காணேன் றுறைசையிற்சுப் பிரமணிய வெங்கோ மானே. (ங)

* மறவினையே னுபசரித்துன் றனக்கிடுவே னுணவிங்ஙன் வா வாவென்னத், திறமுடனென் னிதயதவி சிருத்திமற்றவ் வுணவுதனைத் தேடிக் காணேன், அறமுடையின் பியான்புசிப்ப னீபசிப்ப வதனானீ யவமன் றேனிற், குறவெனினன் றுறுமுக தேசிகமற் றஃது துணவா முதவு வேனே. (ச)

ஆகச்செய்யுள் உசகஅ.

---

## புலிக்குட்டி இராமலிங்கத்தம்பிரான்.

திருவாவடுதுறை ஆதீனத்தம்பிரான் சுவாமிகளுள் ஒருவரான இவர் செவிக்கின்பமும் கற்பனையு நிறைந்த கவிகள் பாடுவதில் மிகச் சமர்த்தர். இவர் 15-வருடத்திற்கு முன்னர் சிவபதமடைந்தனர்.

திருவாவடுதுறை மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக
சுவாமிகளுக்கு எழுதியன.

* மதுரம் பழுத்துத் தேன்றுளிக்கும் வளச்செம் பாகக் கவிபுகலும்
வலிமை யடியேன் பெற்றதுநின் மலர்ந்த கருணை யாலன்றோ
இதுவன் றியுமப் பாடலையின் னிசையோ டெவருஞ் சிரமசைக்க
விசைக்கும் வலிமை பெற்றதுநின் னினிய கருணை யாலன்றோ
சதுர்தங் கியவிப் புவிபடியேஞ் சாமீ வருக வென்றுகரந்
தலைமேற் குவிக்கப் பெற்றதுநின் சாலுங் கருணை யாலன்றோ
கதுவு மிந்த நன்றியினைக் கடையேன் மறப்ப னோதுறைசைக்
கண்வாழ் குருசுப் பிரமணிய கருணை நிதியே கற்பகமே. (க)

* வாச மலர்வாய் திறந்தென்னை வாவென் றழைத்துப் படித்தோர்க
மல்குஞ் சபையி னடுவிருத்தி மாநா வலர்கா ளிவன்காளி [ள்
தாச னனையான் கற்பனைப்பாச் சாற்றும் வலிமை யாலென்று
தமியேன் புகன்ற கவிமுழுதுஞ் சாற்றக் கேட்டப் பெருஞ்சபை
நேச வந்தப் பாவலர்போ னீயும் வியக்கும் பெரும்பேறு [யில்
நீச னேன்பெற் றுய்யாம னெடுந்தூ ரத்தி லிருப்பதுவே
ஈச பெருந்தண் டனையன்றோ விதன்மே லுந்தண் டனையுண்டோ
இசைப்பாய் குருசுப் பிரமணிய வெந்தா யருட்சிந் தாமணியே.()

* கோமுத்தி யடைந்தேன்முன் றருமபுர மெவ்வாறு குறுகு
வேன்பின், தோமுற்ற சொக்கபுர மிதுவுமொரு பொருளாமோ
துறவி யானேற், கேமுற்ற குன்றக் குடிவாழ்க்கை மேனெஞ்ச
மிசையு மோசொல், காமுற்ற கூட லுந்தா னுமோசுப் பிரமணிய கரு
ணைக் குன்றே. (ங)

திருவாவடுதுறை மடத்தில் ஒரு ஓதுவார் திருவாயை யடக்கட்டு
மென்றபோது அவரை நோக்கிக்கூறியது.

* செந்தமிழ்பா டும்வாய் திருவாய்மற் றெவ்வாயும்
நிந்தை மலஞ்சொரிவாய் நீர்சொரிவாய்—முந்தவே
நாறும்வா யாரு நகைக்கும்வாய் மூடனே
தேறுவா யிச்சங்க தி. (௪)

முத்துக்கறுப்பனென்ற ஒருவனை யிகழ்ந்து கூறியது.

* முத்துக் கருப்பனென்று முன்னுனக்குப் பேரமைத்த
பித்தனு ரென்னிடத்திற் பேசுவாய்—முத்துக்

கருக்குமா மூடாநீ கற்றிருந்தும் பேரைத்
திருத்திவைக்க லாகாதோ சீ. (௫)

திருவாவடுதுறை மஹா சந்நிதானம் ஸ்ரீமத் சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் பரிபூரணமானபோது கூறியன.

* தனைநிகர்க்குந் துறைசையிற்சுப் பிரமணிய வெங்கள்குரு சாமி யாங்கள், உனையிழந்த பெருந்துயரப் பிணியினு லுயிர்நீங்கி யொழியா துய்ய, அனையபிணி யொழித்தருளும் பலவாண குருமணியை யளித்த வாற்றால், இனைவறநீ யென்றுமெங்கள் பால்வைத்த பெருங்கருணை யென்னே யென்னே. (௬)

* மருந்தனைய துறைசையிற்சுப் பிரமணிய வெங்கள்குரு மணிநீ நீங்கும், பெருந்துயரக் கடனடுவே யாங்கள்விழுந் திறவாது பிழைக்கு மாறு, பொருந்தியவக் கடல்கடத்தி யருள்புகழும் பலவாண புனித னென்னும், திருந்தியநற் புணையளித்தாய் நினக்கென்ன கைமாறு செய்வோ மையா. (௭)

* மன்னுகொடைத் துறைசையிற்சுப் பிரமணிய குருமணிநீ மறைந்த போதே, துன்னுமுயிர் விடுப்போநின் பின்வருமம் பலவாண தூய மேலோன், இன்னுரைசெய் தியாவரையும் யாம்புரப் போ மஞ்சீரென் றிசைத்த வார்த்தை, என்னுமுயர் தெள்ளமுதஞ் செவிவாயிற் புகுதலினு லிறந்தி லேமால். (௮)

ஆகச்செய்யுள் உ௫௰௬.

---

## பழநிக்குமாரத் தம்பிரான்.

இவர் சேற்றூர்ச் சமஸ்தான வித்துவான் முகவூர்க் கந்தசாமிக்கவிராயரவர்களது குமாரராகப்பிறந்து சிறுபருவத்தே திருவாவடுதுறை ஆதினத்தையடுத்து மகாவித்துவான் ஸ்ரீமீனாக்ஷிசுந்தரம்பிள்ளையவர்களிடத்தில் கல்வி கற்றுவருங்கால் இவரது மதிநுட்பத்தையறிந்த மஹாசந்நிதானம் ஸ்ரீமத் சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் இவர்க்கு காஷாயந்தரிப்பித்து ஆதீனத்துத் தம்பிரான்கள் திருக்கூட்டத்துடன் சேர்த்தருளினர். பின்னரிவரது தந்தையார் வந்து அந்நிலை தவிர்த்து இல்லறத்துக்கு வரும்படி யழைத்தபோது இவர் மறுத்துவிட்டனர். பின்னர் அந்த ஆதீனத்திலேயே வித்துவான் தம்பிரானுக இருந்து ஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகளிடத்திலே சிவஞானபோத

திராவிடமா பாடிய முதலிய ஞான நூல்களைப்படித்துச் சிறந்தனர். பிற்காலத்தில் இராமநாதபுரம்சம்ஸ்தானத்து வள்ளற்றன்மை வாய்ந்த பாஸ்கர சேதுபதியவர்கள்பாலும் மதுரைத் தமிழ்ச்சங்கம் அக்கிராஸனாதிபதியாகிய பாண்டித்துரை ஸாமியவர்கள் பாலும் பலவருஷங்களிருந்து அவர்கட்குச் சைவசித்தாந்த நூல்களையோதுவித்தனர். இற்றைக்கு 10 வருஷங்கட்கு முன் மூவலூரில் சிவபதமடைந்தனர்.

ஸ்ரீமத் ஸ்ரீசுப்பிரமணிய தேசிகசுவாமிகள் பரிபூரணமான
காலத்தில் கூறியன.

எண்ணிறந்த குணநிதியா யிருந்தருள்சுப் பிரமணிய வெந்தா யென்னே, மண்ணிறந்தென் குணஞான வெண்குணமு மில்லாதேம் வறியேம் ஞானக், கண்ணிறந்தே மெனப்பிரிந்தாய் கருணையுநின் றனைப்பிரிவு கண்டதேயோ, பெண்ணிறந்திங் கிருந்தபெரும் புகழாண்டுப் பெறுவாயோ பேசு வாயே. (க)

கண்ணெலா நீராக முகமெலாந் துயராகக் கருதுந் தோறும்
புண்ணெலா மனமாகப் புழுக்கினைசுப் பிரமணிய புலவர் வாழ்வே
மண்ணெலாம் புகழாக வாழ்ந்ததிரு மேனியெலா மண்ணேயாக
அண்ணனீ வாழ்ந்தனையே கருணையெலா மெங்கேயோ வருளு வாயே.

குணநிதிநற் கல்விநிதி தவநிதியெங் குருநிதியாங் கோவே மற்றைக், கணநிதிக்கு மேலாக விருந்தருளத் திருவுளத்திற் காதல் கொண்டோ, பணநிதியு மடியேமும் படுதுயரஞ் சற்றேனும் பார்த்தா யல்லை, மணநிதிசுப் பிரமணிய வரநிதிவெண் கலைநிதிசேர் மகுடத் தோயே. (௨)

கல்வினையு மெளிதுருக்கு நின்கருணைத் திறங்காட்டிக் கடையே னெஞ்சம், சொல்வினையும் வகையிலைமற் றிதையுருக்கும் வகையிதெனத் துறந்தாய் கொல்லோ,வில்வினையு மம்பினையும் வென்றநுதல் விழிகளையும் வென்ற மேலோய், எல்வினையுந் துறைசையிற்சுப் பிரமணிய குருமணியே யெவர்பெற் றுரோ. (௩)

குருமணிசுப் பிரமணிய குலமணியா வடுதுறைப்பாற் கொழித்துக் கொண்ட, வொருமணிசிந் தாமணியை யுதவுமணி யெவ்வுலகு மொளித்து நின்ற, பெருமணிகண் மணியணியுங் கண்மணிநற் கிகா

மணியாய்ப் பெருமை பெற்ற, அருமணியைப் புதைத்துவைத்தா ரறிவுடையா ரயர்கின்றே னறிவிலேனே. (௫)

படியின்மிசைப் பழுத்தவருட் கற்பகஞ்சுப் பிரமணிய பரம யோகி, அடிமையெனப் பெயர்வைத்து முதன்மையெலா மெமக்களித் திங் காண்டா யென்று, மடிமையிலா திருந்தெம்மைக் காத்தசிர மங்க ளெலா மாற்றி னூயோ, கொடுமையிலா யெமைத்துயரங் கொள்ளை கொள வயர்வுயிர்த்தல் குறித்தாய் நன்றே. (சு)

தவஞ்செய்ய வந்ததிரு மேனியிலித் தனையழகுங் குணமுஞ் சார்ந்து, பவஞ்செய்த குறிப்பெவனோ வெம்மையெலாந் துயரிலகப் படுத்த வோசொல், நவஞ்செய்த துறைசையிற்சுப் பிரமணிய சிகா மணியே நாளை யெல்லாம், அவஞ்செய்யா துனக்குமுனஞ் சென்ற னமேற் றுயரெம்மை யணுகற் பாற்றோ. (எ)

எல்லாநிற் கிருந்தாலு முயர்வொப்போன் றில்லாதோ யெல் லார்க் கென்றும், நல்லாய்நல் லாசிரிய விலக்கணத்து முழுவயசும் நவின்றா ரல்லர், அல்லாதுன் பாற்குற்றஞ் சற்றுமிலை யெனத்துன் பத் தழுந்து கின்றோம், வல்லாய்சுப் பிரமணிய வள்ளாறுன் பத் தையுநீ வழங்கு வாயே. (அ)

தாய்தந்தை சுற்றங்க டமைத்துறந்து நீயென்றே சார்ந்தோ நீயும், ஆய்தந்த னமெமக்கிங் கருளியிது போதகன்றா யஃதென் னெஞ்சில், நோய்தந்த துள்ளளவு நின்றிருமே னியிலொன்று நொடி யா தென்றும், தோய்தந்த துலகமெலா மற்றருமைத் திருமேனி தோய்ந்த தெங்கோ. (கூ)

தண்ணமுதஞ் செவியூட்டி வாயமுத மூட்டிநிதந் தரிசி யென்று, கண்ணமுத மூட்டியெனே வளர்த்தருளுங் கற்பகமே கடைக்கா லென்றோ, உண்ணமுத மெனவரிய பாடியமு மூட்டினேயென் னுறுதி யென்னால், மண்ணமுதாய் வருகுருசுப் பிரமணிய குருமணியோய் வாழி வாழி. (௧0)

* அடியா ரெல்லா நினைப்பிரிந்த வன்றே தொடங்கி யின்றளவும்
தொடியார் மகளி ரெனவழுந்து கின்றா ரினியார் துயரங்கள்

படியார் கண்ணி ரடுத்துறையாப் பார்த்தோ நினதா வடுத்துறையை
வடியார் தமிழ்சுப் பிரமணிய வள்ளால் வருவாய் வருவாயே. (கக)

* வருவாய் வருவா யென்றுநின்றோம் வாரா யென்னி லெங்களைநீ
வருவாய் வருவா யெனவுரைக்க வருமோ நின்பால் வான்பொருளும்
தருவாய்த் தருவாய் செங்கழுநீர்த் தாராய் தாரா யெனவுரையா
மருவார் புகழ்ச்சுப் சுப்பிரமணிய வள்ளால் வருவாய் வருவாயே. ()

* எல்லா நீயே யென்றிருந்தோ நின்னை யிழந்தோ மெல்லோரும்
எல்லா மிழந்தோ மெமையிழப்ப தறியா திருந்தோ மெம்பெருமான்
நல்லார் தமக்கு நல்லாயே நல்லார் தமக்குப் பொல்லாயே
வல்லாய் குருசுப் பிரமணிய வள்ளால் வருவாய் வருவாயே. (கங)

* நீயே நின்னை நிகர்ப்பாயா லின்னை யொருவர் நிகர்ப்பாரோ
தாயே நிகர்ப்பா யாவர்க்குந் தந்தை நிகர்ப்பா யெனத்தந்தாய்
வாயோ வோயா துனைவனைய மனமோ வோயா துனைநினைய
மாயாப் புகழ்ச்சுப் பிரமணிய வள்ளால் வருவாய் வருவாயே. (கச)

* வருவாய் குரவர் சிகாமணியே வருவாய் தருஞ்சிந் தாமணியே
வருவாய் ஞான நூற்கடலே வருவாய் சமய கோளரியே
வருவாய் கொடுத்த கற்பகமே வருவாய் கருணை கரநிதியே
வருவாய் புகழ்ச்சுப் பிரமணிய வள்ளால் வருவாய் வருவாயே. (கரு)

* வருவாய் நினது முகந்தருவாய் வறியேன் முதுகுங் கைவருவாய்
திருவாய் மலராற் றேன்றருவாய் தீராக் கண்ணீ ருந்தீர்ப்பாய்
அருவா யுருவா யருவுருவா யையா வமர்ந்தா யாவர்க்கும்
வருவாய் தருஞ்சுப் பிரமணிய வள்ளால் வருவாய் வருவாயே. (கசு)

* அய்யா வுன்ற னருமையெலா மறியா திருந்தே னறிந்தேனெல்
லையா திருந்த நாயேனை வைவித் தாண்ட நாயகமே
பொய்யா நின்பா தப்போது காணப் போதும் போகாவே
வையாப் புகழ்ச்சுப் பிரமணிய வள்ளால் வருவாய் வருவாயே. (கஎ)

* என்ன குறையோ நின்னதியல் பென்ன வியல்போ வெனக்கேட்டு
சொன்ன குறைதீர்த் தெமையாளத் துவச மெடுத்து நாட்டினையே[ச்
அன்னை யனைய நின்கருணைத் திறத்தை நினைந்தா லுருகாரியார்
மன்னர் தொழுஞ்சுப் பிரமணிய வள்ளால் வருவாய் வருவாயே. ()

* ஆணு வுலகி லவதரித்தா யன்பு செயலாற் றுயாணுய்
பேணுக் காமத் திறத்தாலே பெரிய வலியு மாயினையால்
ஏணுர் நீயே முப்பாலு மென்னு மறையை யெளிதுணர்ந்தோம்
மாணுர் தருஞ்சுப் பிரமணிய வள்ளால் வருவாய் வருவாயே. (கக)

* ஆருங் குரவ ரெனவருக வாரும் புலவ ரெனவருக
ஆருந் துறவி யெனவருக வாரு ஞானி யெனவருக
ஆரும் வள்ள லெனவருக வென்றே யுளங்கொண் டகன்றனையோ
வாரும் புகழ்ச்சுப் பிரமணிய வள்ளால் வருவாய் வருவாயே. (உ0)

* பிழைப்பாய் பிழைப்பா யெனமுயன்ற பெரியோ னின்பேர் பெறரோற்றேன், உழைப்பா னின்ற வொருமுனிவ னுளமும் வருந்த வோடினையே, கழைப்பா லெனுநின் வாக்களிப்பாய் கருணைக் கடலே கண்மணியே, மழைப்பா லெனுஞ்சுப் பிரமணிய வள்ளால் வருவாய் வருவாயே. (உக)

*மன்னவர் வணங்குஞ் சுப்பிரமணிய வள்ளலே மாதவக் கொழுந்தே, என்னதோ குறைநிற் கென்றெனைக் கேட்டா யின்னது குறை யெனவில்லா,அன்னதே குறையொன் றுளதென விடுத்தே னதனையு மகிழ்ந்துரைத் தனையால், இன்னது குறையென் றுரைத்துரைத் தடியே னிருந்திட வெழுந்தரு ளினையே. (உஉ)

* தேமுள துறைசைச் சுப்பிர மணிய குரவநீ தெய்வமுன் னொருநாள், நாமுள வரையுங் குறையுனக் குளதோ வென்றனை நம் பினே னடியார், தாமுள வரையு நீயுள வரையுந் தாமத முளவரை யாமோ, தோமுள மில்லா யறிவிலா வென்னைத் தொன்மைபோற் காப்பதுன் கடனே. (உங)

* மன்றமை துறைசைச் சுப்பிர மணிய வள்ளலே மற்றெனக் கிரங்கி, நன்றுநம் வழியி லென்றிவன் வருவா னம்மரு ளென்றிவன் பெறுவான், என்றுநீ யிரைதேர் கொக்கென விருந்தா யின்றுமாங் கிதுகுணத் திருப்பாய்,இன்றுதா னருளுக் கங்ஙனம் யானு மிருந்தன னினியென்ன குறையே. (உச)

* அருத்தகன் குரைத்த கல்விமீ னாட்சி சுந்தர நாவல னகன்றுன், பெருத்தநற் கல்விக் குசாத்துணைக் குமார சாமிமா தவனும்

பின் பிரிந்தான், வருத்தமிக் செய்ததுன் சேவை மற்றுநீ பிரிந்தனை யென்றால், பொருந்து வாழ்ந்திருப்பது துறைசைச் சுப்பிர மணியபுண் ணியனே. (உரு)

*ஆடக மனைய சுப்பிர மணியண்ணனை யகன்றநாட் டொடங்கி, நாடொறுங் கனபா டிகண்மறை வல்லார்கண் ஞானசாத் திரிகள்பா வலர்கள்,பாடகர் தமிழ்நா வலர்கள்யா வரையுமே பார்த்தனன் றேடியுங் காணேன், வாடுறு துன்பால் வரவுழைத் தனையோ மற்றெனைத் தகாதெனை வரைந்தே. (உசு)

* சித்தாந்தத் தரும்பொருள்க ளெல்லாநின் வாக்கிற்
சிவஞான பாடியத்தி லன்றியெங்குந தெளிவாம்
முத்தாமுந் திக்கைசெய்து முந்நான்முப் பொருள்கள்
மூன்றவத்தை தமைக்காட்டி முக்கன்மம் போக்கிப்
பித்தாவென் றென்னுடைய முப்பொருளும் வாங்கிப்
பேராத மும்மலமும் பேர்த்தெறிந்த பெரியோய்
வத்தாஞ்சுப் பிரமணிய குருவேநீ மணிநான்
மணியிழந்த வரவமினி வாழ்வதென்ன வாழ்வே. (உஎ)

* தேர்தருநற் சிவஞான போதநற் சித்தி
சிவஞான பாடியநற் சிவப்பிரகா சந்தான்
தேர்தருசை வப்பொருள்கள் வைத்திடுபண் டாரந்
திறவுகோ னீயெங்கள் துறவர்சிகா மணியே
ஆர்தருமென் புன்றலையிற் றிருக்கரம்வைத் தழுத்தி
யரியதிரு வடிவைத்தே யழுத்தினையின் பத்தே
வார்தருசுப் பிரமணிய குருவேநீ மணிநான்
மணியிழந்த விழியினித்தான் வாழ்வதென்ன வாழ்வே. (உஅ)

*எல்லார்க்கு முத்திதரு மைந்தெழுத்தை யோது
மினியமுறை நிற்குமுறை யென்னதே யென்பாய்
கல்லாய்சை வப்பொருள்க ளெல்லாமே யென்பாய்
காண்பாய்நம் முபதேசக் கருவியா லென்பாய்
அல்லாம லனுபோகத் தாவித்த வயிற்சென்
றறிவாயென் பாயையா யாவருனைப் போல்வார்

வல்லாய்சுப் பிரமணியைபாச் யன்பு திநான்
மதியிழந்த வாதமோ லபெரி தென்ன வாழ்வே. (உகூ)

* என்றுநின் னடிமே ன்னு ன்பிருந் திருக்க
விரவுபக லெல்லா வ ய வமித் திருந்தாய்
இன்றுநாஞ் சேற்றினட யோ வா மனத் தவிக்க
வெழுந்தருளி னை கிகபரமெய்த் துணையே
கன்றுதாய்ப் பிரிவேயோ வுடலுயிரின் பிரிவோ
கண்ணருக்கன் பிரிவோயோ நின்பிரிவென் றுரைப்பேம்
மன்றுறுசுப் பிரமணிய குருவேநீ மதிநான்
மதியிழந்த சகோராமினி வாழ்வதென்ன வாழ்வே. (௩0)

*பண்டாரு மில்லாத திருவுருவுந் துறவும்
பதித்ததிரி புண்டரமும் பணிவோம்பே தைமையைக்
கொண்டாடுந் திருவாக்குங் கொழித்தவருணைக்குங்
குணங்களெலாங் குலாவுறுநின் கோமளச்சந் நிதியும்
கண்டாலும் போதுமினிக் கருணையா லையனே
கண்டாரைக் கண்டாலுங் கலிதீர்ந்தே யுய்வோம்
வண்டார்ச்சுப் பிரமணிய குருவேநீ மதிநான்
மதியிழந்த பானலினி வாழ்வதென்ன வாழ்வே. (௩க)

* கற்பகஞ்சிந் தாமணிநற் பதுமநிதி சங்கநிதி காம தேனு, பொற்புறவாங் கிருந்தனநீ யிங்கிருந்தா யெனப்புலவர் புகன்றார் மெய்யே, அற்பமிலா யாங்கூற்று யவையிங்கு வந்திலவாங் கமர்த லென்னே, வெற்புறுபொற் றுறைசையிற்சுப் பிரமணிய குருமணியே விமல வாழ்வே. (௩உ)

* துறவோநின் வீதியோ தூயகரு ணைத்திறனோ தூற்றுஞ்சீரோ, அறமோசை வாகமத்தி னரும்பொருள்க டமைத்தெள்ளு மருமை வாக்கோ, வறியோமைத் துயர்க்கடலுள் வழங்குவதி லொன்றி லொன்று வலிய வேநீ, அறியோமென் றுனைச்சுப் பிரமணிய குரவவங்கீ கரிப்பார் யாரே. (௩௩)

* அய்யாவப் பாவென்றிங் கியாவருரைத் தாலுமுன்ற னருமை வாக்கிற், பொய்யாது வந்தனவே யோன்றிலேசெம் பொன்னையெல்

லாம் புலவோர்க் கீந்த, கையாவைப் யாவெனேயும் பையானையாவெ ன்ற கருணைக் குன்றே, வையாது வாழ்ந்தவனீ யன்றோசுப் பிரம ணிய மதுர வாழ்வே. (ருச)

* எல்லார்க்கு மொவ்வொருதா ரகமிருக்கு நின்கருணைத் திறத் தா லென்பர், கல்லாத நாயேற்கு நின்கருணை யன்றியொன்றுங் கா ணே னீதான், சொல்லாத புகழன்றிச் சொலத்துணியே னினியெது வோ வழிநீ சொல்லாய், பொல்லாத மணியனைய துறைசையிற்சுப் பிரமணிய புலவர் வாழ்வே. (ருரு)

* வயமொன்றிற் குறையுளன்மற் றிதுபொழுதம் பலவாண வள் ளன் மற்றைத், தயவொன்று குணங்கல்வி யெவற்றினுமெற் கதிக னெனச் சாற்றித் தந்தாய், வயமொன்று மெனமதித்தோங் துறை சையிற்சுப் பிரமணிய வள்ளல் வள்ளால், நயமொன்றுந் திருவாக்கு வேதமென விரண்டாமோ நம்பினேமே. (ருசு)

பாண்டித்துரைஸாமியவர்கள் மீது கூறியது.

* வயந்தரா தவைபு மகிழ்ந்துட னுதவும் உக்கிர பாண்டியன் வாக்கை, வியந்தமு தென்பர் சிவார்ப்பண மாகு மேன்மையைக் கரு தியோ புகழ்க்குப், பயந்ததோ பிறவா மையும்பனும் வலிமை படை த்திட வோசெவி தனக்கும், நயந்தரு முணவா விருந்திட வோநன் ஞவினி லமுதிருந் ததுவே. (ருஎ)

எட்டையபுரத்திற் கூறியன.

* பூதல முழுதும் புகழ்ந்திடும் வெங்க டேசுர எட்டம புனிதா, நாத்ஞ முருகற் கன்பின னென்று ஞானவை ராக்கிய னென்றும், ஈத லங் கல்வி பொறைதயை பெருமை யின்சொலோ டுடையனீ யென் றும், காதலாற் கேட்டேன் காணுநாள் கருதி யாசையுங் கரைபுரண் டதுவே. (ருஅ)

* குருவைபு மிழுங்தேன் கொடுந்துய ருழுந்தேன் கோதிலா தி னித்திடு பழந்தேன், உருவெனு மின்சொற் றன்னைநன் குடையா யுனைப்புக ழென்றுய ருடையாய், தருவையே நிகர்க்கத் தருவைமற் றெவர்க்குந் தந்தையே நிகர்க்கவுந் தந்தை, அருமையி லார்க்கிங் கரு மைசெய் வெங்க டேசுர எட்டமா தவனே. (ருகூ)

* மன்னுயிர் புரக்கு மரபினற் பெயரால் வடிவினன் மாதவ னின்னம், என்னவு முரைத்தா லமைந்திடும் வெங்க டேசுர எட்ட வென் பெரும, முன்னநம் பெயரி னப்பனென் றனையுங் குமரனென் றெனையுமே மொழிவார், இன்னமோன் றுருவங் கொண்டெனை யிரும்பா திருந்திட லெங்குள வழக்கே. (சo)

ஆகச்செய்யுள் உருசசு.

---

## தண்டபாணி சுவாமிகள்.

திருநெல்வேலியிலே சைவவேளாண் மரபிலே யுதித்த இவரை முருக தாச சுவாமிகள் என்றும், திருப்புகழ் சுவாமிகள் என்னும் சொல்லுவர். சந்தப்பாக்கள் பாடுவதில் மிக்கவல்லவர். தில்லைத் திருவாயிரம், திருவரங்கத் திருவாயிரம், ஒலியலந்தாதி, புலவர்புராணம், திருவாமாத்தூர்ப் புராணம், அறுவகை யிலக்கணம், திருமயிலைக் கலம்பகம், சென்னைக் கலம்பகம் முதலிய நூல்கள் இவரியற்றியன. இவர் திருச்செந்தூர், பழனி முதலியதலங்களில் சிலகாலம் வசித்திருந்து பின்னர் திருவாமாத்தூரிற்றங்கி அவ்விடத்திலேயே இற்றைக்கு 10 வருஷத்துக்கு முன்பு சிவபதமடைந்தனர்.

அவயமொழுதலரிதெனல்.

சந்தக் குழிப்பு.

தனன தனன தனனத் தனன தத்த
தனன தனன தனனத் தனன தத்த
தனனத் தனனதத்த தனனத் தனனதத்த
தனனத் தனனதத்த தனனத் தனனதத்த
தொங்கல். தனன தனதனத்த தத்ததய்யன.

* குருதே சிகனர் சிவசுப் பிரம ணிக்கு
விலோ மெனவே தமிழிற் கவிதொ டுக்கு
மருமைப் புலவர்சித்த மலரிற் றினநடிக்கு
மிருபொற் கடல்படைத்த - பெருமைக் குமாரர்
கருண கரவேள் பொதியக் கிரியி லுற்ற
குருமா முனிபா லருண்மெய்ப் பொருளை யொப்பி
லொருகைக் கிளியினுக்கு முதவிப் புகழ்பொறுத்த
கருணைக் கடல்படைக்கை - பெறுசுத் தவீரர்

குலசே கரனூ சகுணக் கடவு ளாகரு
ஞயர்சீ ருடையார் தனிநிட் களவி ருப்ப
மருளிற் றருமொருத்தர் முதன்மைக் கடவுள்செட்டி
மனையிற் குளுமுதித்த - புனிதக் குனூலர்
அயிலதனு லமர்க்க ளத்தைவெலுவார். (ஞு)

கொலைவே ரறவே கருதித் தவமி யற்று
மவர்பா லணிமா டயிலிற் றிகழ்சி றுக்கர்
புலமைத் திறன்மிகுக்கு மொருபத் தன்வசமற்று
வெருளச் செயலகைக்கோ - ரெமனெத்த பாலர்
அருணு புரியா லயவட் டமதி ளுக்குண்
மனையா டனையோர் தவசிக் குதவு பத்த
னதுகைப் பொருண்முடித்த சிகரிக் குவடபக்க
மொருசொற் பகருநித்த - ருலகச் சகாயர்
குளிர்தா மரையா கியதொட் டிலத னுக்கு
ளொருசே யெனவா விபிலுற் றமுரு கப்பர்
தருணத் திலெனதிச்சை வழிநிற் குமுயர்சித்தர்
பொருகுக் குடமுழக்க - மலிவுற் றதோளர்
அடிய வர்வாய்மையைக்க ருத்திலுள்ளுவார். (வ)

திருநீ றணியா தவரைக் கருவி மிக்க
மதுரா புரியூர் வழுதிக் கருள்கொ டுத்த
கலையுற் றவனையெச்சு மவருக் கினியர்சட்டி
விரதத் தினர்கருத்து - முடியச் செய்தேவர்
துணிவே வடிவா கியசத் தியம தூற்ற
கவுமா ரரையோர் கொதுகிற் கருது நர்க்கு
நிலைகெட் டறிவுகெட்டு வழிகெட் டழகுகெட்டு
விழிகெட் டலையுநட்ட - முறவிட் டவேடர்
திரையா ழியில்வா ழுவுணக் கருவி றுத்த
பெருமா ணெடுமால் விழிபெற் றமக ளிர்க்கொ
ருரிமைக் கணவர்பற்பல் கனவிற் பல்வடிவத்தொ
டொளிர்சத் திபெறுமிட்டர் - மலையுச் சியாளர்
செயிர தூசிர்தொடுத்து மெத்தநல்குவார். (வஞு)

சினைமா முகில்சேர் பொழிலிற் றினைவிளைக்குன்
மயில்போல் வருவார் மயன்முற் றியவர் செப்பு
மொழியிற் பரிதவித்து விழியிற் சுழல்வதுற்று
வலியத் தொழுதிரக்கும் - விடர்சுற் றுசாரல்
வளமே விடலா விமயக் கிரியும் வெட்க
வடமே ருவைநேர் சொலநிற் குமெழில் பெற்று
முனிவர்க் குமமரர்க்கு முரகர்க் குமனிதர்க்கு
மிவரொக் குமெவ ருக்கு - முயிரொத் துநீடு
செயலோ டொருமா நதிமத் தியிலெ னக்கு
மொருநா ளொருபே ரறிவுற் றிடவு ணர்த்தி
மலயக் கிரியினுக்கு மகள்பெற் றமகவொத்து
முதிர்சொற் பனுவல்கட்கு - மிகவிச் சையான
திருவு ருமாமலைக்க டுத்தநெல்லையாய். (௭)

புருகூ. தனைமா யவனைக் குகனை வெற்றி
மலர்மா ரனைநேர் வடிவுற் றவனை யப்பெண்
மனதிற் றினநினைப்பள் வெளியிற் கபடம்வைத்து
மயலற் றவர்களொக்கு - மொழிசெப் புவாள்மெய்
அதைநீ யறியா துலகிற் பலரு மெச்சு
மடலே றிடநா டினையப் படிவ ருத்த
முயல்வுற் றமுனைவற்ற பனைமட் டைகளறுக்கும்
வருவத் தனையுளொற்றை - விதிதப் பினீதி
புரிவோன் வடிவாள் கொடுவெட் டுமுடன் முற்று
மதநீர் வருமோ விதனிற் றுணிவு பெற்று
மவள்பொற் பெழுதநத்தி யெனையொப் பெனவிசைத்த
துனையொத் தவர்கள்பற்று - மியல்பிற் கொவாது
பயில ருநூன்மிகப்ப டித்தசெல்வனே. (௨௫)

* புதுமா மலர்சூ டியமைக் குழல்வ னப்பு
வரைவா யரனூர் கவியிற் புகழு மொப்பின்
மணமெப் படியமைப்பை யிசையெப் படியிசைப்பை
நுதலொத் தெழுதிவைக்கி - லதுவெட் டுமோசொல்

விழிவேல் வரைவா யவைகட் குளசி மிட்டு
நயமா தியசீ ருறவைப் பதிலே மெய்ச்சொல்
குழைபிட் டசெவிசற் றுமசைவற் றெழுதிவைப்பை
யலர்துத் திமலரொத்த - பணியிட் டாசி
பொறியால் வரைவாய் மணமெப் படிமு கக்கு
மிகழ்வாய் வரைவாய் நகையெப் படிந கைக்கு
முரையெப் படியுரைக்கு மழுதெப் படியளிக்கும்
வரைவுற் றகவுண்முத்த - மிடவெப் புவாய்கொல்
படமொ டுதூரியமிச் சைகொள்வதேன். (௬)

* விருகா சுரனு லவணைப் பொடிய விட்ட
நெடியோன் வளைநேர் களமப் படிய மைக்கி
லுயர்புட் குரல்களெட்டு ளொருசத் தமும்விளைப்ப
திலைபொற் கிரிகளொத்த - முலைமுற் றுநாடி
யறியா யெவணீ யெழுதத் தகும ணத்த
தொயிலார் சிறுதோ ளுறதொட் டுவிறன் மட்டு
நினைவிற் றிகழுமட்டி லெழுதிக் கொளினுமிச்சை
முடியத் தழுவிநித்த - மகிழச் செயாது
விடநா கமும்வா ழையுமொக் குமவை முற்சொல்
சிலநீ யொருவா றறிதற் குமிட மற்று
மறைவுற் றிடவுடுத்த கலைகூற் றிடுமவற்றை
மனதிற் கருதல்பற்றி - யெழுதற் கொணுது
மயில னையாடனைத்து தித்துவெளவிநல். (௬௫)

* மிளிர்தா டலைமே லுறவைத் திடல்கி டைக்கு
மிகழ்வா ரடல்வே ளனமெச் சுபுகழ் கிட்டு
மதனப் பயல்விடுத்த கணைபட் டுவடுவுற்ற
மெலிவற் றிடுமளப்பில் - சுகசித் தமாகும்
இதுதான் முறையா மிதைவிட் டுனுபி ரற்ப
மெனநா டுதல்வீ ணதைவிட் டுவிடு முற்சொல்
விதியிற் செயினுமக்க ளினரிற் சிலரவட்கு
விவணைப் புணருநட்ப - திலைவித் தையாடி

வெளிறு கியநீர் தெருவிற் சிதறி விட்டு
நெறியோர் பவனு மரசர்க் குமய விட்டு
மலரிற் றிருவையொத்த மகளைக் கொடுநடக்கை
கொடிதிற் கொடிதெனச்சொ லுவர்செப் புமாறு
மறுவி டுவாய்களிப்ப ளைத்துமெய்துமே. (க)

## தொங்கல்கள்.

* அயிலதனு லமர்க்களத்தை வெல்லுவா ரடியவர்வாய் மையை க்கருத்தி லுள்ளுவார், செயிரறுசீர் தொடுத்துமெத்த நல்குவார் திருவுருமா மலைக்கடுத்த நெல்லையாய், பயிலறுநான் மிகப்படித்த செல்வனே படமொடுதூ ரியத்துமிச்சை கொள்வதேன், மயிலனையா டனைத்துதித்து வெளவினன் மருவிடுவாய் களிப்பனைத்து மெய்துமே. (உ)

திருக்குருகூர் ஞானசித்த சுவாமிகள்மீது பாடியன.

* ஞானசித்த னொருவ னல்லோர் நடுக்குலவி
வானகமும் பூதலமும் வாழ்வதனுக்—கானதமிழ்ப்
பாமாரி பெய்வதனைப் பார்ப்பதென்றன் வேட்கையென்றல்
காமாரி யாணையுண்மை காண். (ங)

* கொலையும் புலையுமறுங் கொற்றமன்னர் நீதி
நிலைதவறார் செந்தமிழ்ச்சீர் நீடுந்—தொலையாய
வானகத்துள் ளாரு மனிதருங்கூ டிக்களிப்பார்
ஞானசித்த னுடல்செய்யு நாள். (ச)

* எண்ணிலார் மாய்ந்தோ ரெழுந்துலவக் காண்பதுவு
நண்ணி நலங்குலைந்து நாணுநாள்—விண்ணின்
வழியாயோர் ஞானசித்தன் வந்தவிரக் கண்டால்
அழியாத வீடுமுற லாம். (ரு)

* ஞானசித்த தேசிகரிந் நாட்டினிடைக் கூடியதால்
ஈனசித்தர் நாசமுற லென்றென்று—மானசித்தம்
உள்ளதொண்ட ரெல்லா மொருங்குபிரார்த் திக்கின்றார்
வள்ளலருண் மாட்சி மதித்து. (சு)

* மரகத கிரிக்கடவுள் மாமலர்த்தாட் கன்பாய்
சரதபத்தி யாப்பதிகஞ் சாற்றி—விரதபயன்
பெற்றுயர்ந்த ஞானசித்தன் பீடும் பெருந்தகவும்
கற்றுயர்ந்தோ ரேயறிவர் காண். (எ)

ஞானசித்தர்காலில் முட்குத்தியபோது கூறியது.

* நள்ளார்க்கு மின்பநல்கும் ஞானசித்தன் றன்பதத்தில்
முள்ளால் வருத்தன் முறைமையா—கள்ளாறு
போலத் தமிழ்ப்பாப் புகல்வாருக் கின்பநல்கும்
வேலப்ப நங்குலதே வே. (அ)

நெய்தற்றொழிலை வியந்து கூறியது.

* செய்யுந் தொழிலனைத்துஞ் சீர்தூக்கிப் பார்க்குங்கால்
நெய்யுந் தொழிற்கு நிகரில்லை—வையகத்தில்
தெள்ளு தமிழ்வேதஞ் செப்பியந்நாட் சீர்படுத்தும்
வள்ளுவனார் கொண்டதல்ல வா. (௯)

சில தொழிற்றன்மையைக் கூறியது.

* தட்டா னிடத்தினிற் றங்கப் பணிகள் சமைப்பதுவும்
வட்டாடு வாரைத் திருத்திநன் மார்க்கத்தில் வைப்பதுவும்
பட்டாங்கி லுள்ளதைக் காகிதத் தச்சிற் பதிப்பதுவும்
தொட்டார் மனத்தைப் பலவாறு நாளுந் துயர்செயுமே. (௧௦)

தேவிகோட்டையில் முத்தப்பன் என்ற ஒருவன் றன்மையைக் கூறியது.

* சித்தப் பிரமை திருட்டெண்ணந் தீங்குடனே
முத்தப்பு முள்ளானை முத்தப்ப னென்றுரைத்தார்
எத்தப்பு மில்லாரீ ரெப்படியோ கைக்கொண்டீர்
மெத்தப் புகழ்படைத்த மேலவீட் டுள்ளாரே. (௧௧)

ஆகச்செய்யுள் ௨௫௫.

---

## காஞ்சிபுரம் சபாபதிமுதலியார்.

காஞ்சீபுரத்திலே பிறந்த இவர் அவ்வூரிலுள்ள பச்சையப்ப முதலியார் கலாசாலையில் தமிழ்த்தலைமைப் புலவராயிருந்தனர். சைவசமயவிளக்க வினாவிடை, பிரமோத்தர காண்டத்துக்குப் பொழிப்புரை முதலியன இவரி

யற்றினார். புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார் இவர்க்கு மாணாக்கர். இவர் 37-வருஷத்துக்குமுன்னர் தேகவியோக மாயினர். இவர் குமாரர் பாலசுப்பிரமணிய முதலியார் தற்காலம் சென்னையில் வசித்திருக்கின்றார்

திருமயிலைக் கபாலீசர்பேரிற்பாடிய வெண்பாவண்ணம்.

சந்தம்.

தந்ததன தந்ததன தந்ததன தந்ததன
தந்ததன தந்ததன தந்ததன தந்ததன
தானதன தானதன தானதன தானதன
தானதன தானதனா—தன்னதத் தனனைதய தனதனா.

*திங்களர வங்களணி செஞ்சடையர் பங்கிலொரு
மங்கையைம ணந்துளம கிழ்ந்தவிறை—துங்கிலியர்
பாலருளு நாதர்வரு பாணரிசை யாவலினர்
ஆலமுணு நாதர்சிவ னார். (௧)

சங்கரர்ச யம்படியர் சஞ்சிதம றும்பரிசு
பொங்குமருள் தந்தவர்பு கழ்ந்தவரு—ளங்குளிர
நாளுமமர் வார்வலிய நாவனக ராளிதனை
ஆளவுரி யார்பரம னார். (௨)

சிந்தைகுடி கொண்டெனது செந்தமிழ்ப ரிந்தினிது
தொந்தமொடு வந்தருள்சொ ரிந்துமல—பந்தமற
வேயருளு மீசரொரு வேயடியி லேயுறைவர்
ஆயுமறை பேசவரி யார். (௩)

மின்னிறச் சடையுள்ள விமலனார்.

சிம்புளுரு வங்கொடப றந்துநற சிங்கவுரு
வம்படவெ குண்டவர்ந லண்டர்தொழு—நம்பரமர்
மேருசிலை கோலிவிர வார்கள்நகர் வேகவெரி
யாரநகை யாடிவரு வார். (௪)

மைந்தனுயிர் கொண்டகல வந்தநம னைந்துவிழ
முந்திபுதை தந்தவர்மு னைந்திடிச—லந்தரனு
ளாவிவிட மாறடுவ ராணையுரி போர்வைகொளு
மாவலினார் சூலமுடை யார். (௫)

சிந்துமல ரைந்துடனெ திர்ந்தமத னங்கமது
வெந்திடமு னிந்தவர்வி ரிஞ்சனுள—கந்தைதவிடு
மாறுநடு மேவுதலை யானதற வேகறவு
மாறுலவு மாமுடியி னார். (சு)

### விண்ணகத் தவர்மெள்ள வறியொணார்.

மங்கியுகு மென்புசிறு மங்கையுரு வம்பெறவி
ரங்குமவர் சண்பைநக ரெங்கள்குரு—விங்கிதமொ
டேசொலுயர் பாடலதில் நேசர்கயி லாசமலை
வாசர்விடை யேறிவரு வார். (எ)

தஞ்சைபுர வஞ்சுழியல் தண்டுறைசை யம்பர்நகர்
விஞ்சுபுகழ் கொண்டுறையும் விந்தையினர்—கஞ்சனரி
காணவரி யார்முருகர் காரிதிரு நாவரசு
மாணிதொழ வேயருளு வார். (அ)

வந்திதரும் வெந்தவுண வன்றினித ருந்தவரு
மெந்தைநரி பண்டுபரி யென்றுவர—வுந்தியொரு
மாறனெதி ரேகுமவர் வாயிலுளம் வாழுமவர்
மாறிநட மாடுமடி யார். (கூ)

### அன்னைகற் பகவல்லி யிறைவனார்.

மண்டுபயி ரின்கதிர்வ ளைந்துகழி யின்கரையி
னண்டையிலு திர்ந்தொளிர்நெ லன்புகொடு—வெண்டரள
மாகுமென மாதர்பல ராசையுடன் வாரவரு
கேகிமன நாணுமெழில் சேர். (க0)

எந்தவுல குந்தொழவி லங்கியவ ளங்குலவு
மந்தரிப ரம்பரிய லங்கிர்தமி—குந்தமயி
லானதொரு சீர்குலவி யாடவர்க ளோடுமட
மானனைய மாதரவர் வாழ். (கக)

மங்கையமு குந்தனும னந்தவடி வங்கள்கொடு
தங்கினரெ னும்படித மைந்தமனை—யெங்குமொளிர்
வாவிதொழு மாமயிலை வானவர்க பாலியொளிர்
பாலவிழி மேவுபர னார். (கஉ)

அண்ணனட் புளசைய மதனிலே.

மங்களமி குந்தவப ரஞ்சிரதி வந்துதொழு
மங்கையிள வஞ்சிசுர மஞ்சரிநி—றைஞ்சவிசை
பாடுகிளி யோமதன பாணரச மோகலவி
கூடவரு மோகவழ கோ. (௧௩)

என்றெனெதிர் நின்றிடலு மின்பவட லின்பவுயி
ரின்கணெளி யின்பரச மெங்கையரு—ளின்சொலுரை
நாமடியு ணையினி நாணெருகு லாமடிகு
லாமடிச லாமடிச லாம். (௧௪)

மஞ்சடியி ருண்டகுழல் நஞ்சடிம ருண்டவிழி
பஞ்சடிசி வந்தபத பங்கசமு—ணைஞ்சதுக
லோசெமர மோகபட மோகொடிது நீவிடடி
வாசமயி லேயருகு வா. (௧௫)

பொன்னையொத் திடுமெய்யி னமுதமே.

வந்தனைபு ரிந்திடுவன் வஞ்சகமி தன்றுதய
சந்த்ரமுக பிம்பரச சம்ப்ரமமி—குந்தகனி
யேசரச மேமதுர மேயுசித மாமதனு
மாசையுறு மாதரர சே. (௧௬)

நைந்துமனம் வெம்புதடி நன்றலடி நங்கையினி
யந்திமதி வந்துதழ லங்கமிசை—யுந்துமடி
பாவிமத னேவுகணை பாதகிவி டாதடியெ
ஞவினிலு மீரமிலை நாம். (௧௭)

மஞ்சமிசை யின்றுளம கிழ்ந்தணைவ மென்றிடலும்
ரஞ்சிதமி குந்தினிதி ரங்கிமொழி—கொஞ்சிவிளை
யாடவிதழ் கோதியித வாகரதி மாரதுரை
வீடுதனி லேகைபட வே. (௧௮)

புண்யமொத் ததுநல்ல தருணமே.

சந்தமுலை ரெண்டையும தன்கணைகு டைந்திடுது
வெந்துமன நொந்ததென மிஞ்சிமய—லந்தமத

வேள்பெரிய பூசையினை நான்வழுவி டாதுசெய
நாளிதுச பாசுநல நாள். (௧௯)

என்றெனித ழுண்டுமன தின்புடனை ணைந்தினிது
மென்றுசிறு தம்பலமல வங்கமிக—வொன்றிடவென்
வாயிலிடு வாளமரர் மாதர்சுகம் வீணதுசீ
சீயதிலி ராதுருசி யே. (௨0)

இங்கிதநி றைந்துபுள கங்களுட லெங்கணுநெ
ருங்கிடவ ணைந்தெனையு வந்தினமு—நங்கமென
சாமியட காமியென சாலமொரு சாமமினி
யாமலதி கேளிசெய டா. (௨௧)

சன்னதத் தொடுபுல்லி மருவுமே.

இந்துநுத னின்றுவெயர் வந்திடலு மின்பமொடெ
டுழுந்தினிது குந்தியமு தின்றுளிக—சிந்திடுது
நீபொறட சாமிசில நேரமென லீலைபிர
தாபமொடு சாமமினி யாள். (௨௨)

அந்தவம யஞ்சிறித சந்திடில றிந்தொளிர்பல்
சிந்திடவி ரண்டுகன முஞ்சிதற—முந்துறுப
ளீலெனநி லாவுகர தாடனம்வி டாதுசெய்து
மால்வளர வூடிமகிழ் வாள். (௨௩)

இன்பவமு தஞ்சுரத ரம்பையுடை யிந்திரனென
நன்கொடுபு கழ்ந்திடுவள் நங்கையவள்—தென்புமிக
வேதமுவு போகசுக மீடுசொல ஞாலமதி
லேதரிய தாருநிச மே. (௨௪)

தன்னையொத் திடுமுள்ள நிலையிதே.

தோங்கல்கள்

மின்னிறச் சடையுள்ள விமலனார்
விண்ணகத் தவர்மெள்ள வறியொணார்
அன்னைகற் பகவல்லி யிறைவனார்
அண்ணனட் புளசைய மதனிலே

பொன்னையொத் திடுமெய்யி னமுதமே
புண்யமொத் தநுகல்ல தருணமே
சன்னதத் தொடுபுல்லி மருவுமே
தன்னையொத் திடுமுள்ள நிலையிதே. (கூ)

ஆகச்செய்யுள் உ௯௰அ

## அமுதகவிராயர்.

இவர் மதுரைஜில்லா சிவகங்கை சம்ஸ்தானத்தைச்சேர்ந்த பொன்னுங்கால் என்னுமூரில் வேளாளர் மரபிற் பிறந்தவர். கவி பாடுவதில் மிகச் சமர்த்தர். கேட்பவர் மனத்தைக் கவரும்படி இனிமையான பொருட் செறிவுபடப் பாடுந்திறமையுற்றமையால் இவர்க்கு இப்பெயர் வந்ததென்பர். கி. பி. 1645 முதல் 1670 வரை சேது சம்ஸ்தானத்தை ஆண்டுவந்த பெருங்கல்விமானும் வள்ளலுமாகிய திருமலை சேதுபதி ரகுநாத சேதுபதியென்னும் தளவாய் சேதுபதியவர்களது வாசல் வித்துவானாக விளங்கினர். அச்சேதுபதியவர்கள் மீது நாணிக்கண் புதைத்தலென்னும் ஒரு துறைக்கோவை பாடினவரும் இவரே. இவர் பிறந்த ஊரை இவர் சந்ததியாரெல்லாரும் அனுபவிக்கும்படி ஷை சேதுபதியவர்கள் சாசுவதமானியமாகக் கொடுத்துவிட்டனரென்பர்.

இவர் நித்திரை செய்யும்போது இராமநாதபுர சம்ஸ்தான தானபதி
அண்ணாமலைப்பிள்ளை வந்து பாதத்தை வருடக் கண
விழித்தறிந்து உடனே கூறியது.

* சீரிலகு மான்மணிப் பாய்சுமந் தான்கம்பர்
சிவிகைபாண் டியனேந் தினன்
செல்வமிகு கச்சியப் பன்னுதை பொறுத்தனன்
திகழ்சுட்டி சோம னீந்தான்
தாருலவு குமணனுந் தலைகொடுத் தான்சிவன்
றானுமொரு தூது சென்றான்
சர்க்கரையு மெச்சில்வாய் கழுவினன் காளத்தி
தனதிருகை புற்றி விட்டான்
பேரிலகு கம்பையனும் விரலாழி யீந்தனன்
பெரியவன் பெண் கொடுத்தான்
பிணிமுகத் தோன்கிரி னைப்புரந் தான்பேதை
முதுகிலன மொருவ னிட்டான்

பாருலகி லித்தமிழ்க் குக்கொண்டு செய்தபேர்
பார்க்கிற் கணக்கில் லையே
பராசர் பணிகின்ற அண்ணு மலைக்குரிசில்
பாதத்தை வருடி னுனே. (க)

* பருப்பதங்க ளொவ்வொருதூண் பாக்கல்சிவன் வளையாத பார மேரு, சுரிப்படங்காப் போதிகைகீ தொடுத்ததிருப் பணியை யென்ன சொல்வே னையா, தருப்பொலியுங் கரதலஞ்சேர் மந்திரி முத் திருளப்பா சாமீ யுன்னைக், கருப்பணுமுன் றிருப்பணிக்கென் றருப்பணினுன் மருப்பொலிசெங் கமலத் தோனே. (உ)

* சேதுபதி காத்தமுத்து ராமலிங்கத் துரைகுழந்தைச் சிங்க மந்த்ரி, மாதுவளர் முத்திருளப் பன்கொடிய வரிவேங்கை வளரா திக்கம், கோதுறுபா மரக்காடு கருணிகர் மும்மதக்கொல் யானை மற் றோர், மோதுசிறு புலிபிவற்றுட் கல்விமான் களுந்திரிந்தான் போச ந் தானே. (௩)

ஆகச்செய்யுள் உ௰கக

## அவிநாசிப்புலவர்.

இவர் திருநெல்வேலி ஜில்லா வாசுதேவநல்லூரில் சாயக்காரர் குலத்திற் பிறந்து கவி பாடுவதிற்றேறி கோயமுத்தூர்ஜில்லா அவிநாசியில் பல வருஷம் வசித்தனர். அதனால் அவிநாசிப்புலவரென்று பெயர் வந்ததென்பர். இவரதியற் பெயரறிந்திலம். அவிநாசி கருணைபுரிமாலை இவர் செய்த நூல். இற்றைக்கு 40-வருடங்கட்கு முன் தேகவியோகமாயினர்.

வசைகவிகள்.

* சீவனுள் ளளவுமே நட்டுவக் காலியுந் தேளுஞ் சினந்து கொட்டக், திருதிரொனு முண்டவிழி யிற்குளவி கொட்டவது செங்குருதி யாறு கொட்டப்; பாவிமக னேயுனது வாசலிற் சாம்பிணப் பறைகண்மிக வந்து கொட்டப், பந்தரடி மாரடித் துறவினர்கள் வாய்க்கரிசி படிநெற் கொணர்ந்து கொட்ட; ஆவலொடு கான் மாட்டி ஆனதுமெண் டாட்டிகண் ணருவியொரு கோட்டை கொட்ட, ஐயையோ வென்செய்வே னென்றுமக ளீர்மாலை யதனைக் கொணர்ந்து கொட்டச்; சாவடியி லறுதலிகள் கூடியழ நீவந்து சப்பாணி கொட்டி யருளே, சண்டிக் குலாமனே வெங்கட்ட ராமனே சப்பாணி கொட்டி யருளே. (க)

* நற்கவி ராசருக் கீயாத மட்டியிர் நானிலத்தில்
அக்கரை யான நிதிபோய்க் கரிக்கந்தை யாடைகட்டி
கற்கரைந் தாலுங் கரையாத சிந்தைக் கசடனுக்குச்
சர்க்கரை யப்பனென் றேன்பேரிட் டான்பெற்ற தப்பிலியே. (உ)

* ஒருமற் கடக மெனச்செத்த நாயென வூதுகின்ற
எருமைக் கடாப்பயல் சர்க்கரை யப்பனை யேதுக்கென்றோ
அருமைத் துரைநல் வரகுண ராமனென் னையனென்ன
பெருமைக்கு வேண்டிவைத் தானோதன் வாசற்ப்ர தானியென்றே.

ஆகச்செய்யுள் உ௬௬௭.

## சொக்கம்பட்டித் தானாபதி பொன்னம்பலம்பிள்ளை.

இவர் சொக்கம்பட்டி சம்ஸ்தானத்தில் ஸ்தானபதியாயிருந்தவர். இற்றைக்கு 60 வருடங்கட்கு முற்பட்டதிவர்காலம்.
இவர் சேற்றூர் ஜமீந்தார் சிவப்பிரகாசத்துரையவர்கட்கு எழுதியனுப்பியது.

* இலவே யனைய விதழ்மட மாதரொ டின்புறுதல்
குலவே லரசர்க் கியல்பல்ல வேயிக் குவலயத்தில்
பலபேர் புசித்துக் கழித்தே யெறிந்திடும் பாண்டஞ்சுத்தி
அலவேதென் சேறைச் சிவப்பிர காச வகளங்கனே. (க)

* நானா விதத்திலும் பாலைய காரர்க்கு நன்றிசெயும்
தானா பதிச்சொட்டு மாவிட ரேபுத்தி தானில்லையா
மானுபி மான மில்லையா வயிறென்ன மாகடலா
ஏனையப் போலவோர் திரிதைப் பார்க்கி லிறத்தனன்றே. (உ)

* தானா பதியென்ற பேர்மாத் திரமென் றமிழருமை
யானா லறிவது நீமாத் திரமெனக் காதரவு
நானா விதத்திலுங் காணே னுனைமுற்று நம்பிவந்தேன்
மானுப ராதொண்டை வேந்தா மழகப்ப மாமணியே. (௩)

* காவிக் கலையிலை யாகப்ப லேறக் கடலில்லையா
ஆவிக்கு மீளப் பிறப்பிலை யாகல்வி லம்பையெடுத்
தேவிச் சலிப்பது போலே யிதமறி யாதவரைச்
சேவிப்ப ராசங்க ராபுன்னை யூரிற் சிவக்கொழுந்தே. (௪)

ஆகச்செய்யுள் உ௬௭௧.

## கல்போது ஜமீந்தார் முத்துக்குமாரசாமிப் பாண்டியரவர்கள்.

இவர் தமது கடன்றீர்க்கவேண்டி எட்டயபுரம் பேரையூர் என்ற இரண்டு சமஸ்தானபதிகளை யடுத்துப் பயன்பெறாது ஆற்றங்கரை ஜமீந்தாரவர்களை யடுத்துக்கூறியது.

* எட்டையா பேரையா வென்றுரையே யென்றுரைத்தேன்
எட்டையா பேரையா வென்றுத்தார்—கட்டக்
குறைகடற்கு வீர்த்துக் கொடுபோகா தாற்றங்
கரையதனிற் சேர்த்தெனீ கா. (க)

ஆகச்செய்யுள் உருகக.

---

## மாம்பழக்கவிச்சிங்க நாவலர்.

இவர் மதுரைஜில்லா பழநிநகரத்தில் கி. பி. 1836ஞ முத்தையாசாரியாரது நற்றவத்தாற்பிறந்த அருமைப்புதல்வர். மூன்றும் வயசில் வசூரிநோயினுல் முகக்கண்ணிழந்து முருகக்கடவுள் கிருபையால் அகக்கண்ணொளிவிளங்கப்பெற்று எத்தகைய பெரியநூலையும் ஒருமுறைவாசிக்கக்கேட்டால் உடனே மனதிற்கொள்ளும் ஏகசந்தக்கிராகியாகிப் பன்னூலோதியுணர்ந்து கடன்மடை திறந்த வெள்ளம்போற் கவிமாரி பொழிந்து சேது சமஸ்தான மன்னர் பெருமானுகிய முத்துராமலிங்க சேதுபதியவர்கள், பொன்னுச்சாமித்தேவரவர்கள் இவ்விருவர் சமுகத்திலும் தமது கவித்திறத்தைக்காட்டி அவர்களால் **கவிச்சிங்கநாவலர்** என்ற பட்டமும் பற்பலசன்மானமும்பெற்றனர். பின்னர் சென்னைமுதலிய பல விடங்களிற்சென்று பற்பல பிரபுக்களாலும் பாராட்டப்பெற்றனர். பல்லக்கு முதலிய விமரிசைகளுடன் யாத்திரைசெய்து பிரபுக்கள் எதிர்கொண்டழைக்க வாழ்ந்த தமிழ்ப்புலவர்கள் இவர்க்குப்பின்னர் யாருமில்லையென்றே சொல்லலாம். இவரது கவிகளெல்லாம் மிக அருமைவாய்ந்தன. கி. பி. 1884ஞ சிவபதமடைந்தனர். இவர் செய்த நூல்களும் தனிப்பாக்களும் ஒருங்குசேர்த்து **மாம்பழக்கவிச்சிங்க நாவலர் பிரபந்தத்திரட்டு** என்ற பெயரால் மார்க்கயன்கோட்டை வித்துவான் எம். பி. பழநிசசாமி யாசாரியார் அவர்கள் அச்சிட்டுள்ளார். அதனுள் ளைய விவரமெல்லாங்காண்க.

தோழி தலைவனிடஞ் சென்று கூறல்.

* மனத்தடங்கா வுனதுமயல் வலைப்புகுமான் வசந்தமென வந்த பூஞ்சர், தனத்தடங்கா வெம்புலிக்கு மம்புலிக்கு மயங்கியஞ்சத் தகுமோ காப்பாய், கனத்தடங்கா முரசதிர்மங் கலசமுக முகசலசு கன்னு முன்னுட், சினத்தடங்கா கலித்தகஞ்சற் செயித்தபொன் னுச் சாமியெனுஞ் செங்கண் மாலே. (க)

* குடங்கனக வடம்பழகு கொங்கைசெங்கை பங்கயங்கைக் குங் கோன் மீனப், படங்கனக மருண்டவிழி யெனுங்குயில்வந் தனள்கல ந்து பலகி ரிடை,தொடங்கனக குகன்கருணை துலங்கிவளா ரலங்கிர்த மெய்ச் சுகுணலோலா, தடங்கனக சயிலபுய சௌரியபொன்னுச் சாமியெனுந் தளசிங் கேறே. (௨)

நங்கையின் றுயரறி நற்றாய்கூறல்.

* மகரவட நெடுங்கொடிமன் மதனெனது மகண்மனத்தை வலிமையேயமிக்,ககரவட ரெனக்கவர்ந்தா னதையிவள்பெற் றிடவரு ளிக் காப்பாய் முந்நீர்,நிகரவட மொடுவளைந்த நிருதர்படை முழுதும ன்று நெளிய வில்லேந்,துகரவட சயிலபுய சுமுகபொன்னுச் சாமியெ ன்னுந் துரைச்சிங் கேறே. (௩)

இதுவுமது.

* பொருகரும்பு நெடுஞ்சிலைவேள் பூட்டியமர் காட்டியடர் போ ட்டி தன்னுன்,முருகரும்பு குழன்மாதுன் மோகமுற்று வருந்துவது முறையோ காப்பாய், பருகரும்பு தியவமுதப் பசுந்தமிழோர்க் கிசை ந்தமனப் படியே யாவுந், தருகரும்பு னிதமுகிலே சௌரியபொன் னுச் சாமியெனுஞ் சரத மாலே. (௪)

மன்மதோபாலம்பனம்.

* வருமதனை நினைச்சிலர்தண் மதிக்குடையோ னென்பரது வழுவே மாதர்ப், பொருமதனை நீவருமம் புரிவதெலாம் புரிவிரிநீர்ப் புவனங் காக்குந்,தருமதனை திபதிபொன்னுச் சாமிசெழுங்*கத்திகை தான் றருமே லன்னுன், பருமதனை கம்றுகரும் பைங்கழைவிற் கொ ருநாளும் பயப்ப டேனே. (௫)

சமஸ்தி 7 சந்தனம்வந்த கட்டளைக்கலிப்பா.

* கந்தச் சந்தன மெய்யிற் பொருக்கெழக் கனவ சந்தனம் பாலுன் றன் மோகமே,முந்தச் சந்தன மேனிச்செந் தேனும முதுங்க சந்தன வென்றே மயங்கினள்,இந்தச் சந்தன சுந்தர னம்புனைந் தெழுகச் சந் தன மின்னிவட் குச்சுகந், தந்தச் சந்தன தெவ்வழுந் தீர்ந்திடத் தய வு கூர்பொன்னுச் சாமிந ரேந்த்ரனே. (௬)

வேறு.

* ஏன மாதங்க மேயமு தேவுண தெண்ணமம் யாதெம் மிடத்திற் சொலற்கென்ன,மான மாதங்க வத்தையை யீதென வழுத்து கென்று ளை மார்வேண்ட நின்மய, வான மாதங்க மெல்லாங் குளிர்ந்திட வளை

* கத்திகை - மாலை.

கு வாயென்ன லார்படை வென்னிடத், தான மாதங்க மேறி நடாத் துமந் தரபுயா பொன்னுச் சாமிந் ரேந்த்ரனே. (௭)

மடக்கடிவிருத்தம்.

* மருவிரி பந்து வெருவுற நொந்து வலைசிமிழ் கடைபட முந்து, வடகிரி கோடக் தடமுகை வாட மருண்டெம் பரஞ்சுழன் றூ டப்; பருமணி பொறுத்துக் கருதுகச் சறுக்குப் பணைத்தொளிர் சண்கறு கறுத்துப், பவத்தொடர் நீங்குந் தவத்தரு மேங்கும் படியடி படர்ந்தடர்ந் தோங்கும்; இருமுலை யிருந்து மொருமுலை பொருந்து மெழின்மதன் வரவிவள் வருந்து, மியல்கொள லாமா நயகுண சோமா வின்பநன் கருள்செழுந் தாமா; தருவெனு நேமா பொருபல விமா சகமெலாம் பணிரகு ராமா, தயைமலர் மின்னுக் கியைபுய பொன்னுச் சாமிரா ஜேந்த்ரவுக் தமனே. (௮)

தலைவியின்; பரிசெலாமுணர்ந்த பாங்கிசென்றுரைத்தல்.

* படிபுகழ நிதம்பத்துப் பணவரவுற் றிருந்துமிளம் பாவை நல்லாள், வடிவுபெறு மதனனென வளர்நினது புயந்தழுவா வகையான் மிக்க, மிடியமெர நெடிதுருகி மெலிகுவளோ விவண்முகம்பார் மின்னு ரொன்னார், தடமகுட முடிதடவு சரணதிவ்யா பரணபொன்னுச் சாமி மாலே. (௯)

உவமை விலக்குகள்.

சந்திரன்.

* தலைமைபெறு மிருபர்சிகா மணியாய்ச் சான்றோர்
தமக்கணியா யுதித்தபொன்னுச் சாமி யென்னுங்
கலைநிதியே கலாநிதிநின் முகம்போ லென்பர்
கவிஞர்சில ரதுநிதமிக் கவின்கொள் வாமென்
றலையினிடைப் பணிந்துபடிந் தெழுந்து மாசோ
டாமைகண்டு வெள்கிமெலிந் தறவுங் கூனி
மலைபுமல துனதுமுகம் போன்று வெய்ய
வனுக்குமறுக் கலியிருளை மாற்றி டாதே. (௧0)

கலைவாணி.

* வரமுயர்தென் புதுவைபுரி தவத்தின் சீரால்
வந்தபொன்னுச் சாமிமன்ன வளருன் கல்வித்
தரமுணர்ந்து வியந்துதமிழ் மடந்தை தானுந்
தன்மெய்வெண்மை யாகிவெறி தவழும் வண்டர்

பரவுமல ரிடைக்குடிபுக் கிருந்து மேலாம்
பயனிலமா யினமினியப் பயன்கொள் வாமிந்
நரபதிபா னமையிவரே பெற்ற தாதா
நாமகளே யாமெனநின் ஞுவற் றுளே. (௧௧)

அறுமுகன்—குறுமுனி.

* கடசயில் புயபொன்னுச் சாமிமன்ஞ நினதுகல்வித் தரத்தா ஞணி, யடனுடைய குகனுமறு முகங்காட்டி யையனென வமர்ந்தா னன்றிக், குடமுனிவ னுந்தமிழி லாங்குவடு மேனியின்னங் குறுகு வானேற், புடவிதனி லெவருளர்நற் புகழ்வளரு முனக்குநிகர் புகலற் கம்மா. (௧௨)

காமதேனு.

* குடிலநெறி பயின்றுபுலே விரும்பிமட மிகுந்துபயங் கொடுமுட் டுற்ற, கடியசுர பியையடைவோர் கருதுபொருள் பெறுவரெனிற் கபட மின்றிப், படிமொழிதப் பாதுதிறல் பழுத்தமர்வென் றனந்த நிதி படைத்த நின்னை, நெடிதுறுவோ ரெவைபொருந்தார் நேம பொன்னுச் சாமியென்னு நிருப ரேறே. (௧௩)

கற்பகதரு.

* உவந்துவந்து தாழ்வாரே ருருவுகொளக் கடியவல ருடைய தாக, நிவந்துவெம்பா மரமெனவாழ் கற்பகமுற் றவரேபன் னிதி கொள் வாரேற், பவந்தவிர்மே லவர்பயிலப் பழிமுனிந்து மதிச்செ ழுங்கற் பகமாய்ச் சீர்த்தி, துவன்றபொன்னுச் சாமிமன்ஞ நினைய டைவோர் பெறும்பயன்யாஞ் சொல்லற் பாற்றே. (௧௪)

மழைமேகம்.

* கருவிமுகில் கடல்கவர்ந்தோர் பருவமிரும் புனல்பொழியக் கற்றே மல்லான், மருவுபிறர் பொருள்விரும்பா தநுதினமு நவமணி பொன் வாரி வாரித், தருமுசித சமுகபொன்னுச் சாமிமக பதிசெழு ங்கைத் தலம்போ லேமென், றுருவமிகக் கறுத்தவெற்பி னூடொ துங்கிப் பனித்துவிண்சென் றுறையு மாதோ. (௧௫)

இராஜசமுகத்தின் பெருமை கூறியது.

* மங்கரிய பங்கவிடர் வெங்கலியின் முங்கலுறு வார்மீ ளற்குன்
பொங்கவக லங்கசமு கங்கருணை வங்கமது போலு மாலோ

கொங்கர்சக ரங்கர்கள்க லிங்கர்பல ருங்கரமுன் கூப்பக் கீர்த்தி
தங்கவளர் துங்கஜய சிங்கமென்னு மெங்கள்பொன்னுச் சாமி மாலே.

படிகேட்டுக்கொண்டது.

* வடிகொளமு தனையபல கலைபுமுணர்ந் தடைகுநர்புன் மரு ளாங் கங்குல், விடிதரநன் கருள்செயுநின் பெருந்தகைமை யறிந்திருந்தும் விருப்பா லின்னம், படிபடியென் றடிக்கடியெப் படிமொழிவல் படிமகிழும் படிநா டோறும், நெடியபுகழ் வளர்க்குமரு நீதபொன்னுச் சாமியெனு நிருபரேறே. (௧௭)

படியளவுசெய்யக்கேட்டது.

* கனபபடிவ மிதுவெனும்பொற் கமலகர தலசமுகா கனிந்த செந்தே, னெனப்படிவண் டிமிர்குழற்பொன் னிணங்குபொன்னுச் சாமிமன்ன வியம்பக் கேண்மோ, மனபபடிநா னினைத்தபடி வந்துபடிப் படியுணர்த்த மாட்டே னின்னே, தினப்படியிப் படியுனக்குச் செலும்படியென் றொருபடிநீ செய்கு வாயே. (௧௮)

பாராசசேவகர் தடுத்ததை கூறியது.

* தருமகுண மிகுமனது சமுகமுறா வறுமையெனச் சலிககக் காய்ந்து, வருமிரவி வெயிலதனான் மயங்கியின்றி யானிங்கு வந்த போழ்தி,லருமைதவிர் பாராச்சேவகர்தமது பெயர்ப்பொருளை யறியக் காட்டிக், கருவமொடு தடுப்பதென்னே காமர்பொன்னுச் சாமியெனுங் கருணை மாலே. (௧௯)

இறைவர், தமது கரங்களைப் பிடித்துக்குலுக்கியபோது சொன்னது.

* அவனிபுக முனதுதிரு வடிமலரி னெழுதுகளா லன்று நீங் காப், பவமதகன் றொருகரிய பாறையும்பெண் ணுருமெனிற் பாரா வாரந், துவளவமு தெடுத்தினிய சுரர்க்கருணின் றிருக்கரத்தாற் றொடப்பெற் றேற்குக், கவலைபிணி யுளதாமோ காமர்பொன்னுச் சாமியென்னுங் கருணை மாலே. (௨௰)

தமக்குக் காந்தல் வந்திருந்தபோது கூறியது.

* உன்னினிய சன்னிதிநா ளொருவியயன் மருவியதா லுடனே சைவ, நன்னிலைவிட் டன்னியநா ளடைபுகுமீ னவனையன்று நவிந்த காந்த, லென்னிடத்துங் துன்னிவருத் தியதுசற்றே வுனதருளுய்த்

திருந்தேன் வெண்பூ, தன்னில்வரு கன்னித்திரு வென்னுமின்னு மன்னுபொன்னுச் சாமி மாலே. (உக)

காந்தல் தீர்ந்தபோது சொன்னது.

* சொற்செறிமுத் தமிழ்வலர்க்குத் தூரங்கமணி சரங்கவிகை துலங்குந் தந்தப், பொற்சிவிகை முதலவருள் புனிதபொன்னுச் சாமியெனும் புயலே யுன்றன், மற்செழுந்தண் கருணைநெடு மழைநனைப்ப வதனலென் வறுமை யாய, முற்சுரமும் பிற்சினந்த முதுசுரமு மிகவயலாய் முடிந்த மாதோ. (உஉ)

சிரங்குவந்தவிவரம் தெரிவித்துக்கொண்டது.

*மிக்கவடி விற்காத்த வீரியன் போனமை விதித்திலன் பாவியென்றே,வேதனை வெறுத்தயர வேதனை விளைக்கின்ற வெஞ்சிரங் கானவைகளென், மேலெலாந் தானவர்கண் மிசைதொடுத் தன்றுநீ விடுகணை மிடைந்ததொப்ப, மேவின வவற்றியல் விரிக்கவெளி தோவிண்ணு விண்ணென் றசிப்பனசில,

*செக்கர்வன முள்ளெனச் செறிவசில மாறுத தினவுபுரி கின்றனசில, சிறியசில பெரியசில வெரிவசில நாலைந்து சேர்ந்தொன்று பட்டனசில, தெரிவைபர் தனம்போற் செழித்தடி பரந்தெழு சிலந்திசில வுள்ளவாவித், தேசமொவ் வாமையோ தண்ணீர் விரோதமோ தெரியாது பிணியனேகம்,

* தொக்கதமி யேனைத் தொடர்ந்ததா லிரவெலாந் தூக்கமிலை யொருமாதமாச், சூழ்பனி வருத்தமோ சொல்லமுடி யாதுமேற் றாயசாக் கட்டிரண்டு, துப்பட்டி யிட்டுடன் றேளுற முழந்தாள் சுருட்டினு நடுக்கறாது, தொந்தரை யிவற்றைச் சகிப்பதெப் படிமுன்பு சொன்னசொற் படிநடாத்திக் ,

*தக்கவுத் தரவுதந் தெம்மையெம் மூர்க்குநீ சடுதியி லனுப்பவேண்டும், தானவ்பி மானமுகி லானசிவ ஞானதுரை தமதுமா தவகுமாரா, தமிழ்முத்து ராமலிங் கச்சேது பதிமகிழ் சகோதர சபாபூஜிதா, தர்மப்ர தாபபொன் னுச்சாமி ராஜேந்திர சதுரங்க தளசிங்கமே.

கவிச்சிங்கமென்ற பட்டம் பெற்றபோது.

*கங்கங்குலவு கதிர்வேலான் கனகமேரு கருணைமுகில்
பொங்கம்பெறுமென் புதுவைவளர் பொன்னுச்சாமி பூபனெனக்

கொங்குந்திறல்கூர் கவிச்சிங்க மெனுமோர்பெயரிட் டெழில்வளமை
தங்கும்புகழ்மே லாங்கலையுந் தந்தேயெனையா தரித்தனனே. (உ௬)

உபயார்த்தமுள்ள வித்தைச்சம்பிரதாயம்.

*அட்டவரை கலையுண் டனந்தனை விழுங்கியே மண்டத்தையுங் குலுக்கி,யஞ்சாம லிடியைப் பிடித்துப் பொடித்துமரு வலர்தமையெ லாங்கசக்கி,மட்டரிய கனலைப் பிழிந்துசா றுக்கியதை வயிறுகொள வாய்மடுத்து, வனவேங்கை யைச்சிமிழில் வைத்தடக் கிக்கொடு மகிழ்ந்துவிளை யாடவல்லேம், துட்டவெங் கலிதனை வெருட்டவொரு வித்தைநீ சொல்லிக் கொடுத்தல்வேண்டும், துங்கவக ளங்கசது ரங்கதள விங்கிதசு மங்களவ லங்கிர்தருணு, வட்டிடைய கட்டுமொழி விட்டுளம ருட்டுமிள வட்டமுலை யிட்டமடவார், மதனவன் மைப்பூமி துதிசெய்பொன் னுச்சாமி மகராஜ சுகபோஜனே. (உ௭)

சமஸ்தி.

வெண்பாக்கள்.

*மாலாம்பொன் னுச்சாமி மன்னர்பிரான் றன்னாட்டிற்
சேலாங்கண் மங்கையர்வா சிக்குழல்யாழ்—நீலாம்
பரியிற் பெரியதொடும் பாலைதுளி ரும்ஆ
கிரியிற் கிரியுருகுங் கேட்டு. (உ௮)

*என்றுமொரு தன்மைத் தெனவிளிக்கு மொன்னலரை
வென்றபொன்னுச் சாமி விறல்வேந்தே—துன்று
வரிசிலைக்கை வேளையிலான் மாய்ந்தகிர வுஞ்சக்
கிரியின்மயல் காட்டறிஞர் கேள். (உ௯)

*போனுரைமட் டும்புகல்வர் பொங்குமொரு மொன்றியார்
சீலபொன்னுச் சாமியெனுஞ் சிங்கமே—சால
மனமிரக்க மில்லாத வன்கணரைத் தேடிக்
கனதனவெ னக்கூறிற் கண்டு. (௩0)

ஸ்ரீமாந். முத்துராமலிங்க சேதுபதியவர்கள் சமுகத்திலியற்றிய
மங்கலவாழ்த்து.

புகழான்ற நகமீன்ற பொன்னின்முலைக் கன்னியொரு புறந்த ழீஇப்ப, லகிலாண்ட முதலாண்ட வருண்மோன சிவஞான வமல

ன் காக்க, பகர்பூங்காத் தொறும்பூவை யதங்கோவைச் செழும்பா வைப் படிக்குந் தேவை,நகரேந்த்ர சுமுகமுத்து ராமலிங்க பூமவுனை னாளு மாதோ. (உகூ)

திரிபு.

அனங்கனம்பு மழைபுலிங்க மலைசெவிகட் குருக்கியசெம் பவிர் திங் கட்கோ, மனங்கனம்பு மன்னைபொல்லா வஞ்சகியென் றிரங்கி மதி மறந்து சோர்ந்திடும், மினங்கனம்பு தியகனிபால் வெறுத்தனள் கண் பார்த்தருள்வாய் வியந்த னேக, தனங்கனம்பு ரவிதமிழோர்க் குதவுமுத்து ராமலிங்க தளசிங் கேறே. (ஙo)

சந்திரோபாலம்பனம்.

* பொருப்பவனி தனிற்படர்வ தெனக்குலவு சினக்களிற்றிற் பொலிந்து தோன்றித், திருப்பவனி வந்தமுத்து ராமலிங்கச் சேது பதி சீர்கண் டுற்ற, விருப்பவனி தையர்பலர்க ருண் மெலியவள்யா னைபகைத்தாய் வெள்ளிக் குன்றி, லிருப்பவனி தனையுணர்ந்தவ் ரோமிதித்தா லினையினமோர்ந் திலைநி லாவே. (ஙக)

மன்மதோபாலம்பனம்.

* திடக்கடவி கடக்களிறு சினந்திடின மனப்பகைவர் திடுக்கிட் டோடி, விடக்கடவி முடுக்கியபா வெல்லுமுத்து ராமலிங்க வேந்தன் சோர்ந்தான் சடக்கடவி றடக்கைவிடு சரத்தைமுடி யுரத்தகடற் றடாரி தன்னை, யடக்கடவி யிடைக்குயிலை யகற்றுநினை மதிப்பதிலை யனங்க வேளே. (ஙஉ)

யமகம்.

* வடங்கலங்க ளபங்கழங்கு மறந்துனன்பு சிறந்திணங்க மதிக் கா நின்ற, வடங்கலங்க சனம்பிணைந்த மனாந்திருந்த நிவந்தகொங் கை வரையின் பச்சு, வடங்கலங்க நகம்புரிந்து மகிழ்ந்துகொஞ்சி முயங்கெதிர்ந்த மருவ லார்க, வடங்கலங்க வெலுந்துரங்க மகிபமுத் து ராமலிங்க வரிசை மாலே. (ஙங)

இதுவுமது.

* மாமனத்தை யிவர்காவல் வலிதோரா ளுச்சுதனி மயங்கி னேம், மாமனத்தை யணிகளுக்கு மாட்டுபண்ணி சூட்டுமணி வளைகள்

பூட்டம், மாமனத்தை யுறவைவிடெவ் வகையினுஞ்சென் றழைத்தி னிது வருவன் சேது, மாமனத்தை யலர்புகழு மதனன்முத்து ராம லிங்க மாலைத் தானே. (௩௪)

* உனதுமயற் பரவைபடிந் துறுகரைகா ணுதுடைந்துள் ளுரு கும் கன்னி, தனதுதனக் குடமிரண்டுங் கருமெனினீ முத்தமொன் று தரலா காதோ, வனகதங்க வனிகுலுங்க வமர்கலங்க வடர்துர ங்க வருட்ப்ர சங்க, வனசதுங்க வனிதைபொங்க வளருமுத்து ராம லிங்க வரிசை மாலே. (௩௫)

மிருதங்கம் வாசித்தபோது சொன்னது.

* எத்தலமு மதிக்குமுத்து ராமலிங்கச் சேதுபதி யெனுந ரே ந்த்ரன், கைத்தலத்தின் மத்தளவி சித்திரங்கண் டத்தகைதாங் கற் பா னன்றே, சித்தமதில் வாணனுநந் தியுமருள்பூண் டவராய்வெண் சிலம்பூ டின்னஞ், சுத்தமதி வைத்தசடை யத்தனைநற் பத்திசெய்து துதிக்கின் றரே. (௩௬)

வீணைகானஞ்செய்த பொழுது பாடியது.

* மந்தரனேர் புயத்தன்முத்து ராமலிங்கச் சேதுபதி மதுர கீதச், செந்தரமோர்ந் தியக்கரெலாந் தினமுமய லுற்றதன்றித் திருந்து வீணைச், சுந்தரநா ரதனுமந்த் தும்புருவு மிம்பரிடை தோற்று ராகி, யந்தரமீ தலைந்தனரே லதற்குவமை யெதைப்புகல்வ தறிந்து மாதோ.

ஈற்று சமஸ்தி.

* அஞ்ஞைகளைத் தினந்தினங்கொண் டாடிநனி பாடிமிடி யத னுற் பல்லே, ஞஞ்ஞெயெனத் திறக்காதெற் புரக்குமுத்து ராமலிங்க நரேந்த்ரா கேண்மோ, கஞ்ஞையுறு சிறியர்பெரி யோரையும்வெல் குவர்விதியார் கடப்பா ரோர்கான், மஞ்ஞையிடற் றட்புகுந்த முண் ளெயிற்று வல்லரவ மகிழுந் தானே. (௩அ)

வேறு.

வரிவளை பூணுவர் கைகாட் டுவர்†நடை வாய்ந்திருப்பர்
சரிபெறு மத்தளத் திற்கிணங் காதிற்பர் சாந்துகொள்வர்
சுரிகுழல் வேசைய ரல்ல நொடியினிற் சூழ்ந்துசொல்வாய்
விரிகதிர் வேன்முத்து ராமலிங் கேந்த்ர விதரணனே. (௩௯)

†நடை—வழித்திண்ணை.

திரைதரு மெய்யினர் தேம்பி யிளைத்துத் திரிவர்முது
நரையினர் மாலைக்கண் ணூர்பிகக் கூனி நடுக்கமுற்றார்
உரைசெயுங் காலை விருத்த ரலர்‡மதி யோர்ந்துசொல்வாய்
விரைகமழ் தார்முத்து ராமலிங் கேந்த்ர விதரணனே. (௪௰)

* கலைதாவு மானுங் கலந்து வருஞ்சிங் கமுமெருது
மலையாடு மேயு மருந்துமுண் டாமுள் வளர்ந்திருக்கும்
அலைபூங் கொடியொடு தோன்றுமென் சொல்வன மல்ல*விது
சிலைதோய் புயமுத்து ராமலிங் கேந்த்ர செயசிங்கமே. (௪௧)

எலிக்கும் புலிக்கும் சிலேடை.

* பாயுங் கடிக்கும் பசுகருவா டும்புலிக்குஞ்
சாயுங்குன் றிற்றாவிச் சஞ்சரிக்கும்—தூயபுகழ்
தேங்குமுத்து ராமலிங்கச் சேதுபதிப் பாண்டியனே
வேங்கையொரு சிற்றெலியா மே. (௪௨)

சிலேடை.

* மாகந் தனைப்போற்றி வண்மையுற்று வாலிபம்பெற்
றூகுந் தருக்குலவு மற்புதத்தாற்—பாகுஞ்செந்
தேனுமென வோதுதமிழ் தேர்ந்தருள்வே [illegible] ப்பதுரை
தானுமக வானுஞ் சரி. (௪௩)

இதுவுமது.

* பார்க்குள் வளம்படைத்துப் பா [illegible] து.
[illegible] றப் பன்னுங் கலையேந்தி
யார்க்கு மிடியை யகற்றியதாற்—போர்க்குவடி
வேலை செலுத்துமெங்கள் வேலப்ப பூபதியை
மாலே யெனலா மதித்து. (௪௪)

உவமைவிலக்கு.

* கன்னனெனக் கேட்டதன்றிக் கண்டா ரொருவருண்டோ
அன்னதுண்மை யேனு மவனுமிந்த—மன்னுபுகழ்
வேலப்ப பூபனெதிர் மேவிற் கலைமதிமுன்
கோலக் கதிருடுவா கும். (௪௫)

இதுவுமது.

* மேகமிடி பெற்றதன்றி விண்டருவண் டார்க்குதவு
மாகபிலை முட்டுளது மற்றிவற்றை—நாகரிக

‡ மதி—சந்திரன். *விது—சந்திரன்.

உத்தமவே லப்பதுரைக் கொப்பிடுவ தெப்படிநாம்
வித்தைசில கற்றிருந்து மே. (சசு)

உபயார்த்தமுள்ள வித்தைச் சம்பிரமம் கூறியது.

* மலைவின்றி மாதரணி வீணையாழ் யேழுமொரு
வண்ணக் குடத்தடைத்து
வானத்தை யுந்தாண்டி வரைகள்பல வற்றையு
மறைந்தகங் கையிலடக்கி
யலைகின்ற கானக மனைத்தையுங் கைநகத்
தாற்சின்ன பின்னமாக்கி
யற்புதத் திசைபெற் றமர்ந்ததந் திகளையு
மடக்கிவிளை யாடவறிவேம்
கலைதின்று திரிகின்ற கடுவேங்கை யொன்றுண்டு
காய்ந்ததனை வெல்லவகைதாங்
கற்றிலேம் பலர்தமைக் கதியென் றடுத்துமவர்
கட்குமது தெரியவில்லை
சிலைதங்கு புயதுங்க செயசிங்க மெனுநீ
தெளிந்தருள் செயிற்செப்பலாஞ்
சீலக் குணாலமமா வேலப்ப ராஜகன
தீரபர தாபமுகிலே. (சஎ)

*வண்டனந்த மதப்பயல்சம் மதப்படிதுன் மதத்தொடுதா மதமி லாதென், வண்டனந்த னிலமபமைத்து வருத்தியதாற் கருத்துருகி மயலி னுற்று, வண்டனந்த னையுமறந்தேன் மலரணையி லெனைமருவ வருவாய் கீத, வண்டனந்த முறைசெழுந்தார் மணிமார்ப மானுவேல் மதிவல் லோனே. (சஅ)

* பலக்குமுத மலர்த்துமதிப் பாகிகதிர் தூவியெதிர் பகைக்கு மேன்மேற், பலக்குமுத தியினுலிவிற் படைமதனப் பயல்கணை தைப் பதுகொங் கைக்கும், பலக்குமுத நாட்சொனசொற் படிதவறு தெனையினிக்கண் பார்கற் றோர்க்குப், பலக்குமுத வருட்குணவிற் பனமானு வேலுசித பாக்ய வானே. (சகூ)

* தாசிலதி நமதுதுரை தாமமெனிற் றடுப்பள்வையச் சகியாள் காண்மா, தாசிலதி சையுங்குழலுஞ் சரியமுலை தடித்ததெனைத்

தழுவ லாகா, தாசிலதி னமதாகத் தயவுபுரி யாதென்ன தமிழ்ச் செங் கோட்டுத், தாசிலதி காரசெய தரமானு வேலுசித சரச வானே. (௫0)

* மாருதன லாவேனு மாரதிர வர்சரத்
தாருவன காமான தாவேரு—மேருவே
தானமா கானவரு தாதரச வாரதிர
மானுவே லான்தரு பா. (௫௧)

வேறு.

* அற்பர்கொடைக் கோடைக் கலுத்துலர்ந்த வாணரெனு
நெற்பயிரெ லாந்தழைக்க நேருமே—கற்பகம்போற்
கீர்த்தி பரவுங் கிளைமானு வேல்மகிபன
வார்த்தை யமிர்த மழை. (௫௨)

* உற்றார்க் கமிர்த முறாதார்க் கிடியேறு
கற்றார்க் குதவுங் கருணைமுகில்—மற்றார்க்குஞ்
சீமா னெனத்தாசில் செய்துபுவி காக்கின்ற
மாமானு வேல்மன்ன வன். (௫௩)

சதுரங்கபந்தம்.

* நேம னதிவித காம னனைவர்க்கு நேயகம
சேம சகாயன் சிதபுஞ்சன் சீர்சின வாவிசய
தாமன் மனதிற் சலிககா னருட்கல்வி சால்பினொடு
மாமணி நேர வளர்மானு வேல்கன வாசகனே. (௫௪)

விதண்ட வாதிகளான சில மூர்க்கர் வந்து மொட்டைத்தலைக்கும் மயிர்த் தலைக்கு மிணையாக வோர் விருத்தம் கலித்துறை வெண்பா வியற்றுதி ரென்று வலிந்தறைகூவி விடுத்த கடாக்களை யக்கணமே யெதிர்த் தழிக்கும்படி தொடுத்த விடைகள் வருமாறு.

* குலவுசடை பில்லிசடைக் குச்சுராக் கடிதாங்கிக் கொண்டை காட்டி, புலவுபரி மளப்புகைகொண் டுளங்கவரு மதுபெண்கட் கொழிந்த தாகிற், பலருமுண்டை யெனப்பழிக்கப் படுஞ்சகுனத் தடை யாமிய பண்பா லிந்த, வுலகின்மயிர்த் தலைக்கிணையோ வூனமொட்டைத் தலைபகர்வீ ருணர்விலீரே. (௫௫)

*உயிர்த்துணை மாத ருவப்ப மணந்தந் துளமுருக்குஞ்
செயிர்த்தவொன் னார்பணி சீர்மானு வேல்வளர் தேசமதி
லயிர்த்திடக் கட்டை யெனத்தோன் றிடாதழ காகியநன்
மயிர்த்தலைக் குச்சரி யாமோமொட் டைத்தலை வம்பர்களே. (௫௬)

* வேலைநிகர் சீர்மானு வேலுத் துரைநாட்டின்
மாலைகொளுஞ் சம்பங்கி வாசமிகுங்—காலைதொறு
நெட்டைத் தடியர்களே நீல மயிர்த்தலைக்கு
மொட்டைத் தலைசரியா மோ. (௫௭)

வேறு.

*சொல்லைக் காட்டி யருத்தத்தைக் காட்டிநற் றுதியைக் காட்டிச் சுளிக்கு முனுத்தர்பாற், பல்லைக் காட்டிபே யானலை யாவகை பலனைக் காட்டிப் பயந்தனை யோட்டுவாய், கல்லைக் காட்டி யிளநீரைக் காட்டி மாங் கனியைக் காட்டிக் கலசத்தைக் காட்டிப்பொன், வல்லைக் காட்டி வளர்முலை யார்புகழ் மானு வேல்விசு வாசசக் ரேசனே. (௫௮)

சில அரிய பெரிய சித்திரகவிகளுக்கு இலக்கணம்.

சதுரங்கபந்தம்.

* அறுபத்து நாலறுபத் திரண்டைம்பா னாற்பானான்
கடுத்தமுப்பத் தாறிருபத் தாறிருபத் திரண்டு
பெறுமக்க ரங்களொன்று முதலேழு வரைநிகர்ப்பப்
பின்னுமைம்பத் தேழைம்பான் மூன்றொருநாற் பான்மூன்
றுறுமுப்பத் தைந்திருபத் தொன்பதுபன் னேழ்பதினைந்
துளவெழுபத் திரண்டுமுத லெழுபத்தெட் டீறு
மறுவற்று வரப்பாடுங் கவிதைசது ரங்கபந்தம்
வழுத்தியவஃ தெழுபத்தெட் டெழுத்தின்முடி குவதே.

துருவக்குறிப்பு.

{1+64—2+62—3+50—4+44—5+36—6+26—7+22
15+78—17+77—29+76—35+75—43+74—53×73--57+72}

மொத்த எழுத்துக்கள் 78.

அஷ்டநாகபந்தத்தின் இலக்கணம்.

* முப்பத்து நாலுக்கு நாலாகு மாறுக்கு
முப்பதிற் றெட்டாகுமாம்

மொழியுமெட் டுக்கிருப தாம்பன்னி ரண்டுக்கு
மூவாறி லக்கமெனலாம்
ஒப்பற்ற விருபத்தி ரண்டுக்கு நாற்பதா
மோருமிரு பத்துநாலுக்
குயருமுப் பதஇரண் டிருபதோ டாறினுக்
குரியநாற் பத்துநாலாம்
தப்பற்றி டச்சிறந் திடுமுப்ப துக்குந்
தழைத்தநாற் பத்திரண்டாம்
சார்தர வுரைத்திட்ட விவ்விலக் கங்களிற்
றவறுமெ லக்கரங்கள்
செப்பிநாற் பதசெொன்ப தாமெழுத் திற்செய்த
செய்யுளெண் ணுகபந்தஞ்
செங்களப குங்கும மணங்கமழ் தரும்படி
திரண்டிலகு கொங்கைமாதே. (சுO)

$\left\{\begin{matrix} 4+34, 6+38, 8+20, 12+18, \\ 22+40, 24+32, 26+44, 30+42. \end{matrix}\right\}$ மொத்தஎழுத்துக்கள் 49.

நூதன விசித்திரவுபய நாகபந்தத்தின் இலக்கணம்.

* எட்டினுக் காறுகு மெண்ணோந் தினுங்கே
யினையந்தபதி னுலதாகும்
ஈரெட்டி னுக்குவரு பதினெட்டு நாலைந்
தினுக்குநாற் பத்தாறுதான்
தொட்டவிரு பத்திரண் டெண்மூன்று நாலேழ்
துலங்குமிரு பத்தாறதாந்
தோன்றுமெண் ணூறுக்கு முப்பதாம் பத்தைந்து
தூயமுப் பத்திரண்டாம்
திட்டமுறு முப்பத்து நான்கினுக் கைம்பத்
திரண்டதா மாறேழுடன்
செப்புநாற் பத்தினு லைம்பதிற் றெட்டுடன்
சேர்வதோ ராறுபதாகும்
கட்டமில் லாமலறு பத்துமூன் றக்கரங்
களையுடைய வெண்பாவிது
கமழ்விசித் திரவுபய நாகபந் தனமாங்
கனிந்துருகு செஞ்சொன்மாதே. (சுக)

துருவக்குறிப்பு.

{ 6+8, 14+40, 16+18, 20+46, 22+24, 26+28, 30+48, 32+50, 34+52, 42+44, 58+60. } மொத்தவெழுத்துக்கள் 63.

ஸ்ரீமாந் பொன்னுச்சாமித் தேவரவர்கள் விருப்பத்தின்படி கூறிய யோகினியறியும் விருத்தம்.

* நிறைமதிமுற் றிதிதொடுத்து நிலைமகவான் குபேரனங்கி நிருதி கூற்ற, மறைபுனலுக் கிறைகாற்றீ சானியன்மற் றிவர்திசை விண் ணவனி யாக, முறையிருக்கும் யோகினிதன் முன்மரணம் பால் பிணிமுன் முதிர்சீர் வெற்றி, தறைவிணிற்பின் மத்திமித் தன்மை கண்டு வழிநடக்கத் தக்க தாமே. (சுஉ)

பேரையூர் வித்துவான் லிங்கையரவர்கள் சந்தித்தபோது அவரது வித்வ சாமார்த்தியத்தை மெச்சிக்கூறியது.

* மலைத்தவனு மலைத்தவனு குவன்சரத நாமகனு மகளே யென்பள், கலைத்திறமைக் கம்பனுமோர் கம்பமென நிற்பனெனக் கண்டா லென்று, விலைக்கமுரு கற்பகக்கா விந்திரற்கு வெண்கவரி யிரட்டும் பேரை, நிலைத்தபுகழ் வீரசைவ லிங்கையமே சிகவுனக்கார் நிகரா வாரே. (சுங)

அப்போது லிங்கையரவர்கள் சொல்லியது.

* காம்பழுகாய் மிருதுவுற்ற தோளியர்கள் மதனனிலக் கணங்க ளாதி, யாம்பழமை யானபதி னெண்புரா ணப்பொருளு மாய்ந்து தேர்ந்து, தாம்பழுதி பேயெவருஞ் சபாஷெனமுத் தமிழ்விரிக்குந் தகையை வாய்ந்த, மாம்பழவா ணனையொருபோ தென்னினுங்கண் டோர்க்கமுத வாக்குண் டாமே. (சுச)

வேறு யமகம்.

* கற்றடங்கா வாணருளக் கருவமெனப் பூரிக்குங் களபக் கொங்கைக், கற்றடங்கா மனகுகொடுங் கணைபொறுக்கு மோசிறி யேன் கலவிக் கிங்கேக், கற்றடங்கா தவித்தமின்னார் களுக்கயர்க்கே னெனைக்காப்பாய் கலியின் றீத, கற்றடங்கா வதிர்சமுக கோபால சாமியெனுங் கருணைக் கோவே. (சுரு)

தென்றற் சிறப்பு

* ஒத்தகுணத் தன்ப னூரத்துறங்கு காதலிக்கு
மெத்தவுருத் தந்தை விளைத்ததே—சுத்தநிடக்

காமனம்பா னுள்ளங் கலங்கும் புதுக்கமலப்
பூமணங்தோய் தென்றற் புலி. (சுசசா)

உபயார்த்தமுள்ள பிராதுவிண்ணப்பக்கவிகள்.
(தாராபுரம் தாசில்தாரவர்கள்மீது)
ஆசிரியவிருத்தம்.

சீரிலகு தாராபு ரந்தாலு காதாசில்
செயுமகா ராஜராஜ
ஸ்ரீகண்ய பார்த்தசா ரதிமுதலி யாரவர்கள்
திவ்யசமு கத்தினுக்கு
நேரிலெழு திக்கொண்ட விண்ணப்ப மென்னெனில்
நேற்றிராப் போதுகுப்பான்
நெடுநாட் குறிப்பினு லேயென தகத்தெய்தி
நிறையுடைமை யைத்திருடினுன்
காரிய மெவர்க்குந் தெரிந்ததே மச்சமுங்
கைக்குள் ளிருக்கின்றதாம்
காண்படுதெளி தல்லவா ரண்டிற் பிடித்திடுதல்
கடமையினி லாவுமுளதாற்
கூரிய பழங்குற்ற வாளிகளு முதவியிக்
கொடியதுஷ் டனையடக்கக்
கூடா விடிற்சோர குணமொடுங் காதுதயை
கூர்ந்துர க்ஷித்தருள்கவே. (சுசன)

பழநித் தாசில்தாரவர்கள்மீது.

* வளமலி பழநித் தாசில்தா ராக
வளர்மகா ராஜரா ஜஸ்ரீ
மாதவ ராய ரவர்கள்முன் னிலையில்
வழுத்துவிண் ணப்ப மென்னெனில்
களவினன் சொக்கத் தலைவனென் பவனொருவன்
...ப்பய லாகவந் தெதிர்த்தான்
கடியகுட் டையுந்தா னுடைப்பனுந் தகப்பன்
கைவிலங் கினைமுறித் தவனும்

உளமனை தோறும் புகுவனுங் காண
வொணுதவ னுமவன் செய்தி
யொன்றல வென்றன் தனமுடிப் பவிழ்த்தா
னுற்றநா ணயமெலாங் கவர்ந்தான்
அளவையில் வயிரக் கற்பையுங் கொள்ளை
யடித்தனன் சாக்ஷியுண் டனேகம்
அடுத்திடு சமன்சேர்த் தவைகளை விசாரித்
தமுல்செலுத் துவதுமை தருளே. (சாஅ)

பெரியகுளம் தாசில்தாரவர்கள் மீது.

* மகராஜ ராஜஸ்ரீ தாசில்தா ரிருளப்ப
மதியூகி தனதுதிவ்ய
வரசன்னி தானத்தி னுக்குவந் தனமொடு
வரைந்துகொள் பிராதென்னெனிற்
பகர்வாதி கன்னியெதி ரிகள்காம னென்றுகண
பதியிரண் டறிசாட்சிகள்
பார்த்திட்ட மூன்றொன்று சந்தன மிரண்டுமறு
படிசொக்க லிங்கமூன்று
மிகவாதி யாமென்னை முதலாவ தெதிரிதடி
விசையினுல் வாட்டுகின்ற
வேளையி லிரண்டாவ தெதிரிகர மதனுல்
வெதுப்பியது கொஞ்சமன்று
திகழ்காய மேயுண்மை தெரிவிக்கு நகைகள்சில
சிதறியன கொள்ளைகூடச்
சேர்க்கைசா க்ஷிகள்விசா ரணைசெய்தெ திரிகளைத்
தெண்டிக்க விதுசமயமே. (சாகூ)

பழநி சிரஸ்தார் சுப்ரமண்ய அய்யரவர்கள் மீது.

மார்க்கமதி லொருவேடன் வல்லமையா லெனையெதிர்த்து
வளைபூ ணுடை, சோக[illegible]யொடு கொள்ளையிட்டான் சிக்குவதோ
வரிதுதுப்புத் திறத்தான் மெல்ல, மூர்க்கனெனு[illegible]வனைவரன் முறை
யடக்கி யென்குறிப்பை முடிக்க வேண்டுந், தார்க்களப புயசிரஸ்த
சுப்ரமண்ய கண்யனெனுஞ் சரச மாலே. (எ

சிரஸ்தார் இராமசாமி அய்யரவர்கள் மீதியற்றிய பிராது விண்ணப்பங்கள்.

* இகல்கருப்பத் தேவன்மகன் காமத் தேவ னென்னிலத்தி னூடுதன்கா லினைநே ரோட்டி, மிகமதர்த்திட் டேறணையைத் தடுத்து நீரை விலக்கிவரம் பையுமழித்தான் விசாரித் தன்னோ,னகமொடுக்கிச் சுகபோக மெனக்கு வாய்க்க வமூல்செலுத்தி யெனைரக்ஷித் தருள வேண்டும், சகமதிக்கப் பழநிதனிற் சிரஸ்தா ராகித் தருமநடாத்தியராம சாமி மாலே. (௭௧)

நாவலர்போற்றும் நடுவெழுத்தலங்காரம்.

* மையனுபரி மதிபரிதி வடங்கள்விபூதி யலர்தூற்ற
வலிதுதரணி பகைபுணரி மனதுபதடி கொடிதுபுய
லையவனைமார் தொழில்பவுரி யாகவருந்து வாட்குமுன்பின்
னடுத்தபேர்க ணடுவுநிலை யறிவித்திடுதல் வேண்டாவோ
செய்யவிடைசோர் வனவிரண்டுந் திரண்டுமதனை யன்பைநன்றைத்
தீதைமகிழ்வைக் கவிலையெனைத் திரத்தையெனநின் னுருத்தொழுமித்
தையறனைநீ கலந்துகொஞ்சித் தழுவச்சமய மிதுகண்டாய்
தர்மப்ரபுவா கியராமசாமீராஜ தயாநிதியே. (௭௨)

சதுரங்கபந்தனம், கலித்துறை.

* திங்க ளதனை யடர்முக மாது சினேகியணி
கொங்கியல் போதினை நேர்தன மீதிற் குரோதமென்னோ
தங்கி வளரு மணைமேற் கவின்மின்னைச் சாரிணிமா
மங்கை திகழும் புயராம சாமி வரோதயனே. (௭௩)

இயற்றமிழ்வலர்புகழெழுத்தலங்காரம்.

பதினான்குசீர்க் கழிநெடிலடியாசிரியம்.

* அய்யநீ யனுகூர் மவுத்திக புரமென் றறிந்ததி லேழுநான் கனையா, ளங்கிலே மாற்றெட் டகன்றபின் னுரைசோர்ந் தாதியிற் றயலொடர் தமதாய்ச்; செய்யவைந் தேழெட் டணிபுக முதனூற் செறிவினுல் வருமெழுத் திரட்டத், தீப்புழுப் போன்றைந் தெட்டிகழ்ந் தாறு திகழநிற் பாதிநான் கினைத்து; வெய்யவன் கதின்முன் விலக்கி னயந் தேற்றி மேற்றன தவகையே விரும்பி, மிகமெலிந் தனவிங் கைந்துநான் கவட்கு வேறெவ ருளையல தருள்செய்; துய்யசெங்

தமிழின் சுவையெலாந் தெரிந்த தொண்டை மண்டலாதி குலத்துச்,
சுயகுண நிதியா கியபெருந் தகைமைச் சுப்பரா யேந்திர துரையே.

சமஸ்தி 7 கவரிவரும்படி யமகம்.

*சங்கவரி சுதன்காமந் தழைக்கவரி சிலைவளைத்துத் தையல் நாணச்
சங்கவரி னென்செயுமெய்த் தவங்கவரி வளைக்கலந்து தழுவு நூற்ப்ர
சங்கவரி யகவீசர் தமக்கவரி தயப்படிகுஞ் சரம்பொன் மாது
சங்கவரி சிவிகையருள் தக்கதுங்க சொக்கலிங்க தளசிங் கேறே. ()

வெண்பா.

*மாம்பழத்தைப் போலு மதுரமிகு மாம்பழஞ்சொல்
லாம்பழமை கேட்டுமுடி யாட்டிலனென்—நாம்புதுமை
யின்கா சினிபொறுத்தா மென்னுமோ வென்றிருந்தான்
மன்காம ராஜயபூ மான். (௭௬)

அப்பாச்சி பிள்ளையவர்கள்மீது.

* அப்பாச்சியம்போலவாகினுந்தாகித்தடைந்தார்க்கருளார்பாற்போ
யப்பாச்சி தறிவீணி லலைபுலவீர் பிறமாத ரருமைக் கொங்கை
யப்பாச்சி கரப்புயன்கா ரணையான்சங் கரமூர்த்தி யருள்சே யெங்கள்
அப்பாச்சி யூகியைக்கொண் டாடுமின்கா ரியசித்தி யாகுந் தானே.()

சாமானிய வசனங்களையே செய்யுளுருவாகச் சொல்லுந் திறமைவாய்ந்த பிள்ளையவர்கள் கவிச்சிங்க நாவலரவர்களைப் புகழ்ந்துசொல்லிய வசனம்.

கம்பனும், ஒட்டக்கூத்தனும், புகழேந்தியும், ஔவையுங், காளமேகமும், படிக்காசுத் தம்பிரானும், பரஞ்சோதி முனிவனும், சிற்றம்பலமும், வெண்பாப்புலியும், வாலசிம்மமும், மற்ற வித்வான்களும், பழனி மாம்பழக்கவிச்சிங்கத்துக்கிணையா? உலகத்தாரே.(௭௮)

விருத்தம்.

* கம்பனுமொட் டக்கூத்த னும்புகழேந் தியுமவையுங் காள மேக
மும்படிக்கா சுத்தம்பி ரானும்ப ரஞ்சோதி முனிவ னுஞ்சிற்
றம்பலமும் வெண்பாப்பு லியும்வால சிம்மமுமற் றவித்து வான்க
ளும்பழனி மாம்பழக்க விச்சிங்கத் துக்கிணையா வுலகத் தாரே.(௭௯)

அப்போது கவிச்சிங்கம் சொல்லியது.

* அருமணலைக் கயிறுதிரித் தாங்குலவ வாசகமே யமைபாட்
டாகத், தருநினதுத் தமமனைமைத் தரத்தைநினைக் குந்தொறுமாக்

சரியம் யார்க்கும், வருமொருவர்க் கெளிதலவிம் மார்க்கமம்மா கலச முனி வணங்குன் றற்றன், கருமுகில்கற் பகமலர்ப்பூங் காவொத்த வாபத்துக் காத்த வேளே. (அ0)

பிள்ளையவர்கள் சொல்லியது.

* பயங்கொண்டு கருத்துநிலை மாறிமதி தோன்றாத படிக்கு நின்று
நயங்கண்ட வாக்கின்றி போடுமுகி லுனக்குநிக ராகா நற்ச
மயங்கண்டு தீரதிற மோங்கறிவின் பப்ரசங்க மதுரச் சொல்லாற்
செயங்கொண்டுகவிமாரிபொழியுமாம்பழப்புயலாஞ்சிறப்புற்றோனே

இருவர்களுக்கும் வசனரூபமான கவிகளால் நடந்த சம்பாஷணைகள்.

பிள்ளையவர்கள் சொன்னது.

முன்பு போசன் சமுகத்திலிருந்த காளிதாசன் போலிலை யெந்த வித்வானும் என்பார்கள். நல்ல புத்திமான் மாம்பழக்கவிச்சிங்கத்துக் கொப் பிலையென்பேன் நிச்சயமது.

வெண்பா.

* முன்புபோ சன்ச முகத்திருந்த காளிதா
சன்போ லிலையெந் தவித்வானு—மென்பார்கள்
நல்லபுத்தி மான்மாம்ப ழக்கவிச்சிங் கத்துக்கொப்
பில்லையென்பேன் நிச்சயமி து. (அ௨)

கவிராயரவர்கள் வசனம்.

நமது துரையவர்களைக்காண வின்றைக்கு மனசு துடிக்குது கண்டு முறையிட்டுக் கொள்வதுசிதமோ கூடாததோ சொல்லுங்கள் பிள்ளை யவர்களே.

வெண்பா.

* நமது துரையவர்க ளைக்காண வின்றைக்
குமன சுதுடிக் குதுகண்—டுமுறையிட்டுக்
கொள்வ துசிதமோ கூடாத தோசொல்லுங்
கள்பிள் ளையவர் களே. (அ௩)

பிள்ளையவர்கள் வசனம்.

அய்யா கவிராயரவர்களே தங்களுக்குச் செய்யுமரியாதி விஷயத்தில் அய்யரும் நானுஞ்சொன்னோம் நம்மெசமானுஞ் சரியென்று ஒப்பிமனசுஞ் சுமுகமாச்சுது.

ணரறங் கொள்ளகொண்டு மிலனெனப்போய் யனுதினமு நவில்வாய்
நீயுன், முன்னரஙீ துரைப்பவரை முனிவாயோ முனியாயோ மொழி
வாய் நீயே. (எ)

* கூடுபுகழ் மலிதிருவா வடுதுறைச்சுப் பிரமணிய குரவ ரேறே
பீடுமலி வளக்குளந்தை வேதநா யகமேகம் பெய்யும் பாமுன்
பாடுதிற லாளர்பா வுயிர்முனங்குற் றியலுகரம் படும்பா டெய்தும்
நீடுதிற னின்புகழ்முன் னேனையோர் புகழ்போலா நிகழ்த்த லென்னே.

* வாயுதவு மினியபத நுகர்ந்தறிவு பொருந்திடலான் வானந் தாங்கா
தாயுதவு கருணையினுங் கையுதவு மினியபதம் தாவி யார்ந்து
வேயுதவு முடல்பெருத்த லான்மண்ணுந் தாங்காது மெலியா நிற்கும்
மீயுதவு புகழ்வேத நாயகமா லிளைப்பாற்றும் விதமெற் றுமே. (அ)

* மாமேவு புகழ்த்திருவா வடுதுறைச்சுப் பிரமணிய வள்ளற்
கோமான், பாமேவு சந்நிதியிற் பாக்கள்பல செய்துடனே பயிலச்
செய்தான், நாமேவு வேதநா யகசுகுணன் சான்றெவரோ நவிற்றி
யென்னில், கோமேவு பலர்புகழ்கு ரியமூர்த்தி மன்னனிது குறிக்
கொள் வீரே. (சு)

மாவாத புகழ்த்தரும மெவ்வுயிர்க்கு மொழுங்கியற்ற வராமை யாலே
நீவாத பலசிலவா வியற்றிவருந் தண்ணளியி னிலைமை பூண்டோன்
ஓவாத கல்வியறி வொழுக்கமா சாரமுத லொப்பி லாதான்
ஏவாத பணிநல்வாக் கியல்வேத நாயகமா வினிது காண்க. (கo)

சுப்பிரமணிய தேசிகர் பேரிற் பாடியன.

* உரவுபொலி மறைமுடிவாஞ் சிவக்கொழுந்தைப் பராநந்தத்
துவாவை நாளும், கரவுதவி ரன்பருளத் தகலாம லமுதூற்றுங்
கருணை வாழ்வைப், புரவுமலி மெய்ஞ்ஞான வாரிதியைத் துறவர
சைப் பொருவி லாத, பரவுபுகழ்த் துறைசையிற்சுப் பிரமணிய குரு
மணியைப் பரவி வாழ்வாம். (கக)

* திருமணியை நிறத்தமைத்த நீன்மணிமெய்ம் மால்பிரமன்
றேடிக் காணு, அருமணியென் னையும்பொருளா வாண்டசிந்தா மணி
யன்ப ரகத்தே மேய, ஒருமணியம் பலவாண சிரோமணிகண் மணி
யடிமை யுவந்தார் கண்ணுட், கருமணிவண் டுறைசையிற்சுப் பிரம
ணிய குருமணியைக் கருத்துள் வைப்பாம். (கஉ)

*செல்லார்க்கும் பெருமுழக்க மணமுழக்க மெனமேற்போய்த் திகழ்மா டத்தாற், சொல்லார்க்குங் கழனிகளாற் றொலையாத வளங் காட்டுந் துறைசை மேவிக், கல்லார்க்கு நல்லார்க்கும் வல்லார்க்கு மல் லார்க்குங் கணக்கி லாமற், றெல்லார்க்கு மெய்ப்பில்வைப்பாஞ் சுப் பிரமண் ணியகுரவ னிருதாள் போற்றி. (கங)

* ஒப்புயர்வில் லவன்சிவன்மூன் றும்முடைமை யாலிரண்டு மொ ன்று மேற்றார், தப்பறத்தாழ்ந் தவரென்றோர்ந் தனந்திருவா வடு துறைநற் றவத்து ளார்தம், வைப்பனைய சுப்பிரம ணியக்குரவன் றன்பெயரை வகித்து ளாரை, எப்படியும் விலக்கலின்மற் றிவன் மூன்று மிலனென்றே யியம்பு வோமே. (கச)

* தேடுகயி லாயபரம் பரைத்துறைசை மேயநமச் சிவாயன் ற ன்னைக், கூடுதன்மு னுள்ளபதி னுல்வருமுற் றோன்றலெனக் கொண் டா ரவ்வா, றாடுதவிர் தரக்கொண்டும் பிற்றோன்ற லெனவுங்கொண் டுவக்குங் கோமான், நீடுபெரும் புகழுமைசுப் பிரமணிய குருமணியை நினைந்து வாழ்வாம். (கரு)

* மாமேவு புகழ்த்திருவா வடுதுறைச்சுப் பிரமணிய வள்ள லாய,தூமேவு குரவன்பேர் சொற்றபொழு தென்பிறப்புத் தொலைந்த தம்மா,பாமேவு மிதுகண்டும் பிறப்பொழிப்பா னிவனென்று பலருஞ் சொல்வார், தேமேவு நலந்தெரியென் வாயினையே புகழாத செய்கை யென்னே. (கசு)

* கண்ணுனை மதனைக் கடிந்ததற்கேற் பப்பரப்பாற்
பெண்ணு ளுருச்சுப் பிரமணிய—அண்ணுல்
திருவா வடுதுறையாய் சிற்றடியேற் கின்பம்
மருவா வடுமாற வை. (கஎ)

* பேசு புகழ்ச்சுப் பிரமணிய தேசிகன்பொன்
வீசு கழற்கடியேன் விண்ணப்பம்—நேசம்
வருதிரு மாளிகைத்தே வன்பூசை யாயே
கருதுபந்தி யாதல்வழக் கம். (கஅ)

* முருகார்பூந் தடஞ்சூலவு மாவடுதண் டுறைத்தலத்து முதல் வா தெய்வத், திருநாவுக் கரசர்முதன் மூவர்தமிழ்த் தேனுண்டு தெ விட்டு நிற்குத், தருநாவுக் கினிமையிஃ தெனக்கொடிமூந் திரிக்கனி

வெண்பா.

* அய்யா கவிரா யரவர்களே தங்களுக்குச்
செய்யு மரியாதி விஷயத்தி—லையருநா
ளுஞ்சொன்னே நம்மெசமா னுஞ்சரியென் றெப்பிமன
சுஞ்சு முகமாச் சுது. (அச)

கவிராயரவர்கள் வசனம்.

தாங்களறியாத சமாசாரமென்ன உத்தரவு வாங்கி யென்னை ஊர்க்கனுப்பி வைப்பதற்கெல்லாங் கிருபைதான்வேண்டும் மானேஜரவர்களே மெத்த நம்பினேன் வீண்பேச்சல்ல நிசம்.

வெண்பா.

தாங்களறி யாதசமா சாரமென்ன வுத்தரவு
வாங்கியென்னை யூர்க்கனுப்பி வைப்பதற்கெல்—லாங்கிருபை
தான்வேண்டும் மானே ஜரவர்களே மெத்தநம்பி
னேன்வீண்பேச் சல்ல நிசம். (அரு)

பிள்ளையவர்கள் வசனம்.

நமது பிரபுவிடத்தினிலே மருமசங்கதி முழுதும் பேசி முடிவு செய்திருக்கிறேன் அதிக சந்தோஷந்தானே அய்யா கவிராயரே.

வெண்பா.

நமது பிரபுவி டத்தினி லேம
ருமசங் கதிமுழு தும்பே—சிமுடிவு
செய்திருக்கி றேன திகசந்தோ ஷந்தானே
அய்யா கவிரா யரே. (அசு)

பழநித்தானூகா ஓவர்சியர் ஆசீர்வாதம் பிள்ளையவர்கள்மீது.
உபயார்த்தமுள்ள விருத்தம்.

இவ்விட ரோட்டு மராமத்துப் பார்த்த தினிதனை கட்டநீரிசைந்தால், ஒவ்விய குளமுந் தெற்குவாய்க் காலு மொழுக்கமும் போகமு மோங்கும், வெவ்விய லாற்றுப் பாலவே லையும்பின் விசித்மாந் தாமத மென்னே, மவ்வலங் குழலார் மதனிக ராசீர் வாதசற் குணசிகா மணியே. (அஎ)

பாகற்பட்டி மிட்டாதார் ரங்கசாமிபிள்ளையவர்கள்மீது.

விருத்தம்.

* கடலினெழு மமிர்தனைய கவியருமை யறியாமற் கடிநாய் போல
மடமடெனா வாய்திறக்கும் மட்டிஇலுத்தப் பயல்கள்கண்டு மனசு ந
திடநடன துரகதமுந் திரவியசம் மானமுநந் திறத்துக் கேற்ப [ண
வுடனருளி விடைதருவா யுசிதரங்க சாமியெனு முயர்வு ளோனே.

கலித்துறை.

*கனக்கொடை யாளன் கவிரங்க சாமிமெய்க் காமன்வெற்பி
லெனக்குள செல்வ மிரண்டு குடத்தன மென்பதனாற்
றனக்கன மேநிதம் பத்துப் பணந்தரச் சாற்றுகின்றான்
சினக்கதிர் வேல னிடையிளைப் பாமெனத் தேர்ந்திலனே. (அசு

இதுவுமது.

*தரைப்பொலி தெய்வத் தருரங்க சாமித் தயாளன்வெற்பில்
விரைப்புரி வார்குழன் மின்னனை யீரிந்த வேளையுங்க
ளுரைப்படி யேமுத்தம் வேண்டிய மட்டு முதவுவன்பெற்
றரைப்பண நீர்தரச் சம்மதி யாத தறிவின்மையே. (௬௦

அஷ்டநாகபந்தம். வெண்பா.

*வாராவு தேதோ மயிலே சினமேது
சீரார்ருந் தூது செலேகாம—நேராகங்
காயு மயநேரா காதேநன் னேமகம
தூயரங்க சாமி துரை. (௬௧

வண்ட பொம்மைய நாயக்கரவர்கள் மீது வாத்தியங்களாக
வமைத்த துறைக்கவி.

*சிறுபறைமல் லரிபம்மை துத்தாரி பூரிகுழற் சின்னம் பேரி
யுறுமிடங்கா கஞ்சரிசங் திரவலைப முரசுசங்க முடுக்கை காள
மறுகியதாற் புத்திதத்தி மத்தளங்கைத் தாளமயல் மாற்ற வேண்டுந்
தறுகண்மரு வலர்பரவுஞ் சரணுடைய பொம்மேந்த்ர தளசிங் கேறே.

இதுவுமது ராகங்களாக.

*பூரிகன காம்பரியி ஞேடுபட மஞ்சரிகாம் போதி தோடி
யாரபிநா மக்கிரியை மோகனம ஞேகரிகல் யாணி தேசி

சீரியமு காரிமத்தி மாபதிஸ்திரீ ராகவகை தெரிதல் வேண்டுங் [னே.
கூரியபன்னாட்டையுங்கைக்கொண்டவண்டபொம்மேந்த்ரகுணபூமா
ஆயுதங்களாகக்கூறிய வெண்பா.

*சக்கரஞ்சூ லங்குந் தளமழுக்கோ டாலிகதை
தொக்ககணை வில்வடிவாள் துப்பாக்கி—மிக்கசெழுஞ்
சஞ்சாலி பீரங்கி தானு மிவள்முகம்பா
ரஞ்சாத வண்டபொம்மை யா. (கூச)

பட்சிகளாகக்கூறிய வெண்பா.

*மாரியன்ன மஞ்சனத்தி வாவலுள்ளான் வண்டிகவு
தாரிகரு டன்குருகு தாராபோய்—நாரையுறுந்
தூக்கணத்தான் கொண்டலைத்தான் சூழ்வானம் பாடிமயில்
காக்கைவண்ட பொம்முதுங்கா கா. (கூரு)

சடைமுடியென்னும் பெயர்கொண்டவோர் கணிகைமாதின்
நடனகீதத்தைப் புகழ்ந்து பாடியது.

*படைவிழிகோங் கரும்புமுலை மயிற்சாய லன்னநடை பாலின்
சொல்லாள், இடைதுவளக் கனநயதே சிகமெனுமோர் பரதவிசை
யிதற்கொப் பாக, விடையுடையோன் றில்லையிலா டியதைநிகர் யாவ
ர்களும் விரும்பி மெச்சச், சடைமுடியி னடங்கண்டே யூர்வசிவா
னுலகமதிற் றுன்சென் றுளே. (கூசு)

வேறு.

*மலர்வனிதை யருளேுக்கு மதுரிதமுத் தமிழ்வாக்கு மகிழ்
வுண் டாக்கும், பலவளமு நனிதேக்கும் பசிவறுமைப் பிணிநீக்கும்
பகையைத் தாக்குங், கலகமன சினைவீக்குங் கடினபவ விருள்போக்
குங் கருதிக் காக்குந், தலமுழுது மகிழினைய தம்பிமக பதிகருணைச்
சமுகந் தானே. (கூஎ)

அப்பாசாமி பிள்ளையவர்கள் மீது.

*மலரகித வேதாந்த வாரிபடிந் துணர்வெனுஞ்சூல் வயங்கத்
தோன்றிச், சலனமிலா நெடுங்கோடை தணியவின்ப மயிலெழுந்து
தருக்கி யாடப், பலவடியார் மனஞானப் பயிர்தழையக் குணவரையிற்
படர்ந்தெஞ் ஞான்று, மலர்கருணை மழைபொழியு மப்பாசா மிப்
புயலை யடைந்து வாழ்வா (கூஅ)

*தளர்வரிய பற்பலநூற் றடம்பணைவாய்த் துயர்ந்துபத்தி தளிர்த்தெஞ் ஞான்றும், விளைபொறுமை சமந்தமபிவ் விதமலர்ந்து சாந்தநறை வியப்ப வீசித், திளைகருணைத் தேன்பிலிற்றி யன்பர்கட்கின் பக்கனியைத் திருந்த நல்கி, வளர்புகழ்ப் பாசாமி மாலெனுங்கற் பகத்தைநண்ணி வாழ்து மாதோ. (கூகூ)

* காமவிருள் விடியவகக் கடுங்குளிரு மொடுங்கநெடுங் கலக்க மீனுந், தீமதிவெண் மதியுமறைந் திடச்சமய வாதிகள்வாய்ச் செழுஞ்சே தாம்பற், பூமறுகி யடங்கவன்பர் புனிதமுக மனநளினம் பூப்பத் தோன்றும், மாமருவப் பாசாமி வான்கதிரാற் பொருளுணர்ந்து மயக்கந் தீர்வாம். (௪௦௦)

*விகடமதக் களிற்றையடர்த் தகங்கார வாளிசின வேங்கை காமப், பகடிடம்பக் கடமைதர்க்கப் பன்றிநுவே டக்கரடி பவதுன் மார்க்க, வகடடர்பற் பலவிலங்கு மகன்றொதுங்க வெகுண்டெழுந் திங் கதிர்ந்து தோன்றித், திகழ்ந்திடுமப் பாசாமிச் சிங்கமொன் றுண்டிடர்களிநந் திறத்து ருதே. (௪௦௧)

* பொறைநிறைநல் லொழுக்கமுதற் பொருள்செறித்த விவேகவங்கம் பொலிய வூர்ந்து, மறைபகரு நெறிதனைச்சேர் மாண்பினர்க்குக் கதித்தீவை மரபிற் காட்டி, நிறைசுகுண மணிதழுவி நிமலவின்ப வமுதநல்கி நிலைபெற் றோங்குந், தறைபுகழ்ப் பாசாமித் தடங்கருணைக் கடலடைந்து தாகந் தீர்வாம். (௪௦௨)

*உறுனர்பவ நெடுந்தரங்க வொலிக்கடலுங் கலிக்கடலு மொருங்கு நீந்த, மறுவில்பெரும் புணையாய்மும் மயக்ககற்று மிருதசஞ்சீவனியாய் வாய்மை, பெறுமறிஞர் தமக்கணியாய்ப் பிறங்குதிரு வருளுருவாய்ப் பிறழா நீதி, நெறியியலப் பாசாமி நிதியையடைந் தனமெமக்கு நிகர்மற் றியாரே. (௪௦௩)

சீட்டுக்கவித்திரட்டு.

*சீர்கொண்ட கிரணநித் திலமெடுத் தெறிவெண் டிரைக்கருங் கடல்குடித்துச், செறிகொண்ட லைப்பிடி யெனத்தழுவி யதனொலி செவிப்புகுந் திடமருண்டு, செங்கட் கடாக்கவிட் கும்பகெம் பீரதந் திகள்விரைந் தனதிரும்பித், திடுதிடென் றெதிரத் திடுக்கிட்டு வாண

ரத் திரள்சுர தருப்பாய்ச்சொறுஞ், சினைமுகை யுடைந்துகனி சிந்த லின் வழிந்தபைந் தேன்சுனை நிறைந்துமீறித், தினைவிளைத் தருவியா ய்ச் சென்றுபுடை வயல்படா திருப்பரங் குன்றமர்ந்த, சிவசுப்ர மண்யதே சிகனையும் பலவளமை திகழ்கின்ற புல்லத்திவாழ், தெய்வ மா மையனையு மேனுதி யங்காள தேவியையு மினிதுதொழுவாம்;

*கார்கொண்ட குவளைநின் றிமையாது நோக்கக் கனிந்துநதி நிதி யிறைப்பக், கலபமயி லகவுபூஞ் சோலைசூழ தண்டங் கடந்துமார்த் தா ண்டனித்தங், கவனவிச் சித்ரமர கதநிறத் துரகதக் கடுநடை விடா ய்தணிக்குங், காவண நிகர்த்துவான் கடவுளர் தமக்குநிழல் காட்டு தென் பாண்டிநாடாங், கன்னிகண் மணியாய்க் கதித்தசிவ கங்கை முற் கருதிய தபோபலத்தின், காரணத் தாலது சிறப்பவந் நகர்த னிற் கருணைபொறை சீலமன்பு, கற்பறிவு முதலமிர்த சற்குண ம னைத்துங் கலந்தொரு சொரூபமான, காட்சியிற் கெவுரிவல் லவராஜ ஜகன்மோ கனன்வரத் தவதரித்துப்;

* பார்கொண்ட புகழ்முத்து வடுகனு தேந்த்ரதிட பாண்டியனை யீன்றுசினர், பாஞ்சாலர் காம்போஜர் சிங்களர்கலிங்கரும் பத்தாறு தேசத்தரும், பயபத்தி யொடுகப்ப மிட்டடி வணங்கப் பராக்கெச் சரிக்கையென்று, பலர்கட்டி யங்கூற நல்வித்வ ஜனர்துதி பரவமுதிர் வேதஞான, பண்டிதர்க ளாசிர் வதிக்கமந் திரிமார்கள் பக்கத் திசை ந்துசூழப், பந்துக்கள் சேனுதி பதிகள்கரு ணீகர்கார் பார்மணியர் சேர்வைகாரர், பழமைப்ர தானிகள் பணிந்துபணி கேட்பமேற் பனி மதிக் குடைதழைப்பப், பாவாடை மஜகிரி சுருட்டிகுஞ் சங்கவரி பசியபொன் னுலவட்டங்;

*தார்கொண்ட டால்விரு தனேகஞ் சொலிப்பத் தடாரிதவில் நாகசின்னந், தாரையெக் காளந் தவண்டைதுடி கொம்புதத் தாரி சின் னங்கள்கானு, தவளசங் கந்திமிலை முரசுறுமி பூரிகைத் தாள மத் தளமிடக்கை, சல்லரி யுடுக்கைடங் காநகார் தணதண தணுரெ ன முழங்கியார்ப்பச், சத்யபா ரிஷ்டாதி காரரா பார்ட்பீஷர் தனது கட் டளைநடாத்தத், தமிழ்வாணி திருமகள் சதாநட மிடத்தர்ம தா னமெண் டிசைவழங்கத், தங்கநவ ரத்னவிஸ் தாரஜய சிங்கா தனத்தி ருந் தரசுசெய்யுந், தாயெங்கள் காத்தம மஹாராணி செங்கோன்மை சவுபாக்ய நெடிதோங்கவே. (கூ0ச)

*மதிதும்பை பணிகங்கை நதிகந்த மதுபொங்கு மலர்கொன்றை யணிசெஞ்சடா, மகுடமுடி நிமலிரு கமலபத மநுதினமு மனசின் மற வாதநேமா, வாய்ந்ததிரை குமுறுகடல் காய்ந்திடினு முயர்சிகர வடமேரு கிரியசையினு, மருவுதிரி புவனநவ கிரகநிலை பிசகிடினும் வாய்மைதவ றுதபூமா, மதனபுள கிதநளின களபமுலை வனிதையர்கள் மடலெழுது ரூபகாமா, வண்டின மடர்ந்துமது வுண்டுசுதி கொண்டிசை மகிழ்ந்துபயில் கின்றதாமா, மருவலர்கள் படைகண்முது கிடமுடுகி நடனமிட வருவிஜய துரகபீமா, மண்டல நயம்பரவ வும்பர்பய மன்றகல வந்தகோ தண்ட ராமா;

கதிகொண்ட வண்டபகி ரண்டமெண் டிசையுங் கலங்கவெண் கிரிகுலுங்கக், காந்தார பாஞ்சால காம்போஜ குருநிடத காஸ்மீர மொடுகேரள, கர்ஞட சிங்கள கலிங்கமகே கயகுடக கல்யாண சோழ பாண்ட்ய, கனவங்க முதலான தேசத்தி லுள்ளவர்கள் கையிறைச் சன்னைகாட்டக், கனகமணி முரசுதுடி திமிலைதவில் குடமுழவு கருதுமல கோசைதித்தி, கைத்தாள மத்தளஞ் சல்லரி தடாரிசங் கம்பம்பை சொம்புவாங்கா, கானங்க டாரடங் காளாக சுரநகார் கணகணென் றொலிமுழங்கக், கவிகைபல விருதால வட்டஞ் சுருட்டிடால் கதிர்மண் டலத்தளாவ;

விதிகொண்ட கட்டியர் பராக்கெச் சரிக்கையென வேல்வல்லயஞ்சக்கரம், வீரசமு தாடுவளை தடிகுடா ரஞ்சவள மேலான பிண்டிபாலம், வெடிகேட யங்கத்தி முதலாயு தங்களொடு வீரியர்கள் சூழ்ந்துபோற்ற, வெஞ்சின மிருங்கரடி தந்திபுலி பன்றிமுயல் மேவுகடமான்மரைமுதல், மிஞ்சுமிரு கங்களை யடர்ந்தவைகள் குன்றவெதிர் வென்றுதிறல் கொண்டுமீளும், வீரப்ர தாபாவு தாரப்ர பலசமுக மேன்மைமக ராஜயோகா, மேதினியை யாள்கின்ற கும்பினித் துரைமார்கள் மெச்சிய குணளலோலா, மெய்ம்மைசே ராயவார் குல திலக னெனவளர் விலாசசம் பன்னசீலா;

துதிகொண்ட சகலலோ கங்களும் பணிகின்ற சுஞ்ஞான பழனுபுரீத், தூயதே வஸ்தான தர்மகர்த் தாவெனுந் தோர்த்தண்ட ரமணீகரா, சுருதியுணர் புலவர்கவி யிருளகல வருமுதய சுபகிரண வுதன சோமா, துஷ்டரை யடக்குமதி விக்ரம விசக்ஷண சலக்ஷண சௌந்,

டாகரா, சுராமுத மனையகவி விஸ்வகுல மாம்பழஞ் சொற்குநிதி யருளுதாரா, துரைராஜ சிங்கமென் றெவருமெச் சியமகா சூரகெம் பீரதீரா, சுத்ததிட முற்றகுரு வப்பமுகில் பெற்றருள் சுபுத்ரகௌ மாரவீரா, துங்கமரு நீதமதி வெங்கிட சுவாமியதி சுந்தரச பாவுஜித னே. (௧0ரு)

சேலம்ஜில்லா முத்தபுரிசம்ஸ்தானம் ஜமீன்தாரணியவர்கள்மீது இயற்றியது.

*சருவபரி பூர்ணதண் டாயுதக் குமரகுரு சாமிகரு ணைவிலாசம், சரஸ்வதி கடாக்ஷப்ர சன்னவித் யாப்ரபல சாமர்த்ய வித்வசரபம், தர்க்கமிடு வோர்பற் களைப்பொடிப் பொடியாத் தகர்க்கின்ற வஜ்ரா யுதம், சண்டாள ரைப்பிளக் குங்கண்ட கோடாலி சார்ந்தவர்க் கொ ருகற்பகம், ஷட்சாஸ்த்ர பொக்கிஷங் காவ்யக் களஞ்சியம் தவவிஸ் வ குலசிரேஷ்டம், சம்ப்ரம வளம்பரவு தென்பழனி யம்பதி தழை க்கவரு சந்த்ரோதயம், தளசேது பதிசமஸ் தானமுத லெங்குஞ் சபாஷென மதித்தரத்னம், சற்ஜனர்கள் புகழ்மாம் பழக்கவிச் சிங் கத் தமிழ்ச்சக்ர வர்த்திரூபம்;

விருதுபுனை நாமக்கல் முதலாக வொன்பதெனு மிட்டாஜ் ஜமீந் தாரியாய், வீற்றிருக் கின்றமது ரிதவமிர்த குணநிதி விவேகசௌ பாக்யசாலி, மிகுமன்ன தானசத் திரதரும ரட்சகி விளங்குபல தெ ய்வபத்தி, விமலகுரு பத்திப்ரா மணபத்தி தவறுத விசுவாசி சாது சங்க, வேதாந்த சிரவண மஹாராசி போலப்ப விஜயகா ருவதார ன், மெச்சுபத் தினிசுலட் சணசிகா மணிவிதி விடாதமரு நீதசீலி, விற்பனல வுங்கமகி பாலனை ஸ்வீகார விதியிற் படைத்தமாதா, விச்சித்ர முத்தபுரி மேவுமுத் யாலம்மை மேன்மேன் மகிழ்ந்துகாண்க;

கருதலர்கள் பணிராம நாதபுர சேதுபதி கண்யசமு கத்தினிற் போய்க்,கவிமழை பொழிந்தே கவிச்சிங்க மெனமகிமைகைக் கொண் ட தொன்றுதானே, கற்றிடு மனேகபா ஷையகாரர் வண்டிக் கடுக்கன் சரங்கொலுசுகள், கவிகைதண் டிகைகுதிரை வெகுஜோடி சால்வை பொற் கண்டையுரு மால்கள்சோமன், கனகவெகு மதியடிக் கடிநடத் திடநெடுங் கல்விக் கொடிகட்டினேங், கவினுமிச் சில்லாவில் வே ளுக் குறிச்சிவளர் கருணைவே லப்பபாண்டியன், கனபெட்டி வண்

டிமா மிதனினுன் புத்தூர் கனிந்தமா நந்திதுருவங், கமழ்குமர மங்க லங் கொங்கணு புரமெழில் கதித்தவிட் டம்பாளையம்;

அருமைபர வியபால மேடுபா கற்பட்டி யாதியிட் டாதாரர்க, ளனேவோரு நூறுரு பாவினிற் குறையாம லங்கங்கு நல்கினுர்க, ளதுமுழுது நீகேட் டிருக்கலாம் நமதுசெய லறியாத பேர்களில்லை, அன்பிலா தவரிடத் தணுகிடோ மொருவேளை யணுகினுஞ் சும்மா விடோ, மாயிரம் வசைபாடி யாகினுந் தூற்றுவோ மதிலமிந் தவ ரனந்தர், அறிவாளர் தம்மைவலி யத்தேடி வாழ்த்துவோ மதில்வா ழ்ந்த பேர்கள்கோடி, யாதலா லிப்போ தசட்டைசெய் யாமலே யைஞ்ஞூறு பொன்முடிப்பும், அஸ்வமொன் றும்வண்டி மாடிரண் டுங்கொடுத் ததிகீர்த்தி பெறவேண்டுமே. (௧0௬)

மருங்காபுரி சம்ஸ்தானம் ஜமீந்தார் ரங்ககிருஷ்ண முத்துவீரப் பூச்சய துரையவர்கள் மீது.

*பூவார் கடம்பணி புயக்குமர குருபதாம் புயசதோ தயதடா கம், புனிதசரஸ் வதிநடன சாலைகாவ் யாகம புராணசாஸ் த்ராந்த ரங்கம், பூர்வவே தாந்தரத் னுகர மிலக்கணப் பொக்கிஷம் புலவர் திலகம், புனைகற்ப னுலங்கர் தப்ரபந் தத்தமிர்த பூரண விசித்ரகும் பம், போற்றுபழ நித்தலத் தோற்றுமா ணிக்கவற் புதமய நிவாத தீபம், புறமிகழ் பவர்க்குமதி யார்க்குங் குதர்க்கரென் போர்க்குமொ ரு வஜ்ராயுதம், பொல்லாவு லோபகண் டனகண்ட கோடாலி போ தரூர் யப்ரகாசம், புரவலர்கண் மகிழ்மாம் பழக்கவிச் சிங்கமிப் பொழுதுதோந் தெழுதுகடிதம்;

மூவா வளம்பரவு வேழமலை யானெந்த முனைவரெதி ரிடினு மலையான், முத்திரைத் தொழுகுபா லாற்றினு னேழைகளின் முதிர் கொடும் பசியாற்றினுன்,முகிலனைய கருமலைப் பெருமாள் கயற்கணி முழுக்ருபை பழுத்தசெல்வன், மோகனசொ ரூபகம் பளசில்ல வார் வம்ச முதல்வன்முத் தமிழ்விநோதன், மூவகைக் கவர்னர்க லெக்டர் ஜட் ஜிகளாதி மொழிதுரைக ளெவருமெச்சு, மொய்பொழின் மரு ங்கா புரிச்சமஸ் தானமநு முறைமஹா ராஜபோஜன், முத்துவீ ரப் பூச்ச யப்ரபு தவத்தினின் முளைத்தநிதி ரங்ககிருஷ்ண, முத்துவீ ரப்பூச்ச யேந்த்ரகெம் பீரதுரை முகமலர்ந் தினிதுகாண்க;

தேவாதி தேவன திடத்தினிற் பத்தியுஞ் சிவயோகர் பாலி
னன்புந், தினஜனர் மீதினி லிரக்கமுந் தருமத் தினிற்பிரிய மும்
பொறுமையுஞ், சீலமுமு தாரவநு கூலமும் பற்பல சிறப்புங் குறிப்
பறிதலும்; திறமாய்ப் படைத்ததிட சாலிநீ யாதலாற் சிலசெய்தி
தெரிவிக்கிறோம், சேதுபதி யானபொன் னுச்சாமி முன்சமத் திகள்
பாடி விருதுபெற்றோம், சிவகங்கை கோம்பைதே வரமெழு மலைபி
ளசை திகழ்போடி நாயக்கனூர், தேரிடைய கோட்டைகட வூர்புரவி
பாளையஞ் செயராம பட்டினம்பின், சேர்ந்தவூற் றுக்குழி சமத்தூர்
முதற்சமீன் செய்யமிட டாக்களெங்கும்;

பாவா லனேகதண் டிகைபெட்டி வண்டிபொற் பணிகுதிரை
ஜோடிசால்வை, பாலிக்க வயல்மானி பமுமுதவ மற்றசம் பன்னர்
களு முபசரிக்கப், பார்த்தவுத் யோகரை ரோப்பருமி ணங்கவெப்
பதியுளோ ருந்துதிக்கப், பாரெலாங் கல்விக் கொடிகட்டி னோம்நம
து பான்மையறி யாதவர்களியார், பாரதூ ரந்தரா தரமருமை கண்
டுபரி பாலிப்ப தற்குவல்ல, பாண்டியனென் றன்னைநெடு நாளாக
நம்பிப் பசுத்தேடி வருகன்றுபோற், பருவமதி லுனதுசமு கம்புகு
ந் தோந்தக்க படிசகல சம்மானமும், பரிவாய் நடாத்தியொர் சவாரி
யுந் தந்துசுப பலன்மேன்மை பெறவேண்டுமே. (௧௦௭)

இதுவுமது.

* தடமகுட குண்டல சடானனும் போஜகுக சற்குரு வரப்ர
சாதம், சரஸ்வதி விலாசமுத் தமசேது பதிமெச்சு சண்டப்ர சண்ட
வாக்கி, தார்க்கிகர் குடோரிசண் டாளவஞ் சகரைத் தகிக்கின்ற வட
வாக்கினி, சர்வபூ ஜிதமாம் பழக்கவிச் சிங்கத் தமிழ்ச்சக்ர வர்த்தி
[சனது;

முடலைபுடை யடையலர்கள் செவிகள்கிடு கிடுகிடென முகிலி
னு முழங்குவெற்றி, முரசினன் மருங்கா புரிச்சமஸ் தானதுரை
முத்தமிழ் விவேகப்ரபு, முல்லைமலர் மாலிகா பரணக ... ாகும்,
முழுத்யாகி ரங்ககிருஷ்ண, முத்துவீ ரப்பூ ... யது. ... ப புயபூ
கன் மோகனன் மகிழ்ந்துகாண்க; ... ந்தான் மிகு ... ல புவனே
திடநமது மகிமையுந் தரமுங் குறிட ... வான் மச்சுவிட்
குந்த, தீரனென் றனைநம்பி மெத்தநாட் ... யுஞ் செந்தமிழ்ச்

ராஜர்தம்மைச், சிறிதும் வருத்தலா காதுசற் கீர்த்தியே சிதையாத நிசபதார்த்தம், சிலசொலற் கேகாந்த பேட்டிகேட் டோந்தயவு செய்யாத தாலதனையுன்;

இடமதனில் வெளியிடுகி ஞேம்பெட்டி வண்டிமா டிசைசால்வை சோமனுருமா, லேற்றவா பரணமிவை வரிசையா கக்கொடுத் திடுவதன் றியுமருமையா, யிவ்வேளை யாயிரத் தைந்நூறு ரூபாவு மீயவேண் டியதவசியம், இன்றைத் தினம்பயண மாகிலுந் தடையின்றி யேற்படுத் துவதுநலமே. (க0அ)

இராமபட்டணம் ஜமீந்தார் நந்தகோபாலதுரையவர்கள் மீது.

* காலால் நடந்துவரு கவிராஜ ருக்கொரு கணக்குநற் குதிரையேறுங், கல்விமான் கட்கொரு கணக்குவண் டியில்வருங் கவிவலர்க் கொருகணக்குக், கனபெட்டி வண்டியுள வித்வான் களுக்கொரு கணக்குமே ஞவில்வந்த, கவிஞரா னேர்க்கொரு கணக்குச் சிபாரிசுக் காகிதங் கொண்டுகண்ட;

மாலான புலவருக் கொருகணக் குச்சால்வை வஜ்ரக்கடுக்கன் முருகு, வாய்ந்தகெண் டைச்சோம னுருமா லணிந்திட்ட வாணருக் கொருகணக்கு, மற்றுமிப் படியே வழக்கமிப் போதுசில மனிதர்தரு கின்றவரிசை, வயணடம் பங்களை மதிப்பதே யலதுதமிழ் மகிமையா வருமறிவரோ;

மேலான கல்வித் தராதரம் பார்த்துதவு விஜயகர் ஞவதார, விற்பன்ன னீயன்றி வேறொருவ ரிலையென்று மிகவுநினை யேநம்பினேம், மேட்டில்விட் டாலுநின் பெருமையே பள்ளத்தில் விட்டாலு நின்பெருமையே, வீறுகைக் குபசார மேனுனக் குச்சகல விதமுந் தெரிந்திருக்கும்;

கோலாக லக்கீர்த்தி குறையாத செல்வங் கொடுப்பவர்களேயுயர்ந்தோர், கூர்ந்துநல் லோர்தமக் கருளுவது கருடன் குலாவுகாற் கெச்சப ... கனக வனிதைகுடி கொண்டமணி மார்பகுங் குமகள ... ரதி மொழிதுரைக ... ணராம பட்டண சம்ஸ்தான கனநந்த கோபா ... ஸ் தானமது மு ... (க0கூ)

... கொள் வத்திநின் ... நச்செய்யுள் உகஎஅ.

... ம் பீரதுல

## முகவூர்க் கந்தசாமிக்கவிராயர்.

இவர் சேற்றூர் சம்ஸ்தான வித்வான்கள் பரம்பரையில் முகவூரில் 1823-ளு பிறந்தவர். பால்யத்திலேயே திருவாவடுதுறை ஆதீனத்தையடுத்து பெரும்புகழ்வள்ளலாகஎழுந்தருளியிருந்த ஸ்ரீமத் சுப்பிரமணியதேசிகசுவாமிகளுடன் அவ்வாதீன வித்துவான் தாண்டவராயத்தம்பிரானிடம் கல்விகற்றுத்தேர்ந்தவர். சேற்றூர்ச்சம்ஸ்தான வித்துவான்களிற் சிறந்துள்ளவர். புராதனச்செய்யுட்களிற் பல்லாயிரக்கணக்காகப் பாடஞ்செய்து அவற்றைச் சமயத்துக்கேற்ப எடுத்துக்கூறிப் பிரசங்கித்து எவ்வளவு பெரிய சபையையும் மகிழ்வித்தலில் மிகவல்லுநர். திருவாவடுதுறை ஆதீனத்து வித்துவான் பழநிக்குமாரத்தம்பிரானும், மீனாட்சிசுந்தரக்கவிராயரும் இவர் புத்திரர்கள். தமது பிறப்பிடமாகிய முகவூரில் ஒரு விநாயகர்கோயில் கட்டுவித்துப் பூசை, நைவேத்தியத்திற்கு வேண்டிய ஏற்பாடுசெய்திருக்கின்றார். தேவதானம் தவம்பெற்ற நாயகிக்கு புஷ்பச்செண்டும் இண்டைமாலையும் தினந்தோறுஞ்செய்து சாத்தும்படி ஸ்திரமான ஏற்பாடு செய்துள்ளார். 1887ளு காலஞ்சென்றனர்.

சுப்பிரமணியதேசிகசுவாமிகள்மீது கூறியன.

* உருக்கரந்தை யலர்நயன முதரமா லெனக்கவிசெய் துளைந்து வாடும், திருக்கரந்தை தீர்த்துநின்பொற் சேவடியைப் பணிந்தேத்தத் திகழுங்கொன்றை, மருக்கரந்தை தீர்த்தமதிச் சடைகரந்து தென்றுறைசை வந்துபஞ்ச, தருக்கரந்தை வரப்பெறுசுப் பிரமணிய குருமணியே தயைசெய்வாயே. (க)

* வாடிவரு வார்க்கனையாஞ் சற்குருசுப் பிரமணிய மாதவன்றன் கோடிநிதி பாவருக்குங் காவலர்பெற் றிடக்கொடுக்குங் குறிப்பினாலே நாடிநம தணிசோமன் கலாநிதியென் றுவந்துநமை நல்கவெண்ணித் தேடிலென்செய் குவமென்றே திங்களொட்டா தந்தரத்திற் றிரிகின்
[றனே. (உ)

தாம்கட்டிய விநாயகர்கோயிலில் கல்திலேதிறத்திடும் அதுசம்பந்தமான விவகாரத்திற் றமக்குதவிசெய்து முள்ளவரான மச்சுவீட்டு
அழகிரிநாயக்கர்மீது கூறியது.

*சேவில்வரு மம்மையப்பன் பதுமனத்தான் மிருதனத்தான் சீர்த்தி யுள்ளான், பாவிலன்பன் சற்குணவான் மச்சுவீட் டழகிரிசம் பன்னனென்கண், ணுவிலகுஞ் சிரமுமுறுஞ் செந்தமிழ்ச்சுந் தரவிநே

யகர்க்கு யான்செய், கோவிலையு நிலைநிறுத்திக் கோயிலுக்குண் ணிலை நிறுத்திக் கொண்டான் மன்னே. (௩)

ஆகச்செய்யுள் உசுஅக.

---

## க. மீனாக்ஷிசுந்தரக்கவிராயர்.

இவர் மேற்கூறிய சேற்றூர் சம்ஸ்தான வித்துவான் கந்தசாமிக்கவிராயரின் இளையபுதல்வர். திரிபு யமகம் முதலிய கவிபாடுவதிற் சமர்த்தர். எட்டயபுரம் சம்ஸ்தான வித்துவானாக 15வருஷமிருந்து பின்னர் சேற்றூர் சம்ஸ்தானத்தில்வந்து லௌகிககாரியதுரந்தரராகச் சிலவருஷமிருந்து இற்றைக்கு 15 வருஷங்கட்குமுன் காலஞ்சென்றனர். இவரியற்றிய நூல்கள் எட்டயபுரம் இளையராஜா அவர்கள்மீது (நாணிக்கண்புதைத்தல்) ஒரு துறைக்கோவை, முருகரநுபூதி, கழுகுமலைத்திரிபந்தாதி, திருப்பரங்கிரிப் பதிகங்கள், குதிரைமலைப்பதிகம், கழுகுமலைப்பதிகம், துவலையாநந்தம் தமிழ்மொழி பெயர்ப்பு முதலிய பலவுண்டு.

ஊற்றுமலை ஜமீந்தார்பேரிற் பாடியன.

* படியளந் தம்புரந் திடுவனரி யென்றவற்
　　பாடினா னுறவுமென்னைப்
பாவலவ வாவெனது வாழ்வுநீ யறியாத
　　பான்மையென் கேளுமனையாம்
பாவையரி லேநரித் திரிதா னொருத்தியப்
　　படியார் கலிக்குளேயுற்
பவித்துமே வந்தவளு மற்றைய ளொருத்தியிப்
　　பண்பினா லெனதுபாலே
கடிதுற்ற வில்வாழ் வெனும்பெயர்க் காரணங்
　　காணலா மினுமெனுணவோ
கண்டிலே யெனினுநீ கேட்டிருப் பாயொர்சக்
　　கரமட்டு முண்டன்னதும்
காசால தன்றுநிற் கீவதுவு மன்றமுற்
　　காலநான் பாடியுற்றுக்
கனவடியும் வாங்கினேன் முன்னமென் பாலுமோர்
　　கவிவந்த துண்டுதற்கும்

அடியுதவி னேனன்றி வேறொன்று தந்திலே
னரியகம் பொன்றுமுளதே
ஆதலாற் சும்மா வனுப்பலா காதுபல
மானவடி வாங்குவாங்கென்
றடுத்துவர வுந்திடுக் கிட்டுப் பயந்துவிரை
வாகப்பின் வாங்கவெண்ணி
அஞ்சலி புரிந்தினி யிருந்திடி னுறங்கதியெ
னருகுமோ வென்றுகருதித்
துடிதுடித் தோடியே வந்துனது சமுகந்
துதித்துப் புகன்றுநின்றேன்
துயர்பெருகி வாடுமெனை நன்றுபே ணிக்கருணை
தோன்றப்பு ரிந்தருளுவாய்
சொற்புலவர் பாடிவரு மற்புதக விப்பொருள்கள்
சொல்லுமு னறிந்துமகிழும்
துதிபெருகி வருமிருத யாலயவு லாசசெய
சுமுகமக ராஜதுரையே. (௧)

* திகம்பரவி மலையமலை யாதரபு ராதனவண் சிரசி லேப
திகம்பரவி மலையமலை யாதரவா வுண்டவசெய் சேடன் பார
திகம்பரவி மலையமலை யாதனமாங் குறுமுனிவன் றிகைக்கக் கற்ற
திகம்பரவி மலையமலை யாதவித யாலயவேள் செழிக்கத் தானே. (௨)

* முத்தமிழைத் தனகழங்கம் மனைபயிலும் பேதைவந்தாள் முகத்தி லேவை, முத்தமிழைத் தனயகள பத்தையெடுத் தணிமயலை மூட்டு கோவை, முத்தமிழைத் தனமிரண்டுஞ் சுவைசுவைசம் போக சுக முயற்சி செய்வாய், முத்தமிழைத் தனதுபுக ழாக்குமித யாலய மா முக்ய மாலே. (௩)

* பிரமரம்ப யிலுங்குணமாப் படைத்ததிலென் பலன்மகட்குப் பில்கு தேனும், பிரமரம்ப யிலுங்கிளுவை வாழிதயா லயகருணைப் பிரபு கீதம், பிரமரம்ப யிலுங்கோதை தராமையினு விருமுலைமேற் பிறங்க நீண்ட, பிரமரம்ப யிலுந்திகைக்கும் விழிசுழல மயலுமிகப் பெருக்கத் தானே. (௪)

* கனகலகத் துரங்கமொடு கணைதொடுத்துக் கனியைமயக் கஞ்செய் தான்மோ, கனகலகத் துரங்கசிவ வெனத்தாயர் புலம்புவர் சங் கமஞ்செய் வண்மைக், கனகலகத் துங்கழியக் கடவுகதிர் வேல வணங் காரைச் சீறுங், கனகலகத் துரங்கதுரந் தரவிதயா லயகருணு கரபூ மானே. (௫)

* ஆனனங்கந் தரங்ககன மதிபணிலந் தந்தமுலை யாகமோ வுய், யானனங்கந் தரங்ககனஞ் சுலவுவிழி நிகரென்மகட் கந்தோ நின்று,லானனங்கந் தரங்ககனங் குழையருஞ்சொல் விடத்துணிந்தா ரணைவா யேறு, மானனங்கந் தரங்ககன மாவிவரைத் தொழுமிதயா லயபூ மானே. (௬)

* கலவிமயக் கனிகழுவுங் காலமன்று சிற்றிலிடைக் கறிசோ றுகக், கலவிமயக் கனிபவளுந் பவனிகண்டு கொண்டபலன் கைக் கொண் டாள, கலவிமயக் கனிகரம்பங் கசன்றொடுக்கக் கலங்கினள் சேர் கருணை கோலா, கலவிமயக் கனிசுதனைத் தொழுமிதயா லய கருணு கரபூ மானே. (௭)

* கண்டுவண்டு நிகர்மதுர மொழிவிழிமா துன்பவனி காதல் கொண்டு, கண்டுவண்டு கரந்துழவ வுடைநெகிழ வணைவிரித்த காம னம்பின், கண்டுவண்டு மதிமயங்கு மிவளையணை புராணமிலக் கணை மோ டேடு, கண்டுவண்டு திகள்பெருக வுணர்ந்ருத யாலயசிங் கார [மாலே. (௮)

* கனகவடக் கயவனெனுங் கலகமதப் பாவிவந்து கனிமேற் சீறிக் கனகவடக் கயமுலையிற் பலதளவக் கணைதொடுத்தான் காற்றின் மாம கனகவடக் கயமெடுத்த விசையபரா ரசர்தொடை கமழுந் தாட்கோ கனகவடக் கயனெனுங்கு பேர்விதயாலயசெய் கலவி தானே. (௯)

* சினத்தங்கப் பம்பரநே ருந்தனத்துத் தெரிவையெதிர் சென் று காமன், சினத்தங்கப் பம்பரங்கு முறத்தொடுக்கத் தயங்குவள் சேர் தேர்முன் னனை, சினத்தங்கப் பம்பரமன் னவர்தரச்செங் கோ லரசு செலுத்தி வண்கா, சினத்தங்கப் பம்பரனைத் தொழுமிருத யாலயமற் செயசிம் மேறே. (௧௦)

* வனிக்குமரி யதரமுறு மாதுமய லாகியிடை மாத ரைக்க வனிக்குமரி யதரமையச் சேதுபுரி கடற்றுனிக்கு வாடிக் கண்டும்

இனிக்குமரி யதரமுஞ்சீ னியுங்கரும்பு மிகக்கசக்கு தென்றூ ளேயா
இனிக்குமரி யதரமுண்டு புணரிருத யாலயதே வேந்த்ர கோவே.

* துரந்தரா கவனவிசேர் கரனுணவாங் கண்ணியுரை சொலிற்றேன் பான்ம, துரந்தரா கவனமத னிரக்கமின்றி வாட்டுவன்பொற்றொடியென் செய்வாள், புரந்தரா கவனவிசைப் பரிநகுலா விளநவை நகர்ப் புரவ லாபார், புரந்தரா கவனளின வேளிதயா லயமகிபா புணரு வாயே. (கஉ)

* திருக்கவனப் பரிநடத்து மிருதயா லயமகிபா சேரீ ராறு, திருக்கவனப் பரிமனேநர் மதியைவளர்த் தாரதுவே செந்தீ யாங்க, திருக்கவனப் பரிகலங்க ணுறச்சகியாண் மெய்யினில்வாள் தீட்டி மாரன், திருக்கவனப் பரிதாங்கும் கொங்கைமங்கை செங்கைவளை சிந்தினளே. (கங)

* தனத்தியா கந்தரமா லெனுமிருத யாலயசீ தரனே மன்ம
தனத்தியா கந்தரமா வெனுமணக்கும் பூங்குழற்கஞ் சத்தை நேர்வை
தனத்தியா கந்தரமா மூலைததும்ப மெலிந்தனண்மா தரும மேநித்
தனத்தியா கந்தரமா புரிந்தீன்ற மகண்மயற்சஞ் சலந்தீர்ப் பாயே. ()

* மாதானஞ் செய்யனம்பொன் புரியிருத யாலயகோ மானே யுஞ்ச
மாதானஞ் செய்யனம்மோ திமகன்ற தினிச்சகியே வந்து கோல்சம்
மாதானஞ் செய்யமதப் பையல்வரிற் பிடியடியின் மலேதான் பெற்ற
மாதானஞ்செய்யவுடம்பரையானேன்முன்செலுத்திவழுத்துவாயே.

* தனக்கலப்பை யுறப்புரிந்தோன் சுதனுறுகே தனவிசய சங்கிரா மாசந், தனக்கலப்பை யாலுழுஞ்செய்க் கிளநவையித யாலயமா தவனே மாது, தனக்கலப்பை விடநாக மெனச்சூழும் படிதொடுத்தான் சரத்தைக் காமன், தனக்கலப்பை யியற்றுவையேற் பிழைத்திடுநம் பேதையிந்தத் தடவை தானே. (கரு)

* செம்பாகக் கவியமக மகிழிருத யாலயமற் சிங்க மேவேள்
வம்பாகக் கவிரிதழி மனமுருகி மயல்பெருகி வாடக் கோடி
யம்பாகக் கவினழியு மாறுதினந் தொடுத்தனனிங் கையோ பால[யே.
னம்பாகக் கவிர்சிவனு ணெனவெறுத்தாட் குன்புயத்தார் நல்கு வா

* கனக்கமலே யனமுலைக்கோ கனக்கமலே யனமுலைக்கோ காதன் வேணா, தனக்கணையும் பொருந்தினமுந் தனக்கணையும் பொருந்

திலகீ தனைசெய் வீரை, வனத்திதயா லயன்பாற்க வனத்திதயா லய ன்குணமும் வழுத்தித் தார்பெற், றெனக்குமுத வாய்கொல்சகி யெ னக்குமுத வாய்மலர்ந்தா ளென்செய் வாளே. (கஅ)

* அங்கங்கங் கண்ங்குமறைந் தாலும்விடான் வேளதுவு மன்றித் திங்கள், அங்கங்கங் கணமுமக லாதிறைக்கும் போதுபொரு ளேயா வொன்னார், அங்கங்கங் கணமுறப்போர் புரிதுறையே நான்கிலிடை யாகச் சொல்லும், அங்கங்கங் கணங்கவினர் தமக்குதவு மாவிதயா லயசிம் மேறே. (கக)

* அம்பரம்பம் பரந்தமரஞ் சிதமிவளுக் கிடைமுலைகா ரளகம் பாரை, அம்பரம்பம் பரந்தமர மரிவதுபோ லிவண்மனத்தை யரி வார் கற்பின், அம்பரம்பம் பரந்தமர பினுக்கிசையக் கடந்திலனோ யணைவா யையா, அம்பரம்பம் பரந்தமர மெழுமதிக்கு மாவிதயா லயசிம் மேறே. (உ0)

* அஞ்சங்கஞ் சம்பந்தங் கொங்கைசெங்கை நடைநிகர்சொல் லிவை நெஞ்சம், அஞ்சங்கஞ் சம்பந்த மாரனையோ மிகத்தொடுக் தா னணைபூ கத்தூர், அஞ்சங்கஞ் சம்பந்தங் கங்கையரி யூருறவிண் ணுற்றார் கோட்டின், அஞ்சங்கஞ் சம்பந்தங் கொளுங்கிளவை வாழி தயா லயசிம் மேறே. (உக)

* கடுத்தலுத்த ரிடத்தனந்தங் கவியுரைத்துக் கேட்கிலனைக் கண்டிக் காது, விடுத்தலுத்த ரியமுதற் றருங்கொடையென் றகலெ னச்சொல் வீணர் தம்மை, அடுத்தலுத்த வருத்தமெலாந் தீர்ந்திடக் கண் பார்த்திடுவா யடையா ருக்குங், கொடுத்தலுத்த மருக்கழகென் றருளிருத யாலயசற் குணபூ மானே. (உஉ)

* திருப்பரமா தருக்கரமா லெனுமிதயா லயதுரையைச் சேவித் தென்பெண், உருப்பரமா தருக்கமைவே ளனுந்திபங்குந் தயங்கு மய லுறமீ தன்றி, இருப்பரமா தருக்கனமோ டியற்றும்விழி யென த்தவர்சொல் லிவளை யிந்தத், தெருப்பரமா தருக்கம்வைத்து முந் துதல்போ யேசுவரென் செய்கு வேனே. (உங)

* அருமருத்துப் பைநிதம்பத் தாள்சுரமாய் வருந்துவதா லன ப்பா லேயா, வருமருத்துப் பையகற்றென் றுரதுபோ லன்னையுஞ் செய் வாளே யன்றி, ஒருமருத்துப் பையல்புரி மாயமெனக் கண்டி

லர்தா ருதவி வாய்மு, திருமருத்துப் பையனையாட் சேரிருத யாலய பூ சிதபூ மானே. (உச)

* செஞ்சரா சனத்திரண்டா யிரங்களைவேள் பூட்டியமர் செய்ய விண்டு, மஞ்சரா சனத்தினிய முகவனிதை மிகமயலாய் வளர்க்கும் காக்கைக்,குஞ்சரா சனத்தில்விடு மாவினிபென் றேங்குமையோ கூடிச் சேர்சீர், மிஞ்சரா சனத்திலரும் வீரையித யாலயபூ வேந்தர் கோவே. (உரு)

* இன்னளிஞ சனமார னிக்குவிலை மிக்குவளைத் தெய்பு மம்பாற், பொன்னளிஞ சனமாத ரிருவரையுங் கல்விசெல்வப் பொருளினூலே, அன்னளிஞ சனமாகொண் டாளிவளை விலக்கியிட லாமோ சேர்வாய், சொன்னளிஞ சனமாவ னுறுமிதயா லயசுகுண சுகபூ மானே. (உசா)

* தனந்தங்கப் பந்தனைய தையலுன்றன் மையலினுற் சகிமார் தம்மைச், சினநதங்கப பந்தனைய ருநதாது னொநதனள்சேர் சிலை வேட் காலஞ், சனந்தங்கப் பநதனைய மாப்புரிவீ ரைப்பதியிற் சகல கோவுட், அனந்தங்கப் பநதனைய ரொடுற்றுதவப் பெறுமிதயா லய பூ மானே. (உஎ)

* கணக்கா வலரும பணியன்மது கரமுங் கரும்புங் கொடுகோடிக்
கணக்கா வலரும் பணிலமுறு கடலை முழக்கித் தொடுத்தான்வேள்
கணகா வலரும் பணிகுழலெங் கன்னிக கிரங்கி யருள்கழற்காற்
கணக்கா வலரும் பணிவீரைக் கருணை யிதயா லயதுரையே. (உஅ)

வேங்கடேசுவர எட்டப்பபூபதிபேரிற் பாடியன.

* பார்பொருந்தும் புயமலையான் பணிந்திலரைப், பொரமலையான் பழகுங் கல்விச், சீர்பொருந்து மதிக்குடையான் திருந்துமுழு மதிக்குடையான் செழுந்தேன் வாசத், தார்பொருந்து மகுடமகராஜவெங்க டேசரெட்ட சகபூ மான்மேல்,வர்பொருந்து கவியனந்த மிசைக்குமனங் கவியநந்த மிறைகாப் பாமே. (உகூ)

* கனிப்பலவா ரஞ்சிகம லாகொடிமுந் திரியிவையெக் காலும் வேண்டாய், இனிப்பலவா ரஞ்சிதமா மயிலேயின் றெழுந்துகொஞ்ச மேனு முண்பாய், பினிப்பலவா ரஞ்சிதமேற் புனைபணியும் புனையினி

ஈான் பெரிதா ராய்ந்தெத், தனிப்பலவா ரஞ்சிடுமின் றனத்தென் வெங்க டேசுரெட்டன் ருர்சேர்ப் பானே. (கூ0)

* சொந்தப்பா சந்தப்பா வென்றன்மகட் கின்றுமந்தோ தூட்ட வேளாற், சிந்தப்பா சந்தப்பா வையருரைக்கப் பாய்ந்தடர்த்த தேநீ யின்னம், வந்தப்பா சந்தப்பா மனுங்கலவா மனும்விடுத்த வாறென் சித்ரப், பந்தப்பா சந்தப்பா நிகழ்த்தும்வெங்க டேசுரெட்ட பண்பு ளானே. (கூக)

* கலித்தண்டங் கம்பமுறப் பொருமதனால் விரகமுறு கனிக வான்க, தலித்தண்டங் கம்பசிய தங்கநிற மாகுமெதிர்த் தானேற் குற்றஞ், சொலித்தண்டங் கம்பனுக்கு மியற்றியிடப் படித்ததமிழ்த் தோகை மானைப், புலித்தண்டங் கம்பவள வாயுண்வெங்க டேசு ரெட்ட புகழ்ப்பூ மானே, (கூஉ)

* அகத்துவசந் திப்பிலிசுக் கரைத்தனைகை சலித்தனவஞ் சாறு நாட்போய், மிகத்துவசந் திப்பிரியச் சகிக்குளேயு மன்றியொன்று மேவி லேன்யான், மகத்துவசந் திப்பிதுநா ளாதலிற்செல் வேனென ப்பெண் வந்தாள் வெண்கோ, சிகத்துவசந் திப்பியமா மிளைசைவெங்க டேசுரெட்ட சேர்கு வாயே. (கூகூ)

* இடப்பலிக்கும் வலத்துமற்கு மேண்டிவருந் துவைதொடைய லீதோ பார்வந், திடப்பலிக்கு மதிப்பகையுந் தீருமடிக் கடிதூது செப்பி யேகும், நடப்பலிக்கு முதவாயர் தமக்குமினித் தீருநங்காய் நந்தாய் வேலன், அடப்பலிக்கு மறிவேண்டாள் மகிழ்வைவெங்க ரேசுரெட்ட னருள்செய் வானே. (கூச)

* அரும்பதனம் பார்த்திகையெட் டினுமெடுத்து மதன்றொ டுத்தா னவையுங் காய்ந்த, விரும்பதனம் பார்த்திகலிப் பாய்வது போற் பாயுமகட் கிருளே யீர்யா, வரும்பதனம் பார்த்திடுவீர் வாங்கி யிதோ வருகுவன்கல் வடிவிற் பெண்ணைத், தரும்பதனம் பார்த்திப னென் றுரைக்கும்வெங்க டேசுரெட்டன் றண்பூந் தாரே. (கூரு)

* அஞ்சுவத னத்தையனைப் பணியும்வெங்க டேசுரெட்ட வதி பன் மெச்சிக், கொஞ்சுவத னத்தையலே யுண்கிறுமாப் பித்தனை தான் கூடா தாய்க்கு, மிஞ்சுவத னத்தைநிகர் வார்க்குநல மன்று

சொன்னேன் வேந்த னல்வாங், குஞ்சவத னத்தையெலா திரட்டி
வைப்பா யிதற்குமுண்டோ கோபந் தானே. (௩௬)

* தொனிச்சதங்கை யாவளையா வொன்றுமில்லா வென்றுமலர் சூட்ட வேயெத், தனிச்சதங்கை யாயுனக்கென் னடியெனவு மவரிடத்துச் சலமே கொண்டு, பனிச்சதங்கை யானெனவேள் சூட்டுமலர் காணுவோ பாரீ ரென்றாட், கினிச்சதங்கை யாமுலைதா னருள்வைவெங்க டேசுரெட்ட வென்கோ மானே. (௩எ)

* புரந்தரவந் தனமாரா சேந்த்ரவெங்க டேசுரெட்டன் புரப்போ மென்னும், வரந்தரவந் தனமாரா மறந்திடுவெஞ் சமர்குறிகண்வனப்பு மீறச், சுரந்தரவந் தனமாரார் சொற்றுமஞ்ச வெற்றிகொண்ட தோகைக் கேநீ, நிரந்தரவந் தனமாரா தனைபுரிந்து கணைவிரிக்கநினைகு வாயே. (௩அ)

* கலக்கணங்கா வியன்குழலிற் சுமுகனைய யிடற்றிலலங் கரிக்கவாவென், னிலக்கணங்கா வியம்பகத்து நீருருத்து நானிதற்கு நேரேனென்று,விலக்கணங்கா வியந்தரித்த சாலியென மாலின்மெலி வேறிளைகா, இலக்கணங்கா வியந்தெளிந்த வெங்கள்வெங்க டேசுரெட்ட விறைவ ரேறே. (௩௯)

*அகத்தனத்து வாஞ்சையனு விலைவில்லை யேந்திமத னடுத்துமாமத், தகத்தனத்து வாதையுறத் தாக்குகின்றான் குயிலொடன்றிருனு மேவந், துகத்தனத்து வாய்கடலுங் கத்தமெலி வாளிவட்குத்தொடைய லீவாய், மிகத்தனத்து வாரகைநே ரிளசைவெங்க டேசுரெட்ட மேன்மைக் கோவே. (௪0)

* கனங்குழைய கலப்புகுந்து சுருங்குழலாம் பெரும்புயலைக்கண்டு மீளு,மனங்குழைய தனைக்கயல தனைவனத்தி லுறும்படிக்குமூடுக்கி மாரன், மனங்குழைய வியற்றிடுகண் மடந்தையிடந் தயவுபுரி மரங்கள் விண்ணுன், இனங்குழைய சனங்கொளநீ ளிளசைவெங்க டேசுரெட்ட விறைவ ரேறே. (௪க)

* வணங்குமருங் குலேத்தேய்த்தும் வணக்கமிகப் பெறுசிகரம்வாய்ந்து தன்னை, டிணங்குமருங் குன்றுகளை வென்றும்பந் துகட்கடிக ளியற்று மிந்தக், குணங்குமருங் குறையாத விவள்முலைக்குண

டதுவமிவுங் கொளச்செய் தந்த, அணங்குமருங் குறும்படிநல் லருள் செய்வெங்க டேசுரெட்ட வதிப ரேறே. (சஉ)

* சத்திக்கத் திக்குயிலும் பயிலமதன் கணையெடுத்தெக் காலு மாதை, மொத்திக்கத் திக்குறையுங் கழித்துவிட்டான் மதியுமிதோ மூளைக்கும் பாலும், சத்திக்கத் திக்குத்திக் கௌமனமும் பறைய டிக்கத் தனியா ளுள்சேர், இத்திக்கத் திக்குளர்வந் தேத்தும்வெங்க டேசுரெட்ட விறைவ ரேறே. (சஙு)

* பெருகவிக்குஞ் சரமுமெடுத் தேந்திமதன் வரவுமிந்தப் பே தைக் கேதும், பருகவிக்குஞ் சரமும்வர வரச்சுருங்கு மின்றுநின்றார் பாவிப் பாயேல், ஒருகவிக்குஞ் சரம்போலப் பாடுவள்கொண் டாடு வைபா ரோர்மா துக்கும், வருகவிக்குஞ் சரஞுதவு ராமவெங்க டேசு ரெட்ட வரிசை மாலே. (சச)

* கரும்படிகத் தரித்துமணை யாட்டிவடித் திட்டரசங் காச்சிக் கொஞ்சம், அரும்படிகத் தமிழுரில்விட் டொருதுளியூட் டிடினுமிவட் கையோ வாந்தி, வரும்படிகத் தவுங்குயிலைச் சுடவுமதி யினைவிடுத் தான் மதவேள் சேரிப், பெரும்படிகத் தனதிபதி யென்னும்வெங்க டேசுரெட்ட பெருமைக் கோவே. (சரு)

* தருவனைய மாறன்வெங்க டேசுரெட்ட பூமனுனைத் தழுவ நாளை, வருவனைய மானதொரு சிறிதுமிலைப் பூங்குழற்கு மலரைப் பூண்பாய், இருவனைய மாதுரியத் தொடுபுடைத்த முலையிடைக்கச் சிடுவாய் வேளாம், ஒருவனைய மாகமதூர்ப் புறத்தும்வரா தடித்தி டலா முண்மை யீதே. (சசு)

* அணங்குருவி லாமதனு லாசைகொளக் கொங்கையெலா மடர் ந்த தேபொற், சுணங்குருவி வீழ்ந்தனவே வளைகசந்து போனதுவே சுவைத்தே னுந்தூக், கணங்குருவிக் கூட்டமெனக் கலகலவென் றல ரினையங் கனையர் சொல்வார், எணங்குருவின் பாலிருத்திப் போற் றும்வெங்க டேசுரெட்டேந் திரகாப் பாயே. (சஎ)

*அனங்கடத்து மாதடஞ்சூ ழிளசைவெங்க டேசுரெட்ட வதி பற் கண்டு, தனங்கடத்து மாதரின்விம் மியமகளை மயற்கடலிற் றள் ளி னுன்வேள், இனங்கடத்து மாதரவொன் றேனுமிலை நாளுமுனிக்

திசைத்தே னன்னாள், முனங்கடத்து மாதரினி யென்னசொல்லார் நல்லதென்றன் முதுமை தானே. (சஅ)

*நத்தளேயு மானனத்தி னெதிர்கொணரச் சகியாத நம்பொன் மையற் பித்தளேயுமானவளாய்ப்புலம்புவணீபோய்வலியப்பேசென்றால்மோ தித்தளேயுமானமெனத்தியங்குகிருள்வண்டினங்காள்செப்பீரிம்மோ கத்தளேயு மானமது வேந்தன்வெங்க டேசுரெட்டன் காக்கத் தானே.

*மூர்த்தனங்கந் தருக்குறவந் தமர்புரிமா ரனுக்களித்த முதல்வ னேசம், பந்தனங்கந் தருக்குமுழு வதும்பாடப் பாறுமின் பாகா நாகந், தந்தனங்கந் தருக்குறிமெ லிடைநடைகுந் தளங்கைகொ ளென் றையன் மின்னே, வந்தனங்கந் தருக்குளுற்று மிளசைவெங்க டேசுரெட்ட மருவச் செய்யே. (ருo)

*மாவலுவந் தம்பணிய லவணமெனக் கரைந்துகெஞ்சி வரு கொங் கைப்பெண், பூவலுவந் தம்பணிகிம் புரிக்களிறு ரதமெனக் கொள் போர்வேட் கஞ்சி, ஏவலுவந் தம்பணிசெய் யெனையனுப்பி னுள்வருவா யின்றேன் மாலே, தாவலுவந் தம்பணியுஞ் சேர்வள் வெங்க டேசுரெட்ட சகபூ மானே. (ருக)

*மாதவித னந்தரங்கப் பந்தரினீ முன்பணேந்த மாது தானீங் காதவித னந்தரங்கம் போற்பெருகி ஞெனேக்கூய்க் கழறி லாய்து தேதவித னந்தரங்கண் டிகழ்ந்தனேயோ வெனவெகுண்டா ளின்றே னீதவிதனந்தரங்கமாலென்வெங்கடேசுரெட்டநிருபரேறே. [வாரனே

*வன்பினடி யங்கசன தம்பினமொ ருங்குகுழல் வதிய வேயென் முன்பினடி யங்கமதி லிங்கிதக லன்கொளடி முத்தே வந்தங் கின்பினடி யங்கனிசை யும்படிபி னின்றுயரை யின்றே தீர்ப்பன் அன்பினடி யங்கனிவு பொங்கும்வெங்க டேசுரெட்ட வதிபன் முனே.

*தருவருத்துங் கொடையெவர்க்குந் தருமன்வெங்க டேசு ரெட்ட சாமி யிங்கு, வருவருத்துங் கப்புயத்து மாலேயிதோ தந்த னர்மா மகிழ்ச்சி யாய்நீ, இருவருத்துங் கனியமுதைப் பசியகலப் புசிபணிக ளெல்லா மேபூட், டருவருத்துங் கைத்துயிருப் பனமுழு து மினிக்குமினி யடிமின் னுளே. (ருச)

*அருந்தந்தந் தனந்தனமுந் தனுதனுவும் கரும்புருவ மாகு மந் தக், கரும்புருவங் கரங்கரமு மம்பகமம் பகம்பன்ன கந்தா ளும்ப,

பெரும்பன்ன கழுமதியா மதியுமய லாமெனவே பிறங்கு மின்னை, விரும்புபெரும் புகழ்தரும்பைந் தமிழ்கொள்வெங்க டேசுரெட்ட வேற்கை யோனே. (௫௫)

*நினைக்கவடங் காதலியாச் சித்தமியை யுத்தமியைச் சேர்வா யென்யோ, சனைக்கவடங் காதரவு நீயெனவே நினைத்தவளாத் தனி யே தோன்றும், புனைக்கவடங் காதவன்மேற் பொலியிளைசை வளரா சே புந்தி யாலும், நினைக்கவடங் காதபுகழ் செய்யும்வெங்க டேசு ரெட்ட நிருப ரேறே. (௫௬)

*சீதப்பா தம்பவளங் கொண்டுபுரிந் தறுபோலத் திகழு வாட்கந் தோதப்பா தம்பவளங் கஞ்சலடை யாக்கமதன் தொட்டான் மையிப் போதப்பா தம்பவள வும்பெய்விழி யாட்குனது புயத்தா ரன்றி[மே- யாதப்பா தம்பவள மெங்கள்வெங்க டேசுரெட்ட யாஞ்சொன் னே

*நெஞ்சமருந் தனந்தடித்து நேரிடைநோ கத்தடித்து நிதமு மீற வெஞ்சமருந் தனங்கனுக்கு நைஞ்சமன மானவளை மின்னே பொன்னே கொஞ்சமருந் தனமெனவே கெஞ்சவுங்கே ளாளிவளைக் கூடி வாயுன் தஞ்சமருந் தனமெவர்க்கு மீயும்வெங்க டேசுரெட்ட சகபூ பானே.

*சருவரிக்குஞ் சரமுமடர் தைப்படையுங் கொண்டுமன்ம தரு மஞ் சாமல், வருவரிக்குஞ் சரமுமெடுப் பார்விடுப்பா ரப்போதெம் மழலைப் பேச்சு, மருவரிக்குஞ் சுரந்தைபடு மாறடங்கா தருள்சிலை மேன் மனிதப் பேட்டி, துருவரிக்குஞ் சரணமகா ராஜவெங்க டேசு ரெட்ட வுசித மாலே. (௫௯)

*பாவியனங் காவிரக்கம் பார்த்திலையென் றுந்தூது பகர்தற் கேற்ற வாவியனங் காளினிய வாவியனங் காளமென வாய்ந்த தென்றும் கூவியனங் காயிதிலென் னும்வலியச் சென்றுதஞ்சங் கூறு வாயேற் காவியனங் காமன்வெங்க டேசுரெட்ட தீரனுனைக் கண்பார்ப் பானே.

*சோதிக்கும் பாவிசையா வின்பாலும் வெறுத்தவள்பூந் தொ டைகளேவி, வாதிக்கும் பாவிசையா கிரகமுற வருவனென வாடு வாள்யாம், போதிக்கும் பாவிசையாப் புகலுவளுன் மீதாசம் பொழி ய வேநன், வீதிக்கும் பாவிசையா கீர்த்திவெங்க டேசுரெட்டா நீவந் தாளே. (௬௧)

*சந்தவசந் தாவிளசை யெங்கள்வெங்க டேசுரெட்ட சாமி வேந்தன்
வந்தவசந் தானகலச் சந்தனமுங் குங்குமமும் வாரிப் பூச
முந்தவசந் தாபரசு தோடிமகள் பாடிரச மூட்டி னுளின்
றெந்தவசந் தாரணியிற் பலித்ததுகீ வந்தவழி யினைப்பார்ப் பாயே.

*நல்லவிலக் குமிங்கர்சிந் தாமணியாஞ் சாலிதனை நன்றேறற் காமற், செல்லவிலக் குமியாநிந் தித்திடலா மாறுதலுஞ் செங்கை யாருன், வல்லவிலக் குமினியநின் னம்புவெங்க டேசுரெட்ட மன்னு வேள்பூப், புல்லவிலக் குமிவளது மெய்யெனக்கொண் டாற்பொறுக் கப் போமோ சொல்லே. (சஈ)

*பந்தனமா முலேயாட்குப் பந்தனமா ரம்பமுதற் பணித்த சொந்தப், பந்தனமா வதுதாரார் பந்தனமா தவியிடவுட் பழகிச் சேர்சம், பந்தனமா கேட்டிடிற்சோ பந்தனமா கொள்ளுவனிப் படியான் சென்றி, பந்தனமா னியங்கவிஞர்க் குதவுவெங்க டேசுரெட்டன் பாற்சொல் வேனே. (சச)

* பன்னகங்கந் தரங்கமலம் பிறைதரளங் கிளிநாசி பணிலம் பொன்யாழ், பன்னகங்கந் தரங்கமிவை யன்னநிதம் பஞ்சரியல் பாத நெற்றி, பன்னகங்கந் தரங்கடஞ்சொ லிருசுவர்க்க மிடைகனுறு பாவை சேர்விற், பன்னகங்கந் தரங்கமுறை வணிகர்வெங்க டேசுரெட்ட பாரான் வேந்தே. (சரு)

* கம்பரைக்கும் பரிற்படித்து வென்றவெங்க டேசுரெட்ட கருணை யீபா, கம்பரைக்கும் பரியுருப்பின் பெறுமரிக்குந் தருவனை யுங் கணியா வேள்விற், கம்பரைக்கும் பரிமளச்சந் தணிமுலைமேற் பொரவெடுத்தான் கன்னி யின்பை, கம்பரைக்கும் பரியகுறிக் குங்க ளக்கு நிகர்வார்முன் கலங்கு வாளே. (சகா)

* வடகடமா னதிற்பதுங்கும் வங்கரங்கர் தங்களையும் வாட்டு மேற்று, வடகடமா னந்தொனிக்கும் படைகொள்வெங்க டேசுரெட்ட மாகொங் கைக்கு,வடகடமா னனிதுயிறு மொருசயனம் பகஞ் செழுஞ்சு வணத்தி னுற்று, வடகடமா னயனமுக மதியிடைறா லமிவனை மருவு வாயே. (சஎ)

* கச்சாரவிக் கையனங்கன் காணுமுனங் கிழித்ததனக் கன்னிக் கேதும், கச்சாரவிக் கையமிலா வொப்புரைக்க மதியதனைக் கண்டாள்

மாமோ, கச்சுரவிக் கையகற்றுந் தளவமெனத் தாயறியாள் கவிஞர் கற்ப, கச்சுரவிக் கையருமா கிடச்செய்வெங்க டேசுரெட்ட கருணை செய்யே. (சுஅ)

* கவியமகந் திரிபுமுழு வதுஞ்சொல்வெங்க டேசுரெட்டன் கனிவாஞ் சிந்தை, கவியமகந் திரிபுவனம் புகழுமயன் றியாமுடித் தோங் கன்னி யேதோர், கவியமகந் திரிபுகர்மா தங்கசர்ப்ப விழிமுலை யொக் கலிஞ ரோர்கோள், கவியமகந் திரிபுன்மதி காற்புலிவே ளினி யனுச்சங் கடஞ்செய் யாரே. (சுகூ)

* மாதுவருந் தாதியையு மாதளையு நேரதர மானுங் கன்னி, மா துவருந் தாதிருந்த நாளிலைநா னென்னசெய்வேன் வளர்மோ கத் தின், ஏதுவருந் தாதினிய தாமருந்தன் னூட்கினம்நீ ரேயா மன்றே ல், ஏதுவருந் தாதியர்கா ளிவளைவெங்க டேசுரெட்ட னிடமுய்ப் பீரே. (எ0)

* கண்டிக்கத் தனைவாளி களைவிடுக்க மதிதகிக்கக் கனன்று தா யும், கண்டிக்கத் தனையுமறந் துணைநினைந்து வருந்துகிறாள் கன்னி பூ மிக், கண்டிக்கத் தனையுமிக வேபுகழ மலையாளக் கத்த னோடு, கண் டிக்கத் தனையும்வெற்றி கொண்டவெங்க டேசுரெட்ட கலந்து சேரே. (எக)

* கண்ணம் புயங்கரந் தந்தமுத் தங்குழல் கந்தரமே
கண்ணம் புயமுலை யாம்பல்தண் காகமு கன்றியுஞ்சொற்
கண்ணம் புயர்வுறு கன்னிக் கருள்வை கடல்வளைபார்க்
கண்ணம் புயல்வெங்க டேசுரெட் டேந்திர காண்டிபனே. (எஉ)

* மாதவள வான்மதியான் மாதவள வாவிவள வாமொரந் தாளிப்
போதவள வாசியின்கால் போதவள வானதுக்குட் புலம்பு வாளுந்
பாதவள வாய்ப்பிடிதப் பாதவள வாக்கடலுட் பதற லாமோ
நீதவள வாகுமணு துங்கவெங்க டேசுரெட்டா நோர்வந் தாளே. ()

* கணக்கலக்கந் தரமியமா மலரெனப்பாய் கின்றவண்டீர் கரு த்திற் கோவைக், கணக்கலக்கந் தரங்கமெனப் பெருகினதுள் ளுருகி னது காப்பீர் நெற்றிக், கணக்கலக்கந் தரம்வணங்கக் கண்டுமதற் பொருதிலையேன் காணென் றேறுநு, கணக்கலக்கந் தரமடந்தைக் கருள்செய்வெங்க டேசுரெட்ட கருணை மாலே. (எச)

* மருங்கரும்ப னந்தமெடுத் துக்குவித்த பின்புகதிர் வாய்ந்த ழுத்த, மருங்கரும்ப னந்தவரூ துறுமருதத் திணிலெடுத்து வந்தா ரேகா, மருங்கரும்ப னந்தருவிற் கூவினதே யன்றிஞுமிம் மாதைச் சேர்நூல், மருங்கரும்ப னந்தமர்முத் திறமெய்வெங்க டேசுரெட்ட வரிசை மாலே. (எரு)

* கந்தமரஞ் செய்யதட நந்தவன மிந்தவிடங் களிற்மைந் தேனு, கந்தமரஞ் செய்யவெடுத் தங்கசனும் பாசறையாக் கதுவு மில் லி, கந்தமரஞ் செய்யவந்தா ஞெந்தனள்சுந் தரியையணை கடல்போ லேசங், கந்தமரஞ் செய்யதிற்செ யிளசைவெங்க டேசுரெட்ட கரு ணை மாலே. (எசு)

* வாரவரைக் குந்தெனுங்கு நிகர்முலேமே லணிமடவார் மரு வும் வாகு, வாரவரைக் குஞ்சாந்த மணியும்வெங்க டேசுரெட்ட மகி மை யாரீ, வாரவரைக் கும்பிடுதே வாக்கொளெனக் குடம்புசுகம் வாய்க்க வேயோர், வாரவரைக் குங்கருணை யால்விடுதி தரிற்கவிபின் வருப்பன் மன்னே. (எஎ)

* தாவிக் காவியங் கண்பொற் குழையிணைத் தாக்குங் காரிகை தன்கருங் கூந்தலைச், சீவிக் காவியங் கும்புதுப் பூக்கொய்யச் சேரும் போதங்கு வேள்கண்டு கொள்ளிலப், பாவிக காவியந் தோகுறை யா துறும பான்மை யேதுவந் தாளுவை சித்தம, வாவிக் காவியந் தேரி ள சைபபதி மன்ன வாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (எஅ

* புதுக்கும் போதய னென்னத் தமிழ்பகர் பூம ணும்வெங்க டேசுரெட் டேநதிரன்,பிதுக்கும் போதய மில்லா மலேயெனப் பேசு மாமுலேப் பெண்ணே பரத்தைவீ, டெதுக்கும் போதய வித்தனே போறுமென் றேபு லந்தபின் வேள்விட வாச்சிபோற், செதுக்கும் போதயல் வந்திடி ஞெந்துநொந் தேபு லமபுவை யிதென்ன புத் தியே. (எகூ)

* ஆமைக்குஞ் சேவற்கு மந்த வளைக்குஞ்சிங் கமபுலிக்கும்
பூமிக் குதிரைக்கு மன்னத் திஹக்கும் பொலிவறச்செய்
காமக் குழலி குயத்தி வளிமுகி கண்ணிகண்டி
நேமித தணைவெங்க டேசுரெட் டேந்த்ர நிதியரசே. (அ0)

* ஆரஞ்சி பாரிசா தங்கடுவில் வந்தென்னை
ஈரப் பலாக்கரும்பா லெட்டிமகிழ் - நாரத்தங்
காயாமஞ் சாடிவா கைபுரிவா வென்பவட்சேர்
ரேயவெங்க டேசுரெட்ட னே. (அக)

குழந்தைக்குப் பாலூட்டு கருவி வாங்கிக்கொடுத்தபோது சொல்லியன.

* எதிர்வருவோர் கேட்கு முனங் குறிப்பறிந்து கொடுப்பதுன தியற்கை யாமென், பதுதெரிவ னெனினுமரு கின்மையினல் வரைந்துரைக்கும் பான்மை நேர்ந்த, திதிலுமதி கூர்ந்தொன்றுக் கிரண்டனுப்பிக் கேட்காம லீயுங் கீர்த்தி, மதிகதிருற் றிடுவரையும் வளர்க்கும்வெங்க டேசுரெட்ட மன்னீ வாழ்க. (அஉ)

* கீதப்பா துந்துபிபோற் கிளாிளசை யினிற்புலவர் கேட்கு முன்னம், கோதப்பா துதவிமகிழ் கூறும்வெங்க டேசுரெட்ட குரிசிற் கொப்ப, தேதப்பா துளிகொடையில் லாச்சுரபி யேதருவே யினிநீ ரன்னோன், பாதப்பா லுகையாகல் பயில்வீரஃ துமக்குமட்டும் பலிக்குந் தானே. (அங)

* தருவியவா மையினுறச்சிந் தாமணிவெள் குறப்பசுவின் றன் பா லூட்டும், கருவியவா விலுமேலாக் களிப்புறக்கொண் டேனதுபெ ருங் கருணை யென்னும், அருவியவா சிபிலிருந்திங் கார்ந்ததுகண் டுறுமகிழ்ச்சி யறைய நம்பால், மருவியவா யொன்றினமை யாதெனி னுங் கேட்காதென் மனது தானே. (அச)

* தேவின்பா லூட்டுமனத் திண்புயத்தா யென்மதலை
நாவின்பா லூட்டிடநீ நல்கினதிந் நாளிலதற்
காவின்பா லூட்டிடுமுன் பன்புடையேற் காங்கிதயப்
பூவின்பா லூட்டினது பொங்குவகைக் கடலினையே. (அரு)

* பயமூட் டினவார் தெறிக்கவலுப் பணிவீங் கரிவை மார்தனத்து
பயமூட் டிலுமே புனைகளபம் பயிலும் புயத்தா யருள்கருவி
பயமூட் டினதென் சிறுசேய்க்கப் பாலும் பழிக்கப் பெறுவமெனும்
பயமூட் டினதோ ரிருநிதிகற் பகங்கா ர்சுரபி யிவைகளுக்கே. (அசு)

* குழும ராமர நேத்திரத் தாரடங் கூறி வாட்டிடக் காரிகை கொந்துநொங், தழும ராமர ணஞ்செயு மென்றுமி ழுங்கி யாமதிக்

கென்செயுஞ் சேருவாய், எழும ராமர மூடுரு விப்புக வேற்ற மாங் கணை பூட்டிடு விற்கரங், கெழும ராமரம் பாரியை முன்பெறு கீர்த்தி மான்வெங்க டேசுரெட் டேந்த்ரனே. (அஎ)

* செண்ட லாதிப மத்தக மொப்புறச் செய்ய மாமுலைத் தையலின் மீதுபோர், மிண்ட லாதி பகவனை வென்றிட்ட வேளி னுலெனி லென்செய்வ ளார்க்குநீ, கொண்ட லாதிப ராவுமு தாரத்திற் குமரி மாட்டொரு தாருத வாமையென், மண்ட லாதிபர் தண்டனிட் டேத்துதி மன்ன வாவெங்க டேசுரெட் டேந்த்ரனே. (அஅ)

* சங்க ராவெனச் சொல்லுவள் வேளிமா சங்க ராதிக ராவரும் போதுங்க, சங்க ராவரும் போதுவே போதுமெச் சங்க ராகமும் போய்மெலி வாள்மினுள், சங்க ராசி முழங்கிள சைத்தமிழ்ச் சங்க ராசசிங் காரா கவிப்பிர, சங்க ராய்வரு வார்க்கு நிதிதருஞ் சங்க ரா வெங்க டேசுரெட் டேந்த்ரனே. (அகூ)

* கனக மாமுலைக் கன்னியு நேற்றுனைக் கனக மான்றிகழ் மேடையிற் கண்டுமோ, கனக மாரனுக் குங்குபி லுக்குமோங் கனக மான்பிறைக் கும்பயந் தானனே, கனக மாதமு முக்கஞ்செய் கின்றவா கனக மாதரு மாசன காமுனம், கனகமாணை வெல் லம்புறு வத்தகோ கனக மால்வெங்க டேசுரெட் டேந்த்ரனே. (கூ0)

* வருந்துங் கவலைக் கடலுமுன்னுள் வறக்கக் கணையே வினையெளியேன், வருந்துங் கவலைக் கடலுமுன்னல் வறக்கக் கணையே விப்புரப்பாய், விருந்தை யணியம் புயகரத்தால் வேண்டி யழைத்தூட் டிளசைநகர், விருந்தை யணியம் புயபரனும் வெங்கடேசுரெட் டமனே. (கூக)

* அரக்கப் பாவி சுனத்தைமுனு ளழித்தா யளியேன் மணமணல்வாய், அரக்கப் பாவி சனத்தையினு ளழிப்பா யுழவர் கழனிதொறும், விரைக்கும் பதனத் தார்க்குமொழி மேற்கொண் டலையை வீழ்த்திளசை, விரைக்கும் பதனத் தார்க்குமதன் வெங்க டேசு ரெட்டமனே. (கூஉ)

* படிப்புரணி லாதபுல வர்க்குமாத் திரமுதவு
பான்மையுற் றிலையென்பதும்

பற்றியல ருறுகற் பகத்தினையு மின்னலொடு
பயமுறுதவு மெழிலிதனையும்
எடுத்துவமை சொற்றிடுத லெங்ஙனந மாசைக்
கிரட்டையினி தாகவருளும்
ஈகையினை யன்னவை யறிந்துநா மஞ்சின
மெனப்பகர்ந் திட்டபடியால்
அடுத்தநா டோறுமஞ் சினமென்ன வாய்ந்தவென்
றவனிமிசை யாருமெச்சி
ஆதரத் தொடுபுகழ்செய் செங்கைமலர் பெற்றவனொ
ரம்புயம திற்பொனுறலால்
இடப்புவி மகட்குமம் புயமீந்து காத்திரட்
சிக்குமக ராஜராஜன்
திறல்வெங்க டேசரெட் டமதுங்க னுவகையொடு
செயமேவி வாழ்கமாதோ. (௬௩)

த கு தி

ப ர ணி

சி வி கை

இந்த மூன்று மொழிகளிலுமுள்ள வொன்பதெழுத்துக்களைப்
பலவாறு மாற்றிப் பொருள்படக் கூறியது.

* தகுதிபர ணிசிவிகை யெனச்சொல்லும் மூன்றெழுத்
தாந்திரிசொ லவையின்முதற்சொல்
தான்மிகப் பெற்றவ ணடுச்சொன்முத லாந்தமிழ்
தனக்கும்பர சங்கம்விள்வாள்
சார்ந்திடு கடைச்சொலூ ரும்பேறு கொண்டவ
டரித்தவம் மூன்றுசொலினும்
தானடுவ கற்றியிட வருமுத லருந்திடை
தனிலாடி யீறுபுனையும்
தனிமணியென் மாலினால் வந்தவையின் முன்னெழுத்
தாமூன்று களையும்வாட்டு
சுடராமத னலவையின் மூன்குழலி டாதுநடு
துன்மையி லுறுதுகடைபோல்.

தனமீறி வாடுவா ளிடைகடையு முதலோடு
தானிடை பொருந்தவுண் ணாள்
தாயர்பின் னாகுமன் றக்கரத் திற்கடை
தனைக்கொடுமு னடுவென் கையில்
புகுநடு வகற்றியது தோறுமே பார்ப்பளப்
போதவரு மவைமாற்றியே
புகலவரு புள்ளிபோல் வைத்திடவி ருப்பள்முன்
போந்ததிரி சொலினுமகலப்
புரிநடுவெ ழுத்துமுன் னுவள்கல விக்கவை
பொருந்துமிடை சிங்கநோக்கால்
பொருளிரண் டாகுமவர் வழியில்வரு வார்செயப்
பொம்மலுறு முரசிறைவியால்
புலரும்வகை யுங்கண்வள ராதே யிருந்தவை
பொருந்தியிடு மாலைமாற்றுப்
போதவுரை செய்திடுகல் கொண்டுநான் மாதிறப்
பொருந்தமுத லீறுகரமும்
பொற்புற வெனக்குமே செய்வளவை மாறலிப்
பூவைக் கியற்றிடாது
போதுபோக் காதிமைப் போதுமுன முல்லையின்
போதுகமழ் மாலைதருவாய்
மகபதி நிகர்த்தவா சகலகலை கற்றவா
மகிமைமிக வுற்றசெல்வா
மண்டல துரந்தரா வெண்டிசை புகழ்ந்தவா
வண்டமிழ் புனைந்தவாகா
மதுரரச வாசகா விதரண வரோதயா
வரதமகி பாலசீலா
மங்களசி மாதனு விங்கிதகு ணாகரா
மங்கையர நங்கமதனா
மகதர்சோ நகர்சிட தர்குடகர் கேகயரினையர்
மகுடமா லிகையின்மணமே
மருவுசர ணாகருணை பொழியுநய னாகமலை
வளருமரு மாவனே. க

வரிசைபுல வோர்கள்பெற வுதவுசமு காதிறைவு
மதியுதிக ராதசமுகா
வஞ்சமத னைவென்று தஞ்சமென வேவந்து
வஞ்சியர்கள் கொஞ்சுமழகா
திகழ்கின்ற சந்த்ரகிரி நகர்வந்த சந்த்ரகுல
செயதந்தி ரங்கொளதிபா
திண்சமர மீதிலா னும்பரியு மீரவே
செங்கையிசை வாள்கொண்டவா
சிட்டர்குழு வுற்றிலகு மெட்டயபு ரத்துநல
திட்டமொடு திக்கவிறைவா
திறத்தொடு கொடிக்கண மெவைக்குமுய ரப்பெறு
திரக்ககரு டக்துசகரா
செண்டுநனி கொண்டடரு மண்டருபி ருண்டெழு
திரண்டபரி கொண்டநகுலா
சேமதிதி யாமுக்து சாமிதுரை மால்பெற்ற
சீர்மணி நிகர்க்கசரதா
செகவீர ராமரா சேந்த்ர குமாரெட்ட
சீமான்பின் வந்தநிருபா
திறல்வெங்க டேசரெட் டமதுங்க நாமகெர்ச்
சிதசிங்க ராஜபரனே. (கூச)

சேயரொருவர்க்கு வேலைவாங்கிக் கொடுக்கும் பொருட்டுச் சொல்லியன.

* தினந்தருமந் தரைமுழுதும் புரியுமயோத் தியர்பெருமான் றியங்க மாவி, சனந்தருமந் தரைவிளையத் தால்வனம்புக் கரக்கர்குலந் தனைவே ரோடும், சினந்தருமந் தரைவதக மலையமர்ந்து கோவியரைச் சேர்ந்து கூர்மை, யினந்தருமந் தரையுமுருக் கெழிற்றிருமான் மருமகனா யிணங்கு வானே. (கூரு)

* தினைவனங்காத் திருந்தகுற மாதிடம்போய்க் கற்கவனைத் தினமுங் கைமேற், புனைவனங்கா தரசுகத்தைப் போக்குதற்கன் றுனையுளத்தெப் போது மேயான், நினைவனங்கா லெனதுபுயத் திட்டிறங்காய் பரணிருக்தெ னெஞ்சு புண்ணு, கினைவனங்கா யெனத்துதித்து வனத்துதித்து மனத்துவகை கொர்ந்திட் டானே. (கூசு)

*வனமடுத்துங் களமடுத்துந் தானவமா வதைபுணவே வருத்தி ஞனை யினமெனக்கு மோர்புலவன் றனக்குமலைக் குகையிலக மீட்டு வானைக் கனகநிற மேவியப னிருபுயத்துங் கருணையுளக் கமல மீதும் மனமுருகு வார்கடம்ப ணியைமகிழ வானைய றுவதனத் தானே.(கூஎ)

*கொழும்பரையாள் கின்றகொழுஞ் சுடரையடி யேனிருமைத் துணையைப் பச்சைச், செழும்பரையா ளின்றமுழு முதலையொரு குறமின்முலைச் சிகரம் பாயும்,கழும்பரையா ரக்குழும்பால் மறைந்து திகழ் புயமணியைச் சரண்புக் கேபு, கழும்பரையா தரித்துவரு கழு குமலை யுறுகிருபா கரகோ மானே. (கூஅ)

* சித்தமிசை யோகையுற விருத்திமலர்ப் பூசனையுந் திருத்தி யன்பாய், நித்தமிசை யோடுதுதி தோத்திரஞ்செய் தவனருளா ணிகரு முச்சம், பத்தமிசை யோங்கவரம் பெற்றுமணங் கமழ்பதுமப் பாவை யாம்பொன், னுத்தமிசை யோகமணி மார்பனெனப் பெருகி வள ருயர்வு ளோனே. (கூகூ)

* சினகரமா னவுருலவு மாடமுத லானவையின் சிகரத் தேரத், தினகரமா னனமொருநா லுடையனிடம் வரைவிசத் தேவ ரென் னும், அனகரமா னமக்கிரவே னிலையெனவே யதிசயிக்க வாற்று மெட்ட, மனகரமா னதிலிருந்து நிகாந்தழ்வரை மனுநீதி வளர்க்குங் கோவே. (௧00)

* அணங்கவரத் தாளமிசை யொடுநடிக்க வரசர்திறை யளித்து வாழ்த்தி, வணங்கவரத் தாலுயிர்மா மறையவரா சீர்வதிக்க மணியின் பொன்னின், கணங்கவரத் தாணியபரி யாசனத்தி லரசுரிமை காட்டி யாரும், இணங்கவரத் தாற்புரிவே லேந்துகுமா ரெட்டமவேட் கிள மை யோனே. (௧0௧)

* உருத்தமரம் புரிந்தவரை யிறுத்தமர ராக்கினனி யுலவி வெற்றி, நிருத்தமரங் கெனுங்களத்து நடத்தும்விசைப் பரிகுலா நிருக வேந்தன், பெருத்தமர மேழுகலை வாலிவிழத் தனுவொடுகோல் பிடித்த வர்கா, மருத்தமரஞ் சிதகுணபூ மாவரைநா டனைப்பொருது வயங்கொண் டோனே. (௧0௨)

*கவித்தகப்ப னேக்குமுனா கனகதரு நிகர்தருதாய் கடந்த போது, தவித்தகப்ப னெதிர்ப்பினைனும் பழமொழியைப், புதுக்கியவோர்

தருமனாற், பனித்தகப்ப னையடைந்து மெலிந்தவெனை யழைத் தருட்சீர் பாலித்தேகாத், துவித்தகப்ப னாவல்பாடிச் சுகத்திருவென் றிருத்தியவுத் துங்க வேந்தே. (௧௦௫)

* கலம்பகமேற் பூண்டபெர ணியைகுறவஞ் சியின்காதல் கதுவு லாச, மிலங்குமலைக் காமரச மஞ்சரியை யெனுங்கோவை யெதிர்த்த மாரன், வலிந்தெதிர்ப்பட் டிக்குவிசை யம்பெடுத்தா னந்தாதி மறந் தாள் வண்ண, மெலிந்தனன்கொஞ் சமுத்திரவி லாசகியே னென்று மின்னார் விளம்பு வோனே. (௧௦௬)

* சதசரத வாசகரா சதசரத லாகுடையாய் தருமமேசெய்
விதரணிமா ருபலக விதரணிமா ருதிவர்தோள் வேந்தா திவ்ய
பதுமகரா திகழிரண்டைம் பதுமகரா ஜமகிமைப்பூ பாலா பூர்ண
விதுவதன மாரதிரு விதுவதன மாரதிலார் வேளொப் போனே.

* பலசனகா வலசைனகா பரவிரதா வரவிரதா பகருஞ்செய்புண்
மலரதிபா வலரதிபா வனசமுகா கனசமுகா வளைநீ ராடை
சுலவலையா நிலவலையா சுதிநகரா நிதிநகரா துலங்கு நீதி
யிலகமனா வலகமனா வெனதுளவா மனதுளவா வென்கோ மானே.

* தாம்பிரதா பனமுற்றியோ னெனவெனையாண் டிமெகிபா தழைக்குங் கீர்த்திப், பூம்பிரதா பனிறமோர் பெயரென்முத்து சாமி துரைப் பூமான் றன்பால், ஆம்பிரதா பனகவிடு வேலனரு ளாலுதித்தா யகன்மி னாரைக்,கோம்பிரதா பனகரும்போற் றெங்கள்வெங்க டேசுரெட்ட குரிசி லேறே. (௧௦௭)

* சிலவசன மலரிணையுன் றிருச்செவிக்கர்ச் சனைசெயச்சிந் தித்தே னிந்த, நிலவசனம் புறமென்வர லாற்றுமண மன்பெறுந்தே னிறைந்த வாமோர், சூலவசன மிலவசமாக் கொடுத்திடுதா யெனா மெனிதி கோதின் ஞான, வலவசன கனைநிகரென் முனவனொடு மெனையின்று வான்போ யுற்றான். (௧௦௮)

* பொலங்கொடிய னாளெனுந்தா யிழந்தவெனைத் தந்தைதனி புரந்து கூர்ந்த, நலங்கொடியல் வரப்படிப்பித் திடுநாளி லூழ்வினையி னாலே யெங்கள், வலங்கொடிய கோபமடிக் கடிபுரிவா னாதலின்முன் வந்தோன் பந்த, விலங்கொடிய நற்கலையுங் கற்கலையு முடையானா மேவி வாழ்வான். (௧௦௯)

* விலகாது நானிருந்தே னதிலுலர்ந்தென் மனத்தினைச்செய் வித்தான் பின்கோள், பலகாது ணிதநிதமே றினதாலும் யான்செய் வினைப் பான்மை யாலும்,இலகாது லருக்கியா தீட்டுபொனைப் பாழ்க் குமறத் தினுக்கும் வீசிச்,சிலகாது விதமுமெனைச் செய்துதூரத் திடு விதமுஞ் செய்தா னந்தோ. (கக0)

* அன்னதுவாழ் வடுத்தவருக் கனுகூலம் பெறப்புயல்போ லரு ளிக் காக்கும், மன்னதுவா நிதியிளசை மகராஜ ரிடமணுகி வாழ்வா யென்றே, சொன்னதுவா யிருந்ததந்த ஞான்றுனது திருவாயின் சுகிர்த மான, சன்னதுவா வாவெனவந் திடர்க்கடலுங் கடந்துகளித் தலும்பெற் றேனால். (கக௧)

* மாசிவா கனகநிற வேணியரா வெனத்துதித்து மதித்தெம் மானைப், பூசிவா கனமுறுவை யெனச்சொலுமுன் னடியர்குழுப் பொருந்தப் பெற்றேன், வாசிவா கனமேறும் வாழ்க்கைபெற்றேன் சேர்க்கைபெற்றேன் மதுரப் பாலே, நேசிவா கனமுணவும் பெற்றே ன்யா வருமதிக்கு நிலையும் பெற்றேன். (கக௨)

* கொடியரையுந் தவளுமொரு கொடியரையும் பெறுபவர்க் கே கொடுத்தோய்ந் திட்ட, மிடியரையு மெய்யறியா விகிர்தரையும் பதிதரையும் விவேக மில்லாத், தடியரையு நீதியிலாச் சழக்கரையுந் தேசிகர்க்குஞ் சாவிச் சாவி, படியரையுங் கொடுத்தறியாப் பதகரை யும் பாடியிடாப் பதமும் பெற்றேன். (கக௩)

* ஒருகுறையா யினுங்கமியேற் கில்லையெனக் கன்புடையா னொருவ னென்பாற், பெருகுறையார் மழைநோக்கு சாதகம்போல் வேலைபெறப் பிரிகிலான்மா, தருகுறையா தியன்சேர மாணையளித் ததுபோலெற் காகக் காப்பாய், செருகுறையா ரேதியரக் கரைமு ழுதும் பொருதுபுகழ் செய்த மாலே. (கக௪)

* பாட்டுக் கலவி நோதரதப் பரதத் தெவரொப் பெனவுமுலைக்
கோட்டுக் கலவி நயத்தெனமாக் குலுங்கு மெனவு மன்னதின்னும்
வாட்டுக் கலவி தானுமெந்த வாரோ வெனவும் பலர்வகுப்பர்
வேட்டுக் கலவி புரியிவள்பால் வெங்க டேச ரெட்டமனே. (கக௫)

* வருத்திக் கருத்தி யானமெலா மலரை யெடுத்து விடுத்துமெயிற் பொருத்திக் கருத்தி லேமயக்கம் பூட்டி வாட்டி யாட்டுமெங்கள்

ஒருத்திக் கருத்தி னதுகுமட்டா துறவந் தணைவாய் புவிபுரக்கும்
விருத்திக் கருத்தி யுறுமிளசை வெங்க டேச ரெட்டமனே. (ககரு)

* உருப்பங் கொடுக்க மெலியமிக வுயர்ந்து தடித்து மதயானை [ண்
மருப்பங் கொடுக்க வருமுலையாள் வருத்த முணர்தா யருமினிப்பெ
கருப்பங் கொடுக்கம் வேண்டாமோர் காலு மெமக்கென் றலறுவர்நீ
விருப்பங் கொடுக்க வணைந்தருள்செய் வெங்க டேச ரெட்டமனே.

* காட்டிக் கூட்டி லடைத்துவைக்கக் காணுங் கிளிபோல் வள
ர்த்தவெங்கள், கோட்டிக் கூட்டி நெருங்கமதன் கொளுத்து மயல்தீ
ர்த் தணைந்தாயேற், பாட்டிக் கூட்டி மகிழ்ச்சிவரப் பணுவாள் சுரு
தி வீணையிடை, மீட்டிக் கூட்டிப் பயின்றிடுவாள் வெங்க டேச ரெ
ட்டமனே. (ககஅ)

* புணையக் காரி ஞாலுவமை புகல வடங்காக் குழலிமன
துணையக் காரி வளர்த்ததுசெய் துயரந் தவிர்ப்பாய் மந்திரிபோல்
நினையக் காரி யாதியெலா நிகழ்த்தி யிடுவாள் கலவியினும்
வினையக் காரி பாரிளசை வெங்க டேச ரெட்டமனே. (ககசு)

* கரத சரத மானிகர்கொங் கையினுட் கிரதி யரம்பைசசி
வரத சரத மருகியுரு வசிநே ரிலைப்பற் கமுதினுமே
இரத சரத ரளமிருக்கி லிணையா முனைச்சேர்ந் திடப்புரியும்
விரத சரத மாதுவந்தாள் வெங்க டேச ரெட்டமனே. (க௨௦)

* மாலா வலைய மானமுற வளர்க்குந் திருநேர் வாட்கிருகண்
சேலா வலைய மாவரமா தேனு வனச மாமதன்கைக்
கோலா வலைய மாவிலையுன் குளிர்தார் வேட்டங் கிரங்குதலால்
வேலா வலைய மாமிவட்சேர் வெங்க டேச ரெட்டமனே. (க௨க)

* தனத்தந் தனத்தா வெனநடஞ்செய் தமியட் கனங்க வேள்புரிந்த
அனத்தந் தனத்தா ஞகுழனை யணையும் பெருமை தருமெனவே
மனத்தந் தனத்தா திருந்திடுத மருமே கணிப்பா ரருளெவணும்
மினத்தந் தனத்தா லேபுகழ்செய் வெங்க டேச ரெட்டமனே. ()

* பந்தைக் கந்த ரதிரளையொப் பனவாந் தனவி லோதிமயற்
சிந்தைக் கந்த ரதினகரன் றீயா மதியின் குளிர்தோன்றும்
எந்தைக் கந்த ரதினியவே லிணைக்க ஞறங்காள் சேர்கலவி
விந்தைக் கந்த ரதியேபார் வெங்க டேச ரெட்டமனே. (க௨௩)

* மாட்டைக் காட்டி விகர்பாத மடந்தைக் கிதந்தை ரியமதன்செய்
சேட்டைக் காட்டி னவியெனச் செயுமென் றறியா ராயர்முலைக்
கோட்டைக் காட்டி னனதுளமே குழையு மிவளுக் கருணேற்று
வேட்டைக் காட்டி லறிந்தனளாம் வெங்க டேசு ரெட்டமனே. ()

* வளையார்செவியுமலர்க்கருங்குவளையாம்விழியுமெழில்பெறுவெண்
வளையா மிடறுங் கடகமொடு வளையார் கரமுங் கொண்டுமத்த
வளையார் வயலி லியலிலெழு வளையா தரவின் மணந்திடவில்
வளையா வருமா லெனவுதித்து வளையா பதிநா வினுங்தெளிவாய்
கிளையா முளைய வாய்ச்சியர்கைக் கிளையா மமையத் தவரிடையங்
கிளையாம் படிசெய் முலையிபக்குக் கிளையார்ந் திடச்செய் தணைத்திடு
கிளையா வருமைத் தருமெனப்பல் கிளையா ரிளசை மகராஜற் [வோய்
கிளையாய் விசையம் புரிதனுவுக் கிளையா விசைய னனையாயே.(௧௨௫)

* மதிக்கு மருட்சி பெறுபவர்சம் மதிக்குங் கவிசொற் றிலெயென்வெ
மதிக்கும் பலநா ளிலேந்தினந்தா மதிக்கு மெனிலீ குவரெனவு [கு
மதிக்கு மனேபோன் றேற்கிருசண் மதிக்கு முணவு கொடுத்தினுமுன்
மதிக்கு நிகரா வளர்த்துவசு மதிக்குண் மிகவும் புகழ்பெறுவோய்
மதிக்கு மினிய சானுசந்த்ர மதிக்கு நிறையீ மடவியர்த
மதிக்கு மொழிகள் குழறியுமம் மதிக்கும் படிவேள் வாட்டுவன்கூ
மதிக்கும் புறுதார் தருவைவல மதிக்கு மரிகட் கெனக்கவிஞர்
மதிக்கும் வெங்க டேசுரெட்ட மதிக்கு வணங்கு மபதியே.(௧௨௬)

* சிலவா சகமா மெனவிணைப்பஞ் சிலவா னெனுநீ செவிகொடுகொஞ்
சிலவா வியபோ தேயெனமா சிலவாய்த் தெளிந்த பலகவியின் [கா
குலவா ணரிற்சேர்த் திருத்திநிதங் குலவா சையிற்பாச் சொலப்புரிக்
குலவாய் மருவா தினிமையினேங் குலவாக் கிழியின் குணநிதியும்
பலமா மனையும் விளைநிலமும் பலமா வணியு மீந்ததற்குப்
பலமா கிடவிண் பணிசெய்பொனம் பலமா டியநம் பரனருளாற்
கலமே யெனப்பா வணிகோலா கலமே வுறுநீ மகிழ்புரிச
கலமேன் மையும்பெற் றனுதினமங் கலமேற் பெருகி வாழியவே.()

சேற்றூர் சம்ஸ்தானம் மானேஜர் இராக்கப்பபிள்ளை யவர்கட்கு எழுதியவை.

* கம்பநாட் டாழ்வான் கவிபோ லினிக்குமனே
கம்பநாட் டாழ்வான் கடற்புவியில்—கம்பநாட்

டின்பக் கொடைத்தருவே யிந்திரராக் கப்பவள்ளால்
அன்புற் றனுப்பவசி யம். (௧௨அ)

* அரந்த ரக்கரை யெனும்விழி மான்மகட் கதிபன்
வரந்த ரக்கரை பெருகுமன் புடையவ மகிமைப்
புரந்த ரக்கரை வெனுமிராக் கப்பகேள் பொரிநீர்
சுரந்த ரக்கரை சார்ந்துறு தன்மையேன் சுதற்கே. (௧௨௯)

* வதன மானக ரிடைச்சுர மீட்டும்வந் தணுகி
அதன மானதுன் புஞற்றின தாத்தெரிந் தாங்கு
மதன மானவ ஞகுநின் மகனொடும் யாங்கள்
கதன மானது கதிகொடு போந்துகண் டனமால். (௧௩0)

* ஆங்கு சீதள மிருந்ததா லதையிகந் துன்சேய்
ஓங்கு சீதனம் பெறுமனை யுறுநக ருற்றேம்
கோங்கு சீதன நிகர்த்திடா தெனக்குறக் கொடிபால்
வங்கு சீதர மருகரு ளினன்சுக மெவர்க்கும். (௧௩௧)

* இதிலு மிக்கசந் தோடமே பெறும்படி யெழுத்தாம்
பதிலு மிக்கதின் விளைந்திடு வாசகன் பாலித்
தெதிலு மிக்களி விளைந்திடா தெனத்தெரிந் தினியோ
ரதிலு மிக்கவா வெனக்குநின் செயமறி வித்தான். (௧௩௨)

* ஆன தாலவ னெழுத்தொரு தாளமை சீனி
தான தாகவு மினித்தினித் திருப்பன தமியேற்
கேன தாயிருந் திடப்படா தினியதா தையரும்
ஞான தாயரும் புனையவன் பெயரைநா டிடிலே. (௧௩௩)

சேற்றூர் சம்ஸ்தான கர்த்தரவர்கள் சமுகத்திற் கூறியன.

* மாமகத்து வந்துரத மேறினன்போர்க் கென்றெதிர்த்த மதனைக் கொன்னே, மாமகீத்து வந்திடும் முலைப்பாகா வெனக்கு டன்மை வரனைப் போற்றி, மாமகத்து வந்திரு வருள்பெறுசுந் தரதாச மன்னர் கோமான், மாமகத்து வந்துலங்கி வாத்தரிசித் தனன் மகிழ்ச்சி வளரத் தானே. (௧௩௪)

* பெரும்போடி நகர்முதலா வலைந்திடுகால் வாய்வெனுநோய் பிறங்க வாடி, இரும்போடி யுருகியிடக் கதறினதால் வந்திலன்மெய்

யேசான் றையா, சுரும்போடி னியதேனுஞ் சூழ்குழலைப் பிடித்தி ழுத்துத் திட்ட ரேயா, வரும்போடி வாடியெனும் பாஞ்சாலிக் கா டையருண் மாலன் றேனே. (கருரு)

திருநெல்வேலி ஈசுரமூர்த்திக்கவிராஜரவர்கள் சிவகிரியிலிருந்து முகவூருக்கு வந்தபோது கூறியது.

*உருத்திரக லாமதற்கிப் பாதகனை வரவழைக்க வொண்ணுமென் றுள்ளத்,திருத்திரக சியத்தடக்கி யெழுந்தனையோ வலாதுமுத லென் மெய் மத்தி, பொருத்திரகம் பூண்டுவருத் துதலெனுஞ்சொற் கஞ்சி யிவண் புறப்பட் டாயோ,மருத்திரகற் பகநிகரீ சுரமூர்த்திக் கவிராஜ வள்ளற் கோவே. (கருசு)

விருதை சிவஞானயோகிகளிடம் மருந்துண்டபோது கூறியது.

*தருமருந்துண் டாக்குமவ ராயுதமு நீங்கிடமா தவஞ்செய் யும்போ, தருமருந்துண் டமுநாலூற் றோருமகிழ் சிவஞான சாமி யென்னும், தருமருந்துண் டெமதிடத்துன் றனக்கருள்வோ மதுமிகநின் சடத் துக் கின்பம், தருமருந்துண் டிடுமுனமே பிணியனைத்துந் தீருமென் றுன் றயங்க னெஞ்சே. (கருஎ)

தேவதானப்பட்டி வட்டு அழகப்பபிள்ளை மீது பிரியாதுக்கவி.

* துட்டமதிக் குறவனெழு மலைகராக் கொண்டவன்பேர் சொல்லை யப்பன்,எட்டியுரங் கையிலணியு நகைமுழுதுங் கழற்றியிட்டா னிது வல் லாமல்,திட்டவெகு நாட்டிருட்டுக் காரியமே செய்வனையா தேவ தானப், பட்டிநக ரேட்டழகப் பேந்த்ரவா சாட்சிநட படிக்கை செய்யே. (கருஅ)

தமது சிறியதந்தை இராமசாமிக்கவிராயரவட்கு அவர்கள் பேத்தி காலஞ்சென்றபோது எழுதியனுப்பியது.

* பெருவிசனங் கொள்மகவை யிழந்தவெஞ்ச கோதரிவெம் பியுமே கண்ணீர், அருவிசன மாவடிப்ப ளையையோ வினித்தேற்று வதற்கு நீயே, கருவிசனங் கவிலழியா ரெவரெனச்சொற் றவடியராக் கடல்விட் டேற, வருவிசன கனைகிரென் றூய்ராம சாமியெனு மதிவல் லோனே. (கருகூ)

எட்டயபுரம் க. ஆண்டியப்பபிள்ளை யவர்கள்மீது கூறியன.

* வணக்கா வியம்ப கமடமின்னாள் வருந்த வருந்தா தெழுகணையைக்
கணக்கா வியம்ப முடியாமற் காமன் சாமத் தினுந்தொடுத்துக்
குணக்கா வியம்ப திரும்பேரிக் குழலும் விரும்பி யணைராமா
யணக்கா வியம்ப கருங்கம்ப னனவாண் டியப்ப மாமணியே. (கச0)

* சுரும்பாகரும்பாவெனும்விழிக்கைத்தோகைக்கேகைத்தாயருந்தத்
தரும்பா கரும்பா லமுதினுங்க சக்குஞ் சக்குஞ் சுழலுமொரு
துரும்பா கரும்பா சுகனுமெதிர்த் துவந்தா னிரங்கா யுனதுமனம்
இரும்பா கரும்பா மையாசொ லெனதாண் டியப்ப மாமணியே. ()

* பொலங்கா திலங்காக் கிரங்குழலாற் புகநா சிமலை முலைதுரல்கோ
கிலங்கா திலங்கா நின்றவளை கினிமா யுரையா மினையெவர்க்கும்
கலங்கா திலங்கா முறக்கனியே கட்டி யிருக்கி யணையரக்கர்
துலங்கா திலங்கா புரியைவென்ற துரையாண் டியப்ப மாமணியே.

* திருக்கு மருக்கப் பெறுகனகச் சிறியோ ரெனவே பெருமி தங்கொண், டிருக்கு மருக்கச் சுறுமுலைபி னிறமாப் பகலும் படி செயவோர், கருக்கு மருக்கப் பாதரவுங் கனிவாய் வருவாய் கடம்ப ணிப,வருக்கு மருக்கத் தாமருக்கும் வணங்காண் டியப்ப மாமணியே.

* தந்தந் தந்த மென்றுபார தமுஞ்செய் தறியாள் பினும்பல்கனி
தந்தந் தந்த மென்றுகசந் தனவென் றுமிழ்ந்தாள் மயலலைமி
தந்தந் தந்த மென்றகிலுந் தரியா தெறிவாள் குறிபடர
தந்தந் தந்த மென்றுரைச்சி தழுவாண் டியப்ப மாமணியே. (கசச)

* வினையா பாரி பலருனையே விரும்பி வருந்தி யிடவேசி
மனையா பாரி யெனத்தனத்தை வழங்கித் திரிவா யீதவர்வஞ்
சனையா பாரி னீதியதா தழைக்கும் புகழா வெதுசொலுவாய்
எனையா பாரி சாதகரு விணையாண் டியப்ப மாமணியே. (கசரு)

* அடிக்க வடிக்கக் கரமேந்து மவர்த மாவி யனற்புழுவாய்த்
துடிக்க வடிக்கப் பணத்தினைவி சுவரு முளரோ வுனையழைக்கும்
படிக்க வடிக்கத் தனைக்குமெமைப் பரிந்து விடுத்தாள் வருவைகரும்
பொடிக்க வடிக்கப் பெறுரசப்பா வுரையாண் டியப்ப மாமணியே. ()

* கும்பஞ் சங்கங் கொடும்பகையாங் குயமா மிடற்று மாதைமதன்
அம்பஞ் சங்கங் கொடுங்கழுடுக் காது திரும்பா தருள்புரிவாய்

கம்பஞ் சங்கங் கொடுஞ்சுமக்கும் கனமா ளிகையும் பொனுங்கவிஞர்
தம்பஞ் சங்கங் கொடும்பறக்கத் தருவாண் டியப்ப மாமணியே. ()

*விரகம் பிடிக்கும் படிதொடுத்து மிகச்சஞ் சலமே செயப்பொருவே
றுரகம் பிடிக்கு மரிக்கங்கந் தோவந் தோவந் தது தாரீ [ள்
உரகம் பிடிக்குங் கொடியன்முத லோர்கள் மயங்க வேதராளா
கரகம் பிடிக்கு நேர்முழக்குங் கனவாண் டியப்ப மாமணியே. (கச அ)

* மெலிய வலியத் தரும்புழுகும் விரும்பா ளரும்பா லூட்டுமொரு
சலிய வலியத் தருங்கடனுஞ் சாயுண் டுமிழ்வாள் மதனேவால்
புலிய வலியத் தருஞ்சகிக்கப் போமே விவளை யணைகவிக்கு
வலிய வலியத் தருந்தருவாய் வழங்காண் டியப்ப மாமணியே.(கசகூ)

சிறிது விசனமுற்றபோது சொல்லியகவி.

* கோபமொடுங் காதலிதங் கொண்டணையேல் யானுமனத்
தாபமொடுங் காதலுழி தாண்டிடுவேன்—பாபமிணங்
காதமிசை பெற்றிப்பீ கண்டறிவாய் தாமதியேன்
நீதமிசை யாண்டியபப னே. (கருo)

* வேழஞ் சினந்தத்து வேங்கைதருந் தோலணிவா
ரேழஞ்சி னந்தத்து வேறினதை—ஆழமுறத்
தோண்டியப்ப தாமலேநேர் தொல்புவிசீ ரோதிளசை
ஆண்டியப்ப தாமலேமீ ராய். (கருக)

கதவுக்குங் கற்றூணுக்குஞ் சிலேடை.

* மிக்கதிறப் பாக்கலேயு மேவி யடைக்கலுற்றுத்
தக்கநிலை யோடிருப்புச் சார்தலினல்—இக்கு
உதவுந் தருவென் றுரையாண்டி யப்ப
கதவுங்கற் றூணுநிகர் காண். (கருஉ)

* என்றனக்கு மாதுலனீ யென்பதுபோல் நாயேனும்
உன்றனக்கு மாதுலனு வுற்றிருக்கும்—நன்றுமுறை
கொண்டிருந்தோ மாதலினீ கூர்ந்துவர யாசித்தேன்
தண்டமிழ்க்கந் தப்பபுனி தா. (கருங)

* அகத்தியினி லெட்டை யகற்றினதி னோடு
சகத்திலொன் றற்றதும்நேர் சாற்றம்—பகத்திநடு

இல்லாத முல்லைமிசை யின்னிளசை யாண்டியப்ப
வல்லாளா வந்தணைகு வாய். (கருச)

திருநெல்வேலியிலிருந்து பரங்கிரிக்குச்செல்லும்போது எழுதியகவிகள்.

* வானகத்தா ருஞ்சிகர வண்கயிலை போர்த்தவனைக்
கானகத்தா னைத்தசிவன் கண்ணுதித்த—மானவைவேற்
கந்தரது லாம்பவனி கண்டுபணி யாண்டியப்ப
கந்தரது லாம்பரவா கா. (கருரு)

* சிலசங் கதிசுருக்கிச் செப்புவன்கே ளென்றும்
நலசங் கதிவிருப்பி னார்க்கும—பலநலஞ்செய்
யுந்திருப்ப ரங்கிரியா மூரினுககிக கார்த்திகைநாள்
வந்திருப்ப ரங்கமெனு மால். (கருசா)

*மருமானை யேத்திமுக மாநகர்க்குச் செல்வேன்
வருமானை போலவுமே மார்பி—னிருவாரந்
தாக்கவந்த வாயுவெனச் சாற்றுமொரு பேர்படைத்த
சீக்கவந்த னக்குளிருந் தேன். (கருஎ)

* ஆனதிரு வீதுவரை யங்கிருந்தே னென்னினுநின்
மேனதிரு டிப்புனைவர் வேணியமர்—வான
மதிப்பருவத் தின்வரைக்கும் வண்டமிழ்சொற் றேன்கார்
மதிப்பருவ மிக்கவரு வாய். (கருஅ)

* நின்கடிதங் கண்டுமிந்த நேரம்வரை யைந்தருவின்
நன்கடிதங் கம்பரனேர் நாட்டுகினைக்—கன்பொடெழு
தாதிருந்த வம்பனுக்கோர் தாள்முகவூர்க் கீயெனகத்
தேதிருந்த வாழுமரசே. (கருகூ)

வெறிவிலக்கல் வெண்பா.

* காலைநடுக் கொண்டகலைக் காரிகையே கேளிரண்டு
காலைவிட்ட தாமிமைக்குக் கண்டனமென்—காலைவிரி
யாக்குவனை நோக்கினனை யாண்டியப்ப பூபதிபா
லாக்குவனை நோக்கி னதை. (கசா0)

இதுவுமது.

* அங்கசனு லஞ்சரிவை யாயினுமே வாடுவனீ
அங்கசனு லஞ்சரிவை யாயினுமே—எங்களனே

கம்பனைவா மெல்லுமன்றிக் காரிகையே யாண்டியப்ப
கம்பனைவா வென்றிடுமோ காண். (கசுக)

இதுவுமது.

* சங்காரஞ் செய்வரம்பிற் றங்கிளைசை மன்பகையைச்
சங்காரஞ் செய்வரம்பிற் சார்கிறத்தால்—இங்கிவருக்
கென்பயனு மென்பயனு வேறலன்றி யாண்டியப்ப
மன்பயனு டப்புரியம் மா. (கசுஉ)

இதுவுமது.

* தாண்டியமட் டும்பரிசூழ் தண்ணிளசைக் கண்கவிக்கு
வேண்டியமட் டும்பரிசில் மேவியருள்—ஆண்டியப்பன்
தோட்டங்கை வைத்திடவோ துங்குபிலாட் கன்னைபுதுக்
காட்டைவெட்டி விட்டதிலென் காண். (கசுங)

ஷை கடை தலைப்பூட்டு.

* இன்பங் கிடைக்குமனை யேயாண்டி யப்பமன்னுற்
றின்பங் கிடைக்குவந்த துந்தெரிவாய்—பின்பவனுக்
கில்லாக் கமடமதி யேந்திழையே யாகார
மில்லாக் கமடமதி லென். (கசுச)

நற்றாயிரங்கல்.

* வல்விக்க லுப்புமுலை மாதுகொளச் சந்துசொலும்
செல்விக்க லுப்புமுலை வுந்தீரும்—கல்விகவி
ஆண்டியப்ப னுக்குவகை யாமவற்காங் கர்வமிலே
சாண்டியப்ப வப்புவிமீ தாம். (கசுரு)

* தொனிப்பாடித் திரிகையெனச் சுழன்றுகய வரைத்துதித்துத் துயர்கொண் டார்க்கும், இனிப்பாடித் திரிவதிலை யெனப்பிரமாணமுஞ்சொலுதற் கெணும்போதென்முன், தனிப்பாடித் திரிகளைச் சேர்ந் தவன்போல்வக் ததைமறக்கத் தந்தான் கூனுச், சனிப்பாடித் திரிப்பால்முன் இலங்கைவென்ற வாண்டியப்ப தருவன் னேனே. ()

* கருங்கனவி நிகருமுலை விழியர்புக ழாண்டியப்ப காமன் போல்மு திருங்கனவி யாழனெனத் தேர்மதியு மாதயவுந் திருவும் வாணர்க்

கொருங்கனவி டாய்தவிர வூட்டுமிரக் கமுமழகு முற்றிலாரை [னே.
வருங்கனவி லேனுநினைத் திடமாட்டே னினைக்கில்வரும் வாந்தி தர்

சிவகாசியிலிருந்து பந்தற்கால் வேண்டுமென்று இரைந்தமைக்கும்
பதில்வாராமைபற்றி வதனபுரத்திலிருந்து எழுதிய கவி.

* உலகாளும் வேந்தரெலாம் புகழிள்சை யாண்டியப்ப வுசித ராஜ திலகாநீ யனுப்புவதும் பலகாலே யானதினுற் சிறிய நானும் பலகாலுங் கேட்டனுக்க வேண்டுமென நினைத்திருந்த பண்போ வன்றி இலகாநின் றிடவனுப்பி யெனக்கெழுத மறந்தனையோ வியம்புவாயே.

திருநெல்வேலியிலிருந்து எழுதிய கவி.

* என்கூட வளையுயிரா விசைந்ததென்ற ராவணனை யெரித்த கற்புப், பொன்கூட வனைபுனைந்த புனிதனிக ராண்டியப்பா புகழ்நின் வீட்டின், முன்கூட வளையின்மறந் திருந்தகுடை கொணர்ந்திலையேல் முனிந்து நின்பால், நன்கூட வளையொடுபா லுண்டுபல மாவருவ னுனுந் தானே. (கசுக)

* பெரும்பார்க்கு வள்ளலெனும் பிரபலவே ளாண்டியப்ப பிரபு தன்பாற், சுரும்பார்க்குங் குழற்கொடியே சுகித்துநிதம் வாழ்ந்திருப் பாய் சுகமே கொள்வாய், கரும்பார்க்கு மேயினிக்குங் கனகமுனக் குந்தருவான் கனியே தன்னை, விரும்பார்க்கு மிரங்கியருள் வேந்தி வன்போற் கிடையாது விளம்புங் காலே. (கஎ0)

* மடந்தையலங் காரியிவள் மனம்போல வொருதினமா வதுநீ வந்துநடந்தையலங் கூடுவதென் றுளினுமே புரிவையென்ன ஞாயங் கொங்கைக், குடந்தையல வாவுவடங் கொடியபடீ ரெனத்தெரிக்குங் கோவே யிந்த, அடந்தையல ரிடத்துவைக்க லாமாமுத் தமிழாண்டி யப்ப மாலே. (கஎக)

* புகலவடங் காப்புகழைப் பெறுமிளசை யாண்டியப்ப பூமா னேற்றுப், பகலவடங் கைக்கனந்தம் பணங்கொடுத்துச் சேர்ந்ததை யும் பார்த்துக் கொஞ்சம், இகலவடங் கொண்டுவெறுத் தானிவன்மே லாசைகொண்டே யின்னுங் கொங்கைச், சகலவடங் களும்பொரிய மயங்குகிறு ளீதெனதி சயமின் றாரே. (கஎஉ)

* வனசங்கங் கணக்கரமே நிகருமட மாதுநின்ப வனியைக் கண்டு கனசங்கங் கணப்பொழுதிற் கழலவிட்டா ளதுக்கனைமார் தாக்குங்

கோவில், முனைசங்கங் கணக்கின்றி யிழக்கவுஞ்செய் தார்பினுமா மோக மீறி, மனசங்கங் கணத்திரியா துணைந்தனள்வா வாண்டியப்ப வரிசை மாலே. (கஎங)

* அரும்பாயா சந்தனதா யுறப்பாய்ந்து மறுபுறம்போ யகன்பி னூட்குத், தரும்பாயா சந்தனமா பாயசமா வேதும்வெறுத் ததுவு மன்றி, விரும்பாயா சந்தனமா வரவுமிலே யெனக்கதறி மெலிவ ளிற் குத், திரும்பாயா சந்தனமேற் சேராயா வாண்டியப்ப செயபூமானே.

* கனகவனப் பரியசூடங் களைநிகருங் கனமுலேதாங் காது மாமோ, கனகவனப் பரிகலங்கை கலந்தறியாள் மயல்மிகுத்துக் கலங் கு வாள்கோ, கனகவனப் பரிதுறுவ தனமலர்ச்சி யகமலர்ச்சி காணச் சேர்வாய், கனகவனப் பரிமலியு மிளைசைநக ராண்டியப்ப கருணை மாலே. (கஎரு)

* விஞ்சாற்றுக் கனிலங்கும் பரங்கிரியைத் தொழுமடியே யிடியென் றேது, நஞ்சாற்றுக் கவிசனங்கொ ளாதருள்செ யாண்டி யப்ப நண்பா கன்னற், செஞ்சாற்றுக் கனிமுதுக் கிணையாகுங் கழு குமலேச் செவ்வேள் கோவைக், கெஞ்சாற்றுக் கவியனுப்பி னேம் தனை யுனதுதந்தை யென்போர் பாலும். (கஎசு)

* இருமருப்பு முலேயருக்கு வெகுவிருப்ப முறமனைக்கு மினிய தேனை மருமருப்பு வெங்கணையெய் மாரனென வந்துதித்து வணங்கா ரென னும், வருமருப்பு வாரிதிக்கப் புறமுறச்செய் திளசைநகர் வாழுந் திவ்ய,தருமருப்பு ளிதமணிபாம் நமதுசெல்லச் சாமிவரோ தயவேள் பாலும். (கஎஎ)

காட்டியதிற் பிழைகளிருந் தாலுமுறத் திருத்தியிடக் கனிவாச் சொல்வாய், நாட்டியபின் னூரிலங்கு சிவகங்கைக் கின்றுசென்று நாலு நாளில், ஈட்டியபொன் மலிமதுரை யுற்றிடுவேன் பின்புவர வெழுது வேனற்,றூட்டிகவா னென்னனிளங் கியபுகழாண் டியப்பசர சப்பூ மானே. (கஎஅ)

* நீலக்கந் தரனருள்சே ராண்டியப்ப ரஞ்சிதமா னேயன் றாதா வேலங்கந் தரமழைத்தும் வந்திலன்றூர் தந்திலன்யா னென்செய் வேன்செவ், வேலக்கந் தரனெனவே பொழியப் பொழியாது மின்

ஞ ரேவி, சாலக்கர் தரதியினர் தாங்காளென் றொருமொழிபோய்ச் சாற்று வீரே. (கஎகூ)

* கருப்பஞ்சா றுங்கசந்து குமட்டியிடு மரிவைமுனங் காமப் பாவி, அருப்பஞ்சா றுங்கரங்கொண் டெய்யவந்தான் றய்யதிரி பா கும் பாட்டில், விருப்பஞ்சா றுங்கவெங்க ளாண்டியப்பா நீவரவே வேண்டுங் காலு, மருப்பஞ்சா றுங்கனமுள் வேளையுமி ராவதனல் வரமாட் டாளே. (கஅ0)

* பூச்சுமைதா னத்தனையுங் கொண்டபடக் குறிக்கனியெப் போதுங் கொண்டாள், ஏச்சுமைதா னந்தருமம் புரிநகரு மேநகரு மெழுமே காம,மூச்சுமைதா னத்தெருவி லேகிடந்தாள் வருவனென மொழிகு வாயோர், பேச்சுமைதா னத்தருநே ருங்கரங்கொள் ஆண் டியப்ப பெருமைக் கோவே. (கஅக)

* அரசுவசந் தானமருங் கிள்ளையெனப் பேசுமென தருமைப் பெண்ணுக், கரசுவசந் தானமட வாருமிலே வேளும்விடுத் தகலா னன்றிப், பரசுவசந் தானயமாப் பாடிவிளை யாடிரசம் பணவும் வெள் கிப், பரசுவசந் தானதரு வாண்டியப்பன் பாலுமுறுள் பாவை தானே. (கஅ௨)

* சங்காகங் காரினமா வெனுங்களக்குந் தளவளமை சந்தக் காரிக், கிங்காகங் காமனம்பா லேதமரா யினதுதொடை யீந்து சேர் நித், தங்காகங் காகாவென் றேகதறி யுண்ணவொன்னூர் தசையை யூட்டும், துங்காகங் காகுலசே கரவதுலா வாண்டியப்ப சுகிர்த வானே. (கஅ௩)

* பதம்படிய மாதருடன் பரதமியற் றென்னின்மதப் பாவி யானற், பதம்படிய மாநொடியிற் பாயுமினிப் பாயுமிலைப் பழமென் பாள்பற், பதம்படிய மாவாசை மூன்றுமெடுத் தூண்டுநிலைப் பறச் செய் தைவர், பதம்படிய மாவிசுமஞ் செயதவனே ராண்டியப்பா பாலிப் பாயே. (கஅச)

* கட்டினமத் தனைப்பொருவே ளேவிரித்து வாரிமுனங் கடை யப் பாம்பாற்,கட்டினமத் தனையமுலே யரைப்புணராண் டியப்பாநாம் கடனு லேப, கட்டினமத் தனையவிடு கிட்டியென வட்டிவரக் கண்

டே மைந்திய், கட்டினமத் தனைக்குறுகும் தொகைதந்தா யேன்மிக ச்சங் கடங்கொள் ளோமே. (௧அ௫)

* கண்டங் கண்ட முடியாத கனிவா சகத்திக் கருளுவைபீக்
கண்டங் கண்ட மாமதியின் கவிகைக் காமன் பணியிலுனைக்
கண்டங் கண்ட போவெனவே காறி யுமிழ்வாள் பகைவர்களைக்
கண்டங் கண்ட மாக்கிடுமென் கனவாண் டியப்ப மாமணியே.(௧அ௬)

* அழுந்தப் புணரி முழக்குமத னேவிற் கலங்கி விழிப்புனற
வழுந்தப் புணரி ஞரியரே வருந்தா றவரென் றேமடுவில்
விழுந்தப் புணரி யெனப்பதுங்கு மின்றுட் கின்றுட் கனிந்துமுலை
யழுந்தப் புணரி னியகவிதை யணியாண் டியப்ப மாமணியே. (௧அ௭)

* இதுமா தருமா லெனைவிறுவுக் கிரங்கி யுறங்கி டாதுநினைப்
புதுமா தருமா னிடவடிவம் பொருந்திற் றெனவே கொடுத்திடுகைப்
பதுமா தருமா வென்னைவெறுப் பதுமா கருணை யென்பளணை
பொதுமா தருமா வலைப்பொருந்தப் புணராண் டியப்ப மாமணியே.

* கொடுக்குஞ் சாரதி யாகதுங் காவனு கூல வாண்டியப் பேந்தர விஜயனை, அடுக்குஞ் சாரதி யாமுனைக் கண்டுமா லாகி நாடுவள் வாடுவள் பன்னகக், கடுக்குஞ் சாரதி கோவா வெனுமிடைக் கன்னி பாலுவந் தின்றுதன் கைமிசை, உடுக்குஞ் சாரதி காரிதெவ் வோது நா லுள்ள வித்தை யனைத்தும் புரிவையே. (௧அ௯)

* பெருவி ருந்தைய ருந்தனல் போலுங்கு பேரன் வாட்டமன் காமனை நீங்கியே, தெருவி ருந்தைய னேபர னேயெனத் தேங்கி யேங்கிப் புலம்பிநைந் தன்னைகாள், வருவி ருந்தைய ருங்களை முன்னமிவ் வாறு கண்டிருந் தாரோவென் றோர்வள்சூழ்,தருவி ருந்தைய வாவொடு பேணிள சைக்கு ளாண்டியப் பேந்திரநீ சேர்வையே. ()

* மோகப் பாவிக்கு நானென்ன செய்குவேன் முற்று மேவினை யேவினன் சர்க்கரைப், பாகப் பாவிக்கு மேயென்று வாடுமிப் பாவை மேலுன்ன வாவைச் செலுத்துவாய், மாகப் பாவிக்கும் பூகத்தின் மேல்வளர் வண்மை சூழிள சைத்துரை மார்கள்கண், ணுகப் பாவிக்கு மந்திரி தந்திரி யான வாண்டியப் பேந்திர சிங்கமே. (௧௯௧)

* எந்த வித்தை யனைத்துந் தெரிந்துரை யெங்கள் ஆண்டியப் பேந்திரன் பானித, முந்த வித்தை யனைநினைத் தேமிக மோக மீறி

விவாகமு மின்றிப, சந்த வித்தை யனைவொடு மேவினுள் சாமி நீயி னிக் காமத் தழுவினை, வந்த வித்தை யனையரு வந்திட வாழ்வி யென் றுரைப் பாய்பசுங் கிள்ளையே. (கசஉ)

* நித்த ராசனு மாரிசி யாமயல் நீங்கி ஞர்பர மெம்முழுந் தாளும் வன், னத்த ராசனு மன்பகை யாங்கனி நங்கைக் கெங்ஙனம் போமனை யேவெகு, சுத்த ராசனு மானங்கண் டோமெனச் சொல்வ தென்னவர்க் கின்றோ விளசையு, தித்த ராசனு மெச்சாண்டி யப்பனைச் சேர்வை நீயுங்கண் டாலிது திண்ணமே. (கசங)

* பந்தங் கொண்டலை மேவப் பயந்திடும் பார மாமுலைக் கன்னியை நீபல, வந்தங் கொண்டலை நேர்பகம் விங்கவோ வாது சேரக் கருக்கொண்ட தென்றெனு, தந்தங் கொண்டலை மேலடித் தாளிதற் கைய மில்லைவந் தேமனஞ் செய்கொடைச், சந்தங் கொண்டலை யொக்கக் கவிக்கருள் சாமி யாண்டியப் பேந்திர பூமனே. (கசச)

* புல்ல வாதுவ ராமித பூயெனப் போந்து மாரனுங் கெஞ்சுவ தன்றிமுன், வெல்ல வாதுவ ராதுநிற் பானந்த வேளை தான்வசந் தாபர சென்னவுண், டல்ல வாதுவ ராகம தையுரைத் தாலு மஞ்சலிசெய்வளிக் கன்னியை, வல்ல வாதுவ ராபுரி காத்தவா வள்ள லாண்டியப் பாவந்து சேர்வையே. (கசரு)

* நேத்தி ரங்களைக் கண்டிகழ் நீலமே நேரு மாதர்கள் சூழிளசைக்கென்ன், ஞத்தி ரங்களைக் கண்டினி தாய்த்தரு மண்ண லாண்டியப் பேந்திர நீயருள், பூத்தி ரங்களைக் கண்டின கள்ளஞர் புத்திரன்பொரப் பெற்றவன் பின்ளைசற், பாத்தி ரங்களைக் கண்டினை நேரிசை பாடு வாள்நட மாடுவள் கூடவே. (கசசு)

* வாதி யானனங் காமனு மேபொர வந்த நாள்முத லின்றிருகாமமே,மாதி யானனங் கைக்கிது பொய்யல மாதி யாகந்த ருந்துரையேயொரு, தூதி யானனந் தஞ்சொல்லு வேனென்று தோற்றி டாதனை யேற்றனை வாய்தசப்,பாதி யானனம் பெற்றவர்க் கன்புசெய் பால வாண்டியப் பேந்திர சிங்கமே. (கசஎ)

* தருவாயி தாகரவா ரிதியாகு முன்சமுகந் தனிலென் ஞளாம் இருவாயி தாவுரைத்துச் சென்றபடி வந்திலனை உருத்து நீபொய்

வருவாயி தாவெனவே சினம்புரியேல் நானுமரு மக்வா மெய்யா
குருவாயி தாதையிவர் தேவெனக்கொ ளாண்டியப்ப குணபூ மானே.

* சந்தக்கந் தப்பாவின் றர்முணரென் மணியேயென் சாமி யே யென், சொந்தக்கந் தப்பாவென் றெவர்களுஞ்சொல் லாண்டியப்ப சுமுகற் காப்பாய், இந்தக்கந் தப்பாம லேற்றசிவ னெடும்பரங்குன் றிருந்தோய் துள்ளாய்ச், சிந்தக்கந் தப்பாதத் தெற்றுமிப முலைக்குற மான் சேருங் கோவே. (கசுகசு)

* அரும்புலவா விச்சமந்த பேரையும்பா டித்திரியா தழைத்தே யன்பாய்ப், பெரும்புலவா நமைப்பாடென் றிருநிதியுந் தந்ததன்றிப் பிரிய மாயா, வரும்புலவா வென்றழைக்கு மடந்தையர்வே ளாண்டி யப்ப மாறன் முன்னோன், விரும்புலவாக் கிழிதரும துரைக்கழைத் தென் றனக்குமகிழ் மிகச்செய் தானே. (உ00)

* திலகநியா யத்துரைமா ரரசுபுரி யிளசையெனுஞ் செழுநல் லூருக், கிலகநியா சத்தொடையான் மந்திரிபோல் வந்துதித்தெவ் வியனுந் தேர்ந்து, வலகநியா னவரைமயக் காண்டியப்ப பூமனைய மா னீ யென்னப், பலகநியார் வத்தொடுபெற் றுதவியெனக் கின்பரசம் பாலித் தானே. (உ0க)

* நம்பரத்தை யரைக்கணையா லெய்தவனற் சோர்கொடிக்கிந் நாட்டாய் மாரே, வம்பரத்தை யரைக்கவழித் திடக்கரைக்க நினைப் பர்பல வாறு நித்த, மும்பரத்தை யரைக்கணக்கி லாதுபுணர்ந் திதை வெறுத்தல் முறையோ சேர்பொன், னம்பரத்தை யரைக்கணியாக் கவிஞர்களுக் கருளாண்டி யப்ப மாலே. (உ0உ)

* கரையுங் கடவா துலவுமளக் கரையு முரச மாக்குமனங்
கரையு நிகராய்த் திகழுமருங் கரையு நெருக்கி யணைகுவன்சர்க்
கரையுங் கனியுஞ் சீனியுமே கரையும் படிதோத் திரமென்முரு
கரையும் பரையும் பகிர்ந்திடுதே கரையும் புரியுந் தமிழ்மாரன். ()

* வரையுங் கொடையாய்க் கொண்டுமிசை வரையுந் திருவா யூதியுமை
வரையும் புரந்து வருமாத வரையு னிகராண் டியப்பனுமே
வரைய மயக்கு மெழுத்தாணி வரையும் படிதந் தனனினித்து
வரையுஞ் சலியா தெழுகோடி வரையுங் கவிக ளெழுதுவனே. (உ0ச)

எட்டயபுரம் மகாராஜா அவர்கள்மீது கூறியது.

* கண்டதுண்ட மாக்கிடுவான் போலுமதன் வாளுருவிக் கன்னிமேலுத், தண்டமுண்ட முங்காட்டி யங்காட்டி நிற்கின்றான் றயைசெய் தீர்கசங், கொண்டதுண்ட னிற்பிறந்த சிங்கமுத லஞ்சும்விடக் கோரங் கண்டு, பண்டதுண்ட வணைப்பணியுங் குமாரெட்ட ராஜேந்த்ர பாக்ய மாலே. (௨௦௫)

இச்செய்யுளில் தீர்க்கங்கொண்டதுண் என்பதை "தூண்" என்று கனம் சின்ன மகாராஜா அவர்கள் தாமே கண்டுகொள்வார்கள் என சி. இராக்கப் பபிள்ளையவர்களிடம் சபதம்செய்து அங்ஙனம் ஜயித்துக்கொண்ட சமையம் சொல்லிய பாடல்.

* விளையமக மொடுதிரிபிற் பொருளொதுவா யிருந்தாலும் விளையங் கொண்டே, யிளையமக ராஜவெங்க டேசுரெட்ட னதிவிரைவிலிசைப்பான் பார்நங், கிளையமக ரானவர்க்கு ளவன்போலு மிலையென நான் கிளக்கும் வெற்றி, திளையமகத் துவமடைந்தேன் சபதமிராக் கப்பவள்ளால் சேரென் பாலே. (௨௦௬)

அண்ணாமலை ரெட்டியார் காலஞ்சென்றபோது கூறியன.

* அறந்தனையே புரந்திடுமண் ணாமலைப்பா வாணகவி யமைப்பின் மேன்மேற், சிறந்தனையென் பதுதெரிந்து தினம்பூரித் தெழுந்திடுமென் றேகம் பின்னால், இறந்தனையென் றிடமெலிந்த தினிச்சுகியேன் எவ்விடத்தி லிருந்தா யென்னை, மறந்தனையோ நினைந்தனையோ வருவாயோ வாராயோ வகுத்தி டாயே. (௨௦௭)

* பண்ணுண்ட தமிழ்பகரண் ணாமலைக்குஞ் சரமேயிப் பாவியுள்ளம், புண்ணுண்டு கவலையெனும் புரையுண்டு வருந்தநின்னற் புதமா மெய்யை, மண்ணுண்டு நினதுயிரை விண்ணுண்டு மிருப்பதறிவானேல் மாயன், எண்ணுண்ட விரண்டுமுண்பான் இனியுமிழான் றமிழ்ச்சுவையார்க் கினியா தம்மா. (௨௦௮)

ஆகச்செய்யுள் ௨௮௮௧.

---

## கொட்டாம்பட்டி
## எம். கருப்பையாப்பாவலர்.

இவர் மதுரை ஜில்லா மேலூர்த்தாலூகா கொட்டாம்பட்டியிலே கி. பி. 1864ஆ இடபரவி 9உ யாதவர் குலத்தில் மருதக்கொத்தனென்பவருக்குப் புத்திரராகப் பிறந்தனர். சிறுபருவந்தொட்டுத் தமிழில் மிகவிருப்பமுடையவராய்ப் பலவிடங்களிற்சென்று கல்விபயின்று கவிபாடுந் திறமைவாய்ந்தனர். மதுரை ஜில்லா மறையூரில் பிரபுகுலதிலகரும் அருங்கலைவிநோதரும் பெருங்கொடை வள்ளலும் இத்தனிச்செய்யுட் சிந்தாமணியை அச்சிடுவித்த மகோபகாரியும் ஆகிய ஸ்ரீமாந். பழ. சி. சண்முகஞ்செட்டியாரவர்கள் சமுக வித்துவானக இருந்தனர். மதுரைத்தமிழ்ச்சங்கத்து வித்துவான்களிலிவருமொருவர். இத்தனிச்செய்யுட் சிந்தாமணியிலுள்ள கவிகளில் பெரும்பாலன இவரது நன் முயற்சியாலேயே சேர்க்கப்பெற்றன. இனிமையாகவும் விரைவாகவும் பாடுந்திறமுற்ற இவர் கி. பி. 1907ஆ சிவபதமடைந்தனர். இவரியற்றிய நூல்களாவன :—திருப்பரங்கிரிமாலை, அழகர்பதிகம், நவரத்நம், திருப்போரூராண்டவர் திரிபந்தாதி, கட்டளைக்கலிப்பா, திருப்பல்லாண்டு, சிதம்பரசுவாமி கலாமாலை, வண்ணங்கள், திருக்கோட்டியூர்த் திரிபந்தாதி, திருச்செந்திற் றிரிபந்தாதி, ஓரெழுத்தந்தாதி, திருக்குரம்பைத்திரிபந்தாதி, இலக்குமியந்தாதி, திருமெய்யம் ஓரெழுத்தந்தாதி, மருதூர் நாகநாதர்மாலை, திருமயிலைக் கற்பகாம்பிகைமாலை, காமகவிரட்டைமணிமாலை, திருஞான சம்பந்தமாலை, வடதிருமுல்லைவாயில் மாசிலாமணியீசர்மாலை, பராசத்திமாலை, திருக்கோட்டாற்றுக் கலம்பகம், விக்டோரியா மகாராணியார் சரிதம், திருமயிலைச் செந்தில்வேலு முதலியார் மீது ஐந்திணைக்கோவை, பற்பல பதிகங்கள், மறையூர் மீனாட்சிசுந்தரேசுவரர் பிரபந்தத்திரட்டு முதலியன பலவுண்டு.

சேற்றூர் வெயிலுகந்த விநாயகர்மீது கூறியது.

* தண்ணறுங் கடப்பந் தார்ப்பினோன் றகப்பன் சாமிநா மவ்விதமாதல், தகவல வென்றத் தந்தையி னெல்லை தனைக்கட வாதவனெல்லைக்; கண்ணமர் வேயி லுகந்தவ னெனும்பேர்க் கண்ணொரு மாத்திரை யிகந்து, கருவொரு கொம்ப னாகியீன் றவர்க்குக் காலடங்கிடுமுறை காட்டிப்; பண்ணொடு துதிக்கைக் குரியனு யெங்கும் பரவுமுத் தானதந் தத்தின், பத்துமா வத்தி யரசென மகிழ்வாய்ப் பன்னருந் தென்னைமேற் கொண்டு; விண்ணவர்க் கடியர்க் கருணிழ லளித்து விட்டதாற் சேறையம் பதியில், வெயிலுகந் திருந்த விநாயகன் பதத்தை வேண்டிவெம் பவப்பகை வெல்வாம். (க)

சம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு.

* சீர்மருவுஞ் சிவபெருமா னடித்திடுகாண் முழவந்
திகழ்நந்தி யதிர்ப்பவெழு மொலிமுகிலி னொலியென்
றோர்மருவும் வேற்குமரன் மயிற்பரிக டோகை
யெடுத்துவிரித் தாடிடக்கண் டின்பணிபாம் பணிகள்
தார்மருவும் புயந்தலைவிட் டரியகரப் புழையிற்
றூண்வெருவி நுழைந்திடலுந் தன்னொருகூச் சதனால்
பார்மருவும் படிவிடுத்து மகிழொருகோட் டத்திப்
படாமுகத்துப் பேரரசைப் பத்தியொடு பணிவாம். (உ)

குன்றக்குடிக் குமாரக்கடவுள் தரிசனத்திலுரைத்தது.

* குன்றக் குடியாய் குமரா குகாவென்னைக்
குன்றக் குடியாயாட் கொண்டருள்வா—யன்றுவந்து
மன்றாடி னற்கு வருகுருவே யானுநின்பான்
மன்றாடி னேன்கைவிடா மல். (ஙட)

திருப்பரங்குன்றத்தில் நண்பரொருவர் பாற்காவடி
செலுத்தியபோது கூறியது.

* விண்ணப்பாற் காவடியான் வேண்டும் பரங்கிரியாய்
வண்ணப்பாற் காவடியான் வாழ்த்துநர்க—ளெண்ணப்பாற்
காவடிவாய்ப் பக்கங் கனிந்துதுணை யாநின்றுன்
சேவடிவாய்ப் பக்கருணை செய். (ச)

திருவாடானை ஆதிரத்நேசுவரர் ரிஷபவாகன தரிசனத்தி லுரைத்தது.

* பொங்குபுக ழாடானை யாதிரத்நே சுரசரபம் பொருவில் லா மற், றங்குகும்ப மீனம்வனத் தனுசுசிங்கங் கடகமொடு சார்ந்த கன்னி, யுங்குலவ வெளிமயக்கா மிடபமுற்று வந்தெவர்க்கு முறுதி யாகும்,துங்கதரி சனங்கொடுத்த துலகுயிர்முன் செய்ததவத் தோற்றத் தானே. (ரு)

உத்தமபாளையம் காளத்தீசர் தரிசனத்திலுரைத்தது.

* உனையொருவன் காற்செருப்பா லுதைத்தபோ ததைக்கேட்க வொருவ ரில்லாத், தனிவனஞ்சூழ் மலையினிலுந் தகுந்தவிட மெதுவென்னத் தாலத் தாராய்ந், தனைவர்களும் புகழ்வளஞ்சே ருத்தம

பாளையத்திருத்த லடிக்குமென்றோ, வளைமலர்ப்பூங் கோதையொடு
வீற்றிருந்தாய் காளத்தி வரையுள் ளானே. (அ)

மதுரை மீனாட்சியம்மை எண்ணெய்க்காப்பு உற்சவத்திலுரைத்தது.

* கூப்பிட்ட போதுதவு கூடலம்பி கையெண்ணெய்க்
காப்பிட்ட காட்சிகண்டு கைகுவித்தோர்—மாப்பிட்ட
கண்ணார் மயலின் கவலைகடந் தேகயிலைக்
கண்ணார் கதியடைவார் கள். (எ)

திருமயிலைக் கபாலீசர் தரிசனத்திலுரைத்தது.

* தன்னைப்பெற் றோருக்குந் தனிக்கற் பகமான
மின்னைப்பெட் பாக்கொண்டு மேன்மையா—மன்னு
மயிலைநக ரத்திருப்ப வன்காப்பா னென்று
மயிலைநக ரத்திருப்ப வன். (அ)

திருவாலங்காட்டில் நடேசர் தரிசனத்திற் கூறியன.

* கண்டந் திருவாலங் காட்டினாய் நின்னையன் பாக்
கண்டந் திருவாலங் காட்டிலே—யண்டமுற்றுங்
காக்கையான் காணரிய கண்ணுதலே யெம்பவத்தைப்
போக்கையா ஞானம் புரி. (கூ)

* பொருகாலை யிரதனைமுன் பொடிசெய்த பெருமானே பொருவிலாது, பெருகாலைக் கரும்பிரதப் பெரும்பணைசூழ்ந் திலகவளம் பெறுநீ ழற்கா, அருகாலை வனமாக்கொண் டருணடமிட் டந்தரமா யழகாத் தூக்கும், ஒருகாலை யெனதுமுடிக் குதவில்வருங் குறையென்னே யுரைத்தி டாயே. (கம)

திருநெல்வேலிச்சில்லா கருங்குளம் பெருமாள் கருடோற்சவ
தரிசனத்தி லுரைத்தது.

* இருங்குளக்கண் ணனங்கள்கரு வென்றுவளை யிளம்பிள்ளை பிளையே காக்கும், கருங்குளக்கண் மலையிருந்த செங்குளக்கண் ணவன்பாகக் கடவு ளின்பம், தருங்குளக்கண் டனையமொழி தருந்திருமா மகடலைவன் றன்னைக் கண்டோர், ஒருங்குளக்கண் மகிழ்வொரு பருந்தெடுத்து வந்தவியப் புரைக்கற் பாற்றே. (கக)

மதுரை மீனாட்சி ஆடியுற்சவத்தில் அழகர்கோவில் தேவஸ்தானத்தார் கடலைச சுண்டலுக் கோடிவிழுந்தபோது கூறியது.

* மாவிலங்கத் தாரு மதிக்கத் திருவழகர்
கோவிலங்கத் தார்கயற்கட் கோமளமன்—பாவிலங்கும்
ஆடிவிழா விற்கடலை யாற்சுண்டல் செய்துபடைத்
தோடிவிழா நின்றனரே தோ. (கஉ)

ஸ்ரீமாந் பழ. சி. சண்முகஞ்செட்டியாரவர்கள் நடத்திய முறையூர் மீனாட்சி சுந்தரேசுவரர் இரதோற்சவம் தரிசித்தபோது கூறியது.

* தேரேறி யுயர்முறையூர்ச் சிவபெருமா னுமையோடு சிறந்த சீர்த்தித், தேரேறித் திருவீதிப் பவனிவரக் கண்டுதரி சிக்கச் செய் தான், வாரேறி யழகுபொலி மலையேறி வளர்மானூர் மதியி லேறித், தாரேறி யோங்குபுயத் தடமேருச் சண்முகசீ தரபூ மானே. (கங)

ஸ்ரீமாந் பழ. ராம. கருப்பஞ்செட்டியாரவர்கள் நடத்திய முறையூர் மீனாட்சி சுந்தரேசர் திருக்கலியாணந் தரிசித்தபோது பாடியது.

* மன்னர் புகழு மதுரைநகர் மலையத் துவச வழுதிமிகு
வளமார் முறைசை மாநகரில் வணிகர் குலத்தில் வந்துதித்தே
அன்ன நடையங் கயற்கண்ணி யமுத மொழிப்பெண் ணரசியினை
யரிமா மறையோ னறிவரிய வரனுஞ் சோம சுந்தரர்பாற்
பன்னற் கரிய மணமுடித்துப் பார்த்தாங் கினிது பரிவுகொடு
பார்த்த னிராம பூபாலன் பாலன் கருப்ப வணிகேந்த்ரன்
மன்னுங் கருணைச் சொக்கேசர் மகிமைத் திருக்கல் யாணமன [தே.
மகிழ முடித்தா னிதுகண்டோர் வரத்தை யெவரும் வழுத்தரி

முறையூர் ஸ்ரீமாந் பழ. சி. சண்முகஞ்செட்டியாரவர்கள் பேரிலியற்றின.

* பொன்மாலை மருவுபுயப் பூமான்சண் முகநாதப் புனித நின் பால், நன்மாலை யணையவிழி நலமாலை மருப்புமுலை நடுவான் வந்த, என்மாலைக் கனிந்தணையா தினமாலை தலையடைய விகழ்வா யந்தோ, வன்மாலுந் தனத்தருக்கு மதன்மாலு வாய்மகிழ்ந்து மருவு வாயே.

* சந்தவிலைக் கணைத்திணுயி ரக்கரம்பன் னிரண்டுமுலை தாங்கு மெய்யின், பந்தருசீர் வல்லினமா மெல்லினமா மிடையினமால் பார் த்தார் யாரே, அந்தமின்று ஞானவிளிக்கா லல்வழிவேற் றுமை

மயக்க மறியாண் மான்மி, குந்தவியல் புப்புணர்ச்சிக் குரியவள்சண் முகவள்ளால் கூடி யானே. (கசு)

* சந்தனத்தை யனையகளத் தையலெழில் சொலத்தகுமா தரத்தி லேவ, சந்தனத்தை யன்றியெவ ரெதிர்நிற்பார் நின்மயலாற் றண்பா லுங்க, சந்தனத்தை யருந்துகிலா விதுசமய மணமுவந்து சார்ந்து வாசச், சந்தனத்தை யணிதனை வாய் முறையூர்ச்சண் முக வுயர்சீ தரபூ மானே. (கஎ)

* கற்கண்டு கசக்குமொழி கற்கண்டு வணங்குமுலைக் கன்னி முற்றும், அற்கண்டு யிலைததுறந்தா ளனமறந்தாண் மூச்சுமின்றி யயர்ந்தா ளிவ்வைதை, நிற்கண்டு சொலவடுத்தே னீகண்டு விரைந்தணை வாய் நீதா கற்றோர், சொற்கண்டு வகைபயிலுஞ் சுபகுணசண் முகநாத துரைப்பூ மானே. (கஅ)

* எக்கலையு முணர்ந்துமனந் தெக்கலைச்செய் சண்முகநா தேந் த்ரா கண்பார், அக்கலையா முலையோசா யக்கலையும் பணும்பெரிய தரிய தாம, திக்கலையே முகமினிய திக்கலையேய் குதலைமொழித் தெ ரிவை நின்றன், பக்கலையே விரும்பினளின் பக்கலையே கொடுத்தணை வாய் பலனுண் டாமே. (கக)

* தருமதுரை யெனவிளங்கு முறையூர்ச்சண் முகத்துரைநெஞ் சகத்தா ராய, வருமதுரைத் திடவெவரே வல்லவருஞ் சக்கரமுண் மயிர்ச்சாந் தாம்பின், உருவடுத்த தொருமீனு முன்னிரண்டு கற்பகம் பின் னோரூர் மூன்றும், அருமூன்று நான்குமது வைந்தடுத்தாற் கஞ் சமர சாஞ்சொல் வீரே. (உ0)

சென்னையிலிருந்து எழுதியது.

* தனதனையுத் தாம்பெறுமந் திரியாக்கி யாகமுறை சையிலே செய்து, மனதனைவ ருங்கனிந்து மகிழவருள் சண்முகசீ மானே யென்றும், எனதனைதந் தையினுமிக வென்பாலன் புளகருணை யிறைவா யார்க்கும், உனதனைய னீயேயென் றுனியான்சொன் மனு வைமனத் துள்ளு வாயே. (உக)

* நின்னையா வடுத்தவனென் பதுவுமிகக் கருணைகொடு நீயே யிந்தித், தென்னையா தரித்தவரு மினியதுரை யென்பதுவு மென் போல் வார்கட், கன்னையா யுலகமிசை யறியாதா ரெவரேநல் லழகாண் மீறிக், கன்னையா நிற்குமுலைக் காரிகையார் கவிமதனு கழறு வாரே.

* உண்ணுவது நின்னன்ன முடிப்பதுவு நின்றுகிலே யுளத்தெப் போதும், எண்ணுவது நின்செயலே யிசைப்பதுவு நின்புகழே யிடைய ருது, பண்ணுவது நின்றெழிலே படிப்பதுவு நின்கவியே பலனுக் கொண்டு, நண்ணுவது நானிந்த நாடெல்லா மறியாதோ நவிலு வாயே. (உ௩)

* எத்திக்கும் புகழ்பரந்த நினைச்சார்ந்த மகிமையினு லெவர்க் கும் காதில், தித்திக்கும படிபாடித் திறமைபெற்றேன் கற்றவர்தஞ் சிறப்பும் பெற்றேன், முத்திக்கு வினைவபலார் முறையூரா யெனக கிடர்செய் மூடர் தங்கள், புத்திக்குந் திக்கென்னும புகழ்பெற்றே னிவைமறக்கிற் புகன்மற் றியாதே. (உ௪)

* நீவருத்த முற்றனையென் றறிந்தநாண் முதலெனது நிலைமை தேர்வார், யாவருத்த மாநின்கண் ணுற்பார்க்கிற் சகிததிடா யந்தோ தேக, மோவருத்த மாமெலிந்த துனக்கன்றி யார்க்குரைப்பே னுல கிற் கற்றோர், பாவருத்த முணர்ந்துபரி சீந்தருள்சண் முகவிரைந் தென் பாற்கண் வையே. (உ௫)

* வருந்துவகை யென்னுடனேய் மருவிலொரு கணமேனு மனஞ்ச கிக்கா, தருந்துவகை யுடனென்ன வன்புகொடு கூறிமிக வாராய்ந் தெற்கு, மருந்துவகை தருமுனது வள்ளன்மைக் குணமெ ன்று மறக்கற் பாற்றோ, திருந்துவகை தேர்ந்தெவையுஞ் செய்பவரை யாதரிக்குஞ் சிந்தை யோனே. (உ௬)

* நின்னைவிட்டுப் பிரிந்துவந்த நேரத்தின் பலன்றானே நிகழ்த் தற் கொண்ணு, முன்னைவிட்டுத் தொடர்ந்தவூழ் முதல்வினையோ கோட்சார முடிவோ யாதோ, அன்னைவிட்டுப் பிரிந்தமக வாய்விசன நோயினு லவதி யுற்றுச், சென்னைவிட்டு மகலகிலா திருக்கின்றே னீக ருணை செய்வ தென்றே. (உ௭)

* படிதங்கிப் பெரும்புகழே பயனென்ன வளர்த்திடுபூ பதியே நின்றன், கடிதங்கி டைத்திடுமேற் கருத்தின்விசா ரத்தொடுதே கத்தி லுற்ற, கொடிதங்கி யெனத்தகுநோய் குலையுமதி சுகமும் வந்து கூடு நெஞ்சம், நெடிதங்கி ளர்ச்சியெனு நீளுவகைக் கடல்படியு நிலைகொள் வேனே. (உ௮)

ஸ்ரீமாந். பழ. சி. சண்முகஞ்செட்டியாரவர்கள் விவாக மகோற்சவ

வைபவ மங்கல வாழ்த்து.

* உலகெலா மீன்ற வொருமுதற் றாயை யுமையையமா வழுதிபா லுவந்த, அலகிலாக் கருணைக் கயற்கணு யகிலை யன்பொடு மணந் துறை துதிக்கைக், கிலகுவான் களிற்றை வரைகளைத் தனக்கோரிட மெனக் கொண்டுவா ழிறையைச், சுலவுறப் பெற்று மகிழ்ச்சிகொள் சோம சுந்தரர் திருவருட் டுணையால். (௨௯)

* கற்பக மைந்து நிலையதா வைகிக் கழறுதற் கரியபல் காட்சி, அற்புதக் கொடையீந் தாலெனக் கொடுக்கு மகமுளா ரன்பொடு வாழும், பொற்புறு தரத்தால் வழுதிமா வரைப்பிற் பொலியைந்து நிலையெனப் புகலும், நற்புகழ் நாட்டிற் பொன்னக ரிணையா நவிலவு முயரொழி னகரம். (௩௦)

* அவனியி லெவரு மறைந்திடு முறைகேட் டக்கண மவரவர் மனத்துள், உவகைமீக் கொளச்செய் துதவலா லிதுவே யுயர்முறை யூரென வுரைக்கும், தவமலி நகரில் வணிகர்மா மரபு தழைத்திட வுவந்தவ தரித்தோன, பவமற மாற்றூ ராகிய மாற்றார்ப் பரனைஞ் ஞாற் றீசனைப் பணிவோன். (௩௧)

* திருவமர் குளத்தூர் வகுப்பினைச் சார்ந்த திருவினன் றிருவினன் றிகழும், உருவகன் மதனு மொப்பனோ வென்னு முசிதமா வழகுறு முருவன், கருவமிக் குடையார் கலையெலா மடக்கிக் கழறுதன் வசமுறக் கணிப்போன், தருவென வீகைப் பெயர்ச்சொலை வினையின் றகுதியாக் கிடவல்ல தருமன். (௩௨)

* முன்னையாஞ் செய்த தவமிது வென்ன மொழிந்துசார்ந் தவர்க்கருண் முறையில், அன்னையாந் தரத்தன் அன்பினு தரத்த னணிபுய முயர்ந்தபூ தரத்தன், கன்னையா நிற்கு முலையினர் கருத்தன் கற்றவர்க் கருத்தினுங் கருத்தன், சின்னையா வணிக சிகாமணி தவத்திற் றிகழ்நவ மணிநிசர் சேயன். (௩௩)

* அகத்தியன் குன்று முனியெனக் கல்வி யதனினுந் தேர்ச்சி யா வமைந்த, மகத்துவ னாறு மகத்தனு நிதிசார் வடதிசைக் கோனு முன் மதித்தே, சகத்திடை விழைந்துந் தமக்குறு ததினுற் றமய னம் வெட்கியந் தரமாப், புகத்தமை நிகர்த்த கயிலைபொன் மேருப பொருப்பென வோங்கிய தனத்தன். (௩௪)

* பரவுதன் னெறியிற் பயணிலை யெனவேள் பார்த்திர தத்தை மாப் பரிவை, விரவுபுன் காற்றுப் பறந்திட விடுத்து விதித்ததன் னுருவையும் விலக்கித், தரைமிசை யனங்க னுகவே யெவர்க்குந் தனை த்தெரி யாமற்சஞ் சரிக்கில், உரவுறு புகழ்சேரி வனோர் யாரே யுவ மையென் றுவப்புறு மழகன். (௩௫)

* பாரக முழுதும் பார்த்தகங் களித்துப் பரவிடுங் காட்சியின் பசுகன், தாரக னேயென் றடுத்தவர்க் கருளு தாரகத் தன்பரி சனத் தன், வாரக முலைபான் மயக்கிடு மடவா ரகத்தையு மயக்கிடு மார் பிற், சீரக மாலை வகித்தரன் றுளிற் சீரக மாலையார் செம்மல். (௩௬)

* மனதுமா மகிழ்ச்சி மருவவிக் கடல்சூழ் வையகமுழுவது மறியத், தனதுமா சமூக வித்துவா னெனவென் றனையுவந் தாதரித் தருள்விற், பனதுரை சிறிதும் பயனில்வீண் மொழிகள் பகர்ந்திடா ப்பண்பினு னுயர்ந்து, வினவுதற் கரிய பெரும்புகழ் கீர்த்தி மெய்மை யால் விளங்கிய மெய்யன். (௩௭)

* அஞ்சுவான் றருவு மஞ்சுவான் றருசீ ரார்புகழ்க் கொடையி னர் பார்க்கும்,மஞ்சுவான்பொழியும் பரிசுபோற் பரிசுமகிழ்ச்சியி னீந் திடு வள்ளல், கஞ்சனேர் கரத்தன் கருணையா கரத்தன் களிப்புநீர் நிறைந்தசா கரத்தன், விஞ்சுகண் ணேட்ட மணிகல மாக விளங்கிய வித்தகக் கண்ணன். (௩௮)

* தாலமேற் றேன்றிற் புகழொடு தோன்ற றகுதியென் றுண ர்ந்திசை தழைக்குந், சீலமேற் றன்பு சுகுணமா தியசீர் திகழ்தரக் கொண்டநற் கொண்டல், பாலமேல் விழிகொள் பசுபதி யுமைமா பண்ணிரு கரத்தனைப் பணிந்து, மூலமா மறையின் முறைவழா தின்ப முன்னவே தொழுதுவாழ் முதல்வன். (௩௯)

*ஒருவனுக் கமைத்த வுருவம்போன் மற்றொருவன் றுஞற்றிட வறி கிலா தூழன்று, மருமலர்த் தவிசில் வீற்றிருப் பவனு மன்னுநான் குதலைய னென்னத், திருவுறு முருவப் படங்களொன் றினைப்போற் றிகழ்பல வியற்றிடுஞ் செயலான், தருவுயர் லண்டன் சித்திரக் கலை தேர் சங்கத்து மொருமுத்தாய்த் தழைத்தேன். (௬௦)

* முத்தமிழ்ச் சங்கத் தலைவனு மலைவாய் முனிப்புகப் பலவை யுங் காத்து, முத்தமிழ்ச் சங்கத் தலைவனென் றெவரு மொழிந்திட வளர்தரு முறையான், உத்தம குணத்த னொப்பிலா மணத்த னுவ மையில் மேனிபொன் வணத்தன், தத்துவ முணர்ந்தார் தமக்குமோர் தலைமைச் சண்முக நாமமா தவனே. (௬௧)

* தலம்புகழ் முறையூர் தனில்வள ரருண சலவணி கேந்திரன் றவத்தில், வலம்புரி யுயிர்த்த மணியென வந்த மகளுண முலையெனு மாதைக், குலம்புரி முறையிற் குறைபடா தன்பு குலவுறு திருமணங் குறித்து, நிலம்புரி தவமே வேதியர் கணித்த நிறைசுப முகூர்த்தநிச் சயமே. (௬௨)

* பிலவவை காசி யிருபத்து மூன்றிற் பிறங்குநாள் புதனிர வதனில், நலமலி வழுதி கொடிவளர்ந் திலங்கு நற்சுப லக்கினத் தினிலே, புலவரந் தணர்க ளுறவின ரான்றோர் புனிதவா சிகள்பல புகன்று, மலர்மழை பொழிய வாத்திய முழங்க மணந்தனன் யாவ ரும் வாழ்த்த. (௬௩)

* மதுரையை நிகர்த்த முறைசைமா நகரின் மகிழ்வொடு மண ந்தவெங் கோமான், குதிரையி லேறி வந்ததோர் பவனிக் கோலமா தசரதன் மதலை, மிதுலையின் மறுகிற் சனகியை மணந்து விளங்கு லாப் போந்ததை நிகர்க்கும், இதுவரை யிந்த வகையுலாப் போந்தா ரெவர்கொலோ விப்புவி யிடத்தில். (௬௪)

* மங்கல முகூர்த்த மணவிழாச் சிறப்பை வழுத்துதற் கெளி தன்று யினுநான், இங்குநேர் கண்ட தினிற்சிறி துரைப்ப னியல்வல் லீர் மகிழ்வொடு கேண்மின், தங்குபொன் னிந்த்ர விமானமோ தன தன் றனதுபுட் பகவிமா னமதோ, எங்கள்பூ மான்றன் மணவிழாக் காட்சிக் கெய்தியாங் கிலங்குமண் டபமே. (௬௫)

* அந்தமண் டபச்சி ரறைவதென் னதனி லமர்ந்தய ரியலிசை வல்ல, சந்தவிங் கிதத்தோ டெவர்களும் புகழச் சங்கீத நெறிமுறை வழாது, நந்தலில் வாணி தரத்தமர் வீணை நல்லெழி லிலங்குதம் பூர்மா, சுந்தர சுரகத் தொடுபிட்டி லெங்குந் தூலங்குமார் மோனியா வின்னும். (௪௬)

* தரைபுகழ் பால சரஸ்வதி யுரிய தவிலொடு நாகசு ரஞ்சீர், உரைபெறு மோர்ச்சசங் குடன்பல வியங்க ளொருவரு மிசையொடு முவகைக், கரையிகந் தெழுந்த கடலெனப பெருகிக் களிப்புறச் சுதிவழி கனிந்து, புரையக லமுதப் பொலிவெனப் பாடிப் புகழ்ந்தவா மகிமையென் புகல்வேன். (௪௭)

* பாடவ ரோர்பாற் பணிசெய்வ ரோற்பாற் பரிவொடு சோபனம் பாடி, ஆடுவ ரோற்பா லளவிலார் நெருங்கி யனைத்தையுங் கண்டுவந் திடுவான், கூடுவ ரோர்பாற் குலவுவ ரோர்பாற் கோதிலா தமைந்தசிங் காரம், நாடுவ ரோர்பா னலமெலா மோர்வா னவின்றிடற் கெவர்வலார் நாட்டில். (௪அ)

கல்வியிற் சிறந்த வள்ளுவர் நூலிற் கண்டுகேட் டுண்டுயிர்த் தூற்றுப், பல்விதத் தறியு மைம்புல னுந்தான் பகருமொண் டொடிகணே யுளவென், றெல்லையின் மொழிந்த தித்திரு மணத்தி னின்பமுற் றறிகிலா வியல்பே, வல்லமைப் புலவீர் செப்புமின் னிந்த மணவிழாக் காட்சியின் மகிழ்வே. (௪௯)

* அன்னமுஞ் சொனமு மாடையும் வந்தோர்க் கன்பொடு கோடிகோ டியதாய், இன்னமு தெனவே யீந்துவந் திடுபே ரின்பதை யியம்புதற் கெளிதோ, முன்னர்சண் முகவேள் தெய்வகுஞ் சரியை முறையொடு மணந்தல கினிலே, நன்னய வின்பங் காட்டக்கண் டாங்கு நாங்கண்டு களித்தது நலமே. (௫௦)

* இத்தனை மகத்வ மணவிழாக் காட்சி யின்பதை யீந்தவெம் மிறையாம், உத்தம மகிபற் குலகினிற் தீர்க்கா யுள்புகழ் கீர்த்திநற் செல்வம், புத்திர பாக்ய மிவைகண்மேன் மேலும் பொற்பொடு பெருகிட வருள்வான், நத்தன்மான் மருகன் முருகனை யேத்தி நாடொறும் பணிகுவம் நாமே. (௫௧)

திருவாடானையில் பாற்கர சேதுபதியவர்கள் செய்த பிரசங்கத்தி லுரைத்தன.

அரசங்கம் வளர்முகவை யம்பதியாள் சேதுபதி யரசர் கோமான், பரசங்கஞ் சிவபெருமான் பணிக்கெனக்கொள் பாற்கரபூ பால னின்று, கரசங்க முளவரியுங் காணரிய வாடானைக் கண்ணன் பாற்செய், பிரசங்க மெங்கணுநற் பிரசங்கம பொழிந்ததெனும் பெற்றித் தாமால். (ருஉ)

* சேர்ந்தோ ரிரவை யொழித்தரிய திருவை யளித்தா ளகமலரச்
செய்யுந திறத்தான் மேலான திசையிற் றினமுஞ் சேருகையால்
கூர்ந்த வீகைக குணமுறலாற் குலவு மொருசக் கரநிறமாக்
கொண்டார் வையந் தாங்குகையாற் கோதி லாத பாற்கரனே
நேர்ந்த கருணைப் பாற்கரநன் னேய சுமுக முகவைநகா
நிகரில் லரசு புரிசாதநீத சேது பதியேநின்
வார்ந்த புகழின் மதிநிகர்க்க மாட்டா தோடி மதிதோறும்
மதிதேய்ந் ததிக மாக்களங்க மருவி னனின்சீர் வழுத்தரிதே.()

இராஜபாளையம் தருமராஜா பேரிலியற்றியன.

*வனத்திருக்கு முகம்பலிடை முலேகளங்கை சிறுமான்
மதிமுலே நூன் மலேபணில மரையனேய வினமுங்
கனத்திருக்குங் குமிழ்நிலநா சிவளேசெவி யுயர்செங்
கனகமுட லல்குலணி யரசிலேமா கமலா
சனத்திருக்கு மரியிவளே யிளேயளென வழுதுந்
தாமுமுறு மரிவையணே தவநெறியின் முறையான்
மனத்திருக்கு மறவினேயு மறவருள்செய் திருமான்
மலரடியிற் றுதிதரும ராஜபுஜ பலனே. (ருச)

*ஒருமரா மரமேழு மூடுருவ வெய்தவனே யுளத்தி லேத்துந், தருமரா சேந்திரநின் பெயர்ப்பொருளே நிதிகொடையிற் றக்கோ னென்ன, வருமரா வரசமரர் குருவுநின தியற்கையுள மதிக்குந் தோறு, மருமராய்ப் பூதலத்து மந்தரத்தும் புகினின்சீர் வழுத்தற் பாற்றோ. (ருரு)

சென்னையில் தண்டலம் முருகேச முதலியார்பேரி லியற்றியன.

*பொன்மருவு புயசயிலன் புகழ்ச்சென்னை நகரரசு புரிவோன் மிக்க
தன்மருணை நிதியதிக தயாளபிர பலசுகிர்த தனவா னென்றும்
என்மனமு வகையுறவந் தினிதருளு முருகேச விறைவன் வாழப்
பன்மதசம் மதபரம பகவகுரு பரமுருகற் பணிகு வேனால். (ருசு)

*அவனிமுற்றும் புகழ்சென்னை நகரின்முரு கேசமன்ன னழக
னாகப், பவனிவந்த போதுகண்ட பாவையர்க்கெ லாமேது பாலித்
தானோ, கவனமுற்று மவன்பெயரைக் கருதியொரு நாளுகமாக்
கழிக்கின் றாரால், சிவன்விழியா லெரிந்தமத னெழுந்திருவே சமய
மெனச் செய்தான் போரே. (ருஎ)

*இப்படியுஞ் செய்வதுண்டா சென்னைமுரு கேசவள்ள லென்
பாற் றன்ம, னப்படிப்பல் கலவியெலா நடத்தியெனைப் பிரியனென
நவின்று நல்ல, செப்படிவித் தைக்காரர் செயுஞ்சாலம் போற்பலவுஞ்
செய்தான் சித்தம், எப்படியோ வின்னும்வரா திருக்கின்றான் சகியே
நா னென்செய் வேனே. (ருஅ)

சென்னையில் திருமயிலை செந்தில்வேலு முதலியாருக்குக் கூறியன.

இதிற் பன்னிரண்டு ஊர்ப்பெயர்கள் வந்தனகாண்க.

*திருமயிலை வான்மியூர் முகிலையண சாயற்
றிகழ்கோதைத் திருவல்லிக் கேணிலைமை யுற்ற
ஒருமுல்லை வாயினகை யாலங்காட் டுவிழி
யொற்றியூர் வதவசமோ வெனநொந்துன் மயலால்
வருமணிமே கலைக்காஞ்சித் துகில்வளைக ணழுவ
மலைத்தண்ணு மலைமுலைபின் வார்கிழிய வந்தாள்
தருமதுரை யேசெந்தில் வேலரசே யன்று
டனைப்புலியூ ருக்கனுப்பிற் சார்பாக்க முனதே. (ருகூ)

இதிற்பன்னிரண்டு பலகாரப் பெயர்கள் வந்தன காண்க.

*தேங்குழலப் பந்தோசை யித்தியமா வடைவிற்
றிகழ்வடையப் பழம்பணியா ரங்களெலா நீத்தே
ஓங்கியமு றுவட்டுபல காரமுள வனைமார்க்
கொடுங்கிப்பா யசநிகர்த்த வுற்றார்க்கு மஞ்சி

வீங்கிபக்கோ டாழுலைபிற் பூந்தினவு கொண்டுன்
விரகத்தி லதிரசமுற் றன்பிட்டு வந்தாள்
தாங்குதனின் கடன்செநதில் வேலரசே யவணின்
றன்பாலா யடைதலெழி றருமுறுக்குத் தானே. (கூ0)

இதில் ஏழுமரப்பெபர்கள் வந்தன காண்க;

செந்தில்வேல் வள்ளானின் றிண்புபத்தார் பற்றநித்தம்
வந்தில்வேண் டுஞ்சீர் வளப்புடைய—வநதமின்வேல்
ஆலமரங் கண்ணரசா மலதுலதறிக் கோங்குமுலை
பாலைவேம் பென்றுண்ணுள் பார். (கூக)

தேவாரம் ஜமீன் மானேஜர் பழனிக்குமாரப்பிள்ளை பேரிற் கூறியன.

*கல்லாத மூடர்கள்பாற் கவியுரைக்கிற் கற்பனைசொற் கனிவின் சாரம்
எல்லாநன் கறிவரா வறியாதார்க் குரைத்தல்கம ரினிலே பாலை
இல்லாமற் கவிழ்த்ததொக்கு மென்பதுநீ யறியாயா வின்பாச் சொல்ல
வல்லாருன் பாலன்றி யெவர்க் குரைப்பார் பழனிக்கு மார வேளே.

*பாட்டையாக் கதிவீட்டுக் குபர்கம்பச் சாமுண்டி பாலன் பாகப்
பாட்டையான் பாடியதைப் பார்த்துமகிழ்ந் ததிகநயம் படத்தே வார
பாட்டையா பழனிக்கு மாரவே ளுரைகவியைப் பார்க்கி லோசாப்[ம்
பூட்டையாவெறுப்பமமுதமுங்கடைப்பட்டிருந்ததெனபகருவோ
மே.

கம்பம் பள்ளிக்கூடத்துப் பிள்ளையென்ற கோனேரி திருமலைப்
பிள்ளைக்குக் கூறியன.

மீனேறுங் கொடியனம்பான் மெலிந்து மாது
வேங்கடத்தான் றீர்த்தமழ கியவரையி னுமங்
கூனேறும் வின்னுதலார் மதனிருபபுக் கூறிற்
குலவுநர கரியணைபோர் கூடல்குறிப் பென்றாள்
கோனேரித் திருமலைவே ளெனக்கம்ப நகர்வாழ்
கோமானே யெனக்கேட்கக் குறிப்பறிய நாணி
மானேரு முலைநோக்கி யிதழ்சுவைத்து மயங்கி
மாலானுண் மலரணையின் மகிழ்ந்தணைபூ மானே. (கூச)

*ஒங்குபுகழ்க் கோனேரித் திருமலைவே ளென்பா
லுவகையுடன் செய்கலவிக் குரியவந்த மதனும்

சங்குரிகர்த் திடவல்ல னல்லன்மிக நல்ல
னென்பள்ளிக் கூடத்துப் பிள்ளையென்ப தறிந்தே
தாங்குபள்ளிக் கூடத்துப் பிள்ளையென்பா ரிவனே
தாலமதி லுயர்கம்ப நட்டரசாள் தனதன்
பாங்குரிமை யடைந்தவனுன் மறந்திருக்கப் படுமோ
பாங்கிமின்னே விரைந்துவந்து பரிந்தணையச் செய்யே. ()

சேற்றூர்ச்சம்ஸ்தானம்தாணுபதிபழநியாண்டிக்கரையாளர்பேரிலுரைத்தன.

* வண்ணக் கஞ்ச மதிமுகங் கூரயின் மானக் கஞ்ச நடையிடை வான்மினுக், கண்ணக் கஞ்ச னுயிர்கவர்ந் தான்சுத னஞ்சற் கஞ்சலர் வாளியை யேவவென், திண்ணக் கஞ்சர முண்டிலை யென்னவே செய்பக் கஞ்சரு ராய்ச்சேர்ந் தணைந்தருள், பண்ணக் கஞ்சருப் பங்கொண்ட வற்பணி பழனி யாண்டிக்கு பேரசம் பன்னனே. (௬௬)

*அத்திக் குஞ்சர தம்பொருந தென்றற்கு மன்றிற் குஞ்சர மைந்து மலரென,எத்திக் குஞ்சர சஞ்செய் தையுமத னிருட்டிக் குஞ்சரத் துக்குநொந் தாளையா, நத்திக் குஞ்சர ணம்புனு மென்மொழி நங்கைக் குஞ்சரண் நல்கி யணைந்தருள், பத்திக் குஞ்ச ரதாதிப ரும்புகழ் பழனி யாண்டிக் குபேரசம பன்னனே. (௬௭)

*வன்னச் சந்தநம் பூசிலள் கற்கண்டும் வாய்ந் சந்தன முய்புசித் தாளிலே, அன்னச் சந்தனங் கன்செயும பேரினு லகத்தச் சன மேனும்வி டாதுன்பால், துன்னச் சந்தன மாமலை யாள்விடில் துய்த்துச் சந்தன மீத லழகன்றே,பன்னச் சந்தனங் கைக்கினி யார்துணை பழனி யாண்டிக்கு பேரசம பன்னனே. (௬௮)

ஆற்றுக்குடி ரா ம. ப. வ. ஏஜண்டு பாடகலிங்கம்பிள்ளை பேரிலுரைத்தது.

*காதலொடு மந்தாதி தனைத்தூதா விடுத்துமுலைக் கலம்ப கத்தின், சீதநீர் மாலையுறு நான்மணிமா லையையெறிந்தாள் சிவந்த வண்ண, மாதகையள் கோவையுலா மஞ்சரியார் பூங்குழலம் மானை யாடாள், சாதகமா வந்தணைவாய் பாடகலிங் கம்பிள்ளைத் தமிழ்க்கோமானே. (௬௯)

*சென்னையில் க. வ. திருவேங்கடநாயகரவர்கள் செய்த பிரசங்கம் கேட்டு வியந்துரைத்த வசனரூபச செய்யுள்.

*திருவேங் கடநா யகவர்கள் செய்து
வரும்பிரசங் கத்தை மகிழ்ந்தே—வருங்கேட்கில்

அன்பும் அருளுங்கொண் டாநந்த மாப்பக
வன்பதத்தைக் சார்ந்து வாழ்வார். (எ0)

சிவகங்கை சமீன் சக்கந்தி சுப. கண. அண்ணாமலைசெட்டியார்பாலுரைத்தது.

*செந்தமிழி னருமையறி யாதவர்பாற் கவிகளொன்றுஞ் செப்பே மன்னர், தந்தபரி செவையெனினுந் தக்கதென வேமதிக்கோந் தரணி மீது, சந்ததமு மெமக்குரிய தகைமைகண்டாய் நினதருமை தருநண் புக்கே, வந்தனமண் ணாமலையாம் வணிகர்குல மணியேநீ வாழ்க மாதோ. (எக)

சக்கந்தி, சுப. கண. சுப்பிரமணியஞ் செட்டியார்பாலுரைத்தன.

*பொன்னோங்கு மகரந்தப் பொழிலோங்கு சக்கந்திப் புரியு ளோங்கு, தென்னோங்கு வணிகர்குலத் திருவோங்கு சுப்ரமண்யச் சீர்த்தி யோங்கு,மன்னோங்கு புகழ்ச்செல்வம் வளர்ந்தோங்க வருள் புரிவான் மதிக்கு மென்றன், முன்னோங்கு கடப்பமலர் முருகோங்கு முருகனையே முன்னி வாழ்வாம். (எஉ)

* கடல்புடைசூழ் புடவியெலாம் புகழ்ந்திடுசக் கந்திநகர்க் கண்ணே வாழும்,திடவணிகர் குலத்துயர்சுப் பிரமணியப் பெருந்தகையாந் தியாக வான்றன், விடலரிய பெரும்புகழே பாற்கடலாய் மதியுமொய் வெள்ளிக் குன்றாய், மடவரலா நாமகளாய் வைகினவே லவன்சீர்த்தி வழுத்தற் பாற்றே. (எங)

*படிந்தவர்தம் பாவமெலாம் பறித்தருளுங் கடற்சேது பதியிற் பாவம் விடிந்ததென நந்தனமும் விளங்குதிருப் பரங்குன்றின் மேவிற் றீமை கடிந்தருளுஞ்சரவணப்பொய்கைப்படியுமனமதிகக்களிப்பிற்செய்து படர்ந்தபுகழ் பலபெறாஉஞ் சுப்ரமண்ய முகில்போலார் பாரின் மீதே.

சிவகெங்கை விசையசாமித்தேவர்பா லுரைத்தது.

*மாது வதன மதிதா மரைமலையே
மாது வதன மதித்தணைவாய்—ஓதுதமிழ்ப்
பாவிசையச் சாமிதரும் பண்புடையாய் நண்புடையாய்
மாவிசையச் சாமிபூ மா. (எரு)

கொட்டாம்பட்டி சித. வெ. கோபாலுபிள்ளைபேரி லுரைத்தது.

*பார்பரந்த புகழ்க்கொட்டாம் பட்டிநகர்ச் சிதம்பரபூ பதியின் பாலர்
சீர்பரந்த கோபால முகிலேயிவ் வுலகெங்குஞ் சிறந்த நின்றன்
ஏர்பரந்த கொடைப்புகழும் பிரதாப மும்பெருகி யிருத்த லாலே
தார்பரந்தபுயமுடையாய்நினைவெள்ளைச்சாமியெனச்சாற்றுவாரால்.()

ஆகச்செய்யுள் உகஅக௬.

---

## சீ. வெங்கட்டராயலு நாயுடு காரு.

இவர் உமிலேப்பேட்டைச் சீனிவாசநாயுடு புதல்வர். அவ்வூரில் தமிழ் வித்துவான்களை யாதரிக்கும் பிரபல வக்கீலாகிய ஸ்ரீமாந் முனியப்பபிள்ளை யவர்களிடம் கல்விகற்று குமஸ்தாவாகவுமிருந்தார். கவிபாடுவதில் மிகவல் லுநர். ஸ்ரீரங்கநாதர் பிரபந்தத்திரட்டும், வருக்கக்கோவையும் இவரியற்றி யன. கம்பராமாயணம் ஆரணியகாண்டவுரை யாசிரியருமாவர். இவரியற் றிய சீரங்கச்சிலேடை வெண்பா மிகவும் அருமைப்பாடுள்ளன. இற்றை க்குப்பத்து வருடங்கட்குமுன் தேகவியோகமாயினர்.

மதுரை விவேகபாநுப்பத்திராதிபர் மு. ரா. கந்தசாமிக்கவிராயர்
மீது கூறியன.

சிலேடைக்கவிகள்.

மன்மதனுக்கும் தலைவனுக்கும்.

* இயல்வித்து வான்வரையுந் தூக்கெழிற்கே தனமஞ்சே லெ ணத்தந் தோய்மேன், மயசுமதிக் குடையாயே வருமயங்க வமர்செய் யாண் மகனே நல்லார், வயம்பணிகொள் பாசங்க ரதியான மாதவனே மணக்கோ லாநன், நயமருவு தேன்குணனே யெனக்கந்த சாமிரதி நாதன் றானே. (க)

முருகனுக்குந் தலைவனுக்கும்.

* கனவானந் தியக்குறப்பொற் பணங்கொடுநித் தமுமின்பாக் களியி சைச்செந், தினகரவேர் துங்கவிநா யகர்க்கிளையாய் பெரும் புகழ்ச்சத் தியங்கைக் கொண்டாய், பனிரக்கம் பெறுமனனே யென வரலாற் றிருவதனப் பதிக்கண் மேவும், புனிதச்சொற் கந்தசுவா மிக்கவிஞன் குமரனெனப் புகல லாமே. (உ)

சந்திரனுக்குந் தலைவனுக்கும்.

* கலையேற்ற முற்றவனத் தவளமுளா னிரவலரைக் களிக்கச் செய்வான், விலையேற்ற சோமனுடைக் கையனுழி தோன்றுகைய னெனவிளம்பச், சொலையேற்ற புலவர்மன மகிழவருங் கவிகள்பல சொல்லுந் தங்க, மலையேற்ற திண்புயத்து மால்கந்த சாமிவளர் மதியொத் தானே. (௩)

இராமனுக்குந் தலைவனுக்கும்.

* நயமிருந்த சரதன்மைந்தன் கலைமங்கை வடிவாக்கி னவன்சீரங்கன், நயவின்வனக் கவிமையணி யாக்கொண்டு புலவரையாதரிததாட் கொண்டான்,உயரலையுற் றிடுநெடுநீர் மைசெறியப் படைத்தவனென் றேத லாலே, பயமெனுஞசொன் மடநதையருட் கவர்ந்தகந்த சாமிராம பதியொத தானே. (௪)

பிரமனுக்குந் தலைவனுக்கும்.

* கனமருவு மனவாக ஞநிதமும் பாரதியா கத்தோ டொன்றும், இனியவா சகமபடைத்தாய் மாலுநதி வநதவனே யெண்கண் கொண்டாய், கனகபமவைதத வமபயதகா யெனமுகவூர் வளர்கந்த சாமிஞான, தினகரனமா மறையுணர்நத திரனந்த நான்முகததுத் தேவொத் தானே. (௫)

சிவனுக்குந் தலைவனுக்கும்.

* கற்றவரைக் கைதூககிப புரந்தகன முறவெறுக்கை களிப்பிற் றந்தாய், வற்றிரவி டங்கண்ட மதியோங்கு தலையுள்ளாய் மானத தாபூப, பற்றுபவ னறவெல்வாய் மாசடையாய் பார்வதியின் பாதி யாகா, சொற்றநலலார் மாலையனே யெனக்கந்த சாமிசிவ சொரூபி தானே. (௬)

சேடன் உவமை விலக்கு.

* பனுமிடநா விரண்டுடாய் மாலடிக்காய் கண்க்கற்ற பணத்தையுற்றாய், கனமிழக்காய் தரிததிரியா யிரத்தலையேற் றாத்திரியாய் கடுப்பை யெய்தாய், அனவரதம் போகமுடங் காதிருப்பா யாதலினுலாதி சேடன், உனைநிகர்வி சேடனல னுயர்கந்த சாமிமுக வூர்க்கோமானே. (௭)

யமகம்.

* சங்கரனு ராயணல்பா னின்னினுந்து துரைப்பரெவர் தயை செய் நீணே, சங்கரனு ராயணன்மை யென்றென்னிட யத்துன்றேல் தகைசால் சாது, சங்கரனு ராயணந்தச் சகிமாரோ கொடியரெனுந் தைய லேக்கா,சங்கரனு ராயணன்ருள் பரவுகந்த சாமியெனுந் தமிழ்ப் பெம் மானே. (அ)

ஆகச்செய்யுள் உகள௬.

---

## திரிகூடராஜப்பக்கவிராஜர்.

இவர் பாண்டித்தலம் பதினென்கனுள்ளொன்முன திருக்குற்ருலத்தைச் சார்ந்த மேலகரத்தில் இற்றைக்கு 170 வருஷங்கட்கு முன்னிருந்த சிறந்த வித்துவசிகாமணி. வேளாளமரபினர். இவர்கவிகள் தமிழ்ப் புலவர் யாரும் மெச்சத்தக்கன. தலைமைப் பாடுள்ள புராணங்களுளொன்ருகிய திருக்கு ற்ருலப்புராணம், குறவஞ்சி, யமகவந்தாதி,மாலை,ஊடல்,உலா,இவை சுவாமி பரமாகவும், குழல்வாய்மொழியம்பிகைமீது வெண்பா, திரிபந்தாதி, மாலை, அந்தாதிமுதலியனவும் இவரியற்றியன. திருவாவடுதுறை ஆதீனத்தில் மகா சந்நிதானமாகிப் பெரும்புகழ்படைத்த ஸ்ரீமத் சுப்பிரமணியதேசிகசுவாமி கள் இவர் பரம்பரையில் அவதரித்ததென்ருல் வேறு விசேடம் கூறவும் வேண்டுமோ.

சம்பிரதாயகவி.

* எட்டுவரை யுங்கொறித் தோரேழு கடலையும் எமதுவாய்க் குள்ளடக்கி, இனிதட்ட வேழம் பிடித்துச் சுவைத்துமிழ்ந் தெழி லங்கி யூடுவைகி; வட்டமிடு திங்கள்தனை யிருகூறு செய்துபின் மாந் தியே செங்கதிர்தனை, வாரிப் பிடித்தே யிடித்தடித் ததனிலெழு மா வையு மருந்தவல்லேம்; கொட்டமிடு மம்பரங் கீறியே மேலுமெழு கோடியம் பரமுறூறிக், குன்றிதனை யொருகையி னுறைம்ப தேந் திமறு கூடுபாய்ந் திடவும்வல்லேம்; நட்டமிடு நடனசபை முக்கணிம லக்கடவு ணன்னகர மன்னுபசுவும், நானிலம் புலியையுந் தின்னு மிது பொய்யல்ல நாடறியு முண்மையாமே. (க)

ஆகச் செய்யுள் உகள௪.

---

## குன்றக்குடி அப்பாவுபிள்ளை.

இவர் மதுரைஜில்லா குன்றக்குடியில் வேளாளர் குலத்தினர். தமிழிற் பலநூல்களை ஆராய்ந்தவர். சமயோஜிதமாக இரண்டு பொருள்படுமாறு சாதுரிய வசனங்கள் பேசுவதில் அதிக சமர்த்தர். பெரிய சபையை அடக்கிப்பேசுந் திறமை பெற்றவர். திருவண்ணாமலை ஆதீனத்தார்களிடமே பெரும்பாலும் தமது காலத்தை யொப்பித்தவர். முறையூர் ஸ்ரீமாந் பழ. சி. சண்முகஞ்செட்டியாரவர்களால் ஆதரிக்கப்பெற்றிருந்தவர். இரண்டு வருடங்கட்கு முன்பு சிவபதமடைந்தனர்.

முறையூர் ஸ்ரீமாந் பழ. சி. சண்முகஞ் செட்டியாரவர்கள்
சமுகத்திற் கூறியன.

* பாண்டியனூர் கூடலினிற் பண்டுசொக்க லிங்கரன்பாய்
ஆண்டதனி னொன்குறுபாவ் வாடலின்றும்—காண்டுமெனச்
சொக்கன்முறை தோன்றவந்தான் றொல்ராம சாமியெனத்
தக்கபெயர் கொண்டுதன தன். (க)

* முப்பா லுணர்ந்து முறைநகர்வாழ் சண்முகவேள்
அப்பாவா வென்றெனையு மாதரித்தான்—மைப்புயல்வான்
கற்பகமாக் கைம்மா மணிநிதிமாக் கண்டவன்போல்
நற்புவியில் வாழ்வுபெற்றே னான். (உ)

* தீராப் பிராரத் துவசஞ் சிதமகற்றி
வாராம லாகா மியமறுத்தாட்—பார்மிசையோ
ரன்னையெனத் தோன்றி யறிஞரையே யாதரித்தான்
சின்னயன்றன் சண்முகப்பேர்ச் சேய். (ங)

ஆகச்செய்யுள் உகஎஎ.

---

## அண்ணாமலைரெட்டியார்.

இவர் திருநெல்வேலிஜில்லா கரிவலம்வந்த நல்லூருக்கடுத்த சென்னிகுளமென்ற ஊரிலே பிறந்துசேற்றூர்ச் சம்ஸ்தான வித்வான் இராமசாமிக் கவிராயர் அவர்களிடம் கல்விபயின்று பெரும்பாலும் ஊற்றுமலைச் சம்ஸ்தானத்திலும் சிறுபான்மை சேற்றூர்ச் சம்ஸ்தானத்திலும் வித்துவானாயிருந்தனர். திரிபு யமக முதலிய செய்யுட்கள் பாடுவதில் மிகச்சமர்த்தர். நவநீத கிருஷ்ணன் பிள்ளைத்தமிழ், சங்கரநாராயணர் கோவிற்றிரிபந்தாதி, காவடிச்சிந்து முதலியன இவரியற்றியநூல்கள். இற்றைக்கு 18 வருடங்கட்கு முன் தேகவியோகமாயினர்.

ஊற்றுமலை ஜமீந்தாரவர்கள்மீது கூறியன.

* குடத்தனத்தைப் புதைத்துமறந் தறிந்தவர்போற் பெற்றவிந் தக் குமரி மாம, குடத்தனத்தைக் குறித்தனங்க னனந்தவம்பு சினந் தவம்பு கொண்டின் றெய்யக், குடத்தனத்தை நிகர்களத்தார் வைய மெலிந் தாடளவு கொடுத்தாள் கைக்குக், குடத்தனத்தை மருவுமரு மாவிருத யாலயசு குணபூ மானே. (க)

* சுரும்பாலுந் தொடையலணி யிருதயா லயன்பவனித் தோற் றங் கண்டு,பெரும்பாலு மயலாகிப் பிறர்முகங்கண் டறியாவென் பே தை காமன்,கரும்பாலு மரும்பாலுங் கலையாலு மலையாலுங் கலங்கி யேத, யிரும்பாலும் பாயசமுங் கசக்குமென்று ளிந்தலச்சைக் கென் சொல்வேனே. (உ)

* கரத்துவண்டு மிடையுடையுங் கழன்றுருண்டு விழமருண்டு க லங்கி யேம,கரத்துவண்டு வசமதவேள் கழைகுழைய வாங்கியிரு கன தனச்சி,கரத்துவண்டு படியும்வண்டு கோடியெய்யப் பழிமொழியைக் கன்னி மார்ப, கரத்துவண்டு வாடுகின்றா ளிணையிருத யாலயசிங் கார மாலே. (௩)

* படித்துப் படித்து நின்புகழைப் பாராட் டுவள்வேட் பாதகன்பற் கடித்துப் படித்துக் கடித்துணரிற் கலக்குஞ் சரத்தாற் கலக்கவிற்பு குடித்துப் படித்து வதனமின்பால் குடித்துப் படியாட் டந்தும்மை முடித்துப் படித்துச் சணப்பகையை முடுக்கு மிதயா லயபதியே.(ச)

* படுக்கப் படுக்க வுறக்கம்வரா பரமனியற்றுந் தவத்தினையுந் தடுக்கப் படுக்க விடுக்கமதன் றனத்துக் கனத்தைப் பொறுத்துமலைத் திடுக்கப் படுக்க மானினியா ளினையா தினியா டிரைகரையின் மடுக்கப் படுக்கத் திகழூற்று மலைவா ழிதயா லயபதியே. (ரு)

* பாட்டிக் காட்டி ரசம்போலப் படித்த வுடனே பாவையைநீ ராட்டிக் காட்டி விட்டில்லினை யாடன் மறந்தா ளவள்காமக் [நாண் கோட்டிக் காட்டின் றலைசிதைக்கக் குறித்தா ளினைசேர் கொடுமர பூட்டிக் காட்டின் மரந்துளைத்த புயலே யிதயா லயபதியே. (சா)

கழிநெடில்மடக்கு.

கந்தமிகுங் கனதனங்கள் கன்னிகருங் குழலே
கனிவசனங் கந்தரமுங் கன்னிகருங் குழலே

சந்ததமுந் தரளமுமிழ் சங்கங்கந் தரமே
தளிர்மலர்ப்பட் டாலுங்க சங்கங்கந் தரமே
அந்தநகை மூலைநகைமை யக்கங்கூர் வாளே
யனுதினநின் மீதினின்ம யக்கங்கூர் வாளே
நந்தலிலா மணியிழைகண் ணுடியணை வாயே
நரேந்த்ரவித யாலயகண் ணுடியணை வாயே. (எ)

குளகம்.

கழிநெடில் விருத்தம்.

* பெருந்தமரக் கோடுதிகழ் வாவியிடைக் குழைவரையும் பெயர்ந்து சீறித், திருந்தமரக் கோடுமெழி லாய்மடவார் படியவவர் சேலை வாரிக், குருந்தமரக் கோடுறவைத் தானையொன்று ரங்கமிசைக் கொடிகளோடு, பருந்தமரக் கோடுசிலைப் பார்த்தனுக்கோர் வலவனெனும் பண்பினானை. (அ)

* குரகதவ னத்தானை வகைத்தருவு ளான்குறிஞ்சிக் கொடிச்சி மேற்கொள், விரகதவ னத்தானை யொருவன்மகன் றுணைமருகா வியந்துளானைக், கரகதவ னத்தானை மருப்பொசித்தா னைக்கமலக் கண்ணினானை, மரகதவ னத்தானை வனப்பிலகுந் திருமறுவார் மார்பினானை. (கூ)

* பசுவாசப் பணிகழும்வேய்ங் குழலானை யெப்பொழுதும் பாதம் போற்றி, விசுவாசப் பணிவிடைசெ யடியவர்கட் குயிரானை வெய்ய தீயொத், தசுவாசப் பணிமருளத் தாண்டவஞ்செய் பதயுகளத் தானைச் சுற்றும், வசுவாசப் பணிலகராம் புயகருணு கரவதுலவரதன் றன்னை. (கூ0)

* நகப்பகட்டு நெடுந்தடந்தோட் கருநிறவெள் வாய்க்கடையர் நடாத்து மேர்கொள், நுகப்பகட்டுப் பெருங்குழுவின் கவையடிபட்டுடைந்திடுவி னேத மாந்து, யகப்பகட்டிட் டிரடரள மதிநிலவு தரப்பகற்போ தாம்பல் பூத்து, மிகப்பகட்டு மெழில்வளஞ்சேர் விறைநகர்ச் சினகரங்கொள் விமல வாழ்வை. (கக)

* இந்தக்கா லம்புனையும் பரம்பரனை யுங்கணியா தெதிர்த்து வந்த, அந்தக்கா லன்புரிக்கு ளகப்படுத்தா தராமுடிமே லாடி நின்ற,

சந்தக்கா லம்புயத்தைத் தனதடியார்க் கருளுகின்ற தயைபுரி ளானை, யெந்தக்கா லமுநினைந்து துதிபுகலு நயகுணமே யிசைந்த மேலோய். (௧உ)

* கனகவடு பலநிமிர்த்து மரகதப்பச் சிலைபுயிர்த்துக் கடற்குளேதங், கிலகவடு செறிமாவை யிரண்டுதுணி படப்பொருகாங் கேயன் வேலும், பனகவடு விடமுநிகர் விழிமடவா ரொடுகலவி பண்ணும் போது, நனகவடுப் படுதலல்லா லுறுவனவும் வடுப்படுத நண்ணிடா தோய். (௧௩)

* விரும்பருந்துந் துமிழுழங்கச் சமரகளத் தெதிர்த்தவரை வெய்ய பேயுங், கரும்பருந்து நெடியசிறைக் கழுகினமும் விருந்தருந்திக் களிக்கு மாறு, பொரும்பருந்துங் கப்புயத்தின் புகழ்நசிந்து வார்ந்தொழுகும் புதுமை யென்னச், சுரும்பருந்துங் கோமளவித் தாரபரி மளதளவத் தொங்கல் பூண்டோய். (௧௪)

* கற்பகலா வணியநறுஞ் சோலைபறு பஞ்சமுறக் ககன வாற்றிற், பற்பகலா வெழிலிமலைப் பாலுடலங் கருகிமிகப் பயங்கொண்டோடப், பொற்பகலா நற்பகவச் செழுஞ்சுரபி கன்றுறவே புரிந்தகையாய், அற்பகலா மதிநுதன்மா மயில்கள்விளை யாடிமலை யணையமார்பா. (௧௫)

* ககனவிலும் பரில்விரிக்குங் கதிர்களென நவமணிகள் கலந்ததான்மூ, சுகனவிலுந் தியசொனகிரீடதா வதிகரசந் துளிக்க வேய, மகனவிலுந் தமிழ்ப்புலமைப் பாவலரை யெப்பொழுது மகிழ்ந்துமேவி, யகனவிலு மறவாம லருளுதவி யாண்டருளு மருமை யாளா. (௧௬)

* அன்னுட்டை யெனப்பணிமேற் றன்னுட்டைப் புரிந்தரியவமரி னூடு, வின்னுட்டை வரைப்புரந்த திருநெடுமா லருட்டுணையால் வெய்ய தெவ்வாந், துன்னுட்டை யறப்பொருத கொடும்புலியே யென்னுட்டச் சோலை தோறுந், தென்னுட்டைச் சுரும்புலவு தென்னுட்டைப் பொன்னுட்டிற் சிறப்ப வாள்வோய். (௧௭)

* துன்னுமரு வாரஞ்சத் திரமுறுத லாவிரதத் துரோணத்தானை, மன்னுசெய சத்தியங்கைக் கொண்டிருந்த லான்மயிலூர் வரத வேளே, நன்னயஞ்சே ரமுதவச னப்புலவர் சூழ்தலினு னன்மை

சார்ந்த,பொன்னுலக நன்னகர்வா ழைந்தருவா ளிந்திரனைப் பொருவு நல்லோய். (கஅ)

* வாசமன்ன வரும்பணிகொள் பொழிற்கிளுவை நகர்புரக்கு மகிபா மின்பர, காசமன்ன வரும்பணிதோய் கனகவரைத் தடமார் பா கவிஞர்க் கீந்து, நேசமன்ன வரும்பணிவ ராதுகடைக் கணித்த ருளு நிருபா மிக்க,தேசமன்ன வரும்பணிபு மிருதயா லயனெனும்பூ சிதபூ மானே. (கக)

* வணத்திலக வாணுதல்வெண் டரளநகை கனக்கும்ப வடிவக் கொங்கை, மணத்திலக நாசிமட வார்மதனு வொருவிணைப்பம் வழுத் தக் கேள்கைக், கணத்திலகத் தரித்தவருக் கியான்புகன்ற தமிழ்க்கு தவுங் கைமா ருகச், சுணத்திலக மொன்றுபுரி வித்துனது பெருங்க ருணை சூட்டு வாயே. (உ0)

* மாகனக முகைக்குமெழிற் றிதலைமட வார்விழிநேர் வண்டு கிண்டக்,கோகனக முகைக்குலங்கள் முறுக்குடைந்து குமுகுமெனக் கொட்டுந் தேன்பாய்ந், தேகனக முகைக்குரும்பைத் தென்னையைக் கன் னலைமிகவுஞ் செழிப்பச் செய்து, வாகனக முகைக்குமரி நகர்க் குநிழ றருங்கிளுவை வாசந் தோனே. (உக)

* திரக்கையிலா தவரையெனப் பலவரையைச் செயும்புகழுச் சிதாவொன் ஞை, யரக்கையிலா தவரைவனைத் தமர்செயுமே றனை யவிசை யனுக்கன் ருவி, கரக்கையிலா தவரைக்கஞ் சக்கரச்சக் கரத் துளிட்ட கண்ணு வொன்றுந், தரக்கையிலா தவரைநிதம் புகழ்ந்து ழலா தெனைப்புரக்குந் தயவு ளானே. (உஉ)

* நகமதிக்குந் தறியெனக்கொண் டவனளின வுந்திவந்தோ ஞ வின் மேவுஞ், சுகமதிக்கு மொழியவள்செந் தமிழ்விரும்பிக் காத்தி ருக்குந் தோற்றம் போலச், செகமதிக்கும் விலைக்கடங்காப் பெருவ யிர மணிக்குழைக டிகழும் கன்னு, முகமதிக்குட் டதும்பமுதந் திர ண்டிரண்டாய் வழிவதைநேர் முல்லைத் தோளா. (உங)

* சினக்கவசந் தனஞ்சம்பு வனஞ்சம்பு நுகர்ந்தசம்பு சிலை போற் கொங்கை, கனக்கவசந் தாகமுந்தந் தாகவெந்தா கஞ்செயுந் தென் காலால் வேங்கை, தினக்கவசம் போன்மனது பதைபதைக்க

வேழையர்தஞ் சிறந்த வாவி,தனக்கவசம் வருமேனாத நினக்கவசத் தான்மறைக்கத் தருமார் பானே. (உ௪)

* பொங்கஞ்ச மானவொண்புட் டொகுதிபின்கட் படைக்கிட மாப் பொலிபா நின்ற, செங்கஞ்ச மானமக்கொப் பதுநிறத்தி லென் றதனைச் செயிக்கக் கூடற், சங்கஞ்ச மானமெனச் செறிபுலவோா மதுரகவிச் சாரங் கண்டு, தங்கஞ்ச மானமதாத் தந்துதந்து மிகச்சி வந்த தடங்கை யானே. (உ௫)

* சங்கதிரு மணியலைசூழ் வேலையிடம் வேலையிட்டோன் றனை நேர் வெற்றிப், பொங்கதிரு மணிராச ரறிந்துதொழும போதவாகம புனையு மொலிச, செங்கதிரு மணிவரகரு ணமபல மா மணிகளையுந திகழ்மா ணிககத், துஙகதிரு மணியாகரு மறபுதஞ்சேர் செங்கமலத் துணைத்தா ளானே. (உ௬)

* மீனூறு வசக்கிடையா மெல்லியலார் பகரிரா வேழ மா ரன், ருனூறு படாதெழுந்து வநதனனென் றுரைதந்திடுஞ்சுந் தரசூ பாசெந், தேனூறு வசனவிந யாலபபூ பதியெனதிற் செலவுக் காக, வேனூறு ருபாயு மெனக்களிபபாய் மனக்களிபபாய் விருமபித்தா னே. (உ௭)

* சருவரிசசந திரகலைக்கு வளைந்திருக்கும் புள்ளில்வளை தமி ழோர் கொண்ட, வெருவரிசசந திரகலைக்கு வளைத்திருக்கு மையன் சகனூர் மேவு சீர்போற், றருவரிசசந திரகலைக்கு வளைத்திருக்குக் கனியெனச்செய் தாளா சங்க, திருவரிசசந திரகலைக்கு வளைத்திருக் கு மரியொடணை செங்கண் மாலே. (உ௮)

* பிரமரசங் கக்கந்தக் கவினளினத் தாரையணி பிரமன் மா தே, வரமரசங் கக்கந்தக் கவினளினத் தாரையடு மழுவா னஞ்சக், கிரமரசங் கக்கந்தக் கவினளினத் தாரையுய்த்தோன் கிளர்தோள் வாழ்த்தும், பரமரசங் கக்கந்தக் கவினளினத் தாரைபெய்கம் பனுக் கொப் பானே. (உ௯)

* பெரிசையிலங் கூற்றுவரைப் பதியைபதித் தவற்கொர்மகட் பெற்றூ றூர்தோய், வரிசையிலங் கூற்றுவரைப் பதியனபொற் கோ புரங்கள் வலிய மாச, மரிசையிலங் கூற்றுவரைப் பதினகர்தஞ் செ

ஓத்துப்போற்றி வைத்த சித்ரப், புரிசையிலங் கூற்றுவரைப் பதியி டைச்செங் கோனடத்தற் புதபூ மானே. (௩0)

* இருகரும்பா ரப்பகட்டுத் தோடசனஞ் சோடசனந் திடாத் தணிந்து, பொருகரும்பா ரப்பகட்டுக் கைவதனங் கண்டுவந்தான் பொருமென் பார்க்கு, முருகரும்பா ரப்பகட்டு வவ்வளிகள் செவ்வ ழிசெய் முல்லைத் தாரா,பெருகரும்பா ரப்பகட்டு முழுகினுஞ்சொன் மொழிதவறுப் பெருமை யானே. (௩க)

* தெலுங்கவிக்கு நிகர்துலுக்குக் கன்னடமா ரியம்வரைசித் திரத்தின் சென்னி, குலுங்கவிக்குங் கசக்கமது ரிதத்தமிழு ணர்ந்துப ச்சைக் கோடைத் தேர்முன், செலுங்கவிக்குந் தெரிவரிய கலைபயின் ற செவியிடையான் றெரியா தேபு, கலுங்கவிக்கு தலைமொழியும் வினவியனு தினமகிழுங் கருணை யானே. (௩௨)

* பொன்னகத்துக் ருப்பணவன் வன்கையிலைக் கும்பணைத்த புயவி சால, மன்னகத்துக் குப்பணவு மணிபலவின் மணியெனவில் வழங்குந் தெய்வப், பன்னகத்துக் குபபணப்பா ரம்பொறுத்த மரு தப்ப பாண்டிய கோவே,யென்னகத்துக் குப்பணந்தங் திடக்கருணை முழுதினும்வைத் திரக்ஷிப பாயே. (௩௩)

* பொன்னகத்துக் கேதனமொப் பாம்பொறியை வெளவிய வன் புல்லின் காய்க்கொத்,தன்னகத்துக கேதனதங் கையிற்பிடித்த தனுவளைத்தங் கனுப்பி னானைத், தன்னகத்துக் கேதனமுங் களைக ணின்றி வருந்தியபாஞ் சாலிக் கும்பைப், பன்னகத்துக் கேதனபூ பாலனுக்குங் கனகபடம் பண்ணி னானே. (௩௪)

* வருகும்ப வளவும்விழி யிமையாது பாற்சுரவை மதணித் து ற்ற, ஒருகும்ப வளவமிழ்துண் டிடவளிதநுத் தான்சிறிது முண்ணு தானை, யிருகும்ப வளமுலையோ டதிலெழும்பொ னிதழமிழ்திற் கே க்கங் கொண்டு,பருகும்ப வளத்தானைக் காப்பவரைப் பண்பின்முரல் பண்பி னானே. (௩௫)

* சேற்றுவி யிடைப்பகட்டுப் பகட்டுழக்கால் வெருண்டவரா றென்னம் பொங்கர், மேற்றுவிப் பழஞ்சிதறி முகில்புரைத்துத் து ளியொழுக்கி விண்மேற் போகிக், கூற்றுவி முடித்தவன்சேய் விடுதடி

யோ வெனமருட்சி கொள்ளு மாறு, தோற்றுவி வண்டிரும்பும் வி ரைநகர் நாரணனைத் துதிக்கின் றேனே. (௩௬)

* என்புதைய வுருவாகத் திருப்பதிக திருப்பதிக மியம்பி னோ ற்குந், துன்புதைய வுருபந்து பெறச்செய்கொங்கைப் பரவையெ னுந் தோகை யூடி, லன்புதைய வெனுதுகொண்ட தொண்டனுக்கும் வேண்டியபொ னளித்த மாதே, வன்புதைய வெமக்குமகிழ்ந் துதவி யது போற்புவிய வதரித் தோனே. (௩௭)

* முப்பழக்க மதுரமுற மியலிசைநா டகமென்ன மொழியுஞ் செங்கல், விப்பழக்கந் தனிற்கம்பன் சிரக்கம்பஞ் செயவுணர்ந்த மே லோ னேதே, யுப்பழக்கஞ் சுழலவரு காளியொடு கூளிகளு முவப்ப வொன்னார், குப்பழக்கந் துணித்துசெய்யுட் குளித்துறையிற் குடிபு கும்வாட் குடங்கை யானே. (௩௮)

* சேட்டுக்கா வலவமுறப் பாடுகவி ராயருஞ் செயுள்போ லெ ன்புன், பாட்டுக்கா வலவசியங் கொண்டருளும் பெருந்தயையா பர வப் பூத்த, கோட்டுக்கா வலவனுக்கு மகரந்த மலர்க்குடங்கை கொ டுபூசுந்தென், னாட்டுக்கா வலவனெனு மிருதயா லயபதியா நவிலக் கேண்மோ. (௩௯)

* ஓராசை யங்களிரண் டெடுத்தனநட் டனத்தரம்பை யோ ர்வின் னாட்ட,மராசைக் கமலமின்னார் தம்புருடர் கிம்புருடர் வர ஞ்சேர் தாப,தராசை வசித்தாந்தப் பழம்பொருளே யெனுந்துதியு ததிவாய் போர்ப்ப, வராசை யெனப்பெயர்பூண் டெழுபுவிக்குஞ் செழும்புகழ்க்க வசஞ்செ யூரில். (௪௦)

* மாமதியா னனமைந்து படைத்தமண வாளன்முன மனத்து டின்பக், காமதியா னமீதற் றியோகியற்றி னுனெனும்ப னைக்யுட் கொண்டு, கோமதியா னனங்கைதனித் திருந்துதவம் புரிந்தந்தக் கொண்கன் றன்னைத், தாமதியா னயமொடு தனைத்தேடி வரப்புரி வித் தகவி முாவில். (௪௧)

* பன்மலரைப் புறங்கண்டாய் தனுவெடுத்துத் தனுக்கரும் பைப் பற்று ரும, லன்மலரைம் பாலருக்கு விருமதனு நீபுரிசா றத னிற் புன்னை, நின்மலரைத் தொழுவருவார்க் கமரர்பதந் தருபவள்

போ னிலத்துப் பூவாய், பொன்மலரை யின்னரம்பைக் கனியொடு விண் வழியளிக்கும் போது தன்னில். (சஉ)

* நிற்கண்டு களிகூர்ந்து துறைசையிற்சுப் பிரமணிய நிமலன் மேற்செய், கற்கண்டு சுசக்குமது ரிதக்கவிசொற் றனதுசிரக் கம்பத் தானென்கு, சிற்கண்டு பேரின்பத் தொடுவிடைபெற் றணிவிடங்கத் திரள்கள் சூன்மன், குற்கண்டு வண்டசையு மணிமாடச் சென்னிநக ர்க் குப்போம் பின்னர். (சங)

* ஆதி†யிலக் கணப்படியே யுதித்திரண்டிற் கடங்காத்தன் பாக் கி மூன்றை, மேதினியிற் பலவிதமாச் செலவுசெயு மாறுபுரி வித்த நாலிற், பாதியினு லியான்பட்ட பாடுசொல முடியாது பஞ்ச மென் ப, தேதுமில்லை போதுமில்லை யிகந்துதெரு வுலவுதற்கு மேது மில்லை. (சச)

* பற்பலபண் டிகர்புரிந்த வைத்தியத்தாற் பத்தியத்தாற் படி வஞ் சாலத், தற்பலமுற் றெய்த்தகிது தீர்ந்துசுகம் பிறந்தபின்புன் சுமுகங் காண, நற்பலவின் முட்கனியி னுட்கனியி னருவருவி நளிர் கா லோடி, யுற்பலமென் மலர்த்தடங்க ணிறைத்திடுதென் வீரைநக ர்க் குறுவன் மாதோ. (சரு)

* கத்தினத்து மதராிக்கட் கடைசியராங் கடைசியர்தங் கண் டங் கண்ட, பத்தினத்துக் குலங்களெலாம் பயந்துதிரை பயர்ந்ததெ னப் பணிந்தோ ரின்ற, முத்தினத்து நிலவுபொன்னைச் சிறைபுரிவீ ரைப்பதிக்குன் முகங்கா ணப்பத்,துத்தினத்து வருவலெலனுஞ் சொ ல்விதனுற் பிழைத்ததுகாண் டுரைப்பூ மானே. (சசு)

* கவிசாரம் பெறநினைந்தென் வருத்தமெலா நினையாது கவி வி னேடுன், செவிசார வேண்டுமென்ற பேராசை யாலிவணுஞ் செ ய்தேன் வெண்பூக், தவிசார வடனுணை யிதற்கெதிரின் கரலிதெங் தாரா யேயெலற், குவிசாரக் தவிராது தரிற்பரமா னந்தசுகங் கூடுந் தானே. (சஎ)

---

† இலக்கணம் ஐந்து — எழுத்து-சொல்-பொருள்-யாப்பு-அலங்காரம். எழுத்தின்படி பிறந்து, சொல்லுக்கடங்காத் தன்பாக்கிப் பொருட்செலவு செய்த, நாலிற்பாதி அரையாப்பு. பஞ்சமென்பது அலங்காரம்.

* பூரிக்கும் பங்கயத்தி னிருமருப்புக் கொத்ததனம் புடைய மோட்டுப், பூரிக்கும் பங்கயத்தி னிருமருப்புக் கொத்ததனம் புடைய மோட்டும், வாரிக்குந் தமரமுற்று வாவியின்பாற் பின்னமின்னார் மருங்குற் றானே, வாரிக்குந் தமரமுற்று வாவியின்பாற் பின்னமின்னார் மருங்குற் றானே. (௪௮)

* அன்றானை யலறமுன்னி யன்றானை யலறபிறத் தாரையூக்கக், கொன்றானை விளங்கனின்று கொன்றானை விளங்கனிக்காக் குணிலாக் கொண்ட, கன்றானை யிருக்கைமுன்பு கன்றானை யிருக்கைவெண்பாற் கடலி னானைப், பொன்றானை யிடையானைப் பொன்றானை யிடையானைப் புரந்துள் ளானே. (௪௯)

* நீண்டவிராப் பசுமிலேயி னீண்டபனை யெனக்கடையி னிலவுவானைப், பூண்டவிரா முலைத்திருவை யெண்கலத்தி லியைத்தானைப் பொரவெம் போர்க்கு, மூண்டவிரா தனுக்குறையு முனைவேலு மளித்தானை முனமே ஞாட்டை, யாண்டவிரா சனமகன்றோர் மானினுக்குச் சருக்கரையென் றுயி னானே. (௫0)

* முத்தளிக்குஞ் சங்கநிரை தவழ்ந்தேறுஞ் செழுங்கமுகு மோகன் கைத்தா, னத்தளிக்குஞ் சங்கரன்வா மாம்பகமீ தோங்குறுச்செங் கனின மொட்டிற், கத்தளிக்குஞ் சங்கமர்ந்து காலாறல் வருடுறத்தேன் காலாறுப்போய்த், தத்தளிக்குஞ் சங்கவயல் வீரைநகர் முகுந்தனையா தரிக்கின் றோனே. (௫௧)

* வரைத்தனுப்பு னிதனடுக்க ணிடுக்கணுறத் தகித்துமுயிர் மாயா மாரன், றிரைத்தனுப்பு மரசொலிப்பச் செங்கணழல் சொலிப்பவிடு சிலையே தைத்த, புரைத்தனுப்பு குந்துதென்றற் புலியாவி கொளுமுன்மின்னார் போம்போம் போமென், றுரைத்தனுப்பு மவிக்கெல்லாம் மொருங்கேவந் தலறுமுல்லை யொளிர்தா ரானே. (௫௨)

* ஒலிக்கூட்டங் கடைகிடந்து பயந்தகருங் கொடியனைபி னேசை யேவி, னலிக்கூட்ட மெனத்துறந்த சினக்காமன் றனக்காவ ணல்குங் கோலா, செவிக்கூட்ட முதமிதுவோ வெனப்பகர வதிமதுரச் செய்யுள் பாடுங், கவிக்கூட்ட மேட்டினிடைப் புதைத்தபொருட் கஞ்சனமாங் கருத்தி னானே. (௫௩)

* கூற்றுவரைப் பதின்மடங்கு கொலைத்தொழிலாற் குழ்த்திரு கட் குசேச யத்தின், மேற்றுவரைப் பதித்தனைய வதனவித பூரக டஞ்செய் மேடை மேல்வான், ஆற்றுவரைப் பதிலுலவு மனமின மென் றுறச்சிலம்பங் கலம்பா நின்ற, ஊற்றுவரைப் பதிபுரக்கு மிரு தயா லயபதியொன் றுரைப்பக் கேண்மோ. (ருச)

* தருவாழி மயவர்பிரான் றனையனைய சுகபோக சம்ப னுறன், வெருவாழி கடந்தேற நியருளோர் சுபநிருபம் விரித்தேற் கொற் றைக், குருவாழி ரவிகுலரா கவதூத னசோகவனக் கொடிக்கன் றீந் த, திருவாழி யெனினுமது சிறப்பிலதேல் வேறுவமை செப்பற் பா ற்றே. (ருரு)

* நன்னிருப குலதிலக நராதிபசற் குணதரவென் னுரு மின் பின், முன்னிருப கவானுனக்குக் கிருபைசெய்வா னெனுமவாழ்த்து மொழிக ளுட்டி, யன்னிருபத் துனதுபங்கை யக்கரந்திட் டக்கரங் கண் டயர்ச்சி யெல்லாம், பன்னிருப சனுமுளைக்கப் பரந்தவிருள் ப ரந்ததுபோற் பரந்த தாலோ. (ருசு)

* புவியாதி பதியேதென் பொதிகைவரைத் தமிழ்முழுதும் பூ குந்து நின்ற, செவியாதி காந்தமெலாஞ் செறிந்தபுக ழாகரநின் செ ங்கை யால்யான், றவியாதி துசமபத்தி லருணிருபத் திலகுறுமஞ் சனங்கண் டென்வெய், யவியாதி வெவ்விடம திவ்விடம்விட் டெவ் விடமோ வடைந்த மன்னே. (ருஎ)

* மன்னுகப் படிப்பகடு மதன்சிலையோ டடிமுடியே வாய்வாய் மேய்ந்து, புன்னுகப் பொதும்பர்நறு நிழறொறுங்கண் வளர்வழுதிப் புகழ்நா டாளு, நின்னுகப் பேரளியா லெற்கருட் ணிருபம்வந்து நில வ லாலே, யென்னுகப் பிணிமுழுதுந் தகர்ந்தறப்பெற் றனன்பரம வின்பந் தானே. (ருஅ)

முத்துசாமிபிள்ளை மீது சொல்லியது.

* மன்னவரத் தினபுரந்து தியலுமுத்து சாமிதுரை வலிய வந்து, நன்னவரத் தினமிழைத்த மெத்தையிலே முத்தையிலே நயங் கண் டேன்பின், சின்னவரத் தினவிழியி னித்திரைகண் டேன்மதி யிற் சீதங் கண்டேன், என்னவரத் தினமுனக்கு மதப்பயலே வந்த வழி யினைப்பார்த் தோடே. (ருகூ)

ஆகச்செய்யுள் ௩0௩௯.

## மஹாமகோபாத்தியாயர் ப்ரும்மஸ்ரீ
## வே. சாமிநாதையரவர்கள்.

சோழநாட்டிலே கும்பகோணத்தைச் சார்ந்த உத்தமதான புரமென்னும் புண்ணிய நகரத்திலே அந்தணர் மரபில் அவதரித்து திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்தையடுத்து மஹாவித்துவான் ஸ்ரீமீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்களிடம் கல்விபயின்று மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகளிடத்து இடையறாப் பேரன்பெய்தி உடனுறைந்து கும்பகோணம் கவர்ன்மெண்டுகாலேஜ் தமிழ்ப்பண்டிதராகப் பலவருஷமிருந்து இப்போது சென்னை பிரஸிடென்ஸி காலேஜில் தலைமைத் தமிழ்ப் பண்டிதராகஇருக்கின்றார்கள். இப்போதுள்ள தமிழ்வித்துவான்களில் இவரே மிகத் தேர்ச்சிபெற்றவரென்பதை மறுத்துக் கூறுதற்கு இவரையன்றி வேறொருவருமிலர். சீவகசிந்தாமணி, மணிமேகலை, சிலப்பதிகாரம், பத்துப்பாட்டு, புறநானூறு, புறப்பொருள்வெண்பாமாலை ஐங்குறுநூறு முதலிய சங்கமருவிய நூல்களை ஆராய்ந்து அச்சிட்டு வெளிப்படுத்திய மகோபகாரியாகிய இவர்களது கல்வித்திறமையை நன்கறிந்த நமது காருண்ய கவர்ன்மெண்டார் மகாமகோபாத்தியாயர் என்ற பட்டமும் ஆயிரரூபாவும் வேறு சிலவெகுமதியும் இவர்கட்குவெகுமதியாகக் கொடுத்திருக்கின்றார்கள். தமிழ் வித்துவான்களில் கவர்ன்மெண்டாரால் மதித்துப் பட்டந்தரப்பெற்றவ ரிதுவரை யாருமில்லை. இவர்கள் காலமுழுதும் பழையநூலாராய்ச்சியிலேயே செலவிட்டு உலகத்தார்க்குப் பயன்படுத்தி வருகின்றார்கள். இவர்கள் பெருமை எம்மாற் கூறி முடிக்கத்தக்கதன்று.

ஸ்ரீமத் சுப்பிரமணியதேசிக சுவாமிகள் பரிபூரணமானபோது கூறியன.

* வறுமையெனுங் கொடும்பிணியா லகம்வாடி முகம்வாடி வருந்திப் போந்த, பெறுபரிசி லாளர்தமக் கெய்ப்பில்வைப்பே பெருங்கருணைப் பிழம்பே வாய்மை, உறுகதிரெங் கெழினுமக் கென்னெனுமா றடுத்தோரை யுவந்து காக்கும், துறுபுகழ்ச்சுப் பிரமணிய குருமணியே யெளிமையைத் துறந்த தென்னே. (க)

* கருணையெனுங் கடல்பெருகு மடையாய நினதுவிழிக் கடையுஞ் சிதக், தருணமதி யனையமுக மண்டலமுந் தெளியமுத தாரைபோல, வருமினிய மொழிவாக்கும் வருவோர்க்கு வரையாது வழங்குகையும், திருவருட்சுப் பிரமணிய குருமணியே காண்பதென்று சிறியேன் மன்னோ. (உ)

* பகைவரிவ ரிவரயலார் நட்புடைய ரிவரென்று பார்த்திடாது, வகைவகையாக் கருதியவை யீந்துவக்கும் பெருங்கருணை வள்ள லேயான், மிகைபடச்செய் பலகுற்றம் பொறுத்திடுவா யெனையகன்ற விதந்தா னென்னே, திகையளவும் பெரும்புகழ்ச்சுப் பிரமணிய தேவ வருட் செல்வ வாழ்வே. (௩)

* நல்வேளை தனிற்சென்னை நகர்க்கேகப் புறப்படென நவின்றே யென்னை, ஒல்வேளை தனில்விடுத்தா யவ்வேளை நினைப்பிரிய வுளுற் றுந் தீய, அல்வேளை யென்பதனை யறியாது பிரிந்துதுய ரடைந்தே னந்தோ, வில்வேளை வென்றபெரு விறலுடைச்சுப் பிரமணிய விமல வாழ்வே (௪)

* சந்தோடு மாவடரு மாவடுதண் டுறைப்பதிசெய் தவம்விளக்க, இந்தோடு மரவகற்றி யெழுந்தருள்சுப் பிரமணிய வெம்மான் றன்னை, வந்தோரை மகிழ்விக்கும் வள்ளறனைப் பிரிந்துமனம் வருந்தும் வண்ணம், அந்தோவிக் கொடுங்காலம் வருமென்ன வொருசிறிது மறிந்தி லேனால். (௫)

சருவசித்தாண் டிற்றனுமா தத்திருபத் தைந்தில் 1888
வருசனியொன் பான்றிதிசு வாதி—திருநாளாம்
பேரணவு சீர்ச்சுப் பிரமணிய வள்ளல்பரி
பூரண மான பொழுது. (௬)

சுந்தர மூர்த்தியென்றுந் தூயமெய்கண் டானென்றும்
முந்தறிஞர் சொல்லு முறைக்கேற்ப—எந்தமையும்
பேதிலா தாள்சுப் பிரமணிய தேசிகன்றன்
சோதிநாட் சேர்ந்தானன் றோ. (௭)

ஞானசம் பந்தனென்பே னங்கமைவா கீசனென்பேன்
சான முறுஞ்சுந் தரனென்பேன்—மானமணி
வாசக னென்பேன் வளர்சுப் பிரமணிய
தேசிகனை நாயேன் றினம். (௮)

பேரா வருட்சுப் பிரமணிய தேவனையாம்
பாராத வண்ணஞ்செய் பான்மையினால்—தீரா
அநியாயஞ் செய்முடவ னாட்சித் தினத்தைச்
சனிநா ளெச்சொல்லாந் தான். (௯)

மாசிக்கத்தோர் சூழ வளர்சுப் பிரமணிய
தேசிகனுந் தேவைத் தெரிசிப்ப தெந்நாளோ. (௧௦)

எள்ளலற வெப்பொருளு மீத்துவக்குங் கோமுத்தி
வள்ளன்முகங் கண்டு மகிழ்வுநா ளெந்நாளோ. (௧௧)

ஏனைக்கு நூற்பொருள்க ளெல்லா மெடுத்தினிது
மானுக்கர்க் கோதுதிரு வாய்மலரைக் காண்பதென்றோ. (௧௨)

தெய்வத் தமிழின் செழுஞ்சுவையைப் பாராட்டும்
சைவக் கொழுந்தின் சபைகாண்ப தெந்நாளோ. (௧௩)

இரவலர்க ளெல்லோர்க்கு மெய்ப்பில்வைப்பாய் மேய
புரவலனைக் கண்டுமகிழ் பூத்திடுவ தெந்நாளோ. (௧௪)

நிரைநிரையா வாதுலரை நேர்நிறுத்திச் செம்பொன்
விரைவி னளிக்கும் விறல்காண்ப தெந்நாளோ. (௧௫)

வறுமைப் பிணிக்கு மருந்தாக மேவி
உறுநிதியைக் கண்டுவகை யுற்றிருப்ப தெந்நாளோ. (௧௬)

இன்றிரப்போர் வந்தா ரிலரென் றியம்புகுணக்
குன்றின்மொழி கேட்டுவகை கூருநா ளெந்நாளோ. (௧௭)

தன்வருத்தம் பாராது சந்ததமு மேபிறர்பால்
மன்வருத்தம் போக்கியருள் வள்ளறனைக் காண்பதென்றோ.

ஈத்துவக்குந் தன்விரத மெப்போதுங் குன்றாது [நான்.
காத்துவக்குங் கோமுத்திக் கற்பகத்தைக் காண்பதென்றோ.

ஆகச் செய்யுள் ௩௦௫.

---

## பாண்டித்துரைத் தேவரவர்கள்.

இராமநாதபுரம் பொன்னுச்சாமித்தேவரவர்களது நற்றவப்புதல்வர். பாலவநத்தம் வகையரா ஜமீந்தார். எப்போதும் தமிழ் வித்துவான்களைத் தமது சுற்றமாகவைத்துப் பாதுகாத்துவருகின்றவர். மதுரைத் தமிழ்ச்சங்கத்தை ஸ்தாபித்துத் தாமே அக்கிராசனாதிபதியாயிருந்துவளர்த்து வருகிறவர் சென்னைசேலம்முதலிய அநேகநகரங்களில் பற்பல பெருஞ்சபைகளில் அக்கிராசனம்வகித்துப் பலரும் ஆநந்திக்கப் பிரசங்கம் புரிபவர். இராமநாதபுரச் சேதுபதிகள் வம்ஸபரம்பரையாகவரும் வள்ளற்றன்மையைத் தாமுங்கைக்கொண்டவர். தமிழிலக்கண இலக்கிய ஆராய்ச்சியுடன் சைவசித்தாந்த சாஸ்

திர் ஆராய்ச்சியும் நன்குபெற்றவர். பன்னூற்றிரட்டு, சைவமஞ்சரி, தமிழ்மஞ்சரி யென்ற சிறந்த புத்தகங்களைத் தாமே தொகுத்து அச்சிட்டவர். தாட்சண்யமும் பரோபகாரமும் நிரம்பவுற்றவர். அநேக அரிய தமிழ்நூல்களை வெளியிடுவோர்க்குப் பொருளுதவியர். மாதவச்சிவஞானசுவாமிகள் மீது இரட்டைமணிமாலை யென்ற நூலொன்றியற்றினர். இவர்கட்கு இப்போது 40 வயசிருக்கலாம். இன்னும் நெடுங்காலம் சுகஜீவியாயிருந்து தமிழும் தமிழ்ப் புலவரும் பெருமையடையச்செய்யும்படி சோமசுந்தரக்கடவுள் திருவருள் புரிவாராக.

## இராஜ ராஜேசுவரி பதிகம்.

### காப்பு.

பின்முடுகு சந்த வெண்பா.

* சீர்பரவி ராஜரா ஜேஸ்வரிபொற் சேவடிக்கே
ஓர்பதிக மன்பா லுரைத்திடயான்—நேர்படுமுன்
மற்கடக ளிற்றினைவ தைத்திடும ருப்பிறைவ
னற்கழலி னைத்தொழுத னன். (க)

கழிநெடிலாசிரியவிருத்தம்.

* பூமலிந் தொளிர்நீல சலதர மெனும்படி பொலிந்துஞெமி றடர்கூந்தலும், பூரண நிலாவொழுகு மதிவதன முங்கலைவர் புனைமதியி னொருபாதியி; தாமென விளங்குதனி வாணுதலு மன்பர்பால் அருள்சுரந் திடுநயனமும், அம்பவள வதரமும் பம்புமிள முறுவலும் அஞ்சலெனு மினியமொழியும்; வாமமிகு கறைமிடறு மெண்புயமு நேமிவாள் வயங்குசெங் கரகமலமும், மறைமீது நடமாடு மிருபாத மலர்களும் மகிழ்ந்தியான் காணவருவாய்; தீமலி கொடும்பவ வினைக்கொரு மருந்தாய ஸ்ரீராஜ ராஜேசுவரீ, திகழ்செழிய கழனிசூழ் முகவைவள நகரில்வாழ் தேவிதிரி சூலியுமையே. (உ)

* ஆதிநடு முடிவொன்றி லாதபர வெளியாகி ஆனந்த நிறைசத்தியாய், அகிலமுழு தும்படைத் தன்புட னழித்துவரு மன்னையா யருளினுருவாய்ச்; சாதனமொர் நாலினுறு பயனுகு முத்தியாய்த் தரணிமுதலைம்பூதமாய்த், தருமமா யுயர்ஞான யோகமாய் நீதியாய்ச் சராசரமு மானபொருளே; போதிலுறை யயனுதி முனிவரிந் திரனமரர்

போற்றிபெரு நாளுமேத்திப், புகழரிய நின்பெருமை மதிசிறிது மில்லாத புன்மையேன் பாடவசமோ; சேதுபதி யறநினைந் தொழுகினிய வரமுதவு சீராஜ ராஜேசுவரீ, திகழ்செழிய கழனிசூழ் முகவைவள நகரில்வாழ் தேவிதிரி சூலியுமையே. (௩)

* அருந்தவத் தவருளத் திடையறா துறைகின்ற ஆதியே சோதிவடிவே, அணியேதொ லருமறைத் துணிவேமெய் யன்பர்தம் அறிவினுக் கறிவேயெனச்; சிரந்தனிற் கைகுவித் தடியனேன்புகலு மொழி செவிதனிற் புகுதவிலையோ, திண்ணமா யுலகிலுறை மன்னுயிரெ லாமுனது சேயென வுரைத்தல்பொய்யோ; பொருந்துமக வேதுபிழை புரிகினும் புவிமேற் பொறுதவொரு தாயுமுண்டோ புண்ணியம ணிந்தன்ப ரெண்ணியவெ லாமுதவு புனிதர்மன மகிழுமமுதே; திருந்துகய லனையவிழி நற்கருணை வாரியே சீராஜ ராஜேசுவரீ, திகழ்செழிய கழனிசூழ் முகவைவள நகரில்வாழ் தேவிதிரி சூலியுமையே. (௪)

* காரணியி னின்பெருமை தேருமறி வில்லாச் சழக்கனெனினுங்கருணையாற், சார்ந்தபவ வாரியி லழுந்திமிக நெஞ்சஞ் சலித்திடா வகையருளுவாய்;வாரணம றைப்பவெந் திகிரிகொடு மடுவிலுறை மாமுதலை யுயிர்செகுத்த, மாதவச கோதரிபு ராதனிவி னோதனன் மஞ்ஞையூர் குகனையீன்ற; காரணி விளங்குபரி பூரணி நலங்கொள் சிவ காமியபி ராமியெழிலார், கவுரிமகி டாசுரன் சவுரிய மொழிக்கவரு காத்தியா யனிமுக்கணி; சீரணி பிறைத்திங்கள் சூடுமுடி யீசர் மகிழ் சீராஜ ராஜேசுவரீ, திகழ்செழிய கழனிசூழ் முகவைவள நகரில்வாழ் தேவிதிரி சூலியுமையே. (௫)

* ஆரிய முதற்கலைகள் பலவுணர்ந் தாலுமென் னுகமபு ராணவிதிகள், அநேகமுறை கற்றறிந் தாலுமென் னரசராய் அனைவருந் தொழுதுபோற்றப்; பார்புகழ் தனித்திகிரி கொண்டவனி யாளிலென் பரிமேத மேசெயினுமென், பலசால வகைதெரிந் துலகமுழு துந்தமது பணிசெயும் பெருமைபெறினென்; நேர்புரிதல் யாவுநற் பயனுக வெளிமையினி னிறுவுநின் மலரடிதனின், நேமென் பில்லாத மூடர்கள் செயுங்கருமம் நிந்தையல தொன்றுதருமோ; சீரிய மறைக்கு

மூடி யாயிலகு மன்னையே சிராஜ ராஜேசுவரி, திகழ்செழிய கழனி சூழ் முகவைவள நகரில்வாழ் தேவிதிரி சூலியுமையே. (௬)

* வல்லார் தனத்துமட மாதர்மேன் மோகமாம் வலைதனிற் சிக்கி யனையார், வதனமுலை யிலகதர மளகமுத லினைவெலாம் வருணித்து நற்றமிழினிற்; சொல்லாத கவியெலாஞ் சொல்லியவர் தருமற்ப சுக வாழ்வை மிகநாடிடுந், தன்மதியை விட்டுனது பாதாம்பு யத்தினைத் துதிசெய்வகை யறியாமலே; கல்லாத மூடரொடு முறவாடி யேநாள் கழித்தனன் இதுகாறுமே, கடையனே னெனினுமினி யுய்வுபெற வொருவழி கருத்தினின் மகிழ்ந்தருளுவாய்; செல்லார் பனிக்கோட்டு மலையரைய னுதவவரு சிராஜ ராஜேசுவரி, திகழ்செழிய கழனிசூழ் முகவைவள நகரில்வாழ் தேவிதிரி சூலியுமையே. (எ)

* அந்தாதி யமகங் கலம்பகம் பாமாலை அடிதனிற் சூட்டவறி யேன், ஆதார நிலைதெரிந் தியோகநன் மார்க்கத்தை அனுசரித்திடவு மறியேன்; முந்தாக மங்கடமை நற்குருவை மேவியே முறையுணர்ந் தோதவறியேன், மூதுலகில் யானுனது தொண்டர்களி ழைத்தல் போன் முழுநோன் பியற்றவறியேன்; அந்தோவி வடியனேற் கருள புரிவ துனையன்றி யாருளர்கொ லிங்குகண்டாய், ஆதலா லெளிய னேற் கநுதினமு மெதிரில்வந் தாகிலா வரநல்கியே; சிந்தா குலந்து டைத் துய்யும்வகை யருளுவாய் சிராஜ ராஜேசுவரி, திகழ்செழிய கழனிசூழ் முகவைவள நகரில்வாழ் தேவிதிரி சூலியுமையே. (அ)

* ஞாலமிசை வெவ்வேறு கடவுளரை வேண்டியே நறுமலர்கள் கொடுகரத்தால், நனியருச் சனைபுரிந் தருமந் திரங்களை நவின்றுபூ சித்திருகணீர்; காலவழு தையனே யன்னையே யானடிமை காவென வுரைத்துரைத்தும், கருதுமென் கையறவி யாவையும கற்றுமெறி கடுகளவு கண்டிலனால்; சாலமன மொந்தினித் துணைபிறிதி லாது னது தண்ணருளை யேநாடினேன், தமியனேற் கிடரொழித் தினியவர முதவுவாய் தருணமிது தருணமிதுவே; சீலமிகு மறைமுனிவ ரநு தினம் பணிவிடைசெய் சிராஜ ராஜேசுவரி, திகழ்செழிய கழனிசூழ் முகவைவள நகரில்வாழ் தேவிதிரி சூலியுமையே. (௯)

* கானக மடைந்துமுதிர் காயிலை யருந்திவளர் கனனடு விருந்து முனையே, கருதிமன மொருவழி நிறுத்திச் சுகாசுகங் கருதாது கண்

மூடியே; மோனநிலை யெய்திமிகு பத்திகொண் டுனதிருகண் முளரி நல் லருளெய்துவான், முயலுமவ ரேதினைக் கன்பரா மவரெனின் முழங்குகடல் சூழ்வரைப்பில்;யானனுவு மறிவின்றி யந்நிலைமை கையுறுதல் இறையுமெளி தன்றுகண்டாய், இக்கண மெனைக்காத்த னின் கடமை யன்னையே ஏழைக் கிரங்குமுறையால்; தேனொழுகு கோதைபுனை காரளக வல்லியே சிராஜ ராஜேசுவரி, திகழ்செழிய கழனிசூழ் முகவைவள நகரில்வாழ் தேவிதிரி சூலியுமையே. (௧0)

* மண்டலநெடுங்ககன நாகரிட முதலாக மற்றுமுள வுயிர்கட்கெலாம், வன்கொடுமை நாளுரு நனியிழைத் திடுதீய மகிடவத னத்தவுணனைச்;சண்டமுண் டாதிபரை மதுகையிட வப்பெயர்த் தானவரை யுயிர்செகுத்துச், சதமகன் முதற்றேவர் பலருள மகிழ்ந்திடத் தனியிட ரொழித்தருளினை; தொண்டனெனு மெளியனேற் கிங்ஙன மடைந்தபுன் றுயரொழித் திடலரியதோ, தூயபங் கயவிழியி னருண்மழை பொழிந்தினிது துணைபுரித னின்கடமையே; தெண்டிரை மலிந்தகட லுலகெலாம் பணியவரு சிராஜ ராஜேசுவரி, திகழ்செழிய கழனிசூழ் முகவைவள நகரில்வாழ் தேவிதிரி சூலியுமையே. (௧௧)

* மலிவாச மலர்கமழு மிருநாலு புயமுறுவி மலைராஜ ராஜேசுவரி, வையகமெ லாமோம்பி நனிவாழ்க வருள்கொண்டு மன்னுமடியவர் வாழ்கவே; ஒலியாழி சூழுலகு புகழ்செம்பி நாடென்றும் உலவாத செல்வமெய்தி, ஓங்குநற் றருமமுதல் யாவுஞ் சிறந்துநீ டூழியினி தாய்வாழ்கவே; பொலிவாறு மீன்றுவச னன்றிட்ட சிறையெனப் புயலின மடர்ந்துறைதரும், பொழின்முகவை நகர்வாழ்க திகழ்சேதுபதியெனும் பொருவில்பாற் கரபூபனுஞ்; சலியாது வண்மைபுனை தினகர மகிபனுந் தணிவில்பல திருவுமேவிச், சந்ததமு மிந்திரனொடிந்திர னெனும்படி ஜயம்பெறுக வாழிமாதோ. (௧௨)

திருவாவடுதுறை யாதீனத்துத் திராவிடமாபாடிய கர்த்தராகிய
மாதவச்சிவஞான யோகிகள் மீதியற்றிய கவிகள்.

*திருக்கும்பவத்தை யகற்றுமருட் செல்வாவருக நால்வேத
சிரமெய்ப்பொருளை யுணர்ந்தமுதற் றேவாவருக வெம்முயிரைக்
கருக்கும்வினையை நீக்குகனே கண்ணேவருக சுவைநிறைந்த
கனியேவருக கருணைரசக் கரும்பேவருக கருத்தழிந்து

தருக்குஞ்சமய கோடியெலாந் தகர்த்துச்சைவ மினிதோங்கத்
தமிழின்மாபா டியம்வகுத்த தலைவாவருக சயினாதி
வருக்கத்துயர்ந்து விளங்குசிந்தா மணியேவருக வருகவே
வளமார்துறைசைச் சிவஞான வள்ளால்வருக வருகவே. (௯௩)

*நதியைக்கரந்த சடைப்பெருமான் நயனத் தீயாற் பொடியானோன்
நாளவனசக் கணையுமெய்தா நலனார்ஞானத் திருவுருவாய்ப்
பொதியக் குறுமா முனிவரத்தாற் புவியிற்பிறந்து புகழ்நிறைந்து
பொய்மைத்தணந்து மெய்யுணர்ந்து புனிதாத்துவித நெறிப்படியே
பதியைப்பசுவைப் பாசத்தைப் பரமமோன நிலைபிணையிப்
படியென்றறியப் பணித்தருளாற் பவசாகரத்தி லுழலாதெம்
மதியைத்திருத்திக் கதியளிக்கும் வாழ்வேவருக வருகவே
வளமார்துறைசைச் சிவஞான வள்ளால்வருக வருகவே. புரா

* கலைதேர்நமச்சி வாயகுரு கருணைக்கடலிற் றிளைத்தாடிக்
கலகப்பாசத் தொடரறுத்துக் காமத்தறியை யறவீழ்த்தி
யலையுஞ்சமய தருக்கர்களைக் கீழ்முடிவேரோடு மகழ்ந்தெறிந்திட்
டருளின்படாத்தை முகமேற்கொண் டாதிவேதா கமங்களெனுந்
தொலையாமணிக ளிருமருங்குந் தொனிக்கச்சைவ மதம்பொழிந்து
துங்கமோடு முலகமுற்றுஞ் சுற்றும்வெற்றி வாரணமே
மலையாதருளு முனிவர்சிகா மணியேவருக வருகவே
வளமார்துறைசைச் சிவஞான வள்ளால்வருக வருகவே. (கரு)

இந்தியா சக்கிரவர்த்தினியாகியிருந்த மாட்சிமைதங்கிய குயின்
விக்டோரியா மகாராணியவர்களின் அறுபதாம் வருஷக்
கொண்டாட்டத்தின்போது கூறியன.

* செகமுழுது முய்யவுயிர் தொறுமெள்ளி னெண்ணெய்போற் சேர்ந்துறையு மீசனருளாற், றேய்விலா வொருமதிய முததியி லெழுந்தனைய சீரகில மெங்குமடரச், செப்பரிய பலவளனு நிலைபெற் றுறைந்திடச் சீர்மைமலி யிங்கிலாந்திற்; புகழிலங் கியகெந்து தேசபதி நற்றவப் புதல்வியா கிச்செனித்துப், பொற்புநிறை தவமன்பு பொறைமுதல யாவும் பொருந்துமிட மெனவளர்ந்து, புகலரிய பத்தொன்ப தாயநூற் றாண்டினிற் போந்தமுப் பானெட்டெனுந்; திகழ்வருட மதனிலே மஹாபிருத் தானியாத் தீவினுய ராசியாகிச்,

சேருமெழு பாரனைத்தி லிந்தியாச் சக்ரவர்த் தினியென்ன வெவரு மேத்தத், திருமகுட முடிபுனைந்தொளிகடற் புவிமன்னர் திறைபலாந் தினிதுபோற்றத்; தகவுபெறு செங்கோல் செலுத்துமவிக் டோரி யாச் சக்கிரவர்த் தினியன்பொடுந், தாய்நிகர மன்னுயிரெ லாநன் களித்துநற் றருமமுயர் நீதிவலிமை, தழைத்தோங்க விவ்வுறுப தாண்டுபோ லிறைவனருள் சார்ந்துநெடு நாள் வாழ்கவே. (கசு)

* மாவளருந் தென்முகவை வாழ்பாற் கரசேது
காவலனை யென்றுங் களிந்தளிக்கு—மேவுபுகழ்
மட்டோத லாகா மகாசக்ர வர்த்தினியாம்
விக்டோரி யாவாழ்க வே. (கஎ)

திருவாவடுதுறை ஆதீன வித்துவான் இராமசாமிப்பிள்ளையென்னும் —ஞானசம்பந்தப்பிள்ளையவர்கள் சிவபதமடைந்தபோது கூறியன.

*மலையாச லத்தமர்ந்து முத்தமிழும் வகுத்தமுனி மனமகிழ்ந் துட்க, உலைபாத புகழ்படுதுறை தனிலமர்வுற் றெவர்க்குமினி தொழுக்கம் வாய்மை, கலையாதி பலவுமுறைத் தெந்நடையுந் தன்னடையிற் காணக் காட்டி, நிலையாமை யியல்புமுணர்த் திடவோநின் னுடல் நீத்தாய் நேய மிக்கோய். (கஅ)

* மருளாரும் பலசமயப் பிணக்கர்தரு சின்னூலின் மயங்கி வாய்மைப், பொருளாவ திதுவெனநன் றுணராது செருக்கியவிப் புன்மையேனைத், தெருளாரு முயர்சிவபு ராணமொடா கமவியல்புந் தெருட்டியாண்ட, அருளாளா நினைவினையேன் பிரிந்துழக்க விதியுளவா அந்தோ அந்தோ. (கக)

* ஒலிபடைத்த முதுதிரைநீ ருலகினிற்புன் கவிகளென வுலவா நிற்கும், எலிபடைத்த பெரும்பயமு மிரிந்தகல வவதியுமொன் றிருந்ததேயோ, வலிபடைத்த சிலைபுரையென் மனநிலைதே ருதுமெனவே மறைந்தாய்கொல்லோ, கலிபடைத்த வலியிதுவோ யாதெனவென் னுளந்தெளியக் கழறு வாயே. (உ0)

வெண்பா.

* வவிளம்பி யாடி யிராறுநாண் முற்பருவம்
மேவியது வாதசியும் மீன்றிங்கள்—தாவில்வளஞ்

சார்மதுரை வாழ்ஞான சம்பந்தப் பிள்ளைபெரும்
சீர்மலிவீ டுற்ற தினம். (உக)

பாஸ்கரசேதுபதி மகாராஜா அவர்கள் சிவபதமடைந்தமைக்காற்றுது

பாடியவை.

* சேதுபதி மன்னர்குலக் கடற்றோன்றி யருணனையே சேர்ந்தோ ராழி, மேதினியெங் கணுஞ்செலுத்தி யிரவொழித்துப் புகழொளியை விரித்துத் தேன்போ, லோதுபிர சங்கமழை யுவந்துதவு பாற்கரநீ பொடுங்குங் கால, மீதுகொலோ வின்னமுநீ யெய்துவையோ விரங்கியெமக் கிசைத்தி டாயே. (உஉ)

* என்னுவி யுளங்குளிர அண்ணவென் றன்பொடினி யெனையார் சொல்வார், மன்னுமன் னுமன்ன வெனயாரை யானினிமேன் மதித்துச் சொல்வேன், பொன்னுடுந் தொழுஞ்சேது நன்னுடு புரந்தளிக்கப் போந்த நீவே, றெந்நாடு சென்றனையோ வெங்கள்குல மணிவிளக்கே யிசைத்தி டாயே. (உங)

* அவியுணவொன் றேயருந்து மமரருண வவியாவுன் னமுதவாக்காற், செவியுணவுங் கொடுப்பதற்கோ நிதிமணியைத் தருகாமதேனு வென்னு, மவையுணரும் படியிரப்போர் குறிப்பறிந்து கொடுக்குநலமறைதற் கோவிப், புவியிலெமை வருந்தவிட்டு வானடைந்தாய் பாற்கரநீ புகன்றி டாயே. (உச)

* நீணிலமீ தரனடியார் பெருமையுமன் னவன்சமய நெறியும்பல்கான், மாணவெடுத் தெடுத்துரைத்துந் திருந்துகிலார் மடமதியின் வலிமை காணு, வீணிதென வானடைந்தாய் பாற்கரசே துபதியவண் மெய்யில் போகம், பேணுநரை யுளங்தெருட்டி யுய்விப்பான் விழைந்தனையோ பெரும நீயே. (உரு)

* பண்புலவு தமிழ்ச்சங்க நிறுவல்கரு தியஞான்று பரிவு கூர்ந்து, நண்புலவு திருவாக்காற் றளர்வொழிகென் றெனக்கிசைத்த நலம்பொய் யாதே, மண்புலவ ரொடுநனிபொன் வழங்கியமை யாதெனவே மதித்து வான்போய், விண்புலவ ரோடுதம னியங்கொணர நினைந்தனையோ வேந்த ரேறே. (உகூ)

* சேரபதிரு தாண்டொன்பான் றாய்மதியீ ரா றுவளர்
மாபிறையெண் ஞாயிறவி வாரமீன் —நீபமலே
மாதுபதி தாக்கு மலரடியைப் பாற்கரனுஞ்
சேதுபதி சேர்ந்த தினம். (உ௭)

ஆகச்செய்யுள் ௬௦அஉ.

---

## ரா. இராகவையங்கார்.

இவர் பாண்டிநாட்டுத் தென்னவராயன் புதுக்கோட்டையில் இராமாநு ஜய்யங்காருடைய புதல்வர். சேதுசம்ஸ்தான வித்துவான்களாகிய அஷ்டா வதானம் கிஷ்ணய்யங்கார் முத்துசாமியய்யங்கார் எனப் பிரசித்திபெற்றவர் கட்கு மருகர். தமது மாதுலர்களிடத்தே கல்வியயின்று இலக்கண இலக் கிய ஆராய்ச்சியிற்றலைமை யெய்தி பாஸ்கர சேதுபதி மகாராஜா அவர்கள் சமுகவித்துவானாக மதிப்புடனிருந்ததோடு மதுரைத்தமிழ்ச்சங்கத்துச் செந் தமிழ்ப்பத்திராசிரியராக 3 வருடம் விளங்கி இப்போது தேவிகோட்டை யில் பெருங்கொடைவள்ளலாகிய கனம் மெ. அரு. நா. இராமநாதன் செட்டி யாரவர்கட்குத் தமிழ்பாடம் சொல்லிக்கொண்டு அங்கே வசிக்கின்றார்கள். இப்போதிவர்க்கு 39 வயசிருக்கலாம். கேட்டார்ப்பிணிக்குந் தகைய வாயி னிய பிரசங்கமாரிபொழியும் வல்லர். அரிய பெரிய விஷயங்கள் பலவற்றை ஆராய்ந்து செந்தமிழ்ப் பத்திரிகையில் அறிஞர்கள் வியக்கும்படி எழுதி வந்தவர். நுண்ணிய விஷயங்கள் பலவற்றை ஆய்ந்தறியும் மதிநுட்பமும் கம்பராமாயணமுதலிய நூல்களிலுள்ள பொருள்விசேடங்களை யாவரும்விய க்க எடுத்துரைக்கும் பேராற்றலும் மிகப்பெற்றவர்.

நன்றியில் திரு.

*ஆர வருந்தலன் சேர வழங்கலன்
வைக லீட்டிய பெய்கல வெறுக்கை
மாந்தி மகிழ்ச்சி மீந்து புகழ்ச்சியு
மெய்த லூரிய பொய்யங் கிழவோர்
௫ வேற்றுப்பிற ரென்பது தேற்றத் தெளிவாக்
வன்னவ ருடையன தன்னவாக் கொண்டு
காக்கும் பருவரன் மீக்கொள லன்றியு
மீயா திவறும் பேயாம் பதடி
யிவனெனப் பல்லோர் தவ்வினி கழறு

மிகழ்வுரை பொறுத்தலிற் புகழ்பெறு பொறையுந்
தறுஅ திண்மையி னுறுஅது தன்பா
லிரப்போர்க் கில்லெனுங் கரப்போய் வாய்மையு
முள்ளிய வுதவும் வள்ளன் மையினோர்க்
கரும்புகழ் நல்கலி னிரம்பிய வீகையுஞ்
செறிபொருள் கெடுமெனப் பொறியுறு மின்பெலாந்
துவரத் துறத்தலிற் கவரைந் தடக்கலும்
வெங்கதம் விரவிய வங்கதப் பெயரிற்
சான்றோர் வகுத்த வானுன்ற பனுவற்
பாடல் புனைதலி னீடுபெயர் நிறுவலும்
பெரிதுடை யானென வரிதினிற் றோனே
பிறதழ வுணர்ந்த வுறழா மாறுகொ
ணிதியெலாந் தன்கீழ்ப் பொதியும் வச்சையை
யிந்திர ரமிழ்துந் தந்தன ருவக்கும்
பசிப்பிணி மருத்துவர் விசிப்புறு முடலுயிர்
யாவும் பிறர்க்கென மேவும் வாழ்க்கைய
ரிடர்ப்பாடு நோக்காது கடப்பா டாற்றும்
மாரி வண்மைப் பாரி யனைய
பெருங்கொடை யாளரோ டொருங்கு
பேதறப் பொறுப்பதிப் பேதைமை யுலகே. (௧)

* கொடா திவறு மடாஅ வெறுக்கையிற்
றுணியுறு வறுமை நனிசிறந் தன்றே
யிம்மைப் பழியு மம்மை நரகும்
பெரும்பசி யுழக்கு மிருட்பேய்ப் பிறவியு
மோவின்றி யாண்டு மீவின்று மாதோ
கற்றது புனையாப் பெற்றது மகிழ்தந்
தண்ணீர்த் தல்லாத் தெண்ணீர்ப் புற்கை
தாளிற் றந்தது கேளிற் பகுத்து
மிச்சி லருந்தி நிச்சல் கழிக்கு
மெளிமைத் தேனு மளிமைத் தாகலிற்
றெருளுடை மாந்தர்க் கருள்விளைப் பதுவே
நோக்கிய முகனெலாந் தேக்கிய
வன்கண்மை விளைக்கும் புன்கண்மை யின்றே. (௨)

* தாமரை யுறையுங் காமர் பேதாய்
நின்றுழி நில்லாய் சென்றுழி தருவாய்
கயவர் பெரியர் நயவ ரெனாஅ
தியாங்கணும் புகூஉந் தீங்கினை யாதலின்
வள்ளியோ ராய தெள்ளியோ ரனைவரு
நின்னை வளர்த்தே மன்னா யின்புறாஅ
ரொப்புர வுக்காந் துப்புர வெனைப்பல
நின்னை மாற்றி நன்ன ரீட்டியு
மோம்பா தருந்தியுங் கூம்பாது வீசியு
நீகடைக் கணியா தீகடைக் குழலும்
வறியர் மனைக்கே செறியநிற் போக்கியு
நீபுலந் தகலு மாபுல நாமக
ணருமிடன் முழுதும் புகவுனை யுய்த்து
நசையற நின்னீத் திசைமகட் டழீஇயு
நீவாழ் வுகப்ப பீடுமா ணவர்பா
லலைபல வுண்ணலி னிலைவிழை கிலையாற்
பசியட வுயங்கினும் பொசியவு நினைவிடான்
சாத லெய்தினு மீத லெண்ணுன்
றுன்ப முழந்து மன்பினிற் காப்பன்
வச்சை மகனென நச்சினை முன்னைப்
பெய்வின் ணிகர்த்த கைவண் மையினுர்
பல்லா றலைத்த வொல்லா வசைவெலா
நனிகெட வயாவுயிர்த் தினிதா
விழிதுஞ் சுதியவன் வழியெஞ்சு மருங்கே. (௩)

* இவறு தொழி லாளனை யினிது நோக்கலிற்
றவறு பெரிதுடைய தாமரை யாட்டிநீ
யிறையு மகலா துறையு மாறுகொ
றன்பா லன்பரைத் தன்போ னிறவுங்
கொள்ளக் குறையா வள்ளற் கடவுள்
விழுமிய மார்பமுங் கெழுமிய
நீங்கா மறுவே தாங்கிநின் கழறு (௪)

* திருமா மகளெனும் பெருமா நங்கா
யிழிகுணன் விறந்த விவறன் மாக்கள்பாற்
றெழிலற் றமர்ந்து விழிபட் டுறங்குதி
யதனாற்
கீதைப் பெயரிய மேதைப் பனுவலுட்
டன்னிரந் தாரெலாந் தனக்கீத் தவரென
மன்னுந் திருவாய் மலர்ந்ததற் கியைய
வலங்குளைப் புரவி யைவர்தம் பத்தினி
தீயிற் பிறந்த தூய தவக்கொடி
யிரந்தவை முழுதூ மேயெனு மாத்திரை
வழங்கி யருளி மற்றவள் விரித்த
கூந்தன் முடித்தற் கேந்திய தூதுழந்
தடாஅ புரிந்தும் படாஅ பட்டும்
பெரிய பாரதந் தெரிய வியற்றியுந்
தன்னுடைப் பேரொளி முன்னிய போழ்தத்
துவட்கீத் திலென்யா னுவள்பாற் பட்ட
தனிசுதி ராமே தணப்பதே யென்று
வெயரா வெதும்பா வயரா வழுத
பேரருள் வள்ளல் பிறங்கிய மருமம்
புக்குத் திளைக்கும் பொய்யில் வாழ்க்கைக்
கெனைத்தும் பொருந்தா வியல்பினை யாதியான்
மேக்கே நிறுவினுங் கிழக்கே புகுதருஉ
மிழிகுண வியற்கைத் திருநீ ரன்னது
பயந்தபூ நின்னைப் பயந்த தம்மேும்
கன்னிக் குந்தி முன்னாத் தந்த
கொடைக்கட னென்ற கோடா நெஞ்சிற்
கன்னனிந் திரற்குக் கவசகுண் டலங்கள்
கொடுப்ப தழுக்கற் றுத் தடுப்பது புரிந்த
வெய்யோனை மணந்து வீறுவ ததாஅன்று
நின்னுடன் பிறந்தா னென்னுஞ் சீருடைப்
பார்க்கவ னென்னும் பேர்க்குரி யாளஞ்

மாவலி வழங்குழி யாவயிற் றடுத்து
முழுமுத லானோர் விழிமுத லிழந்த
துலகறி கவ்வைத் துறைஅ தொழுக்கமும்
பிறப்பகத் தொத்த பெற்றித் தாகலிற்
பொருகடற் புவியினும் புத்தே ணாட்டினும்
பெண்பாற் கெல்லாம் பிறந்தகப் பயிற்சி
தணப்பினுந் தணவாத் தன்மைத் தென்பதூஉ
மணந்த புக்கக மாட்சி
யிணங்கின் றென்பதூஉ மினியறிந் தனமே. (௫)

பாஸ்கர சேதுபதி மகாராஜா அவர்கள் பிரிவாற்றாது கூறிய கவிகள்.

* என்னி னெனக்கினிய னின்பாற் கரசேது
மன்ன னிறந்த வகையானே—யின்னே
யொளியின் மணியானே னூழில்செய லானேன்
களிறில் § வெளிலானேன் காண். (௬)

* செவிக்கினிய கேளேன்சிந் தைக்கினிய தேறேன்
கவிக்கினிய பாடிக் களியேன்—புவிக்கினிய
வள்ளியோன் பாற்கரப்பேர் மன்னன் சொலல்வல்ல
தெள்ளியோன் சென்றபொழு தே. (௭)

* இரவாமை யீயு மெழிற்றகையு முள்ள
கரவாமை நல்குங் களிப்பு—மிரவாள
னின்முகங் காணு மியல்பு மினிக்காணே
னன்முகப் பாற்கரனே நான். (௮)

* சேது பதிக டிலகமே பாற்கரனே
கோது பதியாக் குணக்குன்றே—ஓதுலகி
னீயிறந்தா யல்லையா னீள்புகழா லுள்ளனையெம்
வாயிறந்து போய மதி. (௯)

வாயிலா மூங்கை மதியிலா நெஞ்சகநற்
றாயிலாச் சேயினையே தானனையே—நீயிலா
தென்செய்வே னின்றமிழை யாவர்க் கெடுத்துரைப்பேன்
கோன்செய்வேற் பாற்கரவேள் கூறு. (௧௦)

§ வெளில்-யானைகட்டுந்தறி.

* பாட்டு முறையும் பயிலாப் பதடிகட
மோட்டைச் செவியி லுகுப்பேனோ—நீட்டுகொடைச்
செங்கையாய் பாற்கரனே செந்தமிழ்ப்பா வின்சுவையை
யெங்கையா சொல்வே னினி. (௧௧)

* அருமை யறியா ரவர்செவ்வி நோக்கிப்
பெருமை யழியவைத்த பெட்பென்—றொருமை
யுயிர்த்துணை நீயென் றுரைத்த மொழியை
யயர்த்தனையே பாற்கரமன் னா. (௧௨)

* மண்புலவர் சொல்லமுதே மாந்திச் சுவைதெரிநீ
விண்புலவர் புல்லமுது மேவியுண்ணா—வெண்ணியது
பாலே நுகர்வான் பயனில் புளிவேட்டல்
போலேயாம் பாற்கரவேள் போற்று. (௧௩)

* ஈவாருங் கொள்வாரு மில்லாத வானத்து
வாழ்வாரே வன்க ணவரென்னுந்—தாவாய்மை
மன்னிய சொல்லை மதியாமல் வானெய்த
வுன்னியதென் பாற்கரவே ளோது. (௧௪)

* பாருலகு நங்கொடைக்குப் பற்றா தெனவுள்ளிச்
சீருலகு பொன்னென்று சென்றனையப்—பேருலகிற்
கொள்வா ரிலாமை குறித்திலையே பாற்கரப்பேர்
வள்ளா லிதனை மதி. (௧௫)

* கார்புக்க தோகற்ப கம்புக்க தோவறியேன்
சீர்புக்க பாற்கர சேதுபதி—பேர்சிறக்க
வீத்து மலர்ந்திவ் விருநீர் வரைப்பெல்லாங்
காத்து வளர்ந்தநின் கை. (௧௬)

* கேளாருங் கேட்கக் கிளக்கும்வா யெங்கேயோ
வேளாரும் வேட்ப மிகுநிதியந்—தாளாரு
மன்னர்க்கும் யார்க்கும் வழங்குகர மெங்கேயோ
கன்னற்கு நேர்பாற் கர. (௧௭)

* சோப கிருதாண்டிற் றாய தநுமாதத்
திபமிகு பக்கத் திதியெட்டிற்—பூபரவு

வார முதலாம் வளர்பாற் கரன்வேந்தர்
தீரன் சிவமாந் தினம். (௧௮)

சேதுஸம்ஸ்தானம் ஸ்ரீமத் முத்துராமலிங்க சேதுபதி மகாராஜா அவர்கள்
விவாககாலத்தில் இயற்றியன.

* பூமணந்தாள் கீர்த்தி புலவோர் திருமணந்தார்
நாமணந்த நின்கவிக ணன்மகிழான்—மாமணந்த
சீராஜ ராஜ சிகாமணியாஞ் சேதுபதி
மாராஜ நின்றன் மணத்து. (௧௯)

* வீட்டுக் கெழில்விளக்க மேவுவித்தா னெஞ்சேது
நாட்டுக் கொருதாயை நல்கினான்—பாட்டுக்காஞ்
சீலமுத்து ராமலிங்க சேதுபதி நன்மணத்தாற்
காலமழை பெய்தளிகக கார். (௨௦)

வேறு.

* தன்னு முதவுங் கற்பகமாந் தண்பாற் கரமா றவைக்குதித்துக்
கன்ன னுதல் காட்டினைநின் கையு மதுவே காட்டியதே
மன்னு தாதை படிக்கணபி டேக மருவி வருகுலப்போர்
நன்னர் மணத்துங் காட்டினையால் ராஜ ராஜ நரேந்திரனே. (௨௧)

ஆகசெய்யுள் ௩௬௦௩.

---

## நெல்லையப்பன் கவிராஜர்.

இவர் திருநெல்வேலி வேளாளர் மரபிலேபிறந்த பரம்பரை வித்துவான் பண்டைநூல் பலவற்றிலும் ஆராய்ச்சியுடையார். திருநெல்வேலி அனவரத தானநாதர் கோயில்வாயில் வித்துவான். சிவநேயசசெல்வசசிறப்புற்றவர். திருநெல்வேலிக்குவரும் வித்துவான்களையெல்லாம் மிகவும்அருமைப்படுத்தி யுபசரிக்கும் இயற்கைவாய்ந்தவர். இப்போதிவர்கட்கு 60 வயசுக்குமேலுண்டு.

ஸ்ரீ கணபதிமீது நடுவெழுத்தலங்காரம் கட்டளைக் கலித்துறை.

* சத்தியன் னைம்விரை வாம்பற்கு வாய்த்த தனிப்பெயரின்
முத்திய மான நடுவெழுத் தேசுக மோடிருக்க
நித்தியம் பூணப் புசிக்கவென் சொற்படி நின்றுதொண்டு
பத்தியு டன்செய்ய நாயடி யேற்கருள் புரிவிப்பையே. (௧)

ஸ்ரீ முருகக்கடவுள்மீது மும்மண்டில வெண்பா.

* மானே யழகார்கண் மங்கைமய லாகிவளை
தானே கழலவுளஞ் சங்கையின்றிக்—கானூர்
தழன்மெழுகாய்ப் பங்கமுற்றாள் தண்குழலாய் நீசொல்
கழன்முருக னிங்குவரக் கண்டு. (௨)

குன்னூர் பெரியவீடு வித்துவான் ஸ்ரீமத் குமாரசுவாமி முதலியாரவர்கட்கெழுதிய கடிதக்கவி.

* பன்னகப் பாயன்மிசைத் துயின்முகுந்த னயன்காணுப் பரமனோர்பால், மன்னுகப பாவைபத மலர்வணங்கு மென்னருமை மைத்துனநற், கன்னுகப் பார்தருவிண் டோய்குன்னூர் வாழும்விவேகாவில வேட்கு, முன்னுகப் பார்புகழுங் குமாரசுவா மிக்கோவே மொழியக கேண்மோ. (௩)

* கலாமதிச்செஞ் சடைப்பெருமான் கண்ணுதித்த சண்முகவேள் கருணை யாலித, துலாமதியின் மூவைந்து தெய்திவரை யிங்குறுவார் சுகமாங் குற்றார், வலாமதிசெந் தனமருவும் வனிதையர்கண் மடலெழுது மதனு சேம, மெலாமதிக மகிழ்வுடனீ யானறியும் வண்ணம்விரைந தெழுது வாயே. (௪)

* வராசை தனிற்பிறிந்த தினமுதனின் மதிமுகமு மகர யாழ்சேர், கராசை கொளுமிசையுங் கண்டிடக்கேட் டிடக்கருதிக் காவித்தாரா, தராசை வலகிகர்கூந் தற்பேதை யோர்புறத்திற் சார்வார்கெல்லைப், பராசை யகற்றிடுநற் பதமலரை யனுதினமும் பணிவேற்குன்றன். (௫)

* திருக்கரத்தின் வரைகடிதங் கன்னிமதி மூவொன்பான் றெய்தி தன்னில், அருக்கரத்தி விழும்பொழுதென் பாற்போந்த ததிற்பொறித்த தனைத்து நோக்க, வுருக்கரதநி விலங்கும்விழி யென்றங்கை யார்க்கலகை யுற்ற செய்தி, யிருக்கரத்தி னம்புனைதிண் புயவேளே யான்கவலை யெய்தி னேனே. (௬)

* மனவருத்தங் கொளுமமயம் நொந்தபுண்ணிற் கோல்செலுத்தன் மான வென்றுங், கனவருத்த முதவியுயர் கவிவாணர் தமைப்புரக்குங் கருணை வேந்தாம், பணவருத்த மரும்விரும்புஞ் செல்லரா

ஜேந்த்ரனிலம் பாட்டோர்க் கன்னந், தினவருத்தன் பாபரமன் சீரடி சேர்ந் தானென்னத் தெரிந்த தன்றே. (எ)

* இந்தவிதங் கவலையுறு மென்றனைத்தேற் றற்கேனு மிங்கெ ழுந்து, வந்தவிதங் கருணைபுரி வள்ளன்முத்து சாமியுநின் வரவுக் காக, வந்தவிதங் கமுகமலர்ந் தெதிர்பார்த்திங் கிருக்கின்று னைய்யா வா வா, பந்தவிதங் கவலைநீர் தனக்குறத்தி காந்தனடி பணிகு வோ னே. (அ)

சங்கீத வித்துவான் சீநிவாசராவ் அவர்கள் பாடலை வியந்துபாடிய கவி.

* வரக்கம்ப னையகளவம் பிகைபதம்போற் றுஞ்சீநி வாசரா வக், கிரக்கம்ப னும்புகழப் பாடுகின்ற கீதவிசை கேட்கிற் சேடன், சிரக்கம்பஞ் செய்வனெனிற் பூமியெலா நடுங்கு மெனத்தெரிந்தோ முன்னம், இரக்கம்ப கூதமுமின்றி யவன் செவியை யரிந்து பிலத்தி ட்டான் மாதோ. (௯)

ஆகசெய்யுள் ௩கசஉ.

## குன்னூர் குமாரசாமி முதலியார்.

இவர் ஸ்ரீவில்லிபுத்தூர்த்தாலூகா குன்னூரில் பெரியவீடு பழநியப்ப முதலியாரவர்கள் புதல்வர். செல்வப்பெருக்கினால் இவர்கள் வீட்டுக்குப் பெரிய வீடு என்ற பட்டம் வழங்கிவருகிறது. தமிழ் வித்துவான்களிடத்து உண்மை நேயம் வாய்ந்தவர். இசையுடன் இனிமையாகக் கவிபாடும் திறமுற் றவர். தாலூகாப் போர்டு, டிஸ்திரிக்டு போர்டு மெம்பர். இப்போது 55 வயசிருக்கலாம.

ஊற்றுமலை ஜமீந்தாரவர்கள்மீதுரைத்தன.

* கணக்கஞ்சங் கரங்கருங் கருங்குழல்கண் டங்கணுறு கணிகை மாத, ரிணக்கஞ்சங் கரமனையா ரியல்பெனநீத் தில்லறமே யேற்றெந் நாளும், வணக்கஞ்சங் கரன்முனின் வைத்துமகிழ் பவகனகம் வழங் குந் திவ்ய, மணக்கஞ்சங் கரமெனக்கொண் மருதப்ப பூபதியே மன்ன ரேறே. (க)

* பொதியமலைக் குறுமுனிவன் புகன்றதமி ழமுதமெனப் போற்றும் விரைப், பதியமலை யாததிற லிருதயா லயசுகுண பாண்டி யாவித், ததியமலை யருள்பெறுநின் சமுகதரி சனம்பெறுநற் றகைமை தந்த, துதியமலை வாயுகந்த குகன்கருணை தனையெனென்று சொல்லு வேனே. (உ)

ஆகச்செய்யுள் ௩கசச.

## இராமசாமிக்கவிராயர்.

திருநெல்வேலிச் சில்லா சேற்றூர்ச்சமஸ்தான வித்துவானான இவர்கள் கொல்லம் ஆண்டு க00சுல்முகவூரில் வேளாளர்மரபில் ஜனனமானவர்கள். சேற்றூர்ச சமீந்தார் சுந்தரதாசத்தேவர் அவர்களுக்கு வித்தியாகுருவாயுள்ளவர்கள். அதிக சுற்பனலங்காரத்தோடு கவிகள் மிகுவிரைவாகச சொல்லுவார்கள். இவர்கட்கு அருணசலக்கவிராயர், சுப்பிரமணியக்கவிராயர், கந்தசாமிக்கவிராயர் என்ற மூன்று புத்திரர்களிருக்கின்றார்கள். அவர்கள் சரிதமும் தனிப்பாக்களும் பின்வரும்.

சேறை நசசாடைதவிர்த்தருளிய சுவாமிமீது கூறியகவி.

* பொன்சேரு மாலயனாற் சோதி யானைப் புவனமெங்கு நிறைநதபரஞ் சோதி யானை, மினசேர்நுண் ணிடைப்பெற்றாள் பாகத்தானை மேன்முனிபன் னியருதவும பாகத் தானைத்,தென்சேறை மாநகரத் திருப்பான் றன்னைத திரசுகி லடியேனைத் திருப்பான் றன்னை, முன்சேரற் கிந்தமனறி லாடி னானை மொழிவாரே யினிச்செனன மொழிவார் தாமே. (க)

* காற்காணி யாயினும் லோபர்தம பாற்சென்று கையை விரித்
தேற்காத வாழ்வு மெளியோர்கட் கீதலு மென்று முன்றன்
மேற்காதல் கொள்ளு மனமுமெப போது மியங் தருள்வாய்
சேற்காமுற் றாடு வயல்சூழ்தென் சேறைத் திகம் பரனே. (உ)

* விடங்காட்டுங் கண்ணி லமுதமுங் காட்டி விளைந்த முத்து
வடங்காட்டுங் கொங்கை தனைக்காட்டி யிங்கித மான வல்குற்
படங்காட்டு மாதர் மயற்குட் படாத படிக்கெனக்கோர்
இடங்காட்டி யென்றருள் செய்வாய்தென் சேறைத் திகம் பரனே.()

மதுரையில் சுவாமிதரிசனவேளையிற் கூறியகவி.

* கடம்பவன மடைந்திடுகூ டென்றறிந்தும் பொன்னிலமேற் காதன் மேலா, கடம்பவனங் காட்டியலே கின்றநெஞ்சே நீயிவற்றாற் காண்பாய் மாசங், கடம்பவன மைப்பொருநதா திருக்கவுன்னின் மதுரையிலங் கயற்கண் ணாள்சேர், கடம்பவனத் தரனடியை யெப்பொழுது மெய்பபரிவிற் கருது வாயே. (ங)

* உன்பாத நாளும் பணியாம லெங்கெங்கு மோடி யலைந்
தென்பாத மெட்டி நடநதாலு மென்பய னெய்து மம்மா

தென்பாண்டி நாட்டா ரன்பா லடைந்த சிவனுக் கந்நா
ளன்பாக் கொடுத்த வுமையேதென் கூடலி லம்பி கையே. (௫)

திருவாவடுதுறையாதீனம் மஹாசந்நிதானமா யெழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகள் பாலுரைத்த திருக்கைப்புகழ்ச்சிப்பதிகம்.

* திருமேவுந் துறைசையிற்சுப பிரமணிய தேசிகன்றன் றிருக்கரத்தை,மருமேவும் வனசமிக மெனவுரைக்கிற் பங்கமுற வாழ்ந்து நாளுந், தருநேரும் வண்டர்களைச் சார்ந்துமிகப் பயமேவுந் தன்மை யாலே,பொருபோது மப்போதைக் கனவிலுமே மறந்தேனு முரைக்கொ ணாதே. (௬)

* நிதநிதமுங் கண்ணீரை யுகுத்துவா யொடுங்குதலா னேயந் தோடிங், கிதமுதவு நல்லாரை வருத்துவதாற் கமலையோ டிருத்த லாற்சந், ததமுமுரு வாடுவதா லவ்வனச மென்னுமலர் தன்னைச் சார்ந்தோர், பதமறிந்து பதமருள்சுப பிரமணிய பரன்கரம்போற் பகரொ ணாதே. (௭)

* ஐமடுத்த கொடுவிலங்கின் பெயராவாய்ந்து முட்டாளை மருவி யென்று, மினமெனவுற் றவைகளெல்லா மிகக்கொடிய தாயிருந்தே யென்றும் வெய்யோர்,தனைமருவிக் கலைதெரியு மதியோரை வெறுத்திடலாற் சலசந் தன்னைக், கனமடுத்த துறைசையிற்சுப பிரமணிய பரன்கரம்போற் கருதொ ணாதே. (௮)

* மிஞ்சுவடு வுற்றதனுன் மிகவயிர மகங்காட்டி விளக்க லாலே, யெஞ்சலுற வசரமா யிலையென்ப துடைமையினா லிமையோர் தாமும், பஞ்சமுடை யதுதருவென் றேபகர்த லாலினிக்கற் பகத்தை நாளுந், தஞ்சமென்றோர்க் கருள்புரிசுப் பிரமணிய பரன்கரம் போற் சாற்றொ ணாதே. (௯)

*மிகவெறிகொண் டலைதலாற் றினந்தேம்ப லோடிருந்து விளங்க லாற்றன், னகங்கவடு காட்டுதலா லடுத்தோர்க்குக் கலிகைவச மடைந்தே னென்று, பகர்வதுபோற் றுலங்குவதா லித்தன்மை பொருந்தியகற் பகத்தை நாளுந், தகவுசான் றவர்க்கருள்சுப பிரமணிய பரன்கரம்போற் சாற்றொ ணாதே. (௧௰)

* திருவளரும் வனசமுமே வனம்புகுந்து பன்னாளுஞ் செயுந்தவத்தா,லரிதுகா மிணையாக வேண்டுமென வெண்ணுவதென் றலைந்து

நிற்ப, மருவுறக்கைத் திருப்போர்க்கே யுதவிமிகக் கொடியதுவாய் வாய்ந்த வந்தத், தருவெனுங்கற் பகமோசுப் பிரமணிய பரன்கரம் போற் சாற்றொ ணாதே. (௧௧)

* காலவரை யுற்றதனாற் சிலைவனைத் தார்க்குவழங் காத தான் மெய், கோலமிகுஞ் செம்மையின்றிக் கருமையுற லாற்பயமேற் கொளலா லென்றுஞ், சாலவுங்கைம் மாறுறலான் மடங்கலையும் பெற்றதனாற் சலத ரத்தை,சீலமிகுந் துறைசையிற்சுப் பிரமணிய பரன் கரமபோற் சாற்றொ ணாதே. (௧௨)

* மிகப்பெரிய வரையடுத்தும் விலதுவதா லந்தரத்தை மேவலாலத், தகப்பெரிய மாலாழி கவர்ந்துமிக விலங்கிடலாற் றருக்கை மேவி, மிகப்பரிய வயிரமுற்றோன் றனைத்தாங்குஞ் செய்கையினு லிமமேருத்தனைச், சுந்தத்துறைசைப் பதிவளர்சுப் பிரமணிய பரன் கரமபோற் சொலலொ ணாதே. (௧௩)

* அந்தணனான் முதன்மையுற்ற மொருபுலவ னேவலுற்ற ளித்த கன்னன், றந்திடுவ தொருகாற்றி யாகமெலலார்க் குமபாரி தானென் றேத, வந்ததனாற் கடையாகு மொருவனிங்கு வள்ளலகளு மாண் பில்லாரா, லெனைத்திருத் துறைசையிற்சுப் பிரமணிய பரன்கரம் போ லிசைக்கொ ணாதே. (௧௪)

* பொன்னிலமு மஞ்சுமஞ்சு கருவும்வள்ளல் களும்புரையாய்ப் புரையு றுமல், மன்னுலகிற் கானடைந்தும் விட்புகுந்து மிகவலமை வாய்ந்து மேவாந், தன்னுருவந் தனையொழித்து மிருப்பதனாற் றனக் குவமை தானே யாகி, யென்னனைமேபாற் புரந்தருள்சுப் பிரமணிய பரன்கரமபோ லிசைக்கொ ணாதே. (௧௫)

இக்கவிகளைக்கேட்ட ஷை மகாசந்நிதானம் மிகவியந்து "உங்கள் கவிகளைக்கேட்டு மகிழ்ச்சியுற்றோம்" என்று கட்டளையிட்டு அருமை பாராட்டிய போதுடனே கூறியது.

* அரும்போது வகனமெனு மடவார்மை யனுட்டியாங்கி யலையுநாயேன், அரும்போது சாததியடி பணியேனு மினுஞ்சொற்பா வணிந்த தாஸ்யா, வரும்போது மெனக்கருஞ்சுப் பிரமணிய குருமணிதன் வாக்கா லிங்கு, வரும்போது நின்கவிகேட் டுவந்தனமென் றனையின்ப வாழ்வுற் றேனே. (௧௬)

* வாணியுறை தென்றுறைசை யம்பதியிற் பொலிந்தடியார் மனத்திற் றோன்றுந், தாணுவருட் சுபரமண்ய சற்குருவின் கொடைக்குநிகர் சாற்றுங் காலைச், சேணுலவு மதிசூமணன் கன்னனரன் மாவலியைச் செப்பி ஞன்மா, காணியரைக் காலொருகா லிருகான் முக் காலலது கண்டிலோமே. (கஎ)

* ஏர்மலிசுப் பிரமணிய பரன்கொடைக்கொவ் வாமல்வள்ள லென்போர் கட்குள், ஓரியென வொருவனின்றான் சூரன்மக னென் றேச வொருவ னின்றான், பாரினிலவக கிரனென்னப பகரநின்று னொருவனொரு பண்ப னின்னுங், தேர்கிலாச சிசுபால னென்னனிலன் றுன் மற்றெவரைச செபபு வேனே. (கஅ)

* தேவர்திகா மணிகுருசுப பிரமணிப பரன்கொடையின் சிறப்பை யோர்ந்தக், காவயர்ந்து தேவநின்றன் கரமலர்கட் கெனையிணையா கத்தா னென்றும், பாவலவர் புகலாமற் றுவரமென் றிரந்துபெறும் பான்மை யாலே, தாவரமென் றொருபெயாபெற் றிங்குவரா தங்கிருந்த தகைய தாமே. (கசு)

* பரசமரங் கரத்தானைப் பகருமஞ்சக் கரத்தானைப் பதியோர்க் காமுப்,புரசமரஞ் செய்தவனைப் பூங்கணையஞ் செய்தவனைப் பொடிசெய் தோனை, அரசமர மாலெனவுந் துறைசைவெண்குன் றெனவு மமர்ந் தருளித் தான, முரசமரர் கேட்கவருள் சுப்ரமண்ய குருவை நெஞ்சே முன்னு வாயே. (உ௦)

* ஒருவாதுன் னடியரொடங் கடுகையன்க லாமதிய னுனக்கே யென்னை, மருவவங்கங் காஎனென்பார் மாதிடமு நின்னருளால் வாய்ந்தே னென்றும், பொருவிலா நின்கணிச்சித் திருக்கையுடையேனுன்னைப் போல்யான் வந்தேன், திருவுயர்சுப் பிரமணிய தேவ வினி யேனுமருள் செய்கு வாயே. (உக)

திருவையாற்று வேங்கடசுப்பையர் சங்கீதங்கேட்க
எட்டுவருடமும் பிரியந்தானென்றபோது கூறியது.

* மட்டுவரு டம்பொழிகா வுயர்துறைசைச் சுப்ரமண்ய வள்ளலாரிட் தட்டுவரு டன்பகைக்குந் திருவாயா றுமதுசங்கீ தங்கள் கேட்க, எட்டுவரு டமும்பிரிய மெனச்சொலையாற் றுப்புலவி னினி

மே லும்முன், மெட்டுவரு டவுந்தெரியா திருப்பர்சங்கீ தங்களினுன் மிகவல் லோரே. (௨௨)

திருவாவடுதுறை ஆதீனத்தில் இப்போது மகாசந்நிதானமாயெழுந்தருளி யிருக்கும் ஸ்ரீமத் அம்பலவாண தேசிக சுவாமிகள் பாலுரைத்தன.

* அம்மானம் புலிதரித்தான் பசுவினுக்கு முத்திதரு மரனூர் வாழும், பெம்மானம் பலவாண தேசிகனோர் பணியரசைப் பேசி லன்னான், வெம்மானஞ் சுபாவாகநி கனமிழந்தான் கவிவரையான் மிகத்தாழ் வானான், சமமானஞ் சொல்லவகை யில்லையிவன் புகழை யெவர் தாஞ்சொல் லாரே. (௨௩)

* மாதவனம் பலவாண தேசிகன்றன் றிருமடத்தின் வளங்கண் டாலச், சீதரன்றன் வேலையைப் பாற்கழியென் றுரைப்பானூற் றிசைமு கங்கொள், போதவனறன் னூரையினி யயனகரென் றிட விருப்பாய் போவென் பான்முன், ஓதுமக பதிபதியை மாசுவர்க்கத் துறறுதென்பா னுயர்வெ தாமே. (௨௪)

இரண்டாவது சந்நிதானத்துக்குக் கூறியகவி.

*திருக்கையிலை நிகர்த்திடுங்கோ மலைகொடியைச் சிறுமத்தையைச் சேர்ந்தார்கு கொல்லித், திருக்கையிலைத் தருக்கயிலை மழுப்படையை யகற்றியிந்தச் செகத்தின் மேலாநு, திருக்கையிலை யெனுந்துறைகைப் பதிநமசி வாயகுரு செயுநகூற் றின்றித், திருக்கையிலை யெனநமக்கு மனமேயன் ஞேன்கழலைத் தெரிசிப் பாயே. (௨௫)

சேற்றூர்சசம்ஸ்தான கர்த்தராகிய
முத்துசாமிப்பாண்டியதுரையவர்கள்மீது கூறியகவி.

* மண்டலமெல் லாம்பரவு முத்துசா மிப்பாண்டிய வள்ளல் கீர்த்தி, யெண்டிசையும் பரவியதா லூர்த்தியைமிந் திரனயனவ் வெழின் மால் வாணி, வண்டுறைபூ வைக்கடலை யறியாம லீரிரண்டு மருப்பா னீர்பால், கொண்டகுணத் தாவிரவி மதியாற்றும் மகந்தெளிந்து குடிகொண் டாரே. (௨௬)

சேற்றூர்ச சம்ஸ்தானபதி சுந்தரதாசத் துரையவர்கள்பேரிற்பாடியன.

*முன்னஞ்§முப ரங்கமன்னன் கவிகேட்டுச் சிரமசைத்தன் மொழியி லக்கம், பொன்னெனச்சொல் லும்புலவீர் சுந்தரதா சேந்திர

§ உபரங்கன் உடையார்பாளையஞ் ஜமீந்தார். இவரை வித்துவான்கள் பாடல் கேட்டுச் சிரமசைத்தாலும் போதுமென மகிழ்வர்.

னைப் போலெப் பாவும, பின்வருங்கற் பனையிலெக்கன் றறிந்துசபா சென்றதுண்டோ பேசுங் காலிம், மன்னரிரு வர்லெவரே தமிழ்த் திரமுள் ளார்தெரிந்து வழுத்து வீரே. (௨௭)

* சல்லாப மாலெங்கள் சுந்தர தாசன் சமுகமதிற் கல்லா தவரெவர் நீயே சரஸ்வதி கைகுவித்து நில்லா தவரெவ ரெப்பிர சங்கமு நீசொலெனச் சொல்லா தவரெவ ருண்டேற் கண் டோரெமமுன் சொல்லுவிரே.

பேரையூர் வித்துவான் பொன்னுசெட்டியார் அவர்கள் மன்மதனை "அருமபானவன்" என்று ஓர் கவியிற்கூறியதைக்கேட்டு அவவாறு கூறுவது பிழை மலரையுடையான என்று கூறவேணடுமெனறபோது கூறிய கவி.

* பாடவரும படிக்கவரும பதமபதமா வெடுத்தருத்தப் பார்த் தன் பாகதகொண்டாடவரு மெவர்கருமுனபோல வலலவரு மெல்லவ ருமாய்ந்து மெசசி, நாடவரும பொருளையெடுத்துரைபபதற்கு வா ராது நாமிந் நாளிற், றேடவரும பானபதத் தாலறிந்தோஞ் சுநதர தா சேநதர சோலே (௨௯)

அவர்கள் திருககுற்றாலத்திற் பிரசங்கஞ்செய்தபோது கூறிய கவி.

* திடபுருட மேருவெங்கள் சுநதரதா சேநத்ரசிஙகஞ் சொரும் ப்ர சங்கம், வடவருவி யென்பர்சிலர் மேற்போமா செவிகளினிக்கு மாலெஞ் ஞான்றும, புடவியெலாந் தொனிததிடுமா கடைபடா திரு ந்திடுமா புகலுங் காலே, யுடலழுக்கல் லாததகத்தைத் தெளிததிடுமா விதைகிரரா யுரைகொண் ணுதே. (௩௦)

* சொல்லவரை யாதருளுஞ் சுந்தரதா சேந்த்ரசிங்கஞ் சொலு ம்ப்ர சங்கம், வெலலவரை மீதுமதுப புயல்பொழிதற் கதிகமென விளம்பன் மெய்யே, கொல்லவரை சேதுவரை குமரிவரை யுரைகளி லூர்க் குள்ளிம் மால்போல், வல்லவரை யாங்களிது வரையுமறிந் திலமறிந்தோர் வழுத்த லாமே. (௩௧)

* ஒருமலையக் காற்குருகி யுளமலையும் பொழுதினிலவ் வுவரி மீது, வருமலையு மெழுந்தினிச செமமலையு மெடுத்தெய்ய வந்தான் வந்தான், பொருமலையும் விம்மலையு மினிச்சகியே னென்சகியே போ தும் போதும், தருமலைக்கு மெழுமலைச்சுந் தரதாச மன்னவன்பாற் சாற்று வாயே. (௩௨)

அவர்கள் சூட்கதிர் வழங்கியபோது கூறிய கவி.

* அந்நாட் கதிரையொளித் தானைத் திருவனைப்பா
ரிந்நாட் கதிரை யெவர்க்குமருள்—கன்னனெனுஞ்
சுந்தரர்தஞ் சுனனைச் சொலாதவனைச் சொல்லப்பொன்
வந்தவிரும் பைசசொல்லப் போலாம். (௩௩)

அவர்கள் ஒரு கொக்கை வில்லாலெய்தபோது கூறிய கவி.

* தூக்கியனுஞ்சோ தெனச்சேறைச் சுந்தரர்தா சிந்திரனைச்
சித்திகருஞ் சேந்தனென்றே செப்பலாஞ்—சக்ராருவென்
றன்னொருகொக்குப் படுக்கா னுகைகவன்போல யாங்காண
வின்றொருகொக் கெய்தா னிவன். (௩௪)

அவர்கள் ஒரு பன்றியைக் குத்தியபோது கூறிய கவி.

* மதமிறைக்குந் தவளமருப் பியானையுங்கைம் மாவமரர் வானிற் செல்லுங், கதிமிகுமவா சியுமபாயமா பன்றியுங்கோட் டிமாவெனவேன் சுழற்றி னாக, ளிதுவனைக்குத் தருமாவென் றெங்கண் முத்து சாமித்துரை யின்ற பாலன், விதுமுகச்சுந் தரர்க்கு வள்ளலக்ர வேலத்தனால் வீழ்த்தி னானே. (௩௫)

அவர்கள் ஒரு கவ்வாயைச் சுட்டபோது கூறிய கவி.

* விடையா னருட்சுந் தரதாசு டன்னன் வெடியிறக்குண்டு
கடுவா யிருந்திடு மெனப்பா ரதினிற்றிறங் காண்டுமென
மொடுவா யத்தடி வருங்கடு வாயை முனிந்திங்குவா
படுவா யெனச்சொலிச் சுட்டான் விழுந்தது பாரிடத்தே. (௩௬)

அவர்கள் திருக்குற்றாலத்துக்குப் போய்வந்தவுடன் குற்றாலமுஞ்
சேற்றூரு மொப்பெனக் கூறிய கவி.

* தேவருக்கை யுறறதனற் றிருவனிறை யாயிருக்குஞ் செயலா லென்று, மாவலுடன் சமபக்கா வலாவாச முறவிளங்கு மதனுலிந்தப, பூவிலுயர் சித்ரசங்கம பொருந்தியதாற் குற்றாலம் போற் சேற் றூரை, நாவலோ டெண்ணியுனைச் சுந்தரதா சேந்தரவிங்கு நாங்கண் டோமே. (௩௭)

அவர்கள் மீது நெல்லுக்குந் திருமாலுக்குஞ் சிலேடையாகக் கூறிய கவி.

* சீர்கொண்ட பழந்த திலங்குகையி னுற்றன் சிறந்தகம லக்கனுறலாற, றினமுமே யெண்படி யுறுங்காளி னுலளவு செய்கின்ற

தன்மை யதனு, லேர்கொண்ட கேடிபம் பாரவைக் கோற்றனுவி னெ
ய்தலா லெங்ஙா ளினு, மிசையுறச் சிதவன முங்காட்டலாலரி யெனச்
சொல்லு காமத் திறற்,பேர்கொண்ட பன்னகச் சூட்டுக் கதிர்க்கண்
பொருந்தவரு பெற்றி யதனாற், பின்னுற விலக்குமிரை மேவலான்
மாலெகிகர் பேர்பெற்ற சாலி வபல்சூழ், வார்கொண்ட சேறைநகர்
வள்ளல்சுந் தரதாச மகராச சுகபோ சநீ, வனசமலர் மாதிரு வர்கரு
மொரு பதியாகி வாழிநீ பேழி தானே. (௩௮)

உபயார்த்தமுள்ள பிரியாதக் கவி.

✱ அன்னமலி வயல்வளந தென்சேறை யமபதியி லரசாட்சி
நிதமியற்று, மண்ணலசுந் தரதாச மன்னவா வாதியா னறையுமபரி
யாதுகேண்மோ, முனனமொரு கையிலங் கைமுரித் தவனொர்கா
ன் முனியாக வந்தராமன், மெழிபிலோ மெப்பிலான் மூர்க்கமா பி
குவுமபன் முநதிவந் தெனதகததின், மன்னுகற் பணிமெலாந திருடி
னான் றங்கைவனை வததிரந தனையுமுரிய, வநதான்ப யச்சேலை யுஞ்ச
த்தி யாத்தோளில வைததனன் சானறதினிமே, லென்னதான் வே
ண்டுமிவ் வேளையஞ் சலரஞ்ச வின்றுதண் டித்துமிகவு, மேனழியாம்
பேதையைக் காத்தருளு வாயென்னி லிவ்வுலகின் மிக்கபுகழே.(௩௯)

அவர்கள் தேவதானத்திற் செய்த அட்டகோண மாளிகையை வியந்து
கூறிய கவி.

✱ விண்கோணும் படிவளஞ்சேர் சேறைச்சுந் தரதாச வேந்தனி
ந்த, வெண்கோணந் தனிலமையா வெண்கோண மாளிகையொன் றி
யற்றினன்மாப், பண்கோணி லாவேதப் பிரமனிது போற்பார்த்துப்
படைக்க வெண்ணிற், கண்கோணும் கைகோணு மனமுமிகக் கோ
ணுமுயர் கலைவல்லீரே. (௪0)

✱ குலவும்வட கைலையுயர் கையிலையென் று மிகவெள்ளிக் குன்
றென் றோங்கி, யிலகுமுயர் போகிநகர் சீயப்பாற் போகிநக ரென்று
மேலாய், நிலவுமறை யவனுடு மறையவனு டென்றெழுந்து நின்றூற்
போதும், வலனுறுமென் சேறைமன்ன னெண்கோண மாளிகையின்
வளர்ச்சி தானே. (௪௧)

அவர்கள் தேகவியோக மானபின் கூறிய கவி.

✱ கல்லாத கலையிலையென் றெக்கலையுங் கற்றதனாற் கன்னி னும்
ம்போய், சொல்லாமை முதலாநற் குணநிறைசுந் தரதாசந் துரை

யை யிந்நாட், டெல்லாருங் கவலுறக்கொல் லந்தகனே யுனைநடுவ னென்னும் வார்த்தை, பொல்லாத விடப்பாம்பை நல்லபாம் பென்ப தொப்பாம் புகலுங் காலே. (சஉ)

* இந்திரன்சுந் தரதாசன் றனக்கெதிராப் புலிகரடி யெதிர்த் துப் பாய, வந்தவையெல் லாஞ்செயித்த வல்லவனிச் சமனொருமை மாட்டுக் கார, னந்தகனோர் காலனிவன் றனைச்செயிக்கி னமதாண் மைக் கழகா வென்று,சிந்தையிலெண் ணினனதனாற் செயித்தானின் றேலவனென் செயவல் லானே. (சங)

* வாக்கினைய மனத்தினைய மிரண்டுமுறுந் தென்சேறை மன்னன் பேரி, லாக்கினையென் றுற்பின்றோ ரடியெடார் மீறிமற்றோ ரடியெ டுத்தார், நாக்கினையெல் லாநறுக்கு வாரவன்பாற் சூழ்ந்திருப்பார் நமனே யுன்னைத், தாக்கினைய வுதைப்பர்கணி தருமனென்ற தால் விடுத்தார் தயபி ஞயே. (சச)

* பெயர்சுந் தரதாச மன்னுநீ சிரகரகம் பிதஞ்செய் திப்பா, நாடநய மென்றுரைக்கி லஃதிலககம பொன்னெனவே நாவலோரா ற், றேடவரும் பொருளேதென் சேறைநகர்க் கரசேநீ சென்ற பாதை, கூடவரா திங்கிருந்து குழறியதா லெங்களைபபோற் கொடியோர் யாரே. (சரு)

*தேர்த்தானை யரசேசுந் தரதாச மன்னுநின் றிருமு கத்தைப், பார்த்தாலு நீகடைக்கண் பார்த்தாலு மதிமதுரம் பழுத்தி ருக்குஞ், சீர்த்தாலு வாலொருசொல் லுரைத்தாலும் போதுமெனச் செப்பித் துள்ளி, யார்த்தாரைக் கைவிடுத்தா யவர்புரியா தகழுனைமொாந் தாவ தென்னே. (சசு)

* சேலைவைக்கும் கரமதன்சுந் தரதாச மன்னவன்வா சிப்பை நாடி, மாலைவைத்தெங் நாட்டிலிருந தெவர்வரினு மெந்நாலும் வழுத் தக் கல்விச், சாலைவைத்துங தானுரைத்து மனங்கொடுத்து மன்னவ ரெச் சபைசென் றாலு,மேலைவைக்கும் படிபுரிநதும் வைத்தநன்றி யெடுத்தெடுத்து வியவார் யாரே. (சஎ)

சேறைநச்சாடைதவிர்த்தவர் கோவிற்கடுத்திருக்கிற நாகமலைக்
கோவிற் கும்பாபிடேகச சிறப்பு.

*உலகினொரு குறுமுனிகைக் கமண்டலத்தை யோர்காக முற்று விழ்த்து, விலகவரு நீராற்பல் வளநதருநீர் நாடான தெந்நாட் டேட

ன்றி, நல்முறாற் பொதியமாநாண் முதலாக வரும்பொருளை நன்னீ ராலே, பலவள்ளுஞ்சேர்ந திடுமிதனுக் கொவ்வாதென் றறிஞர்சொலும் பாண்டி நாட்டில். (சஅ)

* பெரியபுறங் காட்டாடி யையமேற் பலன்றன்னைப் பேணி நண்புக், குரியனெனக் கொண்டானை நியுநாட்ட மொன்றிலா.னுவ னுக் காகப், பரிதல்கூ டாதெனவத் தனதனைநீத் துயர்வளங்கள் பாரித் தேசொல், லரியபுகழ் சேரளகை யிங்குவநத தெனுமபோரை யாநல் லூரில. (சகூ)

* அரசங்க மோரா றுடையவனே யரசருளே ரூவா னென்று, பிரசங்க நாப்பொய்யா மொழியருரைப படியமைநத பெருஞ்சீ ரா ன்ரு, வரசங்கந் தழைத்தோங்க வியல்புளிகோ லோசசுமுபா மன் னன் கன்னித், திரசங்கத் தமிழ்வாசித் தவனுலகிற் றன்புகழ்வா சிக்கச் செய்தோன். (ரு0)

* பரங்குன்ற முதலாகப் படைவீடோ ராறதனிற் பாங்கா யுற்ற, வரங்குன்ற மினிர்நயன வள்ளிபங்கன் றிருபபுகழை யன்பா லுள்ள, மிரங்குன்ற னருள்செயென மிகத்துதிபபோன் சிவபிரா னினிதா குமபொன், னரங்குன்றற் போதமிலான் விலங்கொப்பா னெனவுரைகரு மறிவின் மிககோன். (ருக)

* நீடுபொறை வாய்மையினே ராருமில்லா னென்றுநே ராரு மில்லான், பீடுறுசற் குணமுள்ளான் பகையிடததுங் கடுமொழியைப பேச லுள்ளா, னீடிலாச் சிவதருமன் சேர்நதவர்க்கெல் லாந்தரும னிவன்யா ரென்னிற்,கூடுபுகழ் நாகயசா மிததுரையன் னவன்முறை யிற் குலவு நாளில். (ருஉ)

* செய்தவத்தா லுயர்நதசே வகப்பாண்டியன் பருவமவந்து சேருங் காறு, மெய்தவிசசே றையினுமா சியற்றெனவன் னவன் றந்தை யிசைத்த வாறே, வெய்யகுறும் படக்கியுயர் பொருளீட்டி வினையுண்மிக வினையச் செய்து, துய்யவறப் புறமாலே யம்பெருக்கி யின்னமுஞ்சீர் துலங்க வெண்ணி. (ருக)

* மன்னுநகர் தேவதா னத்தின்மரு தத்திருக்கு மயிலோன் கோவில், பொன்னகரான் றனக்குரிய தவற்கம்மான் காணியதாம்

பொருந்தா தென்று, சொன்னமலி நாகமலை மேற்கோவி லொன்று சிற்பந் துலங்கக் கண்டே, யன்னகும ரனையதன்மே லாகமத்தின் படிபதிட்டை யமையச் செய்து. (௫௪)

* கும்பாவில் விசையாவென் றுரைசெயுநா யகசாமிக் கோனவ் வேட்குக, கும்பாவிப் பிரர்களோலா மாசீர்வா தமபுரியக் குலவுஞ் சொன்னக், கும்பாபி டேகமகா வபிடேகஞ் செய்துபின்னர்க கோதி லாத, கும்பாவில் விளங்கியபா றேமெனயபி டேகமெய்யயைக் குளிரச் செய்தே. (௫௫)

* தன்னடியார் கண்காட்சி யுறத்தொழுது கதியுறப்ர சன்ன பூசை, மன்னுறச்செய் தந்தணர்கரு விலாபபுடைவிம் மும்படிக்கு மற்றை யோர்க்கு, மின்னமுத நாலஞ்சா றுவகையுறத் தந்துதிதி யீந்து நாளும், பண்ணுதமிழ் நாவலர்க்கு மெத்தனையோ கோடிதந்து பலன்பெற் றனே. (௫௬)

* தென்னவன்முன் வனத்தைவெட்டி நிலத்தினிற்சொக் கேசர் தனி செய்து வைதத, தென்னபெரி தோபேரை நகர்க்கிறைநா யக சாமி யெனும்பூ பாலன், சொநெல்வளத் தென்சேறை நாகமலை தன் னைவெட்டித் திருத்தி யப்பா, லனனமலை மேற்குகனுக் காலயஞ்செய் ததுபெரிதோ வறைகு வீரே. (௫௭)

* இந்நாக மலையிலையான் முன்பார்க்கத் திரண்டுகுவிந் திருந்த திங்நாண், மன்னுசங் கபபலமை போல்விரிந்த தென்னவித மந்த்ர சித்தி, தன்னுவிம் மலைகருளாதோ வல்லதுன்றான் வல்லமையின் றகையோ சொல்வாய், பன்னுளநங் குகனருளசேர் நாகயசா மிப்பா ண்டய பாக்கிய மாலே. (௫௮)

சேற்றூர்ச சம்ஸ்தானமாகேசர் இராக்கப்ப பிள்ளையவர்கண்மீது கூறியன.

* வினந்தனந்தர் தமையுறுதன் மிடறுடை யிடைதொடை கண் மேவும் வாழை, யினந்தனந்தந் தமிவிதமாங் காரிகையை மேவி யவிணை யில்லை யாகிற், சினந்தனந்தம் பகழியவண் மேல்விடுவன் வேள்சகியாள் சேர்ந்தார்க குப்பேபா,சனந்தனந்தந் தருள்புரியும் வள் ளலிராக் கப்பமன்னு தமிழ்வல் லோனே. (௫௯)

* அடுத்தாரைக் காக்கு மநபாயன் கல்வி யறிந்தவர்க்குங் கொடுத்தா தரிக்குங் குணமுடை யாணிக் குவலயத்தி

னடுத்தாழ் விலாத விராக்கப்ப பூம னகுலனென்றைத்
தொடுத்தாற் றொடுத்த படியே முடிப்பன் றசங்கட்டியே. (௬௦)

* தன்மதியா னம்பெருகுந் தயர்தநா கபசாமித் தனத னென்னு மன்மதிராக் கப்பமுகி னினைத்தபடி யெலாமுடிக்கும் வலவ னின் னோன், நன்மதியைச் சுமதியென்பா ரிராகவனை வனம்புகச்செய் நங் கை கொண்ட, துன்மதிக்குஞ் சம்மதித்த வமைச்சனையார் சுமதியெ னச் சொல்லு வாரே. (௬௧)

* பலவளஞ்சேர் தென்சேறைப் பதியுறைவோர் மாற்றலர்தம் பயந்தீர்த் தென்றும், நிலைபுறச்செ யிராக்கப்ப மதிபூகிக் கிணையாத் தன் னிருபன் கானத், தலைவுறச்செய் பட்டிதனை மதியூகி யெனவு ரைப்ப தடுக்கு மாவிவ், வுலகவர்சொன் னத்திணையு மிரும்பினையும் பொன்னெனுஞ்சொல் லொக்குந் தானே. (௬உ)

ஷை சம்ஸ்தானம், தாஞபதியவர்கண்மீது கூறியகவி.

* இருகுவளை விழிகள்கமுத் திணங்கும்வளை மாதுவளை யெதி ரே கண்டா, லருகுவளை யாதவர்யா ரந்தவளை யுண்டவன்சே யம்பா லுன்பா, லுருகுவளை யாசரியு முடையுஞ்சோ ரமனுள்ள மூவந் தாள் செம்பொன், பெருகுவளை யாபழநி யாண்டிமன்ன நாவலர்சொ ல் பெருமை யோனே. (௬௩)

* மனுச்சென்மம் பெறலரிது பெறினுங் கல்வி வரலரிது வந் தாலும் வழங்குஞ் செல்வந், தனைப்பெறுத லரிததுபெற் றாலு மேலாஞ் சந்ததிசோ தரர்கிளையு தாரம் புத்தி, யனைத்துமே பெறல ரிதா மவைபெற் றாலு மதிகாரம் பெறுதலரி ததுவும் பெற்று, யென க்குவகை யுறச்சேறை நகரந் தன்னி லெழிற்பழனி யாண்டிமன்ன னெனும்பூ மானே. (௬௪)

யாற்கரசேதுபதி யவர்கள் பேரிற் பாடியது.

* மேனகையில் லாததினுற் குறைமதியைப் பொருந்துவதால் வெய்யோ னென்னத், தானிருக்குந் தன்மையினுல் வாசியா தவனி ரஞ் சற்று மில்லான், மானமுறுங் குவலையத்தை வாட்டுகின்றா னெ ன்பதனுல் வான்மே லோடும், பானுவைப்பாற் கரசேது பதிக்கிணை யா யொருநாளும் பகரொ ணுதே. (௬௫)

* பூவிலுய ரஞ்சகரு நிறைதவிஞற் பொருந்தவளப் போத கத்தாற், றேவதா னத்தைவிரும் பியதானற் புலவர்குழாஞ் சேர்த லான்மா, மேவுசசி முகமனு லுயர்செல்வச் சிரத்தான்மே னகையா ன் மேலாங், காவலன்பாற் கரசேது பதியையா கண்டலன்போற் காண்கின் றூமே. (௬௬)

* அத்துவரு டன்பகைக்கு மதராமின்னுர் மதனுநின் னருண்மு கத்தைப், பத்துவரு டம்பாரா திருந்தவருத் தாதவிர்ந்தேன் பகர்கா விற்சென், முத்துவரு டமபொழியு முகவைநகர்க் கரசேமுத் தமிழ் ச்செல் வத்தை, நத்துவரு டந்தையெனும் பாற்கரசே துபதிமங் ராச மாலே. (௬௭)

இராமநாதபுரம் சம்ஸ்தானத்தில் நவராத்திரி உற்சவத்தில் வந்திருந்த அநேக வித்துவான்களைப் பரீக்ஷிக்க ஷை பாற்கரசேதுபதி யவர்கள் "கடைக் கிணையோ மற்றவர்தங்கால்." என்று கொடுத்தஈற்றடியைச சேர்த்து அவர் கருத்துக்கிசைய ஒருவரும் பாடக்கூடாமல் விட்டுவிட்டபோது பாடியது.

* வேற்கரனைச் செந்தூர் விமலனையே வேண்டுகின்ற
பாற்கர சேது பதிவேந்தே—மேற்கொள்
விடைக்கொடியோற் கன்பன் பிருகண் டுபிறங்-
கடைக்கிணையோ மற்றவர்தங் கால். (௬௮)

சிவகிரிச சம்ஸ்தான கர்த்தராகிய சங்கிலிவீரப்ப சின்னத்தம்பி பாண்டிய துரை யவர்கண் மீது கூறிய கவி.

* ஒருநாலு மரன்பதிமுன் பாதி முத்திக் கோதுவர்பின் பாதி யுமாற் கோர்பி றப்பாம், பெருகுமுதன் மூன்றுகுக னூர்தி முன்பின் பிள்ளைகளை மகிழ்விக்குஞ் சொல்லா னெல்லை, மருவுமிரண் டிரண் டொன் றுயு தப்பேர் மற்றதுவே வீரருக்கு மகிழ்பூ ணென்றுந், தருமதுரை சங்கிலிவீ ரப்ப சின்னத் தம்பியர சாட்சிபுரி தலத்தெ ழுத்தே. (௬௯)

ஊற்றுமலைச் சம்ஸ்தான கர்த்தராகிய இருதையாலைய பூாண்டியதுரையவர்கண் மீது கூறிய கவி.

* நன்னூற்று வரைப்புரந்த ராகவன்றன் காலகடு நடுவிம் மாதுன், சொன்னூற்று வரைப்புரந்த ராதலமேற் றிகழ்விரைத் துரையே யென்னு, முன்னூற்று வரைப்புரந்த ராமையின்வென் றவவெனுமீ முக்ய மாச்சேர், தென்னூற்று வரைபுரந்த ராமவித யாலயபூ கிதபூ மானே. (௭௦)

* தரைக்கும்பர் விண்ணுலகந் தனக்கும்பா தலைக்குமுபர் தலமாங் கெனமை, துரைக்கும்பா விடேகமதிற் றுறைசையிற்சற் குருநமிழாற் றலங்கும் பூபா, லரைக்கும்பா விருக்கவுரைத் தன்றனைமெச் சியதையென்னென் றுறைநதேவென்றென், வரைக்கும்பா விவேகமுய ரிருதயா லயமதனு மன்ன ரேறே. (௭௧)

* கலங்கலரைக் காதலுடன் றேற்றுவித்தான் மாற்றுதல்போற் கலியை மாற்றக், கலங்கலரைக் காதவழி யுறுவிரைப் பதிமார்க்கங் கண்டாய் பின்னிங், கலங்கலரைக் காதலுட னேவுமதன் போலுதித்தோன் கனிவாய்ச் செம்பொற், கலங்கலரைக் காதசந்துக் கருளிதையா லயன்றருவான் கனகந் தானே. (௭௨)

போடிநாயக்கனூரிலே ஒருகணிகை ஒருவேதியன் றோண்மேலேறி நின்று மலர்கொய்தபோது வியந்து கூறியகவி.

*முன்னீரைப் புனையுலகத் ததிசயமொன் றொருகணிகை முலைகவிண் டார்ந்த, பன்னீரின் பூப்பறிக்கும் போதிலப்போ தெட்டாமை பார்த்துப் பக்க, நன்னீர்மை யுற்றுயர்நதோ ரநதணரென் றே
ரே கன வவர் நம்பு யம்போ, வின்னமுநஞ் சிரதத்தேறிய பறிக்கிலர ளுகுவ
னுன்பா, ர் றிரங்கி ஞரே. (௭௩)

...க்கவியிற் கண்டவர்கள் முகவூர்க்கு வந்தபோது கூறியது.

* கல்லையப்பன் றமிழ்க்குவந்த . . .டைபுறச்செ. .யரனடியைக் கருதும் வல்லோன், முல்லையப்பன் னலமெனுமின் னோர்மதன னுதாரகுண முதல்வ னென, வெல்லையப்ப னெனுங்குமர சாமிமுத்து சாமிவள்ள லிருவ ரோடு, நெல்லையப்ப முகிலையுங்கண் டென்றனுறுப பெருமகிழ்ச்சி நேருற் றேமே. (௭௪)

நாம் வசிக்கும் முகவூரில் விநாயகர்கோயில் கட்டுதலைச சிலர் தடுத்தபோது தாசில்தாருக்குக் கூறியன.

* இக்கடவுண் முகந்தூங்க லடிக்கடி நாம் பார்ப்பதனுக் கெட்டா தென்றோ, தக்கவுஞ்சிற் றுண்டிபெரு வயிறுநிரம் பாதெனவோ சந்தி யெல்லா, மிக்கவுந்தன் வாகனத்தா னுமதகத்தைத் துளைப்பரென்றோ விலக்கு தற்கே, யக்கரையுற் றுணர்தவஞ்சேர் சரவணமுத் தேந்த்ரமன்னு வரைநகு வாயே. (௭௫)

* மன்னவநின் றிருமுகத்தைக் கண்டமட வார்கரத்து வளைபோ காமன், முன்னமொரு தடையிடுவ தியற்கையன்றி யொருதருமமுடிக்கும் போது, பின்னமுறத் தடையிடுத லின்னதிகா ரத்தமுண்டேற் பிறர்யார் காப்பார், மன்னுதமி ழருமையறி சரவணமுத் தேந்திரசம் பன்ன மாலே. (௭௬)

* அரக்கனைவென் றவனெனச்சொல் சரவணமுத் தேந்திரன்ன னதிகா ரத்தி, லிரக்கமிலா தவர்களுக்குஞ் செல்வருக்குங் கலகமுண் டா மிதுவல் லாலோர், வருக்கொருவர் கலகமியற் றுதபடி யொடுக்கி யதை மறந்து செய்யும், குரக்கினத்தார் பகையடக்கும் படியாயோ ருத்தரவு கொடுப்பாய் நீயே. (எஎ)

* சென்றசென்ற திசையனைத்துஞ் சத்திரமு மாலையமுந் தேவ ர்க்கெல்லா, நன்றிதருங் கும்பாபி டேகமுந்தெப் பமுஞ்சிறப்பா நாளுஞ் செய்தா, யென்றபெரும் புகழுடனே யெங்கள்சமீ னெல்லை யினி லிக்கோ விற்கு, முன்றனையே யுரைக்கவருள் சரவணமுத் தேந்த்ரமன்னு வுயர்கோ மானே. (எஅ)

ஆகசெய்யுள் ருககஉ.

---

## மு. ரா. அருணாசலக்கவிராயர்.

இவர் சேற்றூர்ச சமஸ்தான வித்துவான் முகவூர் வேளாளகுலத்தின ராகிய இராமசாமிக் கவிராயர் சிரேஷ்ட புத்திரர். கொல்லம். க0உஎ-ஆவது ஆண்டு விரோதிகிருது வருடம் பங்குனி மாதம் பிறந்தவர். திருவாவடுதுறை ஆதீனம் இரண்டாவது சந்நிதானமாகிய ஸ்ரீலஸ்ரீ நமசிவாயதேசிகசுவாமிகளி டம் இலக்கிய இலக்கணங்கள் நிரம்பக் கற்றவர். 25வருடங்கள் சிவகாசியில் வசித்தவர். இப்போது மதுரைத்தமிழ்ச்சங்கத்து நூற்பரிசோதகராயிருக்கின் றவர். ஷை சங்கவித்துவான்களிலொருவர். சிவகாசித்தலத்துவிசுவேசரையே தமது பிராணார்த்தராகக் கொண்டு சிவகாசிப் புராணம், பதிற்றுப்பந்தாதி, கலித்துறைத்திரிபந்தாதி, வெண்பா அந்தாதி, கலிவிருத்த அந்தாதி, மாலை பாடியவர். இவையன்றித் திருச்செங்கோட்டுத்திரிபந்தாதி, திருப்பரங்கிரி முரு கர்பிள்ளைத்தமிழ், சேறைத்தவம்பெற்றநாயகி பிள்ளைத்தமிழ், இராமேச்சு ரம் பர்வதவர்த்தனியம்மை பிள்ளைத்தமிழ், குறுக்குத்துறைச் சிலேடை வெண்பா, அரிமழம் மீனாட்சி சுந்தரேசர் பதிகம், மீனாட்சியம்மை பதிகம், பழநியாண்டவர் பதிற்றுப் பத்தந்தாதி, ஸ்ரீ ஆறுமுக நாவலர் சரித்திர முதலியன பாடியவர். அவ்வவ் வமயந்தோறும் பற்பல தனிப்பாக்களுஞ் செய்தவர். திருச்செந்தூர்ப் புராணவசனம், திருப்பரங்கிரிப் புராணவசனம், திருக்குற்றாலத்தலபுராணவசனம்,புதுவைப்புராணச் சுருக்கவசனம்,பாவநாசத் தல புராணச சுருக்கவசனம்,சிவகாசிமான்மியவசனமு மெழுதியவர். இவை களையும் சிவரகசியம்,பாவநாசத்தலப்புராணம்,கம்பராமாயணம் ஆரணியகாண் டவுரை புதுவைத்தலபுராணம், கன்னியாகுமரித்தலபுராணம் முதலியனவும்

களையும் பரிசோதித்து அச்சிட்டு வெளிப்படுத்தியவர். திருவாவடுதுறை ஆதீனவித்துவான் சுப்பிரமணியக்கவிராயரும் மதுரை விவேகபாநுப்பத்திராதிபர் கந்தசாமிக்கவிராயரும் தமதுபிற்சகோதரராகப் பெற்றவர்.

### விநாயகர்.

* அங்குசமும் பாசமும்யா மங்கையில்லைத் தாமெம்மை
யிங்குவசஞ் செய்வா ரிலையென்று—தங்குசீர்க்
காரோன் றுயர்திண் களிறேபல் காலுநினை
நாரொன்றி னல்யாப்பா நாம். (௧)

### மதுரை விநாயகர்.

* கூடலிலே பூத்தவொரு கொம்பரசைக் கூடியதன்
மாடமர வேம்பாகாய் மன்னுதமிழ்ப்—பாடலொன்றும்
பாடாய்நெஞ் சேயுன்னைப் பாவியெனப் பார்சொல்லக்
கூடாதோ சற்றேநீ கூறு. (௨)

### சேறை வெயிலுகந்த விநாயகர்.

* சேற்றார் மிகச்சீதஞ் செய்யுமென்றோ செம்பொனுயர்
மாற்றாரு மேனி மழிகளிறே—போற்று
மயிலுகந்த கந்தர்முன்பு வுந்துதித்த தேவே
வெயிலுகந்தி ருந்த விதம். (௩)

### முகவூர்.

* எறும்புகடை யானைதலை யென்பார்க ளென்றோ
பெறும்பரிய யானையுருப் பேணி—யுறுந்தலைமை
மேவினீர் பாண்டி விநாயகரே மென்செய்யிற்
காவினீர் சூழ்முகவூர்க் கண். (௪)

### சுப்பிரமணியர்.

* தீப்பொறிக ளாறுமொன்று சேரத் திரண்டுருவே
யாய்ப்பொலியு நீயென் னகவிரும்புட்—போய்ப்பதிந்தா
லென்று முருகா திருக்குமோ வின்னருளே
துன்று முருகாவா சொல்.  (௫)

### திருப்பரங்குன்றம்.

* பாங்குபெறு நீயேக பத்தி னிவிரதனேற்
றீங்கில் பரங்கிரிவாழ் சேந்தனே—யீங்குநினை

பிச்சியேன் மாத ரிருவர்கலப் பெய்தலினால்
நச்சியெனை யுஞ்சேரிந நாள். (௬)

* பாட்டுக் கலந்துமுன்னோர் பாவலனைப் பாடநீர்
கேட்டுக லந்து கிரிகருகைவிட்—டோட்டுவித்தீர்
எற்றுக் கெவளவுபாட் டேனுமயி லேந்துகையீர்
உற்றுக்கே ளும்பாடு வோம். (௭)

தற்காலந்திருப்பதி யெனவழங்கும் வடவேங்கடத்துக்குப்
போயிருந்தபோது கூறியது.

* வடவேங் கடமலையில் வாழ்முருகா நிற்குந
திடமோங்கு நின்சீர் தெரிந்து—மடமோங்க
நாமதனைச் சாற்றினார் நமமையுமென செய்வாரோ
காமுற்றிங் காரிருப்பர் காண். (௮)

* உருமாறிப் பேர்மாறி யோர்புலவன் பின்போய்
மருவு மொருவெண்பா வாங்கு—முருகவுனக
கித்தனை துன் பெற்றுக்கின் றெதனைவெண் பாவேண்டும்
அத்தனைக்கு மென்னவருள் வாய். (௯)

திருச்செந்தூர்.

* இக்கனலவே ணின்னை யெரிததிட்ட தெக்கனலோ
அககனலே கையி லபிலெடுத்து—தக்கதிருச்
செநதூரில் வைகுமிது தேராமற் றென்றலெம்முன்
வந்தார் கினைவை மற. (௧௦)

* தேகாக கினியுஞருர்ச் செற்றடங்காத தீயகொடுங்
கோபாக் கினியுங் குளிர்தற்கோ—மீதாகருஞ்
சீத மிகுதெண் டிரைக்கடல்சேர் செநதிலுயர்
மாதலமென் றற்றான் மகிழ்ந்து. (௧௧)

முன்னடியிரண்டுமூன்று மெழுத்தொன்றெதுகை.

தேவதானம்.

* மன்னுகுற மாதை மணஞ்செய்து வன்குறிஞ்சி
யென்னு நிலத்தி லிருப்பதுபோன்—மின்னுதெய்வ
யானைமணஞ் செய்ததனுக் காகமுரு காதேவ
தானமதி லுற்றாய் சரி. (௧௨)

சிவபிரான்.

* வையமினைச வெள்ளி மலைபொன் மலையிருந்து
மையமேற் றூராறு ரையகோ—வைப்ப
வருத்தான் வருத்த வகையல்லாற் கோடி
தொருத்தார்க்குந் துய்த்தலரி து. (௧௩)

* பிள்ளை வருத்தமந்தப் பிள்ளையைப்பெற் றூரறிவ
துள்ளதா லாரூர ருட்டியராந்—தள்ளரு
பரவையிடந் தூது பரமரே சென்றீ
ரிரவை யெனக்கசுற்று வீர். (௧௪)

* அனைத்துயிரு மாட்டுவினை யம்பலத்தி லாட்டி
வினைத்துயரெங் கட்குவிடு விப்பா—ரனைத்துதித்தா
லிங்கே யவட்கா விறைவா விரங்காம
லெங்கே யொளிப்பா யினி. (௧௫)

* அடிதா சிவாவென்போ ராபரணு வென்று
தடிதாசி வாவென்போ ராகின்—கடியலதா
ளாவி சுவாசமடங் காமுன் னடுப்பதற்கை
யாவி சுவாசமடங் கார். (௧௬)

காளத்திக்குப் போயிருந்தபோது பாடியது.

* புலைபனொடு கருமான்மீ காமன்கம் மாளனிவர் போற்றவென்று
நிலைதளராக் குயத்தியரு கேநிற்ப வொருவேட னெரினிற்பச்
சிலையினு மொருசிறிய வேடனைப்பெற் றுண்மகிழ்ச்சி திகழ்காளத்தி
மலைமிசைவாழ் செம்மாளை யம்பட்டன் பூசிக்க வணங்கினோமே. (௧௭)

சென்னையிற் சரம்வைத்திருக்கும்போது மல்லிகேசுரரைப்
பிரார்த்தித்துக் கூறியன.

* கண்கலங்க நாவாய் கலங்கவிரு கண்ணெதிரே
புண்கலங்கண் டாலு முளமுவர்க்கப்—புண்செய்
மல..ங்காயா வாறுசென்னைத் தாய்ச்சுடரே யின்ன
துன்..நாயா வென்செய்கோ யான். (௧௮)

* பாங்குபெறு நாட்ட மெய்யன்பர் பற்பலர் சூழ்வருஞ் சென்னைநகு
நீங்கில் பரங்கிரிவாழ் கண்ட மிலங்குமெந் தாய்மினை யேத்திநின்சி

தருணைட் டடியன் கடுஞ்சுரம் போக்கி யருளின்வரும்
பொருணைட்ட மெய்ம்மைகொ லாமினி யேனும் புரந்தருளே. ()

விருதுபட்டிக்குப் போனபோது சொல்லியது.

* இன்னுமொரு காலுமடைக்கின மண்முடிமேற் சுமந்தலன்றி
யிமாறனன் கையிற், றுன்னுபிரம் படிபடவும வேண்டுமென்று
சொக்கேசர் துணிவி போடு, மன்னுமவைகைக் கரையகன்று விருது
நகர் நதிக்கரையில் வந்திருந்து தோன்று, மின்னுறுதி பெறவுவந்து
வீற்றிருந்தா குபர்வாசகி விரும்பாரி யாரே. (௨௦)

மதுரைச சுந்தரேசரர்.

* ஆறுநூலை வைத்திருந்த தாலவையை யாற்றைமுத்தான்
ஏறுமன்னங் காணு திருந்துமெந்த—வாறுமுன்னம
அன்னக் குழியை யழைத்தருளி னைமதுரை
மன்னற் கினியமரு மான். (௨௧)

* மாமதுரைச் சொக்கரே வந்திப பவர்க்குநீர்
தாமடி யிரண்டு தரல்சரியே—யாமெனினும
மன்றிருமன் கீழ்ப்படியா மைக்கம்மன் வண்ணைநமக்
கன்றேரடி யீதல்குற்ற மா. (௨௨)

* உருவிற் பிறப்பி லுயர்விலையென் றேரச்
குருளிக்கும் வாதவூர்க் கோக்கு—மருவுமா
தேசஞ்செய் தீர்கூடற் செல்வரே சித்தத்து
ளாசகலன் பேயுயர்ந்த தாம். (௨௩)

* அரையனிடைக் காட னருமையறி யாமைக்
கிரவி லெறும்பிடமவிட் டெந்தாய்—பரவுமட
வாலவா யுற்று யறிஞ ரருமைபுனைப்
போலயார் காண்பாரிப் போது. (௨௪)

* கல்வணைத்தீர் கல்லானை கன்னலுண்ணக் காட்டினீர்
மல்வளைத்த வெண்டோண் மதுரைநகர்ச்—செல்வரே
ஐய மறவின் றடியே னகக்கல்லைப்
பைய வளையும்பார்ப் பாம். (௨௫)

சேறை நசசாடையீசர்.

* பங்கொருத்திக் கீயும் பரமாநின் பாதமல
ரங்குளத்தி லேயலர்த்தி யாட்கொள்ளாய்—பொங்குபுகழ்ச்
சேறையினி லெவ்வாறு செய்தாய் தெரியவோர்
யாறையி லெருத்தின் பதம். (உக)

* நஞ்சுண் டதுமன்றி நஞ்சுடைய நாகங்க
ளஞ்சு தலைபுறவைத் தாதரித்தீர்—நஞ்சுறுமால்
கூடியவென் னெஞ்சையுங்கைக் கொள்ளுவதற் கூத்தடையா
தீடில்சே றைக்கிறைவ ரே. (உஎ)

* ஈசரே சேற்றா ரினிற்றிருக்கண் ணீசரெனப்
பேசலுற்றார் நம்மைப் பிறர்கண்போற்—றேசருண
ஞலடையா தவ்வருண னங்கிமதிக் கத்தேசை
[illegible]லநங்கண் ணீதலினு லே. (உஅ)

சங்கரநாராயணர்கோயில்.

* வந்தவர்க்கு வாயில் வரராசை மாநகரின்
முந்தம[illegible] ணிட்டீர் முறையோநஞ்—சொந்தமாம்
[illegible]ன்மப் பிணிபெயரு மேலின்னு
மெ[illegible]ண் ணேனு மிடும். (உகூ)

கருவைநல்லூர்.

* ஆயக[illegible]கரசே யாயுங் களவாண்டீர்
தூய புல[illegible] தூக்கிவிடல்—ஞாயமெனா
இட்டு மகி[illegible]றவா திருநதின்னும்
விட்டுவிட ந[illegible]. (௩௦)

சாலிவாடி.

* ஆனதிரு நெல்வே[illegible]பங்க ணனவரத
தானராய் வீற்றி[illegible]ம்பிரான்—மானமற
ஐயமேற் றுரென்ப[illegible]மெய் யாபொய்யா
ஐயமேற் றுதுரைப்ப[illegible] (௩க)

2 வருட மழை[illegible] போனபோது பாடிய கவிகள்.

* புண்ணியமில் ல[illegible]போற் சுடுங்கொடிய வெப்பமிகுப்
பூமி வெந்து முன்வினை[illegible]ரிரண்டு வருடமா மழைபெய்யா

தொளித்த தென்று, லண்ணியபல் லுயிருமென்ன பாடுபடு மநதோரீ யறியா தென்னே, நண்ணியமெய் யன்பர்தொழுஞ் சிவகாசி நகர்வி சுவ நாத தேவே. (ஙஉ)

* ஆற்றுவரா வாகுளதது நிறைவாயா தொன்றுமிலை யஃதே நிற்க, வூற்றுவரா வுநகிணற்று ளிலலையென்று வுயிர்களெவ்வா றுயுமித துன்ப, மாற்றுவரா ரருட்கடலே குளநிறைய மழைபொழியும் வரந்தா சாலி, நாற்றுவளா மிகுமவயல்சூழ் சிவகாசி நகாவிசுவ நாத தேவே. (ஙங)

* பொய்யுரையன் றேநல்லா ரொருவருள ரேலவர்தம பொருட் டெல்லார்க்கும, பெய்யுமழை யெனவௌவை பேசியதெம பெருமானே பெருநல் லாராய், மெய்யுறநின் ருெண்டர்பல ரிருநதுமழை பெய்யாத விதமென் சொலை ய், வையுமெமைக காததருளுஞ் சிவகாசி நகர்விசுவ நாத தேவே.

* வானமவறந தாற்பூசை வானோர்ககு மீண்டுநட வாதென் மெய், யானதமிழ் வேதமுரைத தவினின்ன மழைபெய்யா தமைநதா லிநதக, தானமதி லுன்பூசை தவறுமென்றஞ் சினம வினைத் தவிர்கக வேணடும, ஞானவுரு வாயிருநத சிவகாசி நகர்விசு நாத தேவே. (ஙரு)

* தானியங்கள் பிறநாட்டிற் கிடைத்தாலுஞ் முத்துண்ணத் தக்க தண்ணீர், சூனியமா யிடிற்பிழையே மையாநின் பெருங்கரு ணைத் தூய நீரால், வானியலும் பெருமழைபெய் வித்தினியா யினு மெம்மை வாழ வைபபாய், ஞானியலா முனிவர்பயில சிவகாசி நகர் விசுவ நாத தேவே. (ஙசு)

* புற்றலைகாண் பரிதுவிசும் பிற்றுளியின் றேலென்று புகன்ற வேதச், சொற்றலைமேற் கொளநேரிற் கண்டனங்கட் பொருளெல் லாஞ் சோற்றுக் காக, விற்றலையா விதமிந்தப் பஞ்சமினித் திக்குமழை வேண்டு மட்டே, நற்றலைவா பெய்விப்பாய் சிவகாசி நகர் விசுவ நாத தேவே. (ஙஎ)

* இந்தவிசு வாவசுவிற் சேடன்முடி கணடனைற றனுமீ ரில்லை, யெந்தவரு டத்துமிலாப் புதுமையே யிஃதின்னு மென்னு மோவெ

ரந்தமூற மனம்பன்தக்கின் றதுனானஞ் சுரந்துமழை யருளச் செய் வாய், நந்தமரம் கரன்பரவு சிவகாசி நகர்விசுவ நாத தேவே (௩௮)

* சிறுதுளியுங் காட்டாமன் மேகமின்று வன்கண்மை செய லால்விடு, தொறுமடவா ரொடுகுடநீர் கொடுவரற்குக் கங்கைநீர் தோன்ற முன்னு, ஞுறபசி ரதன்வருத்தஞ் சிறிதாகப பெருவருத்த முற்று ரந்தோ, நறுமதலை யணிகேண் பார்சிவகா சியின்விசுவ நாத தேவே. (௩௯)

* முன்னமொரு காலமிந்தப் படிமழைபெய் யாதிருந்த முரண் கண் டேயெம், மன்னவரும் பாண்டியனுர் தளைபிடப்பட் டதையக கார் மறந்த தோமற், றென்னதுணி வோடுவா ளாவிருந்த தோமழை பெய் யினிமே லென்று, நன்னருரைத் தருள்புரிவாய் சிவகாசி நகர் விசுவ நாத தேவே. (௪௦)

* விண்பார்மெய் வெதும்பமரஞ் செடிகொடியா தியவாட வில ம புள்ளும், பண்பார்மக் களுவருந்த நெடுநாளா மழைபிலலாப பான்மை சற்றுங், கண்பாரா யாரிடத்திக் குறைபுகல்வோ மினியே னுங் கருணை செய்வாய், நண்பாரன் பரைப்புரக்குஞ் சிவகாசி நகர் விசுவ நாத தேவே. (௪௧)

* கொடையிலுயர் பெருங்கருணைக் குன்றேயா யிரமுகமாக் குதிகொள் கங்கை, சடையினில்வைத் திருப்பதினல் மழைபின்றி யெம்மைவந்து தாக்கும் வெம்மை,புடைநெருங்கி யுனைத்தாக்கா திரு ந்ததோ யாதொன்றும் புகல்கி லாய்நன்,னடையுடையார் பலர்வதியுஞ் சிவகாசி நகர்விசுவ நாத தேவே. (௪௨)

* தாகமொரு சிறுவனுக்கு நீக்கவோ ராறழைத்த தகைமை போல, மாகவளே புறுமெமக்கு மாறென்று வரவிடென்று வந்தோ மில்லே, மேகமழை பொழிந்திடச் செய்தாற்போதுந் திருமுடியின் மேனி லாவு, நாகமுங்கொண் டாதரிக்குஞ் சிவகாசி நகர்விசுவ நாத தேவே. (௪௩)

* ஆங்குதிருப் புன்கூரிற் பன்னிரண்டு வேலிமட்டு மழையக் கொண்டே, யோங்குமழை பொழிவித்தா யுடல்பொருளா தியபொ ருள்க ளுள்ள வெல்லா, நீங்குமின வேபாக்கி யதிற்பாதி மழையேனு

மினிப்பெய் யச்செய், நாங்குறிக்கும் சீர்த்திமிகுஞ் சிவகாசி நகர் விசுவ நாத தேவே. (௪௪)

* கடலெழுந்து வரும்போது மதுரையைநின் சடையிலுள்ள கார்க ளென்கா, லுடன்விளங்கு காக்கவிடுத தனையவற்று ளொன் றேனு முதவி பெய்க, விடனுமிதை யடுத்தமற்றை யிடனுமழை பெய்துகாத் திடச்செ யெந்தாய், நடமுவந்த பெருமானே சிவகாசி நகர்விசுவ நாத தேவே. (௪௫)

* அன்றுகட லேழுமொருங் கொருத்திபுகுந் தாடுவதற் கழைத்த நீயே, யின்றுநாம் பலர்புதுநதா டுதற்கதிற்சின் னீரெடுத்திங் கெழிலி பெய்யத், தன்றுதிரு வுளத்தினிற்கொண் டாற்குறையா தருளபுரிவாய் சொற்பா வல்லோர், நன்றுறுபா மாலைபுனை சிவகாசி நகர்விசுவ நாத தேவே. (௪௬)

* பக்ஷமா கப்பாடும் பாடலைக்கண் பார்த்துநீ
பக்ஷமிக வைத்திடுதப பாரெழிக்க—இக்ஷணமே
நாடுசிவ காசி நகர்விசுவ நாதாயாந
தேடு மழைபொழியச் செய். (௪௭)

உ மா தே வி

* ஒருமகவா னாளிற் குயிராக ளனைத்தூந்
தருமொருதா யாநீயென் றன்மை—யருமைபா
ராட்டுதற்குத் தென்கூட லயபிகையே யானுமு
மீட்டுநீ யேகதியா மே. (௪௮)

* மன்னு மதுரையினில் மாமனென வந்தருளுந்
துன்னு புகழ்ச்சோம சுந்தரனை—மின்னுசீர்
அன்னநடை யங்கயற்க ணம்மை யரசியே
முன்னமணந் தாயென் முறை. (௪௯)

* எல்லாமும் பெற்றதா யென்றெங்கு நீயிருக்க
நல்லார் தவம்பெற்ற நாயகியென்—றல்லாரும்
பூங்குழலாய் சேறையினிற் போற்றிப் புகலுவதற்
கீங்குதவஞ் செய்தவமென் னே. (௫௦)

* தன்பால் வராத தலைவிதன்பாற் றன்றலைவன்
அன்பால் வரலூற் றமர்வதொக் கு—மென்பாரர்
சீரமுறும் வையையமருங் கேழ்கட லெழீஇவந்து
சாரநீங் காமலிருத் தல். (௫௧)

சரசுவதி.

* வெண்டா மரைப்பூவில் வேதனார் மென்னாவிற்
கண்டாமென் பாரென் கருத்தினீ—தண்டா
திருப்ப தறியா ரிவரறிய வேநின்
திருப்பதமென் சென்னிமிசைச் சேர். (௫௨)

* என்னெஞ்சு நின்பா லிளகா திருக்கின்ற
கன்னெஞ்சா னாலுமிகக் கன்னெஞ்சே—பின்னமு
மாதலினாற் பல்கலையு மம்புவியிற் பல்கலையும்
ஈதலினை பாரதித்தா யே. (௫௩)

இலக்குமி.

* தன்னோர் வணங்கினர்க்குத் தக்கசெல்வந் தந்தருளு
மன்னே யிலக்குமியே பாரமுதே—பென்னேநீ
தானோர் கலிக்குட் சனித்துக்கஞ் சத்தனங்கொண்
டானு திருந்தாயென் பார். (௫௪)

* எந்தப்பா வெவ்விறைவற் கியாவ ரிசைத்தாலும்
அந்தப்பா மங்கலச்சொல் லாகவே—முந்தத்
தொடுக்குந் திருப்பெயர்கொள் தூய வமுதே
யடுக்குநின்சீர் சொல்லவல்லார் யார். (௫௫)

வித்தியாகுரு.

* பல்கலைவா யாரப் படிதுரும்பாம் பாமரனேன்
பல்கலைவா யாரப் படிக்கவன்பி—னல்கினன்
றென்றுறைசை வாசியாய்ச் சேர்நச்சி வாயனெனு
நன்றுறைசை வாசிரிய னன்கு. (௫௬)

* தீக்கை மறைத்துவந்த தேசிகனாஞ் சிற்பரநின்
தீக்கை யுணர்ந்த சிறியனேன்—யாக்கை
முதன்மூன் றுங் கொண்டு முதிர்தாளொன் றீந்தா
யிதமார்கின் னாதியநன் றே. (௫௭)

* சிறுமான் சிறுமதியைத் தீர்த்தெழுந்த செய்ய
பெருமான் பெருமதிசேர் பெம்மான்—றிருமான்
மருவு துறைசையினில் வாழ்நமச்சி வாய
குருவடிவு கொண்டவருட் கோ. (௫௮)

* முத்தமிழை மாடங்கண் மொய்துறைசை மூதூரின்
முத்தமிழை மாடங்கண் முந்துநர்கட்—கத்தனையும்
வாயாரப் போதிக்கு மாநமச்சி வாயனைப்போல்
வாயாரிப் போதிக்கு வந்து. (௫௯)

* அன்பா வனைத்துநீ யங்கீ கரித்தாவிப்
புன்பா வனைத்துயரம் புக்கொரு—வின்பாருஞ்
சற்குருவே திங்கடலை தாங்காநீ தானுக்கி
லெற்குருவே திங்க ணினி. (௬0)

* என்னமச்சி வாய விறைவ னெனுங்குருவே
யின்னமச்சி வாயடியே னெய்தாதுன்—பொன்னடியைப்
பூசிக்க நேசிக்கப் போற்றிப் புகழ்பாடி
வாசிக்க நேசிக்க வை. (௬௧)

* மன்றுறைசை வாழ்நமசி வாயப்பேர் வாய்ந்ததனை
நன்றுறைசை வாகமத்தி னற்பொருளென்—றின்று
திருவடிவாய் வந்திப்பச் செய்துப தேசித்தான்
குருவடிவாய் வந்தருளெங் கோன். (௬௨)

* கானமசி வாயமர்சொற் கன்னியர்மால் காணுநங்
கோனமசி வாய குருவடிவா—யீனமற
வந்திப்பார் போற்றவளர் வள்ளன் மலரடியை
வந்திப்பார் போற்றவர்யா வர். (௬௩)

* என்ன விலக்கணமு மெற்கிங் கினிமையாச்
சொன்ன விலக்கணமே தோற்றுவித்தான்—மன்னு
திருவா வடுதுறையிற் சீர்நமசி வாய
குருவா வருகருணைக் கோ. (௬௪)

* அரிய விலக்கியங்க ளாயிரண்டு குற்றம்
இரிய விலக்கியங்க ளின்பம்—விரிய

வருத்தறிவித் தானமசி வாயகுரு வள்ளல்
பருத்தறிவில் லேற்கும் பரிந்து. (௬௫)

திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக
சுவாமிகள் பேரிற் சொல்லியது.

* அருவாகியுயிரனைத்துங்கலந்தருள்சுப்பிரமணியவரசேயன்பார்க்
குருவாகித்துறைசையினிலுறைந்தாயின்னுந்தாய்மாருதரத்தேகிக்
கருவாகிமகவாகிக்காளையாய்விருத்தனாய்க்கழிபாவண்ணந்
திருவாயினுலொருபதேசஞ்செய்துன்றிருத்தாள்சேர்த்திடாயே. ()

திருவாவடுதுறை ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகசுவாமிகள்பேரிற் கூறியன
*இலகுருவு மருவுமிவை யிரண்டுமா மெனுங்கலக மெல்லா நீங்கி
யுலகுருகி யுளங்கசிந்து பூசைபுரிந் தெதிரிறைஞ்சி யுவந்து போற்றப்
பலகுருகார்வயல்வளஞ்சூழ்தென்றுறைசையம்பதியிற்பாடுமெங்கள்
குலகுருவாயருளுருக்கொண்டிருந்தருளம்பலவாணகுணமெய்க்குன்றே

*தருவடியி லமரமர ரிறைவன்மால் பிரமன்மறை தானுங் காணுத், திருவடியென் போல்வாருங் கண்டுதரி சித்துநனி சேவை செய்யக், குருவடிவா யெழுந்தருளு நன்றிபா ராட்டியெதிர் கும்பிட் டன்பு, மருவடியேன் விண்ணப்பந் திருவுளத்துட் கொண்டருட்கண் வழங்கு வாயே. (௬௮)

*வழுதியரி யணையிலிருந் துலகாள வந்தபெரு மானீ யென்றே புழுதியரி யயன்முதலோ ருடல்படிய வணங்குநினைப் போற்றிச் சூழுந், தொழுதியரி யலைபுணருந் தொண்டரொடு மடியனையுந் தொகுத்தெண் ணிட்டங், கெழுதியரி யதிருமுக மொன்றருளம் பல வாண வெங்கோ மானே. (௬௯)

*அன்றுமின்றுங் கையிலாய தானமடுத் திருந்தலா லரனென் றற்கிவ், வொன்றுபோ துந்தாலி புலாகயா யத்தாலென் றுன்னை யோர்ந்து, நன்றுறுதென் றுறைசையினிற் சரணடைந்தோ மாத வீனு னங்கட்கெல்லாம், என்றுமோ ரியல்புறுமின் னருள்புரியம் பல வாண வெங்கோ மானே. (௭0)

குன்றக்குடி ஸ்ரீலஸ்ரீ தாண்டவராய தேசிகரவர்கள்
பேரிற் பாடியன.

* பலவளனுங்குன்றுதகுடிகளோதன்னிடத்திற்பயிலச்செய்யு
நலமமைதலாற்குன்றக்குடியெனமுன்னோர்புகன்றநகரந்தன்னி

விலகியசற்குருவெனுந்தாண்டவராயதேவனருளெய்தியாங்க
ளுலகினுளாரெவர்தரிசித்தாலுமந்தக்குடிகள்போலுயர்வர்மதோ. ()

* மண்ணுலகினுமையாதியொருவியிருக்கினுங்கயிலைமலையைநீத்த
லொண்ணுதலாகாதென்றேயதனையும்பக்கத்தொருகல்லுருவாவைத்
தங், கண்ணுபிரான்மலையெனவோரறிகுறியிட்டதனிடத்துமடியா
ரெல்லா, மெண்ணுகுன்றக்குடியிடத்துமிருந்தருடாண்டவராயனி
றைதாள்போற்றி. (௭௨)

* அரியபொன்னம்பலத்திலன்றோர் தாண்டவஞ்செய்திருந்தோ
னீயாதலாலே, பெரியதாண்டவராயனென்பர்நினைக்குருவேயப்பெ
ரும்பேர்மட்டுந், தெரியவின்றுவந்தனையாயினுமுனிவரிருவரங்கட்
டெரிசித்துய்ந்தா, ருரியகுன்றக்குடியிலன்பர்பலர்தரிசித்துய்ந்த
னரேயுயர்ச்சியாதே. (௭௩)

* கையரவப்பணியுடனங்குறைமதியையகற்றிவரக்கடவுளாநீ
கையரவப்பணியுடனங்குறைமதியையகற்றிவரக்கடவனேனுஞ்
செய்யகலையரைக்குடையார்மன்னரெனச்செயுமருணைத்தேசிகாநற்
செய்யகலையரைக்குடையாக்கொண்டதாண்டவராயதேவேகாவே. ()

சேற்றூர் சம்ஸ்தானபதி யவர்கள்மீது கூறியன.

*சீர்கொண்ட தென்சேறை யம்பதியி லரசுபுரி செல்வச் சிறப்பு
மிக்க, சேவகப் பாண்டிய மகாராஜ சிங்கநின் செய்யசமு கத்தினுக்
குத், தீட்டுமனு வொன்றுநின் போற்சகல கலைகளுந் தெளிவுற நிறை
ந்துதிங்கள், செகத்திற்ப்ர சித்தியுற் றுனவ னிடத்திலே தேடிநாஞ்
செல்வமெனிலோர்; ஊர்கொண்ட தன்றியு மிருப்பின்றி விண்ணிலே
யோடித் திரிந்துழன்று, ஒருவேளை மந்திரத் தாற்சென்று காணி
லோ வொன்றுதவு வானதைப்பின், னூற்றுவாங் கிக்கொள்வன் மித்
திரற்கீந்தகலை பொன்றையும் விடாதுடன்கொண், டுறைவதே யொரு
சான்றி தற்குணர்தி யம்மதியை யுள்ளமதி யாமலுன் பாற்; பேர்கொ
ண்ட பலவூ ரிராசதா னியுடனிலை பெயரா திருப்பு மொன்றைப்,
பெற்றவர்க் கதுசொந்த மாக்கவுங் கண்கண்டு பெற்றநா யகிதனக்
கோர்,பிள்ளைத் தமிழ்க்கவிப் பிரபந்த மீமிகப் பிள்ளைப் பெருஞ்சிறப்
புப், பெறுவதற் குப்பாடி வந்தாங் கேற்றினேம் பிரபலம் பெற்ற
பெரியோ;பேர்கொண்ட கைம்மாறு நீயொன்று செயவேண்டு மென்
னென்னி லெமதுபினோ, ரென்றும் பசிப்பிணியில் வாடாம லுண்

ணைற் கிசைந்தநெல் விளையுநன்செய், யேறிநீர் பாய்வதாத் தீருவை சகாயமா வெய்துமிரு கோட்டையளவுக், கிருப்பதா கத்தெரிந் துத வியின் னுழும்வேண்டு மெல்லாமு மீந்துவாழி. (எரு)

*ஏர்பூத்த விண்ணுலகிற் றேவருக்குட் டலைவனு யிருக்குஞ் சோவும்
வார்பூத்த மண்ணுலகிற் றேவருக்குட் டலைவனு வயங்கு நீயும்
பேர்பூத்த காயனென விருத்தலினுற் புயாசலத்திற் பிறங்கா நின்ற
தார்பூத்த தென்சேறைச் சேவகப்பாண் டியமன்னு சமான ராமே. ()

*விரிதிரைசூழுலகமெலாஞ்சுற்றிவருஞ்செயலினுல்விரைந்துநீயூர்
பரியினையுநின்புகழையென்போல்வாரன்புவைத்துப்பாடிச்சொல்லும்
அரியபெருங் கவியினையும் வாசியெனக் கண்டவர்க ளறைதலாலே
சரியென்பார் கற்றவர்கள் சேவகப்பாண் டியராச தமிழ்க்கோ மானே.

*இளமையினிற் கல்வியறி வூக்கமீ சுரபத்தி யிரக்கம் வாய்மை வளமிகுநற் பெருஞ்செல்வ மீகைபொறை முதற்குணங்கள் வாய்ப்ப வென்று, முளமகிழு மரசுரிமை நீபெற்று யிதுவியப்பே யொருநான் காகுந், தளமலியுஞ் சேறைநகர்ச் சேவகப்பாண் டியதுரையாந் தமி ழ்க்கோ மானே. (எஅ)

*வானமதி யினுமுனது வதனமதி தனையுயர்வா வழுத்தச் சேறைத்
தானமதி லடையலர்செங் கரகமலங் குவித்தியா சகஞ்செய் வார்பா
லானமுக கமலமொடு கரகமல மலர்த்தியது மற்பு தந்தான்
பானல்விழி யார்மதனுஞ் சேவகப்பாண் டியதுரையே பகருங் காலே

*புரசுருவங் கொடுதேவர் சேறையினிற் றவம்செய்யும் புதுமை யோடு
விரசுமா னிடர்பலருந் தேவரா யிருப்பதுவும் வியந்து காணப்
பரசுமன்பாற்பொன்னுலகந்தனைத்தணந்துகற்பகமிப்பாரின்மன்னு
மரசுருவாய்ச்சேவகப்பாண்டியனெனும்பேரமைந்துவந்தாயுங்காலே.

* சீர்கொண்ட தென்சேறை யம்பதியி லுரியநற் செங்கோல் செலுத்துகின்ற, சேவகப் பாண்டிய துரைச்சிங்க மேநன்கு செப்பு மொரு செய்திகேண்மோ, தென்மொழியில் வடமொழியில் வல்லபா வலவர்பலர் சேரத் திரண்டுசூழத், திக்கரசர் பற்பலர் நெருங்கமறை யவர்குழாந் தேடியா சீர்வதிக்க;ஏர்கொண்ட வில்லறம் புரியவிரு மனை வியரை யின்பமுறு நீமணஞ்செய், திடுசகல வைபவமு மெதிர்வந்து காணற் கெழுந்தியாம் வந்திலேமென்,னென்பையேற் காட்சிக்கு விட

யமா யின்புற் றிலங்கலங் காரவெழி லுவ, மெய்ஞ்ஞகேள் விகளுக்கு விடயமாம் பாகவத ரின்னிசையி னிசையுமுடிமேற்; பார்கொண்ட சேடனூர் பாற்கண்டு கேட்கும் படிக்குவிழி செவிகண்முன்னம், பலதவஞ் செய்துபெற் றேமில்லை யொன்றினைப் பற்றியே மற்றொன் றினைப்,பற்றாத கண்செவி படைத்திட்ட தாலென்ன பயனிஃ திருக் கநின்சீர், பாடியெதிர் நாடிச் சொலற்குநா வேனுமப் பணிபோ லிரண் டாயிரம்; பேர்கொண்ட தொகையுறப் பெற்றிலே மிவையெலாம் பெற்றவச் சேடனுக்குப், பெயர்ந்துவர லாமெனிற் காலிலா னுயி னன் பேசிலெல் லாமமைந்த, பெற்றியார்க் கேயின் பொருங்கமையு மிவ்வுண்மை பேரறிவி னீயறிகுவாய், பிரபலம் பெற்றசன் மார்க் கராம் புத்திரப் பேறுநீ பெற்றுவாழி. (௮௧)

தண்டலம் முருகேசமுதலியார்பேரி லியற்றியன.

* முருகேசமாநகர்சூழ்பவனிவரக்கண்டவன்றேமுடிக்குமென்ற
னொருகேசமானமுகில்கலைவளைசோர்ந்திடமயக்கமுற்றுமாத
ரருகேசமானமிழந்தயர்கின்றேனவனிடம்போயன்புவைத்துக்
குருகேசமானமிலாநீயிதனைச்சிறிதேனுங்கூறுவாயே. (௮௨)

* ஆனவரம்பனைத்துதிக்கைவேழமுகன்பாற்பெறுநல்லரசேயந்த
வானவரம்பனைத்துணையுமுலாப்பாடிவதிலெனும்பாவலரையென்று
ஞானவரம்பனைத்துமுணருளத்துவக்குமுருகேசநண்பாநல்காய்
கானவரம்பனைத்துலாங்கட்குழலாட்குன்புயத்திற்கமழுந்தாரே (௮௩)

* விரும்பனையன்றியுஞ்சகியுமிகவெறுக்கமயல்பெருக்கமெலிவா னந்தப், பெரும்பனையன்றிலுங்கடலுமொலித்துநலித்திடவருந்தும் பேதையுன்னை, யிரும்பனையன்றிரணமுநெஞ்சுருகாவென்றுரையா மலின்னேசேர்வாய், கரும்பனையன்றினையுமொவ்வான்காப்பிலெனு முருகேசகருணைமாலே. (௮௪)

*கைக்கிளையேயிதுகாறுமுனைவளர்த்தவெனக்குநீகைம்மாறாகக், கைக்கிளையேன்செயலைமுருகேசனிடமுரையதற்குக்கருதிநீயே, கைக் கிளையேலென்னிருகொங்கையிலவன்முன்சலந்தேசெங்கையிற்செய்ப ல்வ,கைக்கிளையேன்மறந்தனனோவதையுநீகுறிப்பித்துக்கழறுவாயே.

* சந்தவிலக் குமணனோ டொருபுலவன் றனக்காத்தன் றலை யை யன்பான், முந்தவிலக் குமணனையு மெதிர்வரினு மதியாமன்

முனிந்து பேசிப், பிந்தவிலக் குமணங்கை முருகேச மதனுநீ பெட்பிற் சேர்வா, யெந்தவிலக் குமணமியற் றுவர்க்குவேண் டுவதோவஃதினைந்தாள் பாரே. (அ௬)

* கொடுகொடுதா தாநீயே யெனமதுரந் தருங்கவிகள் கூறினுலுங், கொடுகொடுவென் றுரையாடு முலோபர்தமைக் கனவினினுங் குறியோ மென்றும், வடுகொடுசெந் தமிழ்கிரந்த முணர்ந்தபேரறிவுடையாய் மனத்தி லேக, வடுகொடுக வடராத சென்னைநகர் முருகேச வள்ளற் கோவே. (அ௭)

வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கட்கு எழுதியன.

*பணக்கார நிகர்மொழியார் மதனுவென் றினியநயப் பாட்டுப் பாடிப், பணக்கார மூடரிடஞ் சென்றுபயன் பெறுமலந்தோ பட்டபாட்டின், கணக்காரங் குனக்குரைப்பா ரிசைபாடுங் காரளிகள் களித்துப் பூவிற், கணக்கார மலிவெள்ள கால்வாழ்சுப் பிரமணிய கருணைக் குன்றே. (அஅ)

*காவியந்தங் கனியும்விழி யுமாமகே சுரன்மகிமை கழறு மேலாங்
காவியந்தங் கறிவுடையோர் கழகமலி யுய்வெள்ள காற்கண் மேய
நீவியந்தங் கன்புவைத்து நாவலர்பா வலர்வறுமை நிவர்த்தி செய்ய
நீவியந்தங் கம்புதிது புதிதாக வுதவுதின்சீர் நிலைக்கு மாதோ. (அ௯)

வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள்விடுத்த ஒருவெண்பாவுக்காகக் கூறியது.

* வெண்பாவை யென்னுவி லகலாமல் வீற்றிருந்தன் மிகவுந்தேர்ந்தோர்,வெண்பாவை யென்றலைமேற் கொளவிடுத்தா யினமினத்தின் மேவி வாழ, நண்பாவை யாதிருப்ப நோவுயர்ந்தோர் வெள்ளகானகரி லென்று, நண்பாவை யாருருவ மதனெனுஞ்சுப் பிரமணிய நாவ லோனே. (௯0)

கும்பகோணம் ப்ருமஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்களுக்குப் பட்டங் கிடைத்ததற்காக மதுரைத் தமிழ்ச்சங்கத்திற்பாடியது.

*மூச்சங்கத் தினுமகா மகோபாத்தி யாயரென மொழியும் பட்டம்
அச்சங்கத் தனைநிகருஞ் சாமிநா தையனைப்போ லடைந்தார் யாவர்
மெச்சங்கத் தமிழறிஞ னிருப்பினுமிப் பெயர்ப்புகழ்நான் காணி ளங்கு
மிச்சங்கத் தினிமிதுபோ ரெச்சங்கத் தினுமென்று மிருப்பன் மண்ணே.

பாண்டித்துரைஸாமியவர்கள் பிரசங்கத்தை வியந்து கூறியன.

*இருந்துழியே யிருந்துதன்னு ணையினடப்பக் கோல்செலுத்து மிறைவனென்னப், பொருந்துபாண் டித்துரையாம் புயல்சைவப் பயிர்தழையப் பூமியெங்குந், திருந்துமா றெழுந்துசைவ சித்தாந்தப் பிரசங்கச் செழுந்தேன் மாரி, யருந்துதிசா லப்பெய்யு மாதனினிங் கெழுந்தவ்வா றுக்கிற் றன்றே. (கூஉ)

*மழைவறந்த காலத்தின் மந்திரத்தா லதையழைத்தல் வழக்கா றென்று, தழைபுகழ்சேர் தந்நகரா கியதிருமந் திரத்தினென்றுஞ் சைவ மோங்க, விழைதருபாண் டித்துரையாஞ் செழும்புயலைச் சித ம்பரமா மேலோன் முன்னே, மழைமினொனு முன்னமது வந்துபிர சங்கமழை யருள்செய் தன்றே. (கூங)

சேற்றூர்சம்ஸ்தானம் மானேஜர் சி. இராக்கப்பபிள்ளையவர்கள்மீதுகூறியன

மருவி ராக்கப் பாகாய வரையும் வளரும் முண்முருக்க, மரம் போற் கல்வி யில்லாத வரையே மதிக்கு மதியுடையாய்; வருவி ராக் கப் பாவலவீர் மகிழ்வீ ரென்று வள்ளலெழு, வரையுந் தருவுஞ் சுர பிசிந்தா மணியும் வானு மானுமெனத் ; தருவி ராக்கப் பாமுருகர் தஞ்சீர் பாடுந் தமிழ்விரகா, தன்னை யடைந்தோர் தனைப்போலத் தங்கச் செய்யுந் தயாநிதியே; ஒருவி ராக்கப் பாருக வோட விருகண் ணிலுமுறுக, ணுனுற்று மாரன் கலகமெவ ரோதாஞ் சகிப்பா ருது தவிரே. (கூச)

உடுக்கையிழந் தவன்கைபோ லுற்றழியெற் கும்பலகா லுதவி செய்தாய், படுக்கையிலு மிருக்கையிலு நடக்கையிலு மதுமறக்கற் பால தன்றாற், கடுக்கையிலேற் றுண்டசிவ பிரானறிவ னிதுநிற்க கா யுஞ் செந்தேட், கொடுக்கையினேய்ந் தார்போலக் கொண்டமிடி கற் றோர்க்குக் குறைக்குங் கோவே. (கூரு)

உனைப்பார்க்கும் பேராசை யுற்றுறுமெற் கின்னமுநீ யுதவுவா யிந்,நினைப்பார்க்கு வரும்வந்த காரியமுந் தெரிந்திருப்பாய் நிமலனுமீ, சனைப்பார்க்கு ளுயர்கடவு ளெனக்கருது வோய்மலர்த்தண் டலையி ன்வண்டர், கனைப்பார்க்குங் கடல்போலு மிளசையிராக் கப்பவள் ளால் கருதுவாயே. (கூசு)

கலைநிறைந் துயர்சங்க வாணர்சூழ் சேறைநகர் காக்கின்ற காவலற் குக், கண்ணுமிமை கவசமும் போலமா நேசராய்க் கருதுபெரு மதிய மைச்சாய்ச்; சிலைநிறைந் தமக்கர மெனச்சொலதி காரங்கள் செயுமிராக் கப்பதிரன், செவ்வேட்கு நிகர்பழநி யாண்டிவே ளென்னுநீர் செப்பு மென் கவிதை கேண்மின்; னிலைநிறைந் தங்கதவ நீடுபல காலமா நேடி மேல் வீடு பெறுவா, னினைவுற்று வருமென்ற னெண்ணந் தெரிந்து தனி நீவிர்செய நினைவிரென்றான்; மலைநிறைந் தொருபெருந் தீபமென நுமதுபுகழ் மகிதலமும் வானுமலியு, மார்க்கண்டனைப்போல வாயுளு ம்பெற்றுநல் வரங்களும் பெறுவிர் மன்னே. (கூஎ)

நீர்கொண்ட சேறைநகர் மன்னன்மா நேசராய் நிகழ்தலாற் று ணைபதி, நீதா வெனப்புலவர் பாடுகவி மகிழ்தலா னேயவக் கரையாள ராய்ப்; பார்கொண்ட நன்னிலையு ளஞ்சாதி சைவரைப் பற்றும்வே ளாண்மை யுறலாற், பயில்குமர னுமரூன் றுறமுதற் பெறலினாற் பா வலவர் கைக்கொ ளுஞ்சீ; ரேர்கொண்ட பலசெய்யு ளணிவிளைசொ லாய்தலா லீகையா லையனருக், கேற்கமுந் துறவந் திருத்தலா லெந் நாளு மென்னநன் மையு மிருக்குஞ்;சீர்கொண்ட வேளிராக் கப்பவன் ளலையன்பு செறிகல்வி யறிவு கேள்வி, சேர்பழநி யாண்டியா மன்ன னைப் பாமெனத் திகழறிஞர் செப்பு வாரே. (கூஅ)

சென்னைக்கு வந்திருக்கும்போது
செந்தில்வேலுமுதலியாரைக் குறித்துப்பாடியன.

* அந்தில்வேற் றரணியு மன்ப னடிவணங்குஞ்
செந்தில்வேற் றரணியுந் திண்புயா—தந்திற்
றவப்பழகு வார்க்குப்பொன் றந்திருகை மிக்க
சிவப்பழகு சேரிந் திரா. (கூகூ)

* சென்னைப் பதியையுஞ்சீர் செய்குழற்பூஞ் செந்திருவாழ்
சென்னைப் பதியையான் சேர்ந்திருந்து—நின்னை
யிதுகாறுங் காணே னுலேறுபுயத் தின்றூர்
மதுகாறுங் காவென்பா வம். (க00)

* கருப்பையயாப் பாவலவன் கண்டென்பாற் பத்துக்
கருப்பையயாப் பாவலவன் காத்தல்—விருப்பை
யினியகற்று வானே லிவனுளனென் றூனா
லினியகற்று வாழ்நின்னை யே. (க0க)

* அன்று னினியுரைய பாதனைத் துங்தோர்ந்து
முன்று னினிய மொழிபகர—விந்நாளில்
வந்தே னுரைநிகழு மாகடல் வைகமுதஞ்
செந்தே னுரைநிகர்வோய் தேர். (௧0௨)

* கற்றாரைக் கற்றாரே காமுறுவ ரென்றெளவை
சொற்றா ளதுமெய்யேற் றோல்பலநூல்—கற்றோயைக்
காமித்தே னுதலினாற் கற்றேனு தற்குமையம்
பூமிக்கு ளுண்டோ புகல். (௧0௩)

முறையூர் ஸ்ரீமாந். பழ. சி. சண்முகஞ்செட்டியாரவர்கள்மீது கூறியன.

பூமிசையோ கம்பெறலாற் றிருமாலே யிவனென்னப் புலவர் சூழ்ந்து, நாமிசையின் னமுதநிகர் பற்பலமா மாலைசொல நயந்துட் கொள்ள, லாமிசைமே வியவணிகர் குலமணியாய் வந்தபே ரரசே யென்றன், பாமிசையுண் மகிழ்முறையூர்ச் சண்முகபூ பாவென்சொற் பலவுந் தேரே. (௧0௪)

கற்றவரைக் கைவசம்வைத் திருக்கின்றா னரனென்னக் காதாற் கேட்க, லுற்றதன்றிக் கண்ணாரக் கண்டதிலை யுன்னிடத்தி லுதுக ண்டோமென், றற்றமின்றிப் பற்பலரும் பலநாளா வென்னிடத்தி லன்பு கூர்ந்து,சொற்றனரால் யானுமது காணவர நின்புகழே துணை வந் தன்றே. (௧0௫)

கற்பகநின் னிடத்திலிருக் கின்றதென்று கண்டுவந்து கற்றோ ராய்ந்து, பற்பலர்சொன் னாரதனாற் பொன்னுலக நீயென்னப் பகர்ந் தே னன்னார், பொற்பமரு மவனிருக்கு முறையூரும் பொன்னுலகம் போய்ப்பா ரங்கண், முற்பலரும் புலவராய்த் தோன்றுவரென் றாரி ன்னு மொழியக் கேண்மோ. (௧0௬)

செல்வமுங்கல் வியுமொருங்கு சேராவென் றயரறிஞர் செய் யுஞ் செஞ்சொ, லொல்வதென்று பாடல்களைப் பார்த்தமட்டே சதமென வுரைத்துட் கொள்ளா, மல்விரவி யவ்விரண்டு நின்னிட த்தி லிருப்பதனை வந்து கண்டு, சொல்விரைவில் வாவிஃதோ ரதிசய மென் னவும்விரித்துச் சொற்றா ரன்றே. (௧0௭)

சுரும்புலவ மணஞ்செய்பொழில் சூழ்முறையூ ரரசேநீர்ச் சோற்றுக் கேனும், விரும்புலவ ணமுந்தாரா வுலுத்தர்தமைப் பாடுதற்கு

விடாம லின்பந், தரும்புலவ ரனைவரையும் புரந்தருளுந் தயாநிதியே தரிய லாரைப், பெரும்புலவ மானமொடு வாய்க்கொளச்செய் சண்முகநற் பெயர்க்கோ மானே. (க0அ)

முறையூர்.

அத்தமதி யாகவின்கொ ணுதலெனுமின் ஞர்விரும்பு மழகா வென்றுந், தத்தமதி யாகமறை யவர்செய்முறை யூர்வளர்பைந் தருவே கற்றோர், மெத்தமதி யாகமமும் வேதமுந்தேர் சண்முகநல் வேந்தே யார்க்கு, முத்தமதி யாகமிக வுதவுநின்சீர் தெரிந்துமகிழ் வுற்றுமன்றே. (க0௯)

கரும்பருந்து வாகனன்முன் கண்டறியாப் பதம்பெயர்த்துக் கண்முன் வந்து, கரும்பருந்து வாயெனநேர் கற்கரிக்குத் தருமரனைக் கற்கண் டுந்த, கரும்பருந்து வாய்த்துதியார் மதுரையினிற் கைதொழுது கருதுங் கன்னி,கரும்பருந்து வாதனமான் முறையூர்ச்சண் முகமதன்றோர் காண மன்னே. (கக0)

தேசுந்த ராநிகர் சிற்றிடை மாதர் தினம்விரும்பு
மாசுந்த ரவென் றழகீன ரைச்சொலி வாழ்த்திறுமோர்
காசுந்த ரார்முறை யூர்வளர் சண்முக காமநன்கு
பேசுந்த ராதர முந்தெரி யாரவர் பேதையரே. (ககக)

* அன்பாத் திரணமு மீயாவு லோப ரகத்திற்சென்று
லென்பாத் திரங்கண் டுதவுவ ரோதன மீவதற்கு
நன்பாத் திரமுறை யூரர சேயென்று நாடியுன்றன்
முன்பாத் திரமொடு வந்தார்க் கருள்சண் முகவள்ளலே. (ககஉ)

* வானமுறை யூர்வசிக்கு மாதராருண் மாதருற
லானமுறை யூர்வசிக்கு மன்புறுமெய்ஞ்—ஞானமிகு
சண்முகமன் பேருதவி தானேசெய் தக்கோனு
மெண்முகமன் பேசுசென்றங் கே. (ககங)

*புத்திமா னுதலினுற் பலகலையு நின்னிடத்துப் பொருந்து மென்றே, யுய்த்திநிதி னுணர்ந்துநினைக் காணமுறை யூர்க்குவர வுன்னியேயின், பத்திசையுங் கவிகள்பத்துப் பாடியச்சிற் பதித்தங்கண் பார்க்க வுய்த்தேன், சத்திசையும் வணிகர்குலச் சண்முகநற் பகமன்னீ தானங் கோவே. (ககச)

*விண்ணுலகிற் கொருதனத னிருப்பதுபோற் புலவர்பலர் விரும்பு மிந்த, மண்ணுலகிற் கொருதனதன் வேண்டுமென விறைவருக்க வந்தாற் போன்மென்,றெண்ணுபெரும் பொருள்கொண்ட முறையூர்ச்சண் முகவள்ளா லென்பா லுள்ளன்,பண்ணுநின்சீர்ச் சமுகமதைத் தேடிவரு மென்கவிக ளாராய் வாயே. (ககரு)

*பெரியவர்தங் கேண்மைபிறை போல்வளரு மென்றுரைக்கும் பெற்றிக்கேற்ப, வரியசீ ரியநட்பு நாளுக்கு நாள்வளர லாமென் றெண்ணித், தெரியநின்பால் வரப்பலகான் முயன்றுபார்த் துன்வாயில் சிறப்பக் காக்கு, முரியசே வகர்களாற் றடையுண்டென் பதுகேட்டிங் குற்றே னந்தோ. (ககசா)

*உற்றபின்னர்ப் புணர்ச்சிபழ குதல்வேண்டா வுணர்ச்சிதானேங்கு நட்புப்,பெற்றவுரி மையைப்பயக்கு மென்னுமொரு திருக்குறளின் பெற்றி கண்டு,முற்றநின்சீ ரொவ்வொன்றுங் கேட்டபடியே யுணர்ந்து முகம லர்ந்து, கற்றவர்முன் புகன்றுமனங் கனிந்துவகைக் கடலமுழ்ந்திக் கரைகாணேனல். (கசள)

*ஆனாலு மகவிழிபோன் முகவிழிக ளிணைக்கானு மாசை யுற்ற, தேனாலு மமுதாலுஞ் செய்தநின்வா சகங்கேட்கச் செவிசிந் தித்த, கானாலும் போல்வால்கை மற்றொன்று நிலந்தோயுங் களிற்றுய் மஞ்ஞை, தானாலும் பொழின்முறைசை யம்பதியாய் நம்பதியாய்த் தங்கு மாலே. (கசஅ)

*ஓரிடத்தி லிருந்தாலும் புலவர்பலர் போல்யானு முண்டாக்கும்பாச், சீரிடத்தி லுனையிருத்துந் திறமுடையே னெனநினக்குத் தெரியும் வண்ணம், பாரிடத்திற் புகழ்பெறுநின் சமுகமதை நேர்வந்து பார்த்த போது,சேரிடத்திற் சேர்ந்தனனென் றுனந்தங் கொண்டதெவர் செப்பற் பாலார். (கசகூ)

*பொன்மன்ற முவந்துநடம் புரிபெருமா னருளாலும் பொருந்துஞ் சூர,பன்மன்ற வுடல்வகிர்ந்த தம்பிரா னருளாலும் பாரி லோங்கு, தன்மன்ற மையன்போலுநீசெய்யும் பேருதவி தன்னை லுந்தா, னன்மன்ற லென்மைந்தன் றனக்கியற்ற வேண்டுமிது நன்கு தேரே.

* உலகினிற்பன் னிரண்டுவிர லுயர்மதுரைப் பெருமானோடொன்று சேர்க்கு, மிலகருட்பே றிடைவிடா துன்னிடத்தி லிருக்

குமெனவென்றுங் கண்டேம், நிலமிசைச்சீர் தருமுறைசைச் சண்முகவள் ளாலோங்கி நிதியநீங்கா, நலமுறத்தங் கியசிறப்பா லிதினின்னும் பெரும்பேறு நாடில் யாதோ. (௧௨௧)

*பொன்பணமுள் ளவன்றிருமால் படியளப்பா னவனிடத்திற் போவோ மென்று,லன்பமரு மனைவியைத்தின் றேநடலை யுற்றனனீ தமைய மன்றுற்,றென்பரங்குன் றினிலிருந்த குமரகுரு பரன்பதத்தைத் தினஞ்சிந் திக்கு, மன்பதைகள் புகழ்முறைசைச் சண்முகவள் ளாலிங்கு வந்தேன் மன்னே. (௧௨௨)

*வஞ்ச மற்றநீ வாழ்த்திடா தவர்க்கு மாரி போற்றரும் வண்மையைக் கண்டாற், பஞ்ச துட்டனைச் சாதுவே யென்று பாடி னுங்கொடுப் பாரிலை யென்று, தஞ்ச மிக்கநன் னுல்வரி லொருவர் சாற்றுகிற்பரோ தமிழ்மணங் கமழு, நெஞ்ச முற்றமெய் யன்பினிற் சிறந்த நிருப சண்முக நீணிதி பதியே. (௧௨௩)

*மன்மதனேர் நினதிதய முகங்கரந்தா மரையாக வதித லாலே நன்மணஞ்செய் தாதுமுக மலர்ந்துதவு மெனவந்தே னல்கு வாயாற் பொன்மதில்வா னுறவளரு முறையூரி லரசுரிமை பூண்டி ருக்குந் தன்மதயாநிதியாகுஞ்சண்முகவிற்பனர்புகழ்செந்தமிழ்க்கோயானே.

*தனைச்சதமென் றடைந்தவரைக் காக்குமுறை யூர்வளரைந் தருவே செங்தேன், கனைச்சதங்கைப் பதம்பணியுஞ் சண்முகமன் னுநீயே கற்று ராய்ந்தோர், நினைச்சதன்பா லுதவுவோ னுதலினென் மதலைமண நிகழ்த்த வேண்டி, யுனைச்சதநன் னிதியேனுந் தருகவென்று கேட்பமென வுற்றேன் மன்னே. (௧௨௪)

* உயர்பாரி சாதமிசை யுறவொளிர்சந் தானமே லோங்கன் மிக்க, வயமாமந் தாரமரு மருவலரி சந்தனமேன் மணத்த வின்ப, நயமார்கற் பகம்பொருந்த லான்முறைசைப் பதியினிலெந் நாளு நீங்காச், செயமார்சண் முகமாலே யிந்திரன்போல் வாயென்னச் செப்ப லாமே. (௧௨௬)

*ஆயினுமின் னற்கொடிய மாலேறித் திரிந்ததனு லவனைப் பாகான், முயினுமின் னருள்புரியுந் தயாநிதியா நினக்கென்னத் தமிழ்ப் பாவாணர், வாயினுநன் மனத்தினும்பே சுவதுநினைப் பதுநின்சீர் மகிமை யென்றுற், சேயினும்பே ரெழிலமையுஞ் சண்முகபூ மாநீயோர் தெய்வம் போலும். (௧௨௭)

* இத்தகைய நின்னிடத்திற் கல்வியறி வன்புபொறை யிரக்க மீகை, யுத்தமமா மொழுக்கமுத லியகுணங்க ளுனக்கெனக்கென் றொருங்கு கூடி, அத்தனையு முந்திமுந்தி வந்துவசித் தனவசதி யமைந்தால் யாவர், சித்தமகிழ் வுடன்கொள்ளா ரிஃதொரதி சயமன்று தேருங் காலே, (கஉ௯)

* பூதவுடற் சுகநாடி யூதியமாத் தேடுகின்ற பொருளே போலக், காதலுயிர்ச் சுகநாடிப் புகழையே யீட்டிநனி கற்றோர் போற்று, மீதலிசை படவாழ்த லெனுங்குறட்கோ ரிலக்காளு யென்னத் தேர்ந்தே, ளுதாரங்கண் டவரவர்க்குத் தகவுதவுஞ் சண்முகப்பே ரதிபரேறே. (கஉகூ)

*குலத்தினிலுங் குணத்தினிலு மரோகதிட காத்திரத்துங் குறையா வாயுட்,-பலத்தினிலும் பணத்தினிலுஞ் சிறந்ததெய்வ பத்தியிலும் பகையை வெல்லும், வலத்தினிலு மணத்தின்மிகு பாமாலை புனைதலினு மற்றை யெல்லா, நலத்தினிலு முயர்முறைமைச் சண்முகத யாநிதியே நவிலக் கேண்மோ. (கஙo)

*இக்கவிக்கு முன்னர்நா லைந்துகவி வரவிடுத்தே னின்று காறும், இக்கவிக்கு மதுரமொழி யொன்றேனும் விடைவரையா திருந்த தென்னோ, தக்கவிக்கும் பனும்புகழுந் தமிழரசே யுலகமெலாந் தஞ்சமென்றேத், தக்கவிக்கு முடிபொறுத்த மன்னரெலாங் கொண்டாடுந் தயைமிக் கோனே. (கஙக)

*என்போலும் புலவர்பல ருனக்குள்ளா ரென்றாலு மீயும் வள்ள, லுன்போலு மொருவரிந்த வுலகமெலாம் பார்த்தாலு முண்டோ சொல்லாய், மின்போலு மழியுமிந்த வுடம்பென்று புகழுடம்பே விரும்பிச் செய்து, பொன்போலு முள்ளமகிழ் பூப்பருய ரறிஞரிது புதுமை யன்றே. (கஙஉ)

*பூவலர்பைம் பொழிற்கொட்டாம் பட்டிநகர்க் கருப்பையாப் புலவ ரென்னும்,பாவலர்மேல் வைத்திடுமன் பவர்மகனுர் மேல்வைத்துப் பாது காத்தாய், நாவலர்சூ ழரசேநின் குணங்களையென் னென்றெடுத்து நவில்வேன் விண்ணிற், காவலர்பெற் றிடயார்க்கும் கேட்டதெலாந் தருங்கொடைக்கைக் கமலத் தோனே. (கஙங)

*அறநெறியால் வந்தசுயார்ச் சிதப்பொருளைக் காலவரை யறையிலாம, லுறவருவார்க் குதவுநினை யொருபகலின் முற்பாதி யுறுவாருக்கே,பிறர்பொருளை யெடுத்துதவுங் கன்னனே நிகர்வனிந்தப் பெற்

றியோருந், திறனறிந்தார் கொடையினிற்கன் னன்சிறந்தா னெனச் சிறிதுஞ் செப்பா ரன்றே. (௧௩௪)

*யாங்கள்யா ரையுநின்பால் வரவழைக்கு முதாரகுண மிருந் தெஞ் ஞான்று, நீங்கரிய வுலோபமதை நின்னிடத்தில் வரவொட்டா நீர்மை செய்யும், ஆங்கதனுக் கியாங்கள்செயுங் கைமாறொன் றறி கிலே மடுக்கு மன்பர், பாங்கறிந்து நட்புறுவார் பயின்முறைசைப் பதிக்குளுயர் பதியா மாலே. (௧௩௫)

*கவியருமை தெரிந்துதவா லோபரே மலிந்தனரிக் கலிகா லத் திற், புவியினிப் பிழைப்பதரி தென்றுபா டுதல்மறந்த புலவ ரெல் லாஞ், செவியறிவா னுன்புகழைக் கேட்டவுடன் றலையெடுத்துத் திரிவா ரானார், அவிர்மணிமா லிகைமார்பா வவர்குழுவில் யாவொருவ னுகு மன்றே. (௧௩௬)

ஸ்ரீமத்-பாண்டித்துரைஸாமி அவர்கள் மீது கூறியன.

*பருவப்பா கனையகவி பாடியுலோ பரைத்தருங்கற் பகமென் றூலு, மருவப்பா யினுந்தாகந் தனக்குதவா ரவரிடம்போய் மயங் கா வண்ண, முருவப்பா யுங்கணைபோல் வருத்துமிடி முழுவதையு மோட்டு வாய்சத், துருவப்பா லோடோடத் துரத்தியருள் செயும் பாண்டித் துரைப்பூ மானே. (௧௩௭)

*தருவசனங் களிறுபெறு சாபமகன் றிடுமதுரைத் தலத்தி லென்று, மருவசனங் கல்விகற்கு மாணுக்கர்க் கீந்துதமிழ் வளர்க் குஞ் சங்கஞ், சருவசனங் களும்புகழத் தாபித்தா னன்பரையா தரிப்பே னென்ன, வொருவசனங் கனிவாயா லுரைத்திடுபாண் டித் துரைப்பே ருறுங்கோ மானே. (௧௩௮)

ஈக்கணங்கள் பலமலரி னின்றெடுத்துத் திரட்டுதே னிறல்போ லின்சீர்த், தாக்கணங்கல் வித்தமிழ்நூல் களிலெடுத்துப் பலபாடல் தொகுத்துப் பூவின்,மாக்கணங்க ணெனக்கொள்பன்னூற் றிரட்டெ னும்பேர் வைத்தொருநூல் வழங்கி னுற், றுக்கணங்கள் புறு முகவைப் பதியமர்பாண் டித்துரைச்செந் தமிழ்வல் லோனே. (௧௩௯)

* காணவரு வார்க்கிது சமயமிலை யென்றுவீண் காலம் போக்கி காணவின்றித் தகாதவரோ டிருந்துரு தாடுறுமன் னவர்க ளொப்

போ, ஏணைமையும் பற்பலநூ லாய்ந்தியா வருங்காண வினிதி ருந்து, மாணறிஞ ருடன்பழகி வரும்பாண்டித் துரைதனக்கு மதிவல் லோ [ரே. (௧௪௦)

*குறுமுனிவ னையமலைத் தவனிடத்திற் பிறந்தவளிக் கொடியா ளென்னு, மறுவறவுட் பெருமகிழ்ச்சி யுற்றா†மலை யாதவனுய் வைய மெல்லாம், பெறுபெரிய பேறெனும்பாண் டித்துரைத்தாய் சங்கப் பால் பெரிதுட் கொண்டங், குறுமொருநல் லாளென்னத் தமிழ்த் தெய்வ மிருந்ததுல குவப்ப மன்றே. (௧௪௧)

ஆகச்செய்யுள் ௬௬௬.

---

திருவாவடுதுறை ஆதீன வித்துவானும், மதுரைத் தமிழ்ச்சங்கம் சைவநூற் பரிசோதகரும் ஆகிய

## சே. ரா. சுப்பிரமணியக்கவிராயர்.

இவர்கள் மேற்கூறிய மு. ரா. அருணசலக்கவிராயரின் சகோதரர். திருவாவடுதுறை ஆதீனம் இரண்டாவது சந்நிதானமாகிய ஸ்ரீமத் நமசிவாய தேசிகசுவாமிகளிடம் முறையாகக் கல்வி கற்றுத்தேறி அவ்வாதீனம் மகா சந்நிதானம் ஸ்ரீமத் சுப்பிரமணிய தேசிகசுவாமிகள் காலத்தும், இப்போது மஹா சந்நிதானமாகி யெழுந்தருளியிருக்குஞ் ஸ்ரீமத். அம்பலவாண தேசிக சுவாமிகள் காலத்தும் ஆதீன வித்துவானக இருந்து அநேக தம்பிரான்களுக்கும் வேறு பலர்க்குந் தமிழ் கற்பித்து வந்து இப்போது ஐந்து வருஷமாகத் தமிழ்ச்சங்கத்தில் சைவநூற் பரிசோதகராக இருக்கின்றார்கள். புராதன சைவ சாஸ்திரமான ஞானமிருதமும் வில்லிபாரதமும் வேறு சில நூல்களும் இவர்கள் ஆராய்ச்சியில் பலவிசேடக்குறிப்புகளுடன் வெளிப்பட்டுள்ளன. செப்பறைப்பிள்ளைத்தமிழ், அரிமழப்பிள்ளைத்தமிழ் இரண்டும் இவர்களியற்றியன. இப்போதிவர்கட்கு வயசு 51 இருக்கலாம்.

### சேற்றூர்த்திருவிழாவில் ஒவ்வோருவருடத்திலுங்கூறியகவிகள்.

முதற்றிருநாள்.

திருத்துவரை காத்தவுயர் திருவன்சுந் தரதாச செயபூ மானற், கருத்துவரை யாதவன்பாற் செயுந்திருநாள் கண்டுமனங் களிக்க வேசெங், குருத்துவரை யிதழெனுங்கோ கனகமின்வாழ் சேறைமலைக் கொழுந்தர் தாநல், லெருத்துவரை கேதனந்தம் பத்தணிந்தா ரன்பரின்ப மெய்தத் தானே. (௧)

---

† மலையாதவன் - ஒப்பில்லாதவன்.

*மாதவனும் போதவனு மகிழ்கொடியாங் கருடனைவான் மரு வன னத்தைப், போதவுமே பணிபுரிய பயங்கொளச்செய் தேருங்கும் பொற்பா லென்று, மீதவைக்கு மேலெனவேற் றுக்கொடிகட் டின ரெவரு மேத்துஞ் சேறை, நாதரெனு மாளுடையார் மகிழ்திருநா ளாகுமுத னாளிற் றனே. (உ)

*தேவரெலாந் தினம்பரவுந் தேவரெனுந் தென்சேறைச் சிவனு ரென்று, நாவலருங் காவலரு நவிற்றுதிரு நாண்முதலா நன்னு டன் னிற், பூவுலகிற் றமைச்சேவ கத்தேவ ரென்றடியார் புகலற் கேற்ப ச், சேவகங்காட் டுங்கொடியைக் கட்டினரன் பருமதிக செயம்பெற் றாரே. (ங)

*அடியேற்றம் புரிபகவன் பாறையிலங் கியகோயி லரனு ரெங் கள், குடியேற்றம் பெறவெமது மன்னர்செங்கோல் கொடையேற் றங் கொள்ளச் சேறைப், படியேற்றம் பெறவன்பர் பணியேற்றம் பெறவெவரும் பகரேற் றஞ்செய், கொடியேற்றம் புரிந்தருளி னார் விழா முதலிலன்பு கொண்டு தானே. (சு)

*இருபொருளு மெங்குலத்துக் கருள்புரியு மம்மையப்ப ரெழி லார் சேறைத், திருவனுயர் செங்கோலுந் தேசமுநா டொறுஞ்செழி க்கத் தேவர் கண்டு, பொருவில்கொடி யேற்றமென்ப திவர்தமக்கே யுரியதெனப் புகழ்ந்து போற்றத், தருமலிவிண் ணிலதுதம்பத் தொ ருகொடியேற் றம்புரிந்தார் தயவு கூர்ந்தே. (ரு)

இரண்டாந்திருநாள்.

* பெருத்தபுகழ்ச் சேறைவிழா விரண்டதனிற் கிடைத்தபெ ரும் பொருளாங் கற்ப, தருச்சுரபி தமைவேண்டும் பொருளுதவ லா லொக்குந் தமையென் றேதங், கருத்துணர்ந்தா ளுடையர்கருத் தே வியத்தே னுவுமாப்பா கஞ்செய் தார்முன், பொருத்தமுறத் தமது மெய்யும் பகிர்ந்தவர்க்கீ தென்னவிறும் பூது தானே. (சா)

* தமதருளை யடைந்தவுயிர் சராசரமா யினும்வேண்டத் தக்க வெல்லா, மமரருக்கு முதவுமியல் படைந்திருக்குந் தன்மையையிவ் வவனி காணத், தவமலியுந் தென்சேறை விழாவிரண்டி லம்மைய ப்பர் தவம்பெற் றுளுஞ், சிவமலிகற் பகங்காம தேனுவைக்கொண் டிங்குவந்தார் தெரிசித் தோமே. (எ)

*திகிரிமன்னன் புதல்விபெற்றாள் கணவரைய மெடுப்பவரென் செய்வோமென்று, தகுதியதா வழங்கிடத்தே னுவைக்கொணர்ந் தா ளதுநமக்குத் தகாதென் றோர்ந்து, மிகுதியதாச் சேறைவிழா விரண்டினிற்கற் பகங்கொணர்ந்தார் விமலர் முன்னிப், பகுதியறி யார்போலு முழுதுணர்ந்தோ ரெனும்பெயரைப் படிப்பெற் றாரே.

*இரும்புவியும் வானுமுள்ளோ ரெவரேனும் வேண்டியதை யிலையென் றது, தருங்கொடைசேர் கற்பகமுங் காமதே னுவும்விரு ம்பித் தம்மைத் தாங்க, வரும்பெரிய மலைக்கொழுந்தர் தவம்பெற்றா ளெழுந்தருளு மாட்சி கண்டோர், பெருங்கொடைநா யகரிவரே யெ னச்சேறை விழாவிரண்டிற் பேசு வாரே. (௯)

*அற்பகலாப் பணிசெயன்ப ரொருகுறையு மில்லோமென் றக த்து மெச்சப், பற்பகலுந் தருக்களுங்கோக் களும்பெருமை யாமுற் றோம் பார்மீ தென்னப், பொற்பகஞ்சேர் சேறைவிழா விரண்டிலா ளுடையர்தவம் புரிந்தாள் பொன்னார், கற்பகமுங் காமதே னுவுமூர் ந்த காட்சிகண்டு களிப்புற் றோமே. (௧௦)

மூன்றாந் திருநாள்.

* பெரும்புகழ்த்தென் சேறையிற்சே வகத்தேவ ரெனுநாமம் பெற்றீ ரும்மை, வருந்தவின்றைக் கொருபூதங் கொண்டேக லுற்ற துநும் மக்க டம்மிற், பொருந்திளையான் பிணிமுகங்கொண் டான்மு னமே சந்தியினிற் போனான் முன்னோன், றிருந்தியநுந் துணைவியு மே சினமடங்க லுற்றாளென் செய்கு வீரே. (௧௧)

*எந்தவுயி ரெவ்வுடம்மை யெடுத்தாலு மன்புளத்தி லிருந்தா லென்று, மந்தவுயிர் தமக்குரிய தானமென விருந்தருளு மருளின் ற ன்மை, யிந்தவுல கத்தவர்கண் டொழுகியுய்யத் தென்சேறை யிறை வர் மூன்றாஞ், சந்தமுறு திருநாளி லொருபூத மிசைக்காட்சி தந்தா ராமே. (௧௨)

*நீதமுறுஞ் சேறைவிழா மூன்றதனிற் றவம்பெற்றா ணேயஞ் செய்யு, நாதரையோர் பூதமெடுத் தோடவென்செய் வோநமையு நா டிலென்று, மூதறிவா ளதைப்பிடிக்க வொருசிங்கங் கொண்டுவந்து முன்னின் றாண்முன், பேதைமையென் பதுமாதர்க் கணிகலமென் பதுபொய்யாம் பேசுங் காலே. (௧௩)

* சீதமலி வயற்சேறை விழாமூன்றி லுமையவளைச் சிங்கங் கொண்டு, போதநுற வாளுடையார் தமையொருபூ தங்கொண்டு போகக் கண்டோ, ராதியீ றில்லவரைச் சிங்கமும்பூ தமுங்கொல்லற் கமையு மோவிப், பூதலத்தெவ் வுயிரிடத்துந் தாமுறைதல் காட்டின ரற் புதமென் பாரே. (கச)

* பூதமெனு மோர்சொல்லின் பொருளெல்லா நிறைந்திருக்கும் பொருப்பு விற்கை, யாதிதிரு மலைக்கொழுந்த ரொருபூத மடக்கிவர லதுவி யப்போ, வோதுசரா சரமீன்ற தவம்பெற்றாள் விழாமூன்றி லோங்குஞ் சேறை, வீதியிலோர் வீரசிங்க மடக்கிவர லதுவியப்போ விளம்பு வீரே. (கரு)

நாலாந்திருநாள் பகல் மண்டபக்கவி.

*மெய்யடியார் செயும்பூசைப் பத்திமிகுந் தாலவர்க்கு வெளி யுந் தோன்றி, யையரெனை யாளுடையா ரம்மையப்ப ராய்க்காட்சி யருளுந் தன்மை, வையமிசைக் கம்மவார் செயும்பூசைப் பத்திமிக மகிழ்ந்து சேறைச், செய்யவிழா நான்கதனி லம்பலத்திற் காட்சிதந் து தெரிவித் தாரே. (கசா)

*நம்மையென்றுந் துதிக்கவைத்த நலமிகுந்தென் சேறைவிழா நான்கி னுள்ளே, தம்மையறிந் தவர்காணு மம்மையப்பர் சத்திரியர் தாமென் றோதுங், கம்மவார் குலத்தவர்கள் செய்தபெரும் பூசையி னுற் கருணை கூர்ந்து,செம்மைதிக ழுஞ்சேர னம்பலத்திற் காட்சிதந் தார் தெரிசித் தோமே. (கஎ)

*வம்பலர்மா லிகைமுதலாப் பலவலங்கா ரந்திகழும் வண்ணங் கண்டே, யும்பர்கல்விச் சேடனின்னு மாயிரங்கண் வேண்டுமென வு ரைத்துப் போற்ற, நம்புகழ்சேர் சத்திரியக் கம்மவார் குலத்தினர்க ணலஞ்சேர் சேர, னம்பலத்தி லம்மையப்பர் காட்சிகண்டார்க் கம்ப லமே லாகுந் தானே. (கஅ)

நாலாந்திருநாள் இரவு மண்டபக்கவி.

*கயிலைவரை யத்தாணி யோர்காலந் தனிலுயர்ச்சி காண்ப தா லப், புயனிகர்சுந் தரதாசுத் துரைதுணைவி சினித்தாய் புரிந்து செய் த, பயிலெழின்மா மண்டபமீ தெக்காலு முயர்ச்சிபெறும் பான்மை நோக்கிச், சயிலமலைக் கொழுந்தர்மலைக் கொடியொடுவந் தெழுந்தரு ளத் தரிசித் தோமே. (கக)

*நாவலருங் காவலரு நவில்புகழ்த்தென் சேறைவிழா நான்கு தன்னிற்,பூவுலகம் போற்றிடச்செய் சீனித்தாய் மண்டபத்திற் பொற்சி லம்பார், தேவிதவம் பெற்றவளா ளுடையர்திரு வுளமகிழ்த் திக்ழுங் காட்சி, யாவலாய்க் கண்டவரே யெழுபிறவிக் கரைகண்டா ராவர் தாமே. (உ0)

*ஓரரக்க னெடுக்கமிக நடுங்கியதா லக்கைலை யுயரத் தாணி, யேரிலகுஞ் சீனித்தாய் செய்வித்த மண்டபமீ தெக்கா லத்துஞ், சீர்திகழ வசையாத திரமுடைய தென் றுமகிழ் சிந்தை கூர்ந்தே, யாரணியு மம்மையப்ப ரெழுந்தருளுங் காட்சியைக்கண் டருள்பெற் றோமே. (உக)

நாலாந்திருநாள் வாகனக்கவி.

* திருமருவு மைத்துனனு மோரிடையன் மனையாளுஞ் சிற்றிடைச்சி, பெருமகன்சீ ராகிடையன் மாதரிடை யன்பின்னர்ப் பெற்றோ னிந்தப், பரிசதனுற் சேறைவிழா நான்கதனி லாளுடைய பரனார் தாமு, மொருவிடைய ரென்பதற்கோ பெருவிடையைத் தழுவியெழுந் தவந்தார் தாமே. (உஉ)

*ஓங்குகாஞ் சியிலொருமா விடையரா னார்வாத வூரர்க் காகப், பாங்குறுகூ டலிலொருமா விடையரா யினர்சேறைப் பரம னார்தாந், தாங்குவிழா நான்கிலொரு மாவிடைய ராயினரித் தன்மை யாலே, யீங்குலக மெங்கணுமே சத்தியமா விடையரிவ ரெனச்சொல் வோமே. (உங)

*ஒருவீரன் றனையுயர்த்திற் காளையொப்பா னென்பரஃ தொவ்வா தென்றும், பெருவீரன் யானெனமால் காளையா யிடவவனைப் பெரிதாஞ் சேறை, வருவிழா நான்கிலா ளுடையர்தா மடக்கிமேல் வந்தார் போலும், பொருசேவ கத்தேவ ரிவரேமெய் யெனவிந்நாட் புகலு வோமே. (உச)

*ஆழியுல கம்புகழுஞ் சேறைவிழா நான்கதனி லம்மை யப்பரேழுவிடைக் கெதிரானோன் றன்னையொரு விடையாக்கி யெய்தினரோ, சூழ்தருமந் தனைவிடையாக் கொண்டுவந்தா ரோபுலவீர் சொல்லுங் காலை, வாழ்முடிவி லாற்றலுள்ளா ராதலினு லென்னென யாம் வழுத்து வோமே. (உரு)

*வேகமுடன் காளையின்மேற் சேறையா ளுடையீரிவ் விழா வோர் நான்கி,லேகினிரென் றேகுறைசொல் லிடுவர்சிலர் பூரதமுன் னிற்ற ஞான்று, வாகனமு முப்புரமெய் திடுங்கோ லுஞ் சத்தியுமாய் மன்னி வந்த, தாகுமிந்தக் காளையன்றி யறக்காளை யிஃதேற்ற மா மென் போமே. (௨௬)

ஐந்தாந் திருநாள் மண்டபக்கவி.

*அரியதமி ழறியார்பாற் செல்லாம லெமக்கருளு மம்மை யப் பர், வருகொல்லைப் பதியாண்மால் பொன்னயவாண் டாயதுரை மண் ட பத்திற், பெரியபுகழ்ச் சேறைவிழா வைந்திலெழுந் தருள்காட்சி பேணிக் கண்டோர், விரியுமெழு பவக்கடலைக் கடந்துமுத்திக் கரை கண்டார் மெய்யுள் ளாரே. (௨௭)

*தொண்டர்மனை தொறும்பலியேற் றுத்திரிந்த வாளுடைய சோதி யார்தாம், பண்டைவரைப் புரந்திடுமால் பொன்னயவாண் டாயதுரை பரிவு கூர்ந்தே, யெண்டிசையும் புகழ்சேறைத் திருவி ழா வைந்ததனி லினிதாச் செய்த, மண்டபத்தில் வசித்ததனு லிந்தி ரவி மானமினி வாய்க்குந் தானே. (௨௮)

*நற்சாலி விளங்குதலாற் கற்பகத்தார் வாசமுறு நலத்தால் வெள்ளைப், பொற்பார்வா ரணமுழக்கம் பொருந்துறலால் விண்ணுல கம் போலுஞ் சேறைச்,சொற்பாவ லோர்புகழுந் தாந்திருநா ளாளு டைய சோதி யார்தா, மெற்பாவும் பொன்னயவாண் டாயதுரை மண்டபத்தி லின்புற் றாரே. (௨௯)

ஐந்தாந் திருநாள் வாகனக்கவி.

*சந்திரன்வி மானமுஞ்சூ ரியனேறு மிரதமுமச் சதம கன்றன்
மூந்துறுவா கனமுமா வயனூர்தி யுந்தரினு முன்னிக் கொள்ளார்
சந்தமலி சேறைவிழா வைந்திலா ளுடையாருந் தவம்பெற் றாளு
மிந்திரவிமானமிசையெழுந்தருளுங்காட்சிகண்டோரெவருந்தாமே.

*ஆலவாய்ப் பாவலர்சூழ் சேறைவிழா வைந்திலம்மை யப்பர் தாமே, பூவிலிந்த நகர்தேவ தானமெனச் சொல்லுதற்குப் பொருந் துஞ் சான்று, மேவுவிழா விரண்டினிலத் தருவுந்தே னுவுங்காட்டி மேவினுற் போற், றேவர்தொழ விந்திரவி மானமுங்காட் டினரென் பூர் தெரிசித் தோரே. (௩௧)

*தாயுமிலி தந்தையிலி தானறனிய னென்றுரைக்குந் தகைமை யன்றிப், பேயுடனு டிந்தகைமை யுற்றிருந்த தென்சேறைப் பெருமா னுக்கு, மீயுயரைந் தாந்திருநா ளிந்திரவி மானமெய்தும் விதத்தைத் தானே, யாயிலினி யாரானு மளவிடுதற் கரியரென்ப தறிந்திட் டோமே. (௩௨)

*முருகாரு மலர்த்தடத்தின் மூரிவளை முகிற்கெதிரா முழங்குஞ் சேறைத், திருநாளைந் தினிலுவந்த வாளுடையீர் முன்னொரு நாட் செகத்தின் மேலா, மொருகூடற் பதியினிலிங் கனஞ்சுமந்து விலைபகர்ந்த வுமக்குத் தானே, யரிதாமிந் திரவிமா னங்கிடைத்த காரணத்தை யறிந்தி லோமே. (௩௩)

ஆறாந்திருநாள்.

*தெருவீதி தோறுமைந்து பரிமளஞ்சேர் தென்சேறைத் திருநா ளாறிற், பெருவாசம் பெருவெருக்கு மரவுமணி யாளுடைய பெருமா னீர்முன், திருவிழி மிழலையினி லுயர்காழிப் பூசுரர்க்கோர் செல்லாக் காசு, தருவீரிம் மாதங்க மெவண்கொண் டென்னவதி சயமீ தாமே. (௩௪)

*போரானை மீதுவந்தவாளுடையார் தமையுவர் தம்புடையின் மேவிச்
சீராகு மனமுடையா ளாகிவந்த தவம்பெற்ற தேவி தன்னை
யேராகுந் தென்சேறை விழாவாறில் வீதியுலா வெழுந்த காட்சி
நேராகத் தெரிசித்தோர் தெரிசித்தோ ராவரென்று நிகழ்த்த லாமே.

*செயமேவுஞ் சேறைவிழா வாறதனி லாளுடையார் தேவியார்தாம், வயமாவை வயமாக்கி வாகனத்தை வாகனமா வைத்துவந்த, நயமேவும் திருக்கோலங் காண்பதனுக் குடம்பெல்லா நற்கண்ணாக, வயனார்முன் செய்திலரே யென்றெவருங் கண்டுபணிந் தன்புற் றாரே. (௩௫)

*மெல்லியலாண் முலையாளை யிருகோட்டிற் குருக்குழைந்து மெலிந்தா ரிந்நாள், வல்லமையுள் ளாரெனவி ராயிரங்கோட் டானையின்மேல் வந்தா ரென்றுஞ், சொல்லியசே வகத்தேவ ரெனும்பெயரை நிலைநிறுத்தத் துணிந்தோ தேறு, மல்லதெல்லாம் வல்லரெனவோ சேறை யையர்விழா வாறிற் றேமே. (௩௭)

ஏழாந்திருநாள் மண்டபக்கவி.

*பொன்னாரும் பனிவரையிற் புரிந்தமணம் விரும்பியவன் புடை யா ரெல்லா, மிந்நாளில் வருந்தாமற் கண்டுபெறும் பயன்கொளநல் லிழையார் தெய்வ, மின்னாள்பெற் றவளையா ளுடையார்க்குத் திருமணஞ்செய் வித்தா னெங்கண், மன்னருகு முத்துசா மித்துரைமற் றவன்புகழை வழுத்தார் யாரே. (௩௮)

*அமையுமறி வுடையர்செய்கை யார்க்குமுப காரமென்பா ரது நாங் கண்டோ, மெமையுமா ளுடையார்க்கு முமையவட்கும் பனிவரையி லியற்றுஞ் சீர்போற், சமைபுகழ்த்தென் சேறைமுத்து சாமிமன்னன் மணஞ்செய்வித்துத் தரும்பேர் பெற்று, னிமையவிமையா ரெனக்கண்டு பணிந்தெவரும் பேரின்ப மெய்தி னாரே. (௩௯)

*ஆவலுட னின்றுபகன் மனைதோறும் பலியேற்ற வம்மையப்பர், நாவலர்சூழ் சேறைவிழா வேழிரவு தவம்பெற்ற நங்கைதனைச், சேவகப்பாண் டியராசன் மண்டபத்தின் மணம்புரிந்த சிறப்பினாலே, பூவினிப் பெரியமா தங்கமெய்திச் சுகவிருப்புப் பொருந்து வாரே. (௪௦)

*இலகுவிதி விலக்குரைத்த வாளுடையீர் கைலையின்முன் னெழிற்கல் லாலி, னலபரம யோகியென விருந்தனிர்தென் சேறைவிழா நவிலோ ரேழின், மலர்புகழ்ச்சே வகப்பாண்டியன் மண்டபத்திற் றவம்பெற்ற வளைம ணந்தீ, ருலகில்வல்லாண் வகுத்ததுவாய்க் காலெனுமோர் பழமொழிமெய் யுறக்கண் டோமே. (௪௧)

*யோகநெறி நடந்திடமுன் கல்லாலில் யோகியா யுறைதல் போலப், போகநெறி நடந்திடப்பொன் மலையுமையை மணந்தனரப் பொற்கோ லத்தை, நாகரைப்போ லுங்காணச் சேவகப்பாண் டியனன்புகண்ணச் செய்த, தாருமம்பொன் மண்டபத்தி லாளுடையா ரியற்றினாரற் புதமீ தாமே. (௪௨)

வாகனக்கவி.

*ஆட்டுவா ரொடிமுனைங் காட்டுதல்போ லுலகிலுளோ ரறிந்துசெய்யத், தோட்டுவார் குழலுமையை மணந்ததன்றி மனைமனம்போற் சூழ்வீ ரென்று, காட்டுவார் வையமிசைப் போதகங்கொண் டுவந்தனடங் காந்தை யென்றே, வேட்டுவார் வையமிசைப் போதகங்கொண் டார்சேறை விமல னாரே. (௪௩)

*நகுபொருளொன் றில்லாரு மில்வாழ்க்கைத் துணைநலத்தை நண்ணி லெல்லா, மிகுபொருளெய் துவரெனல்கண் டனம்பலியேற் குஞ்சேறை விமல ரிந்தத், திகிரிமன்னன் புதல்விதவம் பெற்றவளை மணந்ததனாற் றிருநா ளேழின்,மகிதலத்தோர் கண்டுவக்க மதயானை மேற்பவனி வருகின் றாரே. (௪௪)

*திருநாளே ழிற்சேறை யாளுடையார் தவம்பெற்ற தேவி தன்னைப், பெரியமணஞ் செயநாதர் மிகவைய மெடுக்கவரும் பெற்றி யாரென், றொருவைய மெடுக்கவந்தா டேவிபனி மலையானை யுகந்தா ளென்றே, யரியமலை யானையுகந் தாரைய ரிவர்மனமொன் றாகுந் தானே. (௪௫)

*மலையரசன் குமரியுயர் வையம்பெற்று வந்தாளை மணந்த தாலே யிலகுமறைக் கிழவரென்று நமைவெறுக்கு மெனவுள்ளத் தெண்ணி யோநற், பலவளஞ்சேர் தென்சேறை விழாவேழி லாளுடைய பரம னார்தா, முலகிலுள்ள நல்லாருங் கண்டுவக்க வாலிபமுற் றுவந்தார் தாமே. (௪௬)

* உலகிலாண் பெண்ணுடனே கூடியின்ப மெய்துவண்ண முமைபெற் றாளை, யிலகவா ளுடையர்மணஞ் செயற்கேற்ப வீதியுலா வெழுந்து போத, வைமுறையா மெனல்போல வுமைசிவிகை மீதுவர னாக மீது, வலமுறுதென் சேறைவிழா வேழிலா ளுடையர்வந்தார் வாழ்வுற் றோமே. (௪௭)

* உலகறத்தா றிதுவெனவேண் டாவெனுநன் மொழிக்கேற்ப வுமையா ளொன்று,நலதருமத் தின்செல்வி யாதலினாற் சிவிகைமிசை நண்ணி னாளாற், பலர்களுமே பித்தனெனப் பகருமலைக் கொழுந்தர் நல்ல பருமா தங்க, மிலகுறக்கொண் டுவந்தனர்தென் சேறைவிழா வேழிலிஃ தெவ்வா றாமே. (௪௮)

எட்டாந்திருநாள், வாகனக்கவி.

* எட்டிவான் முகிலுரிஞ்சு மாளிகைத்தென் சேறைவிழா வெட்டில் வான, வட்டமா மதிகண்டார்த் தெழுகடல்போல் யாவருமே மகிழ்ச்சி கூரப்,பட்டிசைந்த வரைத்தவம்பெற் றவளுடனா ளுடையாரும் பரிவுட் கொண்டு, வெட்டிவேர் புனைந்தவொரு விமானமிசைக் காட்சிதந்து விளங்கி னாரே. (௪௯)

* மன்னியபூ மணம்போலெவ் விடத்துமுறை பரமருமை மணித்தைக் கொண்டு, றென்னன்மண மகனா ரின்றொருவேர் மணமகமாய் நின்ற தாலே, பின்னுமண மகனா ரென்றெவருங் கண்டிறைஞ்சப் பேரார் சேறை, நண்ணர்வீ தியில்விழா விருநான்கில் வருஞ்சிறப்பை நவிலொண் ணாதே. (௫௦)

* அருநான்கு முருநான்கு மருவுருவந் தாமொன்று மானார் விண்ணிற், பெருநான்கு வகைத்தேவர் சூழ்வீதி தனிலொருபாற் பிறங்கத் தேவி, யொருநான்கு மறையொலிக்க முந்நான்கு கண்முக்கண் ணுடையோர் சூழ, விருநான்கு விழாவுல கந்தவிமா னத்துவந்த தென்சொல் வோமே. (௫௧)

ஒன்பதாந் திருநாள், மண்டபக்கவி.

* கல்வியறி வில்லவர்மா செல்வரே யெனினுமதி காரரேனு நல்லரல்ல ரெனவெறுக்க நமக்கருள்செ யம்மையப்பர் நாளுங் கல்வி செல்வமதி காரமுள்ளார் தென்சேறைத் திருவன்கச் சேரி யாரென் றெல்லவரும் புகழுமவர் மண்டபத்தொன் பான்றிருநா ளின்புற்றாரே.

* பூதலத்தி லுயிர்கள்பிறந் திறந்துழலும் விடாயாற்றிப் புரக்குந் தெய்வ, நாதரெனு மம்மையப்பர் திருநாளொன் பதினலமே நவிலுஞ் சேறை, நீதிமன்கச் சேரியுத்தி யோகத்தர் மண்டபத்தி னிலத்தே ரேறி, வீதிவந்த விடையாற்றி மகிழ்ந்தனரா லிதுபெரிய வியப்புத் தானே. (௫௩)

* பாரேறும் புகழ்படைத்த தென்சேறைத் திருநாளொன் பதனிற் றெய்வக், காரேறு கண்டர்மலைக் கொழுந்தர்தவம் பெற்றவளுங் கருணை கூர்ந்து, சீரேர்மன் றிருவன்கச் சேரியார் மண்டபத்திற் செழும்பொற் கோலத், தேரேறி வந்தவிடாய் தீர்த்தடியார் செனனவிடாய் தீர்த்தார் தாமே. (௫௪)

பத்தாந்திருநாள், வாகனக்கவி.

* அருவிடைக்க கரஞ்செறிந்த வதுநாளு மணக்குழைய ரணியார் சேறைத், தெருவிடைப்பத் தாந்திருநா ளாளுடையா ருளக்கருணை செய்து நால்போன், மருவிடையார் தவம்பெற்ற நாயகியா ருடன்வெள்ளி மலைபோற் றோன்று, மொருவிடைமேற் பவனிவந்தா ரன்பரெலாம் வாழிநீ டூழி மாதோ. (௫௫)

* மடையேறும் பருவாளை வான்குதித்து வருவயலின் வளஞ்சேர் சேறை, யிடையோர்பத் தெனுந்திருநா ளமையாளு மம்மையப்ப ரெழிலா ரன்ன, நடையாளம் பிகையொருபால் விளங்கமறை தழங்கவற நவிலும் வெள்ளை, விடையேறிப் பவனிவந்தா ரடியரெலா நீடூழி விளங்கத் தானே. (ருசு)

சிநேகர் நால்வருடன் கருவைநல்லூரிலே தெரிசனஞ் செய்யும்போது கூறியகவி.

* தருவையா னகஞ்சநிதி யென்னுமுத்து சாமியெனுந் தருமன் முன்னந், திருவையா னகமுழங்க வேட்டநெல்லை யப்பமுகில் செந்திற் றேவாந், துருவையா னகக்குமர சாமிசுப்பி ரமணியநற் சுகனு மியானுங், கருவையா னகரமதைக் கண்டதனுற் காண்கிலமக் கருவைத் தானே. (ருஎ)

சங்கரமூர்த்தி கோவிலிற் கூறிய கவி.

* சுரராசை வளரநம்போ லனுபவியா ரெனப்போகந் துய்த்திடும்பா, மரராசை வப்பெருமை யறிவரவ ரொடுங்கூடா மற்றே வேசங், கரராசை வலமிரண்டு நிகர்குழற்க வுரிபாக காப்பா யென்று, வரராசை வந்துநம துயிரனையார் நால்வரொடும் வணங்கினோமே. (ருஅ)

திருக்குற்றாலத்திற் கூறிய கவி.

* குற்றால மாதக்கங் கண்டனை யென்று கயவர்க்குப்பாச்
சொற்றால மாதவ மாமோ புலவிர் துதிக்கைக்கிந்த
நற்றால மாதரு மென்னுமுன் னேனை நயந்துபெற்ற
குற்றால மாதலத் தானையன் பாற்சென்று கூறுமினே. (ருகூ)

* வடவரு விப்புனன் மூழ்கவு நின்னை வணங்கடியா
ருடனமர் வாழ்க்கை பெறவுமிப் பாவிக்கு முண்டுகொலோ
கடகரி மாமுகன் றந்தாயென் றுபுன் கருணைவந்து
திடமுறு நாளென் றறியேன்குற் றாலத் திகம்பரனே. (சுo)

மந்திர நகரிற் செய்த கமல பந்தம்.

* வேதனித மோதநித போதபத மீதனத
னுதரவாந் தோழனென வாட்கொண்டாய்—சூதைவனப்

பந்தைவென்ற மாதனத்தாள் பாகம் பிரியாட்கு
கந்தசிவ சங்கரவா கா. (௬௯௧)

சுப்பிரமணியர் திருக்கலியாணத்திற் கூறிய கவி.

* புவனமிசைத் தந்தைசெய்கை போன்மகனுஞ் செய்வனென்று புகல்வார் மெய்யே, சிவபெருமான் முன்னமொரு பொருப்பன் மக ளுமையைமணஞ் செய்த தாலே, யுவமையிலா துயர்பொருப்பர் மகளாம்வள் ளியைமணந்தா னும்பர் கோமான், றவமெனுநன் மக ளாமோர் தெய்வயா னையைமணந்த சாமி தானே. (௬௯௨)

திருச்செந்திலிற் கூறிய கவி.

* மிக்க செந்தமிழ்க் கீரனைப் பிடித்தொரு வெஞ்சிறை யிடையிட்டு, வைக்கும் பூதத்தை வேலினுக் கிரையென வைத்தனை யதனாலே, தொக்க பல்பிணி யாகும்பே யையுமவ்வே றுயக்கச்செய் வாயென்னுந், தக்க தன்மைகண் டுனையடைந் தேன்றிருச் சந்தன சலத் தேவே. (௬௯௩)

திருவாப்பாடியிற் கூறிய கவி.

* வானோர் வணங்கு மண்ணிநதி வலப்பான் மன்னுங் கோயில் கொண்டாய், தேனே யனைய மொழியுமையாள் சேரு மிடப்பாலையுங்கொண்டா, யானோர் பெருமை யறிந்ததொண்ட ராட்டும் பெரும்பால் கொண்டனையென், னூனோர் வினையின் சிறுபால்கொண் டுழலா தருளத் தடையுளதோ. (௬௯௪)

சேய்ஞலூரிற் கூறிய கவி.

* இமையோர் வணங்குஞ் சத்திகிரி யீசா நின்பா லிடத்துவைகு, மூமையா ளங்கந் தனக்குடைந்த வொளிரம் புலியுஞ் சிறுமானு, மமையா விடநா கமுநாகத் துரியும் பொருளா பணிந்தனையேற்,கமையார் தொண்டர்க் கருள்செல்வ மவையு ளதுவோ கழறுவையே. (௬௯௫)

திருவாவடுதுறை மகாசந்நிதானம் பாண்டிநாட்டுக்கு
எழுந்தருளும்போது கூறிய கவி.

* பெருந்திருவா வடுக்கும்பின் கதிகொடுக்கும் புலவீர்காள் பின்பிப் பாரில், வருந்திருவா வடுத்தனிரு மதியெனமா தவர்குழுவில் வந்து தோன்றி, யிருந்திருவா வடுக்குமொழி யெனவுரைத்துப்

பணிந்தோர்கட் கினிய ஞானந், தருந்திருவா வடுதுறைச்சுப் பிரம ணிய குருமணியைத் தரிசிப் பீரே. (கூசு)

*பெருகலைசூழ் புவி லுயர் துறைசையிற்சுப் பிரமணிய பெருமா னியார்க்கு, மிருகலையீந் தருளுகின்றான் கோடிகலை தந்தானென் றிசைக்கின் றார்யா, மொருகலைசின் னூட்கொடுப்போ மொன்று கொடுத் தானெனவு முரையா ரிங்கு, வருகலைமா னேக்கியரு மிகழ் வரென்று சோமன்விண்ணில் வாழ்கின் றனே. (கூஎ)

* தெள்ளுசுடர் கண்டவுட னிருளகலுங் காண்கிலதேற் சேரு மாபோல், வள்ளலையு மெள்ள லுறத் தந்தருள்சுப் பிரமணிய வரதா நெஞ்சத், துள்ளியுனைக் கண்டவுடன் மயலோடு மக்காட்சி யோர்கா லின்றேன், மெள்ளவந்தம் மய லுறுமா தலிற்பிரியா வரமருளி வியந் தாள் வாயே. (கூஅ)

விவாகஞ்செய்யும்போது வரைந்த கவிகள்.

* ஒருமறையோன் றருமியென்பான் மணமியற்ற வேண்டியுய ரால வாயிற், பெருகியபொற் கிழிகொடுத்துப் பெருஞ்சீருற் றயடி யேன் பெரிதா யென்றுந், தருமமிலாப் பாவியே னுயினுமே மணம் புரியத் தயைசெய் வாயேற், குருமணிச்சுப் பிரமணிய சாமியச்சீ ரினும்பெருஞ்சீர் குலவுந் தானே. (கூக)

* அடியவர்தங் குறைமுடிப்பா னெழுந்தருள்சுப் பிரமணிய வமல னேயென், குடிமுழுது நின்னருளால் வாழ்வதுசத் தியம்வலிந் தாட் கொண்ட நாயேன், படிபுகழ மணம்புரிய நீயுதவ வேண்டுமெ னப் பகரேன் கங்கை, முடியுடையா யடிமைதனை முழுவதுங்காப் பதுகடனு முறைமை தேர்ந்தே. (எ0)

* தருவதுவை யகத்தில்வந்த தெனத்தருஞ்சுப் பிரமணிய சாமீ ஞான, வுருவதுவை முதற்கறிக ளுடனெய்பா லனமருள்வா யுன்னு லென்றும், வருவதுவைத் திடுங்கடற்பூ மியில்வருமென் றுளங்கொண்டு வாழ்வே னுக்கிங், கொருவதுவை புரியநின துளக் குறிப்பின் படிதயைசெ யுவந்து தானே. (எக)

ஷை ஆதீனமிரண்டாஞ் சந்நிதானத்துக்குக்கூறிய கவிகள்.

* மணங்கவருங் குழன்மின்னார் மையலிலே மனமிகவு மயங்கி யன்னு, ரிணங்கவருந் தந்திரமும் வயிறேம்பும் பெருந்தொழி லு

மியற்றி யாக்கை, யுணங்கவருந் தத்தகுமோ குருநமசி வாயதொழும் புனக்கே செய்து, வணங்கவருந் தமிழ்மாலை புனையவென்றுந் திருக் கருணை வைத்தாள் வாயே. (எ௨)

* அரசமர மனையகண்ணார் தருஞ்சுகமெண் ணுதுதிரிந் ததுங் கொடுங்கோ, லரசமரம் புவியினிற்செய் மன்னர்தம்பாற் கவிசொலி யெய்த் ததுவும் போது, மரசமரம் புரிந்தமதன் புரமெரித்த நாத வட வாலென் றேறுது, மரசமரந் திகழ்துறைசைக் குருநமசி வாய வினி யருள்செய் வாயே. (எ௩)

* மாதவந்த னையர்மனை வியருறவா மெனக்கருதி மயங்கி ஞலெப், போதவந்த னைத்தவிர்த்தா ளாகுவன்பக் குவம்பொருந்தப் போதஞ் செய்யு, நீதவந்த னைத்துலகும் புகழ்நமசி வாயகுரு நிமலா வுன்றன், பாதவந்த னைத்தொழும்பே புரியும்வித மினிக்கடைக்கண் பார்த்தாள் வாயே. (எ௪)

* அறந்திருக்கற் றுயர்நால்வர்க் கருணமசி வாயகுரு வமலா பொன்னை, நிறந்திருக்கம் பங்கைவைத்தோன் விரும்புறநற் கலைய ளித்த நீதா முன்னம், பறந்திருக்க தனையுணர்ந்தோன் றேடியுங்கா ணுமுதலே பரனே யுன்னை, மறந்திருக்க மனம்வருமோ விவ்வுடம் போ டுயிருள்ள மட்டுந் தானே. (எ௫)

* மன்னுலகை லெக்கிரிவிட் டிம்பரெல்லா ரையும்புரக்க வந்தா யாகி, லின்னமுநா யேற்கருளா தென்னோதாழ்ந் தவர்க்கன்றே விரங் கல் வேண்டு, முன்னடியார் குழுவினில்யா னொருவனுற்று லென்ன குறை யுண்டோ சொல்லாய், வன்னமலி மாடமிலங் கியதுறைசைக் குருநமசி வாய தேவே. (எ௬)

*எழுத்தறிவித் தவனிறைவன் றனக்கொப்பா மெனப்பெரியோ ரிசைப்ப ரேலப், பழிப்பில்புக ழிறைவனென்னு நீயடியேன் மேற் கருணை பாலித் தென்றும், விழுத்தகுநன் னூலளித்தா யென்னினு னக் கொப்பாரை விளம்பு வார்சொல்,வழுக்கியும்பொய் யுரையார்கள் வாழ்துறைசைக் குருநமசி வாய தேவே. (எஎ)

* தேடுபொரு ளிருவகையுட் செல்வமெனும் பொருள்வழங்கச் சிதைவ தாலே, நாடுகல்விப் பொருள்பெரும்பே றுதவுமென்று நாயேற்கு நயந்த ளித்தாய், சேடுதிக ழிவ்வுலகில் யானுனக்கென்

கைமாறு செய்வேன் வாவி, மாடுவெண்கோ டுயிர்த்தமுத்த மலி துறைசைக் குருநமசி வாய தேவே. (எஅ)

* வான்மருவு கைலாய முற்றிருந் தாய்திருடும் வகையிலா யத்தை யுற்றேன், வளர்பாச கலையுடைய வரனுநீ மாதரையு வந்து பாசுதலை யுடையேன்; பான்மருவு பாதகம லத்தையனு காயுனது பாதகம லத்தை யணுகேன், பகருமுயர் பஞ்சாக்க ரத்தாயினி ருப் பஞ்சாக்க ரத்தாயி னேன்; மேன்மருவு தங்கமலை வில்லாயவ் வீணரொடு மேதங்க மலைவி லானேன், மெய்யடியர் ஞானநோக் கெதிர்போது வாயானு மிகவும்வம் போதுவாயன்; றேன்மருவு காத் துறைசை வருநமசி வாயகுரு தேசிகா நின்போ லவே, சிறியேனு மாயினே னினியாயி னுந்தேவ திருவுளமி ரங்கி யருளே. (எக)

சூரியனார்கோவில் ஆதீன மகா சந்நிதானத்துக்குக் கூறிய கவி.

* மாதவனு மாதவஞ்சொன் முத்துக்கு மாரகுரு மணியே விண்ணி, லாதவனே யாதவனிங் குறுவதெனத் தடுக்குமுய ரமுகு வாய்ந்த, சூதவன மதுசூத னுலகளந்த தெனநிற்குஞ் சோதி யூரிற், போதவனும் போதவணங் குனக்காண லாவிந்நாட் புனிதன் யானே.

விவாக காலத்திற் கூறிய கவிகள்.

* இருந்தவரை வணக்கியமா திட்டுமா திடமறைந்த வெழிலு மேலா, மருந்தவரை மற்றவரை யாதரிக்குந் தயையுமெய்ச்சொ லமைவுங் கொண்டு, பொருந்தவரை யாப்புகழ்செய் முத்துக்கு மார குரு பூர ணையான், றிருந்தவரை வதுபுரிந்து வாழும்வண்ணந் திரு வுள்ளஞ் செய்கு வாயே. (அக)

உன்னருளா லெவ்வுயிர்க்கு மெத்தொழிலு நடப்பதென வுரைப்பர் மேலோ, ரன்னதனை யறியாது நாயினேன் மணம்புரிய வருள் செய் யென்று, பன்னுவது பேதைநீ ராலன்றுட் கொண்டருள்வாய் பானு கோவின், மன்னுலகின் விளங்கவந்த முத்துக்கு மாரகுரு மணி யென் கோவே. (அ௨)

* ஒருபானு வாலையத்தி லுறைமூர்த்தி யடியவர்க்கா வுலகந் தன்னில்,வருமருட வடிவமுத்துக் குமாரதே சிகனை வந்தா னென் பார்,பெரிதுமிந்நா ளும்பாநு வாலையத்தி லுறல்சான்றும் பேணு மண்

பர், கருமமுங்கைக் கொண்டருள்வ னென்பதினி யையமுண்டோ கருதுங் காலே. (அங)

திருவாவடுதுறை மகாசன்னிதானத்துக்குக் கூறியகவிகள்.

திருந்தமலே யத்தமிழை யருள்குருசுப் பிரமணிய தேவ னிம்ப ரிருந்தமலே நிதிகொடுத்தெங் களைக்காவென் றுனைநியமித் தியற்ற லாலே, வருந்தமலே வுறச்செய்யா தருளெனயாம் புகல்கடமை மற் றுண் டோசொல், பொருந்தமலே யாருலகிற் புகழ்செயுமம் பலவாண புனிதர் கோவே. (அச)

நிலங்காவ லதுபுரிய வெழுந்தருளம் பலவாண நிமலா நின்னை, யிலங்காவ லமையின்றி யெழுந்திடவே தரிசிப்பா னெழுந்தேன் பல் காற், கலங்காவ லனைச்செயித்தோன் பணிகுருவே நின்னருளாற் கலப்ப வெல்லாம், விலங்காவ லவைவிலங்கு மெனலறிந்தே னின்சர ணே யேவிற் காளே. (அரு)

வெண்பா.

தருவம் பலவாழ்வு சார்ந்தார்க்கென் றுற்ற
திருவம் பலவாண தேவே—கருணைசெய்து
கற்றவரை யாங்குவைத்த கையா யெனினுமிங்குங்
கற்றவரை யாளல் கடன். (அசா)

துவசாரோகணத்திற் கூறியது.

செயநமசி வாயகுரு வெனவருமம் பலவாண தேசி கன்று
னயமலிவின் னவர்வரினு நல்லமுத மாம்பதத்தை நல்கு வேமென்
றியலுறுமன் னக்கொடிவா னிலங்கிடத்தம் பத்தின்மிசை யேற்றி
ஞனவ், வயனுயரன் னக்கொடியுங் கண்டுபயங் கொளத்துறைசை யதனின் மாதோ. (அஎ)

ஆதனம்பத் தனைவணங்கி லவன்பிழையும் பொறுத்தருளு மா சான் செய்ய, நீதனம்பத் தனைவிழியை நீத்தருளம் பலவாண நிமல னின்பா, லோதனம்பத் தருக்கருளத் துறைசையிலன் னக்கொடி யென் றுரைக்கு மேலாங், கேதனம்பத் தணிதிசையும் விளங்கத்தம் பத்தணிந்தா னினர்வுற் றேமே. (அஅ)

மகரசங்கராந்தியிற்கூறியகவி.

குருகையார் வாவிதிகழ் துறைசையினம் பலவாண குருவை யுள்ளங், திருகையா யுழலாதன் புறமகர மதிமுதலாந் தினத்தி லென்கை, வருகையா வணங்குகையா லவனருள்செல் வம்பெறுகை வாய்ந் தெவர்க்குந், தருகையா மன்றிமன்னர் தம்பாலேற் றிடுகையாச் சார்ந்தி டாதே. (அகூ)

இருமகர மதிற்காரஞ் சேர்ந்ததுமற் றதுமகற்ற னெனுநா வல்லீர், வருமகர மதிகமெழுத் துக்குறல்போ லெவர்க்குமுன்ன வந் தோ யென்றுங், தருமகர மதிலரசூர்ச் சற்குருவம் பலவாண சாமீ யென்றிந், திருமகர மதிமுதனு ளவணவணங் குவிர்கருணை செய் யுந் தானே. (கூ0)

கொலுவிருக்கும்போது கூறியகவி.

சேற்றிருந்த மரையுமல ருறச்செய்யு முகத்தாயுன் றிருமே னிக்குக்,காற்றிருந்த மதன்றவவே டங்கொளினுஞ் சிறிதுநிகர் காணு தென்னக், கூற்றிருந்த நகர்புகுதா தெற்கருளம் பலவாண குருவே நீதான், வீற்றிருந்த கொலுக்காண விண்ணரசின் மிகக்கண்கள் வேண்டுந் தானே. (கூக)

திருவிடைமருதூர்த் திருநாளில் ஒரே நாளில் ரதத்தை நிலையத்திற்கு வரச் செய்ததற்குக் கூறிய கவி.

பல்லாருந் தெரிந்தவிரு நேமிகளுந் தனைநோக்கும் பரியு மாக்கஞ்
செல்லாயு மொருதலையில் சாரதியும் பொருந்தசையாத் தேரு ராடல்
வல்லாய்நீ யிடைமருதூ ரிரதத்தை நடத்தியதோர் வலியா மோநற்[லே
சொல்வாணர் புகழ்துறைசை யம்பலவா ணக்குருவே சொல்லுங் கா

மடத்திலிருந்து கற்போர்க்குக் கற்பிக்க வருளியபோது கூறிய கவி.

* ஒருவருக்குக் கல்வியெனும் பொருளுதவி லவர்பலர்கட் குத வல் செய்வார், மருவியவப் பலர்களிலொவ் வொருவரும்பற் பலர்களுக் குவழங்கு வாரிப், பெருகுமுறை யறிந்திதனைப் பற்பலர்க்கிங் குதவும்வண்ணம் பிரியங் கொண்டாய்,குருமணியம் பலவாண யாவரிவ்வூ தியமுனைப்போற் கொள்வார் தாமே. (கூஉ)

* மாசடையில் லான்காவி யங்கணில்லா னுதலக்கம் வைத்தி லானென்,றுசையில்லார் பழிச்சுவர்மா சடையான்கா வியங்கணுடை

யான்மே லாகப், பேசுநாத லக்கமணி யாளெனையான் றதிப்பணின்னைப் பெரிதிந் நாட்போற், றேசுறவென் றுந்தையைசெய் துறைசையினம் பலவாண தேவ தேவே. (௬௪)

மகள் விவாகத்திற் கூறிய கவி.

*முன்னிவண்கா ழியர்க்கொருபொற் கிழிகொடுத்துச் சீர்பெற்றுப் முன்னி நஞ்சீர், பன்னியநற் றமிழ்விரக னமைப்புகலி யாயினனிப் பான்மை யாலே, யின்னவன்றன் சுதைவேட்டற் கொருபெரும்பொற் கிழிகொடுத்தா லினும்பெருஞ்சீர், மன்னுமென வருளரசூர்ச் சற்குருவம் பலவாண வள்ளற் கோவே. (௬௫)

* இன்றுவரை மார்ச்சால நீதியென வழியடிமை யெனையாண்டாய்நற், பொன்றுவரை யளவும்பெற் றிலனொருவர் பாற்புகுந்து புகலா தார,மென்றுவரை யாதுநன்று மங்களு தேயமன்றோ வென்சுதைக்கு, நன்றுவரை யத்தையைசெய் சற்குருவம் பலவாண நற்கோமானே. (௬௬)

நடுவெழுத்தலங்காரம்.

* பாடலத்தின் பெயர்சதய நாளின்பேர் தெற்குப் பகர்பெயர்நற் புதுமையின்பெர் விரைவென்ப தின்பேர், நாடியே படித்தலின்பேர் தலைமையின்பே ரிவற்றி னடுவெழுத்தாம் பதிக்குருவே நவின்றவப் பேர் முன்பின், கூடுமவை முறையேயக் கைலைவைத்தோ துநர்க்குக் கொடுத்தேமுப் புரக்குதவிக் குலவடியார்க் ககற்றித், தேடியுற்றார் தமக்குச்செய் யாதுசெய்தப் பொழுதே சிறப்பருளம் பலவாண தேவவருள் புரிமே. (௬௭)

பாடலத்தின்பெயர்-பாதிரி. சதயநாளின்பெயர்-வாருணி. தெற்கின் பெயர்-அவாசி. புதுமையின்பெயர்-நவம். விரைவின்பெயர்-சடுதி. படித்தலின்பெயர்-ஓதுகை. தலைமையின்பெயர்-இறைமை.

இவற்றினடுவெழுத்திலாம் திருவாவடுதுறை, அப்பெயர்
முன்பின்னெழுத்துக் கூடுமவை

பாரி-மனைவி. வாணி-கலைமகள். அசி-அவமதிச்சிரிப்பு. நம்-ஆணவம், மாயை. சதி-வஞ்சனை. ஓகை-மகிழ்ச்சி. இமை-இமைப்பொழுது.

ஆகச்செய்யுள் ௬௪௰.

## மு. இராகவையங்கார்.

இவர் இராமநாதபுரத்தில் பிரபல வித்துவானுயிருந்த அஷ்டாவதானம் முத்துசாமிஐயங்காரவர்கள் புதல்வர். முற்கூறிய ரா. இராகவையங்காரவர்கட்கு அம்மான்சேய். பால்யத்திலேயே கல்விபயின்று தேர்ச்சியுற்று ஸ்ரீமாந் பொ. பாண்டித்துரைஸாமி யவர்களால் ஆதரிக்கப்பெற்று இப்போது செந்தமிழ்ப்பத்திராசிரியராக இருந்துவருகிறார். சங்கநூல்களிலும்வேறுபண்டை நூல்களிலும் இலை மறைகாய்போல் மறைந்து கிடக்கும் அரிய சரித்திரங்கள் பலவற்றை ஆராய்ந்து தக்க ஆதாரங்களுடன் எழுதி வெளியிட்டு வருகின்றனர். இத்தனிச்செய்யுட்சிந்தாமணிக்கு முகவுரை யெழுதியிருப்பவரும் இவரே.இப்போது 35 வயசிருக்கலாம்.

புதுக்கோட்டை மகாராஜா அவர்கள் மதுரைத்தமிழ்ச்சங்கத்துக்கு நன்கொடையளித்தபோது பாடியது.

* முற்காத்த மூவேந்தர் முற்றியபின் தமிழ்மடந்தை
எற்காத்தற் குரியவர்யா ரென்றுதளர் காலத்தே
தற்காத்தற் குரிமைபெறு தமிழ்வேந்தன் றானென்றே
மற்காத்த புயங்காட்டிப் புதுவையர்கோன் வந்தனனால். (க)

* நீயேசெந் தமிழ்வேந்த னின்னதே தமிழாட்சி
தாயேபோ லிச்சங்கந் தாங்கல்கட னென்றெழுதி
மீயேகும் பாற்கரவேள் விண்ணின்று புகழ்கேட்பச்
சேயேபோற் புதுவையர்கோன் றிருத்தகுபொன் னளித்தனனே. ()

பாஸ்கர சேதுபதி மகாராஜா அவர்கள் சிவபதமடைந்தமைக் காற்றாது பாடிய கவிகள்.

* தன்னே ரிலாத தமிழணங்கு செய்தவம்போல்
முன்னே முளைத்தாய் முகவைத் திருநகரில்
மன்னே யுயர்பாற் கரனே மகிபாலா
இன்னே நினையிறந்திங் கேங்கி யிருந்தேமால். (௩)

* மும்மைத் தமிழ்ப்பயிரை மூவேந்தர் தம்பின்னே
செம்மை பெறவளர்த்த சேது பதிமுகிலே
இம்மைக் கினியானே யிங்குன் குடைநிழற்கீழ்
எம்மைத் தனியிருத்தி யெங்குற்றாய் எங்குற்றாய். (௪)

* ஏற்றாரை யெல்லா மிடச்செய் தனையேதாந்
தேற்றார் தமையுந் தெளிவித்தாய் சென்றுன்னைப்
போற்றாதார் புன்மை களைந்தாய்நீ பொல்லாத
கூற்றாரை யென்னோ குறிக்கொண்டு சென்றதுவே. (௫)

* புலையிடிய நின்றொழுகும் பூபாலன் றன்னை
நிலையிடிய நின்றசம னீத்தகன்றா னென்னுஞ்சொல்
தலையிடியக் கேட்டுத் தளர்ந்தே னவன்சென்னி
மலையிடிய வீழாதோ மற்றிக் கொடுமைக்கே. (௬)

* போக்கில்லை வேறு புலவீ ரினிநம்மைக்
காக்கும் பெருமான் கரந்தான் கவியொழித்து
மீக்கொள் வியரரும்ப மெய்வருத்திக் கைசெய்தே
யாக்குமினோ கூழை யதுவே விதியாமால். (௭)

* தரையார் புகழுடைய தார்வேந்தே செல்வத்
துரையே நினையடைந்தார் துக்கந் துடைத்துக்
கரையார் கொடைமடமே கற்றுப் பயின்ற
வரையாத கையை வயங்கெரியு முண்டதுவோ. (௮)

* பண்ணார் தமிழ்வல்ல பாண்டித் துரையெங்கோன்
கண்ணா வளர்த்துவருங் கன்னித் தமிழ்ச்சங்கம்
எண்ணா வுதவியெலா மீந்துமகிழ்ந் தாய்பின்னர்
அண்ணா லதைமறந்து சென்ற தழகேயோ. (௯)

* தானந் திறந்தாய் தவந்திறந்தாய் தண்டாத
ஞானந் திறந்து நலஞ்சிறந்தாய் நாளெல்லாங்
கானந் திறந்தமொழிக் காவலனே நீசெல்ல
வானந் திறந்து வழிகாட்டி நின்றதுவோ. (௧௦)

* கேட்டீரோ வோசை கிளர்பாற் கரன்செம்பி
நாட்டானை விண்ணோர்க ளண்ணி யெதிர்கொண்டு
பாட்டார் மகளிரொடும் பல்லியங்கள் விண்ணதிரக்
கூட்டார நின்றவன்சீர் கூறிக் களித்தனரே. (௧௧)

* ஆக்கம் பெருகி யருள்பெருகி யங்கணனார்
தாக்குமடி நீழற் சுகமுற்றா யாயினுமுன்
கோக்குமரர் நின்று குடியோம்பி வாழ்வதுகண்
டேக்க மறுத்திங் கிருப்போம் இறையோனே. (௧௨)

**சேதுஸம்ஸ்தானம் ஸ்ரீமத் முத்துராமலிங்க சேதுபதி மகாராஜா அவர்கள் விவாககாலத்தில் இயற்றியன.**

* சீராம னலன்று சேதுபெற்றாய் நன்மணத்தும்
மாராம னாற்சேது வாய்ந்தனையால்—ஆராயிற்

சேதுபதிப் பேர்க்குரிய சிராச ராஜாபூ
மாதுபதி போன்மகிழ்ந்து வாழ். (௧௩)

* உருவும் பெருந்திறலு முள்ளன்பு மென்றும்
மருவி மனைட்டியுடன் வாழ்வாய்—பெருவேந்தே
மாமதியு ரோகணிபோல் வள்ளியொடு செவ்வேள்போற்
காமரதி கள்போற் கலந்து. (௧௪)

* குலமேறச் செல்வங் குதித்தேற நாடு
நலமேற நற்கவிகளேற—வலமேறப்
போதுகட்டுந் தார்முத்து ராமலிங்க பூமானீ
சேதுகட்டிக் கொண்டாய் சிறந்து. (௧௫)

* குணம்பெற்ற சேது குலங்கமழ வின்னே
மணம்பெற்றாய் நீயென்பர் வாய்மை—எணம்பெற்ற
தேவைமுத்து ராமலிங்க சேதுபதி மன்றலிடைப்
பூவையடைந் தாய்மகிழ்ந்து பூத்து. (௧௬)

* ஊழியா னென்ன வுயர்சேது மங்கையுடன்
வாழிமுத்து ராமலிங்க மன்னநீ—சூழுங்
கலைவளமு மீசன் கருணை வளமும்
பலவளமுஞ் சேரப் படைத்து. (௧௭)

ஆகச்செய்யுள் ௩௬௭.

---

## வெ. ப. சுப்பிரமணிய முதலியார்.

இவர் திருநெல்வேலி ஜில்லா அம்பாசமுத்திரம் தாலூகா ஆழ்வார்குறிச்சியிலே பழனியப்ப முதலியாருக்கு 1857-ம் வருஷம் ஆகஸ்டு மீ 11உ புத்திரராய்ப்பிறந்து வளர்ந்து தமிழும் இங்கிலீசும் நன்கு கற்று வல்லுநராகி மிருக வைத்திய வித்தியா சாலையிற் பயின்று தற்காலம் ஸீனியர் வெட்டிரினெரி அஸிஸ்டெண்டு என்னும் உத்தியோகத்தி லமர்ந்திருக்கின்றார். நெல்லைச் சிலேடை வெண்பா, கோம்பிவிருத்தம், சுவர்க்கநீக்க முதற்காண்டம், இந்து தேசத்துக் கால்நடைக்காரர் புஸ்தகம் முதலியன இவரியற்றிய நூல்கள். இந்நூல்களை உய்த்துணர்வார்க்கு இவர் பன்னூலாராய்ச்சியின் மிகப்பயின்றுள்ளா ரென்பது நன்கு விளங்கும். இவர திருப்பிடம் தென்காசித்தாலூகா வெள்ளகால்.

திருவாவடுதுறை மஹாசந்நிதானம் ஸ்ரீமத் அம்பலவாண தேசிக சுவாமிகளைத்தரிசித்தபோது கூறியன.

* பன்னருஞ்சீர் மன்னும் பலவாண தேவேயா
னுன்னடியார் கூட்டத் தொருவனு—வன்னைச்

மருங்காக வந்தானேன் மாமேரு வைச்சார்
கருங்காக மும்பொற்கா கம். (க)

* எரிந்தார் பரசுமறி யென்பர வாதி
கரந்தாயே யுஞ்சங் கரநிற்—றெரிந்தேன்
மறுவேடம் பூண்டுருவ மாறியிருந் தானு
மறியாதோ பிள்ளைதா யை. (உ)

* காட்சிக் கெளிமையின்மை காசினியாள் காவலர்க்கே
மாட்சிகுறைக் கும்மம் மறுவொழிப்பான்—சூழ்ச்சியாற்
றேர்ந்தம் பலவாண தேசிகமூர்த் தங்கொண்டிங்
கார்ந்தனன்முக் கட்பகவ னால். (ஙு)

*பாசமதி னீங்கியிட்ட பாக்கியன்யா னயினேன்
பாசமக லாத பசுக்கடாம்—பாச
மியல்பா விலாதனினை யெய்தப் பெறுதற்
கியலாத வேதுவினை னே. (௪)

* பாசமது நீங்கியபின் பார்த்தனனே நின்னையல்லாற்
பாசமுனைக் காணப் பறைந்ததோ—வீச
திருவா வடுதுறைவாழ் தேவ வருளோ
யுருவா வுடையா யுரை. (௫)

* எங்கணுங் கண்ணுனக் கென்பவதற் கேற்பவோர்
பொங்குமக்க மாலை புனைந்தனையா—லங்கதினு
லக்கமணி யுண்மா லணிந்தவக்க மெம்மணியாப்
புக்க ததனைப் புகல். (௬)

* வந்துபணி யன்பர் மலப்பகையை வென்றுவென்று
நந்துபிர தாபமு நற்பதத்தைச்—சந்ததமு
மன்னவர்க்கீந் தாம்புகழு மாடைநீ ருகியுனைத்
துன்னிப் பொதிந்தனசூழ்ந் து. (௭)

* நின்னருளின் வெள்ள நிமிர்ந்து பரந்துனது
பொன்னடியார் தம்மைப் பொதிந்ததனை—யின்னுந்
தெரியாரே நின்னன்பர் செம்மேனி வெண்மை
பரவியது நீற்றுனென் பார். (அ)

* செஞ்சுட ரொன்றே தினம்விளக்கப் போதுமிரா
விஞ்சிருளைக் கப்போதும் வெண்டிங்க—ணெஞ்சவிருண்
மாய்ச்சோட்ட வண்டுறைநகை வாழ்பரம தேசிகத்
தூச்சோதி யொன்றுபோ தும். (௯)

* உன்னடியை யன்றி யுணரா வுணர்வருளுந்
றன்னடியார்க் காகுந் தனமேதல்—கென்னுளத்து
மன்னம் பலவாறு வாழ்த்தியுனைப் போற்றுதற்கே
யின்னம பலவாணனீ. (௧௦)

* உள்ள முதலினொடு சூழியஞ்சேர்ப் பான்புக்கு
விள்ளு முதலிழந்தோன் வீழ்வே—வள்ளலே
உன்னை யடைந்திடுவா னுன்பா லடைந்தவியா
னென்னையிழந் தேனிஃதென னே. (௧௧)

* காணவிய லாதநீ காணவந்தாய் வந்துமியுங்
காணலா காதேனிற் கண்டனனல்—நாணிலே
னேவவிய லாவினையு மேவிவிட்ட தின்கவிஞர்
நாவில்வா ழம்பலவா ணே. (௧௨)

* அவனி யிடைநின் னறக்கருணை நோக்கு
நவனு மறக்கருணை நோக்குந்—தவஞான
மீந்துய்ந்த நீக்குமென்ப யானறிய வின்றிறத்தும்
போந்தவைநி கழ்த்தாய் புரிந்து. (௧௩)

* அம்பல வாணு வளக்கப் படாதபொரு
ளிம்பரிரண் டேயவைதா மேவையெனி—னம்ப
வொருபொரு ளின்னருண்மற் றோர்பொருளோ நாயே
னரிய பவமாகு மால். (௧௪)

* என்றுமா ருவுமையா ளின்முலைசங் கேய்த்தவடு
வின்றுநின்பாற் காணு வியல்பினுன்—மன்றவவை
மன்னு வடுவாய் மறைந்தனவென் றேபுகல்வாய்
என்னு வடுதுறைக்கோ வே. (௧௫)

* வெயில்வெருவித் தற்சேர்ந்தார் மீட்டுமதே வேட்கச்
செயுந்தண் பொழிற்றுறைசைச் சீரூர்—பயில்கல்விச்
செம்பல வாணர் தினமும் புகழுமுய
ரம்பல வாண னகம். (௧௬)

* ஈச னிணையிறைஞ்சும் யாமயக்க மெய்தியிடப்
பூசனை நீயும் புரிவதுதான்—மாசி
லுமையைப் பிரிந்துமுன் யோக முழந்த
தெமைநினைப் பூட்டியிடு மே. (௧௭)

* பொய்யன்று மெய்யாம் புதுமையொன்று கேணினது
கையிற் சிறந்ததுகால் கையிந்த—வையகத்துச்
செல்வமே யீந்திடுமாற் செய்யகா லோமுத்திச்
செல்வ மளிக்குமினி தே. (௧௮)

* மலமியல்பா நீங்குமருள் வாரிநினைச் சார்ந்தோர்
மலமொழிவார் நீழலென்று மாறுப்—பலபொருளும்
வாரியு ளேகலந்த மாத்திரமே தந்நீழல்
பூரணமா நீங்கிடுமா போல். (௧௯)

* உள்ளதில்ல தாகவில்ல துள்ளதாச் செய்யவல்ல
வள்ளனீ யென்னுமுண்மை மற்றறிந்தேன்—விள்ளு
முருவமத னுக்குருவ மோப்பியுரு வாவுன்
னருவமத னைச்செய்த தால். (௨௦)

* சென்னிகங் கைக்குமுகஞ் செங்கதிர் திங்களொடு
வன்னிக்கும் வாமமலை மாதுக்கும்—நன்னர்செங்கை
மானுக்கு மீந்தபெரு மானேபா தத்தினைநா
யேனுக் குதவா யினி. (௨௧)

* சிந்தைக் கினிது செவிக்கினிது வாய்க்கினிது
வந்தித் திடவினிது மற்றெம்மைப்—பந்தித்த
வெம்பல வாணவமும் வெய்தொழித்து வீடளிக்கு
மம்பல வாண னடி. (௨௨)

* அம்பலவா ணாவுன் னடிபணியாச் சென்னியின்றுன்
பைம்புகழ்கூ றாதநாப் பாரினின்று—நம்பியுனை
யெண்ணாத நெஞ்சின்று னின்னருட்கண் ணோக்கிற்றீ
ரொண்ணாத பாவமுமின் று. (௨௩)

* சாதகம ழைத்துளியைச் சக்கரவா கம்வெயிலைத்
தீதில்சகோ ரஞ்சந் திரிகையை—யாதரவா

வுண்டெய்யும் வண்டுறைசை யோங்கீச நின்னருளே
கொண்டெய்யு மன்பர் குழாம். (௨௪)

பெருங்குளத்துப் பண்டாரச்சந்நிதிகளைத்தரிசித்து மடத்தில் அசனம் அயின்றபோது கூறியது.

* நன்கருட னையனத்தை நாடுநர்க்கீ வோனெனக்கு
நன்கருட னையனத்தை நல்கினான்—னங்கி
தருங்குளத்தி ருக்குஞ் சடையுங் கரந்து
பெருங்குளத்தி ருக்கும் பிரான். (௨௫)

சேற்றூர்ச் சம்ஸ்தான வித்துவான் மு. ரா. அருணாசலக் கவிராயரவர்களுக்கு எழுதியவை.

* நிசந்தவரு ணாசலாச் சருகெனமெய் மெலிபவிள நீரும் பாலுங்
கசந்தவரு ணாசலா கையெனவறள் மயற்றகையைக் கையிற் சங்கார்
பசந்தவரு ணாசலா மிதழமுதாற் றீர்த்தருட்கண் பாரென் றேரூம்
வசந்தவரு ணாசலா வெனதிதய மகலாப்பா வாணர் கோவே. (௨௬)

* சீமந்த முனக்கெனக்கண் டுவகைமிக வெமைமறந்த செயலி னாலே, நாமந்த முகூர்த்தம்வர வில்லையென்றாய் கற்பனையே ஞாலக் கோட்டம், போமென்றாய்த் தவனிருப்ப நீயுறின்மீண் டுங்கோடும் புவியென் றுன்னி, மாமன்று ளாடிதடுத் தமையின்வர வில்லையிது வாய்மை யாமால். (௨௭)

* கல்லுருகு மின்சொற் கனக சபைவேட்கு
நல்ல நவரதவி நாயகற்கும்—புல்லியவென்
வந்தனமு மன்பும் வழங்குவாய் மாரனைநேர்
சந்த வருணா சலா. (௨௮)

குன்னூர்க் குமாரசுவாமிமுதலியாரவர்களுக்காகத்திருநெல்வேலிஜில்லா கோர்ட்டு வக்கீல் பழனியாண்டிமுதலியாருக் கெழுதியது.

* தருவித் துவக்குமர சாமிவிருப் பத்தைத்
தருவித் துவக்குமர சாமிப்—பெருமைகொள்வா
யின்பழனி யாண்டினுநன் கெய்திடமென் றெய்துமொழித்
தென்பழனி யாண்டிவிரைந் தே. (௨௯)

பூகம்பம் உண்டானபோது உமெலப்பேட்டையிலிருந்து பெருங்குளம் மாதவைய்யரவர்களுக்குவிடுத்த கடிதத்தில் எழுதியவை.

* யானை முதுகிருப்பார் யானைமதங் கொண்டெரறி
மேனி குலுக்கவஞ்சி மெய்ந்நடுங்கள்—மானப்பூ

கம்பத்தா லிங்குள்ளார் கம்பித் துறுநயரங்
கம்பற்கே சொல்லரிது காண். (௩௦)

* இடரெலாந் திரண்டாலு மொவ்வாத பூகம்ப மெய்தகான்
மென், குடரெலாங் குழம்பமனம் பதைக்கவுட னடுங்காக் குழற
மாக்க, ருடரெலா முயிரிலா வெனவுற்று ரவர்நிலைமை யுரைப்பார்க்
குச்சொற், றொடரெலா முதவிலுஞ்சொல் லொண்ணுதென் ருல்யா
னென் சொல்லு கேனே. (௩௧)

திருநெல்வேலியில்வசித்தஇராஜவல்லிபுரம் முத்துசாமி
பிள்ளையவர்கட்கெழுதியது.

*பெருந்திக் கடிதக் கைந்திரண்டு பேரி யனங்க னிகரிடையார்
பிறங்குங் கரத்தி லிருந்துபடிப் பிக்குமவர்வாய் கோவையென்று
பொருந்திக் கடிதத் தையேமீ பூங்கற் பகமா மணிசுரபி
பொலிபொன் னுடு மழக்கா று பூணு நெல்லை மாநகரில்
மருந்திக் கடிதத் தையுறச்செய் மதுர வசன மடமாதர்
மகிழு மரிய திருவுருவ மாரன் முத்து சாமிமன்பாற்
றிருந்திக் கடிதத் தைச்செவ்வி தெரிந்தீந் தன்னேன் றிருக்கரத்தாற்
றீட்டு மரிய திருமுகத்தைச் சிரமேற் கொண்டு திரும்புகவே.

குன்னூர்க் குமாரசுவாமி முதலியாரவர்களுக்கு எழுதியது.

* குமாரசுவா மித்திரயத் தெழுமூன்றி லொன்றும்பொய் கூ
றாய் தேன்மொய்க், குமாரசுவா மித்திரன்முன் புவியுற்றோ னென
னோற்போய் குதித்து வானெங், குமாரசுவா மித்திரருக் குயிர்நிகர்
வோ யெனப்புகழக் குன்னூர் வாழுங், குமாரசுவா மித்திரவிற் பன்
னவொரு விண்ணப்பங் கூறக் கேண்மோ. (௩௩)

பரத்தைய ரியல்புரைத்தது.

* கோவியர் நிறையை மாயவனழித்த கொடுமையி னுலும்வே
ய் வனத்து, மேவிய மகளிர் நெறியினை யீசன் விலக்குதீ மையினுங்
கொ லன்னுர், தேவிய ரென்ன வவர்கைமங் கலநாண் டிருவுறப் பூண்
டெழு தாத, வோவிய நிகர்த்த வேசையர் கற்பை யுலகினர் தினமழி
ப் பதுவே. (௩௪)

மன்மத னியல்புரைத்தது.

* கார்த்திகைச் சேரிலிராக் காலமிராக் காலமாம்
வாய்ந்தநிலாக் காலமு மற்றதுவாங்—கார்த்திகையிற்

நங்கைபுல்லா நாளின்மறு நாட்பகலி ராத்திரியாம்
அங்கசன்செய் யற்புதமீ தால். (௩௫)

பின்வருவன சமஸ்கிருத சுலோகங்களின் மொழிபெயர்ப்பு.

* எங்குமென் றுஞ் சேரநின்சீ ரென்னுமுழுத் திங்களிலாய்ப்
பொங்கு திதியனைத்தும் பூரணையாத்—தங்குவித்த
தேகா தசியொன் றுமென்மனைநீங் காதுள தம்
தேகா றருள்புரிதி யே. (௩௬)

* நேச னொருவன்வந்து நேயபர தேயமதி
லாசையிற்பொன் றேடுகின்ற யாங்குனிலிற்—பேசுமொரு
பொற்கொடிமுன் றிற்கண்முத்தம் போதவுகுக் கின்றதென்றான்
விற்கொடிமன் னேதா விடை. (௩௭)

ஆங்கிலவாணர் கருத்தை அனுசரித்துக் கூறியது.

* முருந்துபுரையவிளங்கெயிற் றுமுழுமாமதியமுகத்தணங்கே
தெரிந்தபொருள்களைவைகளினுஞ்சிறந்தோன்மனுடனவனுள்ளும்
விரிந்துசுருங்குமியலறிவேமேலாமதுவுமுயர்பயிற்சி
பொருந்தப்பெற் றுநல்லொழுக்கம்பூண்டோன்புருடோத்தமனே. (௩௮)

இக்கவியிற் குறித்தவர்களுடன் கருவைநல்லூருக்குச்
சென்றபோது கூறியது.

* கருவையா னகமிவர்ந்தீர் தொலைப்பிரெனு நெல்லையப்ப கவி
ஞர் கோமான், கருவையா னகப்பணக்கண் ணார்மகிழ்முத் துச்சாமி
காமா நீதி, கருவையா னகமுறழ்தோ ளிவற்கெனுங்கு மரசாமி
கடையனேன்றென், கருவையா னகமொலிகோ யிலைச்சுப்பி ரமண்
யனெடுங் கண்டோ மன்னு. (௩௯)

வீரசிகாமணியென்னுமூர்க்குச் சென்றபோது கூறியது.

* மாரசி காமகிழ் வெய்திட நாமின் று வந்தபதி
கூரசி காநிகர் கட்குழ லார்புரி கூத்தெனச்சிங்
காரசி காவள மாநட னஞ்செய் கவின்குலவும்
வீரசி காமணி யாமுத்து சாமி விதரணனே. (௪௦)

மதுரை.

* மாசங்க ராசிவசி வாவிமலி கூடற்பூ
மாசங்க ராசிவசி வாவிமலி—மாசங்க

மத்தையன் மாலகல்வான் வாய்மணிற்றே டும்பரவா
மத்தையன் மாலகல்வான் வா. (சக)

எட்டயபுரம் காசிவிசுவநாதபிள்ளையவர்களின் முதன் மனைவியும்
குழந்தையு மிறந்தபோ தெழுதியது.

* நீடு புதுவெள்ள நின்றதண் ணீரையுங்கொண்
டோடி யொழிர்தெதென்ப தொக்குமோ—பீடுமிகச்
சார்கா சிவிசுவநா தன்மதலே தாயினொடும்
வார்கா சினியகன்ற மை. (சஉ)

ஆகச்செய்யுள் ௩௪௮௬.

---

## பால்வண்ணமுதலியார்.

இவர் திருநெல்வேலியைச்சார்ந்த பேட்டையென்னுமூரில் தொண்டை மண்டல கொண்டைகட்டி வேளாளர்குலத்தில் பா. ஷண்முகசுந்தர முதலியார் தவப்புதல்வராக கொல்லம் 1042-ம் ஆண்டு பிறந்தவர். ஸ்ரீவைகுண்டத்தில் பிரபலம்பெற்ற தமது மாதுலர்வீட்டிலிருந்து ஆங்கிலங்கற்றும், வித்துவான் ஸ்ரீவைகுண்டபதி கவிராயர்பாற் றமிழ்கற்றுஞ் சின்னாட்கழித்துத் திருநெல்வேலியையே வாசஸ்தானமாகக்கொண்டு அங்கேசரஸ்வதிவிலாசம் என ஓர் புஸ்தகசாலையை ஸ்தாபித்தவர். சித்தாந்த ஆராய்ச்சி பெரிதுடையர். பிரசங்கசக்தியுற்றவர். சாஸ்திரசம்பந்தமான பலநூல்களை வெளியிட்டவர். மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்களிலொருவர். தருக்கசூத்திரம், பிரசங்கதீபிகை, பண்டார மும்மணிக்கோவை, மெய்ஞ்ஞானசாரம், பதிபசுபாசத்தொகையுரை, சித்தாந்தஞானரத்நாவளி என்பன இவரியற்றியவை. இப்போது தருமபுர ஆதீனம் தெக்ஷணம் காறுபாறு ஆக இருந்து தர்ம பரிபாலனஞ்செய்து வருகின்றனர்.

தருமை மஹாசந்நிதானத்தின்மீது இயற்றியன.

* எனக்கருளச் செம்மணியே யிங்குவா வென்ன
வுனக்குரிய தன்மைவிட்டிங் குற்றாய்—நினக்கதனால்
மாணிக்க வாசகப்பேர் வந்ததென்பே னன்பருளங்
காணிக்கை கொண்டவனே காண். (க)

* ஆய்வார் பதிபசு பாசநின் னன்ப ரவரடித்தூள்
தோய்வான் றருமையிற் றுன்னிய வென்றன் றுகளறுப்பான்
சேய்வான் கரங்கொடு நீற்றினை நெற்றியிற் றீட்டலென்னே
ஓய்வார் மனத்துறு மாணிக்க வாசக வொண்சுடரே. (உ)

தமது பரமசற்குருவாகிய சிற்றம்பலநாடிகள்மீது இயற்றியவை.

* சீகாழி வந்தவொரு சிற்றம் பலவனார்
சாகா வருள்கூட்டுந் தற்பரனார்—சோகமெனப்
பாவிக்கச் சொன்னார்தாள் பற்றுமற் பற்றியென்றுஞ்
சேவிப்பே னன்பிற் றிளைத்து. (௯)

* துணையாகி யென்றனக்குத் தோழனுமா யென்று
மிணையில் குருவா யிருந்தா—னணைவதற்குப்
பாவியே னென்னைப் பயப்பயவந் தென்முன்னே
மேவினான் மீண்டும் விரைந்து. (௰)

ஸ்ரீ முருகதாச சுவாமிகள் பரிபூரணமானபோது சொன்னகவி.

* நெல்லைதனிற் றவப்புலமை நிரம்ப வாய்ந்து
நீடாமத் தாரதனி னிலவி வாழ்ந்தே
யெல்லையிலா நூலியற்றி மார்பில் வேலோ
டெழிலாருங் கௌமாரத் திசைந்து பூவில்
வெல்லலருங் கவிவென்று நீதான் விண்ணில்
வெற்றிகொளப் போயினையோ வெறு வேலோன்
சொல்லைறுந் திருவடிக்கீழ்த் தூங்க வென்றோ
சொன்முருக தாசவள்ளற் றூய கோவே. (௧௧)

ஆகச்செய்யுள் ௯௪௬௩.

---

## வேம்பத்தூர்ப் பிச்சுபாரதிகள்.

இவர் மதுரைஜில்லா வேம்பத்தூர் வித்துவான்களில் சிறந்தவர். சிலேடைவெண்பாக்கள் வெகு விரைவில் கூறுவர். பாஸ்கரசேதுபதி மகாராஜா அவர்களால் நன்கு அபிமானிக்கப்பெற்றுத் தக்க சன்மானமும் பெற்றவர். சபையில் நன்கு பேசும் வாய்வல்லபமு முற்றவர். இப்போதிவர்க்கு 55-வயதிருக்கலாம்.

முறையூர் ஸ்ரீமாந். பழ. சி. சண்முகஞ்செட்டியாரவர்கள் மீது கூறியன.

* வில்வ மெடுக்குங்கை வேண்டியபொன் னீயுங்கை
செல்வத் திருப்பணியே செய்யுங்கை—நெல்வளரும்
மாவளஞ்சேர் தென்முறைசை மன்னும் வணிககுல
காவலனுஞ் சண்முகன்செங் கை. (௧)

வாயிற் படியைப்பற்றி.

* சிந்தைக் கிசைந்தபடி செந்தமிழ்க்கி சின்றபடி
வந்தவருக் கன்னம் வழங்குபடி—சந்ததமும்
சீர்த்தி முறைநைச் செயசண் முகவணிக
பார்த்திபன்றன் வாயிற் படி. (௨)

தமது வெட்டைப்பிடிப்புக்கு மருந்து கொடுத்துத்
தீர்த்ததற்காகச்சொன்னது.

* விட்டுக் கொடிச்சாற்றை வேண்டும் முறைநைசதனிற்
கட்டுக் கொடிச்சாற்றைக் கங்கையிலிட்—டட்டினமாம்
வெட்டைப் பிடிப்பை விடுவித்தான் சின்னயன்சேய்
சுட்டமுகன் சண்முகயோ கன்.  (௩)

ஷை பிரபு அவர்கள் வேண்டிய வண்ணம் சோமசுந்தரக்கடவுளுக்கும்
சந்திரனுக்கும் பாடிய சிலேடை வெண்பா.

* அம்மலைவாய் மேவுகையா லானவர வேகொளலாற்
செம்மையுறு மானிடஞ்சேர் செய்கையால்—வெம்மையுறும்
மாமலையேயென்றேன் மருக னுயர்கிரியிற்
சோமனையே சந்திரனைச் சொல், (௪)

ஷையார் மதுரைக்கு வந்திருக்கும்போது திருப்பரங்குன்றத்தில் பாவாடைத்
தெரிசனஞ் செய்யுங்காலத் திற் சொல்லிய வெண்பா.

* பாவாடை கண்டுவக்கும் பாண்டியனுஞ் சண்முகவேள்
பாவாடை தந்தான் பழசிதென்றேன்—பூவாடை
அன்னகலை கற்றான் அறிந்தாய்வி லாசமெனச்
சொன்னவனே தந்தான் சுகம். (௫)

மற்றோரமையம் சொல்லிய வெண்பாக்கள்.

* புல்லென்றேன் புஞ்சைக்குப் போவென்றான் சேரென்றேன்
செல்லு கடைக்கெனவே செப்பினான்—மெல்ல
அணையென்றேன் பாணற் கறிவியென்றான் என்னே
பணைபுயனுஞ் சண்முகபூ பன். (௬)

* போட்டவனம் பால்குமட்டிப் பூவைவெறுத் துச்சோலை
வீட்டவனம் பாற்கொங்கை விம்மினாள்—வாட்டமுற்றே

பாரபுயச் சண்முகத்தைப் பாண்டியனென் றேயறிந்தும்
சேரவா வென்றனளீ தென். (எ)

மற்றோரமையம் மீனாட்சிகோவிலுக்குத் தெரிசனைக்குப் போயிருந்த
காலத்தில் பிரபு அவர்கள் வேண்டியபடி அம்பிகைக்கும் கலியாண
மண்டபத்துக்கும் சிலேடையாகக் கூறியது.

* தாணுவினை மேவுகையாற் றங்கவனை போடுதலால்
சேணினுயர் கற்பகஞ்சேர் சீர்த்தியால்—காணிலஞ்சேர்
கரவையிகர் சண்முகவேள் கார்க்கிரியிற் றென்னவனீ
பாவைகலி யாணமண்ட பம். (அ)

மற்றோரமையம் செய்த வெண்பாக்கள்.

* மூடப் பயல்கள் முகாலோப னம்புரியாச்
சேடனெனுஞ் சண்முகமால் சேரவந்தான்—கூடவந்து
பற்றிரவிற் பாடு படுத்தியது போதுமாப்
புத்திரவிற் போட்டோடிப் போ. (கூ)

* சங்கையின்றி யேபகலிற் சார்வா ரையும்விலக்கிச்
செங்கையிட்டு மேற்சரசஞ் செய்யாதே—துங்கவிஞ்சைப்
பாடலிலே மோகமுறும் பாரபுயச் சண்முகவேள்
கூடலிலே வைகை குணம். (க0)

ஒரு கேஸ் அனுகூலமாகவேண்டு மெனப்பாடிய வெண்பா.

* சீர்பெற்ற பார்தழைக்கச் செங்கோல் செலுத்துதலிற்
பேர்பெற்ற மீனும் பிகைமானே—ஏர்பெற்ற
கெண்ணியஞ்சே ரெங்கள்பாற் கேஸனுகூ லஞ்செய்வாய்
எண்ணியசிந் தைக்கிசைதா யே. (கக)

மற்றோரமையம் இயற்றிய வெண்பா.

* வாயமுதங் காட்டும் வளர்கை குடைகாட்டும்
ஆயதிரு மேனி யணிகாட்டும்—தூயபுகழ்
புண்ணியஞ்சேர் தோங்கிவளர் பொற்பார் முறையூரிற்
கெண்ணியஞ்சேர் சண்முகத்துக் கே. (கஉ)

கூடலழகர் தெரிசனத்துக்குப் போயிருக்குங்காலத்தில் ஷை அழகர்
பேரிற் பாடுமெனப் பாடியன.

* கூட லழகா குணமிகுந்த ஆழ்வார்கள்
பாடலழ காகுறிய பண்பழகா—ஆடல்புரி

செங்கமல மாதுபுணர் சீரழகா பொன்கிருபை
தங்குதற்கு நீயே சரண். (௧௩)

* ஆழுழபர் பாற்கடலி லாதிசே டன்புகழ
வாழுழபர் மான்மதுர வல்லியே—ஊழ்வினையை
நீக்குகைக்குஞ் சண்முகத்தி னீடு மரண்மனையைக்
காக்குகைக்கு நீயே கதி. (௧௪)

தமது கடனைத்தீர்க்கவேண்டுமெனப்பாடிய
நிலைமண்டிலவாசிரியப்பா.

* சீர்மலி கற்பகத் தினைக்கொடை யால்வெலும்
ஏர்மலி செங்கரத் திரவியு மதியும்
நாணுமுற் றோட நயந்திகழ் விரலில்
பாணலஞ் சேரும் வயிரமோ திரமும்
நாட்டினை மயக்கு நவமணிப் பிரபை
காட்டிய வுருத்திராக் கப்பணி யழகும்
கவினுரை நிதமயங் காதுகாப் பேனெனச்
செவிதாங் கையிலொளி சேர்ந்தகங் கணமும்
கடலிடைத் துயில்கண் காம்பர தாரியும்
உடலிடைச் சுற்று வுளத்தவாக் கொள்ளும்
வத்திர மிலங்க வளமினுள் வீடென
நித்தியம் வசிக்கும் நிறைதரு மார்பினும்
வெற்றிசேர் புயத்தினும் விளங்கிய பனிநீர்
முற்றும்விட் டரைத்த முழுமணச் சந்தனம்
புழுகுசவ் வாது புனைந்தயோத் தியில்வரு
மனுகுல ரெகுபதி மானப் பீட்டனில்
பாவலர் வாழ்த்தப் பவனிகொள் தனத
நாவலர் தீவினி னுவல ரெவர்க்கும்
அன்னமு மாடையு மளித்திடுஞ் சண்முக
மன்னவ வென்கடன் மாற்றலுன் கடனே. (௧௫)

சைத்திரோற்சவ காலத்தில் திருக்கலியாணத்தன்று சோமசுந்தரக்
கடவுளுக்கு பிரபு அவர்கள் சிறப்புச்செய்தபோது பாடிய வெண்பா.

* ஆலவா யானை யமுதவா யானெனவே
சீலமுள்ள மான்களெல்லாஞ் செப்பவே—கோலமிகும்

ஆவலுடனேபலங்க ளத்தனையு நீர்வார்த்தான்
பாவலனுஞ் சண்முகபூ பன். (கசு)

மற்றோரமையம் ஊதியம் வேண்டியுரைத்தது.

* பணவரவைப் புற்றின் பணவரவென் றெண்ணுங்
குணவரிடம் யான்போய்க் குறுகேன்—பணவரவைக்
கண்முகந்துண் ணப்பால் கடைந்தெடுத்த துங்கனெனும்
சண்முகபூ பாவா தரி. (கள)

பிட்டில் கச்சேரி நடக்கும்போது கூறியது.

* கானத் தினைக்கனிவாய்க் கண்டுவந் தான்பேரன்
கானத் தினைக்கனிவாய்க் கண்டுவந்தான்—வானத்தின்
இந்திரற்கு மெட்டா திசைவிஞ்சை யர்க்குமெட்டா
சுந்தரவிக் கான சுகம். (கஅ)

* அன்னதா தாவினிடத் தண்ணலே நித்தமிடும்
அன்னதா தாவெனக்கிங் காரென்றேன்—என்னதா
தாவெனினு மேயீயத் தக்கவனீ யேயென்றான்
பாவெழில்சேர் சண்முகபூ பா. (கசு)

பாஸ்கர சேதுபதி மகாராஜா அவர்கள் சிவபதமுற்றபோது கூறியன.

* மையினையுஞ் சிந்தா மணியினையும் வென்றகொடைக்
கையினையும் வாய்ப்பிரசங் கத்தினையும்—துய்யபுகழ்
நின்றைக்கா ளத்தி நிகர்பாற் கரபூபா
என்றைக்குக் காண்போ மினி. (உ0)

* பார்புலம்ப நீயாள் பதிபுலம்ப வீசனடி
யார்புலம்ப நீவா னடைந்தனையே—கூர்புலம்பு
மன்னு·தனுக்கை மணிப்பாற் கரபூபா
என்னகுற்றஞ் செய்தோ மிசை. (உக)

ஆகச்செய்யுள் கூ௧கூ.

---

## அ. சண்முகம் பிள்ளை.

இவர் மதுரையைச் சேர்ந்த சோழவந்தானில் வேளாளர் குலத்தில் அரசப்ப பிள்ளையவர்களின் முதற் புதல்வர். இலக்கிய இலக்கண ஆராய்ச்சி பெரிதுடையவர். சோதிடத்திலும் மாதிடத்தினர். பலவருஷம் மதுரை சேதுபதி ஐஸ்கூல் தமிழ்ப்பண்டிதராகவும் சிலவருஷம் மதுரைத்தமிழ்ச்சங்

கம்செந்தமிழ்க் கலாசாலைப் போதகராகவும்இருந்து இப்போதுச்சுகமே வசிக்கின்றார். மிக நுணுகிய ஆராய்ச்சியுடையவர். கற்றவர்க்கே வியப்புறுத்துவனவான ஏகபாதநூற்றந்தாதி, மாலைமாற்றுமாலை, இவற்றுடன் பஞ்சதந்திர வெண்பா, இன்னிசையிருநூறு, அந்தாதித்தொடைநிகண்டு முதலிய நூல்களும், தொல்காப்பியப்பாயிரவிருத்தியுரையும் இயற்றியவர். திருக்குறளுட் பலவற்றுக்கு மிகச் சிறந்த புத்துரை கூறுவர். செந்தமிழிலும் விவேகபாநுவிலும் பல அரிய விஷயதானஞ்செய்பவர். இலக்கண ஆராய்ச்சியிலேயே தமது காலத்தைப் போக்கி மகிழ்கின்றவர். இப்போது 40 வயசிருக்கலாம்.

குறம்.

* கூட்டு வாரணங் கேதன மாக்கொண்டார்
கூட்டு வாரணங் கேதன மாக்கொண்டார்
நாட்டு நீதங் குறத்தியா னத்தையே
நாட்டு நீதங் குறத்தியா னத்தையே. (க)

காசிக்கு மூசிக்குஞ் சிலேடை.

* என்றுமுலை யானீட்ட மெய்தலா னூல்புகலாற்
குன்றாத பாசமது கோடலால்—நன்றாய
காலிருப்பா னுக்கமிகக் காணலா லங்கங்கை
சேரலினா லூசியுங்கா சிக்கு. (உ)

* மயக்கமதி கந்தாவி மாயாது மாதர்
முயக்கமதி கந்தாவி மோதா—துயக்கொண்
டியக்கமதி கந்தா விணையடியை யேத்தி
வியக்கமதி கந்தா விளக்கு. (ங)

* என்பரிவை நீக்கு மிதயதட மேற்பூக்கு
மென்பரிவை யாக்கு மெனைக்காக்கும்—வன்பரிய
வெம்பந்தம் போக்கும் விமலர் திருஞான
சம்பந்தர் பூங்கமலத் தாள். (ச)

* ஊமனைமுன் சங்கத் துயர்புலவ னென்றுரைத்தாய்
வாமச் செவியிலியை மாபுலவ—னாமென்று
பூண்டாய் செவிவாய் பொருந்துமெனைக் கைவிட்டால்
ஈண்டுபழி யார்க்கதனை யெண். (ரு)

* கற்கொண் டெறிந்தாரைக் காலான் மிதித்தாரைச்
சொற்கொண்டு நிந்தித்த அந்தரரை—முற்கொண்டாய்
மாண்ட தருமதுரை மன்னு வெனைமறந்தாய்
நீண்ட தருமதுரை நீ. (அ)

* நடுவனார் கண்ணுவரோ நண்ணினுமென் னம்மைத்
தொடுவரோ தொட்டாலுஞ் சும்மா—விடுவரோ
நஞ்சமலர் கண்டத்து நாரியுமை பாகனடிக்
கஞ்சமலர் நெஞ்சமுறக் கண்டு. (எ)

ஐம்பொருட் சிலேடை.

* சீதவனை சஞ்சரங்கள் செல்வர்முன்றி லீசரமண்
மாதங்க மேவு மதுரையின்சீ—ரோதுநெஞ்சே
கல்லானை யுங்கரும்பு தின்னுமெனக் கைகொள்ளான்
செல்லானை யுங்கரும்புத் தேள். (அ)

ஆகச்செய்யுள் ௩௰௨௩.

## வயி. நாக. ராம. இராமநாதன் செட்டியார்.

இவர் மதுரை ஜில்லா புதூரில் நாட்டுக்கோட்டை நகரத்தார் குலத்தி லுதித்து மதுரையையே வாசஸ்தானமாகக்கொண்டு வர்த்தகத்தாலும் குணத்தாலும் கல்வியாலும் நன்கு மதிப்புற்றிருக்கிறவர். மதுரை தேவஸ்தான கமிட்டியாரிலொருவர். மதுரையமகவந்தாதி முதலிய சில நூல்களியற்றியுள்ளார். இப்போது 45-வயசிருக்கலாம்.

முறையூர் ஸ்ரீமாந். பழ. சி. சண்முகஞ்செட்டியார் அவர்கள் முதுகில் கட்டி புறப்பட்டிருந்தபோது ஷையார்க் கெழுதி யனுப்பிய கடிதக்கவிகள்.

* விண்முகமெல் லாம்புகழும் வியாக் கொடைபடைத்த
சண்முகநண் பாநின் றனியுடம்பிற்—புண்முகமாய்
ஓர்சிரங்கு தோன்றி யுறுத்தியதிந் நாள்காறும்
ஆர்சொலவுங் கேட்டேன் அலன். (க)

* அங்கயற்கண் ணம்மை யணையுமண வாளன்அடிப்
பங்கயத்தை யர்ச்சனைசெய் பான்மையால்—துங்கமிகு
சாந்துபட்டர் சொல்லச் சௌக்கியங்கேட் டுக்களித்தேன்
சந்தவருக் குண்டோ இடர். (உ)

* இன்னமுமெய் மாலவா யீசன் கருணையினாற்
பன்ன வருஞ்சகல பாக்கியமும்—நன்னலமும்
ஆருகமே ருக்கிணையாய் அல்லல்வரி னுங்கசித்துப்
போகுககா ணதுபனி போல். (௩)

ஆகச்செய்யுள் ௩௫௨௬.

---

## தெய்வசிகாமணியைய்யர்.

பாண்டிச்சிவஸ்தலம் பதினான்கனுளொன்றான பிரான்மலையில் அந்தணர் குலத்திற்றோன்றித் திருவாவடுதுறை ஆதீனத்திற் கல்விபயின்று இப்போது சிவகங்கை ஐஸ்கூலில் தமிழ்ப் பண்டிதராயிருக்கின்றார். மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்களி லொருவர். சாதுரியமாகப் பேசும் வல்லவர். இப்போது 50-வயசிருக்கலாம்.

தாம் சென்னைக்குப்போகுங்கால் முறையூர் ஸ்ரீமாந். பழ. சி. சண்முகஞ் செட்டியாரவர்கள் சமுகத்திற் கூறிய கவிகள்.

* சீர்பூத்த முறைநைசநகர் செழித்தெழிலால் வளர்ந்தோங்கச் செலவத்தெங்கள், பேர்பூத்த சண்முகமா லெனும்வணிக குலேந்திரமன் பெரிதும் வாழ்க, ஏர்பூத்த வளங்களெலா மினிதோங்க வெளியர்மனத் தின்ப நல்கும், நார்பூத்த செல்வமிக நயந்தோங்க திருவருளு நல்க மாதோ. (௧)

* இவ்வருடஞ் சென்றதுலா மாதமிரு பானைன்பா னிலைபைந்த தேதி, கவ்வையிலென் னோர்புதல்விக் குற்றவின்ப சுகபோக கலியாணந்தான், செவ்வையுற நடந்ததற்கீயவல்ல சீர்ப்பொருளெஞ் சீர்சா லூராம், அவ்வையிலாம் பிரான்மலையி லமர்ந்துளமற் றவைகளெலா மமையச் சேர்த்தே. (௨)

* மணப்பாரை வழியாக மாயூரஞ் சேர்ந்ததற்பின் மணிமன்றத்துட், குணப்பாவை புலிபாம்பு காணநடங் குயிற்றுபதங் கும்பிட் டேத்தி, நிணக்கோட்டை பெற்றபெறும் பேறெய்திச் சென்னைபுக்கு நிமல போகத், துணக்கூட்டு மணிபிசண்டின் பிரசங்கா நந்தரச முளங்கொண் டப்பால். (௩)

* உற்றநண்பா ரிடஞ்சேர நினைக்குமென துளக்கருத்தை யுற்றோர்க் கீயும், நற்றவத்தால் வந்தபெரும் பொருளான நினையலதார்

நடத்த வல்லார், பெற்றபெருஞ் சம்பத்தாய் பக்ஷம்வைப்பா யிரு பதுமப் பெண்மார் வாழும்,கற்றபெற்ற கல்விசெல்வக் கவின்வாய்ந்த கனதனசம் பன்ன கன்ன. (௭)

* நாளைநாள் செவ்வாய் வடதிசை முக்கூர் நாட்டிய புகனுமவ் வாறும், வேளையின் றேதா னல்லதா மதனல் விருப்புட னிப்பொழு தேயான், பாளைவாய் மதுவின் மணமுறு முனைறஙைப் பார்த்திட போய்வரப் பணிப்பாய், காளையே நிகர்த்த கட்டழ கமைந்த கண்டிரு மினியசொற் குணனே. (௮)

ஆகச்செய்யுள் ௩௭௬.

## அஷ்டாவதானம் மீனாக்ஷிசுந்தரக்கவிராயர்.

இவர் மதுரைஜில்லா பேரையூர் வித்துவான் பொன்னுசெட்டியாரவர் கள் புதல்வர். தக்க பருவத்தே தண்டமிழுணர்ந்து அஷ்டாவதானியாகிப் பல விடங்களிலும் அதை நடாத்தி வருகின்றார். இப்போதிவர்க்கு 35-வய சிருக்கலாம்.

ஷையார் முறையூர் ஸ்ரீமாந் பழ. சி. சண்முகஞ்செட்டியாரவர்கள் சமுகத்தில் அஷ்டாவதானம் செய்தபோது கூறிய கவிகள்.

முருகர்மீது குதிரையடி வெண்பா.

* ஞெண்டுலவு பண்ணை நிலவிய சோலைமலைத்
தண்டமிழ்தேர் சண்முகனா தாவென்றே—தொண்டுறவே
செங்கமல மாது திகழு மிசைசேரும்
வெங்கலியெ லாந்தவிரு மே. (௧)

முறையூர் வரத விநாயகர் பேரில் கலித்துறை.

* சௌவிய சாசி பெறவே பகழி தனையளித்த
அவ்வரன் மைந்தன் முறையூ ரதனி லமைந்துவளர்
செவ்வி திகழும் வரத விநாயகன் சேவடியைக்
கௌவையி லாது பணிவார்க்கு நன்மை கதித்திடுமே. (௨)

சூரைநகர் முத்தையனார் பேரில் கலிவிருத்தம்.

* நொய்ய வெவ்வினை நூறி யனுதினந்
துய்ய முத்தமி ழோங்கத் துணிந்தருள்
செய்ய சூரை நகரிற் செறிந்தமுத்
தைய னொரனு மற்புத மூர்த்தியே. (௩)

திருப்புல்லாணிப் பத்மாசனை பேரில் கலித்துறை.

* தூங்க மிருந்த தமிழோர் விரும்பித் தொழும்பதத்தாள்
கொங்குல வுந்திருப் புல்லாணி தன்னிற் குலவுகின்ற
எங்கள்பத் மாசனை யம்மைபொற் பாத மிதயமென்னும்
பங்கய மீதினில் வைத்தால் வருமதி பாக்கியமே. (௪)

காசிவிசுவநாத சுவாமிபேரில் வெண்பா.

* யாவர் துணையென்னை யாவர் புரப்பர்கிதி
யாவர் தருவருனை யல்லாது—தேவர்பணி
காசி விசுவேச கத்தனே தாசரது
நேசமிகு வேதாந்த னே. (௫)

காரைநகர் அழகியமணவாளர் பேரில் கலித்துறை.

* நண்ணிடைக் கோல மடவார் கலவி நடங்கலின்றி
மண்ணிற் பெரும்புகழ் சேர்காரை மாநகர் மன்னிவளர்
வண்ணம் படைத்த நலழ கியமண வாளவள்ளல்
புண்ணியப் பாதந் தொழுவா ரதிக புகழினரே. (௬)

ஸ்ரீகாழி திருஞானசம்பந்தமூர்த்தி பேரில் கலிவிருத்தம்.

* மூத றிஞர் மொழிந்து தினம்பணி
வேத வித்தகர் மேன்மைச்சீ காழிவாழ்
ஓது சம்பந்த மூர்த்தி யுபயபொற்
பாத மேத்தப் பழவினை யோடுமே. (௭)

திருநணிப்பள்ளி மலைமகள் மீது கொம்பில்லாத வெண்பா.

* ஞமலியுறு தாம நணுகு மலரார்
திமிரநிகர் கூந்தற் சிறுமி—குமரியாய்ப்
பன்னு திருநணிப் பள்ளி மலைமகடன்
மன்னியதாள் கல்வி தரு மால். (௮)

ஆகச்செய்யுள் ௩௰௩௰௧.

---

## ௯. ஆறுமுகஞ்சேர்வை.

இவர்சிவகங்கைத் தாலூகாமடைமாற்றூர்ச்சேர்க்கைசெம்பூரில் பிறந்து கொட்டாம்பட்டி எம். கருப்பையாப்பாவலரவர்கட்கு நண்பராகித் தமிழ்கற்றுச் சிலவருடம் முறையூர் ஸ்ரீமாந் பழ. சி. சண்முகஞ்செட்டியாரவர்கள்

முகசத்தையடுத்திருந்து இப்போது சென்னையில் வசிக்கின்றார். தமிழ்வித்துவான்களிடம் மிகுந்த நேசமுள்ளவர். இப்போது 32 வயசிருக்கலாம்.

முறையூர் ஸ்ரீமாந் பழ. சி. சண்முகஞ்செட்டியாரவர்கட் கெழுதியனுப்பிய கவிகள்.

* நிலவிருக்கு நெடுஞ்சடில நீறணிந்த நிருமலன்முன் னோர்க்கீன்ற, புலவிருக்கு மயிற்கரத்தான் மலர்ப்பதத்தை யெந்நாளும் போற்றல் செய்வாம், பலவிருக்கு மதுவனஞ்சூழ் முறைநகர்வாழ் பவனருள்சேர் பண்போ னன்றி, பலவிருக்குஞ் சண்முகவே ணீடூழி வாழ்கவிந்தப் பாரின் மாதோ. (௧)

* மண்முகத்து வணிகர்குலந் தழைத்தோங்கப் பொறைஞான மலிந்த கல்வி, யெண்ணகத்து நிறைவலிமை வனப்பினையொன் றுய்க்கருவா யியன்று நாப்பண், டண்ணிடத்து முளைத்தோங்கி யீகையெனுங் கனிபழுத்துத் தளிர்த்து நின்ற, சண்முகப்பைந் தருவேநின் னடிசார்ந்தோ னனிவணங்கிச் சாற்றல் கேண்மோ. (௨)

* பாடலிலே தேர்ச்சியுற்றுக் கீர்த்திபெற்ற பாவலவர் பலராய் மன்னுங், கூடலிலே கூடிநிற்குப் பணிபுரிந்து மனமுவந்து குலவி நாளும், வாடலிலே மிகமெலிந்த வெனதுதந்தை தாயினது வறுமை நோக்கி, நீடலிலே நீபோய்வா வென்றுதன மீந்தனுப்ப நேர்ந்து சென்றேன். (௩)

* சென்றுமறு நாட்பரிதி குணமெழுந்த வமையமதிற் செம்பூர் சேர்ந்தே, குன்றுமிகக் குன்றவளர் புயத்தழகா நினதடியேன் குடிசை நோக்கி, யென்றுமடை யாதபெருங் களிப்பெய்தி யுட்புகுந்தே னெக்கா லத்து, நன்றுசெயா திருந்துமனம் வருந்தமிடி புரிந்தசனி நலிந்து சென்றான். (௪)

* அகத்தைவிட்டு வெளியிலதி விரைவிற் சென்ற வவனைமறித் தப்பாநீ யழுகை யோடம், பகத்தைமிகக் கசக்கியல்ல லுடனே சொல்லும் பான்மையைநீ பகர்தியெனப் பண்போ டகற், பகத்தைவென்ற கரத்தனருள் மனத்தோ னென்றும் பாவல்லோர்க் கிதத்தனிறைபணத்தோ னுஞ்சண், முகத்தையுனக் காதார மாகக் கொண்டாய் மொய்ம்பாயா னினியிருக்க முடியா தென்றான். (௫)

* நெடுங்கால மனைவதிந்து சலமே செய்த நீதிபற்ற முடவாநீ நிலையா தோடப்,படுங்கால மடுத்ததனு லினிமே லிந்தப் பக்கமதின் மறந்தும்பார்க் காதே யென்று, இடுங்கால மவன்வருந்தி யிரப்போர்க் கள்ளி யிறைக்கின்ற சண்முகமா லிசைதா னேதங், கிடுந்தால மிசையான்போ யிருப்ப தெங்கே யிரங்கியெனக் கிருக்குமிட மிசைப்பா யென்ன. (௬)

* நில்லாமை யெனப்பனுவ லுரைக்கக் கேட்டு நெடுங்காலம் பொருடமக்கே நிலையென் றெண்ணி, யில்லாமை மேற்கொண்டார்க் கேது மீயா திழந்துமன முழன் றுநல்லோர்க் கிடும்பு செய்து, கல்லாமை நீண்டபல்லோர் சிசீ யென்னக் காசினிக்கோர் சுமையாகக் கலந்து தங்கும்,பொல்லாமை மனத்நரகம் புகுந்தெந் நாளும் போகாதங் கிருந்தரசு புரிவா யென்றேன். (௭)

* நாணறைந்த படியவனு நடக்க நீண்ட நாளாகக் களையடைந்து நசிந்து காய்ந்து, வானுறைந்த வான்சொரியா திருந்து மிக்க வாட்டமுற்ற போதுவன மல்கச் செய்தங், கேகிறைந்த களைகடிந்த பைங்கூ ழேபோற் கேடொருவி யெனதகமுங் கிளைக்க தென்றுந், தேனிறைந்த மொழிமடவார் திருட்டிக் கில்லாந் தேகபுயா சலசுகிர்த செயசி மானே. (௮)

* நலஞ்செழிக்கும் பூமானே நினதன் பான நாட்டமதா னுனிலத்தோர் நவையி னீங்கிப், புலஞ்செழித்துப் பொலஞ்செழித்துப் புகலு நல்ல புகழ்செழித்துப் பூச்செழித்த பொதும்பர் சூழ்ந்த, நிலஞ்செழித்துத் தினந்தோறும் வாழ்வ ரென்று னினைதகத்து ணினைக் திருக்கு மடிமை யென்ற, னிலஞ்செழித்து விளங்கவொரு புதுமை யோநின் னியன்றவருட் பெருமையறிந் திசைக்கற் பாற்றே. (௯)

* மல்லோங்கி மதியோங்கி மதிக்கு நல்ல வனப்போங்கி மகிழோங்கி வண்மை யோங்கிச்,செல்லோங்கிப் பொழியவரு விளைவை யீட்டிச் செருக்குற்ற தொழுவர்மன்னித் திகழும் வேதச், சொல்லோங்கி யொலிக்கின்ற முறையூர் வாழுந் துரையேநீ கொடுத்தபொருடனக்குத் தூய, நெல்வாங்கி வீடுகொள்ள நிறைத்தே னன்றே நெடியபசிப் பிணியும்விட்டு நீங்கிற் றம்மா. (௧௦)

* உற்றதுணை சிறிதுமிலாச் சுற்றத் தாரு முயர்நலமே புரியாத வூரி லுள்ள, மற்றவரும் பகையாகிக் கெடுப்பே செய்ய வலியிழந்து மதியிழந்து மயக்க மான,வற்றமதி லேயெனக்குஞ் சட்டை பண்ணி யளிததன்போ டப்பாநீ போய்வா வென்னச், சொற்றமொழி யருமைதனை நினைந்தே நாளுந் துதிக்கின்றேன் றொழும்புசெய மதிக்கின் றேனே. (௧௧)

* திண்டாட்டம் யாவும்விட்டுத் தொலைந்து மந்தோ தெரியாமற் சிறுபிள்ளைத் தனமா யானும், பெண்டாட்டி யிருவர்கொண்ட பிழையால் வந்த பிணக்கின்ன மொழியனிலை பிறங்கி யென்றும், வண்டாட்ட மாயிருக்குந் தொங்கன் மார்பா வந்தவிந்த வழக்கினுக் கோர் மார்க்கஞ் செய்து, கொண்டாட்ட மாய்வருவே னினக்கே யாளாய்க் கொண்டருள்செய் தெனக்குவகை கொடுத்தாள் வாயே. ()

* சின்னவனா யினுமெனக்குஞ் சிறிது பாடத் தெரியுமது தெரிந்தாலுஞ் சிறப்புற் றோங்கு,மன்னவரு மகிழுவதி விரைவிற் பாடும் வல்லவர்சூழ் நினதவையில் வழுத்தி னலங், கென்னவரு மோவென்ற வச்ச நாண மென்னைத்தடுக்கப் பேசாம லிருந்தே னேற்ற, வுன்னருமை தனையறிந்த மனமே யிப்போ துளறியா யினுமுரைக்க வுன்னிற் றன்றே. (௧௩)

* அரும்பாட்டி னற்பொருளைத் தேடி வைத்தோ னவிசென்ற வமையமதி லவன்கு னெற்கு, வரும்பாட்டி மகனவனே யென்று பேசி வழக்கிட்டுப் பொருள்பறிக்கு மடையர் போலப், பெரும்பாட்டுப் பாடிவைத்தோர் மறையத் தாமே பெருமையுட னுரைத்ததெனச் சொல்வோர்க் கென்னு, வரும்பாட்டு மேலென்றே புகன்றே னீது வழுப்பாட்டா யினும்பெரிதா மனங்கொள் வாயே. (௧௪)

* கொண்டெனக்கு வேண்டுவர மிரண்டே யுண்டு கொடுத்தருள்வா யாவென்றாற் குழவி யான்சொ, றண்டமிழ்ப்பாச் சரியில்லை யெனவே சும்மா சாற்றுகின்ற கவிஞர்தமைத் தடுத்து மேலாங்,கண்டனைய மொழியிதென வுரைப்ப தொன்று கனப்படுத்திக் காசினியோர் மதிக்க விந்தத், தொண்டனையு மேவல்செயப் பணித்தெப் போதுஞ் சுகங்கொடுத்துத் துன்பமதைத் துடைப்ப தொன்றே. ()

கலித்துறை.

* வாசங் குழுகுமென் றேகம ழுஞ்சுத்தி மாமரையில்
நேசம் படர்ந்திருப் பாளமை யோக நெடும்புயத்தாய்
தாசன் கவிதவ றாயினு நீயதைத் தாழ்த்தவெண்ணி
ஆசம் படவெறுக் காதமு தாக வகங்கொள்வையே. (௧௬)

சென்னையிலிருந்து எழுதியனுப்பியகவிகள்.

* திங்கட் குடையானுஞ் சேயுடையான் போற்றுமிளந்
திங்கட் குடையான் றிருச்சுதன்வேற்—றுங்கப்
படையானோர் சண்முகபூ பாநீதி சேர்நன்
னடையானே வாழ்கநெடு நாள். (௧௭)

* இக்காலஞ் சேர்ந்தா னெழிலுடையாய் நின்னிருபம்
இக்காலஞ் சேர்ந்த திறைப்பெரிய—வக்கால
நற்குமணன் காதையுமே நான்பெற்று வந்தேன்பூ
விற்குமண வாளவினி மேல். (௧௮)

* தேக சுகமுஞ் செழுஞ்சுற்றச் சீருஞ்சந்
தேகமின்றிக் கற்ற திருப்புலவர்—வாகும்
நகர்ச்செழிப்புங் காணுவா னாடியேன் மஞ்சு
நிகர்த்தகையா யோர்ந்தெழுது நீ. (௧௯)

* வாசகமாந் தாமாமுன் வந்தவைக்கு வாய்த்தபதில்
வாசகமாத் தீட்டி வரவிட்டும்—பேசகத்தில்
என்கடித மெய்தவிலை யென்றெண்ணி யீண்டெழுத
லென்கடிகொண் மாநகர னே. (௨0)

* பாவலரார் சோலைப் பதிமுறைசை யாய்நமது
பாவலரின் காரியத்தைப் பட்டணத்தில்—மேவருள்சேர்
சத்தியமூர்த் தித்திருவோன் றானெழுதி விட்டதனால்
நத்தியெழு தாதிருந்தே னான். (௨௧)

* முத்தந் திகழு முழுமார்பா முச்சங்க
முத்தண் டமிழ்தேர் முறைப்புலவர்—சித்தமெலா
மிக்கமகிழ் பூப்ப விரும்பியளிப் பாயுனன்றி
எக்கணத்து நான்மறவே னே. (௨௨)

* வெண்பாவை தன்பாலுன் மெய்யருளை யெய்தியதால்
வெண்பாவை யோதி விடுத்தேன்மா—வொண்பாவை
நித்தமருவிச்சுகங்கொ ணீதாவென் மீதென்றுஞ்
சித்தமிரங் கிக்கிருபை செய். (உ௬)

ஆகச்செய்யுள் ௬௫௬௨.

## முதுகுளத்தூர் ஆறுமுகம்பிள்ளை.

இவர் மதுரை ஜில்லா முதுகுளத்தூரில் வித்துவான் பூலாறுசாமிபிள்ளை புதல்வர். சரவணப்பெருமாட் கவிராயரவர்களிடங் கல்விகற்றவர். விரைவாகவும் வேடிக்கையாகவும் கவிகள் பாடுவர். இவர்வியாதியால் வருந்திக் கிடக்கும்போதும் பாட்டுகளைப்பாடியே காலங்கழிப்பர். தாம் நோயுற்றிருந்தபோது பொருளுதவிநாடி முறையூர் ஸ்ரீமாந் பழ. சி. சண்முகஞ்செட்டியாரவர்கட்கு எழுதியனுப்பிய கவிகள்.

* கண்முகம்போற் பாவாணர் களைநோக்குங் கருணைமலர்க் கற்பகக்கைச், சண்முகவே ளிடத்தடைந்தென் சஞ்சலமும் படுக்கையிலே சார்ந்தவாறும், பண்முகமா யவன்சமுக நற்சமையம் பார்த்துரைத்துப் பரிசுபெற்று, வண்முகமா யுத்தரவு வாங்கியென்பாற் சீக்கிரத்தில் வருதிமானே. (க)

மீண்டுமெழுதியனுப்பியசெய்யுள்.

* சேய்க்குணனுட் டிப்பசியைத் தீர்த்தழுகை மாற்றுவது
தாய்க்குணமன் றோமுறையைச் சண்முகவென்—னோய்க்கு
மருந்தருந்த வேண்டி மணிபார்டர் கேட்டேன்
றருந்தருமா தேடவொண்ணு தா. (உ)

தமது வீட்டில் நெருப்புப்பிடித்து நஷ்டப்படுத்தியதற்காக உதவிபுரிய வேண்டுமெனவெழுதியனுப்பிய பாவினங்கள்.

* மதிக்குடையான் றனைவெருட்டும் வளப்புடையா யுலகமெலா மதிக்க வோங்கு, நிதிக்குடையான் றனைநிகர்க்கு நிலையுடையாய் தலையடுத்த நோயர் துன்பத், கதிக்குடையா பரணமுதற் றருமுறையூ ரென்றறமே தழைக்குந் தெய்வப், பதிக்குடையாய் சண்முகநின் றிருச்சமுகத் தென்குறையைப் பகரக் கேண்மோ. (௩)

* இந்தமதி யீரைந்தாந் தேதி யந்தோ வென்வீட்டிற் றீப்பிடித்தே யிடைவி டாமல், வெந்ததனுற் சாமான்க ளெல்லாம் வெந்து

வேட்டிவெந்து சேலைவெந்து வெறும்வீ டாக்கிச், சந்தியிலே விட்டு
விடத் தேம்பித் தேம்பித் தாரமழ மக்களழச் சார்ந்தோ ரேங்க,
வந்திடுமித் துயர்சகிக்க முடியா தாகி வள்ளானின் னிடத்திலிதை
வழுத்தி னேனே. (௪)

நேரிசைவெண்பா.

* தீப்பிடித்த வென்குடிலைச் செத்தையினுன் மூடுதற்கு
மாப்பிடித்த மார்பா வழியுமிலை—யெய்ப்புமிலை
யெந்தமட்டிற் சித்த மிரங்குமோ நாயேனுக்
கந்தமட்டும் போது மருள். (௫)

* சேயுமனை யுந்நானுஞ் சேர்ந்தழத் தீப்பிடித்துப்
பாயுந் துணிமணியும் பாழாக்க—நோயுந்
தணியாது நெஞ்சந் தளர்வேற்கே தேனு
மணியார்டர் செய்தனுப்பு வாய். (௬)

*செய்யுட் களைத்தேன்போற் செப்பினேன் பேருதவி
செய்யுட் களைத்தேனீ சித்தம்வைத்தாற்—செய்யுட்
களையெடுத்தாற் போலக் கலிவிலகுந் தேவ
களைகொடுக்குஞ் சண்முக யோகா. (௭)

*தாவந்த மானேன் சமையமணி யார்டர்
தாவந்தாற் றீருஞ் சலனமென—வாவலுடன்
கேட்டுங் கருணை கிடைக்கப் பெறுதிருந்தேன்
வாட்டிறல்சேர் சண்முகபூ மா. (௮)

* பாடினர்க்கு நின்முகத்தைப் பார்ப்பார்க்கும் பார்ப்பார்க்கும்
வாடினர்க்கும் வேள்விபுரி மாதவர்க்கும்—கோடிநிதி
தந்தவர்க்கும் பற்றுஞ் சலந்துடைப்பாய் தீவினையா
னொந்தவர்க்கீ யாதென் னுவல். (௯)

*வெவ்வினைக ளிற்றீ வினையே கொடிதென்று
மவ்வினையைத் தீர்த்த லறமென்று—மெவ்வினையும்
தேர்ந்தா ருரைத்தமொழி தேர்சண் முககருணை
கூர்ந்தெனக்கோ ராதரவு கூறு. (௧௦)

*கரிக்கோட்டை யேய்க்குங் கனதனத்தா ரென்னில்
கரிக்கோட்டை யானதனைக் கட்ட—வொருத்தரையு

நேராது சண்முகமா நீள்புகழோன் பாலுரைத்தே
னேராகக் கேட்டருள்வாய் நீ. (கக)

*தரமோ கனத்தைமெல்லத் தந்தீ ரதற்கோர்
தரமோ கனத்தைமெல்லத் தந்தே—னுரமான
தத்துவங்க டேர்முறையூர்ச் சண்முகமா லேபதிக
வெத்தைக் கொடுத்தீ ரெனக்கு. (கஉ)

*தங்கராக் கோடியொன்று தந்தீ ரதற்கெனிடந்
தங்கராக் கோடிதந்தேன் சண்முகமா—துங்க
முறையூர்ப் பதிவாழ் முதல்வா வதிக
மிறையளவுந் தந்த தெவன். (கங)

ஆகச்செய்யுள் ௩௫௭௫.

## சோதுகுடி எம். கே. எம். அப்துல்காதிறுராவுத்தர்.

இவர் பாண்டிவளநாட்டிலே இளையான்குடி மாறநாயனுர் என்னும் அடியாரது திவ்யக்ஷேத்திரமாகிய இளையான்குடி என்னும் நகரத்திற்கு அணித்தாயுள்ள சோதுகுடியில் கலிங்கி என்னும் வம்ஸத்திற் சிறப்புற்ற கலிங்கிமீராகனிராவுத்தர் புதல்வராக 19—9—1877 ல் பிறந்தவர். இளமைப் பருவத்திலேயே இரங்கோனுக்குச்சென்று ஆங்கிலமும் தமிழும் பயின்று ஆங்கிலத்தில் F. A. (எப். எ.) என்னும் பட்டம் பெற்றிருக்கின்றனர். தமிழிலும் தக்கபயிற்சிசெய்துள்ளார். தமது மார்க்க வேதநூல்களிலுமிக்க தேர்ச்சியுடையவர். இளமைப் பருவத்திலேயே பாடுஞ்சக்தியடைந்து அநேக நூல்களைப் பாடியிருக்கின்றனர். அவையாவன மருமூது பஞ்சரத்தினம், நாமகள்நவமணிமாலை, சோதுகுடிச் சிங்காரவழிநடைச்சிந்து, கட்டோம்பு அத்திவாவழிநடைச்சிந்து, நாகூர்நாயகர் கீர்த்தனைரத்தினம் முதலியனவாம். கவர்ண்மெண்டாரால் இளையாங்குடி ஸ்பெஷல் மாஜிஸ்டிரேட் அதிகாரமும் யூனியன் சேர்மென் வேலையும் பார்த்துவருகின்றனர். சிவகெங்கைத்தாலூகா போர்டு மெம்பராகவும் மதுரை டிஸ்திரிக்கட்டுபோர்டு மெம்பராகவும் இருக்கின்றனர். மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் ஒரு வித்துவானைகவுமிருந்து அநேக பிரசங்கங்கள் செய்துவருவதுமன்றித் தமிழ்நாட்டிற்கு வேண்டிய அரியவிஷயங்களையும் செந்தமிழ் வாயிலாக எழுதிவருகின்றனர். சங்க வித்துவான் ஆனபிறகு அவரியற்றிய நூல்கள். பரப்பிர்மப்பதிகம், பாம்பன் கும்பாபிஷேகவழிநடைச்சிந்து, மதுரைத்தமிழ்ச்சங்கமான்மியம், நாகூர் நாயகப்பதிகம், நாகூர் நாயகர் பஞ்சரத்தினம் முதலியனவாம்.

மகாமஹோபாத்தியாயர் ஸ்ரீமாந். சாமிநாதையரவர்கள் மீது கூறியன.

* மருதவளஞ் செறிகுடந்தை மாநகர்க்கு மாமகத்தால் வருமா
ண் பென்னப், பொருவவிலாத் தமிழ்ப்பயிற்றி வந்தநின்று னுஞ்சீர்
த்தி பொருந்துந் தன்மை,கருதிமகா மஹோபாத்தி யாயரெனும் பட்ட
நிற்குக் கவினத் தந்தார், திருவளர்மன் னவர்சாமி நாதவள்ளா னின்
போலச் சிறந்தார் யாரே. (க)

*என்னதா னங்களினு மன்னதா னஞ்சிறந்த தென்பார் பல்
லோ,ரன்னதா னத்தினிலு மரியதுவித் தியாதான மதனை நாளு, நன்
னர்செய்நீ தோன்றுநகர்க் குத்தமதா னப்பெயரை நன்கா ராய்ந்து,
சொன்னவர்தம் மதிவலிதாஞ் சாமிநா தப்பெயர்கொள் சொல்வல்
லோனே. (உ)

* மன்னரெலாம் விரும்புபுக ழுறும்பாண்டித் துரைமானும்
பாண ரெல்லா, முன்னுபுக ழுறுஞ்சாமி நாதகவி சேகரனு மொருங்
கன் புற்றுத்,துன்னு நித்ய நைமித்ய சபைத்தலைமை யுறச்சங்கந் துய்
க்கு மின்மைப், பொன்னுலகத் தவரறிந்தாற் றம்வாழ்வை யொருநா
ளும் பொருட்பண் ணாரே. (ங)

* தன்னையடைந் தவர்பிழையெத் தனைசெயினும் பொறுத்தரு
ளுந் தமதை யாள, முன்னவன்பாண் டித்துரையும் புலவர்களு மின்ப
நனி முயங்கக் கூடற், றன்னியநாற் றமிழ்ச் சங்கத் தைந்தகவைக்
கொண்டாட்டத் தழுனிக் கண்ணே, மன்னுசபா நாயகனாஞ் சாமிநா
தப்பேரியோன் வாழ்க மாதோ. (ச)

*பஞ்சமகா காவியங்கண் மிகமலிந்து நாடெங்கும் பரவச் செய்த
விஞ்சுபுக ழுறுஞ்சாமி நாதவித்வ சேகரனும் வேந்தர் வேந்தா, மஞ்ச
நிகர் கொடைப்பாண்டித் துரைமானு முயர்தமிழும் வாண ரியாரு
மெஞ்சுதலில் லாவிந்தப் பெருஞ்சபையு நாடொறும்வாழ்ந் திலங்க
மாதோ. (ரு)

மதுரைத் தமிழ்ச்சங்கத்து ஏழாம் வருஷோற்சவ வாழ்த்துக்கவிகள்.

*கல்வியெனுங் கண்படைத்தோர் கண்படைத்தோ ரல்லாதோர்
கண்ணில் லாராய்ச், சொல்வதையிவ் வுலகறியு மாமதுரைத் தமிழ்ச்
சங்கத் தழுனி மேவிப்,பல்வகைநா வலாபுகழ அக்கிரா சனம்வகித்த

பான்மை யாலே, நல்வகையாம் புகழ்ச்சாமி நாதனின்னைச் சட்கியெ ன நவின்றார் மன்னே. (௬)

* பூதேவ குலத்தவதி யாகாதி காரமுன்னூற் புனித வென்றே, யோதேறும் புகழ்ப்பாண்டித் துரைமதுரைத் தமிழ்ச்சங்கத் துலக மெல்லாம், பூதேவ குலத்தவதி யாகாதி காரமுன்னூற் புனித வென்றே, யோதேறும் புகழ்ச்சாமி நாதமால் தலைமையுற்ற தொழுங்கா மன்னே. (எ)

* உக்கிரபாண் டியன்சாமி நாதனெனப் பலபுலவ ருரைத்தற் கேற்ப, மிக்கபுகழ்த் தமிழ்ச்சங்கத் தெழுவருடத் திருநாளில் மேன் மை மேவும்,அக்கிரகண் ணியச்சாமி நாதபூ சுரபதியு மங்கத் தோருந் தொக்கதமிழ்ச் சொனும்பாண்டித் துரையரசும் பல்லூழி துலங்க மாதோ. (அ)

ஸ்ரீமான் பெ. மா. மதுரைப்பிள்ளை ராய் பஹதூர் அவர்களின் சமூக வித்துவான் செந்தமிழ்நாவலர் பு. த. செய்யப்பமுதலியார் தேகவியோகமடைந்தமைக்காற்றாது, கூறியன.

* ஒருகணத்துக் குண்முசல கிசலகிகர் மதியினர்க்கு மொன்பா னின்பம், மருவுமிலக் கியநூலு மிலக்கணமும் வகுத்துரைக்கும் வல் லாய் மேலாந்,திருவுறைபுர் துரைமதுரைப் பிள்ளைமன மகிழும்வித்வ திலக மாக, வருமகிமைச் செய்யப்ப நாவலநிற் பிரிந்ததுயர் வழுத் தற்பாற்றே. (௯)

* ஆங்கிலவ ராற்பெருமை மாஜிஸ்டிரேட் டதிகார மடைந்தி ரங்கோன், பாங்குபெற வளர்மதுரைப் பிள்ளையெனும் வள்ளன் மகிழ் பாவல் லோய்நின், தாங்கவுறை கற்பகங்கட் கிவன்கொடைச் சீர் விளக்கவவண் சார்ந்தாய் கொல்லோ,வங்கவெமை விடுத்தகன்றாய் செய்யப்ப நாவலநீ தென்னே யென்னே. (௧0)

* புவியிலொரு புகழ்ப்பரிதி நிகர்மதுரைப் பிள்ளைமகிழ் பூப்ப நாளுங், கவிபுகலுஞ் செய்யப்ப நாவலநீ விண்புகுந்த கடிய மாற்றஞ், செவிபுறலும் நடுநடுங்கித் துடிதுடித்துப் பதைபதைத்துத் திகைத்து விம்மி, அவிபுமுணர் வெழுந்துதெரிந் தழுதழுது கரைகின்றோம் அந்தோ அந்தோ. (௧௧)

* செந்தமிழ்த்தெள் ளமுதொழுகுந் திருவாயு மெய்ம்மீது சிந்தை யன்பு, வந்தொழுக மலர்விழியு மதிமுகமுங் கண்டவருன் வசமா வாரே, அந்தகனு தலினியமன் நினைத்தனனு வசமாக்கி யகன்றான் போலும், எந்தவகை நினைமறப்பேம் செய்யப்ப நாவலனே யென் செய் வோமே. (௧௨)

* வயற்றரளந் திகழிரங்கோன் நகரபரி பாலனெனும் மகிப னோடும், புயற்றகவு பெருமதுரைப் பிள்ளைமனம் மகிழ்சமுகப் புலவ னென, இயற்றமிழ்நா வலனென்னுஞ் செய்யப்ப நாவலனுக் கிணைதா னன்றி, அயற்றமிழ்நா வலருண்டோ வினியவனைக் காண்குவமோ அச்சோ அச்சோ. (௧௩)

* இந்நாட்டுப் புலவருக்குத் தனகமுகம் நிதிமணிமற் றெல்லா ஓ ...ர், மன்னுதம் மதுரைவள்ளல் விட்புலவர் கடனண்ணி மற்றவ ...ம், முன்னுளுற் றனரவரை யிவன்பாற்கொண் டுவந்துகுறை ...ப்பா மென்றோ, பொன்னுட்டில் நீபுகுந்தாய் செய்யப்ப நாவ லனும் புலவ ரேறே. (௧௪)

* கல்வியினுன் மதுரரசப் பிரசங்கத் தாற்பாடுங் கவியாற் பாடஞ், சொல்வதனு லவையஞ்சாத் தோற்றத்தா லின்னுரையாற் சுகுண மாதி, பல்வகையான் மிகச்சிறந்த செய்யப்ப நாவலனும் பாவல் லோனைக், கொல்வதனு லென்பெற்றுப் நமனேநீ மிகவுமறக் கொடியை யன்றோ. (௧௫)

* என்போலும் பலபேரைத் தமிழ்ச்சங்கப் புலவருட னிருந் தும் வண்ண, முன்போது வித்தனைதாய் தந்தையினுந் தயையுடை யாய் முடிந்தாய் வானோர், துன்போதற் கிரிநந்தோ செய்யப்ப நாவ லனுந் துயோய் நின்னைப், பின்போர்காற் காண்பேமோ வருவாயோ வாராயோ பேசாய் பேசாய். (௧௬)

தமது பிதா கலிங்கி மீராகனி ராவுத்தர் காலஞ்சென்றபோது கூறிய இரங்கற்பாக்கள்.

* நேர்ந்தஷஷ்டு பான்மாசம் பதினைந்தாந் தினமசறு நேரந் தன் னிற், சார்ந்தபெருங் கணக்கின்விதஞ் சிதரத்தால் முந்தஹறாத் தநு வில் நின்போர், சேர்ந்தவினைப் பயன்முதலாப் பொறித்தவிலே யுதிர்ந்

ததென்ன செய்வோ மந்தோ, சோர்ந்துதுய ரடைகின்றேங் கலிங் கிமீ ராகனியுத் துங்க கோவே. (கஎ)

* ஐயாவை யாவினியென் செய்வோமென் றழுதிரங்கி யகம் புண்ணாகி, மையாநின் றதைக்காணு தனைப்பிரித்த விந்தவெள்ளி நாளை முன்னே, மெய்யான தமிழ்ப்புலவர் குருடனு னெனவுரைத் தன் மிகவுஞ் சாலும்,பொய்யாத விரதமுளாய் கலிங்கிமீ ராகனியாம் புனித கோவே. (கஅ)

* தந்தைமகற் காற்றுநன்றி யென்றுதிரு வள்ளுவனார் தகவா ராய்ந்து, முந்தவுரைத் தருணீதி முறைப்படியெற் காற்றுநன்றி முடித்தா யானுன், சிந்தைமகிழ் கைம்மாறு செயவறியே னினியாது செய்வே னந்தோ, புந்திமிகக் கவல்கின்றேன் கலிங்கிமீ ராகனிப் பேர்ப் புண்ய வானே. (கசு)

* கலையாரு மதிவலிசேர் கலிங்கிமீ ராகனிப்போர்க் கருணை யோய்நீ, நிலையாத புவிவாழ்வி னிலையறிந்து தகாதிதென நீக்கி யென் றும்,அலையாத தாருல்பக் காவெனுமா கிறபதவி யடைந்தா யாங்கள், உலையாரு மெழுகாகி யுருகுகின்றே மெமதுதுய ரொழிப்பார் யாரே.

* மழையின்றிப் பயிர்வாடும் மன்னனின்றிக் குடிவாடு மண்வே ரற்றுற், றழையின்றித் தருவாடும் பொருநரின்றிக் களம்வாடுந் தன் மை போலக்,கழையொன்று மொழியுடையாய் நினைப்பிரிந்து வாடுமெ ங்கள் கவலை தீர்ப்பாய், விழைவொன்று கருணைமிகுங் கலிங்கிமீ ரா கனியாம் மெய்ம்மை யோனே. (உக)

* நிகரறுநற் குணமுடைய நின்னுவி தனைப்பிரித்த நீரா விந் நாட், புகருரிய தினமாயிற் றுனதுடலும் பிரியும்வகை பொருந்து நாளோ, விகலுடைய சனியாயிற் றிவற்றின்பேர்ப் பொருளறிந்தே னின்றே யெந்தாய், தகவுமிகப் படைத்திருந்த கலிங்கிமீ ராகனிவித் தகசீ மானே. (உஉ)

* மாண்டாயோ வாகிறமாம் வான்பதவி சேர்ந்திடுவான்
வேண்டாமென் றிவ்வுலகை விட்டிங்குக்—காண்டரிய
மிக்க புகழ்க்கலிங்கி மீரா கனியெந்தா
யெக்காலங் காண்பே னினி. (உங)

வா. குலாம்காதிறுநாவலர் காலஞ்சென்றபோது கூறியவை.

* தாயினும்பே ரன்புடையாய் தந்தையினு மறிவுமிகத் தந்தா யுண்மை,வாயினுஞ்சீர் மனத்தினுஞ்சேர்ந் தடக்கமுரு வெடுத்ததென வாழ்ந்தா யென்றால், ஆயினுந்தேர்ந் திருந்தகுலாம் காதிறுநா வல னேயெம் மரந்தை நோக்கி, நீயினுந்தான் வருவாயோ வாராயோ வொருவார்த்தை நிகழ்த்து வாயே. (உ௪)

*சேகுலா மனத்தேமும் நின்பிரிவாந் தீமாற்றஞ் செவிக்கொண் டன்றே, வாகுலாம் காதிறுநா வலவெனக் கதறுகின்றோம் வந்தி லாய்தேம், பாகுலா மொழிபகராய் விழிதிறவா யெமைமறந்த பான் மை யென்னே, நாகுலாங் கடற்கரைவாய் நாகூருந் தமிழ்நாடும் நலியு மந்தோ. (உரு)

* இருமுறையா னூகூருக் கெய்துழியு மன்பின்வர வேற்று நாளும், அருமைமிகப் பாராட்டி நாகூர்நா யகப்பதிக மரங்கேற் றுங் கால், பெருமைமிகச் செய்வித்தா யென்மனது வருந்தும்வணம் பிரி ந்த தென்னே, கருமதுண தீபகுலாம் காதிறுநா வலனெனுமுத் தமி ழ்க்கோ மானே. (உ௬)

* என்னையுநற் றமிழ்ச்சங்க வித்துவா னெனப்படிப்பித் திரங் கோன் வாழும், மன்னவன்கௌ ரவமேவு மாஜிஸ்டிரேட் ராய்பஹ தூர் மதுரைப் பிள்ளை, முன்னவன்மேற் கோவைசொலி யங்கமுதப் பிரசங்க முகில்போற் பெய்தாய்,மின்னுகுலாம் காதிறுநா வலரேறே நினைக்காணும் விதந்தா னென்னே. (உஎ)

* புன்கவிஞர் மதமழியப் பிரசங்கித் தியல்காட்டும் புலமை நோக்கி, என்கவிகள் கலைகள்கற்றோ மெனப்புலவர் சிரந்தாழ்த்தி யிறைஞ்ச நாளும், பொன்கலா வல்லியுரு வமைந்துலகி லைகரித்த புதுமை யென்னத், தென்கவிதை பொழிகுலாம் காதிறுநா வலம றைந்த செய்தி யென்னே. (உஅ)

* குலவமுதச் சுவைதுளிப்ப வன்புரிமை சொற்றோறுங் குலவெ வெற்குப், பலகடித மருமைமிகப் பாராட்டி யெழுதியனைப் பதுமத் தோன்றல், நிலமிசையுன் பிரிவெனுந்தீ நின்கவியாந் தேமாரி நேருந் தோறும், பலவகையில் வளருவதென் பகர்திகுலாம் காதிறுப்பேர்ப் பாவல் லோனே. (உகூ)

* எத்தனைபேர் கவிராயர் நாவலவர் பாவலவ ரெனும்பேர் சூடி, வித்தகம்பே சினரேனு முன்கவிபோ லொருகவிதை விளம்பு வாரோ, மெய்த்தபுக ழுடல்மேவிப் பொய்த்தவுடல் விடுத்தனையெம் விதனம் பாராய், உத்தமனே நன்றுநன்று வித்வகுலாம் காதிறுப்பே ருயர் கோ மானே. (க௦)

* பாத்திரத்தை வியந்திடுகோ பாப்பொருளைப் பலரறியும் படி நன் றுச்சொல், நாத்திரத்தை வியந்திடுகோ நற்குணத்தை வியந்திடு கோ நமர்க்கு நீசொல், சாத்திரத்தை வியந்திடுகோ வொன்றிரெண்டு குறைந்திலதுன் றன்னைக் காணும், ஆத்திரத்தை யடக்கறியே னைமை திகுலாம் காதிறுப்பே ரறிஞர் வாழ்வே. (கக)

* எக்காலத் துனைக்காண்பே னென்றுவந்தோ ரமுதமொழி யிசைக்கக் கேட்பேன், தக்காரெத் தனைபேர்வந் தாலுமுனைப் பிரிந் தயர் தணிப்பார் கொல்லோ, இக்காலக் கொடுமைவரு மென்றறி யே னிரக்கமின்றி யெங்குற் றாயோ, திக்காரும் புகழ்கொள்குலாம் காதிறுநா வலநாமச் சிறப்புள் ளோனே. (கஉ)

* இந்தவுல கினையகன்று யெனக்கேட்டுப் பெரிதுமழு திரங்கி வாடி, யந்தமிலாத் துயருழந்தே னறியாமைத் திரமென்னே யன்பா லென்பாற், சிந்தைபுகுந் தினிதிருப்பக் கண்டுகொண்டேன் வெளி யில்விட்டேன் செகங்கொண் டாட, வந்தகுலாம் காதிறுநா வலரேறே ஆங்கிறந்தே வாழி வாழி. (கஙு)

மதுரை டிஸ்டிரிக்ட் போர்டு மெம்பரும், சிவகங்கைத்தாலூகா போர்டு வைஸ் பிரசிடெண்டும், அகம்படியார் டிஸ்டிரிக்ட் சபைப் பிரசிடெண்டும் வக்கீலுமாகிய ஸ்ரீமாந் S. சீனிமுருகபிள்ளையவர்கள் மீதுகூறியன.

* உலகமெலா மின்மொழியான் மகிழ்ச்சியுறு மெனமுதியோ ருரைத்த வாறே, குலவுசுவை யுறுஞ்சீனி யுடன்முருகு நிகர்வசனங் கூறிக் கூறிப், பலர்மனமு மிகமகிழும் படிபுரிந்து மேலாம்பேர் படைத்தாய் கற்றோர், திலகனெனுஞ் சிவகங்கை நகர்ச்சீனி முருக வள்ளால் செப்பக் கேண்மோ. (கச)

* மிறைகோலி வந்துரைப்பார் மொழியனைத்துஞ் செவியேற்று வியன்ஞா லத்தில், நிறைகோலி னிகராகி நீதிமுறை யெடுத்திசைத்து நியாயங் கூறும், இறைகோலும் மியுந்தவரு தியக்கும்வக்கீ லதிகார

மிசைந்தாய் செங்கை, அறைகோலி யையுந்தொடியார் வேள்சீனி முருகனெனும் அருள்மிக் கோமனே. (௩௫)

* தண்டலைசூழ் சிவகங்கை நகரபரி பாலனமே தலைமை யாகக், கொண்டிருக்கும் யூனியனு தியசெழித்துச் சுகாதாரங் குலவச் செய்தாய், அண்டியபல் லோர்க்குதவுந் தானாகப் போர்டுமெம்பர் ஆகப் பெற்றாய், பண்டுநின்போற் புகழ்பெற்றா ரெவர்சீனி முருகனெனும் பண்புற் றாயே. (௩௬)

* இத்தனையோ மதுரைச்சில் லாப்போர்டு மெம்பரென இலங்குகின்றாய், உத்தமமா மகம்படியர் குலச்சபையூர் தொறுங்கூட்டி யொழுக்கு மேவ, வைத்தவற்று ளுபர்சில்லாச் சபையிலக்ரா சனுதிபத்யம் வகித்து நாளும், புத்திபுகன் றிலங்குகின்ற யுயர்சீனி முருகனெனும் புண்ய வானே. (௩௭)

* திருப்பாம்ப ணகர்ப்பால சுப்ரமண்யர் திருக்கோயில் சிறப்ப வாற்றி, விருப்பாகக் கும்பாபி ஷேகமுஞ்செய் தவன்றமிழின் வேட்கை மேவி, இருப்பானென் றெருசிந்து பாடுவித்துச் சிவகங்கை யெனுந்தா லூகா, ஒருப்பாடு பெறும்போர்டில் உபாக்ராச னுதிபத்யம் ஓங்கப் பெற்றாய். (௩௮)

* அனையிலார்க் கணையாகி மையிலார்க் கையனை யாகி யன்பு, நனிமருவி வாய்க்குணவுஞ் செவிக்குணவு நாடோறு நல்கா நின்றாய், கனியுமனக் கருணையுளாய் புவிமுழுதுந் தலைவணங்குங் கண்யம் பெற்றாய், இனியுனக்கு நிகராவா ரெவர்சீனி முருகப்பேர் இலக்குங் கோவே. (௩௯)

எல்லவர்க்கு முபகார னியல்நீதி வியகார னெவரு மெச்ச, வல்லவைக்கீ லதிகாரன் வழங்கியருந் தாகாரன் மடவார் மையல், புல்லவரு மலங்காரன் பொருந்தலரைச் சங்காரன் புவனமெல்லாஞ், சொல்லமலி புகழ்ச்சீனி முருகவே ளிசைபெடுத்துச் சொல்லற் பாற்றே.

* விண்மணிபோ லுலகமெலாம் விளங்குபெருந் தகைமகிபா வேந்த ரெல்லாங், கண்மணிபோற் கொண்டாடுங் கனம்பெற்றாய் மதுப்பிலிற்றுங் கமல வாழ்க்கைப், பெண்மணிகள் விளையாடும் பெருஞ்செல்வம் பெருங்கல்வி பெற்றாய் வானில், எண்மணிபா னிதியனை யாய் எழிற்சீனி முருகனெனும் ஏந்தல் நீயே. (௪௧)

* வேயிருக்குந் தோண்மடவார் மதன்சினி முருகனெனும் வேளே யாண்டுந், தாயிருக்க மக்கள்துயர் சார்வதிலே யதுபோலத் தமிழ்வல் லோனும், நீயிருக்குந் தனையுமெனக் கொருகுறையு மில்லையிது நிசங்கண் டாயென், வாயிருக்கும் வரையுமுனைப் புகழுமுன்போற் பலசிறப்பும் மருவும் வாழி. (௪உ)

இரங்கோன் ராய்பஹதூர் ஸ்ரீமாந்- பே. மா. மதுரைப்பிள்ளை
அவர்கள் மீது பாடியன.

* தருமதுரை மிகப்பொழியும் வளத்திரங்கோன் புரக்குமுயர் தகுதி வாய்ந்த, தருமதுரை பேயெனக்கா வெனப்பகரும் புலவனை வித் தகபா னிற்குத், தருமதுரை யெனவினவி நினைத்தவெலாந் தந்தருளுந் தருவான் போற்போ, தருமதுரைப் பிள்ளையென வின்னு பெயர் கொள்ளுமுயர் தமிழ்க்கோ மானே. (௪௩)

* மெய்யறிவுச் சட்சிகளும் வியன்கலைக்கட் டருநீதி விளக்குஞ் செங்கோற், கையர்மதி கவர்னருமெக் காலுமதி மதிப்பாகக் கருதலாலே, வையகமன் னவர்வியந்து ராயபக தூர்ப்பட்டம் வழங்கப் பெற்றோய், செய்யபுகழ் ஆனரரி மாஜிஸ்ட்ரேட் டதிகாரச் சிறப்புமுற்றோய். (௪௪)

* கல்வியாற் சேடனையுங் கனநிதியாற் குபேரனையுங் கணிப்பக் கஞ்சச், செல்வியா ரிருவரையுஞ் சேர்ந்திசைநீ ருடைபுனைந்த தேய மெல்லா, நல்வியா பகம்பெறுமா றின்னுரையுங் கடவுளன்பு நண்ணு மேலோய் தொல்வியா ழனைநிகரும் மதிவலிசேர் தருமதுரைத் துரையே கேண்மோ. (௪ரு)

* எந்நாளுந் தமிழ்ப்புலவர்க் கிடனுதவிக் காத்திசைகொ ளிபற்கை நின்பேர், சொன்னாலுங் கேட்டாலு நினைத்தாலு மெவரகத்துந் தோன்ற நின்சீர், பன்னாளு முரைப்பரன்றே நின்னாலே நூலறிவுபண்புற் றேனுன், பொன்னாரும் புகழ்புகழா நாளறியே னிதிற்சிறிதும் புதுமை யின்றே. (௪௬)

* பாலளித்த தாய்நிதியென் பாலளித்த தந்தையிவர் பண்பார் நன்றி, போலளித்த தோநினது புனிததயை பரத்துநலம் பொருந்தக் கல்வி, நூலளித்த தகையதன்றோ நின்னைமறந் தறியேனோர் நொடிப்

போ தேனுஞ், சேலனிக்த விழிமடவார் மடலெழுது மெழின்மது
ரைத் திருப்பேர் வள்ளால். (சஎ)

*ஈண்டிருக்கு மெழின்மதுரைத் தமிழ்ச்சங்கச் சீரறியா ரில்லை
யீது, நீண்டிருக்கும் புகழ்கினது திருப்பெயரை முதற்புனைந்த நீரா
லென்னுண்,மூண்டிருக்கு மன்பெழுப்ப வன்னதன்மான் மியத்தமிழ்
நூன் மொழிந்தேன் காண்பல், லாண்டிருக்கு நினக்குரிய திகைப்
பெறுதி மதுரையெனு மரச ரேறே. (சஅ)

*வாரிதிரன் னீரெடுத்து வருணனுக்குப் பூசைபுரி வழக்கா
றேய்ப்பச்,சீறநீரு பயிற்றுவிக்க செந்தமிழி லொருநூலைச் செய்தே
யீண்டுன், பேருறுமா றணிந்தேத்த விரும்பியெந்நூல் புகறுமெனப்
பேணி யாய்ந்தேன், கூரியமா மதிப்புலவர் பிரபந்தம் பலவுநிற்குக்
கூறக் கண்டேன். (சகூ)

*நினக்கொருவ ரீதுவரையு நிகழ்க்கா நூ லெதுவென்ன நேடி
நேடி, மனக்கொளுங்காற் கலம்பகமே யெஞ்சியிருந் ததுபெரிது
மகிழ்ச்சி மேவிக், கனக்குநிகர் நீயேற்ப வதைப்பகர்ந்து கொடுப்ப
மிகக் காதல் பூண்டேன், எனக்குனது சம்மதிதந் திடல்வேண்டு மது
ரைமன்ன னென்னுங் கோவே. (ருo)

*நல்லதிதற் குத்தரவு வேண்டிவமெகன் னெனக்கருதே ஞரு
நாளு, மெல்லவர்க்கு மீவதலா லேற்றறியா நீயிந்நூ லேற்பா யென்று,
சொல்லவரு தலின்முறையா முத்தரவு கிடைத்தவுடன் சொல்லி
நின்பால், வல்லைவரு குவன்கண்டாய் மாமதுரைப் பிள்ளையெனும்
வள்ளற் கோவே. (ருக)

ஆகச்செய்யுள் ருகூஉகூ.

---

## ஜி. சதாசிவம்பிள்ளை.

இவர் சோழநாட்டில் பூண்டிநகரில் "விஞ்சைராயர்" என்ற பட்டங்
கொண்ட சூத்திர வகுப்பிற் பிறந்தவர். இளமையிலேயே திருவாவடுதுறை
ஆதீனத்தையடுத்து பழநிக்குமாரத்தம்பிரானவர்களிடம் தமிழிலக்கிய இலக்
கணாதி நூல்களைக் கற்றுக்கொண்டு நாகைக்கு வந்து அந்தோணி ஐஸ்கூல்
தமிழ்ப்பண்டிதராயினர். நாகை நீலலோசனி என்ற தமிழ்ப்பத்திராதிப
ராயிருந்து வாரமொருமுறை பத்திரிகையை நடத்திவருகின்றார். ஷை பத்
திரிகை சேதுபதியவர்களாலும், மடாதிபதிகளாலும், நாட்டுக்கோட்டை

நகரத்தார்களாலும், மற்றும் பலராலும் ஆதரிக்கப்பெற்று வருகிறது. சமயோஜிதமாகக் கவிபாடுந் திறமுற்றவர். இப்போது 35-வயசிருக்கலாம்.

பாஸ்கரசேதுபதி மகாராஜா அவர்கள் நீலலோசனிப் பத்திராசாலைக்கு வந்தபோது கூறியன.

* சீர்படைத்த கல்வியறி வொழுக்கமுதற் பல்குணங்கள் சிறக்க வாழ்வோன், கார்படைத்த மெய்த்திருமால் மிகையெனப்பல் லுயிர் புரக்குங் கருணை யாளன், தேர்படைத்த முகவைநகர் தனிலிருந்திவ் வுலகமெலாஞ் செங்கோ லோச்சும், நேர்படைத்த பாற்கரரா ஜேந்திரனே விண்ணப்பம் நேர்ந்து கேட்க. (௧)

* பலம்படைத்த அரசருண்டு படைபடைத்த அரசருண்டு பகரொணாத, நிலம்படைத்த அரசருண்டு நிதிபடைத்த அரசருண்டு நீணிலத்தில், நலம்படைத்த மூர்த்திதலம் தீர்த்தமிவை நாடினார்க்கு நல்கும் புண்யச், குலம்படைத்த அரசருண்டோ வுனையன்றி யார் படைத்தார் குணக்கோ மானே. (௨)

* கதிபடைத்த காசியிரா மேச்சுரயாத் திரைமுடித்தோர் கருதா நின்ற, துதிபடைத்த தவப்பலன்றான் நினதுதரி சனமிலையேற் றெட்டா தென்பார், நதிபடைத்த சடைநம்ப ராலயத்தை வணங்கிடினும் நற்சண் டேசர், விதிபடைத்த திருவடியை வணங்காக்கா லென்பலனோ வேந்த ரேறே. (௩)

* அருள்படைத்த அச்சிறப்பை அருஞ்சிறப்பாக் கொண்டமரும் அரச ரேறே, தெருள்படைத்த நீயிருக்கும் இடந்தேடித் தெரிசியாச் சிறியே முன்ன, மருள்படைத்த இடம்நாடி வந்துதரி சனந்தந்து வாழ்வித் தாயிப், பொருள்படைத்த எமைப்போலும் புண்ணியருண் டோவுலகிற் புகலுங் காலே. (௪)

* சேய்படைத்த கன்றுள்ளித் தேடிவந்த பசுவென்று செப்புவோமோ, காய்படைத்த பயிர்நினைந்து கடுகிவந்த முகிலென்று கழறுவோமோ, வாய்படைத்த புலவரெலாம் வளம்படைத்துப் புகன்றுலும் வரையொணாத, தாய்படைத்த அன்புடைய சேதுபதி நின்வரவு தனைமக மார்தோ. (௫)

தேவிகோட்டை ஸ்ரீமாந். அரு. அரு. சோம. சோமசுந்தரம் செட்டியாரவர்களின் நூதன கிரகப்பிரவேசப் புகழ்ச்சிக்கவிகள்.

* சீர்பூத்த தேவைநகர் செழிக்கவந்த திருவாளன் சீர்த்தி போங்கும், பேர்பூத்த சித்தாந்த சைவமே பெரிதென்று பேணி வாழ்

வோன், தார்பூத்த சோமசுந் தரமகிபன் திருமனையைத் தரணி போ
ற்றும், ஏர்பூத்த திருமங்கை யெழிற்பதும மனையென்றே யியம்ப
லாமே. (௬)

* தென்பாண்டி நாட்டாளன் திருத்தேவைப் பதியாளன் செ
ழுஞ்சை வத்தின், இன்பாள னிசையாளன் எழிலருணா சலவள்ள
லீன்ற செல்வன், அன்பாள னருளாளன் சோமசுந் தரமகிபன் அற
மே யோங்குந், தென்பாளன் திருமனையைத் திருமகள்வாழ் பாற்கட
லாச் செப்ப லாமே. (எ)

தஞ்சைத் தமிழ்ச் சங்கத்தின் நான்காம் வருஷ மகோற்சவ
காலத்தில் கூறியன.

* மூவேந்தர் தமிழ்நாட்டை முறைபுரிந்து மும்முறையும்
முதன்மை யான, பாவேய்ந்த தமிழ்ச்சங்கம் பாண்டியரே நிலைநிறுத்
தும் பான்மை பெற்றார், நாவேய்ந்த இம்முறையும் நான்காவ தாஞ்
சங்க நாளு மோங்கக், காவேய்ந்த கரதலத்தெங் காவலன்பாண் டித்
துரையே கருதிச் செய்தான். (அ)

* முச்சங்க நாட்களிலே யோரவையு முந்நான்கின் முளைத்த
துண்டோ, கைச்சங்க மால்பொன்னுச் சாமிநரேந் திரன்தவத்துக்
காளை யான, மெய்ச்சங்க முறும்பாண்டித் துரைஸாமி தருமதுரை
விதித்த நான்காம், இச்சங்க நாட்களிலே யெழிற்றஞ்சைத் தமிழ்ச்
சங்க மெழுந்த தம்மா. (௯)

* அன்றியுமப் பாண்டியர்க ளப்பதிவிட் டெப்பதிபோ யருளி
னாலே, துன்றியச பாபதியாய்த் துலங்கினார் இப்பாண்டித் துரை
யோ வென்னில், மன்று நிறை பதியாகி மழைபோலுந் தமிழமுதம்
வழங்கா நின்றான்,நன்று நிறை பாண்டியரி லிப்பாண்டித் துரை நன்றி
நன்ற தாமே. (௧௦)

மத்தியார்ச்சுனம் ஸ்ரீ பிருகத் சுந்தர குஜாம்பிகை கும்பாபிஷேக
மஹோற்சவத்தின் போது பாடியது.

* தேன்மன்னு கமழுநீர் மலர்த்தொங்க லான்கருணை திருமேனி
கொண்ட மேலோன், திசைமன்னர் தவமன்னர் கவிமன்னர் முடிவ
ருடு திருவடியை யுடைய கோமான் வான்மன்னு கைலைவிட் டிவ்வுல
க மீடேற வண்டுறைசை வந்த தெய்வம், வளமன்னு வெண்ணெய்

மெய் கண்டனார் திருமரபு வாழ்வோங்க வந்த ரத்னம்; தான்மன்னு சைவசித் தாந்தோப தேசசற் குருராஜராஜேந் திரன், தருமமே குடிகொளம் பலவாண தேசிகன் தன்றிருவுளத்தி னுய்ந்தே; கோன்மன்னு பிருகத்சுந் தரகுசாம் பிகைதிருக் கோயிலைப் புதுமை யாக்கிக், கும்பாபிஷேகஙனி செய்துதன் புகழைப் புதுக்கினான் வாழி மாதோ.

திருவாவடுதுறையில் பாலக்காட்டு ஸ்ரீ. அனந்தராம பாகவதர் திருநாளைப் போவாரின் கதாப்பிரசங்கம் செய்து முடித்த காலத்தில் கூறிய கவி.

* ஒருராமன் கதையேயிவ் வுலகமெலா மின்றளவு முவந்து கூறும், குருநாதன் கோகழியம் பலவாண குணநாதன் கொண்மூ வென்னத், தருநாதன் றிருமுன்பு தானனந்த ராமனென்னுந் தக்கோன் செய்த, திருநாளைப் போவாரின் கதைத்திறத்தைச் சிறியேனே செப்ப வல்லேன். (கஉ)

சேதுசம்ஸ்தான சங்கீத வித்துவான் ஸ்ரீ சீநிவாசையங்காரவர்கள் திருவாவடுதுறை மடத்திற் சங்கீதம்பாடிய காலத்திற் கூறியது.

* விறகெடுத்தாய் பலகையிட்டாய் வியன்பொருளைக் கொள்ளை கொண்டு விருபயித் தந்தாய், நறையடுத்த பாத்தொடுத்து நன்னிதியம் பாணனுக்கு நல்கச் செய்தாய், துறையடுத்த கோகழியம் பலவாண துங்கியே தூய்மை யான, நிறையடுத்த இசைதனக்கே நீ பட்ட பாட்டையென்ன நிகழ்த்து வேனே. (கங)

பாஸ்கர சேதுபதியவர்கள் தங்கத்தோடாவும், கர்னபூஷணமும் மோதிரமும் சால்வை பீதாம்பரங்களும் அளித்த காலத்தில் கூறியது.

* தாயனைய பாற்கரனே தமியேற்கு நீசெய்த தயவை யார்க்கும், வாயொன்றோ சொல்லுவதென் வயிறுமிகத் தான்சொல்லும் வலக்கை சொல்லும், சேயொளிரென் விரல்சொல்லுந் திகழுமிரு செவிசொல்லுஞ் செவ்வி தாக,ஓயாதென் னிடைசொல்லும் ஒப்பார நன்னடையு முணர்த்துந் தானே. (கச)

ஸ்ரீ முத்துராமலிங்க சேதுபதி மகாராஜா அவர்களின் திருக்கல்யாண மகோற்சவத்தைப்பற்றி நாகை வெளிப்பாளையம் சைவ சித்தாந்த சபையில் வாழ்த்திய கவிகள்.

* உலகமெலாம் ஒளிபரப்பி உயிரையெலாங் காத்துவரும் ஒருவனை, இலகுறுநல் லிரவிகுல தீபமென்றே யெல்லோரும் இனிது

வாழ்த்தும், அலகில்புகழ்க் கொடைத்தடக்கை யண்ணல்பாற் கரராஜன் அருந்தவத்தில், நிலவுமுத்து ராமலிங்க சேதுபதி சேதுவுடன் நெடிது வாழ்க. (கரு)

* சேரமான் பெருமான்போல் செகம்புரந்த சைவமன்னன் செழித்த பாவின், ஆரமார் பாற்கரப்பே ரண்ணல்தவப் பாற்கடலி லமுதம் வீசும், ஈரமார் திங்களென எழுந்தமுத்து ராமலிங்க ராஜ ராஜன், தாரமாம் சேதுதிரு நாச்சியா ருடனென்றுந் தழைத்து வாழ்க. (கசா)

* வரகுணபாண் டியன் போல மாநிலமெ லாங்காத்த வண்மை யாளன், தருமமே வடிவெடுத்த பாற்கரப்பேர்ச் சைவமணி தவந் திரண்ட, அருமைமிகு மெங்கள்முத்து ராமலிங்க சேதுபதி யழகு மிக்க, உரிமைமிகு சேதுதிரு ராணியுட னென்றென்றும் உவந்து வாழ்க. (கஎ)

* மும்மையாலுலகொண்ட மூர்த்தி யெனத் தமிழ்நாட்டை முறை புரிந்த, செம்மைசேர் பாற்கரப்பேர்ச் செழுஞ்சைவ சித்தாந் தச் செல்வ னீன்ற, மெய்ம்மைசே ரெங்கள்முத்து ராமலிங்க சேதுபதி வேந்தன் நல்ல,அம்மையாம் சேதுதிரு நாச்சியா ருடனென்றும் அவனி வாழ்க. (கஅ)

* சேதுபதி தரிசனமே ராமலிங்க தரிசனமாச் செகங்கொண் டாடும், ஆதிபதி பாற்கரப்பே ரரியபெருஞ் சைவபதி யன்பாய்ப் பெற்ற, நீதிபதி யெங்கள்முத்து ராமலிங்க சேதுபதி நேய மிக்க, மாதுபதி சேதுதிரு மங்கையுட னெந்நாளும் வாழ்க வாழ்க. (ககூ)

திருவாவடுதுறை மகாசந்நிதானம் ஸ்ரீமத் அம்பலவாணதேசிகமூர்த்திகள் நாகபட்டினத்திற்கெழுந்தருளியகாலத்திற் கூறியகவிகள்.

* சீராருங் கைலையெனுஞ் செழுமலைநோற் றடைந்தபெருஞ் சிறப்பை யிந்தப்,பாராருஞ் சோணாடு பண்ணுமுன் செய்தவத்தின் பயனே யென்னப்,பேராரு மாவடுதண் டுறையென்னும் பெரும்பதி யும் பெறுவான் வேண்டிக்,காராருங் கண்டமுடைக் கண்ணுதல்தன் றிருவுளத்திற் கருதி மாதோ. (உ0)

* புலியெடுத்த வுடைமறைத்துப் பொற்காவி யுடையுடுத்த புனித ஞகிப், பலியெடுத்த கலமறைத்துப் பரவுசிவ ஞானமுறை

பரிப்போ னாகி, யலையெடுத்த கலைமறைத்தவ் வறுபத்து நான்குகலை யமைந்தா னாகி, யிலையெடுத்த விதழிமறைத் தெழிற்கழுநீர் மாலையி னை யிழைந்தா னாகி. (உக)

* கனல்வழியுங் கண்மறைத்துக் கருணைவழிந் தொழுகுமிரு கண்ண னாகி, யனல்வழியு மழுமறைத்தவ் வபயகர மிரண்டுடைய வம்மா னாகிச், சினம்வழியும் விடைமறைத்துச் சிவிகையினி லேறிவரு செல்வ னாகிப்,புனல்வழியுஞ் சடைமறைத்துப் புண்ணியனும் பலவா ணைப் புகழ்ப்பேர் தாங்கி. (உஉ)

வேறு.

* இருண்மலத் தழுந்து மெம்மனோர் யாரு மெளிதினி லிறை ஞ்சியே யுய்வான், அருளுருத் தாங்கி யடியர்கள் சூழ வமர்ந்திடு மரு மறை முதலைத், தெருண்மனத் தொளிருஞ் செழுஞ்சுடர்ப் பிழம் பைத் தெய்வவான் கற்பக தருவைக், குருமணி மாடக் கோகழி யா னைக் குணங்குறி கடந்ததற் பரத்தை. (உங)

* பொய்ம்மலி சமயக் குறும்பெலா மடக்கிப் புகழ்மலி சைவ மென் றறையு, மெய்ம்மலி யரசு தழைந்திடு மாறு வெளிவந்த நங் குரு பரனை, மைம்மலி கண்ட மறைத்தினி திருக்கும் வழுத்துதற் கரியதத் துவத்தைச், செய்ம்மலி துறைசைச் செழுநக பானைத் தே வெலாங் கைதொழுந் தேவை. (உச)

* ஆலினி லிருந்து குருந்தினி லிருந்திவ் வரசினி லிருக்கவந் த வனைப்,பாலினி லிருந்த படுவிடம் நீக்கிப் படர்சுவை யமுதுணும் பரனை, நூலினி லிருந்த நோன்மைசா லறிஞர் நுவன்றிடும் நுண்ணி ய பொருளைச், சேலினி லிருந்த பொன்னிசூழ் துறைசைச் செழுநக ர்ச் சிவபரஞ் சுடரை. (உரு)

* அடுக்களைக் கிணற்றி லமுதமூற் றெடுப்ப வதுபெறுப் பே தையர் போல, இடுக்கணி லுழலு மெம்மனோ ரியாரு மெய்திடா திழிந்ததற் கிரங்கித், தடுக்கொணாக் கருணை ததும்புமம் மூர்த்தி த னக்குள தன்மையா லின்றும், உடுக்கணத் தோடு முடுபதி யெழுந்த தொத்திட வுதவினன் காசுஷி. (உசா)

* கன்றினைத் தேடிக் கறவைவந் தாங்குக் கடையரேங் கண்க ளாற் பருகித், துன்றிய பாசத் தொடக்கினை யறுத்துச் சுகக்கடல்

திளைத்திடும் வண்ணம், நன்றுகொள் திருவா வடுதுறை யிருந்து நா கைமா நகரினை நண்ணிக், குன்றவில் கோலங் காட்டியாட் கொண்ட குருமணி கருணையைப் புகழ்வாம். (உள)

ஷைமகாசந்நிதானம் காரைக்காலி லெழுந்தருளியபோது கூறியது.

* செம்மைசேர் துறைசை யம்பல வாண தேசிகன் காரைமா நகரில்,அம்மையார் முன்னூ ளருந்திய கனியி னுசையா லெழுந்தனன் போலும், மும்மைசா லுலகுந் தொழுவினி திருக்கும் மூர்த்தியைக் காணயாம் செய்த, வெம்மையில் தவங்க ளின்னவென் றறியேம் மெய்ம்மையீர் விளம்புமின் னீரே. (உஅ)

பிரம-ஸ்ரீ வே. சாமிநாதய்யரவர்கள் மகா மகோபாத்தியாயப் பட்டம் பெற்றபோது கூறியன.

* தேனுக்ஷி செயுங்கொன்றைச் செஞ்சடையான் றிருவடிக்கே சிந்தை யாவுந்,தானுக்ஷி செயக்கொடுத்த தகைமையினுன் றமிழ்த்தெய்வ மாகி வந்த, மீனுக்ஷி சுந்தரப்பேர் நாவலவன் கலையனைத்தும் விரும்பி யென்றும், நானுக்ஷி செய்வேனென் றுறத்திரண்ட கலையாக்ஷி நலமிக் கோனே. (உகூ)

* கலைநாதன் குலநாதன் கற்றவழி நிற்பதற்குக் கட்டாய்க் காட்டும், நிலைநாதன் குணநாதன் நேர்மைமிகு கலைமுறைநேசித் தாட்டும், நலநாதன் நயவசன நன்னுதன் நாவலர்கள் தங்கட் கெல்லாம் தலைநாதன் தவநாதன் சாமிநா தப்பெயர்கொள் தமிழ்வ லோனே.()

* அருகிருந்திக் கல்வியமு தருத்தியநின் னுசிரிய னவனி தன்னிற், றிருவிருக்கும் புதுக்கோயில் செய்தவனை யொப்பாவான் சீர்த்தி யென்றும், மருவிருக்கும் பழங்கோயில் மாண்புறுத்தும் புண்ணியனை மானு வாய்நீ, இருவருக்கு முயர்வெண்ணில் நின்னுயர்வே யதிகமென வியம்ப லாமே. (௩க)

* முன்புதித்த காதைவிடப் பின்புதித்த கொம்புறுதி யென்பர் மேலும், அன்புதித்த துரோணரிலும் அருச்சுனனே தனுர்வேதத் ததிக மென்பர்,இன்புதித்த மீனுக்ஷி சுந்தரனுர் திருச்செவியி லினையற் றேங்குந், தென்புதித்த பிரமமதைச் செப்பினேன் றிருப்பெயர் கொள் திறமை யோனே. (௩உ)

* பூவேந்து பாவேந்தைப் புந்திமகிழ்ந் தின்புசெயப் புகுங்கா லன்றேனென், காவேந்து தனத்தைவிடக் கனத்தையே பெரிதென்று கழறு வார்கள், மாவேந்தி னுலகமெலாங் கோலோச்சு மாங்கிலோ மன்னர் தம்பாற், கோவேந்தவ் விரண்டனையுங் கொண்டபின் புகழ்ப்பெருமை கூறற் பாற்றே. (௧௧)

* முன்னவர்கள் புதைத்துவைத்த முழுப்பொருளை யெடுத்தீயும் முறைமை போலத், தன்னிகரில் முன்னூலைத் தாரிமுலகங் களிதூங்கும்பத் தரும் நினக்குச், சொன்னமோ கைம்மாறு துதிப்பதோ கைம்மாறு துகளி லாமற், றென்னவோ கைம்மாறெம் மெழிற்சாமி நாத மறை யிசைவ லானே. (௧௨)

* வான்வழங்கு முலகதனில் மதிவழங்கும் பன்னூலை வயக்கியின்னுந், தான்வழங்கி நீடூழி காலமெலாந் தழைத்துவரத் தமியேனென்றும், மான்வழங்கு மிடத்தானை மனம்வழங்கி மொழிவழங்கி வழுத்தா நின்றேன், தேன்வழங்குஞ் செந்தமிழின் றிறம்வழங்கி வருஞ்சாமி நாத தேவே. (௧௩)

ஆகச்செய்யுள் ௧௬௬௧.

---

## மு. ரா. கந்தசாமிக்கவிராயர்.

சேற்றூர்ச் சமஸ்தானவித்துவான் இராமசாமிக்கவிராயரவர்கள் புத்திரராகிய யாம் பால்யத்தில் எமது தந்தையவர்கள்பாலும், திருவாவடுதுறை ஆதீனம் சின்னவகைக்காறுபாறு ஸ்ரீமத். நமசிவாயத்தம்பிரானவர்கள்பாலும் கல்விபயின்று உடுமலைப்பேட்டை போர்டுஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதராக 10 வருஷமிருந்து அதைவிடுத்து இம்மதுரையம்பதியையடைந்து விவேகபாநு என்ற பத்திரிகையையும், விவேகபாநு அச்சியந்திரசாலையையும் ஏற்படுத்தி நடத்திவருகிறோம். மு. ரா. அருணாசலக் கவிராயரவர்களும், சே. ரா. சுப்பிரமணியக் கவிராயரவர்களும் எமது முற்சகோதரர்கள். **திருப்பேரூர்த்திரிபந்தாதி, பவாநி வேதநாயகியம்மை பிள்ளைத்தமிழ், கருமலையாண்டவர் துதிமஞ்சரி, துமணசரித்திரம், அரிமழத்தலபுராணம்** என்பன யாமியற்றியவை. கம்பராமாயணம் ஆரணிய காண்டவுரையும் எழுதியிருக்கின்றோம். இப்போது எமக்கு வயசு 39.

சித்திவிநாயகர் துதி.

*சித்தி விநாயகனைத் தென்மதுரை நாயகனை
முத்தி கொடுக்கு முதற்பொருளைப்—பத்தியுடன்

வந்திப்பா ரின்னுமொரு மாதா வயிற்றினின்று
வந்திப்பார் தன்னை மருவார். (க)

*சிந்தா வளமுகந்து சேருந் திருமதுரைத்
தந்தா வளமுகனைத் தற்பரனை—எந்தாய்
அடியருள்வை யென்றக்கா லவ்வளவே பண்டை
அடியருள்வை யென்பா னவன். (உ)

*அடியா ருளமலரி னன்புத்தே னுண்ணும்
படியாருந் தும்பிமுகன் பாதம்—நெடிதாம்
பவந்துடைக்குங் கூற்றுவனைப் பார்த்து மலர்க்கண்
சிவந்துடைக்கு மீயுந் திரு. (ங)

முருகக்கடவுள் துதி.

*திருப்பரங்குன் றனையன்பாற் சேவிப்பார் வானத்
திருப்பரங்குன் றனை செலுமா—நெருப்பிற்
புழுப்புகுமா கூற்றுவனே பூதங்க ளுன்வாய்க்
கொழுப்புகுமா ரோச்சுமயில் கொண்டு. (ச)

*கன்னங் கரிய திருமான் மருக கனவரைநேர்
பென்னம் பெரிய முலைவள்ளி நாயக பேருலகில்
சின்னஞ் சிறிய னலைகடற் பாய்மரஞ் சேர்கொடிநேர்
தன்னந் தனியன் பரங்கிரி நாதநின் றாள்சரணே. (ரு)

களி.

*மதுரை குடிகொண் டுலகமெலாம் வணங்க விருந்த பித்தர்குரு
மணியாய் வந்த முருகேசர் மட்டுக் கடங்கா வலிபடைத்தார்
கதுமென் றெழுந்து வெறியேறிக் களித்துத் திரிந்தார் அமரரிட்டங்
கண்டங் கருள்வார் பரங்கிரிவாழ் கந்த ரவர்கான் முண்டகமே
துதிசெய் களியேம் அளியோடு சூழ்மி னுறக்கஞ் சாவாமே
தொகுத்தவினை யொத்திடக்காண்பீர்சுகமாம்அசத்தைவீட்டிடுவீர்
விதியாங் கருவா டுஞ்சேரு மீனந் தீர்மி னண்டமெலா
மேவுங் குறும்பூழ் நலமாகு மென்று லிதிற்பே ரின்பமுண்டோ.

சம்பிரதம்.

*அனந்தனை விழுங்குவோ மட்டவரை முற்றுமோ ரங்கையி
லெடுத்து மிசைவோம், ஆழியையு மொருவிர லுறச்செய்வோம் நல்ல

சல மாக்குவோங் குலகி ரியையும்; மளங்கொளிற் கைலாய வரையை யுங் காட்டுவோம் வானகமு முடனறியலாம், வைகுந்த முங்கையில வைத்தாட்டி விடுவமம் மாயையுற வமபு ரிகுவோம;தினந்தினமு நில வுலகி னுவாய் செலச்செய்வோந் தேவர்கோ பதியை யிங்கே, சேர்ந் துபல் லக்குச் சுமக்கின்ற போயிபாச் செய்வமிவை யரிய வலவே; கனம்பெறு தனத்தேவ யானையை மணந்துலவு கந்தருமை மைந்தர் மேவிக், களிக்கும் பரங்குன் றினிற்சென் றிறைஞ்சுஞ் சுருத்தொன் றை யன்றி யில்லையே. (எ)

தவம்.

*மலைவாயுற் றீர்மனமு மலைவாயுற் றீரே
வாய்ப்பேச்சி லீருமக்கு வாய்ப்பேச்சொன் றுமே
அலையாருஞ் சலத்துறைந்தீர் சலமேகொண் டிருந்தீர்
ஆதவத்தி னின்றீரா தவமேயென் றறியீர்
நிலையாமை யுணர்ந்தீர்நீர் நிலையாமை யானீர்
நேயமிலாச் சடைத்தலையீர் நெஞ்சினிலு முடையீர்
இலையேயிங் கிவற்றாலோர் பயனுமிதோ பரங்குன்
றிருப்பதிதை நொடிப்பொழுது நினைப்பினருள் வருமே. (அ)

சிவபிரான் துதி.

*திருவால வாயிற் சிவனை மடவார்
உருவால வாயிற் றுழலா—தொருவா
துணையே துதிக்க வொருவரமீந் தாற்பின்
வினையே துதிக்கநில மேல். (கூ)

*தன்மதுரை யாகிமுடி தாங்கி மகிழ்வோங்கித்
தென்மதுரை யாளுஞ் சிவக்கொழுந்தே—கன்ம
வருவினையா வற்றையுமே மாற்றியினந் தாயர்
கருவினையா தின்புதவிக் கா. (க0)

*ஆசை யுடையானீ யாதலினு னையே
ஆசையுடை யானென் றகற்றிவிடேல்—ஈசா
பொருளுடு நால்வருக்குப் போதமுணர் வித்த
கருணை கராசங் கரா. (கக)

மீனாட்சியம்மை துதி.

*மலையத் துவச மகரத் துவச
மலையத் துவசன் மகளே—நிலையற்ற

பொய்வாழ்வு நம்பியுனைப் போற்றாப் புலையேற்கு
மெய்வாழ்வு தந்தருளம் மே. (கஉ)

கற்றா மரையபரன்பு கண்டா மெனக்களித்துப்
பொற்றா மரையுட் புகுதாதுன்—னற்றாளைப்
பற்றாது வாணாள் பலகழித்த பாவியெனை
எற்றா லருள்வையம் மையே. (கங)

உள்ளக் கவலை யொருகோடி புண்டேநின்
வள்ளக் கவலை வளர்கருணை—வெள்ளத்தே
ஓர்திவலை தந்தா லுமையே குறையாமோ
தேர்திவலை மாதரமுதே. (கச)

சேற்றூர்ச் சமஸ்தான கர்த்தரவர்களாகிய ஸ்ரீமத் கனம் சேவகப் பாண்டிய
மன்னரவர்கள் கர்ணபூஷண காலத்தே யெழுதியனுப்பியகவிகள்.

* முற்கன்ன னொருவன்மற்று மொருவனிதி கொண்டுமிகு புகழ் தன்மை பெற்றான், எற்கன்ன முதற்றருஞ்சுந் தரதாச வள்ளல்சுத னிவணிரண்டு, பொற்கன்ன னெனக்கன்ன மிசைச்சொன்ன மணி யணிந்து பொலிவுற்றானிவ், வற்கன்ன விலுமார்பன் சேவகப்பாண் டியமகிபன் வாழ்க வாழ்க. (கரு)

* கனமுறுசுந் தரதாச மால்சுதன்சே வகப்பாண்டியன் கன்ன மீது, கனகமணிந் ததுவளர்செங் கமலையுயர் வெண்கமலை கண்ணிய மிந் தத், தினகரனால் விளங்குமிவன் செவிவழியெத் தனைகொண்டான் றெரிவோ மென்ன, மனதிலெண்ணிப் பொன்மகிழ்ந்து மருவியதாத் தோன்றுநல மதிவல் லோரே. (கசு)

* சித்திரமன் மதசொருபன் றென்சேறைச் சுந்தரதா ஜேந்த்ர னீதி, எத்திரமேற் சேவகப்பாண் யடின்கன்னங் குத்தியவணிட்டான் பொன்னை, இத்தரையிற் கன்னங்குத் தினர்பொன்னை யெடுப்பரிவ் வூ ரிசைவோர் கன்னங், குத்திலங்கு பொன்சேர்ப்ப ரிவ்வரச னீதியையாங் கூற லென்னே. (கஎ)

தேவிகோட்டை ஸப்டிவிஷன் ஜமீந்தார் மா-ா-ா-ஸ்ரீ அள. அரு. அரு
அருணாசலஞ்செட்டி யாரவர்கள் மீது கூறியன.

* சந்தானத் தவர்துதிக்குங் காணப்பேர்க் காளீசன் றயவான் மேலாம, சுந்தான தருவாகித் தேனைவாசு ரசுசெய்சீ தரம காவ,

சந்தானம் பதியருணை சலமகிபா புண்ணியவுத் தமசி லாக்ய, சந்தா னம் பெருகின்றன் குடும்பமெலா மெந்நாளுந் தழைக்கத் தானே. ()

* கருணை சலதியாய் கற்றவரைக் காப்பாய்
அருணை சலதியா கத்தாய்—பொருணைதும்
தேவையெனப் பற்பலருஞ் சேர்ந்துதுதித் துப்பெறுஞ்சீர்த்
தேவையர சேயன்பு செய். (௧௯)

* நிதிபடைத்து மந்திரியா யீசனிரப் பையுமகற்று நீர்மை நோக்கி,மதிகருதுந் தனதனந்த வரனருளாற் பூதலத்து வந்து தோன்றி, அதிவளஞ்சேர் நாட்டுக்கோட் டையுநகரும் பொருந்தியுய ரரசனாகித், துதிபெறப்பொன் னுதவுகின்ற னவனருணை சலநாமன் துலங்குங் கோவே. (௨௦)

கோம்பி விருத்தம் என்ற நூலனுப்பியதற்காக ஸ்ரீ வெ. ப. சுப்பிர மணிய முதலியாரவர்கட் கெழுதியன.

* உவமானந் தனைநிகருந் தென்னூடு மதற்கணியா யுலவி மேன் மேற், றவமான நெறிவளர்க்கும் வெள்ளாகாற் செழும்பதியுந் தமிழு மியாமும், துவமானம் பெருவிழியார் மாரனெனும் பழநியப்ப சுமுக மாலும், சிவமானந் தம்பெருக்கு மென்றென்று பலநாளாச் செயுந்த வத்தால். (௨௧)

* வந்தவதா ரம்புரிந்தோய் நெல்லைநகர்ச் சிலேடைவெண்பா மாலை நூலைத், தந்தவதா ரகைநாப்பண் மதியமெனப் பலபுலவர் தனிக்கு றாமே, வந்தவதா ரணிபிடித்து மாயமெலா மேவுகிர வஞ்ச மேற்பு, குந்தவதா ரகனுயிரைக் குடித்தமரர் குடியுடனெங் குடியாண் டோனே. (௨௨)

*பங்கடம்ப மாலையத்தும் பாராட்டு மெனக்குமருள் பாலிப் பானைச், செங்கடம்ப மாலையணி தேவசிகா மணியையருட் டேனை யன்பர், தங்கடம்ப மாலையிரு மாவெனச்சொல் வானையவன் றரப் பூவந்த, வெங்கடம்ப மாலைமது விழிமொழிசேர் குறமாதின் விர கத் தானை. (௨௩)

*திருவனந்தற் கனவினிலு மறவாது துதிபுரியுஞ் சீரோய் விண்ணிற், றருவனந்தங் கோடியுருப் பெறினுமிணை மேவாவு தாரக் கையாய், மருவனந்தங் கியகுவளை மார்புடையாய் கற்றவர்யா வருக்கு

முன்போ, திருவனந்த னூமதிப் புறுபுகழ்ச்சுப் பிரமணிய தமிழ்க் கோ மானே. (௨௪)

*மருத்தப்பா துறைசூழலார் மதனனையாய் நினதுதிரு வாக்காங் கோம்பி, விருத்தப்பாப் புத்தகமென் னிடத்துவந்து பேரின்பம் விளைத்த தென்றன், கருத்தப்பா வதின்முழுகிக் கிடத்தலினா லதன் பெருமை கழற வல்லேன், பொருத்தப்பாக் கியம்பலவு மெய்தநினைப் போல்பவர்யார் புவியின் மாதோ. (௨௫)

*தேங்கிலவ னாகரீ ருடைப்புவியிற் றமிழுணர்ந்து சிறப்புற் றோரும், ஆங்கிலவ நால்வலரு மிகப்புகழு மிந்நூலொப் பாயெந் நூலும், ஓங்கிலவன் னதன்பெருமை முழுதுரைக்கச் சேடனுமே யொவ்வா னென்னில், நாங்கிலவ ரெனற்கும்வல்லே மல்லேஞ்சுப் பிரமணிய நாவல் லோனே. (௨௬)

மதுரைத் தமிழ்ச்சங்கம் அக்கிராசனாதிபதியவர்களாகிய ஸ்ரீமாந் பொ. பாண்டித்துரைஸாமி யவர்கள்மீது கூறியன.

* திருவிருக்கும் புயசயிலா குடமுனிபோற் றமிழுணர்ந்த செல்வா செம்மை, தருவிருக்கு மறியாத தானுவடி மறவாத தகையாய் மையன், மருவிருக்கு மணியனையார் மடல்வரையு மழகாபா வல்லீ ரென்பால், வருவிருக்கு மதுமிடிபோ மென்றருள்வாய் முகவைநகர் வளர்கோ மானே. (௨௭)

* பெரும்பிரபு வாய்பொன்னுச் சாமிமகி பதிசெய்தவப் பேறு தோன்ற, வரும்பிரப லாசுகுண மதிவதன வாய்மைமலி வரதா வின் பந், தரும்பிரசங் கம்புரிவித் தகவிநய மதியூகா தமிழ்ப்பண் பாடிச், சுரும்பிரச நுகர்தளவத் தொடையலணி வாய்பாண்டித் துரைப்பூ மானே. (௨அ)

* அருந்தவரை யாதனமா தியவற்று னுபசரிப்போ யளியே மின்பம், பொருந்தவரை யாதனம்பொன் னுடையளிப்போய் வலாரி யொருபுடையொப் பாய்ப்போ,யிருந்தவரை யாதனதா வின்றமிழைக் கொள்ளைகொண்டா யிபற்பா வாணர், திருந்தவரை யாதனவன் கொடைக்கெனுமா றீத்துவக்குஞ் சிந்தைக் கோவே. (௨௯)

* துள்ளமுத லைத்தடிந்த கண்ணன்விழி மலரினுமீத் தோன்று மின்பந், கொள்ளமுத லாக்கருதிக் கண்ணப்பன் குஞ்சிமலர்

கொண்டோர்க் கன்பா, தெள்ளமுத மெனவினிக்குஞ் செழும்புலவர் கவிபுனையுன் செவியென் வேட்கை, வெள்ளமுத வுழுமிந்த வெறுங்கவியும் புனைவதற்கு மேவு மன்றே. (௩௦)

* நாலியற்றுப் பொழிந்துபுற மொழிவிலங்கு புகுந்தழிக்க நாவன்முச் சங்க, வேலியற்றுப் பொலிவிழக்குந் தமிழ்க்கூழ்க்கு வச்சிரந்தான் மிளிருங் கோட்டை,கோலியற்று நிறுவியநின் றமிழ்ச்சங்க மெனலெவரே கூறார் நீயன், பாலியற்றுக் தமவுகவிப் பண்பிசைக்கும் வலியிலியென் பகரு வேனே. (௩௧)

திருநெல்வேலிக்குச் சென்றிருந்தபோது செயதுங்கநல்லூர் வித்துவான் ஸ்ரீ காந்திமதிநாதபிள்ளையவர்கட்குஎழுதியகவிகள்.

* திருவருட்பா முதலியநற் கவிபலவு மெல்லவருஞ் சிரந்தாழ்க்கிப், பெருவியப்புக் கொளுமாறு பாடிவரும் பாடிவரும் பெரியோய் மிக்க, மருவிருக்குங் கருங்குவளை யொருங்குவளை மார்புடையோய் மனத்து ளேயம், ஒருவலிலாக் காந்திமதி நாததுதி நாதமகிழ்ந் தொன்று கேட்டி. (௩௨)

* நின்னதுநற் குணமனைத்து மடுத்தடுத்துப் படிப்படியா நிகழ்த்தி ஞன்விற்,பன்னமதி யூகிரு பாகரகு ஞகரசம் பன்ன லோலன், நன்னர்மிகு கருமுகிலே யிருநிதியை யைந்தருவை நாளும்வென்று, தன்னைநிகர் தருசோணு சலபோஜ மகராஜ சரசன் மாதோ. (௩௩)

* ஒன்றேனுங் குறைத்தருவித் தெனக்குனது நன்னேய மூட்டுவிப்பேன், என்றுனைப் படிநினக்கு மெத்தனையோ முறையினிற மெழுதியுய்த்தான், நன்றார்வத் துடனீண்டு வந்திலைநீ காந்திமதி நாதனுக, நின்றார்வத் துடனழைக்குஞ் சிறூர்களியா மாகவில னெடுநாட் சென்ற. (௩௪)

* விரைவிலியா னெனதூர்க்குச் செலவேண்டு நினைக்காணும் விருப்பத் துக்கோர், கரையிலைசர்க் கரைகொளாளக் கரைநிகருன் கனிவார்த்தை களிப்பா வுண்ணத், தருதியிவண் வருதியுனைக் கருதியுரை யாநிமிடந் தானு மில்லை, பரிதியினும் விளங்குபுக ழொளிபடைத்த காந்திமதிப் பாவல் லோயே. (௩௫)

ஸ்ரீமத் முத்துராமலிங்கசேதுபதி அவர்கள் திருமண வாழ்த்துக் கவிகள்.

* பலகவிக ளுதவியிறு விராமனன்று சேதுகட்டும் பான்மைபதன்னை, யுலகர்மதிக் திடலெனெல்லாக் கவிகளுக்கும் வேண்டுவன

வுதவி மேன்மேற்,குலவுநலச் சே துகட்டிக் கொண்டனைநின் பெருமை யெம்மாற் கூறற் பாற்றோ, நிலவுவளந் திகழ்முகவை காக்குமுத்து ராமலிங்க நிருப ரேறே. (௩௫)

* சேதுகட்டி யணிவகுத்துத் தூதுவிட்டுக் கடுஞ்சமரஞ் செய்தே வென்று, கீதுபற்ற வில்லறத்துக் குரிமையுற்ற தாசரதி திறனன் றன்றால், சேதுகட்டிப் பவனிவந்து நிதிபொழிந்து மகிழ்ந்தறஞ் செய் சிறப்புப் பெற்றாய், நீதிபற்றிப் புவிபுரக்க வந்தமுத்து ராமலிங்க நிருப ரேறே. (௩௭)

* சேதுமா தவனருளாற் சேதுபதி யாயினைமுன் றேவர் தேவாஞ், சேதுமா தவனருளுந் திறத்தாலே மலர்த்திருவிற் செவ்வி வாய்க, சேதுமா தவனுகித் திகழுமுத்து ராமலிங்க சிங்க மேயச், சேதுமா தவனுமுடு பதியுமுள வரையுமுன்சீர் செழிக்க மன்னே.

கயரோகத்தால் வருந்தியபோது பொருளாலும் மருந்துகளாலும் பேருதவிபுரிந்து அன்புபாராட்டியவர்களான சேற்றூர் சம்ஸ்தானம் மானேஜர் சி. இராக்கப்பபிள்ளையவர்கள், ஸ்தானுபதி பழநியாண்டி கரையாளரவர்கள், ஐயனார் கரையாளரவர்கள் இம்மூவர்மீதும் வியாதிதீர்ந்தவுடன் பாடியனுப்பியகவிகள்.

குளகம்.

* கனந்தருமந் தரமேரு வெனுங்கவிகை மருமமுளாய் கவிநூல் வல்ல, அனந்தருமந் தரமதிபு நிகர்கல்வி வதனதரா வசைவர் தம்மைச், சினந்தருமந் தரகசிய மாகியபஞ் சாக்கரத்தைச் சிந்தைசெய்து,தினந்தருமந் தரணிபுகழ் வகைபுரிந்து தென்சேறை சிறக்க வாழ்வாய். (௩௯)

* பிரபந்த மாதிநடு வொன்றுமிலா தெவையுமுற்ற பெருமமாவிப், பிரபந்த னயநகிலப் பெற்றவண்ம ளுளபுனை பெரும்பூதிச்சுப், பிரபந்த னங்கொளர வாபரண வெனச்சேறைப் பிரானைப் போற்றும், பிரபந்த மனைத்துமச்சி லேற்றிவர வாற்றிவரு பெரும்பே றுற்றாய். (௪0)

* புழுகுமலைக் குழல்கொண்மின்னார் புயத்தணிசாந் தமுமலரும் பொருந்து கந்தத், தெழுகுமலைக் கும்படிநள் ளிருடுவன்று செழுந்

தடங்கா விழித்த தென்கால், ஒழுகுமலைக் குச்சரியாம் பலசுனையிற் றேவர்சந்தி யுஞற்றி மேவும், கழுகுமலைக் குமரனிரு கழன்மலரைக் கனவினிலும் கருதக் கற்றேய். (௪௧)

* பன்னகரா தியந்தேவர் புவிபுகழக் கவிகைதரு பாரி சாதம் அன்னகரா திருவுறையு மணிமார்பா படைகொடைசல் யாண மான பன்னகரா தினமுழுங்கு மொலியமரர் பதியையெட்டிப் பார்க்குஞ் சேறை,நன்னகரா நிபனருகு வருகவென்றன் பாவென்பா னவில்செ வ் வாயாய். (௪௨)

* முன்புகவி ஞெடொழும்பல் வாணருரைத் திடவவரை மூழ் மேவும், துன்புகவி ழடியிற்பொன் சொரிகனமே யெதிர்த்தவர்தந் தோன ரம்போ, டென்புகவி ழுய்கழுகு பேய்நரியப் பொருவிசயா வெண்பா ஆற்ற, அன்புகவி ஞன்பெறமன் பாலுவந்து விளக்கிவி ளை வாகச் செய்தோய். (௪௩)

* மணைத்தவிராக் கப்பனனும் புனைகுழல் விழிவாணி மானும் செல்லார், கணைத்தவிராக் கப்பனுவல் பாடிவரு பவர்நவையைக் கருகா தின்பு,பணைத்தவிராக் கப்பனுதுங் கற்பகமே யற்பகமே பயில வாழ்ச சற், குணைத்தவிராக் கப்பவல வாகுமணு குவளையணி குவவுத் தோ ளாய். (௪௪)

* உருக்கரையா யினும்கடினத் தொவ்வாது கல்லுமதென் று ரைக்கு முள்ள,வருக்கரையா ரழன்மெழுகு போலுருக்கித் தெய்வப த்தி மார்க்கத் துய்க்கும்,சருக்கரையா தெள்ளமுதா வெனுஞ்செய்பு ண் மாலைபல சாற்றி னேயென்,உருக்கரையா வகையுதவி பலபுரிந்து தாயினுஞ்சீ ருற்ற மேலோய். (௪௫)

* விருந்தோசை கேட்டவுடன் முகமலர்ந்தின் னுரைபகர்ந்து விண்ணோ ருண்ணு, மருந்தோசை யிதற்கிணையா வென்னுமமு தரு த்திமன மகிழ்வாய் தந்தம், முருந்தோசை வலங்குழலோ வெனுமு மையாள் பாகருக்கு முழுச்சோ மன்போற்,பருந்தோசை நித்தியனை வேத்தியக்கட் டளைநடத்தும் பண்பான் மிக்கோய். (௪௬)

* ஒங்குழலு நடிகையுநெற் கட்டுமெங்கு முறுஞ்சேறை யுடை யார் முன்புல், லாங்குழலுங் கரம்பிடித்துப் பசுப்புரந்த மால்விடை

முன்னவனு ரன்பர், ஈங்குழலும் படிபுகுத்தா தின்புதவி வீடுமரு ளிறைவர் கொள்ளத், தேங்குழலுந் தோசையொடு செய்வித்துத் தினமுனைவேத் தியஞ்செய் விப்போய். (௪எ)

* வேகமறப் பரியேழான் வெயிற்கொடுமை யாலுடலம் வெதும்பி மேவும், சோகமறப் பரிதுபுன லுடலில்வெளிப் படுதலலாற் றுய்க்கக் காணேம்,மாகமறப் பரிவுடைய தென்பதெவ னெனநினைந்து வாடு மாந்தர், தாகமறப் பரிமளஞ்சேர் தண்ணீர்ப்பந் தலுமிவணித் தலுஞ்செய் வித்தோய். (௪அ)

* சந்தனந்த னவனடக்குந் தடங்தோரா ளிகர்வலவா தழைத்த வாசச், சந்தனந்த னவனலமுற் றிடப்பூஈங் கைபலராந் தானை சேர்வ, சந்தனந்த னவனளினத் தவன்வியக்கும் போழகா தவம்பெற்றுட்கு, சந்தனந்த னவனம்வளர்த் தன்புமணந் திசைநிறைத்துத் தழைத்து வாழ்வோய். (௪௯)

* வானுதி பதிதரெனு மசுரரைவே ரொடுகளைந்து மைக்கண்ணுலே, மானுதி பதிலுரைக்கும் பொருள்களைவெல் தெய்வமின்னை மணந்து வாழ்பெம், மானுதி பதியடியை மறவாதோ யேற்பவர்க்கு வழங்க லாலும்,தானுதி பதியாகி யுறுபழநி யாண்டியெனுந் தமிழ்வல் லோனே. (௫௦)

* கழநிமலைக் குடவளைசொல் தென்சேறை நகரினுறை கன்றுகந்தக், குழநிமலைக் குவளைமிகக் கூத்தாடும் பரற்கினைய குமரனை, பழநிமலைக் குழகனடிப் பத்தியுளா யவுயர்த்த பதகன் றனைத், துழநிமலைக் கும்படிவிற் றொழில்வலிகாட் டியவநுமத் துவசத் தோனே. (௫௧)

* மதிகார முறவிளங்குஞ் சுமுகதரா தென்சேறை மன்னனும்பூ,பதிகார னையதிருவன் மகிழ்ச்சிபெற வோங்குபரம் பரையாச் செய்யும், அதிகாரம் புரிபழநி யாண்டிவள்ளல் தவத்தவன்பின் னுக வந்தோய்,துதிகார ணங்கொடுநன் முறைதவறு ஐயனுர்ச் சுமுக மாலே.

* மந்தரதா ணுவைநிகரு மணிமார்பா பன்னூலும் வல்லாய் நல்லாய், அந்தரதா ருவையனையா யெமதுகவிக் குரையாணி யாவாய் மாவ, சந்தரதா வெனக்கவிஞர் போற்றநடு வீற்றிருந்த தயாள ராச,

சுந்தரகா சேந்திரன்செய் தூயதவத் தோன்றலெனத் தோன்ற
லானேன். (௫௩)

* முருகுதிரை வாளிமத னெனும்பெயரிலான் மாயவனே முத
லோ ருள்ளம், கருகுதிரை விடமருந்திக் காத்தபிரான் கழன்மலரைக்
கருத்தி னுன்னிப், பெருகுதிரை நரைதவிரு மார்க்கண்ட னிகர்சே
றைப் பெருமான் வாவி, வருகுதிரை நகுலனெனுஞ் சேவகப்பாண்
டியராச மகிமைக் கோமான். (௫௪)

* பிறந்தவிரும் பயனிதெனப் புகழேழுந் தனுமுளத்திற் பே
ணு வான்றன், சிறந்தவிரு விழிகளைசர் போலவிருந் திகாரஞ் செயுமூ
வல்லீர், துறந்தவிரு ளகன்றமனத் தூயருக்கு மேயனுமை துணைவர்
பாதம், மறந்தவிரு நாமனத்தர் தமைமதியா நாயமான் மனத்து
நல்லீர். (௫௫)

* தண்ணைப்பக் கவிர்சடையுங் கொடையுமுளா னடிமறவாத்
தகவு ளீரென், எண்ணைப்பக் கவிடயமெ லாமுடிக்குந் தயவுடையீ ரெ
திர்த்தோர் நெஞ்சை, உண்ணைப்பக் கவிழ்வனச முகத்தியர்க்கு மார
ரொப்பீ ரும்பா லன்பால், விண்ணைப்பக் கவிதைசில புகலுவனின் பாக்
கேட்க வேண்டு மாலோ. (௫௬)

* ஒருவருட மாவெடுத்த முயற்சியினி தாற்றுவிப்பா னுள்ளத்
துன்னிப், பெருவருடம் பணிவேணின் மருத்துமுதற் சுகாசுகத்தைப்
பேணு தைந்து, தருவருடங் கரத்துறும்போ லென்பாலன் பார்பல
ரூர் சார்ந்து சாற்றித், திருவருடங் கவர்தயவாற் கருத்துமுற்றப்
பெற்றனனிச் சிரமத் தாலும். (௫௭)

* கனவிசையா வகையிரவு மனந்தவின்றி வாயுவுறுங் கதியா
வன்றேல், மனவிசையா வெனச்செலுந்து மசகடத்திற் சஞ்சரித்த
மாண்பி னானும், வனவிசையா பரிந்துலா வனசமுகா தரையதிபா
மகிழ்ந்து பல்லோர், பனவிசையான் மிகுதனதா வெனக்கவிசொன்
மனமுயற்சிப் பண்பி னானும். (௫௮)

* கற்பலவா வென்னுமின நகைமடவார் நயனமெனக் களிமே
வும், உற்பலவா விகணதிகள் கூவமுதற் புனல்பலவொவ் வாமை

யானும்,இற்பலவா வருந்தலமுமெதன்னினும்வேண் டுழிக்கிடையா வி யல்பி னானும், நற்பலவார் சேறையிறை நள்ளார்போன் மெலிவுகொ டு நண்ணு மெல்லே. (௫௯)

* தருப்பமதி மண்டலமுற் றிடுமிளசை மாநகரஞ் சார்ந்தே னங்ஙன்,உருப்பமதி கரித்ததது மருத்துமுத லவற்றையவற் றொழுங் கின் மாறித், திருப்பமதி மயக்கமுட னிளைத்திரும லடித்தலும்வாய் திறக்கும் போதில், இருப்பமதி யக்கமெனும் படிவருந்தி னேனெவ ரே யிரங்கா ரம்மா. (௬௦)

* இனியாது புரிதுமெனக் கூடலுற்று வில்லிநகர்க் கேகிப் பா லா, கனியாதுப்த் திடமுதா னெவையும்வெறுத் தலும்வயித்யர் கைபார்த் தையா, பணியாதுன் னிபவெயிலா பாராம லலைந்ததிலிப் பாடிற் றுய்க, வனியாது சற்றுவிட்டா லெமக் கடங்கா தினதயறிய மனக்கொ ளென்று. (௬௧)

* குற்றலத் திருந்துமற்றும் பற்பலவூ லிகையாதி கொடுக்கும் வன்மை, பெற்றுலத் தாலிந்தப் பிணிநீர்ப்பா மென்றுரைப் பெற்றி யெல்லாம், நற்றுலத் தாலுரைத்தாங் கியானெழுதுங் கடிதமுற்ற காளே யன்புப், பற்றுலற் புதமிதெனும் படிகொடுத்தீர் நுமதுதயை பன்னற் பாற்றே. (௬௨)

* வருமாயுள் வேதியனும் வானுலக மருத்துவனும் வணங்க வாழ்நம், குருநாத னெனுஞான பண்டிதன்று ளகபற்பங் குறித்துட் கொண்டே, ஒருநாளும் பத்தியத்திற் கடவாம லிருந்துசுக முற்றே னுந்தம், திருவாரும் பெருங்கருணை யென்றும்வளர் மதிநிகர்த்துச் செழிக்க மாதோ. (௬௩)

எழுதுமைக்குஞ் சந்திரனுக்குஞ் சிலேடை.

* வரைதலைமேற் கொண்டே வருமக் கரமாத்
திரமாமைக் கூடிநண்ணுஞ் சேர்பால்—தரமாகும்
இங்குசௌ டப்பைய வேந்தலே நீகேளாய்
இங்கிசந்தி ரன்றன்னை யே. (௬௪)

பம்பளிமேசைப்பழத்துக்கும் தனத்துக்கும்.

* வாரங் கொடுக்குதலான் மாதோடு பேய்தலினால்
ஈரத் தினமதுர மேறுதலான்—மாரனிகர்
செப்பழகா சங்கிலிவீ ரப்பமன்னு பம்பளிமே
சைப்பழமொப் பாகுந் தனம். (௬௫)

வெற்றிலைக்கும் பத்திரிகைக்கும்.

* மேவக் கரமடுக்கு மெல்லப் படிக்கநண்ணும்
ஓவுதலில் பாகுசுவை பொத்திருக்கும்—பூவுலகின்
வெற்றிலைக்குப் பத்திரிகை மேவுநிகர் கைலாச
நற்சுகுண மேவியமன் னு. (௬௬)

இத்தனிச்செய்யுட் சிந்தாமணியையச்சிடுவித்த பெருங்கொடைவள்ளலாகிய முறையூர் ஸ்ரீமாந். பழ. சி. சண்முகஞ்செட்டியாரவர்கள்மீது கூறிய கவிகள்.

குடைமங்கலம்.

* உலகுள்ள வெல்லா மொளிர்கரச்சோ மன்போல்
உலகுள்ள வெல்லாளை யொக்கும்—முலையார்
நவமகிழ்சேர் சண்முகமா னற்கவிகை யோங்க
சிவனருளா லென்றுஞ் செழித்து. (௬௭)

பஞ்சகாவியப்பேர்தொனிக்கக் கூறியது.

* அடுத்தபொருட் சீவகசிந் தாமணிமார் புடையா
யைந்தெனுமா சிலப்பதிகா ரம்யகுண முறுவல்
தொடுத்தமணி மேகலையா நுதலினிமை சொட்டச்
சொட்டமதுக் கட்டியெனச் சொல்வளையா பதியே
மடுத்தவெழிற் குண்டலகே சிவணுவரா தேவ
மாதரணை வாயணைவாய் வணிகர்குல மணியே
கொடுத்தடைந்த புகழ்ராம நாதவள்ளல் குமரா
கொண்மூவென் றேதவரு சண்முகபூ பதியே. (௬௮)

* கன்னியுன்னை விரும்புவது முன்னில்லா வகையாங்
காணுமிடை யின்மைவல்லோர் களிப்பெய்தப் பகர்வாள்
துன்னியவீ றில்லையெனச் சொல்வதிற்கு நாமே
துணிவொடுநீ தாமாலை மாறுதலை மொழியேல்

பன்னுமுக லிரண்டிரண்டென் றெலித்துவலை யர்டப்
பரிமளமுற் றுவந்துவந்து கலவிசெயின் மகிழ்வாள்
தன்னைநிகர் தரனெனுமு தாரமுறை யூரான்
சண்முகந்து பேரவலா தாரகன மாலே. (௬௯)

* அனங்கசந்தா பம்பொருந்து மங்கையா ளெழிற்கோ
அங்கையா ரிரதியுருவசியரம்பை யாரிவ்
வனங்கசந்தா ளழகொடுதே னணிமறந்தா டுயிலா
ளயர்கின்று ளறந்தகென்றே வடுத்தகுறி சொல்வர்
யனங்கசந்தாய் மார்துமித்துப் பார்த்துமெலி வாறு
ளண்ணிவந்தாள் கண்ணியஞ்சேர் சண்முகபூ மானே
அனங்கசந்தா ரணிமாடை யாடைமணி மேடை
அரும்புலவர் விரும்புவகை தரும்புகழ்கொ ளரசே. (௭௰)

* அன்னமருந் தாய்க்குமட்டு மாசகியா ருக்குமஞ்சம்
அன்னமருந் தாய்க்குமட்டு மாசகியா—தின்னே
மணக்கோலஞ் செய்வான் வரான்முறையூர்க் கோவேல்
மணக்கோலஞ் செய்வான் மதன். (௭௧)

* திருவாக்கு நலம்பலவுஞ் சேர்முறைநகை யூர்புரக்குஞ் சீமான் வானைந், தருவாக்கு லாவுகர தலவரத னெந்நாளுந் தன்வா யாற்சொல், ஒருவாக்கு மறுத்துரையான் சிவநேயப் பெருஞ்செல்வ முரியா னெங்கும், மருவாக்கு முல்லைமலர் வனைந்தபுயச் சண்முகவேள் மகிழ்ந்து வாழ்க. (௭௨)

* சந்தப்பா தவனசமொன் னூர்மகுட முறமுறைநகைத் தலத்தை யாண்டு, சந்தப்பா தவலருங்கற் பனையமகந் திரிபாகச் சாற்று வார்மே, சந்தப்பா தவசியங்கண் டவரவர்க்குத் தந்துபுகழ் தழைக்க மேவும், சந்தப்பா தவமுனிநேர் சண்முகப்பார்த் திவனுளனீ தயங்க னெஞ்சே. (௭௩)

* கவியாழ முடைத்தாக வெவர்சொலினுங் கருத்தறிந்து கழறு மாயூ, கவியாழ னிகர்மதிசேர் சண்முகபூ மாவான கத்து மாதுங், கவியாழ னூட்டகத்தும் பூதலத்துங் கிடைப்பரிய கனியை நீய, கவியாழ னையசரத்து வளைபொருந்த வணையிருந்து கலத்த னன்றே. ()

* அரவிந்த மாகுறிப மானனமுந் திகராகு மலருநன் மாலால்
அரவிந்த மாவெனவென் முலைமீறல் சகியேயென்ன றயர்வுற் றுடா
யரவிந்த மாவமுது கனிகரினுங் கசக்குமெதன வருந்தா ளையா
அரவிந்த மாதனையா ளருள்புரிவாய் சண்முகப்பெரு பதிப ரேரே.(௭௫)

* மாதவா மனவா மிசைகொடு வாழு மார்பனே யெந்தவுந் து திக்க, மாதவா மனவாக் காகமு முறைக்கு மாவலி யுயிர்கொளா துதிரு, மாதவா மனவா கண்டுகற் கண்டு வசனமுட் கொண்டுள மகி ழ்வாய்,மாதவா மனவா கீதவா னந்த மகிபனே சண்முக மாலே.(௭௬)

* மானங் கொடுக்க முறச்செய்விழி மடந்தை யினிமேற் புருடாபி
மானங் கொடுக்கம் வேண்டாமெம் மானே யென்பண் மனமிகநி
தானங் கொடுக்கந் தளரமுலை தனைப்பார்த் தயர்வ டமுவெவர்க்குந்
தானங் கொடுக்கச் சலியாத தருசண் முகபூ பதிமாலே. (௭௭)

*தேங்கரும் புகைக்கு மின்மொழி பவளஞ் செவ்வித முலைமு லை யிரண்டு,கோங்கரும் புகைக்கு நிகர்செழுங் கமலங் கோகில மிசை மிகு மணத்த, தாங்கரும் புகைக்கு மைக்குழ லழகாந் தையலை வெ ண்ணிலா வானப், பாங்கரும் புகைக்கு முன்புவந் தணைவாய் பாண் டிய சண்முக மாலே. (௭௮)

* வண்டல மனைத்துங் கவினையாட் டயர்ந்த மங்கைமேன் மத ன்கணை சீறிக், கொண்டல மனைத்துச் சென்றசெய் யாக்கக் குளிர் மதி கொளுந்தமெய் சோர்ந்தாள், பண்டல மனைத்து வாதல மந்த பாவையிற் சிறந்தவ ளிந்த, மண்டல மனைத்தும் புகழ்ந்திட முறை யூர் வாழ்தரு சண்முக மாலே. (௭௯)

* பானலங் கடுக்கு மையப்புவா ளனைய பார்வைசொன் முழு வது மதுரத், தேனலங் கடுக்கு மமுதுமொவ் வாகா தெண்ணிலாச் சிறுபிறை யாகக், கூனலங் கடுக்கு நுதலிவட் கிணையிக் குவலை யந் தில்லைவந் தணைவாய், ஏனலங் கடுக்கும் புனம்புகு செவ்வேட் கிணையெனுஞ் சண்முக மாலே. (௮0)

* முடித்தரசம் போகமுலை முகையமுந்தப் பகைமதவேள் முடி க்கு மேவாற், றுடித்தரசம் போவிந்தத் துயர்தவிரா யென்பளமு துந்தேம் பாகும், வடித்தரசம் போலுமுறை வழங்கவளை முழங்க

வணை மருவிச் செவ்வாய், கடித்தரசம் போதுகுறி விழியவட்சேர் சண்முகசிங் கார மாலே. (அக)

* மருவடிக்குங் குழல்வனிதை தும்புருநா ரதருமுள மயங்க வேதம், புருவடிக்கு மமுதமென மீட்டியிசை யூட்டுவள்வேள் போட்டி யாலுன், திருவடிக்கு வந்தனமுஞ் செய்துபுக லென்றனடித் திக்கு மின்பந், தருவடிக்கு முழுதுமிவட் கிணையிலைசேர் சண்முக விந் தகசி யானே. (அஉ)

*தனங்கலக்கந் தரங்கமெனுந் தையலவண் மையல்வலை தன்னிற் பட்டென், மனங்கலக்கந் தரவாரா முறைசைநகர்ச் சண்முகபூ மான்முன் றுயர், முனங்கலக்கந் தரமடுத்துக் கெஞ்சியதெல் லாமறந்தான் மோகத் தாற்கண், டினங்கலக்கந் தரணிமிசை யுருத்திருக் கின் றேன்சகியே செய்வ தென்னே. (அங)

* மிகத்திருத்தி யானவழி யேநடந்து முறைசைநகர் வேளை யென்நெஞ், சகத்திருத்தி யானவனெஞ் சகத்திருக்கப் புரியாத தைய லீர்வஞ், சகத்திருத்தி யானவனந் தனக்குவரே னெனச்சொலிவி சனித்தாள் கோக, னகத்திருத்தி யானவலனுகியசண் முகமகிபா நலஞ்செய் வாயே. (அச)

* தாசரதி காந்தமுதற் றலைவனென மருவலரைத் தகர்ப்பா னேவு மாசரதி காந்தவரை வளர்புகழ்சேர் சண்முகபூ மாவென் மங்கை [ள் நேசரதி காந்தன்மலர்க் கணைக்கிடைந்து நிலவுவர னினைந்து சோர்வ வாசரதி காந்தனுறு வகையணைந்து முத்தமிட்டு மருவத் தானே. ()

* திருவிவளை யாநிகர்வள் சேடியுமா காண்மலரே சிந்தை யுள்ளு டுருவிவளை யாதிநடு வுறப்புரிந்த தொருகோட்டை யுண்டு கண்ணீ ருருவிவளை யாஞ்செவிய ளுறுதுயர மகற்றுதற்குன் னகலத் தாரே கருவிவளை யாபதிநூ லையுந்தெளிந்த சண்முகசிங் கார வேளே. (அரு)

* கனத்துவரை யெனப்புடைத்துக் களபமணிந் ததன்மருப் பைக் கடிந்து மீறித்,தனத்துவரை மதியாத பெரியதனக் காரியொரு தையா லிந்தத், தினத்துவரை யுனைநினைந்து தியங்குகிறுண் மயங்குகிறு டுருவை யொப்பாள், மனத்துவரை யாதணைவாய் முறைசை நகர்ச் சண்முகமா மகிப மாலே. (அஎ)

* சுந்தரிக்குஞ் சாலிமுதற் றோகையர்க்குஞ் சிறந்தவன்மெய் சோர்ந்தை யம்பால், அந்தரிக்குஞ் சாலியெனச் சல்லடைக்கண் ணாய்த்தனித்தோ ரறைக்குள் ளேவ, திந்தரிக்குஞ் சாலினிக்கு முன்பெயர்கேட் டதுமருந்தாந் தேகத் தாவி, யுந்தரிக்குஞ் சாலியல்சேர் முறைசைநகர்ச் சண்முகமா லுவந்து சேரே. (௮௭)

* பஞ்சவிலக் கணமுணர்ந்த பாவலரம் தரியாக படிபொன்னீவான், புஞ்சவிலக் கணம்புனையுஞ் சிவநேயச் சண்முகமெய்ப் பூமான் கூடிக், கொஞ்சவிலக் கணங்கணையார் கூற்றிகழ்ந்தாய் மேற்றிகழ்ந்த கொடியன் கையில், வஞ்சவிலக் கணம்பொழியு மலர்துளைப்ப வாடுகிறான் வகுப்ப தென்னே. (௮௯)

* புருவத் தினமு முகத்தினமும் பொருவிற் பாண மெனக்கொண்மதன், கருவத் தினமு மெதிர்த்துவரக் கடவன் போலா மிந்தமங்கைப், பருவத் தினமுன் னவர்தவத்தாற் பாலித் தமைன்று மென்றுரைத்தாள், மருவத் தினமும் வந்திடுவாய் வளர்சண் முகபூ பதி மாலே. (௯௦)

* கூட்டி லடையா வஞ்சகத்தின் குஞ்சே பாடென் னிலுயர் விணை, மீட்டி லடையா லுனக்கிந்த விதமென் னெனிலு முறையாளுன், வீட்டி லடையா வமுங்குணமும் வினவி மகிழ்வாள் காணிந்த நாட்டி லடையா ரும்பரவு நயசண் முகபூ பதிமாலே. (௯௧)

* மணக்கந் தரமாங் கரியகுழல் வனிதை யுடனே நிலயக்கென்ன பிணக்கந் தரமா தருநிகராப் பேதை யலவா பெட்புமிக இணைக்கந் தரமா ருனக்கிவள்போ லெவ்வணி யணைவாய் நண்ணவரும் வணக்கந் தரமா தவன்போல வளர்சண் முகபூ பதிமாலே. (௯௨)

* பலசந் தான தருவென்னும் படிக்குப் படிக்குங் கவிக்கருள்வான் சலசந் தானங் கொளுமடவார் தமது பதியென் றறவெண்ணித் திலசந் தானன் குயர்முறைசை செழிக்கப் புரந்து சிறந்துகுது குலசந் தானம் பெற்றுமனங் குளிர்சண் முகபூ பதிமாலே.. (௯௩)

* தனத்தந் தனத்த மென்றுநடித் தலையு மறக்க மூலையுமிடைச், சினத்தந் தனத்த முறப்புடைக்கச் செய்யு மதவே ளெய்யுமலர், மனத்தந் தனத்தத் துணைக்கலந்த வகைபே நினைவள் விருந்து

முனம், தினத்தந் தனத்தங் கரமடுத்துண் சீர்ச்சண் முகவிற் பன மாலே. (௬௪)

* இனத்தை யனத்தை விளைமுத லிசையை வசையை மறந்துபல தினத்தை யனத்தை யழுதிளைச்சுத் திக்குக் கழித்தா ளேபழித் தாள், கனத்தை யனத்தை யேந்துநெடுங் கரத்தன் வரினு மிணங் காள்யெள, வனத்தை யனத்தை யம்பனென வருசண் முகவிற் பன மாலே. (௬௫)

* அருந்த வருந்தத் தவத்தைவிடுத் தடக்கு மயிலா ளொருதுனியால்
அருந்த வருந்தக் குமட்டிமன மயர்ந்தாள் கலையுங் கலையுமுடல்
வருந்த வருந்த மதலகிரி வளர மலரே மதன்குனிக்க
வருந்த வருந்தச் சகிப்பாளோ வாசண் முகவிற் பனமாலே. (௬௬)

* பரும்பா கரும்பா மாமுலையார் படையாய் கொடையா யென் றுசொலி, இரும்பா கரும்பா ராவெனுநெஞ் சினரைத் துதியா தெ மையழைத்துக், கரும்பா கரும்பா முழுதேற்றுக் காத்துக்கனவட் டத்தையுந்தி, வரும்பா கரும்பார்த் துவக்கவிசை வளர்சண் முகவிற் பனமாலே. (௬௭)

* வடுத்துப் படுத்துப் பார்த்துமிக வணங்கும் விழிவாய் மாத ளையிற், படித்துப் படுத்துப் புரண்டுபதை பதைத்துத் துடித்து வா டுவடாய்,அடுத்துப் படுத்தும் பாடுசிறி தலவே நிலவே வந்திடுமுன், எடுத்துப் படுத்துள் ளியந்தொடைதா வெழிற்சண் முகவிற் பன மாலே. (௬௮)

* அஞ்சங் கஞ்ச நடைமுலையா மணியார் வதனஞ் சந்திரவிம்
பஞ்சங் கஞ்ச மானகளம் பாரிற் கிடையாப் பாவையிவள்
கொஞ்சங் கஞ்சம் பாற்றுதுயர் கொடிது நெடிது கடிபுரிந்த
வஞ்சங் கஞ்ச னுயிர்கொள்வல வாசண் முகவிற் பனமாலே. (௬௯)

* திருத்தந் திருத்தன் னமுநிகராத் தெரிவை பின்னர்த் தெரி வைநிற்கே, பொருந்தந் திருத்த னருளுனக்கிப் போது கிடைத்த தாலணைந்து, கருத்தந் திருத்த லதிமேன்மை கண்டாய் பண்டாய் பலகவிக்கும்,அருத்தந் திருத்த முறப்புகல்வார்க் கருள்சண் முகவிற் பனமாலே. (௭00)

* அனவா கனவா ரணவாய னமைப்போ விமைப்போ தைந்துகமா
நனவா கனவா வெனமயங்கு நங்கை முனநீ புரிகலவி
யினவா கனவா ரியிற்பெருக வென்பா லன்பா விசைத்தனள்சேர்
மனவா கனவா னெனுமுறையூர் வளர்சண் முகவிற் பனமாலே. (௧௦௧)

* புடைத்துப் புடைத்துத் திரண்டுருண்டு பூரித் தெழுந்து வடவரையை, உடைத்துப் புடைத்துத் தாள்படுத்த வோங்கு முலையாள் கைரவவாய்க், கிடைத்துப் புடைத்து நல்லமுதங் கிட்டி யணைவா யொட்டலர்தம், படைத்துப் புடைத்து வெலுங்கிறற்பூ பதிசண் முகவிற் பனமாலே. (௧௦௨)

* முருந்தா திருந்தா மணியாநேர் முறுவற் கெனுமா திரவுவிழி
பொருந்தா திருந்தா ளணையர்துயர் பூண்டார் வேண்டார் பழிபுகன்
றார், வருந்தா திருந்தாழ் வகற்றவிறை வருமென் றுரைத்து வந்
தனனீ, தருந்தா திருந்தா ருயிருதவுந் தமிழ்ச்சண் முகவிற் பனமாலே.

* உருவம் பருவங் குணங்கல்வி யுண்மை நேய முடையவண்மேல்
மருவம் பருவ மதன்விடுத்தான் மற்றம்ஃதுரைக்கத் தோழியரோ
பெருவம் பருவந் துணையுறிற்றும் பெட்டுப் பிணக்கே புரிவர்மத
கருவம் பருவண் டலர்செய்துயர் களைசண் முகவிற் பனமாலே. (௧௦௪)

* கோதிக் கோதி முடித்தாலுங் குலையுங் குழலு முண்மையொரு
தூதிக் கோதி யனுப்பெனினுஞ் சொல்லாள் செல்லாள் மதன்கரத்து
மீதிக் கோதி னமுங்கோடி விசிகம் பொழியு மடவியர்தஞ்
சாதிக் கோதி மம்போல்வாள் தமிழ்ச்சண் முகவிற் பனமாலே. ()

* தருமலைக்கும் போதனைய கரதலதி யாகவனை தவமுஞ் சிந்த, திருமலைக்கும் போதகமாந் திமிரமுற வருமதிக்குந் தியங்கி மேவும், பொருமலைக்கும் போதவிடா வகைதடுக்க விழிவாயாற் புகன்றுள் தென்பாற், றிருமலைக்கும் போதயனோர் சண்முகபூ பதியேநீ சேர்ந் தாள் வாயே. (௧௦௫)

*தனக்கவலைத் தருசிலத னுயிர்த்துணைவி மூவொன்பான் றனை
ய ராற்கொள், மனக்கவலை தடைத்ததிரு மாலளித்தான் மாலளிக்க
வருந்திக் கொங்கை, கனக்கவலை யாலுமதி யாலுமதி மிகக்கலங்குங்
கன்னி யாமிம், மினக்கவலை களிப்புறவா முறைசைநகர்ச் சண்முகப்
பேர் மேவுங் கோவே. (கOஎ)

ஷ பிரபுஅவர்கள் திருக்குற்றாலத்திலிருக்கும் போது கூறியன.

* திடவருவி யாமதனை வென்றவெழிற் சண்முகரா ஜேந்த்ரா திவ்ய
வடவருவி யாடிவலம் புரிவீதி வலம்புரிந்து வந்தாங் காக்கக்
கடவருவி யாறணிகுற் றாலலிங்க ரினிதம்மைக் கருவி னூடு
நடவருவி யாருலகத் தெந்நாளும் பெருமகிழ்ச்சி நல்கு வாரே. (கOஅ)

* சங்கநிதி பதுமநிதி தேனுசிந்தா மணியரிசந் தனங்கா ரக
அங்குளவா றவைக்கிணையிங் கெனல்தேற் றுஞ் சண்முகப்பே ரரசே
வெள்ளைத், திங்களணி திரிகூட வடவருவி யுடல்குளிரச் செய்தாங்
குன்வாய், இங்கிதவா சகவமுத முளங்குளிர்வித் ததுமகிழ்ச்சி
யிசைந்த திங்கே. (கOகூ)

*குறும்பலவிற் கண்டமங்கை செங்கைகரும் புருவமது குனிவி
லின்பம், உறும்பலவி சுரமுதலாப் பாடுவதி லுருவசியு மொவ்வாண்
முல்லை, துறும்பலவிக் கிணையுமொழி முருகனுக்குங் கிடையாத தோ
கை கண்டாய், வெறும்பலவித் தையலர்போ லினையலணா சண்முக
செவ் வேட்கோ மானே. (கக0)

* மாகவா னரம்பையுரு வசிமுதலோர் சம்பக்கா மலரைக்
கொண்டு, போர்கவா னரம்பையச்சென் றைந்தருவின் றுணரொடி
த்துப் புகுங்குற் றாலத், தேகவா னரம்பைமட வியர்விரும்புஞ் சண்
முகரா சேந்த்ரா நீயே, யோகவா னரம்பைவிழி நிதம்பமெனும் திரு
மகள்சை யோக வானே. (கககூ)

* கவித்துவசங் கரம்பிடித்து நூற்றுவரைக் கூற்றுவரைக் காட்டு மாதுங், கவித்துவசங் கரதிபதன் கழல்பணியுந் தருமியுளங் களிப் பத்திட்டுங், கவித்துவசங் கரவருள்வா யெனச்சீவன் முத்திபுரங் கலந்து வாழ்மோக், கவித்துவசங் கரவிலன்பு களிப்புறச்செய் சண் முகவேள் களித்து வாழ்க. (௧௧௨)

* கரும்படிக்க மெனவினிக்குங் கற்பனையுஞ் சொற்சுவையுங் கமழும் பாயா,வரும்படிக்கக் கேட்டுமன மகிழ்ந்தளிக்குஞ் சண்முகப் பேர் வள்ள லிந்த, இரும்படிக்க ணிறுமாப்பா லெண்ணலரைத் திண் ணமுட னெதிர்த்துக் கையிற், பெரும்படிக்கந் தனையேந்தி வரும் படிக்கங் கங்குவெற்றி பெறுபூ மானே. (௧௧௩)

குளகம்.

* தினகரனை மாமதியைக் கனலைவிலோ தனமாக்கொள் சிவனை நற்செந், தினகரனை யீன்றவனைத் திரிசூல மழுவுடுக்கை திகழு யா னைந், தினகரனைக் கரசரணு தியவுருவங் களிற்சிறிது சிறிதுற் றேமுந், தினகரனை கருப்பமிசை யுருப்பவியா தெமைப்புரக்குந் தேவ தேவை. (௧௧௪)

* சேற்றுவசங் கரங்கொண்மதற் பொடித்தவகூற் றுவனுமு ளந் திடுக்கிட் டோடுங், கூற்றுவசங் கரவாம தேவபவ வினைதீர்க்குங் குளிர்ந்த கங்கை, யாற்றுவசங் கரவிலன்பு கொண்டவவென் றழைப் பவர்மு னவிர்வெண் டிங்கள், போற்றுவசங் கரவணிந்த செவியுட னே காட்சியருள் புரிபெம் மானை. (௧௧௫)

* ஒருபோது மறவாது துதியோது சண்முகப்பே ரரவோன் காவி, யிருபோது நிகர்விழியார் மடலெழுது முருவமத னியற்பா வல்லோர், வருபோது நன்மொழியா லவரவர்க்கு வேண்டுவன வழங் கியைந்து,தருபோது மாவிவனுக் குவமையென மேவுபுகழ் தழைத்து வாழ்க. (௧௧௬)

* சகமேற் பொருளுந் றவர்பலர்வஞ்
சகமே பூண்டு நாடொறுமிச்
சகமே பேசிப் பணிவாயா
சகமே புரிவார் தமக்குக்க
ணகமே மணியே யறுசுவைப்போ
னகமே தருவா ரன்னவைபொன்
னகமே யெனினுந் தனிக்கோக
னகமே நிகருன் கரதலகற்
பகமே விரும்பி நின்கடையம்
பகமே நோக்கி வள்ளியர்தீ
பகமே நிகருன் புகழேஞா
பகமேற் கொள்வார் பாவலர்க
முகமே லோங்கு முறைசையிழ்சு
முகமே கொண்டு சற்சனர்ச
முகமே மருவி நலம்புரிசண்
முகமே லவனீ வாழியவே. (ககஎ)

* மலையா சலத்து மாதவன்க
மலையா ளுபத்தன் பணிசெயும்வி
மலையா ரிடத்தன் மயிலூர்செம்
மலையா கூர்தி யனைத்தருவின்
மலையார் கரத்த னடியவர்விம்
மலையா குலத்தைத் தவிர்த்திடவ
மலையார் துதிகொள் பவனடியை
மலையா தன்பிற் பணிந்திடுவோய்
கலையா னிரம்பு மதிமுகவற்
கலையார் முனிவர் வேதியர்கள்
கலையா வையுந்தேர் புலவரொடொக்
கலையா தரிப்போய் முல்லையலங்
கலையா ரருவி நிகர்கொள்விலங்
கலையா ருவமைப் புயமணிமே
கலையா தியநூ லுணர்ந்துமனங்
கலையா தொளிர்சண் முகபதியே. (ககஅ)

* சனமே ஜயனி ராமனிரஞ்
சனமே வியகாண் டீபசரா
சனமேந் தியவ ணிகர்த்தரியா
சனமே லிருந்து சகலபரி
சனமே சூழ வெளிதுதரி
சனமே தந்து தகத்தகவ
சனமே புகன்று மன்பனைதவி
சனமே லாமற் புவிபுரப்பாய்
சனமே வருங்கண் காணவரி
சனமே விளைப்ப ரவ்வுழிக்காஞ்
சனமே யெடுக்கு நன்னீர்ப்பா
சனமே செழிக்கு முறைசையிலஞ்
சனமேய் விழிவெண் முருந்தெனுந்த
சனமே னகையொப் பார்மதவ
சனமே மையர்க்கீந் துண்பிரயோ
சனமே வியசண் முகபதியே. (கக௯)

* தனமே விளங்கு முறைசைநிகே
தனமே முடித்துக் கடவுளரா
தனமே யமைத்து நாவிருபந்
தனமே முதலாச் செய்துயர்சந்
தனமே யாதி யாட்டிநல்லோ
தனமே பலமே யனைத்துநிவே
தனமே புரிந்து கீபாரா
தனமே தரிசித் தன்பொடுவந்
தனமே செய்து பல்பொருட்சா
தனமே தீட்டி முன்பெறுமுத்
தனமே வியத டாதகைசீ
தனமே யாக வின்னுமுவந்
தனமேன் மேலுந் தந்திடுவாய்
தனமே யெனினுங் கவிவலர்வி
தனமே வாமற் புரந்திடுசே
தனமே கவரை யுயர்மீன்கே
தனமே கொளுஞ்சண் முகபதியே. (கஉ0)

* கரமே விரித்துக் கண்ணிடைச்சீ
கரமே துளிப்ப வருபவர்க்கா
கரமே முதலாத் தந்துவசீ
கரமே புரியுங் காவலர்சே
கரமே யால வாயெனுந
கரமே வியெங்கு மாக்குசைக்
கரமே செலுத்திக் கொடியிடைம
கரமே யெழுதி யுயர்த்தைந்தக்
கரமே நினைந்து பண்டொருசா
கரமே கொடுக்க மூண்டெழுந்த
கரமே குடித்த முழுமுதற்சங்
கரமே லவன்றன் முடிகொள்சுதா
கரமே தகவாங் குடைபுவிப
கரமே லமைத்தோய் நிகண்டுதிவா
கரமே முதனூ லுணர்ந்துமனோ
கரமே பெறுசண் முகபதியே. (கஉக)

* தரங்கா சனமா லிந்திரனுந்
தரங்கா வலவன் சந்தனப்பூ
தரங்கா முறுமோர் குறுமுனிவன்
தரங்கா ணெனப்பல் பாவலரு
தரங்கா ரணமாப் புகலாதந்
தரங்கா துரமாக் கவிபகர்கந்
தரங்கா வனைய கரத்தாய்மந்
தரங்காண் புயத்தா யிணையகல்சுந்
தரங்கா ணரிவை மாரகத்தா
தரங்கா வலெனு நாண்டெறவு
தரங்கா முறவே சுவைத்தியனந்
தரங்கா தலியா குவனெனக்கா
தரங்காத் துரைக்கு மதமாக
தரங்கார்த் திசைக்குஞ் சமுகாவந்
தரங்கா சினிகா லளந்தவர
தரங்கா திபசண் முகபதியே. (கஉஉ)

திரமா வுருவ முறப்புகழ்மாத்
திரமா மென்னத் தெரிந்தேவத்
திரமா நிதியா வுத்தமபாத்
திரமா னவர்க்குக் கொடுத்தனசத்
திரமா மறையோ ரேமுதற்குத்
திரமா னிடர்க்கு நாலிருமா
திரமா மிடத்து மமைத்துயர்சாத்
திரமா னவெலாம் படித்திறைதோத்
திரமா நால்வர் தமிழ்திருமந்
திரமா தியநூல் முழுவதுமாத்
திரமா மனத்தி லழுத்திவிசித்
திரமாம் பொருள்சொல் புனிதாசித்
திரமா மதனு நவமணிமேற்
திரமார் விரலாய் கவிபுரிகுத்
திரமா லகற்றி யெமக்கருள்தந்
திரமா தசவண் முகபதியே. (௧௨௩)

துவிதசிலேடைப்பஞ்சரத்நம்.

* மொய்த்துவரு மன்பதைகள் குழுவுமமர் முடியினொவெனு மொய்ம்பி னேரும், சத்தியவா சகங்கொள்ளக் கண்டுவக்குஞ் சண்முகவேள் தழைக்குந் தானம், மெய்த்தகன வணிகர்களு மேனைகையா தியரைநிகர் மின்னார் பல்லும், முத்தமிழைத் தாங்கிவரு நலமேவு முறைசையென மொழியு மூரே. (௧௨௪)

* செற்றமிகுந் தமர்க்கெழுந்து திரிபுரத்தைச் சேர்ந்தழியுஞ் சிந்தை மீதும், பற்றிறந்தான் செழுங்கமலப் பதம்பரவுஞ் சண்முகவேள் பயிலுந் தானம், உற்றவிழா வீதிதொறு மெம்மானைத் தரும் பருவத் துயர்சி றுரைப்,பெற்றமிசை யுறக்கண்டு பலருமகிழ் முறைசையெனப் பேசு மூரே. (௧௨௫)

* செந்தமிழ்க்குத் தருங்கொடையு நவமணிசேர் கண்மணியுஞ் செய்ய மார்பும், கந்தரத்தை யுறப்புரியுஞ் சண்முக குபேரனிசை கவினுந் தானம், கொந்தமருங் குழன்மடவார் பிறைநுதலுங் கோவேந்தர் கோயின் மாடும்,சிந்தூரத்தி னணிசிறக்கு முறைசையெனும் பலவளமுஞ் செறியு மூரே. (௧௨௬)

* ஏற்றமிகு பெருங்கொடையாற் புலவோரு நன்னீதி யியல்பால் யாரும், வேற்றிடங்கா ணக்கருதா வகைபுரக்குஞ் சண்முகவேள் விரும்புந் தானம், தோற்றுநவ மணிமாட மேடைதொறும் வளைமருதச் சூழல் தோறும், சேற்றுவசம் பலமேவு முறைசையெனுந் திருநாமஞ் சேரு மூரே. (௧௨௭)

* இனிச்சதமிழ் நூல்பலவற் றினுமருதத் தெம்மருங்கு மின்சொ லோங்கும், தனிச்செயுட்சிந் தாமணியைக் கண்டுமகிழ் சண்முகவேள் தழைக்குந் தானம், கனிச்சுவையைக் காட்டுமொழிக் காரிகையா ரைம்பாலுங் கமலக் காலும், அனிச்சமுற வாக்கிவரு முறையூரை யென வுலகுபுக லணிநல் லூரே. (௧௨அ)

குமணசரித்திரத்தை ஷை பிரபு அவர்கட்கு உரிமையாக்கி அந்நூலிற் கூறிய உரிமையுரை.

* திருவளரு வளமுறையூர் நகருள்ளும் புலவருள்ளுந் தினமும் வாழுந், தருவளருங் கொடைமருவுஞ் சண்முகமா லேநினது தகுதிக் கேற்ப, மருவளருந் தொடைக்குமண சரிதவியற் றமிழ்மகளை மணஞ் செய் வித்தேன், உருவளரு முரிமையொடு மருவியிசை மகப்பேறுற் றுவக்க வென்றே. (௧௨௯)

வாழ்த்து.

* அக்குமண னேயிவனென் றவனியெலாஞ் சொலற்கேற்ப
இக்கவிநூல் தனக்குரிமை யெய்துபெரும் புகழாளன்
முக்கனியின் சாறுகமழ் முறையூர்நகர் வாழுமகிபன்
தக்கபெருந் தகையெங்கள் சண்முகமால் வாழியவே. (௧௩௦)

ஆகச்செய்யுள் ௩௭௯௧.

---

## பாலகிருஷ்ணக்கவிராஜர்.

இவர் முறையூரில் அந்தணர் குலத்திலவதரித்தவர். தற்போது 60 வயசிருக்கலாம். ஸ்ரீமாந் பழ. சி. சண்முகஞ்செட்டியாரவர்களின் தந்தையவர்கள் மேல் காதற்பிரபந்தம், விஜயக்கும்மி, சித்திரகவி முதலியன வியற்றியுள்ளார். இப்பிரபு சிகாமணியால் அபிமானிக்கப் பெற்ற வித்துவான்களிலொருவரொருவர். ஸ்ரீமீனாக்ஷி சுந்தரேசுவரர் கோயில் வேதாத்தியயன மிராசுள்ளவர். நஷ்டஜாதக கணனஞ்செய்பவர். சேதுஸம்ஸ்தானத்தில் வீரதோடா மரியாதை பெற்றவர்.

மழையில்லாக்காலத்தில் பல இடங்களில் ஊற்று நீருமின்றி ஜனங்கள் வருந்துகையில் ஸ்ரீமாந் பழ. சி. சண்முகஞ்செட்டியாரவர்கள் பொருளுதவி பெற்றுத் தாம்வெட்டுவித்த ஊற்றில் மட்டும் மிகுதியாக நீரூறப்பெற்றபோது மகிழ்ந்து கூறியது.

* விண்முகத்தி னின்றீசர் சடையின் மீது விளங்கிவரு கின்றகங்கா நதியைப் போலும், பண்முகப்பா வலரின்சொற் சுவையைப் போலும் பங்கயமி லுலவுமுறைப் பதியின் மேவி, யெண்முகத்துங் கீர்த்திபுனை ராம சாமி யெனும்வணிகப் பூமான்ற னிதயம் போலும், சண்முகப் பேர் வாய்ந்தஜய தீரன் செம்பொற் றனிநிதியாற் சலநிதி தனைக் கண் டோமே. (௧)

முறையூர் ஸ்ரீமாந். பழ. ராம. பிரபு அவர்கள் சத்துருசம்ஹாரநகரில் நாம
சத்திரப்பிரதிஷ்டை செய்தகாலத்திற் சொல்லியது.

திருமருவு முறைசவளர் மீநிலா சனவல்லி சேவடி வணங்கி
பேத்திக், திகழ்பழனி யப்பவணி கேந்திரசு தாகரன் செய்தவத் தா
லு தித்த, செல்வனுஞ் சுப்ரமண் யக்குரிசில் சின்னையா சிலமுறு
பழனி யப்பன், சீரான மூவர்க்கு மனுஜனென வோங்கியான் சிங்க
டா கைகள்செ லுத்திப்; பருவரதி மதனமாக் கண்டசிவ பத்திபர
தாபஜய துங்க னென்னப், பாருலகு போர்துதித் தகமகிழ நற்கீர்
த்தி பாலனஞ் செய்தே னுளும், பணிலங்க ளடர்சத்ரு சம்ஹார
நகர்மீது பரிதிமதி யுளவ ரையிலும், பண்புமிகு மனசுத்ர தர்மப்ர
திஷ்டையும் பண்ணிமனு விற்சி றந்து; தருவைந்து நாணமுற வெக்
கால வேளையும் சந்தோஷ கரமாக வே, தாதா வெனப்பகரு மாதுலர்க்
குதவுரவி தனயனும் கர்ன சமுகந், தன்னுயி ரெனப்புவன மன்னுயி
ரை ரெட்சணைசெய் தர்மரா ஜேந்த்ர சமுகம், சத்யமொழி நிறை
வுறப் பாலித்த குணவரிச் சந்த்ரபூ பதியின் சமுகம்; கருணைதவ ருமை
லே சரணடைந் தோர்களைக் காக்குமக ராஜ சமுகம், காதலெனு நற்
றமிழ்ப் பாமாலை சூடியெக் காலுமகிழ் பால கிருஷ்ண, கவிராஜ னுக்கு
நவ நிதியாதி யீந்துகுடி காக்கின்ற வள்ளல் சமுகம், கனகனைப் பழனி
யஜய ராமசா மிப்பிரபு காண்டிபன் சமுகமிதுவே. (௨)

புத்திரன் கலியாண விஷயத்திற்கு வேண்டும் திரவியத்திற்காகச்
சொல்லிய நடுவெழுத்தலங்காரம்

வெண்பா.

* தாசரதி தாய்மகனு சைவரன்றே ரோட்டுவர்பெண்
ணேச விளைநடுவை நீதருவாய்—பேசவெடுத்
தூப்பிடித்துக் கண்டுயின்று தோன்றி யனந்துகூத்த
சத்புருட ராமசா மி. (௩)

* நற்புகழ்சே ரும்முறைசை ராமநா தேந்திரனுங்
கற்பகம்பார்த் தாலென் கலிதீரும்—அற்புதஞ்சேர்
கற்றகவி ஞோரைக் கனவினிலு மெண்ணுத
மற்றவர்பார்த் தாற்றீரு மா. (௪)

* நந்துலவுந் தென்முறைசை ராமநா தேந்திரனின்
சர்த்திகள் யாவுந் தழைத்திடவென்—மைந்தனுக்குப்
பூதான மேலாய்ப் புகழுகின்ற பூண்கன்னி
காதானஞ் செய்தாய் கனிந்து. (௫)

ஷை பிரபு அவர்களின் வேண்டுகோளின்படி சித்திரகவி ௧௬-ம்
சொல்லியிருப்பதில் கட்கபந்தக் கவி வெண்பா.

* மாகனக யோகதனு மானேமா னுவலவ
னுகரிக மோகனமன் னுதனே—கோகனக

மாதாதா மாமுறைவாழ் மாவணிகா மாமணியே
தாதாநீ ராமனா தா. (கள)

ஸ்ரீமாந் பழ. சி. சண்முகஞ்செட்டியார் அவர்கள் பேரில் சொல்லிக்கொண்ட
வேண்டுகோள் கவி.

* சுபகுணாக ணங்கள்நிறை தருசினைய நண்பனருள் சுதனிலகு சண்முகமெ னும், விபவமுள சுந்தரனை யனுதினநி னைந்துதுதி விபுத கவி வேதியனை நீ, யிபமுனம கிழ்ந்துவரு பசியமுகில் சுந்தரனு மிவனெனவு கந்துபுவி யோர், சுபதமிடு கின்றபடி நினைவுகள்தெ ரிந்துதவு தருணமிது கண்டுகொள்க வே. (எ)

* முறையூ ரென்னும் வளம்பதியில் முகிலாய் வளர்சின் னயவணிகன், முதிருந் தவத்தின் பலன்றனை முதன்மைப் புதல்வ னாகிவந்தோன்; தறையோர் புகழிச் சண்முகவேள் தயவுக் கிசைந்தா யடிமகளே, சரசம் புரிந்து நயம்பேசிச் சந்தக் களபங் கற்பூரம்; மிறையே யகலப் பூசிமலர் வேய்ந்து வெள்வெற் றிலைதுவர்க்காய், விரைந்து கொடுத்துக் குளிர்மகர வீணை வர்ணங் களைமீட்டிக்; குறைவு தீர்க்குங் கற்பகத்திற் கூறும் வல்லி ஜாதமென, குன்று மிரண்டு புயங்களெனுங் கொழுகொம் பேறி வாழ்வாயே. (அ)

இதுவும் ஷை பிரபு அவர்கள் பேரில் மனை வேண்டுமென்று
சொல்லிய சூரிகாபந்தக் கவி.

* மன்னு திருமக ளார்வணி காமணி யேதுதிமா
தென்னு கவிக்கு மகிழ்நிதி யேசெழுஞ் காருலவும்
பொன்னு கதிக்கும் மதனுபூ மாமுறைக் கண்ணிலகு
கன்னு மதிமனை தாதாநி சண்முக காநிதியே. (கூ)

முறையூர் பழ. ராம. பிரபு அவர்களின் குமாரராகிய மகா-௱-௱-ஸ்ரீ
கருப்பன் செட்டியாராகிய சேதுசெட்டியாரவர்கள் பேரில் சொல்லிய

சதுரங்கபந்தக்கவி.

* தக்கபுக ழீர்முறைசை தன்னில் வணிகமணி
மிக்கமா மேரு வியப்பறிந்தோன்—ஒக்க
வருதபனச் சேயாகு மாராம சாமி
தருசேது பூமணிவன் றான். (கo)

ஷை யார் பேரில் ரதபந்தக்கவி.

* காணிமுறை சைக்கரசே காங்கயன்னே ராய்சமுகங்
காணில்வன சைப்பதிமாக் கற்பகமும்—நாணியுறும்
நன்னயவா னேகனகன் ராமனா தன்பெற்ற
கன்னு கருப்பவணி கா. (கக)

ஷையார் நற்சமயத்தில் பால் பசு கொடுத்ததற்கு சொல்லிய கவி.

* மீனவளார் முறைநைசநக ரத்தில் மேவி விளங்குவணி கோத்த மரில் விஜயன் னேராம், தானகர்ன னெனும்ராம நாத வள்ளல் தவசுதனம் மால்கருப்பன் செட்டி பூமான், மானபரன் பாலகிருஷ்ணை கவிக்கின் றுளில் வசிஷ்டசுர பிக்கிமே லெனை வழுத்த, வானவர்கோனகமகிழத் தந்துசிந்தா மணியெனவே வாழ்வுற்று வளர்கின் றனே

ஆகச்செய்யுள் ௩௮௦௩.

---

## பீமகவி.

இவர் பாண்டி நாட்டில் குன்றக்குடி யென்னும் ஸ்தலத்தருகேயுள்ள செங்நெற்குடி யென்னும் ஊரிற் பிறந்தவர். திருவாவடுதுறை ஆதீனம் சின்ன சந்நிதானம் ஸ்ரீமத் நமச்சிவாயதேசிக சுவாமிகளிடம் கல்விகற்றவர். வாலநைடதம்,சிவபுராமான்மியம்.சிவபுரம் மீனம்பிகை பிள்ளைத்தமிழ், செந்நெற்குடி சண்முகநாதன் பிள்ளைத்தமிழ், கோட்டிமாதவன்பிள்ளைத்தமிழ், காரிகைவெண்பா, விஜயசிந்தாமணி இவர் செய்த நூல்கள். வயது (௫௦). ஸ்ரீமாந் பழ. சி. சண்முகஞ் செட்டியாரவர்களா லபிமானிக்கப்பெற்ற வித்துவான்களி லிவருமொருவர்.

முறையூர் ஸ்ரீமாந். பழ. சி. சண்முகஞ்செட்டியாரவர்கள் மீது கூறியன.

* பூமலிந் தோங்கும் பொழில்களுந் தடங்களும்
நந்தன வனங்களு நந்தா வளத்தொடு
சீர்சார்ந் திலங்குஞ் செல்வமா நகராம்
முறைமுறை யூரின் முடிபெறு வேந்தே
மறுவிகந் தொளிரு மாமதி யென்னத்
திருவிருந் தருள்செய் திகழ்முக முகிலே
அளிநின் றுலவு மணிமரை மலரென
வளிநின் றுலவு மம்பக நிதியே
அண்டரு முனிவரு மண்டரிற் றேன்றிய
வண்டுறை கரத்து மாமகள் கணவனுங்
கூடிக் குடக்கார் கோள்கடைந் திடுநா
ளீடிலா துவந்த வினிய வமுதுநற்
கண்டும் பாகுங் கரும்பி னிரதமும்
விண்டுதே னொழுகும் விளைமுக் கனியுந்
தன்சொல் லாக்கிய தயைக்கொரு கடலே
பன்மொழி யார்க்கும் பாவைய ரணைக்குஞ்
சண்முகக் கோவே சார்ந்தவர்க் கமுதமே
யங்க நாம மமைமுறை நான்கிற்
பூதலந் தன்னிற் புகழ்முப் பாலரின்
மூதற்பா லார்க்கு முதன்மைய தாகுநின்

ணைப்பிலா நாம முவந்துநிலை நிறுத்திய
மூன்றா மங்க மத்துகை யாக
மங்கலந் தனக்கோர் வளர்நீ யிதுவென
மகிழ்வொடு பெற்றனன் வாழிநின் புகழே. (௧)

மற்றோர் காலத்தில் கூறியது.

* அன்ன முதவி யருளுதவி யாடைதந்து
சொன்ன முதவிச் சுகமுதவும்—பொன்னும்
முறையூர் நிதிசண் முகக்கோவைக் கண்டு
முறைசெய்த நாளோ முதிது. (௨)

* பொன்னொடு புகழும் புயங்கமார் மணியும்
எக்கா லத்தினு மினிமையி னமரும்
பெருகுடி வந்தென் னிருகண் ணுயமர்
முறைசையம் பதிவாழ் முதல்வனும்
சண்முக முதலே தனிப்பெரு முதலே
வீம கவியான் விளம்புவ தொன்று
இதுவே காக்து மமைய மாதலின்
இக்கவி தருவோர்க் கின்புடன்
பக்ஷமொன் றென்றே யருள்வையென் பொருட்டே. (௩)

ஷை பிரபு அவர்களைக் கண்டபோது பாடியன.

வெண்பாக்கள்.

* வீடெல்லாம் பொன்னுருகும் வீதியெலாம் நெற்குவைகள்
நாடெல்லாங் கீர்த்தி நவிலக்கேள்—ஆடவர்தங்
கண்ணான் கொடையதனிற் கற்பகமே யொப்பாவான்
வண்முறைசைச் சண்முகபூ மான். (௪)

* பொன்பெற்றா ரிற்பெரியோன் பூவுற்றா ரிற்புகழோன்
மின்பெற்றா ரிற்சிறந்த மேன்மையோன்—அன்புற்றே
எண்ணுமது ரத்தமிழி லேபுகழை யுற்றவனும்
வண்முறைசைச் சண்முகபூ மான். (௫)

* விண்ணிணிடை மேன்மையுற வேண்டின் மயிலேறு
சண்முகனை வாழ்த்தித் தயையுறுமின்—நண்ணுமன
மெண்ணியசெம் பொன்வேண் டிகம்வேண்டின் வண்முறைசைச்
சண்முகனை வாழ்த்திடுமின் றான். (௬)

* தண்டமிழின் மிக்கோன் சதுரன் வடமொழியைக்
கண்டு களிக்குங் கருத்துளோன்—தண்டமிழோர்
எண்ணமெலாஞ் சிந்தாம லேநிறைவேற் றுங்கொடையான்
வண்முறைசைச் சண்முகபூ மான். (௭)

* கல்லார்க்குக் கற்பிப்போன் காசொன் றுங் கைவசமே
இல்லாரை யிந்திரன்போ லேசெய்வோன்—வல்லாய்கேள்
காமுறையூர் கையான் கமலத் திருக்கண்ணன்
மாமுறைசைச் சண்முகபூ மான். (அ)

மிஷகவிவேம்பத்தூர் பிச்சுபாரதிகள் நீர் உண்டவகையும் இடமும் ஒருவெண்பாவால் சொல்லுமின் என்றபோது சொல்லியது.

* கதலிக்கா யின்கறியுங் கத்தரிக்காய்க் கூட்டும்
பதமான மாவடுவும் பாங்காய்—இதமாகும்
நண்மையொடு முண்டோம்பொன் னூலுணர்வார் வாழ்முறைசைச்
சண்முகனார் சத்திரத்திற் றான். (கூ)

சிலகவிஞர்கள் கூடி இக்காலம் பிரபுக்களில்லை அக்காலம் வடமொழிக்குக் கொடுத்தான் போஜன் தென்மொழிக்குக் கொடுத்தான் குமணனென்ற போது பாடியது.

* வனப்புறு வடசொற் கவிச்சுவை புணர்ந்து வழங்குவான் போஜனு மென்றும், இனிப்புறு தென்சொற் கவிக்குநற் குமணன் எண்பொரு ளீகுவா னென்றும், தனித்தமிழ்ப் புலவர் வடமொழிப் புலவர் சாற்றுவர் தண்பொழின் முறைசை, வனிதைய ரணையும் சண்முக முதல்வன் மாணவை கண்டவர் மதியார். (க0)

செவ்வூர் வித்வான்கள் சிலபேர்கூடி மிடியாளுேந்து இக்காலம் தாதாக்களில்லை யென்று வருந்தும் போது சொல்லியன.

* தண்டமிழ்ப் புலவீர் முறைசைமா நகரிற் சார்ந்திடு சண்முக வள்ளல், அண்டர்வண் டருவின் அம்சமாம் விரல்கொள் அய்யனை அருந்தமிழ் வைப்பைக், கண்டபோ துமது மிடிகட லேகுங் கவிமழை பொழிந்திடின் மற்றும், எண்டரு பெருமை யுரைப்பதற் கென்று வேகமே யிடரிலை யெழுவீர். (கக)

* மற்றுமம் முதல்வன் வதியவை தனக்கோர் வண்குறி வழுத்துவன் கேண்மின், பொற்றொடி மகளீ ரொருபுறம் நடிப்பர் புங்கவர் வாழ்த்தொரு புறமாம், கற்றவர் கவிக ளொருபுற மொலிக்கும் கானமே யொருபுறங் கலிக்கும், மற்றவர்க் கீயு நிதியொலி யொருபால் மன்னிடு மறிந்துசென் றிடுமே. (கஉ)

ஆகச்செய்யுள் ஙகூஅகரு.

---

## தனிச்செய்யுட்சிந்தாமணி

## முதற்பாகம் முற்றிற்று.